திருத்தக்க தேவரின்

# சீவக சிந்தாமணி

மூன்றாம் பகுதி

உரையாசிரியர் :

ஞா. மாணிக்கவாசகன்

மணிவாசகர் பதிப்பகம்

55, லிங்கி தெரு, சென்னை-600 001.

திருத்தக்க தேவரின்

# சீவக சிந்தாமணி

மூன்றாம் பகுதி

जीवक चिंतामणि - तीसरा खण्ड

लेखक - ञा माणिक्क वाशहन्

உரையாசிரியர் :

ஞா. மாணிக்கவாசகன்

प्रकाशक -
मणिवाशहर पदिप्पहम्
55, लिंगि तेरु (स्ट्रीट) चेन्नै (मद्रास)

**மணிவாசகர் பதிப்பகம்**
55, லிங்கி தெரு, சென்னை-600 001.

मूल्य - 50-00

முதற்பதிப்பு : டிசம்பர், 1988

உரிமை ஆசிரியருக்கு

பதிப்பாசிரியர் :
ச. மெய்யப்பன் எம். ஏ.

பக்கங்கள் : 576 + 44

விலை ரூ. 50-00

கிடைக்குமிடம்
மணிவாசகர் நூலகம்
12-B, மேல சன்னதி, சிதம்பரம்-608001
14, சுங்குராம் தெரு, பாரிமுனை, சென்னை-600001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600001
28-A, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001
3/4 ராஜ வீதி கோயமுத்தூர்-641001
20, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002
சென்னை போன் : 512996, சிதம்பரம் போன் : 2799

அச்சிட்டோர் : கற்பகம் அச்சகம், 6, நல்லதம்பி தெரு,
சென்னை-600 002.

# பெருங்காப்பியங்களின் பெருமை

ச. மெய்யப்பன், எம். ஏ.
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

தமிழுக்கு வடமொழி போன்ற நீண்ட நெடிய இலக்கிய வரலாறு உண்டு. இருமொழிகளிலும் பல்வகை இலக்கிய வடிவங்கள் மொழிக்குப் பெருமை சேர்த்துள்ளன. பெருங்காப்பியங்கள், பேராறுகள் பெருமலைகள் போலச் சிறப்புப் பெற்றன. ஆறுகளின் அகலமும் நீரின் போக்கும் ஆறுகள் செய்யும் வளமும் ஆறுகள் வளர்க்கும் கலை எழிலும் நாட்டுக்குப் பெருமை சேர்ப்பது போலப் பெருங்காப்பியங்கள் மொழிக்கு வளம் சேர்க்கின்றன. மலைகளின் அகலமும் உயரமும் அளக்கமுடியாதவை. அதைப்போல பெருங்காப்பியங்களும் மொழிக்கு வளம் சேர்க்கின்றன.

தமிழில் கடல் போலும் காப்பியங்கள் பல தோன்றித் தமிழ்மொழிக்குப் பல்வகைச் சிறப்புகளை அளித்துள்ளன. என்றும் வற்றாத கடல் நலம் போலக் காப்பிய நலங்கள் தமிழ்மொழியைச் செழிக்கச் செய்துள்ளன. சங்கத் தொகை நூல்களுக்குப்பின் நெடும் பாட்டுக்களும் இரட்டைக் காப்பியங்களும், திருமுறைகளுக்குப்பின் பெருங்காப்பியங்களும் தோன்றிக் காப்பியவளம் நிறைந்த மொழியாகத் தமிழை ஆக்கியுள்ளன.

சீவகசிந்தாமணி தொடக்கமாகப் பாரதிதாசனாரின் குடும்ப விளக்கு வரை தமிழில் வளமான காப்பிய மரபு செழித்தோங்கி வளர்ந்துள்ளது. கம்பனின் காப்பிய உலகம் கரைகாண முடியாதது. அந்தக் காப்பியத்திற்கு வித்தும் வேரும் சிந்தாமணியில் உள்ளது என்றால் சிந்தாமணியின் சிறப்பை எவ்வாறு எடுத்துரைப்பது?

பெருங்காப்பியப் பேறுகள் எல்லாம் பெற்றுத் திகழும் பெருங்காப்பியம் சிந்தாமணி; கற்பனை வளமும் கருத்து நலமும் உவமை நலமும் தொடர் அழகும், மலிந்த முழுக் காப்பியம்; பின் எழுந்த காப்பியங்கள் பலவற்றுக்கு மூலக் காப்பியம்; காப்பியம் படைப்பார்க்கு வழிகாட்டும் ஒளிக்காப்பியம். தேவர்தம் புலமை நலமெல்லாம், சிந்தனை வளமெல்லாம் கருத்து நலமெல்லாம் ஒருசேரச் சுரக்கும் அமுதசுரபி சிந்தாமணி. சிந்தாமணியின் சிறப் பெலாம் உச்சிமேற் புலவர்கொள் **நச்சினார்க்கினியரின்** புலமை வீறுமிக்க உரைத்திறத்தால் உயர்கிறது. சிந்தாமணி சிந்திப்பவர்க்கு சிந்திப்பன எல்லாம் தரும் என்பதை நச்சினார்க்கினியர் உரை நன்றாக விளக்கு கிறது.

நச்சினார்க்கினியரின் உரை நலங்கள் இன்று தனி நூல்களாக வெளிவந்துள்ளன. யாப்பருங்கல உரைக்கு உள்ள நிலைத்த பெருமைபோலச் சிந்தாமணி உரைக்கும் நிலைத்த பெருமை உண்டு. பல்வகை நலங்களைப் பெற்றுத் திகழும் நச்சினார்க்கினியர் உரை சிந்தாமணி யாகிய பொன்னை மேலும் ஒளிபெறச் செய்கிறது. உரையே இலக்கியக் கருவூலமாய் கலைக் களஞ்சியமாய் நூலுக்கும் நூலாசிரியர்க்கும் பெருமை சேர்க்கும் பேழை யாய்த் திகழ்கிறது. கற்பார்க்கு இன்பம் நல்கும் நல் விருந்து நச்சினார்க்கினியர் உரை. மூலத்தை, ஆசிரியர் திரு உள்ளத்தை, ஆழ்ந்திருக்கும் கவி உள்ளத்தை விளக்கிக் காட்டும் கண்ணாடி இவர் உரை.

எல்லா வகைக் காப்பியக் கூறுகளும் அமைந்த சிந்தாமணிக் காப்பியத்தைப் பதிப்பின் வேந்தர் **உ. வே. சாமிநாதய்யர்** தம் நுண்மாண் நுழைபுலத்தால் செம்பதிப்புக் கொணர்ந்து பார் அறியப் பரப்பினார். சிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் உரையும், ஐயர் பதிப்பும் தனிச்சிறப்பை நல்கின. காப்பியம் கற்கப் புகுவார்க்கு, காப்பியக் கல்வியில் கற்றுச் சிறக்க விரும்பு வோர்க்கு, உரையும் பதிப்பும் உற்றுழி உதவுவன. பெரு நூலுக்கு உரை வகுக்கும் நெறியும் நயங்காணும் நன் னெறியும் பதிப்பு அமைக்கும் செந்நெறியும் சிந்தாமணிப் பதிப்பு ஒன்றுகொண்டே உணரலாம்.

இக்காலத்தில் மூலச் செய்யுளின் முழுமையையும் உரைகளின் நயங்களையும் நலங்களையும் உணரும் வகையில் இந்தப் பதிப்பு வெளியிடப்படுகிறது. இலக் கியங்கள் இலக்கிய ஆர்வம் உடைய வாசகர்களுக்கு வழங்கப் பெறும் திட்டத்தில் இச்செம்பதிப்பு மூன்று பகுதிகளாக மலர்கின்றன. பெருங்காப்பியங்களின் பெரு நலங்களை யாவரும் எளிதில் உணரும் வண்ணம் உரிய விளக்கங்களுடன் இப்பதிப்பு வெளிவருகிறது. இந்நூலுக்கு எளிய உரை எழுதிய **ஞா. மாணிக்கவாசகன்** பன்னூ லாசிரியர், வாழ்க்கை வரலாற்று ஆசிரியர், இதழாசிரியர், மக்கள் பதிப்புகள் பல கொணர்ந்த இலக்கியப் பதிப் பாசிரியர். கதைத் தொடர்பு கெடாதபடி இணைப் புரைகள், அரிய சொற்களுக்கு எளிய பொருள்கள், தெளிவான பொழிப்புரை, நீரோட்டமான நடை இப் பதிப்பின் தனிச் சிறப்புக்களாகும்.

முறையாகத் தமிழ் பயில்வார்க்கும் முறை சாராக் கல்வி பயில்வார்க்கும் இந்த எளிய உரை உற்ற துணை யாகும். விளக்க உரையும் விருத்தி உரையுமாக அமை யாமல் தெளிபொருளை விளக்கும், நுண்பொருளை உணர்த்தும் இனிய எளிய நல்லுரையாக இந்த உரை

அமைந்துள்ளது. வாசகர் நலங்கருதி மக்கள் நடையில் உரை எழுதப் பெற்றுள்ளது. பழந்தமிழ் இலக்கியத்திற்கு புதிய தமிழ் உரை மேலும் பொலிவு ஊட்டுகிறது.

இலக்கிய உணர்வு சிறக்கவும் இலக்கியக் கல்வி பெருகவும் காப்பியக் கல்வி வளரவும் பெருங்காப்பியப் பயிற்சி சிறக்கவும் இவ்வகைப் பதிப்புகள் துணைசெய்யும் என்பது எம் நம்பிக்கை.

காப்பியத்தின் பல்வகைச் சிறப்புகள் பற்றியும், திருத்தக்க தேவரின் புலமை வீறு, நச்சினார்க்கினியரின் உரைத் திறன், ஐயரின் பதிப்புத்திறன் அனைத்தையும் பற்றி அறிஞர் **மு. வை. அரவிந்தன்** அவர்கள் அரிய, பெரிய ஆய்வுரை நல்கியுள்ளார்கள். பெருங்காப்பியங்களில் பயிற்சி மிக்க அரவிந்தன் அவர்களின் உரை, நூலுக்கு ஒரு தோரணவாயில். காப்பியத்தை கற்கும் நெறியும் துய்க்கும் நெறியும் அறிவியல் அணுகுமுறையில் அரவிந்தன் உயிரோவியமாக வரைந்துள்ள திறம் வியத்தற்குரியது. இவ்வகை முன்னுரைகள் காப்பியக் கல்வியும், தமிழ்க் கல்வியும் பரவ வழிசெய்யும் என்பது எம் நம்பிக்கை.

# சீவக சிந்தாமணி

## அறிமுகமும் ஆய்வும்

### பேராசிரியர் மு. வை. அரவிந்தன்

சீவகன்போல் வீரத்தை — காதல் தன்னைச்
செப்புவதோர் நூல் உண்டோ? தமிழர் நாட்டின்
பாவகன்ற இலக்கியத்தின் அரசு, **சிந்தா
மணி** என்று பகர்ந்திடுதல் மிகையே இல்லை!

**—பாவேந்தர் பாரதிதாசன்**

**காப்பியச் செல்வம்**

''தமிழன்னையின் திருவடிகளில், சிலப்பதிகாரம் சிலம்பாக இருந்து இன்னொலி எழுப்புகின்றது. மணி மேகலை இடையில் அணியும் மேகலையாக விளங்கு கின்றது; வளையாபதி கைகளில் பொலியும் வளையாக உள்ளது; குண்டலகேசி காதுகளில் ஒளிவீசும் குண்டலமாக இருக்கின்றது; சீவகசிந்தாமணி தலையில் உள்ள பொன் முடியில் திகழும் ஒளி மணியாப் பொருந்தியுள்ளது!'' என்று புகழ்ந்து தமிழில் உள்ள ஐம்பெருங்காப்பியங் களையும் போற்றுவதை ஒரு மரபாகத் தமிழ்ப் புலவர்கள் கொண்டுள்ளனர்.

ஐம்பெருங்காப்பியங்களில் இன்று நமக்கு முழுமையாகக் கிடைத்துள்ளவை, சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி ஆகிய மூன்றுமே. இந்த முப்பெருங் காப்பியங்களும் தோன்றிய நாள்முதல் இன்றுவரை தமிழ் மக்களிடையே சிறந்து விளங்குகின்றன.

தமிழ் நாட்டிற்குத் திருவேங்கடம் போன்ற மலைகளால் ஏற்பட்ட சிறப்பைவிட—காவிரி போன்ற ஆறுகளால் உண்டான பெருமையைவிட—தஞ்சைப் பெரிய கோயில் போன்ற கலைச் செல்வங்களால் கிடைத்த மேன்மையைவிட—விளைபொருள்களாலும் கனிகளாலும் வாய்த்த புகழைவிடப் பெருங்காப்பியங்கள் படைத்த புலவர்களால் கிடைத்த மாண்பே உயர்வானது.

**காப்பிய உலகம்**

பெருங்காப்பியம் படைத்த புலவர்களைப்பாரதியார்,

**''கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல**
**காற்றையும் வான வெளியையும் சேர்த்து,**
**தெள்ளு தமிழ்ப் புலவோர்கள்—பல**
**தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்!''**

என்று போற்றுகின்றார்.

ஆம்! தெள்ளுதமிழ்ப் புலவர்கள் நமக்குத் தமிழில் தந்துள்ள தீஞ்சுவைக் காவியங்கள் யாவும் மதுவைப்போல் மயக்குகின்றன; தீயைப் போல் சுடுகின்றன; காற்றைப் போல் உயிர்ப்புத் தருகின்றன! இவற்றிற்கும் மேலாக எல்லையின்றி விரிந்து கிடக்கும் வானவெளியைப்போல் தோன்றி, நமக்குக் கற்பனைச் சிறகுகள் தந்து உயரப் பறக்கச் செய்கின்றன!

தமிழ்க் காப்பியம் ஒவ்வொன்றும் ஒரு தனி உலகமாய்க் காட்சி தருகின்றது. தமிழ்த்தென்றல் திரு. வி. க. தமிழ்க் காவிய உலகம் தரும் இன்ப அனுபவத்தைப் பின்வருமாறு போற்றி உரைக்கின்றார்:

''தமிழ்க் காவிய உலகில் எத்துணை மேகமண்டலம்! எத்துணை ஏரிகள்! எத்துணை வயல்கள்! ஊர்கள் எத்தனை! நகரங்கள் எத்தனை! நாடுகள் எத்தனை!

உழவு ஒரு பால் — வாணிபம் மற்றொரு பால்—அரசு இன்னொரு பால்—அறம் வேறொரு பால்!

யாண்டும் விருந்தோம்பல் — யாண்டும் கொடை — எங்கணும் விழா!

நம் பெருங் காவியங்களில் உலகைக் காணலாம்; உயிரைக் காணலாம்; கடவுளைக் காணலாம்!

காவிய இன்பம் பேரின்பம்! பேரின்பம்!''[1]

தமிழ்த் தென்றல் திரு. வி. க.வுக்கு ஏற்பட்ட இத் தகைய பலவகையான இன்ப அனுபவங்களை எல்லாம் ஒரே இடத்தில்—ஒரே காலத்தில் நமக்கு அளிக்கின்ற பெருங்காவியமாய் உள்ளது சீவகசிந்தாமணி.

சீவகசிந்தாமணி என்னும் காப்பிய உலகில் நீண்ட காலம் பயணம் செய்து, பல வேறு இடங்களில் தங்கிக் காட்சி பல கண்டு திளைத்தவர், டாக்டர் உ. வே. சாமி நாத ஐயர். அவர்கள் சிந்தாமணி ஏட்டுச் சுவடிகளை எல்லாம் திரட்டி வைத்துக்கொண்டு இரவு பகலாய்த் தனியாக அமர்ந்து, அக் காப்பியம் முழுவதையும் படித்து மகிழ்ந்தபோது தமக்கு ஏற்பட்ட இன்ப அனுபவத்தைப் பின்வருமாறு கூறுகின்றார்:

''தனிமையிலே திருத்தக்க தேவர் (சிந்தாமணியின் ஆசிரியர்), என்னை எங்கெல்லாமோ அழைத்துச் செல் வார். காட்சிகளின் இடையே என் உடம்புதான் இரவில் தனியாக இருக்குமேயன்றி, என் மனம் சிந்தாமணிப்

---

1. இளமை விருந்து (1971) பக்கம் 65.

பிரபஞ்சத்திலே விரிந்த 'இடங்களையும், நீண்டகால நிகழ்ச்சிகளையும் அளவிட்டு இன்புறும்!'' [1]

இத்தகைய இன்ப அனுபவம், சீவகசிந்தாமணியைக் கற்கும் அனைவர்க்கும் ஏற்படுகின்றது. ஆம்! அந்தக் காப்பியம் ஒரு தனி உலகமாய்க் காட்சி தருகின்றது!

**நூலாசிரியர்**

சீவகசிந்தாமணிக் காப்பியத்தை இயற்றியவர், திருத்தக்க தேவர் என்னும் ஜைனமுனிவர். அவர், தமிழகத்தில் ஜைன சமயம் சிறந்து விளங்கிய காலத்தில், அதாவது கி. பி. ஆறு ஏழாம் நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர்.

அவரது வாழ்க்கை வரலாற்றை அறிவிக்கும் சான்றுகள் மிகச்சிலவே இன்று நமக்குக் கிடைக்கின்றன.

1. சீவகசிந்தாமணிக்கு ஓம்படைச் செய்யுளாக 'முந்நீர் வலம்புரி' (3143) என்பதைத் திருத்தக்கதேவரின் குரு இயற்றியுள்ளார். அந்தச் செய்யுளுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், ''சோழ குலமாகிய கடலிலே பிறந்த வலம்புரி'' என்று திருத்தக்கதேவரைக் குறிப்பிடுகின்றார். இதனால் அவர் சோழமன்னர் குடியில் பிறந்தவர் என்று தெரிகின்றது.

2. நச்சினார்க்கினியரின் உரைச் சிறப்புப்பாயிரம், (36-38),

> **'' —வண் பெருவஞ்சிப்**
> **பொய்யா மொழி புகழ் மையறு காட்சித்**
> **திருத்தகு முனிவன் ''**

என்று கூறுகின்றது. ''வஞ்சி நகரில் வாழ்ந்த 'பொய்யா மொழி' என்ற புலவரால் புகழப்பட்டவர்'' என்று தெரிகிறது.

---

1. என் சரித்திரம், பக்கம் 782.

இத்தகைய குறிப்புகளைத் தவிர வேறு செய்திகள் விளக்கமாகக் கிடைக்கவில்லை! எனினும், ஜைன சமயத் தவரிடையே, திருத்தக்கதேவர் சீவகசிந்தாமணிக் காப்பியம் இயற்றிய வரலாறு பற்றிச் செவி வழியாகப் பின்வரும் கதை கூறப்படுகின்றது.

''இளமைக் காலத்திலேயே துறவு பூண்ட திருத்தக்க தேவர், கல்வி கேள்வி ஒழுக்கங்களில் சிறந்து விளங்கினார். அவர் ஒரு சமயம் தம் ஆசிரியருடன் சேர்ந்து மதுரை சென்று, அங்கே இருந்த சங்கப் புலவர்களைச் சந்தித்தார். அவர்கள் தேவருடன் உரையாடியபோது, ''ஜைன சமயப் புலவர்கள் துறவறம் பாடவல்லவர். அவர்களால் இல்லற இன்பம் பற்றிப் பாடமுடியாது'' என்றனர்.

அவர் பேச்சை ஒரு சவாலாக ஏற்றுக் கொண்ட தேவர், தம் ஆசிரியரின் வாழ்த்தைப் பெற்றுக் காவியம் எழுத முற்பட்டார். அதற்கு முன்னதாக ஆசிரியரின் கட்டளைப்படி 'நரிவிருத்தம்' என்னும் நீதி நூலை இயற்றினார்.

வடமொழியில் சிறந்து விளங்கும் நூல்களைப் பின் பற்றிச் சீவகமன்னனின் வரலாற்றைத் தமிழில் சீவக சிந்தாமணி என்னும் பெயரால் இயற்றினார்.

தேவருக்கு ஊக்கமூட்ட அவர் ஆசிரியர், அருக சரண மாகச் 'செம்பொன்மேரு' என்னும் செய்யுளை இயற்றித் தந்தார். அதன்பின் தேவர், 'மூவாமுதலா' என்னும் சித்தசரணம் கூறும் செய்யுளை இயற்றினார். மாணவர் பாடல், தம் பாடலைவிட்ச் சிறந்து விளங்கியதால் அதனையே முதலில் வைக்குமாறும், தம் பாடலை அடுத்து வைக்குமாறும் குரு கூறினார். அவ்வாறே செய்து சீவகசிந்தாமணிக் காப்பியத்தை இயற்றினார் தேவர்.

காப்பியத்தின் இறுதியில் ஓம்படைச் செய்யுள் ஒன்றை ஆசிரியர் பாடிச் சேர்த்தார் (3143).

பின்னர், தேவர் தம் காப்பியத்தை மதுரையில் இருந்த சங்கப் புலவர்களிடம் காட்டியபோது, அதில் இன்பச்சுவை மிகுதியாகவும், விளக்கமாகவும் பாடி இருப்பதைக் கண்டு அவர்கள் தேவரின் ஒழுக்கத்தையும் துறவையும் பற்றி ஐயுற்றனர்.

உடனே தேவர், பழுக்கக் காய்ச்சிய மழு ஒன்றைத் தம் கைகளில் ஏந்தி அது தம்மைச் சுடாததை உணர்த்தித் தம் தூய்மையை நிலைநாட்டினார்.''

இந்தக் கதை, ஏட்டில் எழுதாக் கதையாய் உலவி வருகிறது.

## நூலின் அமைப்பும் சிறப்பும்

திருத்தக்கதேவர் வடமொழியில் உள்ள சீவகன் கதைகள் பலவற்றைப் பின்பற்றித் தமிழில் அமைத்துக் கொண்டு காவியம் பாடியுள்ளார். இந்தக் கருத்தை டாக்டர் உ. வே. சா. பின்வருமாறு கூறியுள்ளார்:

''இந்நூலாசிரியர் இச் சரிதத்தை இன்ன நூலிலிருந்து எடுத்து யாம் பாடுகின்றோம் என்று கூறாமையின் இதற்கு முதல் நூல் இன்னதென்று இந்நூலைக் கொண்டு நிச்சயிக்கக் கூடவில்லை. ஆயினும் வடமொழியில் க்ஷத்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, ஜீவந்தர நாடகம், ஜீவந்தரசம்பு என நான்கு உள்ளன. அவைகள் எல்லாம் இச்சீவகன் சரிதமே கூறுகின்றன.

மஹாபுராணத்தின் ஒரு பாகத்தும், மணிப்பிரவாளமாகிய ஸ்ரீபுராணத்தின் ஒரு பாகத்தும் இச் சரிதம் கூறப்பட்டுள்ளது. அவற்றிற்கும் இதற்கும் கதையில் பல வேறுபாடுகள் உண்டு. அந் நூல்களுள் க்ஷத்திர சூடாமணி என்பதை இதற்கு முதல்நூல் என்று சைனர் கூறுகின்றனர்.'' [1]

---

1. சீவகசிந்தாமணி — முதற் பதிப்பின் முகவுரை பக்கம் 6 (1887).

## பெயர்ப் பொருத்தம்

'சீவகசிந்தாமணி' என்னும் தொடரில் உள்ள 'சீவகன்' என்பது, காப்பியத் தலைவன் பெயராகும். சிந்தாமணி என்பது தேவலோகத்தில் உள்ள மணியாகும். அது கேட்டதை எல்லாம் தருகின்ற தன்மையுடையது என்பர். கற்போர் நினைத்த பொருளை எல்லாம் தரும் நூல் என்ற கருத்தை உணர்த்தத் தம் காப்பியத்திற்குச் சிந்தாமணி என்று பெயரிட்டார் தேவர்.

'சீவகன் கதையைக் கூறும் சிந்தாமணி போன்ற காப்பியம்' என்னும் பொருள் தருமாறு, 'சீவகசிந்தாமணி' பெயர் பெற்றுள்ளது.

சிந்தாமணி என்ற பெயர், நூலில் உள்ள சில பாடல்களில் வந்துள்ளது.

விஜயமாதேவி தன் மகன் சீவகனை, "சிந்தாமணியே! கிடத்தியால்!" என்கிறாள் (311).

தேவரின் குரு, ஓம்படைச் செய்யுளில் (3143), 'சிந்தாமணி ஓதி உணர்ந்தார் கேட்டார்' என்று குறிப்பிடுகின்றார்.

தேவர், 'சிந்தாமணியின் சரிதம் சிதர்ந்தேன்' என்கின்றார் (3144).

இக்காப்பியத்தால், சிந்தாமணி என்ற பெயர் தமிழ் இலக்கியத்தில் புகழ் பெற்றுப் பரவி, வேறு பல நூல்களுக்குப் பெயராய் அமைந்தது. தமிழ் மக்களில் ஆண் பெண் ஆகிய இருபாலாரும் விரும்பி ஏற்கும் பெயராயிற்று. வணிக நிலையமும் வாழும் இல்லமும் அந்தப் பெயரைப் பெற்றன.

## பாடல்களின் எண்ணிக்கை

இன்று சீவகசிந்தாமணிக் காப்பியத்தில் உ.வே.சா. பதிப்பில் 3145 பாடல்களும், சைவ சமாஜப் பதிப்பில்

(1941) 3154 பாடல்களும் உள்ளன. ஆனால், தொடக்கத்தில் 2700 பாடல்களே இருந்தன என்று நச்சினார்க்கினியர் (3143—உரையில்) கூறுகின்றார். அவை தவிர ஏனைய பாடல்கள் எல்லாம் கந்தியார் என்னும் பெண்பாற் புலவர் இடைச்செருகலாக எழுதிச் சேர்க்கப்பட்டவை என்றும், அவை எவை என்று தெரியவில்லை என்றும் கூறுகின்றனர் (3143. உ. வே. சா. அடிக்குறிப்பு).

## உட்பிரிவுகள்

சீவகசிந்தாமணியின் உட்பிரிவுக்கு 'இலம்பகம்' என்று பெயர். அதற்கு 'மாலை' என்பது பொருள்.

நூலில் மொத்தம் பதின்மூன்று இலம்பகங்கள் உள்ளன. அவை தவிரக் காப்பியத்தின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகம் ஆகியவை உள்ளன.

இலம்பகம் யாவும் மகளிர் பெயரைப் பெற்றுள்ளன. ஒவ்வொரு இலம்பகத்திலும் ஒரு மண நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது. சீவகன், மகளிர் எண்மரை மணக்கின்றான். அதனால் சிந்தாமணிக் காப்பியத்திற்கு 'மணநூல்' என்ற பெயரும் உண்டு.

பதிகத்துள், காப்பியக் கதையின் சுருக்கம் பாடப்பட்டுள்ளது. இவ்வாறு கதைச் சுருக்கம் பாடும் முறை வடமொழியில் வால்மீகி இராமாயணத்தில் உள்ளது. தேவர் அந்த மரபைப் பின்பற்றியுள்ளார். தமிழ்க் காப்பியங்களில் எதுவும் இம்முறையைப் பின்பற்றவில்லை!

## ஓசையும் பாடல் வகைகளும்

திருத்தக்க தேவர்தான் முதன் முதலாக பல இனிய ஓசைகளையுடைய பல வகையான பாடல்களைக் கொண்டு காப்பியம் இயற்றினார். அதனால் தமிழ்க் காவிய உலகில் நன்மைகள் பல ஏற்பட்டன.

வான்புகழ்

இத்தகைய சிறப்புகளை உடைய சிந்தாமணிக் காப்பியத்தை நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப் பாயிரம்,

"வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதித்த செந்தமிழ்ச்
சிந்தாமணி"

என்று போற்றுகின்றது.

கவிஞர் சுரதா,

முதல்அடியைத் தேனாக்கி, அடுத்த டுத்து
முளைக்கின்ற தொடர்அடியை அமுத மாக்கி,
விதம்விதமாய்ச் சந்தநய நட்புண் டாக்கி,
வியப்புமிகு உவமைகளால் புதுமை தேக்கி,
பதம்உடைய பாவினமாம் விருத்தம் ஆக்கி,
பதின்மூன்று இலம்பகமாய் வகுத்துத் தூக்கி
இதயம்அதை இறைவன்பால் பதிய வைத்தோன்
இன்பச் சிந்தாமணிநூல் இயற்ற லானான்

என்று திருத்தக்க தேவரைப் போற்றுகின்றார்.

## காப்பியத் திறவுகோல்

கதைத் தலைவனாகிய சீவகன் தோன்றிய ஏமாங்கத நாட்டின் சிறப்பைப் பின்வருமாறு போற்றிப் பாடு கின்றார், தேவர்:

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக்
கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடை கீறி
வருக்கை போழ்ந்து

**தேமாங்கனி சிதறி வாழைப்**
**பழங்கள் சிந்தும்**
**ஏமாங்கதம் என்று இசையால்**
**திசைபோயது உண்டே!**

இதனைப் படிக்கும்போது, தென்னை, கமுகு, பலா, மா, வாழை ஆகிய மரங்கள், ஒரே இடத்தில் அருகே அருகே செழித்து வளர்ந்து காய்த்துப் பழுத்து நிற்கும் வளமான காட்சி நம் கண்முன் தோன்றுகிறது.

**இயற்கை நிகழ்ச்சி**

தென்னை, கமுகு முதலிய மரங்கள் செழித்து வளர்ந்திருக்கும் காட்சியை மட்டும் பாடி இருந்தால் பாடலில் சுவை இருக்காது. மரங்களைக் காட்டி இயற்கையாக நிகழும் காட்சியை அங்கே அமைத்துக் கொண்டு, தேவர் இன்ப நாடகம் ஒன்றை நடத்திக் காட்டுகின்றார்.

**இன்ப நாடகம்**

தென்னை மரம் மிக உயரமாக நிற்கிறது. அதனினும் சிறிது குறைந்த உயரத்துடன் பாக்குமரம் இருக்கிறது. அதன் அருகே உயரத்தில் சிறிது குறைந்த பலாமரம் வளர்ந்திருக்கிறது. அதன் பக்கத்தில் மாமரமும், அதை விட உயரம் குறைந்த வாழைமரமும் செழித்து இருக்கிறது.

இந்த ஐந்து வகையான மரங்களும் ஒரே இடத்தில் செழித்து வளர்ந்து காய்த்து நிற்கின்றன.

அங்கே, இளவேனிற் பருவத்தில் ஒரு நாள் பின்வரும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

தென்னை மரத்திலிருந்து தேங்காய் நெற்று ஒன்று, தானே கீழே விழுகிறது. தென்னை நெற்றுக் கீழே விழும் வேகத்தில் அது பாக்குமரத்தின் உச்சியில் படுகிறது. அதனால் அங்கே தேனீக்கள் கட்டி இருந்த தேன்கூடு

கிழிகிறது. தேன்கூட்டைக் கிழித்தபின் நெற்றுக் கீழே இறங்கி வந்து பலாமரத்தை மோதிப் பலாப்பழத்தைப் பிளக்கிறது. பின்னர் அங்கிருந்து இறங்கி வந்து மாமரத்தைத் தாக்கி மாம்பழங்களை உதிர்க்கிறது. பிறகு கீழே இறங்கி வாழைமரத்தில் மோதி வாழைப் பழங்களைச் சிதறுகிறது.

இத்தகைய இயற்கை வளத்தை உடைய ஏமாங்கத நாட்டின் புகழ், எல்லாத் திசைகளிலும் பரவி இருந்தது.

இவ்வாறு ஏமாங்கத நாட்டின் சிறப்பைப் போற்றிப் பாடியுள்ளார், திருத்தக்கதேவர்.

**நல்ல தொடக்கம்**

கவிஞர்கள், தாம் இயற்றும் காவியத்தின் முதற் செய்யுளிலேயே காவியத்தின் உட்பொருளைக் குறிப்பாக உணர்த்துவது வழக்கம். அந்த வழக்கத்தின்படி, திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணிக் காப்பியத்தின் தொடக்கத்தில் உள்ள 'காய்மாண்ட' என்னும் செய்யுளில் தம் காவியத்தின் உட்பொருள் யாவும் புலப்படுமாறு நுட்பமாகப் பாடியுள்ளார்.

**மூலசக்தி**

சீவகசிந்தாமணிக் காப்பியத்தின் கதை நிகழ்ச்சிகளை எல்லாம் நிகழ்த்தும் தலைவனாக விளங்கும் சீவகனை இயக்குகின்ற மூலசக்தியாக அவனது தாய், விஜயமாதேவி விளங்குகின்றார்.

அரசர் குடியில் பிறந்து, அரசன் சச்சந்தனை மணந்து பட்டத்தரசியாகி அரண்மனையில் செல்வச் செழிப்போடு இன்பமாக வாழ்ந்து வந்த அவளுடைய வாழ்க்கை, அமைச்சன் கட்டியங்காரனால் பாழ்பட்டு வீழ்ச்சி அடைகின்றது. அதனால், சுடுகாட்டில் சீவகனைப் பெற்றுப் புலம்புகின்றாள். அங்கே வாழும் தெய்வம் ஒன்று வந்து அவளுக்கு ஆறுதல் கூறி, குழந்தையைக் கந்துக்கடன்

என்னும் வணிகன் வீட்டில் சேர்ப்பிக்கிறது. பின்னர், அந்தத் தெய்வம் அரசியை ஒரு தவப்பள்ளிக்கு அழைத்துச் சென்று அங்கே இருக்குமாறு செய்கிறது. அரசி அங்கே தூய வாழ்வை மேற்கொண்டு அறச்சிந்தனையுடன் வாழ் கிறாள். தன் மகன் சீவகன் சிறந்து விளங்கிக் கட்டியங் காரனை வென்று வீழ்த்தி இழந்த அரசை மீண்டும் பெற வேண்டும் என்று இடைவிடாது உறுதியாக எண்ணி எண்ணி, எண்ணிய எண்ணியாங்கு எய்துகின்றாள்.

அவள் மகன் சீவகன் வளர்ந்து பலவகையான கலை களில் தேர்ந்து அவற்றின் பயனாய் மகளிர் எண்மரை மணந்து கொள்கிறான்; மாவீரனாக விளங்கி, கட்டியங் காரனை வென்று வீழ்த்தி, நாட்டைக் கைப்பற்றி, நல்லாட்சி அமைத்து, நன்மை பல செய்கிறான்.

தன் தவம் பலித்துவிட்டதால் மன நிறைவு கொண்ட விஜயமாதேவி மகனுக்குச் சிறந்த அறிவுரைகளைக் கூறித் துறவு மேற்கொள்ளுகின்றார்.

காப்பிய நிகழ்ச்சிகளில் இந்தத் துறவு முதன்மை வாய்ந்தது. அது, பின்னர்ப் பல்வேறு துறவுகளுக்குக் காரணமாய் அமைகின்றது.

விஜயமாதேவி துறவை மேற்கொண்ட பின்னர், நாடாளும் மன்னனாய் விளங்கும் சீவகன் துறவி யாகின்றான். அவனைப் பின்பற்றி அவனது தேவியர் எண்மரும் துறக்கின்றனர். அதைக் கண்டு சீவகனின் தம்பியரும் துறவு பூணுகின்றனர். பிறகு சீவகனின் தோழர்கள் துறவை மேற்கொள்ளுகின்றனர்.

இவ்வாறு விஜயமாதேவியின் துறவு, ஒன்றன்பின் ஒன்றாக நிகழும் பல துறவுகளுக்குக் காரணமாய் அமை கின்றது.

இந்தக் காப்பிய நிகழ்ச்சிகளை எல்லாம், 'காய் மாண்ட' என்னும் முதற்பாடல் நிகழ்ச்சிகளோடு பின்

வருமாறு தொடர்புபடுத்தி நோக்குகின்றார், தமிழறிஞர் செ. வேங்கடராமச் செட்டியார் அவர்கள்.*

1. தென்னை மரத்தில் தோன்றிக் காய்த்து முற்றாகி இயற்கையாக விழும் தேங்காய் நெற்று மரத்திலிருந்து கீழே விழுதல், இல்வாழ்க்கையில் ஈடுபட்டு மகனை ஈன்ற பின் துன்பங்களுக்கு ஆளாகி உலக அனுபவம் பல அடைந்து மூத்து, ஆசைகள் அற்று, பாசங்களை வென்று மன உறுதியுடன் விஜயமாதேவி துறவு பூணுதலைக் குறிப்பாக உணர்த்துகிறது.

2. தேங்காய் நெற்று விழுந்து பாக்கு மரத்தின் உச்சியை மோதி அங்கே உள்ள தேன் கூட்டைச் சிதைப்பது, தன் தாயைப் பின்பற்றிச் சீவகன் துறப்பதைச் சுட்டுகிறது.

3. தேன்கூட்டைச் சிதைத்த தேங்காய் நெற்று, பின்னர்ப் பல இனிய சுளைகளையுடைய பலாப்பழத்தைத் தாக்கிப் பிளப்பது, சீவகனைப் பின்பற்றி அவனது தேவியர் எண்மரும் துறத்தலை உணர்த்துகின்றது.

4. பலாப் பழத்தைச் சிதைத்தபின் தேங்காய் நெற்றுக் கீழே இறங்கி மாம்பழங்களை உதிர்ப்பது, சீவகனின் தம்பியர் துறத்தலை நினைவூட்டுகிறது.

5. மாம்பழத்தை உதிர்த்த நெற்றுக் கடைசியில் வாழைப் பழங்களைச் சிதறுவது, சீவகனின் தோழர்கள் துறத்தலைக் காட்டுகிறது.

உயரமான தென்னை மரத்திலிருந்து தானாகவே விழுகின்ற நெற்றின் வீழ்ச்சி அடுத்து அடுத்துப் பல கனிகள் உதிர்வதற்குக் காரணமாய் அமைந்ததுபோல், மூதாட்டியாகிய விஜயமாதேவி தானே பற்றற்றுத் துறவு மேற்கொண்டு உலக வாழ்க்கையை நீத்த செயல், பலருடைய துறவுக்குக் காரணமாய் உள்ளது.

---

* திருக்கோயில் (செப் & அக்—1981) பக்கம். 30, 31.

இத்தகைய சிறந்த கருத்துகளை எல்லாம் காப்பியத்தின் முதற்பாடலாய் அமைந்துள்ள 'காய்மாண்ட' என்ற பாடல் உணர்த்துகின்றது. அந்தப் பாடலை மேம் போக்காகக் காணும்போது, அது நாட்டு வளம் கூறும் செய்யுளாக மட்டும் தோன்றுகிறது. ஆழ்ந்து சிந்திக்கும் போது, அந்தப் பாடல் காப்பிய நிகழ்ச்சிகளுக்கு ஒரு முன்னுரையாக — காப்பியத்தின் உட்கருத்தை அறிய உதவும் திறவுகோலாக — காப்பியத்துள் நுழைய உதவும் பொன் வாயிலாக விளங்குகிறது.

**நச்சினார்க்கினியர் உரைத்திறன்**

சீவகசிந்தாமணிக்கு உரிய பலவகையான சிறப்புகளுள் ஒன்று, அந்தக் காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதி இருப்பது.

உரையாசிரியர்களில் சிறப்புற்று விளங்குகின்ற நச்சினார்க்கினியர், தமது புலமைத் திறனை வெளிப் படுத்துவதற்கு உரிய நல்ல களமாகச் சீவகசிந்தாமணி யைத் தேர்ந்தெடுத்துள்ளார். அந்தக் காப்பியமும் அவரது புலமைத் திறனுக்கு ஈடுகொடுத்து உயர்ந்து விளங்குகிறது. நூலால் உரையும், உரையால் நூலும் சிறப்புப் பெறுகின்றன. ஒன்றை ஒன்று உயர்த்துகின்றன.

நச்சினார்க்கினியர், பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். அவரது காலத்திற்கு முன் கம்பராமாயணம் தோன்றிச் சிறப்புடன் விளங்கியது. அதற்கு முன் தோன்றிய பெரிய புராணம் புகழுடன் விளங் கியது. அதற்கு முன் தோன்றிய பெருங்கதை உயர்ந்து விளங்கியது. அதற்கு முன் தோன்றிய மணிமேகலை மாண்புடன் விளங்கியது.

தமக்கு முன் தோன்றிப் புகழுடன் விளங்கி இருந்த காப்பியங்கள் பல இருந்தும்—அவற்றிற்கு உரைகள் இல்லாமல் இருந்தும் அவற்றிற்கெல்லாம் உரை எழுத

எண்ணாமல் நச்சினார்க்கினியர், சீவகசிந்தாமணியையே தமது புலமைமாட்சிக்கும் உரைத்திறனுக்கும் ஏற்ற சிறந்த களமாகத் தேர்ந்தெடுத்துள்ளார்.

சீவகசிந்தாமணி, ஜைன சமயத்தைச் சேர்ந்தது. நச்சினார்க்கினியர் சைவர். இவ்வாறு இருந்தும் அவர் அதற்கு உரை எழுதியுள்ளார்.

பல பழைய பெருநூல்களுக்கு உரை எழுதிப் புகழ் பெற்ற நச்சினார்க்கினியர், முதலில் உரை எழுதிய நூல் சீவகசிந்தாமணியே!

அவர், முதன் முதலில் எழுதிய உரையை ஜைன சமயப் பெருமக்கள் ஏற்காமல் புறக்கணித்தபோதும், மீண்டும் முயன்று தகுதி பெற்றுத் தம் குறைகளை நீக்கிக் கொண்டு நிறைவு பெற்று இரண்டாம் முறையாக நல்லுரை கண்டு புகழ் பெற்றுள்ளார்.

இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் எதை உணர்த்துகின்றன? சீவகசிந்தாமணியின் பெருமையை உணர்த்துகின்றன!

### முன்னைய உரையும் மறு ஆய்வும்

நச்சினார்க்கினியர், சீவகசிந்தாமணிக்கு உரை எழுது வதற்கு முன்னரே அந்த நூலுக்குப் பழைய உரை ஒன்று இருந்தது. அந்த உரையைக் கற்று அதில் உள்ள கருத்து களை எல்லாம் தழுவிக் கொண்ட நச்சினார்க்கினியர், அதனைத் தம் உரையில் பின்வரும் இடங்களில் குறிப்பிடு கின்றார்:

என்பாரும் உளர்—260

என்றும் உரைப்பர்—366.

என்றும் உரைப்பர்—1434.

என்றல் பொருந்தாமை உணர்க—1793.

ஆக்கியும் உரைப்ப—1870.

**என்று பாடம் ஓதி...என்பாரும் உளர்—1933.**
**என்பாரும் உளர்—2705.**

இந்த இடங்களை நோக்கும்போது, நச்சினார்க்கினியர் தமக்கு முன் தோன்றி இருந்த பழைய உரையை நன்கு கற்றபின்னரே புதிய உரை எழுதினார் என்பது விளங்குகின்றது.

நச்சினார்க்கினியர் தமது உரையையே மறு ஆய்வு செய்து குற்றங்குறைகளை நீக்கி, நிறைவு செய்து, அறிய வேண்டுவனவற்றை அறிந்து, புதிய செய்திகளைச் சேர்த்து, இரண்டாம் முறையாகச் சிறந்த உரை எழுதினார் என்ற செய்தியை உ. வே. சா. பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

''ஜைன அன்பர்களுடைய பழக்கத்தால், (நச்சினார்க்கினியரின் உரை) ஏட்டுப் பிரதிகள், இரண்டு வகையாக இருப்பதற்குக் காரணம் தெரிந்து கொண்டேன்.

நச்சினார்க்கினியர் முதலில் சிந்தாமணிக்கு ஓர் உரை எழுதினாராம். பிறகு அதை ஜைனர்களிடம் படித்துக் காட்டியபோது சம்பிரதாய விரோதமாகச் சில பகுதிகள் உள்ளன என்று சொன்னார்களாம். அதனால் அவர் தம்மை ஒரு ஜைனராகச் சொல்லிக் கொண்டு சிற்றாம்பூர் என்னும் இடத்தில் உள்ள ஜைன மடத்திற்கு வந்து சில காலம் தங்கி, ஜைன நூல்களையும் ஜைன சம்பிரதாயங்களையும் கற்றுச் சென்று மீட்டும் புதிய உரையை எழுதினாராம்.

விசேஷ உரையுடன் இருக்கும் பிரதியில் உள்ளது, பின்பு எழுதிய உரை என்று தெரிய வந்தது.''*

முன்னைய உரையைத் தழுவியும், முதலில் தாம் எழுதிய உரையை மறு ஆய்வு செய்து புதுக்கியும் சீவக சிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரைக்கு மூன்று வகையான சிறப்பியல்புகள் உள்ளன.

* என் சரித்திரம் (1950) பக்கம்—741.

அவர் சிந்தாமணியை இலக்கிய நூலாகவும், பெருங் காப்பியமாகவும், ஜைன சமய நூலாகவும் நோக்கி உரை விளக்கம் எழுதியுள்ளார். இந்த மூன்று வகையான நோக்கும் உடையதாய் உரை அமைந்துள்ளது.

## 1. இலக்கிய நோக்கு

நச்சினார்க்கினியர் முதலாவதாகச் சிந்தாமணியை ஓர் இலக்கியமாக நோக்கியுள்ளார். முதற்பாடலின் உரையில்,

''இவ்விலக்கியம் இனிது முடிதற்பொருட்டு அவன் திருவடிகளை வணங்குவோம் என்றார் என்க''

என்றும்,

நூலின் இறுதியில் (3142),

''இவ்விலக்கியம் இடுக்கண் இன்றி இனிது முடிந்த மகிழ்ச்சியான், மீண்டும் வணங்கினார்.''

என்றும் உரைக்கின்றார்.

சிந்தாமணியை உயர்ந்த இலக்கியமாகக் கருதி ஆழ்ந்து கற்று அதன் கலையழகில் ஈடுபட்டு இலக்கியச் சுவை கண்டு மகிழ்ந்தவர் நச்சினார்க்கினியர். அவர் உரை, அருஞ்சொற்களுக்குப் பொருள்கூறும் குறிப்புரையாகவோ, பாடலின் திரண்ட கருத்தைத் தரும் பொழிப்புரை யாகவோ, விளக்கமும் நயமும் உடைய விரிவுரை யாகவோ இல்லாமல், எல்லா உரைநெறிகளிலும் உள்ள நலன்களைத் திரட்டித் தரும் தனி உரையாக அமைந் துள்ளது.

அவர், சில பாடல்களுக்கு உரை எழுதாமல் செல் கின்றார்; சிலவற்றின் வினை முடிபுகளைக் காட்டிப் பொருள் முடிபு கூறுகின்றார்; சிலவற்றில் அருஞ்சொற் பொருள் கூறுகின்றார்; சில பாடல்களில் உள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் நுண்பொருள் உரைத்து நயவுரை கூறு

கின்றார். பல பாடல்களை இணைத்து ஒரு தொடராக்கிப் பொருளைத் தொகுத்து உரைக்கின்றார்.

இவையே அல்லாமல் உவமைகளின் அழகில் ஈடுபட்டு விளக்குகின்றார். இலக்கிய மரபையும் உலகியலையும் நினைவூட்டிச் செல்கின்றார்.

## 2. காப்பிய நோக்கு

சீவகசிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரை, பாடல்களின் பொருளை விளக்கும் வெறும் உரையாக இல்லாமல் காப்பியத் திறனாய்வாக உள்ளது.

1. அவர், காப்பிய ஆசிரியரின் வரலாறு, காப்பியத்தின் அமைப்பு ஆகியவற்றை முதலில் அறிந்து கொண்ட பின்னரே உரை எழுதியுள்ளார் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன.

(1) கடவுள் வாழ்த்துப் பகுதியில் நச்சினார்க்கினியர் பின்வருமாறு கூறுகின்றார்:

''செம்பொன் (சீவக-2) என்னும் கவியால், குருக்கள் அருகனை வணங்குதலின், தாம் சித்தனை (மூவா முதலா என்னும் பாடலில்) வணங்கினார். குருக்கள் கூறுதலானும், அருகனை வணங்குதலானும் 'அதனை முன்னே வைக்க!' எனின் அவர் (குருக்கள்), 'இது (மூவா முதலா என்னும் பாடல்) நன்று; இதனை முன்னே வைக்க' என்றலின் முன் வைத்தார்.''

(2) நூலின் இறுதியில், 'முந்நீர் வலம்புரி' (3143) என்ற பாடல் ஓம்படையாக உள்ளது. அதன் உரையில், ''இது தேவர் குருக்கள் (ஆசிரியர்) கூறினார் என்று உணர்க'' என்று குறிப்பிடுகின்றார் நச்சினார்க்கினியர்.

(3) திருத்தக்கதேவர் சிந்தாமணிக் காப்பியத்தை இயற்றி முடிப்பதற்கு அவரது ஆசிரியரின் துணையே

காரணமாய் இருந்தது என்ற கருத்தை, நூலின் இறுதியில் உள்ள 'செந்தாமரைக்கு' (3144) என்னும் பாடல் உரையில் நச்சினார்க்கினியர் விளக்குகின்றார்:

''நந்தா விளக்குச் சுடர்மணி — அவியாத விளக்கு உள்ளே நின்று எரிகின்ற நன்மணி என்றது, குருக்களை''

(4) 'முந்நீர் வலம்புரி' என்னும் செய்யுள் உரையில், திருத்தக்கதேவர் 'சோழ குலமாகிய கடலிலே பிறந்த வலம்புரி' என்றும்; 'தேவர் சிந்தாமணிக் காப்பியத்தில் அருளிச் செய்த செய்யுள், இரண்டாயிரத்து எழுநூறு (2700) என்றே கொள்க' என்றும் எழுதுகின்றார்.

சிந்தாமணியைக் 'காப்பியம்' என்று நோக்குகின்ற நச்சினார்க்கினியர், அதனைத் தொடர்நிலைச் செய்யுள் என்ற தமிழ்ப் பெயரால் குறிப்பிடுகின்றார். அதற்குத் தொல்காப்பியர் கூறும் இலக்கணத்தை நினைவூட்டு கின்றார்:

''மெல்லென்ற சொல்லான் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் விழுமிய பொருள் பயப்ப, பழையதொரு கதைமேல் கொச்சகத்தால் கூறின், அது 'தோல்' என்று (தொல்காப்பியர்) கூறினமையின், இச்செய்யுள் (சிந்தா மணிக் காப்பியம்) அங்ஙனம் கூறிய தோலாம் என்று உணர்க'' (சீவக—1)

நூலின் தொடக்கத்திலேயே, ''சீவகனை முற் கூறினார். 'கதைக்கு நாயகன்' ஆதலின்'' (6) என்று காப்பியத் தலைவனை நினைவூட்டுகின்றார்.

திருத்தக்கதேவர் சீவகனைத் தன்னேர் இல்லாத தலைவனாகப் படைத்துள்ளார்.

அவன் இசைப்போட்டியில் காந்தருவதத்தையை வெல்கிறான். தன் நேர் இல்லாத தலைவனாகிய சீவகன், ஒரு பெண்ணை வென்றான் என்று கூறுவதைத்

தேவர் விரும்பவில்லை. ஆதலின் அவர் ''காந்தருவதத்தை சீவகனுக்குத் தோற்றாள்'' என்று நயமாகக் கூறுகின்றார்.

**விஞ்சைக்கு இறைவன் மகள்**
**வீணையில் தோற்றவாறும்—11**

**தோற்றனள் மடந்தை நல்யாழ்**
**தோன்றலுக்கு — 702**

**மாதர் இசை தோற்று இருந்தனளே 735**

என்று மூன்று இடங்களிலும் காந்தருவதத்தை தோற்றாள் என்றே கூறுகின்றார்.

இதன் நயத்தை உணர்ந்த நச்சினார்க்கினியர் ஆழ்ந்திருக்கும் கவியுளம் கண்டு, ''ஒரு மகளை வென்றான் என்றால் இவன் தலைமைக்கு இழிவு என்று அவள் செய்தியாகக் கூறினார்'' (11) என்று விளக்கியுள்ளார்.

சீவகனைக் கருணை மறவனாகக் காட்டுகின்றார் தேவர். ஆனிரை கவர்ந்த வேடர்களைக் கொல்லாமல் அச்சுறுத்தியே நிரை மீட்டுகின்றான். தேவர் கருத்தை நச்சினார்க்கினியர் மறவாமல் பல பாடல்களில் (11, 448, 449, 452, 453, 454) மீண்டும் மீண்டும் நினைவூட்டியுள்ளார்.

சிந்தாமணிக் காப்பியத்தின் கட்டமைப்பு, கதை நிகழ்ச்சி, பாத்திரங்களின் பண்பு, வரலாறு ஆகியவற்றை நச்சினார்க்கினியர் உற்று நோக்கித் தம் உரையில் வெளிப்படுத்தியுள்ளார்.

காந்தருவதத்தையைச் சீவகன் மணந்தபின், கட்டியங்காரனும் மற்ற மன்னர்களும் சீவகனுடன் போரிடுகின்றனர். சீவகன் அனைவரையும் வென்று வாகை சூடுகிறான். காந்தருவதத்தையின் தந்தை கலுழவேகன் ஆற்றல் மிகுந்தவன். அவன் போரில் ஈடுபட்டுச் சீவகனுக்குத் துணை செய்திருந்தால், சீவகனின் ஆண்மை

வெளிப்பட்டிராது. ஆதலின், கலுழவேகனைத் தேவர் போரில் ஈடுபடுத்தவில்லை. இதனை உணர்ந்த நச்சினார்க்கினியர், கலுழவேகன் வந்தால் சீவக சரிதை ஒன்றும் இன்றாம்'' என்று உரைக்கின்றார் (846).

சீவகனின் வளர்ப்புத் தந்தையாகிய கந்துக்கடன் இறந்த செய்தி காப்பியத்தில் எவ்விடத்தும் கூறப்பட வில்லை. ஆனால் அவர் மனைவி சுநந்தை துறவு பூண்டதை முத்தி இலம்பகத்தில் கூறுகின்றார் தேவர் (2627). இவ்விடத்தில் நச்சினார்க்கினியர், ''கந்துக்கடன் இறந்தமை, இத்தொடர் நிலைச் செய்யுளில் தேவர் கூறிற்றிலர், தகுதியன்று என்று கருதி; இத்துறவால் உய்த்து உணர வைத்தார்'' என்று விளக்கம் தருகின்றார்.

இத்தகைய இடங்களில் எல்லாம் நச்சினார்க்கினியரின் 'காப்பிய நோக்கு' நன்கு வெளிப்படுகின்றது.

### 3. சமய நோக்கு

நச்சினார்க்கினியரின் சமயநோக்கு, நூலின் தொடக் கத்தில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களிலும், முத்தி இலம்பகத்தின் பிற்பகுதியிலும் தெளிவாகப் புலப் படுகின்றது.

### டாக்டர் உ. வே. சா. பதிப்பு

சீவகசிந்தாமணியை முழுமையாக நச்சினார்க்கினியர் உரையுடன் முதன் முதலில் 1887 ஆம் ஆண்டில் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் வெளியிட்டார். பின்னர், 1907 இல் இரண்டாம் பதிப்பும், 1922இல் மூன்றாம் பதிப்பும் வெளிவந்தன.

முதற்பதிப்பில் இருந்த பல பிழைகளை அக்காலத்தில் இருந்த அறிஞர்கள் எடுத்துக் காட்டினர். அவற்றைத் திருத்தி அடுத்த பதிப்புகளில் செப்பம் செய்தார் உ. வே. சா.

அவரது பதிப்பு பல சிறப்புகளை உடையதாகும். நூலின் தொடக்கத்தில் உள்ள முகவுரையில் ஏடுகள் கிடைத்த வரலாற்றை எழுதி, அதன்பின் நூலாசிரியர் வரலாறு, நூல் பற்றிய குறிப்பு, நச்சினார்க்கினியர் உரை வரலாறு, சீவகன் சரித்திரச்சுருக்கம் (இரண்டு) ஆகிய வற்றைத் தந்து, பதின்மூன்று இலம்பகமாய் வகுத்துக் கொண்டு 3145 பாடல்களின் மூலம் தந்து, ஒவ்வொரு பாடலின் கீழும் நச்சினார்க்கினியர் உரையைத் தந்து, அடிக்குறிப்பில் விளக்கமும் ஒப்புமைப் பகுதியும் கொடுத்து, பாட வேறுபாடு காட்டி, பிற்சேர்க்கையில் மிகைப் பாடல்களையும் உரைச் சிறப்புப் பாயிரமும் சேர்த்து, செய்யுள் முதற்குறிப்பு அகராதி, அரும்பத அகராதி, மேற்கோள் பட்டியல் ஆகியவற்றை இணைத்து 1675 பக்கங்களைக் கொண்ட ஒரு பெருநூலாக வெளி யிட்ட திறனை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

**திங்கள்மும் மாரி பெய்க!**
**திருவறம் வளர்க! செங்கோல்**
**நன்கினிது அரசன் ஆள்க!**
**நாடெலாம் விளைக! மற்றும்**
**எங்குள அறத்தி னோரும்**
**இனிதூழி வாழ்க! எங்கள்**
**புங்கவன் பயந்த நன்னூல்**
**புகழொடும் பொலிக மிக்கே!**

---

# முன்னுரை

**என்றுமுள தென்தமிழ்**

**இமயம் வென்ற தமிழ்!**

என்ற புகழ்ச் சிறப்புக்குரிய தமிழின் தொன்மையும் தூய்மையும் விளக்க ஏடுகள் ஏராளம் இருக்கின்றன. பக்திச்சுவை மணக்க மணக்கப் பாடிய பாசுரங்களா யினும், மனிதப் பண்பை வளர்க்க வழங்கிய அறநூல் களாயினும் சரி—அத்தனையும் பழுத்த தமிழ்ப்புலமை பாலித்தவை. பாரெல்லாம் புகழும் பைந்தமிழின் மேன்மைக்குச் சிறப்புப் பாயிரம் பாடுபவை. ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றான சிந்தாமணிக் காவியம் செந்தமிழ்த்தாய் பெற்ற இத்தகு சிறப்புச் செல்வங்களுள் ஒன்று.

**திருத்தக்கதேவர் என்னும் தவமுனிவர்**

**சமணம் தழுவியவர்**

**வயதில் மிக இளைய துறவி**

அவர் ஓர் காவியம் பாடியிருக்கிறாராம்; காதல் சுவை கனியக் கனிய, கற்பனைத் தேன் சொட்டச் சொட்ட, கவியழகும் கதையமைப்பும் கற்கண்டு உவமை களோடு கலந்துறவாட!

என்னது? சமணம் தழுவியவர் சங்கத் தமிழிலே காதல் இலக்கியம் சமைத்திருக்கிறாரா? முற்றத் துறந் தவர் மனையறம் விளக்கும் காதல் காவியம் ஒன்றை கற்கண்டுத் தமிழிலே இயற்றியிருக்கிறாரா? வியப்பாக வன்றோ இருக்கிறது என்ற ஐய உணர்வில், வியப்பும் வினாக்குறியும் நெளியும் விழிகளோடு வீற்றிருந்த சங்கப் புலவர்களை அன்று சந்தித்த சிந்தாமணிக் காவியம்,

இன்று 'தெளிவுரை' எனும் புது உடை பூண்டு செந்தமிழர் உள்ளங்களை எல்லாம் சந்திக்க வருகிறது.

இந்த இரண்டு சந்திப்புக்களுக்கும் இடையே உள்ள இடைவெளியில் ஓடி மறைந்த நூற்றாண்டுகளில் தமிழகத்தின் வரலாறே மூடி மறைந்திருக்கிறது. வரலாற்றின் இருண்ட பகுதிகளில் மீண்டும் ஒளி படிய வேண்டும், தமிழ்மொழி புதிய வசந்தத்தைச் சந்தித்தாக வேண்டும் என்னும் ஆர்வத்தின் விளைவு சீவகசிந்தாமணித் தெளிவுரையாகி உங்கள் திருக்கரங்களிலே தவழ்கிறது.

ஒரு நாட்டின் புகழ்ப்பெருமை, மெய்க்கீர்த்தி, அதன் பரப்பளவை, விளைபொருளை, நிலவளத்தைக் கொண்டு மட்டும் கணக்கிடப்படுவதில்லை. அது பெற்றிருக்கிற மேதைகள், கலைச் செல்வங்கள், இலக்கியப் படைப்புக்கள், இவற்றைக் கொண்டே கணித்தறியப்படுகிறது என்பதை ஏற்றுக்கொண்டால்; தமிழின் புகழுக்கும் பெருமைக்கும் ஈடு இணை சொல்ல ஒரு நாடு இத் தரணியிலேயே இல்லை. இத்தகைய புகழ்மிக்க தமிழின் இலக்கியச் செல்வங்கள் சில பூசையறையிலே முடங்கிப் புனிதம் பெறுவதோடு நின்றுவிட்டன. பல, புலவர்களின் மேசை அலங்கரிப்புக்கும், மேடைப் பேச்சு மேற்கோளுக்கும் உதவுவதோடு நின்றுவிட்டன. காலம் மாறியது. நாலடியும், குறளும், நல்ல தமிழ் மேகலையும் இல்லாத வீடு இல்லை எனும்படிக்கு அவை இன்று எங்கும் பரவியுள்ளன. இந்த வரிசையில் வரும் சீவகசிந்தாமணித் தெளிவுரை, இதுவரை எவரும் எண்ணிப் பார்க்காத முயற்சி; புத்தக உலகிலோர் புதிய சாதனை; இலக்கிய உலகுக்கோர் இன்கனிவிருந்து. இன்பத் தமிழின் மேன்மைக்கு நாங்கள் தலை வணங்கித் தருகின்ற காணிக்கை.

மலரைக் கசக்காமல் மணமிக்க அத்தர் எடுப்பதைப் போல, பாடலின் உருவைச் சிதைக்காமல் பாட்டின்

தெளிவுரை தரப்பட்டிருக்கின்றது. தேவையான இடங் களுக்குப் பதவுரையும் வழங்கப்பட்டிருக்கின்றது. கொண்டு கூட்டுவது, பாடலைத் துண்டு போடுவது, பொழிப் புரையாகக் கதைக் கருத்தைத் தருவது ஆகியவற்றால் காவியத்தின் கதைக் கருத்தைப் படிக்கச் சுவையுடைய தாக்கி விடலாம். ஆனால், கவிதையின் கற்பனை யழகை, கருத்தாழத்தை நேருக்கு நேர் வரிக்கு வரி புரிந்து கொள்ள—அந்த முறை முழுதும் பயன் தராது என்ற காரணத்தால் பாடல் இருக்கின்ற அமைப்பிலேயே பொருள் விளக்கப்பட்டிருக்கின்றது. இலக்கிய உலகம் இதை விரும்பி ஏற்றுக் கொள்ளும் என்று நம்புகிறோம்.

தமிழ் வளரத் தமிழ் இலக்கியம் வளப்பமுறத் தரமான நூல்களை வெளியிடுவதையே வாழ்வின் நோக்காய்க் கொண்டுள்ள பேராசிரியப் பெருந்தகை மெய்யப்பரின் நல்லாசியுடனும் பாராட்டுடனும் மணி வாசகர் பதிப்பக வெளியீடாக இந்நூல் வெளிவருவது யான் பெற்ற பேறு. மூலத்தோடு ஒப்பு நோக்கித் தேவைப்படும் திருத்தங்கள் செய்துதவிய மேலைச் சிவபுரித் தமிழ்க் கல்லூரி முன்னாள் பேராசிரியர் புலவர் சி. செல்வத்தாண்டவன் அவர்களுக்கும் இந்நூல் சிறப்பாக வெளிவர உறுதுணையாயிருந்த திரு. முல்லை முத்தையா, மணிவாசகர் நூலக மேலாளர் திரு. குருமூர்த்தி, கற்பகம் அச்சகம் திரு. க. நாராயணன் ஆகியோருக்கும் என் இதயம் நிறைந்த நன்றி.

துறை புதிது. பணி பெரிது. முயன்று முடித்திருக் கிறேன் மூலத்தின் சுவை கெடாமல்—கவி ஆழத்தின் அழகு குறையாமல். என்னுடைய—முன்னுரை இது. பின்னுரை தமிழ் கூறும் நல்லுலகின் வாழ்த்துரையாகி என்னை வழி நடத்த வேண்டுகிறேன்.

**வணக்கம்—வாழ்க தமிழ்.**

**சென்னை-28.** **ஞா. மாணிக்கவாசகன்.**

## நூலாசிரியர் வரலாறு

சீவகசிந்தாமணி என்னும் செந்தமிழ்க் காப்பியம் திருத்தக்க தேவர் என்னும் சமண முனிவரால் இயற்றப் பெற்றதாகும். திருத்தகு முனிவர், திருத்தகு மகாமுனிவர், திருத்தக்க மகாமுனிவர்கள் என்னும் சிறப்புப் பெயர் களாலும் குறிக்கப் பெறும் திருத்தக்க தேவர் வாழ்ந்த காலமும் இடமும் நிச்சயமாகத் தெரியவில்லை என்றா லும், இவர் சோழர் குலத்திலே தோன்றியவர் என்றும், இவருடைய காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கும், ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டதாக இருக்கலாம் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். இன்னும் சில அறிஞர் பெருமக்கள், இவர் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருக்கக்கூடும் என்றும் ஐயுறு கின்றனர்.

வாழ்ந்த காலமும் இடமும் ஏதாயினும், வளர்த்த சமயமும் கொள்கையும் எதுவாயினும், சீவகசிந்தாமணி எனும் செந்தமிழ்க் காப்பியம் பாடிய திருத்தக்கதேவரின் புகழ் காலம் கடந்து நிற்கிறது; ஞாலம் அளந்து நிற்கிறது.

திருத்தக்கதேவர் இளமையிலேயே துறவு பூண்டவர். ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கொண்டொழுகி, உள்ளத் தால் பொய்யாது வாழும் புண்ணியம் மேற்கொண்டவர். உன்பற்றொழிய ஒரு பற்றும் இல்லை என் தமிழே என்று வாழ்ந்த திருத்தக்கதேவர் வடமொழிப் புலமையிலும் வல்லாளர். அகத்தியம் தொல்காப்பியம் முதலாய் உள்ள சங்க நூல்களின் ஆழம் உணர்ந்தவர்—அகலம் அறிந்தவர்.

காதலும் கற்பனையும் கலந்துறவாட இன்பச்சுவை சொட்டச் சொட்டப் பாடிய சிந்தாமணிக் காவியம் சமண முனிவர் ஒருவர் இயற்றியது என்பதை எண்ணுந் தோறும் எண்ணுந்தோறும், அதன் ஆசிரியர் திருத்தக்க தேவரின் அறிவாற்றலை, பெரும் புலமையை எண்ணி மெய்சிலிர்க்கிறோம்.

தேவர் சிந்தாமணிக் காப்பியம் பாடக் கருதி தன் ஆசிரியரை அணுகி தன் ஆவலினைத் தெரிவித்தாராக, அவரும் இவர் புலமையை—கவித்திறனை அளந்தறியக் கருதி, அப்போது அவர்கள் அருகாக ஓடிய நரி ஒன்றினைக் காட்டி இந் நரியைப்பற்றி ஒரு நூல் இயற்றுக எனப் பணிக்க; தேவரும் அவ்வாறே, அப்போதே ஆசிரியர் போற்றிப் புகழும் வண்ணம் நரிவிருத்தம் என்னும் சிறு நூலை இயற்றிக் காட்டினாராக, தேவரின் கற்பனைத் திறன் கண்டு வியந்த ஆசிரியரும், அருகன் அருளால் சீவகன் அருளால் சீவகன் கதையைச் சிறந்த காவியமாகப் பாடுதி என்று பணித்து, ''செம்பொன் வரை மேல் பசும் பொன்''—என்று தொடங்கும் பாடலைக் கடவுள் வாழ்த் தாகப் பாடிக் காட்டினார் என்றும், அதன் அடி தொட்டுத் தேவர் பாடிய ''மூவா முதலா உலகம் ஒரு மூன்றும்''— என்ற பாடலே பொருள் மிக்கதாக இருத்தல் கண்ட ஆசிரியர் அதனையே முதல் பாட்டாகக் கொள்ளப் பணித்தார் என்றும்; தேவரும் அவ்வாறே ஆசிரியரின் ஆணைப்படி இச்சீவகன் கதையைப் பாடினார் என்றும் ஒரு வரலாறு உண்டு.

கதைகள் வரலாறாகக் கூடும். ஆனால் வரலாறுகள் கதைகளாகிவிட்டால், பிறகு உண்மை நிகழ்ச்சிகள் பல உருத்தெரியாமல் போய்விடும். தமிழிலக்கியத்தின் தொன்மையும் தூய்மையும் மிக்க வரலாறுகள் தொடர் பற்றுப் போனதற்குக் காரணமே முறையாக வரைந்த வரலாறு இல்லாமல் போனதுதான். வரலாறு இல்லை,

வாழ்ந்த இடமும் காலமும் இன்னமும் சரியாகத் தெரிய வில்லை; என்றாலும் பன்னூற்றாண்டு காலமாகத் தொடர்ந்து வரும் வரலாற்றுப் புகழுக்கு உரியவராகத் திருத்தக்க தேவர் தானியற்றிய சிந்தாமணிக் கவிதை ஒவ்வொன்றிலும் வாழ்ந்து கொண்டிருக்கிறார். சீவக சிந்தாமணியில் உள்ள செந்தமிழ்ப் பாமணிகள் ஒவ்வொன் றும் திருத்தக்கதேவரின் புகழ் பரப்பும் பொன்விளக்காக, தாய்த் தமிழின் சுவைவிளக்கும் மணிவிளக்காக ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன. அவர் உள்ளத்தை, உயர் கவித் திறத்தை, புலமைப் பெருக்கை உலகறியச் செய்து கொண் டிருக்கின்றன. இது திருத்தக்கதேவர் பெற்ற பெருமை மட்டுமல்ல—தமிழ்த்தாய் பெற்ற சிறப்புமாகும்.

## நூல் வரலாறு

ஐம்பெரும் காப்பியங்கள் என்றழைக்கப்பெறும் சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்ற ஐந்தினுள் விருத்த யாப்பால் இயன்ற முதல் காவியம் என்ற பெருமைக்குரியது சிந்தாமணி என்னும் இச் சீவகன் கதை. கம்பனின் கற்பனைத் திறனுக்கு அடித்தளமாக அமைந்து உதவியது இச் சிந்தாமணிக் காவியமே என்று இதன் மேன்மைக்குப் புகழாரம் சூட்டியிருக்கின்றனர் மேதைகள். தேவியர் எண்மரைக் காவியத் தலைவன் சீவகன் தான் மணந்த தோடு, கோவிந்தையைத் தன் தோழன் பதுமுகனுக்கு மணம் செய்துவைத்த சிறப்பாலும், காப்பியம் முழுதும் காதலறமும் வாழ்க்கை நலமும் பொழியப் பொழியப் பாடிய பாடல்கள் நிறைந்து மிகுந்து இருப்பதாலும் இக் காப்பியம் மண நூல் என்ற மங்கலப் பெயராலும் குறிக்கப் பெறும். வேண்டியதை அளிக்கும் வானுலகச் சிந்தாமணி போலக் கற்றோர் இதயம் களிக்கக் கவியின்பம் பொழி வதால், இந்நூலுக்குச் சிந்தாமணி என்னும் பெயர் மிக்க சிறப்புடையதாய் அமைந்ததென்பர் புலவர் பெருமக்கள்.

ஆட்சிப் பெரும் பொறுப்பை அணிசெய்ய வேண்டிய மாமன்னன் அந்தப்புரக் காட்சிக் களிமயக்கில் கட்டுண்டு கிடக்க நேரிட்டால் ஆட்சி ஏதாகும், அம்மன்னன் கதை எப்படி முடியும் என்பதை விளக்கும் அறநூல் இச் சீவக சரிதம். அதுமட்டுமின்றி, ஊழின் வலியையும், அமைச்சன் கட்டியங்காரன், ஆசை அலைக்கழிக்க அரசனையே கொன்று ஆட்சி உரிமையைப் பற்றிக் கொண்ட சூழ்ச்சியையும், வீரம் விளைக்கும் வில்லிலும் வேலிலும் மட்டுமல்ல, ஈரம் நனைக்கும் அன்பிலும் காதல் பண்பிலும் உயர்ந்து விளங்கும் சீவகன் ஆண்மை அழகையும், வள்ளல் கந்துக்கடன் பெருமையையும், நட்புக்கு இலக்கணமாய்த் திகழும் நந்தட்டன் உயர்

பண்பையும், இளமையிலேயே துறவு பூண்ட விசையையின் தூய தவவாழ்வையும் சித்திரிக்கும் சிந்தாமணிக் காவியம், காதல் அறம் விளக்கும் மாகாவியம். கற்புநெறி கூறும் அறநூல். அன்புடைமை, அருளுடைமை, அவாவறுத்தல் ஆகிய உயர் பண்புகளுக்கு இலக்கணம் வகுக்கும் ஒரே தமிழ்ப் பெருங்காப்பியம்.

எல்லா வளங்களும் மிக்க ஏமாங்கத நாட்டின் தலைநகராம் இராசமாபுரத்தில் இருந்து தனியாட்சி செலுத்தியவன் சச்சந்த மாமன்னன். அவன் அன்பு மனைவி விசயை. தன் மனைவியின் பேரழகில் மயங்கி ஆட்சிப் பொறுப்பை அமைச்சன் கட்டியங்காரனிடம் தந்துவிட்டு அந்தப்புரமே கதியென்று கிடந்தான். கொடியோன் கட்டியங்காரன் மன்னனைக் கொன்று தானே மன்னனாகிவிடத் துணிந்தான். தான் கண்ட தீக்கனா பலித்ததென விசயை துடித்தாள். நிமித்திகன் கூறிய விபத்துக்கள் நெருங்கி வருவதைச் சச்சந்தனும் உணர்ந்தான். நிறைசூலுடைய தன் மனைவியை மயிற் பொறி ஒன்றில் வைத்து வான்வழி அனுப்பி வைத்தான். கட்டியங்காரனுடன் போரிட்டு மாண்டான். விசயையை ஏற்றிச் சென்ற மயிற்பொறி நகரை அடுத்த இடுகாட்டில் இறங்கியது. அங்கேயே அவள் ஓர் ஆண்மகவைப் பெற்றாள். இடுகாட்டில் உறையும் தெய்வம் ஒன்று அவள் தோழி சண்பகமாலை வடிவங் கொண்டு அவளுக்கு உதவியது. இறந்த தன் குழந்தையைப் புதைக்க அங்கே வந்த கந்துக்கடன் என்னும் வணிகன் இடுகாட்டில் கிடந்த விசயையின் குழந்தையை எடுத்துச் சென்று வளர்க்கலானான். அப்படி அவன் எடுத்துச் செல்லும் போது அக் குழந்தை தும்ம, அப்போது 'சீவ' என்னும் ஒலி கேட்க, அக் குழந்தைக்கு சீவகன் என்றே பெயர் சூட்டி வளர்க்கலானான்.

கந்துக்கடன் மகனாக வளரும் சீவகன் அச்சணந்தி முனிவரிடம் கல்வி கற்றான். அவரிடம் தன் பிறப்பு

வரலாறு உணர்ந்தான். அவர் கூறிய அறிவுரைக்கேற்ப தன் தந்தையைக் கொன்றவனைப் பழிவாங்கத் தக்க சமயத்தை எண்ணிக் காத்திருந்தான். வேட்டுவர் கவர்ந்து சென்ற நந்தகோன் ஆனிரையை மீட்டுத் தந்தான். அவன் தனக்குத் தரவந்த கோவிந்தையை தன் தோழன் பதுமுகனுக்கு மணம் செய்வித்தான்.

பின்னர் சீவகன் யாழிலே வல்ல **காந்தருவதத்தை** என்னும் வித்தியாதர நங்கையை இசைப் போட்டியிலே வென்று மணம் புரிந்து கொண்டான். அசனிவேகம் என்னும் பட்டத்து யானையிடம் சிக்கிய **குணமாலையைக்** காப்பாற்றினான். அவன் கட்டழகில் மையல் கொண்ட அவளைத் திருமணம் செய்து கொண்டான். அடுத்து பல்லவ மன்னன் தளபதியின் மகள் **பதுமையை** அவளுக் குற்ற விடநோய் தீர்த்து வாழ்க்கைத் துணையாக்கிக் கொண்டான். பின்னர் தக்கநாட்டு வணிகன் சுபத்திரன் மகள் **கேமசரியையும்**, மத்திம நாட்டு மன்னன் மகள் **கனகமாலையையும்** மணந்தான். தண்டகாரணியத்தில் தவமிருக்கும் தன் தாயைக் கண்டு பணிந்து அறிவுரைகள் பெற்றான். அடுத்து இராசமாபுரத்து வணிகன் மகள் **விமலையையும்**, அவ்வூரிலேயே வாழ்ந்த ஆடவர் முகத்தைக் கண்ணெடுத்தும் பாரேன் என்று கன்னிமாடம் புகுந்திருந்த **சுரமஞ்சரியையும்**, மாமன் கோவிந்தராசன் மகள் **இலக்கணையையும்** தன் அன்பு மனைவிகளாக்கிக் கொண்டபின், கட்டியங்காரனைக் கொன்று ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றி உலகம் வியக்க ஆண்டு, இறுதியில் வாழ்க்கை நிலையாமையை எண்ணி ஆட்சியைத் தன் மகன் சச்சந்தனுக்கு அளித்துவிட்டுத் தன் தேவிய ரோடு துறவறம் மேற்கொண்டான் என்னும் கதைக் கருத்தைத்தான் திருத்தக்க தேவர் தெள்ளு தமிழ்க் காவியமாக்கியிருக்கிறார்.

காவிய இலக்கணம் முற்றும் கொண்டது என்பதால் மட்டுமல்ல, வாழ்க்கை இலக்கணம் அத்தனையும் வரை

யறுத்துச் சொல்லும் நூல் இது என்பதாலேயே இதன் பெருமை மாமேருவைப்போல் உயர்ந்து நிற்கிறது. திருத்தக்கதேவர் தமிழ்க் கவிஞர்களுக்குள்ளே தலைசிறந்தவர் என்று வீரமாமுனிவரும், சீவக சிந்தாமணி செந்தமிழ்க் காப்பியங்களில் சிறந்தது மட்டுமல்ல, உலக மகா காவியங்களில் ஒன்றாகும் என்று டாக்டர் ஜி. யூ. போப்பும், சிந்தாமணி தனக்கெனத் தனி நடையுடைய உயர்ந்த இலக்கிய நூல் என்று சூலியேன் வேன்சோன் என்ற பிரெஞ்சு மொழிப் பேராசிரியரும் சீவகசிந்தாமணியின் சிறப்பைப் போற்றிப் புகழ்ந்திருக்கின்றனர்.

இத்தகைய சிறப்புமிக்க தமிழ்ச் செல்வம் கால வெள்ளத்தில் காணாமல் போகாமல் காத்தருளிய பெருமைக்குரியவர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள். ஐயரவர்கள் சிந்தாமணிக் காவியத்தை நச்சினார்க்கினியர் உரையுடன் பதித்து, பல பதிப்புக்கள் வெளியிட்டுள்ளார்கள். இதனையன்றி திருவாளர்கள் சோடசாவதானம் சுப்பராய செட்டியார், ப. அரங்கசாமிப் பிள்ளை ஆகியோர் சில இலம்பகங்களை மட்டும் வெளியிட்டனர். ரெவரெண்ட் எச். பவர் என்ற ஆங்கிலேயர் நாமகள் இலம்பகத்தை மட்டும் பதிப்பித்து வெளியிட்டுள்ளதாகவும் அறியப்படுகிறது. இவற்றையன்றிப் பல பதிப்புகளும், பல உரைகளும் வந்திருக்கக் கூடும். இனியும் வரலாம். மூவாயிரத்து நூற்றுக்கும் மேம்பட்ட, திருத்தக்கதேவர் அருளிய சீவகசிந்தாமணியின் தேமாங்கனிக் கவிதைகள் ஒவ்வொன்றுமே ஓர் உரைக்காவியம் எழுதும் அளவுக்குக் கவியழகும், கற்பனை நயமும், கருத்தாழமும், பொருட்செறிவும், அணி இலக்கணமும் பொருந்தியவை என்னும் சிறப்பொன்றே போதும், நூலின் பெருமையைக் காலமெல்லாம் கூறி நிற்கும்.

# சீவகன் வரலாற்றுச் சுருக்கம்

## (மூன்றாம் பகுதியில் உள்ளவை)

## 8. விமலையார் இலம்பகம்

தனையீன்ற தாய் விசயையைக் காணப் பேரவாக் கொண்டு வந்த சீவகன் தன் வரவை எதிர்நோக்கி இருந்த தாயின் காலில் வீழ்ந்து வணங்கினான். விசயையும் தன் அன்பு மகனைக் கண்டு ஆனந்தம் கொண்டாள்.

கட்டியங்காரனைக் கொல்ல கோவிந்தனைத் துணைக் கொள்ளப் பணித்த தாயின் சொற்கேற்ப, விசயையை தன் மாமன் கோவிந்தனிடம் அனுப்பி வைத்து விட்டு, சீவகன் தன் தோழர்களுடன் புறப்பட்டு, இராசமாபுரத்தை அடைந்து, அங்கு நகர்ப்புறத்தே உள்ள ஒரு சோலையில் தன் தோழர்களை இருக்கச் செய்து விட்டுத் தான் மட்டும் வேற்றுருவில் நகருக்குள் சென்றான்.

சென்றவனை, அந்நகரத்து வணிகன் சாகரதத்தன் மகள் விமலை என்பவள் கண்டு அவன் பேரழகிலே மனதைப் பறிகொடுக்க, சீவகனும் அவளை மறக்க முடியாதவனாய், அவள் தந்தையின் கடையருகே வந்து நின்றான்.

சீவகன் கடையருகே வந்தவுடன், விலையாகாது கடையிலே நெடுநாள் இருந்த சரக்கெல்லாம் விற்று முதலாயிற்று. அதுகண்ட சாகரதத்தன் சீவகனை அன்போடு வரவேற்று ''முன்பு ஒரு சோதிடன் 'என் மகளுக்குரிய கணவன் என் கடைக்கு வலிய வருவான்; அப்படி அவன் வந்ததும் உன் கடையில் விற்காது கிடந்த பழஞ்சரக்கெல்லாம் விற்று முதலாகும்' என்று கூறியிருந் தான். இன்று நீ என் கடையருகே வந்து நின்றதும் என் இருப்பெல்லாம் விற்றுத் தீர்ந்தன. எனவே நீதான் அச்

சோதிடன் கூறிய, என் மகள் விமலைக்கேற்ற கணவனா யிருக்கக் கூடும்'' என்று கூறி, அவனைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்று விமலையை மணம் செய்து கொடுத்தான். சீவகனும் விமலையோடு கூடி இருநாள் இன்புற்றிருந்து பின் தன் தோழர்களை அடைந்தான்.

## 9. சுரமஞ்சரியார் இலம்பகம்

சீவகனைத் திருமணக் கோலத்தோடு கண்ட அவன் தோழர்கள் அவன் மணந்த மங்கையின் பெயரென்ன என்று கேட்க, சீவகன் அவள் பெயர் விமலை என்றான். அது கேட்ட அவர்கள் சீவகனைக் காமனே என்று போற்ற, புத்திசேனன் என்பவன், ''இவ்வூரிலே வாழும் சுரமஞ்சரி என்னும் பெண்ணொருத்தி ஆடவரின் பெயரைக் கேட்டால் கூட வெறுப்படைவாள். காமனே எதிர் வந்தாலும் கண்கொண்டு பார்க்க எண்ணமாட்டாள். அப்படிப்பட்டவளை மயக்கி சீவகன் மணம் புரிவானாயின் இவனை நான் வெறும் காமன் என்றல்ல, காமதிலகன் என்றே அழைப்பேன்'' என்று கூற; சீவகனும் ''புத்திசேனா! நான் அச்சுரமஞ்சரியை மயக்க நாளையே அவள் காமகோட்டம் வரச் செய்கிறேன். நீ அங்கே காமன் படிவத்தின் பின்னே மறைந்திரு'' என்று கூறினான்.

பிறகு சீவகன் முதுபார்ப்பன வடிவம் கொண்டு, கூனிக் குருகி, தண்டூன்றி நடக்கும் கிழவடிவில், சுரமஞ்சரியின் மாளிகையை அடைந்து, வாயில் காத்து நின்ற மகளிர் இரக்கங் கொள்ளும்படிப் பேசி சுரமஞ்சரியைக் கண்டு அவளோடு உரையாடி, அவளிட்ட உணவை உட்கொண்டு உறங்கப் போனவன், எழுந்து அமுதம் பொழிவதைப்போல் பாட, அப்பாடலைக் கேட்ட சுரமஞ்சரி, தோழியரை அழைத்து 'இப்பாடல் சீவகனின் இன்னிசை போல் உள்ளது. எனவே நாளையே நான் காமகோட்டம் சென்று வழிபாடு செய்து அவனை அடைய வழி செய்வீர்' என்றாள்.

அடுத்த நாள் காமகோட்டம் சென்று வழிபட்ட சுரமஞ்சரியிடம் அங்கு ஒளிந்திருந்த புத்திசேனன் 'நீ சீவகனை அடைந்தாய்' என்று கூற, சுரமஞ்சரி தான் அறையில் பூட்டி வைத்த அந்தணன் சீவகனே என்றறிந்து

மகிழ, அவனும் 'நாளை உனை வந்து மணப்பேன்' என்று கூறித் தன் தோழர்களை அடைந்தான்.

தோழர்கள் அவனைக் காமதிலகன் என்று போற்றினர். சுரமஞ்சரியின் தந்தை குபேரமித்திரன் சீவகனுக்கு அவளை மணம் புரிவித்தான். அடுத்து சீவகன் பெற்றோர்களையும், மற்ற காந்தருவதத்தை—குணமாலை ஆகியோரையும் கண்டு மகிழ்ந்தான்.

## 10. மண்மகள் இலம்பகம்

ஏமாங்கத நாட்டை விட்டுப் புறப்பட்ட சீவகன் விதைய நாட்டை அடைந்து தன் மாமன் கோவிந்தனைக் கண்டான். கோவிந்தனோடு நட்புறவு கொள்ளக் கருதி கட்டியங்காரன் அனுப்பிய ஓலையைக் கண்ட கோவிந்தன் அவனோடு போர் புரியக் கருதி, சீவகனுடனும் மற்றுமுள்ள படைகளுடனும் இராசமாபுரம் வந்தடைந்தான். வஞ்சனையால் தன்னை வென்றுவிடக் கருதிய கட்டியங்காரனை வஞ்சனையாலேயே வீழ்த்தக் கருதிய கோவிந்தன் தன் மகள் இலக்கணையின் சுயம்வரத்துக்கு ஏற்பாடு செய்தான்.

திரிபன்றிப் பொறியொன்று செய்துவைத்து அதனை அம்பெய்து வீழ்த்துபவனே இலக்கணையின் மணவாளனாவான் என்றும் அறிவித்தான். பலர் முயன்று தோற்க, அப்பன்றிப் பொறியை சீவகன் தன் அம்பால் வீழ்த்தினான். சீவகனைக் கண்ட கட்டியங்காரன் கொதித்தெழுந்தான். சீவகன் வரலாற்றை கோவிந்தன் அவையோர்க்கு அறிவித்தான். வானிலே அப்போது ஒரு தேவன் தோன்றி கட்டியங்காரன் என்னும் யானையைக் கொன்றழிக்கும் சிங்கம் சீவகன் என்று கூறிச் சென்றான். அதுகேட்ட கட்டியங்காரன் மேலும் கொதிப்படைந்து, சீவகனோடு போரிடக் கிளம்பினான். இருவருக்கும் நடைபெற்ற பெரும் போரிலே கட்டியங்காரன் தோற்றான்—அவன் படைகளும் அழிந்தன. இது கேட்டு விசயை மனமகிழ்வு பெற்றாள்.

## 11. பூமகள் இலம்பம்

பகைவென்று வாகை சூடிய சீவகன் முருகவேளைப் போல அரண்மனை அடைந்தான். கட்டியங்காரன் மனைவியருள் ஒருத்தி கணவன் இறந்தது கேட்டு மன முடைந்து மாண்டாள். மற்றவர்க்கெல்லாம் சீவகன் பொன்னும் பொருளும் உதவி, அவர்கள் விரும்பிய வாழ்வை மேற்கொள்ளவிட்டான்.

அடுத்தநாள் சீவகன் மங்கல நீராடி, பிண்டிப் பெருமான் திருவடி பணிந்து நண்பர்களும் உறவினர்களும் புடைசூழ மணித் தவிசில் வீற்றிருந்தான். வானின்று சுதஞ்சணன் வந்து, சீவகனுக்கு மணிமுடி சூட்டினான். மணிமுடியேற்ற சீவகன் எல்லார்க்கும் எல்லாமாக வாரி வழங்கினான். அரசிறை தவிர்த்தான். அறவோர்க்கும், ஆண்டவன் கோவிலுக்கும் இறையிலியாக நிலங்களை வழங்கினான்.

## 12. இலக்கணையார் இலம்பகம்

சீவகன் பிறகு காந்தருவதத்தை முதலிய தன் தேவியரை அழைத்து வரப் பணித்தான். அவர்களைக் கண்டு சீவகன் மகிழ்ந்தான். கோவிந்த மன்னன் தன் மகள் இலக்கணைக்கு திருமணம் செய்ய நாள் குறித்து நகரை அழகுபடுத்தினான்.

சீவகன் மங்கல நீராடி, அணி மணி புனைந்து, தீ வலம் வந்து, இலக்கணையை மணந்தான். மகிழ்வோடு வாழ்ந்தான். தன்னை அன்புடன் வளர்த்த கந்துக்கட னுக்கு அரசுரிமையும், சுநந்தைக்குப் பெருந்தேவிப் பட்டமும் வழங்கினான். நந்தட்டனுக்கு இளவுடையான் என்னும் இளவரசுப் பட்டத்தைச் சூட்டி மகிழ்ந்தான். நபுல விபுலர்க்கு குறுநில மன்னர்கள் மகளை மணம் செய்துகொடுத்தான். கட்டியங்காரனுடைய செல்வத்தை மாமன் கோவிந்தனுக்கு வழங்கினான். சுதஞ்சணனுக்கு கோவில் கட்டி அவன் வரலாற்றை நாடகமாக்கி நடிக்கச் செய்தான். பிள்ளைப் பருவத்தில் தான் விளையாடி

மகிழ நிழல் கொடுத்த ஆலமரத்துக்குப் பீடமமைத்து ஐந்தூர்களை இறையிலியாக விட்டு எல்லாரும் மகிழ நல்லறம் புரிந்தான்.

## 13. முத்தி இலம்பகம்

விசயை தன்னுடனிருந்த தவமகளிர்க்கெல்லாம், தன் தவப் பயனைத் தந்தாள். சண்பகமாலை என்னும் தோழியுருவில் தனக்கு உதவிய தெய்வத்திற்கு கோயில் கட்டி வழிபட்டாள். சீவகன் பிறந்த இடத்தை அறக் கோட்டமாக்கினாள். துறவை மேற்கொள்ள முனைந் தாள். அதுகேட்டு சீவகனும் அவன் தேவிமாரும் மனம் பதைத்தனர். விசயை சுநந்தையும் மற்றும் பலரும் உடன் வர பம்மை கோயிலை அடைந்து பம்மையடிகளார் அருளிய துறவை மேற்கொண்டனர்.

சீவகன் ஒருநாள் பொழிலிலே கண்ட காட்சியைக் கண்டு வாழ்க்கை நிலையாமையை உணர்ந்தான். சாரணர் பலரை அடைந்து அறநெறி கூறியருளக் கேட்டுக் கொண்டான். சாரணர்பால் தன் பழம் பிறப்பையும் அப்பிறவியில் செய்த வினைப்பயன் அடுத்து வந்த பிறவி யிலும் தொடர்ந்து வந்ததைத் தெரிந்துகொண்டான். தானும் துறவை மேற்கொள்ளத் துணிந்தான். அது கேட்டு அனைவரும் வருந்தினர். சமவ சரணத்தை அடைந்து சீவகன் துறவு பூண்டு அருகன் அடிபணிந்து வாழ்ந்தான். முத்தி நெறி உணர்ந்தான். நித்தியத்தின் சத்தாகி நிலையான பேரின்ப வாழ்வு பெற்றான். அவன் தேவியரும், நண்பரும் தவமியற்றித் தேவநிலை பெற்றனர்.

---

# பொருளடக்கம்

# 8. விமலையார் இலம்பகம்

முருகுகொப் புளிக்குங் கண்ணி முறிமிடை படலை மாலைக்
குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா விவர்ந்து
செல்ல
உருவவெஞ் சிலையி னாற்குத் தம்பியிஃ துரைக்கு
மொண்பொற்
பருகுபைங் கழலி னாருட் பதுமுகன் கேட்க வென்றே 1889

[முருகு-வாசனை; முறி-தளிர்; கூந்தல் பிடரி.]

விழுமணி மாசு மூழ்கிக் கிடந்ததிவ் வுலகம் விற்பக்
கழுவினீர் பொதிந்து சிக்கக் கதிரொளி மறையக் காப்பின்
தழுவினீ ருலக மெல்லாந் தாமரை யுறையுஞ் செய்யாள்
வழுவினார் தம்மைப் புல்லாள் வாழ்கநுங் கண்ணி மாதோ

[சிக்க-அகப்பட; செய்யாள்-திருமகள்.]

தொழுததங் கையி னுள்ளுந் துறுமுடி யகத்துஞ் சோர
அழுதகண் ணீரி னுள்ளு மணிகலத் தகத்து மாய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுட னொடுங்கும்
பற்றா
தொழிகயார் கண்ணுந் தேற்றந் தெளிகுற்றார் விளிகுற்
றாரே 1891

[சோர - ஒழுகும்படி; ஒடுங்கும் - மறைந்திருக்கும்;
விளிதல்-இறத்தல்.]

தேன் சிந்தும் மலர் நிறைந்த முடிக்கண்ணியையும் தளிர் நிறையத் தொடுத்த வகை மாலையையும், பகை

வரைக் கொன்று சிதைத்த இரத்தம் வழிந்தொழுகும் வேலினையும் உடைய சீவகன் பிடரிமயிரையுடைய குதிரை மீதேறிச் செல்ல, அழகிய கொல்லும் வில்லேந்திய சீவ கனின் தம்பியாகிய நந்தட்டன், அழகிய பொன்னாலான வீரக்கழல் அணிந்த தன் தோழர்களில் பதுமுகனை நோக்கி இதனைக் கேட்பாயாக என்று சொல்லத் தொடங்கி னான். 'சிறந்த, விலை மதிப்பரிய மா மணி தூசு படிந்து கிடந்தது. அதற்கு இவ்வுலகமே விலையாகும்படி, அதன் தூசினைத் துடைத்து நல்லொளி வெளிப்படச் செய்தீர். அரிதின் அகப்பட்ட அம் மாமணியை இனி மேலும் போற்றிப் பாதுகாப்பீராக. இப்படிப் பாதுகாத் தால் உலகமெல்லாம் வென்று கைவரப் பெற்ற புகழ் உடையவர் ஆவீர். தாமரைத் திருமலரில் வாழு கின்ற திருமகள், செல்வத்தைக் காப்பாற்றாது தவற விடுபவர்களைச் சேர்ந்திருக்க மாட்டாள். எனவே நீங்கள் மதிப்பரிய மாமணியாகிய சீவகனைப் போற்றிப் பாதுகாப்பீராக! உங்கள் புகழ்மாலை வாழ்வதாக. தொழுது வணங்கக் குவித்த இரண்டு கைகளுக்குள்ளும், மயிர் நெருங்கிய தலை முடியிலும், அழுது வடிக்கின்ற கண்ணீரிலும், புனைந்திருக்கிற அணிகலங்களுக்குள்ளும் படைக்கலம் மறைந்திருக்கக்கூடும். எனவே இதனை ஆராய்ந்து, அத்தகைய கூடா நட்பை விட்டொழித்து, யாரையும் ஆராய்ந்தறியாமல் தேர்ந்து தெளிவதைக் கைவிடுவீராக; அப்படிக் கைவிடாமல் அத்தகைய கூடா நட்பைக் கைக்கொண்டவர் இறப்பைத் தேடிக் கொண் டவரே ஆவர்.'

**தோய்தகை மகளிர்த் தோயின் மெய்யணி நீக்கித் தூய்நீர்**
**ஆய்முது மகளிர் தம்மா லரிறபத் திமிரி யாட்டி**
**வேய்நிறத் தோளி னார்க்கு வெண்துகில் மாலை சாந்தம்**
**தானல கலங்கள் சேர்த்தித் தடமுலை தோய்க வென்றான்**

[தோய்தல்-சேர்தல்; தகை-தகுதி; அரில்தப-குற்றம் நீங்க; திமிரி-பூசி.]

வண்ணப்பூ மாலை சாந்தம் வாலணி கலன்க ளாடை
கண்முகத் துறுத்தித் தூய்மை கண்டலாற் கொள்ள
வேண்டா
அண்ணலம் புள்ளோ டெல்லா ஆயிரம் பேடைச் சேவல்
உண்ணுநீ ரமிழ்தங் காக்க யூகமோ டாய்க வென்றான்

[அமிழ்தம்-உணவு; யூகம்-கருங்குரங்கு.]

அஞ்சனக் கோலி னாற்றா நாகமோ ரருவிக் குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி யெயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லி தேனும் பகைசிறி தென்ன வேண்டா
அஞ்சித்தற் காத்தல் வேண்டு மரும்பொரு ளாக
வென்றான் 1894

[பஞ்சியின்-பஞ்சைக்காட்டிலும்.]

கூடிக் களித்தற்குரிய மகளிரைக் கூட நேரும்போது, அம்மகளிர் அணிந்த பூண்களை நீக்கி, நம்பத் தகுந்த முதுமை மகளிரைக் கொண்டு குற்றமற வாசச் சாந்து பூசி நன்னீராட்டி, மூங்கிலைப் போலும் அழகிய தோளுடைய அம்மகளிர்க்கு வேறு வெண்துகிலும், நறுமண மாலையும், வாசச்சாந்தும், நல்ல அணிகலங்களும் அணிவித்துப் பின்னரே பெருமார்புடைய அப்பெண்டிரை அரசன் தழுவுவானாக. அழகிய வாச மலர்மாலை, சந்தனம், நல்ல அணிகலன்கள், ஆடை முதலியவற்றை அரச அன்னப் பறவையே அல்லாமல், ஆயிரம் பெடையுடன் நிற்கும் சக்கரவாகப் புள்ளும் ஆகியவற்றின் கண்ணிலும் முகத்திலும் முறையே பொருத்திப் பார்த்து அவற்றின் தூய்மை கண்ட பிறகே அணிந்துகொள்க! இன்றேல் கொள்ளற்க! உண்ணும் உணவையும் நன்னீரையுங்கூட கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்ந்து பின்னரே ஏற்றுக் கொள்க!' என்றான். (நஞ்சு தோய்ந்த அணிமணிகள், உடை, சந்தனம் இவை அரச அன்னத்தின் கண்ணில் பட்டால் அவற்றின் கண்கள் இரத்தச் சிவப்பாகும். அவற்றைச் சக்கரவாகப் புள்ளின் முகத்

தருகே காட்டினால் அது கோபத்தால் முகந்திரும்பும். இதனைக் கொண்டு அவற்றின் நச்சுத் தன்மையும் நல்ல தன்மையும் அறியலாம். அவ்வாறே தீய உணவையும் நீரையும் கருங்குரங்கிற்கு இட்டால் அது உண்ணாது.) 'கண்ணுக்கு மைதீட்ட உதவும் சிறு கோலால் அடிப்பதற்குக்கூட பற்றாத நாகப்பாம்பு, அருவி குன்றிலிருந்து பெருக்கெடுத்து வீழுவதைப் போல, பெரிய யானை அலறி விழும்படி அதனைத் தன் கூரிய நச்சுப் பல்லால் கடித்துக் கொன்றுவிடும். எனவே பஞ்சைக் காட்டிலும் மென்மை உடையது என்றாலும் பகையைச் சிறிதாக எண்ணவேண்டாம்! அத்தகைய பகையைப் பெரும் பொருளாக எண்ணித் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்' என்றான்.

**பொருந்தலாற் பல்லி போன்றும் போற்றலால் தாயர் ஒத்தும்**
**அருந்தவர் போன்று காத்து மடங்கலா லாமை போன்றும்**
**திருந்துவேற் றெவ்வர் போலத் தீதற வெறிந்து மின்ப**
**மருந்தினான் மனைவி யொத்து மதலையைக் காமி**
**னென்றான் 1895**

*[எறிந்தும்-இடித்தும்; காமின்-காப்பீராக.]*

**பூந்துகின் மாலை சாந்தம் புனைகலம் பஞ்ச வாசம்**
**ஆய்ந்தளந் தியற்றப் பட்ட அடிசினீ ரின்ன வெல்லாம்**
**மாந்தரின் மடங்க லாற்றற் பதுமுகன் காக்க வென்றாங்**
**கேந்துபூண் மார்ப னேவ வின்னண மியற்றி னானே 1896**

*[மடங்கலாற்றல் - சிங்கம்போலும் வலியையுடைய.]*

**வேறு**

**சிறுகண்யா னையினினஞ் சேந்துசே வகங்கொளத்**
**துறுகலென் றுணர்கலாத் துள்ளிமந் திம்மக**
**நறியசந் தின்றுணி நாறவெந் தனகள்கொண்**
**டெறியவெள் கிம்மயிர்க் கவரிமா விரியுமே 1897**

*[துறுகல்-குண்டுக்கல்; மந்திமக-குரங்குக்குட்டி.]*

புகழ்வரைச் சென்னிமேற் பூசையிற் பெரியன
பவழமே யனையன பன்மயிர்ப் பேரெலி
அகழுமிங் குலிகமஞ் சனவரைச் சொரிவன
கவழயா னையினுதல் தவழுங்கச் சொத்தவே 1898

[பூசை-காட்டுப்பூனை; அகழும் - தோண்டுகின்ற; இங்குலிகம்-சாதிலிங்கம்.]

'இவனை விடாமல் நெருங்கி இருப்பதில் பல்லியைப் போலவும், விரும்பியவற்றைத் தந்து போற்றிப் பாதுகாப்பதில் அன்னையைப் போலவும், முனிவர் தம் ஒழுக்கம் முதலியவற்றைக் காப்பதுபோல இவனிடம் அவை பொருந்துமாறு காத்தும் ஆமையைப் போல ஐம்பொறிகளையும் அடக்கியும் தீது நேர்ந்தபோது அது தீரும்படி போர் வேலேந்திய பகைவரைப்போல இடித்துக் கூறியும், இன்பந்தரும் உணவுகளை உண்பிப்பதில் மனைவியைப் போலவும், நமக்குத் துணையான சீவகனைப் பாது காப்பீராக' என்றான். பூந்துகிலும் பூமாலையும் சந்தனமும் புனுகும் அணிமணிகளும் வெற்றிலையும் வாசனைப் பொருள்களும் ஆராய்ந்தறிந்து பண்ணிய உணவும் நறுநீரும் ஆகிய இவற்றையெல்லாம் ஆண் மக்களிடையே சிங்கம் போன்ற ஆற்றலுடைய பதுமுகன் முன்னே கூறியபடி, (வண்ணப்பூ மாலை சாந்தம், என்ற பாடலில் கூறியபடி) பாதுகாக்கக் கடவானாக' என்று, ஒளிவிளங்கும் பூண் அணிந்த மார்புடையவனாகிய சீவகன் பணிக்க, அவனும் அவ்வாறே அவற்றைக் காத்தான். சிறிய கண்களை உடைய யானைக் கூட்டம் ஒன்று கூடித் தூங்கிக் கிடக்க, அவற்றை யானைகள் என்று அறியாது. பெரிய கற்கள் என்று கருதிக்கொண்டு குரங்கின் குட்டிகள் அவற்றின் மேல் விழுந்து துள்ளிப் பாயும்; எரிந்த சந்தனக் கட்டை மணம் வீச ஒன்றின் மேலொன்று எறிந்து விளையாடும். மயிருடைய கவரிமான்கள் இதைக் கண்டு வருந்தி அஞ்சி ஓடும். புகழ்மிக்க மலையுச்சியில் வாழும் காட்டுப் பூனையிலும் பெரியதான, பவழம்

போன்ற, நிறைந்த மயிருடைய பெரிய எலிகள், பறித்தெடுக்கின்ற சாதிலிங்கம், கரிய பெருமலையின் மேலிருந்து கீழே வீழ்ந்தன. அத்தோற்றம் சோற்றுக் கவளத்தை உண்ணும் யானையின் நெற்றியிலே தவழும் பட்டுக் கச்சையைப் போன்றிருந்தது.

**அண்ணலங் குன்றின்மேல் வருடைபாய்ந் துழக்கலின்**
**ஒண்மணி பலவுடைந் தொருங்கவை தூளியாய்**
**விண்ணுளு வுண்டென வீழுமா நிலமிசைக்**
**கண்ணகன் மரமெலாங் கற்பக மொத்தவே** **1899**

*[வருடை-மலையாடு; உழக்கலின்-மிதித்தலால்; தூளியாய்-செந்தூளியாகி; உளுவுண்டென-உளுத்தது என்னும்படி.]*

**மானிடம் பழுத்தன கிலுத்தமற் றவற்றயல்**
**பான்முரட் பயம்பிடைப் பனைமடிந் தனையன**
**கானிடைப் பாந்தள்கண் படுப்பன துயிலெழ**
**ஊனுடைப் பொன்முழை யாளிநின் றுலம்புமே** **1900**

*[பாந்தள்-பாம்பு; பயம்பு - பள்ளம்; உலம்பும்-முழங்கும்; முழை-குகை.]*

**சாரலந் திமிசிடைச் சந்தனத் தழைவயின்**
**நீரதீம் பூமரந் நிரந்ததக் கோலமும்**
**ஏரில வங்கமும் மின்கருப் பூரமும்**
**ஒருநா விகலந் தோசனை கமழுமே** **1901**

*[தழைவயின்-தழைக்கு நடுவே; நீர - நீர்மையையுடைய;நிரந்த-வரிசையாகவுள்ள; நாவி-புழுகு.]*

**மைந்தரைப் பார்ப்பன மாமகண் மாக்குழாம்**
**சந்தன மேய்வன தவழ்மதக் களிற்றினம்**
**அந்தழைக் காடெலாந் திளைப்பவா மானினம்**
**சிந்தவால் வெடிப்பன சிங்கமெங் கும்முள** **1902**

*[ஆமான்-காட்டுப்பசு; வெடித்தல்-வீசுதல்.)*

அழகிய பெரிய மலைகளின்மேல் மலையாடுகள் பாய்ந்து மிதிக்க, அவற்றின் கால்பட்டுச் சிறந்த மணிகள்

பல உடைந்து ஒன்று சேர்ந்து செந்தூளாகி, விண்ணுலகம் உளுத்துப்போய்க் கொட்டுவதைப்போல மலை மேலிருந்து கீழே நிலத்தில் விழும். இப்படி விழுந்த செந்தூள்கள் படிந்து அங்குள்ள மரங்கள் எல்லாம் கற்பகத் தருவைப் போல் தோன்றும். கிலுத்தம் என்னும் மரங்களில், மக்கள் வடிவைப்போல் காய்த்தகனிகள் நிறைந்திருந்தன. மற்றும் அவற்றின் அருகில் உள்ள காட்டின் நடுவில் பால் போலும் வெண்மையான பள்ளக் குழிகளில் பனைமரம் கிடப்பதைப்போலப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கின்ற பாம்புகள் துயில் நீங்கி எழும்படி, ஊன் சதை கிடக்கும் பொன் போன்ற குகையிலிருந்து யாளிகள் முழங்கும். அழகிய திமிச மரங்கள் சூழ்ந்த சந்தன மரத்தின் தழைக்கு நடுவே, அழகிய தீம்பூ மரமும் வரிசையாகவுள்ள தக்கோல மரமும் சிறந்த இலவங்க மரமும் இனிய கற்பூர மரமும் புனுகுடன் கலந்து நாற்காத தூரம் மணம் வீசும். வழிநடந்து செல்கின்ற சீவகன் முதலிய தோழர்களைப் பார்க்கின்ற மகண்மா என்னும் விலங்குக் கூட்டமும், சந்தனத் தழை மேய்ந்து திரியும் மதமுடைய யானைக் கூட்டமும், நல்ல தழை உடைய காடுகளில் தங்கித் திரியும் காட்டுப் பசுவின் கூட்டமும் சிதறி ஓடும்படி, வாலைச் சுழற்றி வீசுகின்ற சிங்கங்களும் அங்கு எங்கும் நிறைந் திருக்கும்.

**வருக்கையின் கனிதொறும் வானரம் பாய்ந்துராய்ப்**
**பொருப்பெலாம் பொன்கிடந் தொழுகிமேல் திருவில்வீழ்ந்து**
**ஒருக்குலாய் நிலமிசை மிளிர்வவொத் தொளிர்மணி**
**திருக்கிள ரொளிகுலாய் வானகஞ் செகுக்குமே 1903**

[வருக்கை-பலா; திருவில்-இந்திரவில்; ஒருங்கு உலாய்-ஒன்றாக வளைந்து; செகுக்கும் - வெல்லும்; பொருப்பு-மலை.]

**வீழ்பனிப் பாறைக ணெறியெலாம் வெவ்வெயிற்**
**போழ்தலின் வெண்ணெய்போற் பொழிந்துமட் டொழுகுவ**

**தாழ்முகில் சூழ்பொழிற் சந்தனக் காற்றளைசந்து**
**ஆழ்துயர் செய்யுமவ் வருவரைச் சாரலே 1904**

[நெறி-வழி; வெயில் போழ்தலின்-வெயில் உருக்கு தலாலே; மட்டு-தேன்; தாழ்முகில்-தங்கிய மேகம் வரை-மலை.]

**கூகையுங் கோட்டமுங் குங்கும மும்பரந்து**
**ஏகலா காநிலத் தல்கிவிட் டெழுந்துபோய்த்**
**தோகையு மன்னமுந் தொக்குட னார்ப்பதோர்**
**நாகநன் காவினு ணயந்துவிட் டார்களே 1905**

[கோட்டம், குங்குமம் என்பன மரவகைகள்; அல்கி-தங்கி; தொக்கு-சேர்ந்து; நாகம்-சுரபுன்னை மரம்.]

### வேறு

**பூத்தகில் தவழும் போர்வை பூசுசாந் தாற்றி பொன்னூற்**
**கோத்துநீர் பிலிற்றுங் காந்தங் குங்கும வைரப் பொற்கோய்**
**சாத்துறி பவழக் கன்னல் சந்தன வால வட்டம்**
**நீத்தவ ரிடத்து நாற்றி நிழன்மணி யுலகஞ் செய்தார் 1906**

[பூசு சாந்தாற்றி-மேலே பூசிய சாந்தை ஆற்றும் சிற்றாலவட்டம்; பொன்னூல் - தலையிற்கட்டும் பொற்கயிறு; காந்தம் - சந்திரகாந்தக் கல்; பிலிற்றும் - துளிக்கும்; சாத்துறி - பரணிக்கூடு; நாற்றி-தூக்கி; கோய்-சிமிழ்.]

பலா மரத்தில் கனிகள் தொங்கும் கிளைகள் தோறும் குரங்குகள் பாய்வதால், மலையெங்கும் அப்பலவின் சுளைகள் சிந்திச் சிதறித் தேன் வழிய, பொன் சிதறிக் கிடப்பதுபோல் தோன்றும். வானின் மேலிருக்கின்ற வானவில் வானுக்கும் பூமிக்கும் ஒன்றாக வளைந்து, மண் மேல் ஒளிசிந்திக் கிடப்பதைப் போல் கிடக்கும் எழில் மணிகள், ஒளியோடு குலவி அழகில் வானத்தை வெல்லும். வீழ்ந்த பனிப்பாறைகள் கொடிய வெயில்பட்டு உடைந்து வெண்ணெய் போல் வழியெல்லாம் உருகி ஓடும்; தேன்

வழியும் முகில் சூழ்ந்த பொழிலிலே சந்தனக் காற்று வீசி மிகுந்த துன்பந்தரும் அழகிய மலைச்சாரலும் உடைய தாகும் அவர்கள் சென்றவழி. கூகைக் கொடியும், கோட்டம், குங்குமம் ஆகிய மரங்களும் நிறைந்து நெருங்கிய, விட்டுப் பிரிய மனம் வராத நிலத்திலே தங்கி, பின் அதைவிட்டு எழுந்துபோய் மயிலும் அன்னமும் கூடி ஆரவாரிக்கும் சுரபுன்னை மரம் நிறைந்ததோர் நறுமலர்ப் பொழிலை விரும்பி அடைந்து தங்கினார்கள். பொலிவு பெற்று அகிற்புகை தவழும் போர்வையையும், மேலே பூசிய சந்தனத்தின் குளிராற்றுகின்ற சிற்றால வட்டத்தையும், தலையில் கட்டும் பொன்னூலையும், நீரைத் தொடர்ந்து துளிக்கும் சந்திரகாந்தக் கல்லையும், குங்குமம் வைத்திருக்கும் வைரம் வைத்திழைத்த பொற் சிமிழையும், பொருள் வைக்கும் பரணிக்கூட்டையும், பவழத்தாலான கமண்டலத்தையும், சந்தன மரத்தாலான பேராலவட்டத்தையும், தவமுனிவர்கள் ஆசிரமத்தில் தூக்கிக்கட்டி ஒளியுடைய அழகிய வானுலகை அங்கே உண்டாக்கினர்.

**நித்தில முலையி னார்த நெடுங்கணா னோக்கப் பெற்றும்**
**கைத்தலந் தீண்டப் பெற்றுங் கனிந்தன மலர்ந்த காண்க**
**வைத்தலர் கொய்யத் தாழ்ந்த மரமுயி ரில்லை யென்பார்**
**பித்தல ராயிற் பேய்க ளென்றலாற் பேச லாமோ 1907**

[நித்திலம்-முத்துமாலை; மலர்ந்த-மலராதன மலர்ந்தன; கொய்ய-பறித்தற்கு.]

**பொறிமயி லிழியும் பொற்றார் முருகனிற் பொலிந்து மாவின்**
**நெறிமையி னிழிந்து மைந்தன் மணிக்கைமத் திகையை நீக்கி**
**வெறுமையி னவரைப் போக்கி வெள்ளிடைப் படாத நீரால்**
**அறிமயி லகவுங் கோயி லடிகளைச் செவ்வி யென்றான்**

[பொறிமயில்-புள்ளிகளையுடைய மயில்; இழியும்-இறங்கும்; மத்திகை-குதிரைச் சவுக்கு; செவ்வி-சமயம்; அகவும்-கூவும்.]

**எல்லிருட் கனவிற் கண்டேன் கண்ணிட னாடு மின்னே**
**பல்லியும் பட்ட பாங்கர் வருங்கொலோ நம்பி யென்று**
**சொல்லினள் தேவி நிற்பப் பதுமுகன் றொழுது சேர்ந்து**
**நல்லடி பணிந்து நம்பி வந்தன னடிக ளென்றான் 1909**

[எல்லிருள்-விடியற்காலத்திருளிலே; பல்லியும்பட்ட-பல்லியும் ஒலித்தன.]

**எங்கணா னைய னென்றாட் கடியன்யா னடிக ளென்னாப்**
**பொங்கிவில் லுமிழ்ந்து மின்னும் புனைமணிக் கடக மார்ந்த**
**தங்கொளித் தடக்கை கூப்பித் தொழுதடி தழுவி வீழ்ந்தான்**
**அங்கிரண் டற்பு முன்னீர் அலைகடல் கலந்த தொத்தார்**

[பொங்கி வில் உமிழ்ந்து-மிகுந்து ஒளியைச் சிந்தி; அற்பு-அன்பு.]

முத்தணிந்த மார்புடைய மங்கையரின் பெருங் கண்களால் பார்க்கப்பட்டும், கைகளால் தொடப்பட்டும், கனியாத காய்கள் எல்லாம் கனிந்து பழுத்தன; பூவாத மரங்களெல்லாம் பூத்துக் குலுங்கின. இதைக் காணபீ ராக! பெண்கள் கை நீட்டி மலர் பறிப்பதற்கேற்றபடி தாழ்ந்து வளையும் மரங்களுக்கு உயிரில்லை என்று கூறுபவர்கள் பித்தர்கள்; அல்லவென்றால், பேய்கள் என்று கூறுவதைத் தவிர வேறெதும் கூறமுடியுமோ? என்று அவர்கள் தங்களுக்குள் எண்ணி மகிழ்ந்திருந்தனர். புள்ளி களுடைய மயில்மேலிருந்து இறங்கும் பொன் மாலை அணிந்த முருகனைப் போல, அழகு விளங்கக் குதிரையை விட்டு முறையோடு இறங்கிய சீவகன், கையிலிருந்த மணிகள் இழைத்த குதிரைச் சவுக்கை எடுத்துவைத்து, அறிவுத் தெளிவற்றவர்களை அப்புறம் போகவிட்டு, விசயையின் தன்மை வெளிப்படாதிருக்க, மயிலகவும் தவப்பள்ளியில் அவளைக் காணுதற்கு ஏற்ற சமயம் அறிந்து வருக என்று பதுமுகனைப் பணித்தான். விடியற் காலம், வைகறை இருளில் கனவில் நம்பிவரக் கண்டேன். என் இடக் கண்ணும் துடிக்கின்றது. இப்போதே பல்லியும்

நல்லிடத்திலே நின்று ஒலித்தது. எனவே என் செல்வன் இன்று வருவானோ என்று நினைந்தவளாய் விசயை நின்று கொண்டிருந்தாள். அங்கே சென்ற பதுமுகன் தொழுது, அடிபணிந்து வணங்கி, செல்வன் வந்தனன் அடிகளே என்றான். எங்குளான் என் செல்வன் என்று கேட்ட வளுக்கு, அடியேன் ஈங்குள்ளேன் அடிகளே என்று கூறி, மிக்க ஒளி சிந்தித் திகழும் பொன்மணிக் கடகம் தங்கிய அழகுமிக்க கைகளைக் குவித்துச் சீவகன் அன்னையின் அடிபணிந்து வீழ்ந்தான். அந்நிலையில் அவர்கள் அங்கு, முந்தித் தொடர்ந்து வந்த உறவு முறையாகிய நீர்நிறைந்த அன்புக் கடல் இரண்டு கலந்த தொத்தனர்.

**திருவடி தொழுது வீழ்ந்த சிறுவனைக் கண்ட போழ்தே**
**வருபனி சுமந்த வாட்கண் வனமுலை பொழிந்த தீம்பால்**
**முருகுடை மார்பிற் பாய்ந்து முழுமெயு நனைப்ப மாதர்**
**வருகவென் களிறென் றேத்தி வாங்குபு தழுவிக்**
**கொண்டாள் 1911**

[பனி-நீர்த்துளி; நனைப்ப-நனைத்தலால்; வாங்குபு-ஒடுங்கும்படி.]

**காளையாம் பருவ மோராள் காதன்மீக் கூர்த லாலே**
**வாளையா நெடிய கண்ணாண் மகனைமார் பொடுங்கப்**
**புல்லித்**
**தாளையா முன்பு செய்த தவத்தது விளைவி லாதேன்**
**தோளையாத் தீர்ந்த தென்றாள் தொழுதகு தெய்வ**
**மன்னாள் 1912**

[வாளை ஆம்-வாளை ஒக்கும்; முன்பு தாள் செய்த தவம்-முற்பிறப்பில் முயன்று செய்த தவம்; தோள் அயா-தோள் வருத்தம்.]

**வாட்டிறற் குருசி றன்னை வாளம ரகத்து ணீத்துக்**
**காட்டகத் தும்மை நீத்த கயத்தியேற் காண வந்தீர்**
**சேட்டிளம் பருதி மார்பிற் சீவக சாமி யீரே**
**ஊட்டரக் குண்ட செந்தா மரையடி நோவ**
**வென்றாள் 1913**

[காட்டகத்து-சுடுகாட்டிலே; கயத்தியேன்-கொடிய வளாகிய என்னை; சேடு-பெருமை.]

அங்ஙனம் தன் அடிபணிந்து வணங்கிய சீவகனைக் கண்டவுடனேயே, ஒளிமிக்க கண் சுமந்து பெருக்கிய கண்ணீரும், தாய்மை மீதூற அழகிய மார்பில் சுரந்த சுவைப் பாலும், வணங்கி எழுந்த சீவகனுடைய அழகிய மார்பிலே பாய்ந்து அவன் உடல் முழுவதையும் நனைக்க, விசயை 'காளையே வருக' என்று புகழ்ந்து, தன் மார்போடு சேர்த்துத் தழுவிக் கொண்டாள். சீவகன் காளைப் பருவம் எய்திவிட்ட பெரியவன் என்பதையும் எண்ணாத வளாய், தாய்மைப் பாசம் மீதூர்வதாலே வாள்போலும் நீண்ட கண்ணுடைய அவள் சீவகனைத் தன் மார்போடு சேர்த்துக் குழந்தையைப் போல் தழுவிக்கொண்டு, 'ஐயனே, முற்பிறப்பிலே வருந்தி நோற்ற நல்வினைப் பயன் இல்லாத என் தோள் வருத்தம், உன்னைக் கண்டதால் இன்று நீங்கியது' என்றாள், வணங்கத் தகும் தெய்வம் போன்ற விசயை. வாள் வலிமை மிக்க மன்னனைப் போரிலே கைவிட்டு விட்டுச் சுடுகாட்டில் உன்னையும் பிரிந்து வந்த, கயமைக் குணமுடைய என்னைக் காணவும் வந்தனையே! பெருமைமிக்க இளஞாயிறு போலும் மார்புடைய சீவகனே, செந்நிறம் ஊட்டப் பெற்ற செந்தாமரை போலும் சிவந்த அடிநோவ வந்த உன் அன்பு என்னே' என்றாள்.

**கெடலருங் குரைய கொற்றங் கெடப்பிறந் ததுவு மன்றி**
**நடலையு ளடிகள் வைக நட்புடை யவர்கள் நைய**
**இடைமகன் கொன்ற வின்னா மரத்தினேன் தந்த துன்பக்**
**கடலகத் தழுந்த வேண்டா களைகவிக் கவலை**
**யென்றான் 1914**

[கெடலரும் - கெடுதற்கரிய; கொற்றம்-அரசுரிமை; நடலை-வருத்தம்; வைக-தங்க; நைய-வருந்தும் படி; கவலை-துன்பம்.]

யானலன் ஔவை யாவாள் சுநந்தையே யையற் கென்றும்
கோனலன் தந்தை கந்துக் கடனெனக் குணத்தின் மிக்க
பானிலத் துறையுந் தீந்தே னனையவா யமிர்த மூற
மானலங் கொண்ட நோக்கி மகன்மன மகிழச்
சொன்னாள் 1915

[ஔவை-தாய்; அமிர்தம்ஊற-இனிமை ஊறும்படி.]

எனக்குயிர்ச் சிறுவ னாவான் நந்தனே ஐயனல்லை
வனப்புடைக் குமர னிங்கே வருகென மருங்கு சேர்த்திப்
புனக்கொடி மாலை யோடு பூங்குழல் திருத்திப் போற்றார்
இனத்திடை யேற னானுக்கு இன்னளி விருந்து
செய்தாள் 1916

[மருங்கு-பக்கம்; போற்றார்-பகைவர்; இன்னளி-இனிய அருள்.]

'கேடில்லாத புகழுடைய அரசன் அழியப் பிறந்ததும் அல்லாமல், அடிகளாகிய நீங்கள் வருத்தத்திலே மூழ்க, நண்பர்கள் துன்புற, இடையன் வெட்டிக் கழித்த வெறு மரத்தின் தன்மை உடையவனாகிய நான் தந்த துன்பக் கடலில் அழுந்தவேண்டாம்; கவலையை விடுவீராக'என்று கூறிய சீவகனிடம், 'நானல்லேன் உனக்குத் தாய்; சுநந் தையே உனக்குத் தாயாவாள்! ஐயனே உனக்குத் தந்தை யும் சச்சந்த மன்னனல்லன்; கந்துக்கடனே ஆகும்' என்று, பாலோடு கலக்கத் தங்கிய இனிய தேன்போல் அமுதம் ஊறும் குணத்தில் சிறந்த, மான்நோக்குப் போலும் அழகுடைய விசயை, சீவகன் மனங்களிக்கக் கூறினாள். மேலும் 'எனக்கு உயிர்போன்ற பிள்ளை நந்தட்டனே ஆகும்; நீ யல்லை!' என்று கூறிய விசயை அழகுடைய மகனே வருக என்று நந்தட்டனை அன்போடு அருகே அழைத்து அணைத்துக் கொண்டு, பூங்கொடி போன்றவள் அவன் அணிந்த மாலையையும் மலர்க் குழலையும் திருத்தி, பகைக் கூட்டத்திடையே சிங்கம் போன்ற அவனுக்கு, இனிய அருளென்னும் விருந்து படைத்தாள்!

சிறகராற் பார்ப்புப் புல்லித் திருமயி லிருந்த தேபோல்
இறைவிதன் சிறுவர் தம்மை யிருகையி னாலும் புல்லி
முறைமுறை குமரர்க் கெல்லா மொழியமை முகமன் கூறி
அறுசுவை யமிர்த மூட்டி யறுபகல் கழிந்த பின்னாள் 1917

[பார்ப்பு-மயிற்குஞ்சு; புல்லி-தழுவி.]

வேறு

மரவ நாக மணங்கமழ் சண்பகம்
குரவங் கோங்கங் குடம்புரை காய்வழை
விரவு பூம்பொழில் வேறிருந் தாய்பொருள்
உருவ மாத ருரைக்குமி தென்பவே 1918

[குரவம்-குராமரம்; குடம்புரைகாய் வழை-குடத்தை ஒத்த காயையுடைய சுரபுன்னைமரம்; உருவம்-அழகு; விரவு-கலந்த.]

நலிவில் குன்றொடு காடுறை நன்பொருட்
புலிய னார்மகள் கோடலும் பூமிமேல்
வலியின் மிக்கவர் தம்மகள் கோடலும்
நிலைகொண் மன்னர் வழக்கென நேர்பவே 1919

[நலிவுஇல்-அழித்தற்கரிய; உறை - தங்கிய; நன் பொருள்-பெரும் பொருள்; கோடல்-மணம் செய்து கொள்ளுதல்; நேர்பவே-கூறுவார்கள்.]

நீதி யாலறுத் தந்நிதி யீட்டுதல்
ஆதி யாயவ ரும்பகை நாட்டுதல்
மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்
பேது செய்துபி ளந்திடல் பெட்டதே 1920

[அறுத்து-அறுதியிட்டு; அந்நிதி-ஆறிலொருபாகமான அப்பொருளை; ஆதியாய அரும்பகை-தொன்று தொட்டு வந்த அரிய பகையை; பேது-பேதம்; பிளந்து-பிரித்து; பெட்டது-அரசரால் விரும்பப் பட்ட காரியமாகும்.]

இறகினால் குஞ்சுகளைத் தழுவி அழகிய மயில் இருந்ததைப் போல, விசயை தன் மக்களை இரண்டு கைகளாலும் தழுவி, மற்றைய மைந்தர்களுக்கெல்லாம் தனித்தனியே இன்மொழி கூறி, அறு சுவை விருந்தளித்து, ஆறு நாட்கள் கழித்தனள். பின் ஏழாவது நாளில், மரவ மரமும் நாகமரமும் மணமிக்க சண்பகமரமும் குரா மரமும், கோங்கமரமும், குடம்போல் காய்கள் காய்க்கும் சுரபுன்னைமரமும் நிறைந்து கலந்த மலர்ப்பொழிலிலே, தனியே இருந்து எண்ணிச் செய்ய வேண்டியது இது வென்பதை அழகிய விசயை சொல்லத் தொடங்கினாள். 'அழிவற்ற மலையிலும், காட்டிலும் விளைகின்ற பெரும் பொருளுடைய சிற்றரசர் மகளை மணந்து கொள்ளு தலும், மண்மிசை வலிமை மிக்க பேரரசர்கள் மகளைக் கொள்ளுதலும் தங்கள் முன்னோர் நிலையை அடைய எண்ணும் அரசர்கள் கைக் கொள்ள வேண்டிய நெறி களாகும் என்று நூல்வலோர் கூறுவர். அரசியல் முறை வகுத்து, அதன்படி இறையாக வந்த ஆறில் ஒருபங்கு செல்வத்தைப் பெருக்குவதும், பண்டுதொட்டு வந்த பகையை மறக்காது நெஞ்சில் நிறுத்தியிருத்தலும், முள்ளைக் கொண்டு முள்ளை எடுப்பதுபோல, தமக்குப் பகையாய் இருக்கும் இருவரை ஒருவரோடொருவர் மோதிக் கொள்ளச் செய்தலும் தம்மிற் கூடி வந்து எதிர்க்கும் பகைவருள் ஒருவரைப் பிரித்துத் தம்மிடம் சேர்த்துக் கொள்ளுதலும் ஆகியவை அரசர் விரும்பிச் செய்யக்கூடிய காரியங்களாகும்'.

**ஒற்றர் தங்களை யொற்றரி னாய்தலும்**
**கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்**
**சுற்றஞ் சூழ்ந்துபெ ருக்கலுஞ் சூதரோ**
**கொற்றங் கொள்குறிக் கொற்றவற் கென்பவே 1921**

[குறி-கருத்து; சூது-உபாயம்; அரோ: அசை; ஆய்தல்-ஆராய்தல்; கோடல்-கொள்ளுதல்.]

 

வென்றி யாக்கலு மேதக வாக்கலும்
அன்றி யுங்கல்வி யோடழ காக்கலும்
குன்றி னார்களைக் குன்றென வாக்கலும்
பொன்றுஞ் சாகத்தி னாய்பொருள் செய்யுமே 1922

[ஆக்கல்-உண்டாக்குதல்; மேதகவு-மேம்பாடு; குன்றி னார்களை-குறைந்தவர்களை; ஆகம் - மார்பு; செய்யும்-உண்டாக்கும்.]

பொன்னி னாகும் பொருபடை யப்படை
தன்னி னாகுந் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத்துன் னாதன இல்லையே 1923

[பொன்னின் பொருபடை ஆகும்-இப்பொருளால் போருக்குரிய சேனை உண்டாகும்; தரணி-பூமி; துன்னுங்காலை-வந்து சேருமளவில்; துன்லாதன- அடைய முடியாதன.]

நிலத்தி னீங்கி நிதியினுந் தேய்ந்துநம்
குலத்திற் குன்றிய கொள்கைய மல்லதூஉம்
கலைக்க ணாளரு மிங்கில்லை காளைநீ
வலித்த தென்னென வள்ளலுங் கூறுவான் 1924

[நிதி-பொருள்; தேய்ந்து - குறைந்து; கொள் கையம்-கொள்கையை உடையோம்; கலைக் கணாளர்-மந்திரிமார்; நீவலித்தது-நீ துணிந்த காரியம்.]

'ஒற்றர்களை வேறு ஒற்றர்களைக் கொண்டே ஆராய்ந் தறிவதும், அறிவிற் சிறந்த பெரியோரையும் அமைச்சர் களையும் கண்போல் போற்றிப் பாதுகாத்தலும், சுற்றத் தையும் மற்றைய கருமத் தலைவர்களையும் அவரவர் தகுதியும் தேவையும் அறிந்து பெருக்கிக் கொள்வதும், வெற்றி வாழ்வை விரும்பும் மன்னர்கள் கைக்கொள்ள வேண்டிய நெறிகளாகும் என நூல்வல்லார் கூறுவர். வெற்றிகளை உண்டாக்குவதும், மேல்நிலை அடையச்

செய்வதும் மெலிந்து வலிவற்றவரை மலைபோல் வலி வுடையவராகச் செய்வதுமாகிய இவைகளே அல்லாமல், கல்வியும் அழகும் உண்டாகச் செய்வதும், திருமகள் தங்கி வாழும் அழகிய மார்புடையவனே, செல்வத்தால் செய்து கொள்ளக் கூடும். இத்தகைய பொன் என்னும் செல்வப் பொருளாலே, போருக் குரிய படையை உண்டாக்கிக் கொள்ள முடியும். அப்படி உண்டாக்கிக் கொள்கிற படையால் பல நாடுகள் கிடைக்கும். அப்படிக் கிடைக் கின்ற நாடுகளால் மேலும் பெரும்பொருள் வந்து சேரும். இப்பெரும்பொருள் கிடைக்கக்கூடுமானால் இவ்வுலகில் கிடைக்க முடியாதது ஒன்றுமில்லை. ஆனால் நாமோ நாட்டை இழந்து, செல்வமும் இன்றிக் குலப் பிறப்பிலும் தாழ்ந்த நிலையில் உள்ளோம்! அல்லாமலும் இத்தாழ் நிலை போக்கி வழி காட்டக் கூடிய அமைச்சர்களும் இங்கில்லை. எனவே காளை போன்றவனே உன் கருத்து என்ன' என்று விசையை கேட்டவுடன் சீவகனும் சொல்லத் தொடங்கினான்.

## வேறு

**எரியொடு நிகர்க்கு மாற்ற லிடிக்குரற் சிங்க மாங்கோர்**
**நரியொடு பொருவ தென்றாற் சூழ்ச்சிநற் றுணையொ**
**டென்னாம்**
**பரிவொடு கவல வேண்டா பாம்பவன் கலுழ னாகும்**
**சொரிமதுச் சுரும்புண் கண்ணிச் சூழ்கழல் நந்த னென்றான்**

*[எரி-தீ; என் ஆம்-என்னவாய் முடியும்; கவல-வருந்த; கலுழன்-கருடன்.]*

**கெலுழனோ நந்த னென்னாக் கிளரொளி வனப்பி னானைக்**
**கலுழத்தன் கையாற் றீண்டிக் காதலிற் களித்து நோக்கி**
**வலிகெழு வயிரத் தூண்போல் திரண்டுநீண் டமைந்த**
**திணடோள்**
**கலிகெழு நிலத்தைக் காவா தொழியுமோ காளைக்**
**கென்றாள் 1926**

*[கலுழ-மனமுருகும்படி; காதல்-அன்பு; கெழு-பொருந்திய.]*

  

**இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார்**
**மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்க் கரிய துண்டோ**
**கடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை**
**இடத்திடை யழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த**
**தன்றே 1927**

*[மடப்படலின்றி: மடம்படலின்றி - அறியாமையிற் படுதலில்லாமல்; கடம்-காடு; அழுங்க-வருந்த; கூகை-கோட்டான்.]*

'தீப்போல் கொல்லும் ஆற்றலும் இடிபோல் முழங்கும் குரலும் உடைய சிங்கம் ஒன்று, நரியோடு போர் புரிவதெனில், அக் காரியமும் அவற்றின் துணைகளும் என்ன ஆகும்? எனவே என்மேல் வைத்த அன்பினால் கவலை கொள்ளவேண்டாம்! கட்டியங்காரன் பாம்பெனில், அதைக் கொல்லுகின்ற கருடனாவான், தேன் வழிய வண்டுகள் மொய்க்கும் முடிக்கண்ணியும் வீரக் கழலு முடைய நந்தட்டன். நந்தட்டன் பாம்பினைக் கொல்லுகின்ற கருடன் ஆவான்' என்று சீவகன் கூறக் கேட்ட விசயை, நந்தட்டன் கருடனோ என்று வியந்து, ஒளி விளங்கும் அழகுடைய அவன் மனம் உருகும்படி தன் கையால் தொட்டு, அன்போடு மகிழ்ந்து பார்த்து, 'வலிமை மிக்க வைரத் தூண்போல் திரண்டு, உருண்டு நீண்ட அழகிய இத் திண்தோள்கள், கட்டியங்காரனிடம் பொருந்தியிருக்கிற நாட்டை மீட்டுக் காளையாகிய உனக்குத் (சீவகனுக்கு) தந்து காவாமல் போகுமோ' என்றாள்! காரியம் செய்வதற் கேற்ற இடமும் அது செய்யத் தகுந்த காலமும் ஆராய்ந்தறிந்து, மற்ற எதற்கும் அஞ்சாதவராய், அறியாமையில் சிக்கிக்கொள்ளாமல், காரிய மாற்றும் திறம் உடையவர்களுக்கு முடியாததும் உண்டோ? காட்டிலே உள்ள ஒற்றைக் காகம் கூட, எண்ணற்ற கோட்டான்கள் இருக்கிற இடத்தின்கண் பகற்பொழுதிற் சென்று, அக்கோட்டான்கள் வருந்த அவற்றைக் கொன்றது அல்லவா?' (இராப்பொழுதெனில் கூகைகள் வலிவுடையனவாகும்)

இழைபொறை யாற்ற கில்லா திட்டிடை தளர நின்ற
குழைநிற முகத்தி னார்போற் குறித்ததே துணிந்து செய்யார்
முழையுறை சிங்கம் பொங்கி முழங்கிமேற் பாய்ந்து மைதோய்
வழையுறை வனத்து வன்கண் நரிவலைப் பட்ட தன்றே

[இழை-ஆபரணம்; பொறை-பாரம்; இட்டிடை-சிறுகிய இடை; நிறம்-ஒளி; மை-கருமைநிறம்; வழை-சுரபுன்னைமரம்.]

ஊழிவாய்த் தீயோ டொப்பான் பதுமுக னுரைக்கு மொன்னார்
ஆழிவாய்த் துஞ்ச மற்றெம் மாற்றலா னெருங்கி வென்று
மாழைநீ ணிதியந் துஞ்சு மாநிலக் கிழமை யெய்தும்
பாழியாற் பிறரை வேண்டேம் பணிப்பதே பாணி யென்றான்

[ஊழிவாய்த்தீ-ஊழிக்காலத்து நெருப்பு; ஒன்னார்-பகைவர்; துஞ்ச-இறக்கும்படி; மாழை-பொன்; துஞ்சும்-தங்கிய; நிலக்கிழமை - நிலவுரிமையை; பாணி-தாமதமாகும்; பாழி-வலிமை.]

பொருவருங் குரைய மைந்தர் பொம்மென உரறி மற்றித்
திருவிருந் தகன்ற மார்பன் சேவடி சேர்ந்த யாங்கள்
எரியிருந் தயரு நீர்மை யிருங்கதி ரேற்ற தெவ்வர்
வருபனி யிருளு மாக மதிக்கவெம் மடிக ளென்றார் 1930

[பொருவரும்-ஒப்பில்லாத; பொம்மென-கடுக; உரறி-முழங்கி; அயரும் நீர்மை-வருந்தும் தன்மை; ஏற்ற தெவ்வர்-எதிர்த்த பகைவர்.]

'அணிகலன்களைச் சுமக்க முடியாமல் மெல்லிடை வருந்த நின்ற, குழையணிந்த அழகிய முகமுடைய பெண்களைப் போலத் தடுமாறி, இடமும் காலமும் அறிந்து ஒரு காரியத்தைத் துணிந்து செய்யாதவர்கள், குகையில் இருந்த சிங்கம் இடம் உணராமல் ஆரவாரித் தெழுந்து நரியின் மேல் பாய்ந்து, மேகந் தவழும் சுரபுன்னை மரக்காட்டில், கொடிய நரிகள் விரித்த வலையில் அகப்பட்டுக் கொண்டு விழித்ததல்லவா, அது போல் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுவார்கள்!'

இவ்வாறு விசயை கூறக்கேட்டு ஊழிக் காலத் தீயைப் போன்றவனாகிய பதுமுகன் சொல்லுவான்: 'பகைவர்கள் கடலிலே அழுந்திச் சாக, மற்றும் உள்ளவரை எம் தோள் வலியால் நெருக்கி வென்று, பொன்னும் மிகுந்த செல்வமும் தங்கிய பெருநிலத்தின் அரசுரிமையையும் நாங்களே அடைவோம்! துணைதேடிப் பிறரை நாடமாட்டோம்! தாங்கள் கட்டளை இடவேண்டியது ஒன்றே தடை' என்றான். ஒப்புவமை இல்லாத மற்ற தோழர்கள் கடுக முழங்கி, 'திருமகள் தங்கி வாழும் அகன்ற மார்புடைய சீவகன் திருவடி அடைந்த நாங்கள், தீ சோர்வுற்றிருந்து தளரும் தன்மை உடைய ஞாயிறு ஆகவும் எம்மை எதிர்த்த பகைவரைப் பனியும் இருளுமாகவும் எம் அடிகளே (விசயையை) எண்ணிடுக' என்றனர்.

## வேறு

**கார்தோன்ற வேம லருமுல்லை கமலம் வெய்யோன்**
**தேர்தோன்ற வேம லருஞ்செம்மனின் மாமன் மற்றுன்**
**சீர்தோன்ற வேம லருஞ்சென்றவன் சொல்லி னோடே**
**பார்தோன்ற நின்ற பகையைச்செறற் பாலை யென்றான்**

*[கார்-கார்காலம்; சீர் - புகழ்; மாமன் மலரும் - கோவிந்தன் மனம் மலரும்; செறற்பாலை- கொல்லத்தக்காய்.]*

**நன்றப் பொருளே வலித்தேன்மற் றடிகள் நாளைச்**
**சென்றப் பதியு ளெமர்க்கேயென துண்மை காட்டி**
**அன்றைப் பகலே யடியேன்வந் தடைவன் நீமே**
**வென்றிக் களிற்றா னுழைச்செல்வது வேண்டு மென்றான்**

*[எமர்க்கே-என் உறவின்ர்க்கே; நீம்-நீர்; வலித்தது- துணிந்தது.]*

**வேற்றைவந் தன்ன நுதிவெம்பரற் கான முன்னி**
**நூற்றைவ ரோடு நடந்தானுதி வல்வின் மைந்தன்**
**காற்றிற் பரிக்குங் கலிமான்மிசைக் காவ லோம்பி**
**ஆற்றற் கமைந்த படையோடதர் முன்னி னானே** **1933**

[தைவந்தன்ன-தொட்டாற் போன்ற; நுதி-கூர்மை; பரல்-பருக்கைக்கல்; ஓம்ப-காவலிட; பரிக்கும்-செல்லுகின்ற; கலிமான் - மனம் செருக்கிய குதிரை; அதர்-வழி.]

**மன்றற் கிடனா மணிமால்வரை மார்பன் வான்கண்**
**நின்றெத் திசையு மருவிப்புனல் நீத்தம் ஓவாக்**
**குன்றுங் குளிர்நீர்த் தடஞ்சூழ்ந்தன கோல யாறும்**
**சென்றப் பழனப் படப்பைப்புன னாடு சேர்ந்தான் 1934**

[மன்றல் - திருமணம்; நீத்தம் - வெள்ளம்; ஓவா - ஒழியாத; படப்பை-தோட்டம்.]

'கார்காலம் வந்தவுடனேயே முறுவலித்துப் பூக்கும் முல்லைப் பூ! சூரியன் உதித்து வரக் கண்டு தாமரை கண்விழிக்கும்! சிறந்தோனாகிய உன் மாமன் மனமோ சிறப்புமிக்க உன் புகழ்வாழ்வைக் கண்டு மகிழ்ந்து மலரும். ஆகவே நீயும் அவனிடம் சென்று அவன் சொல்லுகிற படியே, உலகம் போற்ற, நிலை பெற்றிருக்கிற பகையைக் கொல்வாயாக' என்றாள். 'இதுவே நல்லது, நானும், அதைச் செய்யவே துணிந்தேன். மற்றும் அடிகளே, நான் நாளையே இராசமாபுரம் சென்று, அங்குள்ள எம் சுற்றத்தார்க்கு மட்டும் நான் உயிரோடிருப்பதை உணர்த்திப் பின் வந்து சேர்வேன். நீங்கள் வெற்றி தேடித்தரும் யானைகளுடைய மாமனிடம் செல்லுதல் வேண்டும்' என்றான். வேலைத் தொட்டது போன்ற நுனியுடைய கூரிய பருக்கைக் கற்களுடைய காட்டின் வழியே செல்ல எண்ணி, தவமகளிர் நூற்றைந்து பேருடன் முன் செல்ல வலிய வில்லேந்திய சீவகனும், காற்றைப் போலப் பறக்கின்ற குதிரை மேலமர்ந்து காவலிட, ஆற்றல் மிக்க படைகளுடன் காட்டு வழியிலே செல்லத் தொடங்கினான். மணத்திற்கு இடமாகிய மணிகளுடைய பெரிய மலைபோலும் மார்புடைய வனாகிய சீவகன், வானம் ஓயாது பெய்தலின், எத்திசையும் நிறைந்து நீர்ப் பெருக்கு வற்றாத அருவியுடைய

குன்றையும், குளிர்ந்த நீருடைய குளங்களையும், அக் குளங்கள் சூழ்ந்த ஆற்றையும் கடந்து, வயலும் தோட்டங்களும் நிறைந்த ஏமாங்கத நாட்டை அடைந் தான்.

## வேறு

**காவின்மேற் கடிமலர் தெகிழ்ந்த நாற்றமும்**
**வாவியு ளினமல ருயிர்த்த வாசமும்**
**பூவிரி கோதையர் புனைந்த சாந்தமும்**
**ஏவலாற் கெதிரெதிர் விருந்து செய்தவே** **1935**

[கா-சோலை; தெகிழ்ந்த நாற்றம்-வாய்விட்ட மணம்; வாவி-தடாகம்; உயிர்த்த-வீசிய; ஏவலாற்கு-வில்வல்லானாகிய சீவகனுக்கு; ஏ-அம்பு.]

**கரும்பின்மேல் தொடுத்ததேன் கலிகொள் தாமரைச்**
**சுரும்பின்வாய்த் துளித்தலின் துவைத்த வண்டொடு**
**திருந்தியாழ் முரல்வதோர் தெய்வப் பூம்பொழிற்**
**பொருந்தினான் புனைமணிப் பொன்செய் பூணினான்** **1936**

[தொடுத்த - வைத்த; கலிகொள் - ஆரவாரத்தைக் கொண்ட; சுரும்பு-ஒருவகை வண்டு; துவைத்த-ஒலித்தனவாய்.]

**பொறைவிலங் குயிர்த்தன பொன்செய் மாமணிச்**
**செறிகழ லிளைஞருஞ் செல்லல் நீங்கினார்**
**நறைவிரி கோதையர் நாம வேலினாற்கு**
**அறுசுவை நால்வகை யமுத மாக்கினார்** **1937**

[விலங்கு பொறை யுயிர்த்தன-சீவகன் முதலியோர் ஏறிவந்த குதிரை முதலியன சுமத்தலை நீங்கி இளைப்பாறின; நறை-தேன்; நாம்-அச்சம்.]

**கட்டியி னரிசியும் புழுக்குங் காணமும்**
**புட்டில்வாய்ச் செறித்தனர் புரவிக் கல்லவும்**
**நெட்டிருங் கரும்பொடு செந்நெல் மேய்ந்துநீர்**
**பட்டன வளநிழற் பரிவு தீர்ந்தவே** **1938**

[கட்டியின் அரிசியும்-வெல்லக் கட்டியோடு கலந்த தாகிய அரிசியும்; புழுக்கும்-வெந்த; காணம்-கொள்; புட்டில்-கோணிப்பை; பரிவு-வருத்தம்.]

சோலையில் உள்ள மணமலர்கள் விரித்த மணமும், பொய்கையில் பூத்து மலர்ந்த புது மலர்களின் வாசமும், இதழ்விரித்த மலர் நிறைந்த மாலையணிந்த மங்கையர்கள் அணிந்த சந்தனத்தின் மணமும், வில்வல்ல சீவகனுக்கு எதிரெதிரிருந்து விருந்தளித்தன. கரும்புத் தோகையின் மேல் வண்டுகள் சேர்த்து வைத்த தேன், ஒலித்து ஆரவாரிக்கும் தாமரை மலர்களின் மேல் உள்ள தும்பியின் வாயிலே துளிக்க, ஒலிக்கும் வண்டுகள் இசையோடு தும்பிகள் இனிய யாழிசை போல் இன்னொலி எழுப்பிப் பாடும் தெய்வத் தன்மை பொருந்தியதோர் மலர்ப் பொழிலிலே சென்று அழகிய மணிகள் பதித்த பொற்பூண் அணிந்த சீவகன் தங்கினான். குதிரை முதலிய விலங்குகள் சுமைகளை இறக்கிவிட்டு இளைப்பாறின. பொன்னால் செய்து மாணிக்க மணிகள் இழைத்த பொற்கழல் அணிந்த வீரரும் சோர்வு நீங்க இளைப்பாறினர். தேன் வழியும் வாச மலர்மாலை சூடிய மங்கையர், அச்சந்தரும் வேலேந்திய சீவகனுக்கு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு ஆகிய அறுசுவையுஞ் சேர்ந்த உண்பன, தின்பன, உறிஞ்சுவன, பருகுவன ஆகிய நான்கு வகை உணவுகளையும் சமைத்தனர். வெல்லக் கட்டியோடு சேர்ந்த அரிசியும், வெந்த கொள்ளும் கலந்த பையினைக் குதிரையின் வாயோடு சேர்த்துத் தின்னக் கொடுத்தனர். இவையல்லாத எருது முதலியன நீண்ட பெரிய கரும்பு வயல்களிலும் செந்நெல் வயல்களிலும் மேய்ந்தும், நீரிலே அழுந்திக் குளித்தும் நல்ல மர நிழலில் படுத்துக் கிடந்தும் துன்பந் தீர்த்துக் கொண்டன.

**குழிமதுக் குவளையங் கண்ணி வார்குழற்**
**பிழிமதுக் கோதையார் பேண இன்னமுது**
**அழிமதக் களிறனா னயின்ற பின்னரே**
**கழிமலர் விழித்தகண் கமலம் பட்டவே** **1939**

[பேண - உபசரிக்க; அழிமதக்களிறு - ஒழுகுகின்ற மதத்தையுடைய யானை; அயின்றபின் - உண்டபின்.]

எரிமணி யிமைத்தன வெழுந்த தீம்புகை
புரிநரம் பிரங்கின புகன்ற தீங்குழல்
திருமணி முழவமுஞ் செம்பொற் பாண்டிலும்
அருமணி யின்குர லரவஞ் செய்தவே 1940

[இமைத்தன-விளங்கின; புரிநரம்பு - முறுக்கிவிட்ட நரம்பு; குழல் புகன்ற-புல்லாங்குழல் பாடின; மணி-அழகு; பாண்டில்-கஞ்சதாளம்; மணி-குதிரைக்குக் கட்டிய மணி.]

தெளித்தவின் முறுவலம் பவளஞ் செற்றவாய்க்
களிக்கயன் மழைக்கணார் காமங் காழ்கொளீஇ
விளித்தவின் னமிர்துறழ் கீதம் வேனலான்
அளித்தபின் அமளியஞ் சேக்கை யெய்தினான் 1941

[தெளித்த-விளக்கிய; விளித்தல்-பாடுதல்; அளித்த பின்-கொண்டாடிய பின்பு; காழ்கொளீஇ-வயிரம் கொண்டு; அமளியஞ் சேக்கை-படுக்கையாகிய தங்குமிடத்தை.]

தீங்கரும் பனுக்கிய திருந்து தோள்களும்
வீங்கெழிற் றோள்களு மிடைந்து வெம்முலை
பூங்குளிர் தாரொடு பொருது பொன்னுக
ஈங்கனம் கனையிரு ளெல்லை நீந்தினான் 1942

[அனுக்கிய-தம் அழகால் அதனைக் கெடுத்த; கனையிருள் எல்லை-செறிந்த இரவின் எல்லையை.]

குழிந்த நீர் நிலைகளில் தோன்றும் தேன் நிறைந்த குவளை மலராலான கண்ணியையும் நீண்ட கூந்தலையும், பிழிந்தெடுக்கும்படி தேன் நிறைந்த மலர்மாலையையும் உடைய மகளிர் உபசரிக்க, இனிய உணவை, ஒழுகும் மதமுடைய யானை போன்ற சீவகன் உண்டான். பின்னர் உப்பங்கழியிலுள்ள குவளை மலர்கள் பூத்தன; தாமரை மலர்கள் குவிந்து கூம்பின. அந்த அந்திப்பொழுதில்

எரிநெருப்புப் போன்ற மணிகள் ஒளிவீசின. அகிற் புகையின் மணம் எழுந்து நிறைந்தது. முறுக்கிய யாழின் நரம்புகள் இன்னிசை எழுப்பின. இனிய குழல்கள் ஒலித்தன. அழகிய மணி முழவமும், வெண்கலத் தாளமும், குதிரையின் கழுத்தில் கட்டிய மணியின் குர லோடு கலந்து ஒலித்தன. விளக்கமுறும் இளநகையும், பவளத்தை வென்ற சிவந்த வாயும் களிப்புடைய மீன் போன்ற குளிர்விழியும் உடைய மகளிர், காமம் மிகும்படி பாடிய, இன்னமுதினை வென்ற இசையைக் காமனைப் போன்ற சீவகன் பாராட்டிய பின்னர் படுக்கையாகிய தங்குமிடத்தை அடைந்தான். இனிய சுவை உடைய கரும்பைத் தன் அழகால் வென்ற அழகிய மகளிர் தோள்களும், பருத்து அழகுடன் விளங்கும் சீவகன் தோள்களும் கலந்து இணைவதால், அம்மகளிருடைய வெப்பமிகு மென்முலைகள் இவனணிந்த குளிர்ந்த மலர் மாலையுடன் மோத, பொற்பூண்கள் சிந்த, இன்பம் நுகர்ந்து சீவகன் நீண்ட இருட்பொழுதைக் கழித்தான்.

**கனைகதிர்க் கடவுள்கண் விழித்த காலையே**
**நனைமலர்த் தாமரை நக்க வண்கையாற்**
**புனைகதிர்த் திருமுகங் கழுவிப் பூமழை**
**முனைவனுக் கிறைஞ்சினான் முருக வேளனான் 1943**

[நனை-தேன்; நக்க-இகழ்ந்த.]

**நாட்கடன் கழித்தபின் நாம வேலினான்**
**வாட்கடி எழில்நகர் வண்மை காணிய**
**தோட்பொலி மணிவளைத் தொய்யின் மாதரார்**
**வேட்பதோர் வடிவொடு விரைவி னெய்தினான் 1944**

[நாட்கடன்-விடியற்காலத்துச் செய்யும் கடன்கள்; வேட்பது-விரும்புவது.]

**அலத்தகக் கொழுங்களி இழுக்கி யஞ்சொலார்**
**புலத்தலிற் களைந்தபூ ணிடறிப் பொன்னிதழ்**
**நிலத்துகு மாலைகால் தொடர்ந்து நீணகர்**
**செலக்குறை படாததோர் செல்வ மிக்கதே 1945**

[புலத்தலின்-தம் கணவரோடு ஊடுதலால்; கால் தொடர்ந்து-ஒருசேரக் கட்டுதலாலே; செல-போக; அலத்தகம்-செம்பஞ்சு; கொழுங்களி-குழம்பு.]

மிக்க கதிருடைய கடவுளாகிய சூரியன் கண்விழித்து எழ, உலகம் உயிர்ப்புக் கொண்டவுடன், தேனுடைய தாமரை மலரைப் பழிக்கின்ற அழகிய கையினால், அழகு பொருந்திய ஒளிவிளங்கும் தன் முகத்தைக் கழுவி, பூ மலர்களை அருகக் கடவுளுக்குச் சொரிந்து வணங்கினான் முருகவேள் போன்ற சீவகன். காலைக் கடன்கள் முடித்த பிறகு சீவகன் மிக்க ஒளியும் பேரழகும் உடைய, இராசமா புரத்தின் வளங்காணும் பொருட்டு, தோளில் அழகுற விளங்கும் மணிகள் இழைத்த வளையல்களையும், மார்பில் பூசிய தொய்யில் கொடியும் உடைய மகளிர் அடைய விரும்பும் அழகிய வடிவத்துடன் விரைந்து வெளியே சென்றான். சென்ற சீவகனின் பாதம், செம்பஞ்சுக் குழம்பாகிய சேற்றிலே வழுக்கவும் அழகிய சொல்லுடைய மகளிர் ஊடலினால் களைந்தெறிந்த பூண்களில் இடறவும் அழகிய இதழுடைய நிலத்திலே சிந்திய நறுமலர் மாலைகள் பின்தொடரவும் செல்லத் தொலையாத தூரம் உடையதாய், செல்வச் சிறப்பில் உயர்ந்து விளங்கியது அந்நகரம்.

## வேறு

**கத்தி கைக்கழு நீர்கமழ் கோதையர்**
**பத்தி யிற்படு சாந்தணி வெம்முலை**
**சித்தி யிற்படர் சிந்தையி னாரையும்**
**இத்தி சைப்படர் வித்திடு நீரவே** 1946

[கத்திகை-குருக்கத்தி; கழுநீர்-செங்கழுநீர்; பத்தி-வரிசை; பத்தியிற்படு-பக்திசெய்யும்.]

**வஞ்சி வாட்டிய வாண்மி னுசுப்பினார்**
**பஞ்சி யூட்டிய பாடகச் சீறடி**

**குஞ்சி சூட்டிய மைந்தர்கு ழாமலால்**
**இஞ்சி வட்டமி டம்பிறி தில்லையே 1947**

[வஞ்சி வாட்டிய-வஞ்சிக்கொடியைக் கெடுத்த; பஞ்சி-செம்பஞ்சுக் குழம்பு; பாடகம்-மகளிர் காலிலணியும் ஒருவகையாபரணம்; குஞ்சி-தலை; இஞ்சி-மதில்.]

**மின்னி னீள்கடம் பின்னெடு வேள்கொலோ**
**மன்னு மைங்கணை வார்சிலை மைந்தனோ**
**என்ன னோஅறி யோமுரை யீரெனாப்**
**பொன்னங் கொம்பனை யார்புலம் பெய்தினார் 1948**

[என்னனோ-யார்தான்; ஓ: அசை; புலம்பு-வருத்தம்.]

**விண்ண கத்திளை யானன்ன மெய்ப்பொறி**
**அண்ண லைக்கழி மீன்கவர் புள்ளென**
**வண்ண வார்குழ லேழையர் வாள்நெடுங்**
**கண்ணெ லாங்கவர்ந் துண்டிடு கின்றவே 1949**

[கழி-உப்பங்கழி; கவர்ந்து-விரும்பி.]

கத்திகையாகத் தொடுத்த செழுங்கழுநீர் மலர்மாலை அணிந்த மங்கையருடைய, வரிசையுறச் சாந்தணிந்த, இன்பூட்டும் முலைகள், 'சத்'தினை அறிந்து 'சித்'தினை அடையச் செல்லும் மனநிலை உடைய துறவிகளையும் இல்லறத்தில் ஈடுபடச் செய்யும் தன்மையுடையனவாகும். இத்தகைய, வஞ்சிக்கொடியைப் பழிக்கின்ற ஒளிமின் போலும் மெல்லிய இடை உடைய, மங்கையரின் செம் பஞ்சுக் குழம்பு தோய்ந்த பாடகம் அணிந்த அழகிய சிற்றடிகளைத் தம் தலையிலே தாங்கிய ஆண்களின் கூட்டமே அல்லாது, வட்டமாகிய அம் மதிற்புறத்தில் வேறு கூட்டம் இல்லாதிருக்க, அங்கே தோன்றிய சீவகனைக் கண்டு, 'ஒளி வீசும் மேனி வனப்புடைய இவன் நீண்ட கடம்பமாலை அணிந்த முருகக் கடவுளோ? இல்லை இவன் ஐந்து மலர்ப் பாணங்களும் பெரிய கரும்பு வில்லும் உடைய மன்மதனோ? யாரோ தெரிய

வில்லையே! தெரிந்தால் கூறுங்களேன் என்று பொற்கொடி போன்ற மகளிர் வருந்தி நின்றனர். இவ்வாறு வானாளும் முருகவேளைப் போல, உத்தம இலக்கணங்கள் பொருந்திய சீவகனை அங்கே கண்ட அழகிய நீண்ட கருங் கூந்தலுடைய மங்கையரின் நீண்ட வாள்போலும் கண்கள் எல்லாம், உப்பங்கழியில் உள்ள மீனைக் கொத்திக் கொள்ளக் காத்திருக்கும் மீன் கொத்திப் பறவையைப் போல, அவன் மேல் மொய்த்து அவன் அழகை அள்ளிப் பருகலாயின.

வேறு

**புலாத்தலைத் திகழும் வைவேற் பூங்கழற் காலி னாளை**
**நிலாத்தலைத் திகழும் பைம்பூ ணிழன்மணி வடத்தோ டேந்திக்**
**குலாய்த்தலைக் கிடந்து மின்னுங் குவிமுலை பாய வெய்தாய்க்**
**கலாய்த்தொலைப் பருகு வார்போற் கன்னியர் துவன்றி னாரே 1950**

[புலா-மாமிச நாற்றம்; குலாய்-விளங்கி; வெய்தாய்-விரைவாக; கலாய்த்து - கோபித்து; ஓலை: ஒல்லை - விரைய; துவன்றினார்-நெருங்கினார்.]

**வேனெடுங் கண்க ளம்பா விற்படை சாற்றி யெங்கும்**
**தேனெடுங் கோதை நல்லார் மைந்தனைத் தெருவி லெய்ய**
**மானெடு மழைக்க ணோக்கி வானவர் மகளு மொப்பாள்**
**பானெடுந் தீஞ்சொ லாளோர் பாவைபந் தாடு கின்றாள்**

[சாற்றி-அமைத்து; நெடுமை-பெருமை.]

வேறு

**குழன்ம லிந்த கோதை மாலை பொங்க வெங்க திர்ம்முலை**
**நிழன்ம லிந்த நேர்வ டந்நி ழற்ப டப்பு டைத்தர**
**எழின்ம ணிக்கு ழைவில் வீச வின்பொ னோலை மின்செய**
**அழன்ம ணிக்க லாப மஞ்சி லம்பொ டார்ப்ப வாடுமே 1952**

[நிழல் மலிந்த - ஒளிநிறைந்த; புடைத்தர - அடித் தலைச் செய்ய; வில்-ஒளி; மின்செய-ஒளிவிட; கலாபம்-ஒருவகை மேகலை.]

நிண வாடை வீசும் நுனியுடைய வேலையும், பூங்கழல் அணிந்த கால்களையும் உடைய சீவகனை நிலவினைப் போல ஒளி வீசும் பசும்பொற் பூணும் முத்துவடமும் கிடந்து புரளும் முலைகள் பாய ஊடலால் கோபித்த மங்கையர்கள், கோபம் நீங்கிப் பின்கூட விரைந்து வருவதைப் போலக் கன்னியர் சுற்றிச் சூழ்ந்து கொண்டனர். வேல் போலும் தங்கள் கண்கள் அம்பாக, விற்படை அமைத்து, தேனொழுகும் மலர்மாலை அணிந்த அத்தகைய கன்னிப் பெண்கள் தெருவில் எங்கும் நின்று கொண்டு அவன்மேல் காதல் கணை தொடுத்தனர். மான்போன்ற நீண்ட, மருளும் குளிர்ந்த நோக்குடைய கண்களும் தேவமகளைப் போன்ற அழகும் பால் போலும் இனிய சொல்லும் உடைய விமலை என்னும் பாவை ஒருத்தி அங்கொருபால் பந்தாடிக் கொண டிருந்தாள். அவள் தன் கூந்தலில் அணிந்த மாலையும் மார்பிலணிந்த ஆரமும் சிதறிப் பரவவும் இன்பூட்டும் பருத்த மார்பின் மேல் அணிந்த அழகிய முத்து வடங் களின் ஒளி எங்கும் சிந்திச் சிதறவும் காதிலணிந்த மாணிக்கக் குண்டலம் ஒளிவீசவும் பொன்னோலை மின்னவும் சிவந்த நெருப்புப் போலும் நிறமுடைய மணிக் கற்கள் பதித்த மேகலையோடு சிலம்பும் சேர்ந்து இனிய ஒலி எழுப்பவும் அழகுறப் பந்தாடிக் கொண்டிருந்தாள்.

**அங்கை யந்த லத்த கத்த ஐந்து பந்த மர்ந்தவை**
**மங்கை யாட மாலை சூழும் வண்டு போல வந்துடன்**
**பொங்கி மீதெ ழுந்து போய்ப்பி றழ்ந்து பாய்த லின்றியே**
**செங்க யற்கண் புருவந் தம்மு ளுருவஞ் செய்யத் திரியுமே**

[தலத்தகத்த - இடத்தினுள்ளே யுள்ளனவாக; பொங்கி-மிக்கு; உருவம்-அழகு.]

**மாலை யுட்க ரந்த பந்து வந்து கைத்த லத்தவாம்**
**ஏல நாறி ருங்கு ழற்பு றத்த வாண்மு கத்தவாம்**
**நூலி னேர்நு சுப்பு நோவ வுச்சி மாலை யுள்ளவாம்**
**மேலெ ழுந்த மீநி லத்த விரல கைய வாகுமே** **1954**

*[கரந்த-மறைந்த; ஏலம்-மயிர்ச்சாந்து; நூலின் நேர்-நூலை ஒத்த; நுசுப்பு-இடை.]*

**கொண்டு நீங்கல் கோதை வேய்தல் குங்கு மம்ம ணிந்துராய்**
**எண்டி சையும் ஏணி ஏற்றி இலங்க நிற்றல் பத்தியின்**
**மண்டி லம்வ ரப்பு டைத்தன் மயிலிற் பொங்கி யின்னணம்**
**வண்டுந் தேனும் பாட மாதர் பந்து மைந்துற் றாடுமே.**

*[உராய்-பரந்து; ஏணி-எல்லை; பத்தியின்-வரிசைப் படி; மண்டிலம்-வட்டம்; புடைத்தல்-அடித்தல்; மைந்துற்று-வலியுற்று.]*

தன்னுடைய அழகிய கைகளிலே ஐந்து பந்துகளைக் கொண்டு விமலை ஆடிக் கொண்டிருக்கும்போது மலர் மாலையை மொய்க்கின்ற வண்டுகளைப் போலவும் மேலே எழும்பியும் முறை தவறிக் கீழே விழுதலின்றியும் ஓடுகின்ற பந்தோடு கூடச்சென்று மீளும் அவளுடைய அழகிய புருவமும் மீன்போலும் கண்களும் அவள் அழகுக்கு அழகு செய்யும். ஆடும் போது மாலைகளுக்குள் சென்று மறைந்த பந்து கைகளுக்கு வந்து சேரும். வாசச் சாந்து பூச மணம்வீசும் கருங்கூந்தலுக்குப் பின்புறம் சென்று மறைந்த பந்து, ஒளிவீசும் முகத்தின் முன்னே வரும். நூலைப் போலும் மெல்லிய இடை வருந்தத் தலைக்கு மேலே சென்ற பந்து மார்பிலணிந்த மாலைக்கு நேரே வந்து சேரும். இன்னும் தலை மாலைக்கு மேலே உயரப் போன பந்து விரைந்து வந்து கையிடத்தும் விரல் களுக்கிடையிலும் சேரும். இவ்விதமாக எட்டுத்திசையும் பந்தைச் செலுத்தியும், இடையில் மாலை தொடுத்தும், குங்குமம் அணிந்தும் படிப் படியாக உயரும்படிப் பந்தினை அடித்தும், தன்னைச் சுற்றி வட்டமாக வரும்படி

பந்தினை எறிந்தும் மயில்போலப் பொங்கியும், வண்டும் தும்பியும் தேனுண்ணாமல் நின்று பாட விமலை வலிமை யோடு பந்தாடினாள்.

பந்து மைந்துற் றாடு வாள்ப ணைம்மு லையிற் குங்குமம்
சுந்த ரப்பொ டிதெ ளித்த செம்பொற் சுண்ணம் வாணுதல்
தந்து சுட்டி யிட்ட சாந்தம் வேரின் வார்ந்தி டைம்முலை
இந்திரதி ருவில் நெக்கு ருகி யென்ன வீழ்ந்தவே 1956

[சுந்தரப் பொடி - சிந்துரப் பொடி; தெளித்த - ஓட வைத்த; சாந்தம் - சுட்டியாக இடப்பட்ட சந்தனம்; வேரின் வார்ந்து-வேர்வையாற்கரைந் தொழுகி.]

நன்ம ணிச்சி லம்பி னோடு கிண்கி ணிந்ந கந்நகும்
மின்ம லர்ந்த முல்லை மாலை நக்கி மிக்கி றந்தெழுந்து
பொன்ம லர்ந்த கோதை பந்து பொங்கி யொன்று போந்துபாய்ந்து
மின்ம லர்ந்த வேலி னான்முன் வீதி புக்கு வீழ்ந்ததே 1957

[நக-விளங்க; நக்கி-தீண்டுதலால்; இறந்தெழுந்து-தன் எல்லையைக் கடந்து மேலே போய்; மின் மலர்ந்த-ஒளி பரந்த.]

வீழ்ந்த பந்தின் மேல்வி ரைந்து மின்னி னுண்ணு சுப்பினாள்
சூழ்ந்த காசு தோன்ற வந்து கின்னெ கிழ்ந்து பூங்குழல்
தாழ்ந்து கோதை பொங்கி வீழ்ந்துவெம்மு லைகள் தைவரப்
போழ்ந்த கன்ற கண்ணி வந்து பூங்கொ டியி னோக்கினாள் 1958

[போழ்ந்து-தன்னைப் பார்ப்பவருடைய உயிரைப் பிளந்து; சூழ்ந்த காசு-அரையிற் சுற்றியுடுத்த மேகலை; தைவர-தடவ.]

இவ்விதம் வலிமையுறப் பந்தாடுவதனால் விமலை யினுடைய, பருத்த மார்பில் பூசிய குங்குமமும், சிந்தூரப் பொடியும், குழைத்துத் தடவிய பொற் சுண்ணக் கலவையும், அழகிய நெற்றியிலே சுட்டி

யாக இட்ட சந்தனமும் வியர்வையினால் கரைந்தொழுகி, மார்பிடை இந்திரத் திருவில் போல, நெகிழ்ந்து வழிந்து ஓடின. அழகிய மாணிக்கச் சிலம்பும் கிண்கிணிச் சதங்கையும் ஒளிவீச, சிரிக்கின்ற மின்னல் கொடிபோலப் பொன்நகை அணிந்த விமலை ஆடும் பந்துகளில் ஒன்று, மலர்ந்த முல்லை மாலையில் பட்டு, விரைந்து மேலெழும்பிச் சென்று தெருவில் புகுந்து, ஆங்கிருந்த ஒளி விளங்கும் வேலேந்திய சீவகன் முன்னே சென்றுவிழுந்தது. அப்படி வீழ்ந்த பந்தைத் தேடி விமலை விரைந்து சென்றாள். மின் போலும் இடையுடைய விமலை விரைந்து வந்ததால் நெகிழ்ந்துபோன ஆடையின் மேலணிந்த மேகலையின் காசுகள் வெளித் தோன்றவும், அழகிய கூந்தல் சரிந்து அதிலணிந்த மாலை புரண்டு மார்பைத் தொட்டு நிற்கவும் ஓடி வந்த, கண்டவர் உயிரைப் பிளக்கின்ற அழகிய கண்களுடைய விமலை, பூங்கொடி போல் நின்று அப்பந்தை நோக்கினாள்.

## வேறு

**மந்தார மாலை மலர்வேய்ந்து மகிழ்ந்து தீந்தேன்**
**கந்தாரஞ் செய்து களிவண்டு முரன்று பாடப்**
**பந்தார்வஞ் செய்து குவளைக்கண் பரப்பி நின்றாள்**
**செந்தா மரைமேற் றிருவின்னுரு வெய்தி நின்றாள் 1959**

*[வேய்ந்து-மொய்த்து; கந்தாரம்-காந்தாரம் என்னும் ஒருவகைப் பண்; முரன்று-ஒலிசெய்து.]*

**நீர்தங்கு திங்கள் மணிநீணிலந் தன்னுள் ஓங்கிச்**
**சீர்தங்கு கங்கைத் திருநீர்த்தண் டுவலை மாந்திக்**
**கார்தங்கி நின்ற கொடிகாளையைக் காண்ட லோடு**
**பீர்தங்கிப் பெய்யா மலரிற்பிறி தாயி னாளே 1960**

*[ஓங்கி - வளர்ந்து; துவலை-துளி; மாந்தி-உண்டு; பெய்யாமலர்-பழம்பூ; பீர்தங்கி-பசலைபூத்து.]*

**பெண்பா லவர்கட் கணியாய்ப்பிரி யாத நாணும்**
**திண்பா னிறையுந் திருமாமையுஞ் சேர்ந்த சாயல்**

**கண்பாற் கவினும் வளையுங்கவர்ந் திட்ட கள்வன்**
**மண்பா லிழிந்த மலரைங்கணை மைந்த னென்றாள் 1961**

[அணி-ஆபரணம்; பிரியாத-நீங்காத; திருமாமை-அழகிய நிறம்; மண்பால் இழிந்த - பூமியில் வந்திறங்கிய.]

தன் மேல் அணிந்திருக்கும் மந்தார மாலையின் மலரை மொய்த்துத் தேனுண்டு மகிழ்ந்திருக்கிற வண்டுகள் காந்தாரப் பண்பாடிக் களித்திருக்க, ஆசையோடு பந்தைத் தேடி வந்த விமலை, குவளை மலர் போலும் தன் கண்களை அகல விரித்து நாற்றிசையும் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தாள். அவளின் தோற்றம் அப்போது செந்தாமரை மலரில் வாழும் திருமகளைப் போன்றிருந்தது. நீர் தோய்ந்த சந்திரகாந்தக் கல்லாகிய நிலத்திலே வளர்ந்து பெருமைக்குரிய கங்கையாற்றின் குளிர்ந்த நீரை உண்டு, தழைத்த பசுங்கொடி போன்ற விமலை பந்தைத் தேடி வந்த இடத்தில் சீவகனைக் கண்டவுடன் பசலை பூத்து, வாடிய பழம் பூப் போலாயினாள். பெண்மைக்கு அழகு தரும் நீங்காத நாணமும், வலிமை தரும் மனத் திட்பமும், அழகிய நிறமும், எழில் மிக்க தோற்றமும் ஒருங்கே கூடிய விமலை, 'தன் கண் பார்வை ஒன்றினாலேயே என்னுடைய அழகையும், கைவளைகளையுங் கவர்ந்து கொண்ட கள்வனிவன், மண் மேல் வந்து தோன்றிய மலரம்புகளுடைய மன்மதனோ' என்று நினைத்தாள். (ஆடவரைக் கண்டால் காதல் மகளிர்க்கு உடல் மெலிதலும், கைவளை கழலுதலும் இயல்பாதலால் அழகையும், கை வளைகளையுங் கவர்ந்து கொண்டான் என்றார்.)

**என்றாள் நினைந்தா ளிதுபோலுமிவ் வேட்கை வண்ணம்**
**சென்றே படினுஞ் சிறந்தார்க்கு முரைக்க லாவது**
**அன்றா யரிதா யகத்தேசுட் டுருக்கும் வெந்தீ**
**ஒன்றே யுலகத் துறுநோய்மருந் தில்ல தென்றாள் 1962**

[வேட்கை-காதல்; சென்றேபடினும்-இறந்துபட்டா லும்; அகத்தே-மனத்துள்ளே; தீ-காமத்தீ.]

**நிறையாது மில்லை நெருப்பிற்சுடுங் காம முண்டேல்**
**குறையா நிறையி னொருகுன்றியுங் காம மில்லை**
**பறையா யறையும் பசப்பென்று பகர்ந்து வாடி**
**அறைவாய்க் கடல்போ லகன்காம மலைப்ப**
**நின்றாள் 1963**

[யாதும்-சிறிதும்; ஒருகுன்றியும்-ஒரு குன்றிமணியின் அளவும்.]

**நெஞ்சங் கலங்கி நிறையாற்றுப் படுத்து நின்றாள்**
**அஞ்செங் கழுநீ ரலர்ந்தம்மதி வாண்மு கத்தே**
**வஞ்சம் வழங்கா தவன்கண்களி னோக்க மாதோ**
**தஞ்சம் வழங்கித் தலைக்கொண்டது காம வெந்தீ 1964**

[வஞ்சம் வழங்காதவன்-பொய் கூறாதவனான சீவகன்; தலைக் கொண்டது-அதிகரித்தது.]

அப்படி நினைத்தவள் காதல் வேட்கையின் தன்மையே இப்படித்தான் போலும்; பெற்றவர்க்கும் கூற முடியாததாய், பொறுத்தற்கும் அரிதாய் உள்ளிருந்தே உயிரை வாட்டுகின்ற தீ நெருப்பாய் இருக்கிறது. இந்த நோய் ஒன்றுதான் உலகிலேயே மருந்தில்லாத நோயாக இருக்கிறது. நிறையென்பதே பெண்களுக்கு ஒரு சிறிதும் இல்லாது போய்விடுகிறது, காமம் என்னும் இப்பெரு நெருப்புப் பற்றிவிட்டால். இக் காமநோய் பற்றவில்லை யென்றால் பெண்கள் மனநிறையில் ஒரு சிறிதளவும் குறைவதில்லை. இப்படித் தோன்றிய இந்தக் காம நோயை மறைத்தாலோ அது பசலையாய் மேல் படர்ந்து அந்நோய்க் குறியைப் பறையடித்துப் பிறர்க்கு வெளிப் படுத்திவிடுகிறது என்று நினைத்தபடி ஒலியெழுப்பும் கடல் போலப் பெருகிய காமநோய் வருத்த விமலை நின்று கொண்டிருந்தாள். இப்படி உள்ளம் உருகி நிறை அழிய நின்ற விமலையினுடைய, விழிகளாகிய செழுங்கழு

நீர்ப் பூக்கள் மலர்ந்திருக்கும் அழகிய மதிபோலும் முகத்தை, பொய் பேசியறியாத சீவகன் தன் கண்களால் நோக்கினான். நோக்கின அளவிலேயே விமலையைப் பற்றியிருந்த காமநோய் சீவகனைத் தஞ்சம் என்றடைந்து அவனையும் பற்றிக்கொண்டது.

**பூவுண்ட கண்ணாள் புருவச்சிலை கோலி யெய்ய**
**ஏவுண்ட நெஞ்சிற் கிடுபுண்மருந் தென்கொ லென்னா**
**மாவுண்ட நோக்கின் மடவாளை மறித்து நோக்கிக்**
**கோவுண்ட வேலான் குழைந்தாற்றல னாயி னானே 1965**

*[கோலி-வளைத்து; எய்ய-எய்தலால்; என்னா-என்று எண்ணி; மா-மாவடு; மறித்தும்-மீட்டும்; கோ உண்ட-பகையரசர்களின் உயிரையுண்ட; குழைந்து-வருந்தி.]*

**காமக் கடுநோய்க் கனல்சூழ்ந்துடம் பென்னு மற்றிவ்**
**வீமத்தி னோடு முடனேசுட வேக லாற்றான்**
**தூமத்தி னார்ந்த துகிலேந்திய வல்குல் தாதை**
**பூமொய்த் திருந்த கடைமேற்புலம் புற்றி ருந்தான் 1966**

*[ஈமம்-விறகு; தூமத்தின் ஆர்ந்த துகில்-அகிற்புகையால் ஊட்டப்பெற்ற ஆடை; பூ மொய்த்திருந்த-பூமாலைகள் அணியப் பெற்றிருந்த; புலம்புற்று-வருத்தம் அடைந்து.]*

## வேறு

**நாவிநோய் செய்த நறுங்குழலாள் நீலக்**
**காவிநோய் செய்த கருங்கயற்கட் பூங்கொடியென்**
**ஆவிநோய் செய்த வணங்கென் றறியாதேன்**
**மேவிநோய் தீர வினாத்தருவா ரில்லையே 1967**

*[நாவி-கத்தூரி; நீலக்காவி - நீலோற்பல மலர்; அணங்கு-வருத்தும் தெய்வம்; வினாத்தருவார்-வினாவுவார்.]*

குவளைப் பூப்போலும் கண்ணுடைய விமலை, தன் புருவமாகிய வில்லை வளைத்துக் கண்ணாகிய அம்பைச்

  

சீவகன் மேல் எய்யவும், அந்த அம்பு நெஞ்சிலே வந்து தைக்க உண்டான புண்ணுக்கு மருந்து எதுவோ என்று திகைத்து, மாவடுப் போலும் விழியுடைய மடமங்கை விமலையினுடைய அழகு முகத்தையே மீண்டும் பார்த்து, அதில் தெரிந்த காதல் குறிப்பையே தன் நோய்க்கு மருந்தாகக் கொண்டு மகிழலானான். காமமென்னும் பெருநெருப்புத் தீ, உடலென்னும் விறகிலே பற்றி உயிரை வாட்டி வருத்த, அவளை இழந்து செல்ல விரும்பாத வனாய், அகிற்புகை வாசந் தோய்ந்த ஆடையணிந்த அல்குலுடைய விமலையின் தந்தையாகிய சாகரதத் தனின், மலர்மாலைகள் மண்டிக் கிடக்கும் கடையின் முன் சீவகன் வருத்தமுற வந்து நின்றான். 'புனுகினைப் பழிக்கும் வாச நறுங் கூந்தலுடையவளை, நீலோற்பல மலரைப் பழிக்கின்ற நீண்ட கருங்கண்ணுடைய பூங்கொடி போன்றவளை, பெண்மகளை என்னுயிரை வருத்த வந்த தெய்வ மங்கை என நினைத்து அறிவு கலங்க நின்ற என்னை நெருங்கி வந்து என்நோய் தீர என்னை என்னென்று வினவுவார் இல்லையே' என்று சீவகன் வருந்தினான்.

**தெண்ணீர்ப் பனிக்கயத்து மட்டவிழ்ந்த தேங்குவளைக்**
**கண்ணீர்மை காட்டிக் கடல்போ லகன்றவென்**
**உண்ணீர்மை யெல்லா மொருநோக்கி னிற்கவர்ந்த**
**பெண்ணீர்மை மேனாட் பிறந்து மறியுமோ** **1968**

[பனி-குளிர்ச்சி; கயம்-குளம்; மட்டு-தேன்; நீர்மை-தன்மை; பெண்ணீர்மை-பெண் தன்மை.]

**கருங்குழலுஞ் செவ்வாயுங் கண்மலருங் காதும்**
**அரும்பொழுகு பூண்முலையு மாருயிர்க்கே கூற்றம்**
**விருந்தினராய் வந்தாரை வெற்றுடலா நோக்கும்**
**பெருந்திருவி யார்மகள்கொல் பேரியாதாங் கொல்லோ**

[அரும்பு ஒழுகு-அரும்பின் தன்மை ஒழுகுகின்ற; திருவி-செல்வி; பேரியாது - பெயர்யாது; ஆம், கொல்: அசை.]

**வாருடுத்த வெம்முலைய வண்டார்பூங் கோதையைப்**
**பேர்கொடுத்தார் பெண்ணென்றார் கூற்றமே**
**யென்றிட்டால்**
**தாருடுத்த நீண்மார்பர் தம்முயிர்தாம் வேண்டுபவேல்**
**நீருடுத்த விந்நகரை நீத்திட் டொழியாரோ 1970**

[வார் உடுத்த-கச்சுச் சூழ்ந்த; நீத்திட்டு-கைவிட்டு; ஒழியாரோ-நீங்காரோ.]

'தெளிந்த நீருடைய குளிர்ச்சி பொருந்திய குளத்திலே தேன் வழியப் பூத்திருக்கும் குவளை மலர்போலும் கண்களைக் கொண்டு அதன் ஒரு பார்வையினாலேயே, கடல் போல் விரிந்து பரந்த என் உள்ளத் துணர்வை யெல்லாம் கவர்ந்து கொண்ட இப்பெண்ணைப்போல் முன் எவரும் பிறந்ததுண்டோ? இங்கு என்னை வருத்தவென்றே இவள் வந்து பிறந்திருக்கின்றாள்போலும்! கரிய கூந்தலும், செக்கச் சிவந்த வாயும், மலர்போலும் கண்ணும் காதும், அரும்பினைப் போலும் பொற் பூண் அணிந்த மார்பும் உடைய, என்னுடைய சிறந்த உயிருக்கு எமனாய் வந்திருக்கிற, புதிதாய்க் காண்பவரைக்கொன்று அவரை வெற்றுடலாய் வீழ்த்துகின்ற பார்வையும் உடைய, இப் பெருமகள் யார் பெற்ற செல்வமோ? இவள் பெயர்தான் யாதோ? கச்சணிந்த பெருமுலையும், வண்டுகள் வந்து மொய்க்கும் மாலையும் உடைய இவளுக்குப் பெயரிட்ட வர்கள் பெண் என்று சொல்லிப் பெயர் வைத்திருக் கின்றனர். அப்படியெல்லாம், கண்டவர் உயிரைக் கொல்லுகின்ற இவளுக்கு எமன் என்றே பெயர் வைத் திருந்தால், இந்நகரில் வாழும், மாலையணிந்த பரந்த மார்புடைய ஆடவர்கள், தம் உயிரின் மேல் ஆசை வைத் திருந்தால் இந்நேரம் நீர் சூழ்ந்த இந்நகரை விட்டுப் போயிருக்க மாட்டார்களா!' என்று சீவகன் சொன்னான்.

**பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்**
**திங்கண் முகத்திலங்கச் செவ்வா யெயிறிலங்கக்**

**கொங்குண் குழல்தாழக் கோட்டெருத்தஞ் செய்தநோக்**
**கெங்கெங்கே நோக்கினு மங்கங்கே தோன்றுமே 1971**

[இலங்க-விளங்க; கொங்கு உண்-வாசனை ஊட்டப் பெற்ற; கோட்டு-வளைத்த; எருத்தம்-கழுத்து.]

**வாளார் மதிமுகத்த வாளோ வடுப்பிளவோ**
**தாளார் கழுநீரோ நீலமோ தாமரையோ**
**நீள்வேலோ வம்போ கயலோ நெடுங்கண்ணோ**
**கோளார்ந்த கூற்றமோ கொல்வான் தொடங்கினவே 1972**

[வாளார்-ஒளிபொருந்திய; தாள்-தண்டு; நீலம்-நீலோற்பல மலர்; கோளார்ந்த-கொல்லவல்ல.]

## வேறு

**என்றாங்கொன் மாதர் நலமெய்துவ தென்று சிந்தித்து**
**ஒன்றார்க் கடந்தான் புலம்புட்கொண் டிருத்த லோடும்**
**அன்றே யமைந்த பசும்பொன்னட ராறு கோடி**
**குன்றாமல் விற்றான் குளிர்சாகர தத்த னென்பான் 1973**

[ஒன்றார்க்கடந்தான் - பகைவரை வென்றான்; புலம்பு-வருத்தம்; அடர்பொன்-தகட்டுப்பொன்.]

'பச்சை மரகதக் கற்கள் பதித்த மகர குண்டலமும், புதியதோடும், நிலவைப் போலும் அழகிய முகத்திலே திகழ, சிவந்த வாயில் முத்துப் பற்கள் ஒளிவீசி முறுவலிக்க, வாசமலர்க் கூந்தல் தாழ, அவள் கழுத்தை வளைத்துப் பார்த்த அந்த அன்புப் பார்வை, நோக்கும் இடமெல்லாம் நீக்கமற நிறைந்து நிற்கிறதே! இவளுடைய மதி போலும் அழகிய முகத்தில் இருப்பவை கொலை வாளோ இல்லை, கீறிப் பிளந்த மாவடுவோ? அல்லது அவை குளிர்ச்சி பொருந்திய செழுங்கழுநீர்ப் பூவோ, நீலோற்பலமோ செந்தாமரையோ? இல்லை நீண்ட வேலோ, வில்விடும் கணையோ, மீனோ? இல்லை அது நீண்ட கண் தானோ அல்லது கொல்ல வந்த கூற்றமோ என்னைக்

கொல்லத் தொடங்கிவிட்டதே! இந்த அழகிய மங்கையை அடைந்து இன்பம் பெறும் நாள் எந்நாள்' என்றெண்ணிய படி பகை பல வென்ற சீவகன் வருந்தியபடியே கடைமுன் நின்றிருந்தான். அப்போதே சாகரதத்தன் மாற்றுருக்கிய தகட்டுப்பொன் ஆறு கோடிக்குக் குறையாமல் விற்றான்.

**திருமல்க வந்த திருவேயெனச் சேர்ந்து நாய்கன்**
**செருமல்கு வேலாய்க் கிடமாலிது வென்று செப்ப**
**வரிமல்கி வண்டுண் டறைமாமலர்க் கண்ணி மைந்தன்**
**எரிமல்கு செம்பொ னிலமாமனொ டேறி னானே 1974**

[செரு-போர்; வரி-ஒருவகைப்பண், வரிப்பாடல்: எரிமல்கு-ஒளி நிறைந்த.]

**நம்பன் சிறிதே யிடைதந்திது கேட்க நாளும்**
**அம்பொன் னகரு ளமைந்தேன்மற் றெனக்க மைந்தாள்**
**கம்பம் மிலாதாள் கமலைக்கு விமலை யென்பாள்**
**செம்பொன் வியக்கு நிறத்தாள்திரு வன்ன நீராள் 1975**

[கம்பமிலாதாள்-கற்பில் அசைவில்லாதவள்; கமலை-சாகரதத்தனுடைய மனைவி, விமலையின் தாய்.]

**பூம்பாவை வந்து பிறந்தாளப் பிறந்த போழ்தே**
**ஆம்பால வெல்லா மறிவாரன் றெழுதி யிட்டார்**
**தூம்பியாது மில்லாக் குளம்போன்றதென் றோமில் பண்டம்**
**கூம்பாத செல்வக் கொடியேயிது கேண்மோ வென்றான்**

[ஆம் பாலவெல்லாம் அறிவார்-மேல் நடக்கும் காரியங்களையெல்லாம் அறிபவராகிய சோதிடர்; தோமில் பண்டம்-குற்றமற்ற பொருள்; தூம்பு யாதுமில்லாக்குளம்-மடை சிறிதுமில்லாத குளம்; கேண்மோ-மேலும் கேட்பாயாக.]

தன் கடையில் தேங்கிக் கிடந்த சரக்கெல்லாம், இவ் விதமாக விற்றுமுதலாகக் காரணமாக அங்கே வந்து நின்ற சீவகனை நெருங்கிச் சாகரதத்தன், 'என்செல்வம் பெருக வந்த செல்வமே, போரில் பழகிய புகழ் வேலேந்தியவனே,

இந்த இல்லம் இனி உன் இருப்பிடம்' என்று கூறினான். தேனினை உண்டு வரிப்பாடல் இசைக்கின்ற வண்டுகள் மொய்க்கும் மலர்க்கண்ணி அணிந்த சீவகன், ஒளி விளங்கும் செம்பொன் மாளிகையை மாமனோடு சென்றடைந் தான். வீட்டினை அடைந்ததும், சாகரதத்தன் சீவகனிடம் சொல்லுவான்: 'ஆண்களிற் சிறந்த அன்பனே, நான் கூறப் போவதைச் சற்றே செவிமடுத்துக் கேட்பாயாக! இவ் வழகிய இராசமாபுரத்தில் இருந்து வாழுகின்ற எனக்கும் வாழ்க்கைத் துணைவியாக அமைந்த, மாசற்ற கற்புடைய வளாகிய கமலைக்கும், பொன்னைப் பழிக்கும் நிறமும், பூமகளைப் போன்ற திருவும் உடைய விமலை என்னும் பூங்கொடி பெண்ணாக வந்து பிறந்தாள். அவள் பிறந்த அன்றே பின்னால் நடைபெறக்கூடிய அனைத்தையும் கண்டறிந்து கணிகள் கணித்து வைத்தனர். வெளிச் செல்ல வழியில்லாது தேங்கிக் கிடக்கும் குளத்து நீர்போல் திரண்டு கிடந்த என் சிறந்த செல்வத்தைப் போலவே, இப்பெண் பிறப்பும் மேலும் என்னிடம் செல்வம் வந்து சேர்வதற்கான அறிகுறியே' என்று கூறிய அக்கணி மேலும் சொன்னான்.

**மங்கைக் குரியான் கடையேறும்வந் தேற லோடும்**
**வங்கந் நிதிய முடன்வீழுமற் றன்றி வீழா**
**தெங்குந் தனக்கு நிகரில்லவ னேற்ற மார்பம்**
**நங்கைக் கியன்ற நறும்பூவணைப் பள்ளி யென்றான் 1977**

[வங்கம்- மரக்கலம்; நிதி-பொருள்.]

**ஏழாண்டின் மேலு மிரண்டாண்டிரண் டெய்தி நின்றாள்**
**வீழா நிதியு முடன்வீழ்ந்தது வில்வ லாய்க்கே**
**ஊழாயிற் றொல்கு நுசுப்பஃக வுருத்து வீங்கிச்**
**சூழாரம் வைத்த முலையாணலஞ் சூழ்க வென்றான் 1978**

[வீழ்ந்தது-என்னிடத்தே வந்து தங்கியது; ஒல்கு நுசுப்பு அஃக - துவளும் இடை குறையும்படி; வீங்கி-பெருத்து; வைத்த-வைக்கப்பட்ட.]

## வேறு

ஏற்ற கைத்தொடி வீழ்ந்தென வேந்தலைத்
தேற்றி னான்றிரு மாநலஞ் செவ்வனே
தோற்ற மாதருந் தோன்றலைக் காண்டலும்
ஆற்றி னாள்தன தாவியுந் தாங்கினாள் 1979

[தோற்ற - இழந்த; ஆற்றினாள் - பொறுத்துக் கொண்டாள்.]

'இம் மங்கைக்குரிய மணவாளன் உன் கடைமுன் வந்த மர்ந்தவுடன், திரைகடலோடித் தேடிவந்த செல்வமெல் லாம் உன் கடையில் வந்து சேரும். மற்றபடி வேறு எப்போதும் அப்படிப் பொருள் வந்து சேராது. வேறெங் கும் தனக்கு நிகரில்லாத அவன் பெருமைமிகு மார்பே விமலைக் கேற்ற பூவணைப் பள்ளியாகும் என்றும் கூறி னான். இவளும் ஏழு வயதைக் கடந்து, மேலும் நான்காண்டுகள் நிறைந்து இப்போது பனிரெண்டாவது ஆண்டடைந்து நிற்கிறாள். திரண்ட செல்வமும் நீ வந்து சேர வந்து நிறைந்தது. வில் வல்லவனே உனக்கும் நல்வினை வந்து வாய்த்தது. துவளும் மெல்லிடை குறையும்படி பருத்து விளங்கும், முத்தாரம் தங்கிய, மார்புடைய இவளைத் தழுவி இன்ப நலம் பெறுக' என்றான். நீட்டிய கையிலே வளையல் வந்து விழுந்ததைப் போல, தனக்கு வந்து வாய்த்த சீவகனை இவ்வாறு கூறிச் சாகரதத்தன் தேற்றினான். தன் அழகு நலம் பெரிதும் இழந்த விமலையும் சீவகனைக் கண்டதும் உயிர் இழக் காமல் பிழைத்தாள். தன் தந்தை அவனுக்குக் கூறிய மொழி கேட்டுத் தனது மனதைத் தேற்றிக் கொள்ளவும் செய்தாள்.

அம்பொற் கொம்பனை யாளையும் வார்கழற்
செம்பொற் குன்றனை யானையுஞ் சீர்பெறப்
பைம்பொ னீணகர்ப் பல்லிய மார்த்தெழ
இம்ப ரில்லதொ ரின்பமி யற்றினார் 1980

[பல்லியம்-பலவித இசைக் கருவிகள்; இம்பர்-இவ் வுலகம்.]

**கட்டி லேறிய காமரு காளையும்**
**மட்டு வாயவிழ் மாமலர்க் கோதையும்**
**விட்டு நீங்குத லின்மையின் வீவிலார்**
**ஒட்டி யீருடம் போருயி ராயினார் 1981**

[காமரும்-விரும்பத்தக்க; வீவு-துன்பம்.]

**நிலவு வெண்கதிர் நீர்மைய பூந்துகில்**
**கலவங் கண்புதை யாதுக னற்றலின்**
**உலக மூன்றுமு றுவிலைத் தென்பவே**
**புலவு வேற்கண்ணி னாண்முலைப் போகமே 1982**

[கலவம் கண்புதையாது-மேகலையை மறையாமல்; கனற்றலின் - துகில் நெகிழ்ந்து சீவகனைச் சுடுதலால்.]

அழகிய பொற்கொடி போன்ற விமலையையும் வீரக் கழலணிந்த பொன்மலை போன்ற சீவகனையும் சிறப்புற, புதிய பொன்னாலாகிய மனையிலிருத்தி நகரில் பலவித வாத்தியங்களும் முழங்கி இன்னிசை எழுப்ப இவ்வுலகத்தில் இல்லாதது என்று சொல்லும்படிக்கு இன்ப மணம் புரிவித்தனர். கடிமணம் புரிந்து கொண்டபின் வாழ்க்கைக் கட்டிலேறிய, இன்பூட்டும் காளையாகிய சீவகனும், தேன் நிறைந்து இதழ்விரித்த பெருமைமிகு மாலையணிந்த விமலையும் ஒருவரை விட்டு ஒருவர் நீங்காது துன்பம் ஒரு துளியும் இன்றி, ஒருயிரும் ஈருடலு மாய் இணைந்து வாழலாயினர். நிலவைப் போல வெள்ளைக் கதிர் வீசும் அழகிய ஆடை மேகலையை மறைக்காமல் நெகிழ்ந்து சீவகனைச் சுட, புலால் மணக்கும் வேல்போலும் கண்ணுடைய விமலையின் பூமார்பில் பொருந்தி அவன் அடைந்த இன்பம் மூவுலகும் விலை கொள்ளத் தக்கதாகும்.

**தேன வாங்கமழ் கண்ணியுந் தெவ்வர்தம்**
**ஊன வாங்கதிர் வேலுறு காளையும்**
**கான வாங்கடி நாறுமென் பள்ளிமேல்**
**வான வாம்வகை யால்வைகி னார்களே 1983**

[தேன் அவாம்-வண்டுகள் விரும்புகின்ற; அவாம்-அவாவும்; தெவ்வர்-பகைவர்.]

வேறு

**வெண்மதி நெற்றி தேய்த்து விழுத்தழும் பிருப்ப நீண்ட**
**அண்ணனன் மாடத் தங்க ணகிற்புகை யமளி யேறிப்**
**பண்ணமை மகர வீணை நரம்புரீஇப் பாவை பாட**
**மண்ணமை முழவுத் தோளான் மகிழ்ச்சியுண் மயங்கி னானே 1984**

[பண்-இராகம்; உரீஇ-உருவி, தடவ; விழுத்தழும்பு-சிறந்த தழும்பு.]

**இன்னரிச் சிலம்போ டேங்கிக் கிண்கிணி யிகலி யார்ப்பப்**
**பொன்னரி மாலை தாழப் பூஞ்சிகை யவிழ்ந்து சோர**
**மின்னிருங் கலாபம் வீங்கி மிளிர்ந்துகண் ணிரங்க வெம்பித்**
**துன்னருங் களிகொள் காமக் கொழுங்கனி சுவைத்து விள்ளான் 1985**

[அரி-பரல்; ஏங்கி-ஒலித்து; இகலி - மாறுபட்டு; பொன்னரி மாலை - பொன்னை அரிந்து தொடுத்த மாலை; பூஞ்சிகை-பூவையணிந்த முடி; வீங்கி-விம்மி; துன்னரும்-கிட்டுதற்கரிய.]

வண்டுகள் விரும்பி மொய்க்கும் மணம் வீசும் மலர்க் கண்ணி அணிந்த விமலையும் பகைவர் உடலில் பாய்ந்து அவர்தம் சதையைப் பிளக்கும் கூர்வேலேந்திய சீவகனும், வாசமலர்ப் பூங்கா விரும்பும் மணமுடைய பூமலர்ப் பள்ளியில் விண்ணும் விரும்பும் வகையில் இன்பம் நுகர்ந் திருந்தனர். வெண்ணிலவில் சென்று முட்டியதால் சிறந்த தழும்பு இருக்கும்படி நீண்டுயர்ந்த அழகிய

மாடத்தில், அகில் புகை தோய்ந்த மணையில் அமர்ந்து, பண்ணோடு, மகரயாழின் இசை நரம்பு தடவிப் பொற் பாவை போன்ற விமலை பாட, மண்ணமைத்த முழ வினைப் போலும் தோளுடைய சீவகன் அது கேட்டு இன்பக் களிப்பில் மிதந்தபடி இருந்தான். இனிய பரல் களுடைய சிலம்போடு சேர்ந்து கிண்கிணி மாறுபட்டு ஒலிக்க, பொன்னுருக்கிச் செய்த மாலை தாழ்ந்திட, பூமுடித்த கூந்தல் கலைந்து குலைய, ஒளிவீசும் பெரிய மேகலை விம்மிப் புரண்டு ஒலியெழுப்ப, காதல் சூட்டிலே தோய்ந்து, கிடைத்தற்கரிய இன்பந்தரும் காமமென்னும் இன்ப நறுங்கனியைச் சுவைத்தபடி அவளைப் பிரியாது இருந்தான்.

**தொழித்துவண் டிமிருங் கோதை துணைமுலை முள்கப் பூம்பட்டு**
**அழித்துமட் டொழுகுந் தாரான் மணிவள்ளத் தாய்ந்த தேறல்**
**எழிற்பொலி மாதர்க் கேந்த வினிதினி னுகர்ந்து காமக்**
**கொழித்திரை கடலுண் மூழ்கிக் கோதைகண் டுயின்ற வன்றே 1986**

[தொழித்து-பூந்துகளைச் சிதறி; இமிரும்-ஒலிக்கின்ற; முள்க-முயங்குதலால்; மணி-அழகு; வள்ளம்-கிண்ணம்.]

**பாசிலை சுருட்டி மைந்தன் கொடுக்கிய பரந்து மின்னும்**
**தூசுலா மல்கு நீண்டத் துயிற்கண்கள் விழித்த தோற்றம்**
**வாசவான் குவளை மெல்ல வாய்விடா நின்ற தொக்கும்**
**ஏசுவ தொன்று மில்லா விணைவட முலையி னாட்கே 1987**

[பாசிலை சுருட்டி-வெற்றிலையை மடித்து; கொடுக்கிய-கொடுத்தற்கு; தூசுலாம் அல்குல்-துகில் பரந்த அல்குலை; வாசவான்குவளை-வாசனையையுடைய சிறந்த குவளைப்பூ; ஏசுவது-இகழ்வது.]

**கங்குற்பாற் புகுந்த கள்வ னிவனெனக் கதுப்பிற் றாழ்ந்த**
**தொங்கலான் முன்கை யாத்துச் சொல்லுநீ வந்த தென்ன**
**நங்கையான் பசித்து வந்தே னெப்பொரு ணயப்ப தென்றாட்**
**கங்கலுழ் மேனி யாய்நின் னணிநல வமிழ்த மென்றான்**

[கங்குல்பால் - இரவினிடத்து; கதுப்பில் தாழ்ந்த தொங்கலால்-தன் கூந்தலில் தங்கிய மாலை யாலே; யாத்து-கட்டி; நயப்பது-விரும்புவது; அங்கலுழ் மேனியாய்-அழகு ஒழுகுகின்ற மேனி யையுடையாய்.]

பூந்துகள் சிதற வண்டுகள் மொய்த்துப் பாடும் மலர் மாலை அணிந்த விமலையின் இணை மார்பின் மேலணிந்த பூம்பட்டை நீக்கி இடைவிடாமல் முயங்கிய, தேனொ ழுகும் மலர்மாலையணிந்த சீவகன், மணிகளிழைத்த பொற்கிண்ணத்தில் வடித்தெடுத்த மதுவை அழகு விளங்கும் விமலைக்குத் தர அவளும் அதை விரும்பி வாங்கி உண்டு, காமம் கொழிக்கும் இன்பக் கடலில் மூழ்கிக் கண் துயின்றாள். தூங்கிய விமலைக்கு வெற்றிலை மடித்துக் கொடுக்க, அவளை எழுப்புவதற்காய், சீவகன் பரந்து ஒளி வீசும் ஆடையணிந்த அவளுடைய அல்குலைத் தீண்டின உடனே, குறை கூறமுடியாத இரட்டைவட முத்துமாலை புரளும் முலையுடைய விமலை, தூங்கிய கண் விழித்து நோக்கிய தோற்றம், வாசமிக்க சிறந்த குவளைப்பூ வாய் அவிழாது இருந்ததை ஒத்தது. இவ்வாறு அவன் எழுப்பத் துயில் நீங்கி எழுந்த விமலை சீவகனை, இரவிலே வந்து புகுந்த கள்வன் இவன் என்று கூறித் தன் கூந்தலில் தொங்கிய மாலையால் அவன் முன் கையைக் கட்டி, நீ எதை வேண்டி இங்கே வந்தாய் சொல் என்று வினவ, அவன் பெண்ணே நான் பசியால் இங்கே வந்தேன் என்று கூற, அவள் நீ விரும்பும் பொருள் யாது என்று கேட்க, அவனும் அழகொழுகும் மேனி வனப்புடையவளே நின் இன்ப நலமாகிய அமுதம் முழுதும் நான் வேண்டும் பொருள் என்று கூறி நின்றான்.

**செயிர்த்தவள் சிவந்து நோக்கிச் சீறடி சென்னி சேர்த்தி**
**அயிர்ப்பதென் பணிசெய் வேனுக் கருளிற்றுப் பொருள தென்ன**
**உயிர்ப்பது மோம்பி யொன்று முரையலை யாகி மற்றிப்**
**பயிர்ப்பில்பூம் பள்ளி வைகு பகட்டெழின் மார்ப வென்றாள்**

*[செயிர்த்தவள்-ஊடல் கொண்ட விமலை; சிவந்து-கோபித்து; நோக்கி-சீவகனை நோக்க; அயிர்ப்பது - ஐயுறுவது; ஓம்பி - காத்து; பயிர்ப்பு-அருவருப்பு.]*

**உள்ளிழு துடைய வெம்பி யுற்பல வுருவு கொண்ட**
**வெள்ளியிற் புனைந்த கோல விளக்கொளி வெறுவி தாக**
**வள்ளிதழ்க் கோதை வல்லான் வட்டிகை நுதியின் வாங்கிப்**
**பள்ளிமே லெழுதப் பட்ட பாவைபோ லாயி னாளே 1990**

*[இழுது உடைய-நெய் கெடும்படி; வெம்பி-தீ மிக்கு எரிதலால்; உற்பல உருவுகொண்ட ஒளி வெறுவி தாக - செவ்வாம்பல் மலரின் வடிவத்தைக் கொண்ட தீப்பிழம்பு கெடாநிற்க.]*

## வேறு

**மங்கையர் பண்ணிய மருத யாழ்குழல்**
**நங்கையைப் பிரியுமிந் நம்பி யின்றென**
**அங்கதற் கிரங்கின வாரும் பேதுறக்**
**கங்குல்போய் நாட்கடன் கழிந்த தென்பவே 1991**

*[பண்ணிய - வாசித்த; மருதயாழ்-மருதம் என்ற காலைப் பண்ணையுடைய வீணை; பேதுற-வருந்தும்படி; கங்குல்-இரவு.]*

சீவகனோடு ஊடல் கொண்ட விமலை அவனைக் கோபத்தால் விழித்து நோக்க, சீவகன் அவளது அழகிய பாதங்களைத் தன் தலை மேலே தாங்கி 'என்னைச் சந்தேகிப்பது ஏன்? உனக்கு ஏவல் செய்யும் எனக்கு நீ அருளிய ஒன்று அதுவே எனக்கினிய பொருள்' என்று கூற,

அவளும், 'நீ இறந்து படுதலையும் விட்டு, வேறெதுங் கூறாமல் அருவருப்பறியாத பெருமை மிகும் மார்புடைய வனே இப் பஞ்சணையில் வந்து அமர்க' என்றாள். உள்ளே ஊற்றிய நெய் கெடும்படி சுடர் மிகுந்து எரிய அரக்காம்பல் மலர்போலும் சிவந்த நிறமுடைய, வெள்ளியால் செய் தமைத்த விளக்கின் ஒளிமாறுபட விடியும்போதாயிற்று. வளமிக்க இதழுடைய மாலையணிந்த விமலை எழுது கோல் கொண்டு பஞ்சணை மேல் எழுதிய பாவைபோல் படுத்திருந்தாள். அவளை எழுப்பத் தோழிப் பெண்கள் கூடி இசைத்த மருத யாழும் குழலும் இன்று நங்கை விமலையைக் காளை சீவகன் பிரிவான் என்று, அதற்கு இரங்கின போல் ஒலிக்க, கூடியிருந்தோரும் பிரிவை நினைந்து வருந்த, கங்குல் கழிந்து காலைக் கடனும் நடந்தது.

ஏந்துபூங் கோதைகள் திருத்தி யேர்படச்
சாந்துகொண் டிளமுலை யெழுதித் தையல்தன்
காந்தள முகிழ்விரல் கையி னாற்பிடித்
தாய்ந்தவட் கிதுசொலு மலங்கல் வேலினான் 1992

[ஏர்பட - அழகுண்டாக; சாந்து - குங்குமச்சாந்து; காந்தல் அம்முகிழ் விரல்-காந்தளது அழகிய மொட்டுப்போலும் விரலை.]

பூவினுட் டாழ்குழற் பொன்செ யேந்தல்குல்
மாவினுட் டாழ்தளிர் மருட்டு மேனியாய்
காவினுட் டோழரைக் கண்டு போதர்வேன்
ஏவினுட் டாழ்சிலை யெறிந்த கோலினே 1993

[மா - மாமரம்; தாழ்தல்-தங்குதல்; கா-சோலை; போதர்வேன் - மீள்வேன்; ஏவினுள் - அம்புத் தொழிலிடத்து.]

என்றவ னுரைத்தலு மெழுது கண்மலர்
நின்றநீ ரிடைமணிப் பாவை நீந்தலின்

**மன்றனா றரிவையைத் தெருட்டி மாமணிக்**
**குன்றனான் கொடியவள் குழைய வேகினான் 1994**

*[மன்றல் - வாசனை; தெருட்டி - வருத்தத்தினின்றும் தெளிவித்து; குழைய-வருந்த.]*

தோழிப் பெண்கள் ஏந்தி வந்து தந்த மாலைகளை அழகுற அணிவித்து, வாசச் சாந்தினால் அவள் மார்பின் மேல் தொய்யில் கொடி எழுதி, விமலையின் காந்தள் அரும்பு போலும் மெல்லிய விரல்களைத் தன் கைகளால் பற்றி மாலையணிந்த வேலேந்திய சீவகன் ஆராய்ந்து அவளுக்குச் சொல்லுவான்: 'பூவில் பொதிந்த கூந்தலும், பொன்னில் செய்த மேகலை அணிந்த அல்குலும், சிவந்த மாந்தளிரை மயக்கும் மேனி வனப்பும் உடையவளே! சோலையில் என் தோழரைக் கண்டு, அம்பெய்தலில் வலி குறைந்த வில் எய்த அம்பினைப் போல் நான் விரைவில் திரும்பி விடுகிறேன்' என்று அவன் கூறியதும் மையெழுதிய மலர்க் கண்ணிலே நிறைந்து தேங்கிய கண்ணீரில் அவள் கண்மணிப்பாவை நீந்திக் கலங்க அவள் வருந்தியபடி நின்றாள். வாச மலர்மாலை அணிந்த அவளுக்குத் தேறுதல் கூறி, மாணிக்கக் குன்றனைய சீவகன் அவள் வருந்தப் பிரிந்து சென்றான்.

(விமலையார் இலம்பகம் முற்றிற்று)

## 9. சுரமஞ்சரியார் இலம்பகம்

வாளி ரண்டு மாறு வைத்த போன்ம ழைக்கண் மாதரார்
நாளி ரண்டு சென்ற வென்று நைய மொய்கொள் காவினுள்
தோளி ரண்டு மன்ன தோழர் தோன்ற லைப்பு ணர்ந்தபின்
தாளிரண்டு மேத்தி நின்று தைய னாமம் வேண்டினார்

[மாறு வைத்த போல் - எதிராக வைத்தவற்றைப் போன்ற; நைய-வருந்த; புணர்ந்தபின்-அடைந்த பின்பு.]

பாடு வண்டி ருந்த வன்ன பல்க லைய கலல்குல்
வீடு பெற்ற வரும் வீழும் வெம்மு லைவி மலையென்று
ஆடு வான ணிந்த சீர ரம்பை யன்ன வாணுதல்
ஊடி னும்பு ணர்ந்த தொத்தி னிய வளு ளாளரோ 1996

[பாடுவண்டு-ஒலிக்கின்ற வண்டு; பல்கலை-பலவடங் களையுடைய மேகலை; வீடு பெற்றவர் - துறவிகள்.]

அம்பொ ரைந்து டைய்ய காம னைய்ய னென்ன வந்தணன்
நம்பு நீர ரல்லர் நன்கு ரங்கு நீர ராயினும்
தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பி னெஞ்சு நேர்ந்து தாழ்வர்நாம்
பொங்க ரவ்வ வல்கு லாரெ னப்பு கன்று சொல்லினான்

[நம்பும் நீரர் - விரும்பும் தன்மையுடையார்; புகன்று - விரும்பி.]

இரண்டு வாட்களை எதிரெதிராக வைத்ததுபோல் இருக்கும், குளிர்ந்த கண்களை உடைய பெண்கள் இரண்டு நாள் கழிந்ததென்று வருந்த (விமலையோடு ஒரு நாளும் சுரமஞ்சரியோடு கூடப் போகும் ஒரு நாளும் ஆக இரண்டு நாள்) மரம் நெருங்கி வளர்ந்த சோலையில், சீவகனது இருதோளையும் போன்ற தோழர்கள் சீவகனைக் கண்டவுடன், அவன் திருவடிகளைப் பணிந்து நீ மணந்த பெண்ணின் பெயரைக் கூறுவாயாக என்றனர். 'இன்னிசை எழுப்பும் தும்பிகள் மொய்ப்பதைப் போலப் பல மணிகள் உடைய மேகலை அணிந்த அகன்ற அல்குலினையும் பேரின்ப வீட்டினை விரும்பித் துறவை மேற்கொண்டவரும் கண்டால் மயங்கி வீழும் பருத்த பூமார்பினையும் உடைய விமலை என்பவளாவாள். அவள் ஆட்டத்தில் சிறந்த வானுலகின் புகழ்மிக்க அரம்பையைப் போலும் அழகிய நெற்றி உடையவள். அவளோடு ஊடினாலும் கூடினாற் போன்ற இன்பம் உண்டாகும்.' இவ்வாறு சீவகன் கூறக்கேட்ட தோழர்கள் மலரம்புகள் ஓரைந்தும் உடைய காமனே நம் சீவகன் என்று வியக்க, புத்திசேனன் சொல்லத் தொடங்கினான். 'விரும்பத்தக்க குணங்களில்லாமல் நல்ல குரங்குத் தன்மை உடையவர் என்றாலும், தம் பெற்றோர் அவர்க்கு மணமுடித்துக் கொடுப்பாராயின் அவரோடும் விரும்பி வாழவே செய்வர் சீறுகின்ற பாம்பினது படம் போன்ற அல்குலுடைய பெண்கள்' என்று கூறினான்.

அற்று மன்று கன்னி யம்ம டந்தை மார ணிநலம்
முற்றி னாரை நீடு வைப்பின் மூள்கும் வந்து பாவமும்
குற்ற மற்று மாகு மென்று கோதை சூழ்ந்து கூறினார்க்
குற்ற டுத்த யாவு யிர்த்தொ ழிதல் யார்க்கு மொக்குமே

[அற்றும்-அத்தன்மையதும்; நீடு-நெடுநாள்; மூள்கும்-புகுதும்; உற்று அடுத்து-கொண்டு சென்று கொடுத்து; அயா உயிர்த்து-இளைப்பாறி.]

## வேறு

மதுக்குடம் விரிந்தன மாலை யாரொடும்
புதுக்கடி பொருந்துதி புக்க வூரெலாம்
விதிக்கிடை காணலாம் வீதி மாநகர்!
மதிக்கிடை முகத்தியோர் மடந்தை யீண்டையாள் 1999

[கிடை-ஒப்பு; மதி கிடை-சந்திரனுக்கு ஒப்பான; புதுக்கடி-புதுமணம்.]

ஆடவர் தனதிடத் தருகு போகினும்
நாடிமற் றவர்பெயர் நயந்து கேட்பினும்
வீடுவ லுயிரென வெகுளு மற்றவள்
சேடியர் வழிபடச் செல்லுஞ் செல்வியே 2000

[தனது இடத்து அருகு-தன் வீட்டிற்குப் பக்கத்தே; வீடுவல்-விடுவேன்; நாடி-விரும்பி.]

'அது மட்டுமல்ல, இத்தகைய கன்னிப் பெண்களை, அழகு நலம் முதிர்ந்தவராக நீண்ட நாள் வீட்டிலே வைத்திருந்தால் அதனால் பெரிய பாவம் வந்து சேரும்; குடிப் பழியும் உண்டாகும் என்று கருதித் தம் பெண்ணைத் தாமே பிறர்க்கு விரும்பிச் சென்று கொடுத்துத் தம் சுமையைக் குறைத்துக் கொண்டு இளைப்பாற எண்ணுவது குடிப்பிறந்த யாவர்க்கும் இயல்பே ஆகும். தேன்குடம் விரிந்து மலர்ந்ததைப் போன்ற மலர் மாலையணிந்த மங்கையரோடு நீ போன ஊரில் எல்லாம் புதுமணம் புரிந்து கொண்டிருக்கிறாய். ஆனால் சிற்பநூல் இலக்கணத்துக்கு ஏற்ப அமைந்த தெருக்களுடைய இத்திரு நகரில், நிலவைப் போலும் ஒளிமுகம் உடைய மடந்தை ஒருத்தி இருக்கிறாள். அவள் இருந்து வாழும் இல்லத்திற் கருகில் ஆண்கள் சென்றாலும், ஆடவர் பெயரை அங்கெவரேனும் விரும்பிக் கூறக் கேட்டாலும் உயிரை விட்டுவிடுவேன் என்று கோபித்துக் கொள்ளக் கூடியவள். அவள் பணிப் பெண்களே கூடி வழிபாடு செய்ய, வாழும் பெருமை உடையவள்.'

**காமனே செல்லினுங் கனன்று காண்கிலாள்**
**வேமெனக் குடம்பெனும் வேய்கொள் தோளியை**
**ஏமுறுத் தவணல நுகரி னெந்தையை**
**யாமெலா மநங்கமா திலக னென்றுமே** **2001**

[காமன்-மன்மதன்; கனன்று-கோபித்து; வேம்-வெந்து போகும்; ஏமுறுத்து-மயங்கச் செய்து.]

## வேறு

**தாசியர் முலைக டாக்கத் தளையவிழ்ந் துடைந்த தண்டார்**
**வாசங்கொண் டிலங்கு முந்நூல் வலம்படக் கிடந்த மார்ப**
**பேசிய பெயரி னாளைப் பேதுறா தொழிவே னாகின்**
**ஆசுமன் பிலாத புன்பெண் கூந்தல்யா னணைவ லென்றான்**

[தளை-கட்டு; உடைந்த-விரிந்த; ஆசும்-சிறிதும்; புன்பெண்-கீழ்மகள்.]

**வண்டுதேன் சிலைகொ ணாணா மாந்தளிர் மலர்க ளம்பாக்**
**கொண்டவன் கோட்டந் தன்னுட் கொடியினைக்**
**கொணர்ந்து நீலம்**
**உண்டது காற்றி யாண்பே ரூட்டுவ லுருவக் காமன்**
**கண்டபொற் படிவஞ் சார்ந்து கரந்திரு நாளை யென்றான்**

[நீலம்-உண்டது காற்றி-வெண்ணூல் நீலநிறமுண்டதனைப் போக்கினாற்போல; கரந்திரு-மறைந்திரு.]

'காமனே எதிரில் வந்தாலும் அவனை ஏறெடுத்தும் பார்க்காது என்னுடல் கொதிக்கும் என்று கோபிப்பாள். மூங்கிலைப் போலும் வளைந்த தோளுடைய அவளை மயக்கி அவளின் இன்ப நலம் நீ நுகரப் பெறின் நாங்கள் எல்லாம் உன்னைக் காமதிலகன் என்றழைப்போம்' என்று புத்திசேனன் கூறினான். அது கேட்ட சீவகன் சொல்லுவான்: 'பணிப்பெண்கள் முலைகள் மோத முறுக்கவிழ்ந்து மணம் வீசும் மாலையுடன் முந்நூல் கிடந்து புரளும் மார்புடையவனே! நீ பேசிய புகழுக்குரியவளை நான் என்னிடம் மயங்கச் செய்யாமல் விடுவேனேயாகில்,

ஒரு சிறிதும் அன்பு கொள்ளாத கீழ்மகளின் கூந்தலைத் தழுவியவன் ஆவேனாக. வண்டும் தும்பியும் வில்லின் நாணாக, மலர்களை அம்பாகக் கொண்ட காமன் 'கோவிலுக்குள், சிவந்த மாந்தளிர் போலும் மேனி வனப் புடையவளைக் கொண்டு வந்து, வெள்ளை நூல் நீலத்தில் தோய்ந்து தன் நிறத்தை இழந்து நிற்பதைப் போல, ஆண்கள் முகமே காணாத அவள் விரதத்தைக் கெடுத்து, அவள் விரும்பி ஏற்கும் ஆணின் பெயர் சிந்தை கொள்ளச் செய்கிறேன். நீ நாளை அக் காமன் கோவிலுள்ள பொன்னாலான காமன் சிலைக்குப் பின்னே மறைந்திரு' என்றான்.

### வேறு

இழைக்கண் வெம்முலை யிட்டிடை ஏந்தல்குல்
மழைக்கண் மாதரை மாலுறு நோய்செய்வான்
முழைக்கண் வாளரி யேறன மொய்ம்பினான்
உழைக்க ணாளர்க்கு ரைத்தெழுந் தானரோ 2004

[மால் உறுநோய் செய்வான்-மயக்கம் பொருந்தும் காமநோயைச் செய்யும் பொருட்டு; அரியேறன மொய்ம்பினான் - ஆண் சிங்கம் போன்ற வன்மையையுடைய சீவகன்.]

சோருங் காரிகை யாள்சுர மஞ்சரி
ஆரஞ் சூடிய வம்முலைப் பூந்தடம்
தாரு மார்பமுந் தண்ணெனத் தோய்வதற்கு
ஒரு முள்ளமு டன்றெழு கின்றதே 2005

[தண்ணென-குளிரும்படி; உடன்று-வருந்தி; சோரும்-ஒழுகும்; ஓரும்-நினைக்கும்.]

### வேறு

கடைந்தபொற் செப்பெனக் கதிர்த்து வீங்கின
வடஞ்சுமந் தெழுந்தன மாக்கண் வெம்முலை
மடந்தைதன் முகத்தவென் மனத்தி னுள்ளன
குடங்கையி னெடியன குவளை யுண்கணே 2006

[கதிர்த்து - ஒளியுடையனவாகி; மாக்கண் - கரிய கண்ணையுடைய; குடங்கை - உள்ளங்கை.]

அணிமணிகள் புனைந்த பருத்த பூமார்பும், சிற்றிடையும், ஏந்திய அல்குலும், குளிர்ந்த பார்வை உடைய கண்களும் உடைய சுரமஞ்சரியை, மயங்கும் காதல் நோயால் மயங்கச் செய்வதற்குக் குகை வாழும் சிங்கம் போன்ற வலிமை உடைய சீவகன், கண் போன்ற தன் தோழர்களிடம் சூளுரைத்துக் கிளம்பினான். கிளம்பியவனின் உள்ளம், அழகொழுகும் சுரமஞ்சரியின் முத்தாரம் அணிந்த மார்பிடை தன்னுடைய மாலையும் மார்பும் குளிரத் தழுவி அணைவதற்கு அவள் உருவைச் சிந்தை செய்தது. 'பொன்னில் கடைந்தெடுத்த செப்பினைப் போல விளங்குவனவும், முத்துமாலை சுமந்தனவும் கரிய கண்களுடைய மார்பினளான அம்மங்கையின் தோற்றம் என் மனக்கண்முன் தெரிகின்றது. குவளை மலரைப் போன்ற அவளின் மையுண்ட கண்கள்தாம் உள்ளங்கையிலும் எவ்வளவு பெரியன!'

**ஏத்தரு மல்லிகை மாலை யேந்திய**
**பூத்தலைக் கருங்குழற் புரியி னால்புறம்**
**யாத்துவைத் தலைக்குமிவ் வருளி லாள்நலம்**
**காய்த்தியென் மனத்தினைக் கலக்கு கின்றதே 2007**

[புரி-கயிறு; யாத்து-கட்டி; அலைக்கும்-வருத்தும்; காய்த்தி-சுட்டு.]

**சில்லரிக் கிண்கிணி சிலம்புஞ் சீறடிச்**
**செல்விதன் றிருநலஞ் சேரும் வாயில்தான்**
**அல்லலங் கிழவனோ ரந்த ணாளனாய்ச்**
**செல்லல்யான் றெளிதக வுடைத்தென்**
**றெண்ணினான் 2008**

[சில்லரி-சிலவாகிய பரல்களையுடைய; சிலம்பும்-ஒலிக்கின்ற; வாயில்-வழி; அல்லல்-பசித்துன்பம்.]

**அணங்கர வுரித்ததோ லனைய மேனியன்**
**வணங்குநோன் சிலையென வளைந்த யாக்கையன்**
**பிணங்குநூன் மார்பினன் பெரிதொர் பொத்தகம்**
**உணர்ந்துமூப் பெழுதின தொப்பத் தோன்றினான் 2009**

[அணங்கு அரவு-வருத்துகின்ற பாம்பு; வணங்கு நோன்சிலை-வளைந்த வலிய வில்; பிணங்கும்-உத்தரீயத்தோடு மாறுபட்ட; பொத்தகம்-புத்தகம்.]

'போற்றுவதற்கரிய மல்லிகை மாலை அணிந்த, பூ முடித்த கருங்கூந்தலாகிய கயிற்றினால் என்னைப் புறத் தோடு சேர்த்துக் கட்டி வருத்துகின்ற இரக்கமில்லாத இவளுடைய அழகு நலம் என் உள்ளத்தைச் சுட்டு உயிரை வருத்துகின்றதே! சில மணிப் பரல்களுடைய கிண்கிணி ஒலிக்கும் சிற்றடிச் செல்வி இவள் அழகு நலம் அடைய நான் செல்லும் வழி, பசிப்பிணி முதிர்ந்து வாடும் ஒரு அந்தணக் கிழவனாக நான் செல்வது தான். அதுதான் அவள் ஐயுறாத சிறந்த வழி' என்று முடிவு செய்துகொண்டான். வருத்துகின்ற பாம்பு தோலுரித்தது போன்ற மேனியுடனும், வளைந்த பெரிய வில்போலக் கூன்விழுந்த உடலோடும், மேலாடையோடு பின்னிய நூல் கிடந்து புரளும் மார்புடனும், மூப்பிலக் கணத்தைப் பற்றிக் கூறும் பெரியதோர் புத்தகத்தை ஆராய்ந்து, மூப்பின் உருவை எழுதிக் காட்டியது போன்ற தோற்றத்துடன், சீவகன் தோன்றினான்.

**வெண்ணரை யுடம்பினன் விதிர்த்த புள்ளியன்**
**நுண்ணவி ரறுவைய னொசிந்த நோக்கினன்**
**கண்ணவிர் குடையினன் கைத்தண் டூன்றினன்**
**பெண்ணலங் காதலிற் பேயு மாயினான் 2010**

[விதிர்த்த-தெறித்த; நொசிந்த-வளைந்த; நவிர்-கிழிந்த; அறுவை-ஆடை.]

யாப்புடை யாழ்மிட றென்னுந் தோட்டியால்
தூப்புடை யவணலந் தொடக்கும் பாகனாய்
மூப்பெனு முகபடாம் புதைந்து முற்றிழை
காப்புடை வளநகர் காளை யெய்தினான் **2011**

[யாப்பு-கட்டு; தூப்புடை-தூய்மையுள்ள; மூப்பு-முதுமை; காப்பு-காவல்.]

## வேறு

தண்டுவலி யாகநனி தாழ்ந்துதளர்ந் தேங்கிக்
கண்டுகடை காவலர்கள் கழறமுக நோக்கிப்
பண்டையிளங் காலுவப்பன் பாலடிசி லிந்நாள்
கண்டுநயந் தார்தருவ காதலிப்ப னென்றான் **2012**

[தாழ்ந்து-வணங்கி; ஏங்கி-இளைத்து நின்று; கடை காவலர்கள் - வாயில் காப்பவர்; கழற - வந்த காரியம் என்னவென்று கேட்க; இளங்கால்-இளமைப்பருவத்தில்.]

வெள்ளை நரை மயிர் படர்ந்த உடலோடும், நரை மயிர் விழுந்த இடங்களில் புள்ளி விழுந்த சருமத்தோடும், மிகக்கிழிந்து நைந்துபோன உடையோடும், கூன்விழுந்த உடலால் வளைந்த பார்வையினனாய், பீற்றல் குடையோடு, கையிலே ஊன்றுகோல் கொண்டவனாய், பெண் நலம் விரும்பிப் பேயுருவம் பெற்றவன் ஆயினான். இன்னிசை சேரப் பிணித்துக் கட்டிய யாழினைப் போன்ற குரல் என்னும் அங்குசத்தால், ஆடவர் நினைவை நீக்கிய தூய நெஞ்சுடைய சுரமஞ்சரியின் இன்ப நலத்தைப் பிணிக்கும் பாகனாய், மூப்புருவம் என்கின்ற முகபடாம் அணிந்து, அணிமணி புனைந்த சுரமஞ்சரியின் காவல் மிக்க செல்வ மாளிகையைச் சீவகன் அடைந்தான். கையில் ஊன்றிப் பிடித்த கோலே துணையாகத் தாழ்ந்து களைத்து இளைத்து நிற்கக்கண்டு வினவிய வாயில் காவலர்கள் முகம் பார்த்துச் சொல்லுவான்: 'முன்னே என் இளமைப் பருவத்தில் பால் சோற்றையே விரும்

உண்டேன். இப்போதோ கண்டவர் விரும்பித்தரும் எதையும் உண்டு வாழ்கிறேன்' என்றான்.

கையிற்றொழு தார்கழிய மூப்பிற்செவி கேளார்
மையலவர் போலமனம் பிறந்தவகை சொன்னார்
பையநடக் கென்றுபசிக் கிரங்கியவர் விடுத்தார்
தொய்யின்முலை யவர்கள்கடைத் தோன்றனனி புக்கான்

[கழிய-மிக; மையலவர்-மயக்கங்கொண்டவர்; கடை-வாயில்; பைய-மெதுவாக.]

கோதையொடு தாழ்ந்துகுழல் பொங்கிஞிமி றார்ப்ப
ஓதமணி மாலையொடு பூண்பிறழ வோடி
ஏதமிது போமினென என்னுமுரை யீயான்
ஊதவுகு தன்மையினொ டொல்கியுற நின்றான் 2014

[ஓதமணிமாலை-கடலில் தோன்றிய முத்தாலாகிய மாலை; ஊத உகு தன்மையினொடு-ஊதப் பறக்கும் தன்மையோடே; ஞிமிறு-வண்டு; ஏதம்-குற்றம்; உற-நெருங்கி.]

கச்சுவிசித் தியாத்தகதிர் முலையர்மணி யயில்வாள்
நச்சுநுனை யம்புசிலை நடுங்கவுட னேந்தி
அச்சமுறுத் தமுதுபுளித் தாங்குத்தம தீஞ்சொல்
வெச்சென்றிடச் சொல்லிவிரி கோதையவர் சூழ்ந்தார்

[விசித்து யாத்த-இறுக்கிக் கட்டிய; அயில்; வேல்; வெச்சென்றிட- வெம்மையுடையதாக.]

இவ்வுரை கேட்ட வாயில் காவலர்கள் சீவகனைக் கையால் தொழுதபடி, முதுமை மிகுந்ததாலே காது கேட்பதில்லை எனவே அறிவு மயங்கி மனம்போனபடி ஏதோ பிதற்றுகிறார் என்று நினைத்து, அவர் படும் பசித் துயருக்கு இரங்கி அவரை மெதுவாகச் செல்க என்று உள்ளே போகவிட்டனர். சீவகனும், தொய்யில் கொடி எழுதிய மார்புடைய பெண்கள் வாயில் காத்திருக்கும் மாளிகைக்குள் விரைந்து சென்றான். கூந்தலும் மாலையும் சரிய, வண்டுகள் பொங்கி எழுந்து ஒலியெழுப்ப,

கடலில் பிறந்த முத்து மாலையோடு பிற அணிகள் சிக்கிப் புரள ஓடிவந்து, 'இங்கே வருவது குற்றமாகும். போய் விடுவீர்' என்று பணிப்பெண்கள் கூறியும் அதற்கு ஏதும் மறுமொழி கூறாதவனாய் ஊதினால் பறக்கும் பஞ்சினைப் போல அசைந்து வந்து அவர்களை நெருங்கி நின்றான். கச்சினால் இறுகக் கட்டிய அழகு முலையுடைய மலர் மாலை அணிந்த அம் மங்கையர்கள், கூரிய வாளையும், கொல்லும் கூரம்பையும், வில்லையும் கண்டு இவன் அஞ்சட்டும் என்று எடுத்து வந்து பயமுறுத்தி, அமுதம் புளித்தது போல் தம் இனிய சொல் கெடச் சுடுசொல் கூறிச் சீவகனைச் சுற்றி வளைத்துக் கொண்டனர்.

**பாவமிது நோவவுரை யன்மின்முது பார்ப்பார்**
**சாவர்தொடி னேகுடிது கண்டவகை வண்ணம்**
**ஓவியர்தம் பாவையினொ டொப்பரிய நங்கை**
**ஏவல்வகை கண்டறிது மென்றுசிலர் சொன்னார் 2016**

[நோவ-வருந்த; அறிதும்-அறிவோம்.]

**கையவளை மையகுழ லையரிய வாட்கண்**
**நையுமிடை வெய்யமுலை நங்கையொரு பார்ப்பான்**
**உய்வதில னூழின்முது மூப்பினொடும் வந்தான்**
**செய்வதுரை நொய்தினெனச் சேறுமெழு கென்றான் 2017**

[மைய-கருமையையுடைய; அரி-செவ்வரி; ஐ-வியப்பு; ஊழின்-ஊழால்.]

**மாலைபல தாழ்ந்துமதுப் பிலிற்றிமணங் கமழும்**
**கோலவகில் தேய்வைகொழுஞ் சாந்தமுலை மெழுகிப்**
**பாலைமணி யாழ்மழலை பசும்பொனிலத் திழிவாள்**
**சோலைவரை மேலிழியுந் தோகைமயி லொத்தாள் 2018**

[பிலிற்றி-துளித்து; மணி-அழகு; இழியும்-இறங்கும்.]

'முதிய அந்தணர் இவர் வருந்தச் சுடுசொல் வீசாதீர். அது பாவம். தொட்டாலே போதும் இவர் செத்து விடுவார் போலிருக்கிறது. எனவே நாம் இங்கே கண்ட இதை அப்படியே, ஓவியத்தில் எழுதிய பாவையைப் போன்ற, ஒப்பரிய நம் தலைவி சுரமஞ்சரியிடம் கூறிப்

பின்னர் அவளிடும் கட்டளைப்படி நடப்போம்' என்று சிலர் கூறினர். அவர்கள் சுரமஞ்சரியிடம் சென்று, 'கைநிறைய வளையினையும், கரிய கூந்தலையும் அழகிய செவ்வரி படர்ந்த வாள்போலும் கண்களையும், இன்பூட்டும் எழில் மார்பையும் உடைய பெண்ணே! ஒரு அந்தணன், இறந்து விடுகின்ற நிலையில் இருப்பவன், முதிர்ந்த மூப்போடு வந்துள்ளான். அவனை என்ன செய்வது என்று விரைவில் கூறுவாயாக' என்றனர். 'அப்படியானால் நாம் போய்ப் பார்ப்போம்; நீங்கள் முன்னே செல்க' என்றாள். தன்மேலணிந்த பலமாலைகள் தேன் சிந்தி மணம் வீச, வாசமிகும் அகிற் குழம்பிலே மெழுகி, நல்ல சந்தனத்தை மார்பிலே பூசிய, பாலையாழ் போல மழலை மொழிபேசும், சுரமஞ்சரி, தன்னுடைய பசும்பொன் மாடத்திலிருந்தும் கீழே இறங்கி வந்தவள், சோலை மலைச்சாரலினின்றும் இறங்கிவரும் தோகை மயில் போன்றிருந்தாள்.

**சீறடிய கிண்கிணிசி லம்பொடுசி லம்ப**
**வேறுபடு மேகலைகண் மெல்லெனமி ழற்றச்**
**சேறுபடு கோதைமிசை வண்டுதிசை பாட**
**நாறுமலர்க் கொம்பர்நடை கற்பதென வந்தாள் 2019**

[மிழற்ற-ஒலிக்க: சேறுபடு-தேன் உண்டாகின்ற; நாறும்-வாசனை வீசுகின்ற: கற்பதென-கற்கின்றது என்று கூறும்படி.]

**வந்தவர வென்னையென வாட்கண்மட வாய்கேள்**
**சிந்தைநலி கின்றதிரு நீர்க்குமரி யாட**
**அந்திலதி னாயபய னென்னைமொழி கென்றாள்**
**முந்திநலி கின்றமுது மூப்பொழியு மென்றான் 2020**

[குமரி-குமரியாறு; அதினாய பயன்-அவ்வாற்றில் ஆடுவதாலுண்டாய நன்மை.]

**நறவிரிய நாறுகுழ லாள்பெரிது நக்குப்**
**பிறருமுள ரோபெறுநர் பேணிமொழி கென்னத்**
**துறையறிந்து சேர்ந்துதொழு தாடுநரி லென்றாற்கு**
**அறிதிர்பிற நீவிரென வையமிலை யென்றான் 2021**

[நறவு இரிய-பூக்களின் மணம் தோற்க; பெறுநர்-பெறுபவர்கள்; பேணி-விசாரித்து.]

அவள் சிற்றடிகளில் அணிந்த சிலம்பும் கிண்கிணியும் சேர்ந்து ஒலிக்க, வேறுபட்டு ஒலிக்கும் மேகலையின் மணிகள் மெல்லென்று இசைக்க; பூந்தாதும் தேனும் சேறாகக் கலந்த மாலையின் மேலிருந்த வண்டுகள் தேனை நுகர முடியாமல், நாற்புறமும் எழுந்தோடிப் போய் நின்று பாட, வாசமிக்க மலர்க் கொடியொன்று நடை பழகுவதைப் போல் மெல்ல நடந்து வந்தாள். வந்தவள் சீவகனை நோக்கி, 'நீர் எங்கு வந்தீர்' என்று சுரமஞ்சரி கேட்கச் சீவகனும் கூறத் தொடங்கிச் சொல்வான்: 'வாள்போலும் கண்ணுடைய பெண்ணே கேள். என் உள்ளத்தை வருத்தும் அழகிய குமரியிலே நீராட நான் வந்தேன்' என்றான். 'அப்படிக் குமரி நீராடுவதால் என்ன பயன்; கூறுவாய்' என்றுஅவள் மீண்டும் கேட்க, சீவகன், 'குமரி நீராடுவதால் முதலில் நான் படும் இம்மூப்புத்துயர் நீங்கும்' என்றான். இதைக் கேட்டு வாசமிகு பூமணமெல்லாம் தோற்க மணம் வீசும் கூந்தலுடைய சுரமஞ்சரி மிகவும் எள்ளி நகைத்து 'குமரி நீராடி இளமை பெற எண்ணுவோர் உன்னைப் போலவே இன்னும் யாராவது இருக்கிறார்களா கூறு' என்று கேட்க 'இம் மூப்புப் போகும் வழியைக் கண்டு தொழுது குமரிநீர் ஆடுவார் (ஆண்கள் முகமே காணாத உன் விரதத்தை அழித்து உன்னை அடையும் வழியாக இம்மூப்புருவம் தாங்கி வந்த) என்னைத் தவிர வேறு யாருமில்லை' என்று கூறினான். அது கேட்ட அவளும் 'உலகில் முதுமை நோய் போக்கப் பிறர் அறியாத வழிகளை நீர் அறிவீர் போலும்' என்று இகழ்ந்து பேச, சீவகன், ஆமாம் அப்படித் தான்—அதில் சந்தேகமில்லை என்றான்.

**செத்தமர மொய்த்தமழை யாற்பெயரு மென்பார்**
**பித்தரிவ ருற்றபிணி தீர்த்துமென வெண்ணி**
**அத்தமென மிக்கசுட ரங்கதிர்சு ருக்கும்**
**மொய்த்தமணி மாடமிசை யத்தகவ டைந்தாள் 2022**

[பிணி தீர்த்தும் - பசித்துன்பத்தைப் போக்குவோம்; அத்தம் என - அத்தமனகிரியென்று எண்ணி; சுடர் - சூரியன்; கதிர் - கிரணம்; அத்தக-அழகு பொருந்த.]

வடிவமிது மூப்பளிது வார்பவள வல்லிக்
கடிகைதுவர் வாய்கமலங் கண்ணொாடடி வண்ணம்
கொடிதுபசி கூர்ந்துளது கோல்வளையி னீரே
அடிசில்கடி தாக்கியிவ ணேகொணர்மி னென்றாள் 2023

[கடிகை-துண்டம்; அளிது-அளித்து, அன்பு செய்யத் தக்கது; கூர்ந்துளது-மிக்கதாயுள்ளது; கடிது-விரைவாக.]

நானமுரைத் தாங்குநறு நீரவனை யாட்டி
மேனிகிளர் வெண்டுகிலும் விழுப்பொனிய னூலும்
பானலங்கொள் தீங்கிளவி பவித்திரமு நல்கத்
தானமர்ந்து தாங்கியமை தவிசின்மிசை யிருந்தான் 2024

[நானம் உரைத்து-வாசனை எண்ணெயைப் பூசு வித்து; மேனிகிளர்-நிறம் விளங்குகின்ற.]

பட்டுப் போன மரம் பெய்கின்ற பெருமழையால் துளிர்த்துத் தழைக்கும் என்று நினைப்பதைப் போல, குமரிநீர் ஆடினால் முதுமை நோய் தீரும் என்றெண்ணும் இவர் பைத்தியக்காரராய் இருக்க வேண்டும். எனவே இவர் படும் பசித் துன்பத்தைப் போக்குவோம் என நினைத்து, இது அத்தகிரியோ என நினைத்துச் சூரியன் தன் அழகிய கதிரைச் சுருக்கி வெம்மை குறைந்து விளங்கும் மிக்க அழகுடைய மாடமுள்ள தன் மாளிகை யினுள் சுரமஞ்சரி அழகோடு சென்று சேர்ந்தாள். மாளிகையினுள் சென்றவள், 'இம்மனிதரின் வடிவமோ மூப்பு மிகுந்து நம்மால் இரங்கத்தக்கதாய் இருக்கிறது. நீண்ட பவளக்கொடியின் துண்டு போன்ற சிவந்த வாயும், தாமரை மலர் போன்ற கண்ணும் காலும் உடைய திரண்ட வளையணிந்த பெண்களே! அவருக்குப்

பசி மிகுந்துள்ளது. எனவே விரைவாக உணவு சமைத்துக் கொண்டு வருக' என்றாள். பணிப்பெண்களும் முதிய கிழவனுக்கு வாச நெய் பூசி, நறுநீர் ஆட்டுவித்தனர். மேனி விளக்கும் மெல்லிய வெள்ளுடையும், சிறந்த பொன்னாலான புரிநூலும், மோதிரமும், பால் போலும் இனிய மொழி பேசும் சுரமஞ்சரி கொடுக்க அவற்றை வாங்கி அணிந்து கொண்டு அவனும் அங்கோர் ஆசனத்தில் அமர்ந்திருந்தான்.

**திங்கணலஞ் சூழ்ந்ததிரு மீன்களெனச் செம்பொற்**
**பொங்குகதிர் மின்னுபுகழ்க் கலங்கள்பல பரப்பி**
**இங்குசுவை யின்னமுத மேந்தமிகு சான்றோன்**
**எங்குமிலை யின்னசுவை என்றுடன் அயின்றான்** 2025

[கலம்-தட்டு; அயின்றான்-உண்டான்.]

**தமிழ்தழிய சாயலவர் தங்குமலர்த் தூநீர்**
**உமிழ்கரக மேந்தவுர வோனமர்ந்து பூசி**
**அமிழ்தனைய பஞ்சமுக வாசமமைத் தாய்ந்த**
**கமழ்திரையுங் காட்டவவை கொண்டுகவு ளடுத்தான்**

[தமிழ்-இனிமை; தழிய-தழுவிய; கரகம்-கமண்டலம்; அமைத்து - கூட்டி; திரை-வெற்றிலை; கவுள் அடுத்தான்-கன்னத்திலடக்கிக்கொண்டான்.]

**வல்லதெனை யென்னமறை வல்லன்மட வாயான்**
**என்னையெவ னென்னப்பொரு ளெய்திமுடி காறும்**
**சொல்லுமினு நீவிர்கற்ற காலமெனத் தேன்சோர்**
**சில்லென்கிளிக் கிளவியது சிந்தையில னென்றான்** 2027

[மறை-வேதம்; எல்லை-கற்றகாலம்.]

நிலவின் ஒளியோடு சூழ்ந்திருக்கும் அழகிய விண்மீன்களைப் போல, செம்பொன்னாலான பெரிய உண்ணுந் தட்டினைச் சுற்றிச் சிறிய உண் கலங்களை நிறையப் பரப்பி அறுசுவை உணவை ஏந்தி வந்து மகளிர் படைக்க, சீவகன், இதுபோல் இனிய உணவை நான் எங்கும் உண்டதில்லை என்று உண்டு மகிழ்ந்தான். பிறகு தமிழ்போலும்

இனிய சாயல் உடைய பணிமகளிர், மலர் தங்கும் தூயநீர் நிறைந்த கமண்டலத்தை ஏந்தியபடி இருக்க, அதை வாங்கிக் கை துடைத்து வாய் கழுவி அமர்ந்த அவனிடம், அப்பெண்கள் அமுதம்போல் சுகமளிக்கும் ஐந்து வகைப்பட்ட முகவாசத்தையுங் கூட்டி ஆய்ந்த வெற்றிலையோடு எடுத்து நீட்ட அவற்றை வாங்கித் தன் வாயிலடக்கிக் கொண்டான். உண்டு மகிழ்ந்த சீவகனிடம் சுரமஞ்சரி ஐயா, நீர் எதிலே வல்லவர் என்று கேட்க, அவன் பெண்ணே நான் மறையில், (மறைவான உருவங் கொள்வதிலே) வல்லவன் என்றான். அவன் மறையில், அதாவது வேதத்தில் வல்லவன் என்றுதான் கூறுகிறான் போலும் என்று நினைத்துக் கொண்ட சுரமஞ்சரி அதன் எல்லை என்ன என்று கேட்க; அவன் கருதியதை முடிக்கும் அளவே அதன் கால எல்லை என்று கூறினான். வேதத்தின் துணையால் தான் எண்ணியதை முடித்துக் கொள்ளும் தன்மையைத்தான் அவன் இப்படிக் கூறுகிறான் என்றெண்ணிய சுரமஞ்சரி நீவீர் எவ்வளவு காலம் அதைப் படித்தீர் என்று கேட்க, தேன்போல் இனிக்கும் குளிர்மொழி பேசும் பெண்ணே அக்காலம் கூற எனக்கு நினைவில்லை என்றான்.

**இன்னவர்க ளில்லைநிலத் தென்றுவியந் தேத்தி**
**அன்னமன மென்னடையி னாளமர்ந்து நோக்கப்**
**பின்னையிவள் போகுதிறம் பேசுமென வெண்ணித்**
**தன்னஞ்சிறி தேதுயின்று தாழவவ ணக்காள் 2028**

[அமர்ந்து நோக்க - விரும்பிப் பார்த்தனளாக; பின்னை-இனிமேல்; தன்னம் சிறிது-மிகச் சிறிது; தாழ-தலையைச் சாய்க்க.]

**கோலமணி வாய்க்குவளை வாட்கண்மட வாளைச்**
**சாலமுது மூப்புடைய சாமிமுக நோக்கிக்**
**காலுமிக நோஞ்சிறிது கண்ணுந்துயில் குற்றேன்**
**ஏலங்கமழ் கோதையிதற் கென்செய்குரை யென்றான் 2029**

[சால-மிக; சாமி-சீவகசாமி; நோம்-வருந்தும்; ஏலம்-
மயிர்ச் சாந்து.]

**மட்டுவிரி கோதைமது வார்குழலி னாள்தன்**
**பட்டுநிணர் கட்டில்பரி வின்றியுறை கென்றாள்**
**இட்டவணை மேலினிது மெல்லெனவ சைந்தான்**
**கட்டழல்செய் காமக்கட லைக்கடைய லுற்றான் 2030**

[மட்டு-பூந்தாது; பட்டு நிணர் கட்டில்-பட்டுக்கச்சாற்
பிணித்த கட்டில்; அணை-படுக்கை; பரிவு-
வருத்தம்; கட்டு-மிகுதி.]

இது கேட்டதும், உன்னைப் போன்ற திறமுடைய வர்கள் இப்பூமியில் இல்லை என்று புகழ்ந்து, அன்னம் போலும் மென்நடை பழகும் சுரமஞ்சரி அவனை அன்போடு பார்க்க, இனி இவள் நம்மைப் போய் வருக என்று வழியனுப்பத் தொடங்கிவிடுவாள் என்று கருதிய அவன் தலை சற்றே தூக்க மயக்கத்தால் தாழ, அதைக் கண்டு அவள் சிரித்தாள். அழகிய பவள மணிப் பேழை போன்ற வாயும், குவளை மலர் போலும் ஒளிமிக்க கண்களையும் உடைய சுரமஞ்சரியை நோக்கிச் சீவகன், 'வழி நடந்து கால்கள் மிகவும் நோகின்றன. கண்களும் மயங்கி உறங்குகின்றன. வாசச் சாந்தின் மணம் வீசும் கூந்தலுடைய பெண்ணே இதற்கு நான் என் செய்வேன் கூறுக' என்றான். மகரந்தப் பொடிமிகுந்த மாலையும், தேன் வழியுங் கூந்தலும் உடைய சுரமஞ்சரி அது கேட்டுத் தன்னுடைய பட்டுக் கச்சால் பிணித்த கட்டிலிலே வருத்த மின்றித் துயில்க என்றாள். பெருகிய நெருப்பைப் போல் சுடுகின்ற காமக்கடலைக் கடையத் தொடங்கிய சீவகனும் சுரமஞ்சரி தனக்கு அளித்த அப்பஞ்சணைமேல் மெல்லப் படுத்து இளைப்பாறினான்.

**காலையொடு தாழ்ந்துகதிர் பட்டதுக லங்கி**
**மாலையொடு வந்துமதி தோன்றமகிழ் தோன்றி**
**வேலனைய கண்ணியர்தம் வீழ்துணைவர் திண்டோள்**
**கோலமுலை யாலெழுதக் கூடியதை யன்றே 2031**

[பட்டது-மேற்றிசையிற் சாய்ந்தது; மகிழ்தோன்றி-மகிழ்வுண்டாகி.]

ஏந்துமலர்ச் சேக்கையகில் வளர்த்தவிடு புகையும்
ஆய்ந்தமலர்க் கோதையமிர் துயிர்க்குநறும் புகையும்
கூந்தலகிற் புகையுந்துகிற் கொழுமெனறும் புகையும்
வாய்ந்தவரை மழையினுயர் மாடத்தெழுந் தனவே 2032

[அமிர்து-இனிமை; வாய்ந்த-அழகு பொருந்திய மழை-வெண் மேகம்.]

ஆசிலடு பாலமிர்தஞ் சிறியஅயின் றம்பூங்
காசில்கடி மாலைகல நொய்யமதி கவற்கும்
தூசுநறுஞ் சாந்தினிய தோடிவகை டாங்கி
மாசின்மட வார்கண்மணி வீணைநரம் புளர்ந்தார் 2033

[அடுபாலமிர்தம் - காய்ச்சிய பாற்சோறு; சிறிய அயின்று-சிறிது உண்டு; காசில்-குற்றமில்லாத; கடி-வாசனை; நொய்ய கலம் - அணிதற்கு மெல்லியவான ஆபரணங்கள்; கவற்கும்-வருத்து கின்ற; தூசு-ஆடை.]

காலைப் பொழுதோடு ஊர்ந்து சென்ற ஞாயிறு மேற்கே மலைவாயில் வீழ்ந்து மறைந்தது. பிறகு வந்த மாலைப் பொழுதோடு நிலவு வந்து தோன்ற, மகிழ்ச்சி பொங்க வேல்போலும் கண்ணுடைய மகளிர், தாம் விரும்பிக் கூடும் துணைவர் திண்தோள்களைத் தம்முடைய அழகு முலையால் எழுதும் இராப்பொழுதும் வந்தது. மலர் விரித்த அப் பஞ்சணையில் அகில் கட்டை இட்டு வளர்த்த புகையும், தெரிந்தெடுத்துத் தொடுத்த மலர்மாலைக்கு ஏற்றிய இனிமை தரும் வாச நறும் புகையும், ஆடைக்கு ஊட்டிய நறுமணப் புகையும், கூந்தலுக் கேற்றிய வாச மணப் புகையும் மலைமேல் தவழும் முகிலென உயர்ந்த மாடத்தில் எழுந்து பரவியது. சுவையேறக் காய்ச்சிய பால் சோற்றைச் சிறிது உண்டு, குற்றமற்ற நறுமலர் மாலையும், மெல்லிய அணிகளும்,

அறிவை மயக்கும் வண்ண ஆடையும், வாசச் சந்தனமும், அழகிய தோடும் அணிந்து அழகிய மங்கையர் மாணிக்க வீணையின் மணி நரம்பு தடவி இன்னிசை மீட்டினர்.

பூஞ்சதங்கை மாலைபுகழ்க் குஞ்சிப்பொரு வில்லார்
வீங்குதிர டோளுந்தட மார்பும்விரை மெழுகித்
தீங்கரும்பு மென் றனைய இன்பவளச் செவ்வாய்த்
தேங்கொளமிர் தார்ந்துசெழுந் தார்குழையச் சேர்ந்தார்

[விரை-வாசனைச் சாந்து; ஆர்ந்து-உண்டு.]

பொன்னறையுள் இன்னமளிப் பூவணையின் மேலான்
முன்னியதன் மன்றலது முந்துறமு டிப்பான்
மன்னுமொரு கீதமது ரம்படமு ரன்றாற்கு
இன்னமிர்த மாகவிளை யாருமது கேட்டார் 2035

[முன்னிய-தான் கருதிய; மன்றலது-காந்தருவமணமான அதனை; கீதம்-பாட்டு; முரலுதல்-பாடுதல்.]

## வேறு

மன்ம தன்ம ணிக்கு ரன்ம ருட்டு மென்று மால்கொள்வார்
இன்ன தன்று இயக்க ரின்னி யக்க வந்த தென்றுதம்
பின்னு முன்னு நோக்குவார் பேது சால வெய்துவார்
கன்னி தன்ம னத்தி ழைத்த காளை நாமம் வாழ்த்துவார்

[மணி-அழகு; சால-மிக; பேது-மயக்கம்.]

பூஞ்சதங்கை மாலையும் புகழ்மிக்க தலைமுடியும் உடைய ஆடவர், தங்களது பருத்துத் திரண்ட தோளும் அகன்ற மார்பும் நிறைய வாசச் சாந்தினைப் பூசினர். இனிக்கும் கரும்பைத் தின்றதைப் போலச் சுவையூறும் பவளச் செவ்வாயின் இன்னமுதம் பருகி, அவர் அணிந்த மாலை வருந்த அணைந்து மகிழ்ந்தனர். பொன்னாலான அறையில் இனிய பஞ்சணைப் படுக்கையின் மேலிருந்த சீவகன், தான் எண்ணிய காந்தருவ மணத்தினை விரைந்து

முடிக்கக் கருதி, இன்னிசை மிக்கதோர் இனிய கீதத்தைப் பாடினான், இளமங்கையர் அதனை அமுதம் போல் செவீமடுத்துக் கேட்டனர். அவன் இசை கேட்ட மங்கையர், இது காமனது அழகிய குரலே என்றும், அக்காமன் குரலையும் இவன் குரல் மயக்கும் என்றும் மயங்கி நின்றனர். சிலர் இது அத்தன்மை உடையதன்று. இது இயக்கரால் இசைக்கப்படுவது என்று எண்ணித் தம் முன்னும் பின்னும் பார்த்து மயக்கம் மிகக் கொள்வர். இன்னும் சிலர் சுரமஞ்சரி தன் உள் மனத்துள் வைத்துப் போற்றும் சீவகனே இவ்வாறு பாடவல்லான் என்று நினைத்து அவன் பெயரை வாழ்த்தினர்.

**கொம்பி னொத்தொ துங்கி யுங்கு ழங்கன் மாலை தாங்கியும்**
**அம்பி னொத்த கண்ணி னார டிக்க லம்ம ரற்றவும்**
**நம்பி தந்த கீத மேந யந்து காண வோடினார்**
**வெம்பு வேட்கை வேனி லானின் வேற லானு மாயினான்**

[கொம்பின்-பூங்கொம்பினைப் போல; குழங்கல் மாலை-வாசனையையுடைய பூமாலை; அடிக் கலம்-பாதத்திலணிந்த ஆபரணங்கள்; வெம்பும்-விரும்புகின்ற.]

**தாம மாலை வார்கு ழல்த டங்க ணார்க்கு இடங்கழி**
**காம னன்ன காளை தன்க ருத்தொ டொத்த தாகலான்**
**மாம லர்த்தெ ரியலான் மணிமி டற்றி டைக்கி டந்த**
**சாம கீத மற்று மொன்று சாமி நன்கு பாடினான்** **2038**

[தாமமாலை-ஒளியையுடைய பூமாலை; இடம் கழி காமன் அன்னகாளை-தம்மிடத்தினின்றும் அகற்றப்படுவானாகிய மன்மதனை ஒத்த சீவகன்.]

**கள்ள மூப்பி னந்த ணன்க ஸிந்த கீத வீதியே**
**வள்ளி வென்ற நுண்ணி டைம ழைம லர்த்த டங்கணார்**
**புள்ளு வம்ம திமகன் புணர்த்த வோசை மேற்பு கன்று**
**உள்ளம் வைத்த மாம யிற்கு ழாத்தி னோடி யெய்தினார்**

[புள்ளுவமகன்-பறவைகளின் ஓசை யியல்பை அறிந்த வேட்டுவன்; மதி-அறிவு; புணர்த்த-வஞ்சித்த; புகன்று-விரும்பி.]

மலர்க்கொடி போல் அசைந்தும், மணமிக்க மாலைகளைத் தாங்கியும், அம்புபோலும் கண்ணுடைய பெண்கள் தம் காலில் அணிந்த சிலம்பு மெல்லிடை வாடுமென்று வருந்தி ஒலி செய்யவும், சீவகன் பொழிந்த இன்னிசை அமுதை உண்டு அவனைக் காண விரைந்து ஓடினர். மனம் விரும்பும் வேட்கையை வளர்த்த சீவகன், தன் இன்னிசைப் பாட்டினாலும், கண்ணுக்குத் தெரியாத தோற்றத்தினாலும், காமனிலும் வேறல்லாதவன் (காமனே) ஆயினான். அழகு விளங்கும் பூமாலையும், நீண்ட கருங்கூந்தலும், பெரிய கண்களும் உடைய பெண்களுக்குத் தம் வசம் ஆகமாட்டான் என்று தம்மிடமிருந்து நீக்கப் படுவானாகிய காமனைப் போன்ற காளையாகியசீவகன் தன் கருத்தோடு அவர் கருத்தும் ஒத்திருக்கக்கண்டு, கொன்றை மலர்மாலை அணிந்த இறைவனது நீலமணிக் கழுத்தில் கிடந்த சாமவேத கீதம் ஒன்றை இனிமையுறப் பாடினான். பொய்யாக முதுமைப் பருவந்தாங்கி அந்தணனாகி வந்த சீவகனின் இன்னிசைப் பாட்டின் வழியே, வள்ளிக் கொடியைப் பழிக்கும் மெல்லிடையும் குளிர்ந்த மலர்போலும் பெருங் கண்ணுடைய மகளிர் எல்லாம், தம்முடைய குரலினைப் போலவே ஓசை செய்து குரல் எழுப்பும் வேட்டுவன் அழைக்கின்ற குரல் மேல் ஆசை வைத்துச் செல்கின்ற மயில் கூட்டத்தைப் போல ஓடி அவனிருப்பிடம் அடைந்தனர்.

### வேறு

**இனிச்சிறி தெழுந்து வீங்கி யிட்டிடை கோறு நாங்கள்**
**எனக்கொறு கொறுப்ப போலு மிளமுலைப் பரவை யல்குற்**
**கனிப்பொறை மலிந்த காமர் கற்பக மணிக்கொம் பொப்பாள்**
**பனிப்பிறைப் பூணி னான்றன் பாண்வலைச் சென்று**
**பட்டாள் 2040**

[இட்டிடை-சிறிய இடை; கோறும்-கொல்வேம்; பொறை மலிந்த-பாரம் மிக்க; காமர்-அழகு; பாண்வலை-பாட்டாகிய வலையிலே; பட்டாள்-அகப்பட்டாள்.]

**அடிக்கல மரற்ற வல்குற் கலைகலந் தொலிப்ப வந்து**
**முடிப்பதென் பெரிது மூத்தேன் முற்றிழை யரிவை யென்ன**
**வடிக்கணா ணக்கு நாணித் தோழியை மறைந்து மின்னுக்**
**கொடிக்குழாத் திடையோர் கோலக் குளிர்மணிக்**
**கொம்பி னின்றாள் 2041**

[அடிக்கலம்-பாதத்திலணிந்த ஆபரணம்; கலை-மேகலை.]

**இளையவற் காணின் மன்னோ வென்செய்வீர் நீவி ரென்ன**
**விளைமதுக் கண்ணி மைந்தர் விளிகெனத் தோழி கூற**
**முளையெயிற் றிவளை யாரு மொழிந்தன ரில்லை யென்றோ**
**உளைவது பிறிது முண்டோ வொண்டொடி மாதர்க்**
**கென்றான் 2042**

[முளைஎயிறு - நாணல் முளைபோலும் பற்கள்; உளைவது-வருந்தும்படி; பிறிது-வேறு எதுவும்; விளிக-கெடுக.]

இந்நிலையில், சற்றே பருத்து, நாங்கள் மெலிந்த சிற்றிடையை வருத்திக் கொல்கிறோம் என்பதுபோல் விம்மிப் புடைத்த மார்பினையும், பரந்த அல்குலையும் உடையவளும் பழச் சுமை தாங்கி நிற்கும் கற்பக மணிக் கொடி போன்றவளுமாகிய சுரமஞ்சரி குளிர்ந்த பிறை போலும் பொற்பூண் அணிந்த சிவகனின் இன்னிசை வலையிலே வந்து சிக்கிக் கொண்டாள். அவன் இன்னிசை கேட்க அப்படி ஓடிவந்து நின்ற சுரமஞ்சரியிடம் 'காலில் அணிந்த பாதச் சிலம்பு ஒலிக்கவும், இடையில் அணிந்த மேகலை இன்னிசை கூட்டவும் ஓடிவந்து, நீ இங்கே செய்து முடிக்க வந்த வேலை என்ன? நானோ மிகவும் முதிர்ந்தவனாய் இருக்கின்றேன், அணிமணி புனைந்த ஆரணங்கே'

என்று சீவகன் கேட்டான். மாவடுப் போலும் விழியுடைய அவளோ வெட்கித் தலைகுனிந்து தன் தோழிக்குப் பின்னே மறைந்து கொண்டு, மின்னல் கொடிக் கூட்டத் திடையே தோன்றும் குளிர்ந்த அழகியதோர் மாணிக்கக் கொடிபோல் நின்றாள். (முற்றும் முதிர்ந்த என்னைக் காணவே இப்படி ஓடிவந்து நிற்கிறீர்களே) நீங்கள் எல்லாம் ஒரு இளைஞனைக் கண்டால் என்ன செய்வீர்கள் என்று சீவகன் கேட்டான். தேன் வடியும் முடிக் கண்ணி அணிந்த ஆடவர் பெயரும் இவ்விடத்துக் கூறக் கூடாது என்று தோழி கூறினாள். 'நாணல் முளைபோலும் பற்களுடைய இவளை மணம் பேச இளைஞர் யாரும் வரவில்லை என்ற காரணத்தாலோ ஆடவரை வெறுக் கின்றீர்கள்? அழகிய வளையணிந்த இவள் வருந்தி வெறுக்கும் விதமாக அவர்கள் இவளுக்குச் செய்த தவறெதுவும் உண்டோ?' என்றான்.

**வாய்ந்தவிம் மாதர் சுண்ணஞ் சீவகன் பழித்த பின்றைக்**
**காய்ந்தன ளென்று கூறக் காளைமற் றிவட்குத் தீயான்**
**மாய்ந்தனன் போலு மென்ன மாதரா ரொருங்கு வாழ்த்தி**
**ஆய்ந்தன ஸைய னுய்ந்தா னறிந்தன மதனை**
**யென்றார் 2043**

*[ஆய்ந்தனம்-அறிந்தனம்; காய்தல்-வெறுத்தல்.]*

**காலுற்ற காம வல்லிக் கொடியெனக் கலங்கி நங்கை**
**மாலுற்று மயங்க யாங்கள் மடக்கிளி தூது விட்டேம்**
**சேலுற்ற நெடுங்கட் செவ்வாய்த் தத்தைதன் செல்வங்**
**கண்டே**
**பாலுற்ற பவளச் செவ்வாய்த் தத்தையாற் பரிவு**
**தீர்ந்தேம் 2044**

*[கால் உற்ற - காற்றால் அலைக்கப்படுதலுற்ற; சேலுற்ற-சேல் மீனை ஒத்த; பால் உற்ற-பாலை உண்ட.]*

**அன்பொட்டி யெமக்கோர் கீதம் பாடுமின் அடித்தி யாரும்**
**முன்பட்ட தொழிந்து நுங்கண் முகவியர் முனிவு தீர்ந்தார்**

**பொன்தொட்டேம் யாமு நும்மைப் போகொட்டோம்**
**பாடல் கேளாது**
**என்பட்டு விடினு மென்றா ரிலங்குபூங் கொம்பொ**
**டொப்பார் 2045**

[அன்பொட்டி - எம்மிடத்து அன்பு செய்தலைப் பொருந்தி; அடித்தியார்-தலைவியார்; நுங்கண் முகவியர் - நும்மிடத்து முகம்புகுதலையுடைய ராய்; முனிவு-வெறுப்பு.]

'இம்மங்கை நல்லாள் சுரமஞ்சரி, தன் சுண்ணப் பொடியைச் சீவகன் பழித்த பிறகுதான் இவள் ஆடவரை வெறுக்கத் தொடங்கினாள்' என்று தோழிப் பெண்கள் கூறக்கேட்ட சீவகன், 'இவளுக்கு அத்தீமை புரிந்த காளை இறந்திருப்பான் போலும்' என்று கூற, அது கேட்ட தோழிப்பெண்கள் எல்லாம் 'சீவகன் நூறாண்டும் வாழ்க' என்று ஒருங்கே வாழ்த்தி, 'நாங்களும் ஆராய்ந்து பார்த்தோம். அன்பன் உயிரோடிருப்பதைத் தெரிந்து கொண்டோம்' என்றனர். 'புயலில் சிக்கிய காமவல்லிப் பூங்கொடி போல் சுரமஞ்சரி மயங்கிக் கலங்க நாங்கள் இளங்கிளி ஒன்றைத் தூதுபோக விட்டோம். மீன் போல நீண்ட கண்ணும் சிவந்த வாயும் உடைய காந்தருவ தத்தை யின் நலத்தைக் கண்டு வந்து, பாலுண்ட, பவளம் போன்ற சிவந்த வாயுடைய அக் கிளி கூறியதைக் கேட்டுத் துன்பந் தவிர்த்தோம். எனவே பெரியவரே, நீரும் எம்பால் அன்பு கொண்டு ஓர் இன்னிசை பாடுக! அடியாராகிய சுரமஞ்சரியும், தான் கொண்ட விரதத்தை நீக்கி உம் முகம் பார்த்துக் கோபம் தணிந்திருக்கின்றனர். எனவே திருமகள் போலும் இவள் மேல் ஆணையிட்டுக் கூறுகிறோம்; என்ன நேர்ந்தாலும் பாடல் கேளாமல் நாங்களும்மைப் போக விடோம்' என்றனர் அழகிய பூங்கொம்பு போன்ற அம்மங்கையர்.

**பாடுதும் பாவை பொற்பே பற்றிமற் றெமக்கு நல்கின்**
**ஆடமைத் தோளி னீர:். தொட்டுமேற் கேண்மி னென்ன**

**நாடியார் பேயைக் காண்பார் நங்கைகா ளிதுவு மாமே**
**ஆடுவ தொன்று மன்றிவ் ஆண்மக னுரைப்ப தென்றார்**

[பாடுதும்-பாடுவேம்; ஒட்டுமேல்-ஒப்புக்கொண்டால்; பொற்பு-பெருமை.]

**பட்டுலாய்க் கிடந்த செம்பொன் பவளமோ டிமைக்கு மல்குல்**
**ஒட்டினா ளதனை யோரா துலம்பொரு தோளி னானும்**
**பட்டவா ணுதலி னாய்க்குப் பாடுவல் காமன் தந்த**
**தொட்டிமை யுடைய வீணைச் செவிச்சுவை யமிர்த மென்றான் 2047**

[உலாய்-சூழ்ந்து; ஒட்டினாள்-உடம்பட்டாள்; தந்த-பாடின; தொட்டிமை-ஒற்றுமை; உலம்பு-கற்றூண்.]

**வயிரவில் லுமிழும் பைம்பூண் வனமுலை மகளிர் தம்முள்**
**உயிர்பெற வெழுதப் பட்டு வோவியப் பாவை யொப்பாள்**
**செயிரில்வாண் முகத்தை நோக்கித் தேன்பொதிந் தமுத மூறப்**
**பயிரிலா நரம்பிற் கீதம் பாடிய தொடங்கி னானே 2048**

[வயிரவில் உமிழும்-வயிரத்தின் ஒளியைச் சிந்துகின்ற; பயிர்-அருவருப்பு; பாடிய-பாட; செயிரில்-குற்றமற்ற.]

'ஆடும் மூங்கிலைப் போல வளைந்த தோளுடைய பெண்களே! இப்பாவை நல்லாள் தன் தோற்றப் பொலிவு தொடங்கி மற்ற எல்லாவற்றையும் எனக்குக் கொடுத்தால் நானும் பாடுகிறேன். இதற்கு உம் தலைவி உடன்படுவாளாயின் கேளுங்கள்' என்றான். இதைக் கேட்ட தோழிப் பெண்கள், பொன்னாலான தொரு பேயை எமக்குத் தரின் நான் பாடுகிறேன் என்று அவன் கூறியதாகக் கருதிக்கொண்டு, பொன்னல்லாத பேயினை விரும்பிக் காண்பவர் யார்? அல்லாமல் அப்படியொரு

பேயும் உலகில் இல்லை எனவே இதற்கு உடன் படுவோம் என்று கருதினவராய், பெண்களே இம்முதியவர் கருத்தை ஒப்புவோம் என்றனர். பட்டுத்துணி புனைந்து செம் பொன்னும் பவளமும் அணைந்து விளங்கும் அல்குலுடைய சுரமஞ்சரியும், சீவகன் கூறியதின் உட்பொருளை உணராமல் அதற்கு உடன்பட்டாள். உடனே கற்றூண் போல் பருத்த தோளுடைய சீவகனும், 'நெற்றிப்பட்டம் அணிந்த அழகிய நெற்றி உடைய உனக்கு, காமன் குரல் போலும் இனிமை தரும் என் வீணைக்குரலால் செவிக்கின்பந்தரப் பாடுகிறேன்' என்றான். வைர ஒளிவீசும் பொற்பூண் அணிந்த அழகிய முலையுடைய பெண்களுக்குள், உயிர் பெற்றுலவ எழுதிய ஓவியப்பாவை போன்ற சுரமஞ்சரியின் மாசற்ற முகத்தைப் பார்த்து இனிமை மிக்கத் தேன் போல அமுதம் ஊறும், யாழ் நரம்பினை மீட்டி மன மகிழ்ச்சி தருகின்ற இன்னிசைக் கீதம் பாடத் தொடங்கினான்.

## வேறு

**தொடித்தோள் வளைநெகிழத் தொய்யின் முலைமேல்**
**வடிக்கேழ் மலர்நெடுங்கண் வார்புயலுங் காலும்**
**வார்புயலுங் காலும் வளைநெகிழு நந்திறத்த**
**தார்வமுறு நெஞ்ச மழுங்குவிக்கு மாலை 2049**

*[தொடி-வட்டம்; கேழ்-நிறம்; புயல்-நீர்; காலும்-சொரியும்.]*

**ஐதேந் தகலல்கு லாவித் தழலுயிராக்**
**கைசோர்ந் தணலூன்றிக் கவுளலைப்பக்**
**கண்ணீர் கவுளலைப்பக் கையற்று யாமினையப்**
**புண்ணீரும் வேலிற் புகுந்ததான் மாலை 2050**

*[ஐது-மெல்லிய; ஆவித்து-கொட்டாவி கொண்டு; அழல் உயிரா-நெருப்புப் போல உயிர்த்து; கை அணலூன்றி-கையைக் கன்னத்திலே ஊன்று*

தலால்; கவுள்-கன்னம்; கையற்று-செயலற்று; இனைய-வருந்தும்படி.]

அவிழ்ந்தேந்து பூங்கோதை யாகத் தலர்ந்த
முகிழ்ந்தேந் திளமுலைமேற் பொன்பசலை பூப்பப்
பொன்பசலை பூப்பப் பொருகயற்கண் முத்தரும்ப
அன்புருகு நெஞ்ச மழுங்குவிக்கு மாலை 2051

[ஆகம்-மார்பு; முகிழ்ந்து-அரும்பி; அழுங்குவிக்கும்-வருத்தும்.]

வளைந்த தோளின் வளைகள் கழலும். தொய்யில் கொடி எழுதிய மார்பின் மேல், மாவடுப் போலும் நிற முடைய மலர்போன்ற பெரிய கண்கள் கண்ணீர் சொரியும். அப்படி விழிநீர் பெருகுதற்கும், வளை கழன்று செல்லு தற்குக் காரணமாக நம்மிடமுள்ள ஆர்வமிக்க நெஞ்சினை, மாலைப்பொழுது வந்து வருத்தும். மெல்லிய மேகலை அணிந்த அல்குலுடையவளே! கொட்டாவி விட்டு நெருப் பைப்போல் நெடுமூச் செறிந்து கைசோர்ந்து கன்னத்தில் ஊன்றப் பெருகிவரும் கண்ணீர் கன்னம் வருந்த வந்து வழியும். அப்படிக் கன்னத்தில் கையூன்றிக் கண்ணீர் சிந்தி நாம் வருந்தும்படி, புண்ணைப் பிளக்கும் வேலைப் போல் மாலைப்பொழுது வந்து புகுந்து வருத்தும். பூவிரிந்து மலர்ந்த மாலை அணிந்த பெண்ணே! மார்பிலே தோன்றி அரும்பி மலர்ந்த மென்முலைமேல் பொன் போலப் பசலை வந்து படரும். அப்படிப் பொன்போல் பசலை உண்டாக, காதோடு பொருந்த நீண்ட மீன் போலும் கண்களில் இருந்து முத்துப்போலும் கண்ணீர் சிந்த, அன்பினால் உருகும் உள்ளத்தை மாலைவந்து வருத்தும்.

## வேறு

பாடினான் தேவ கீதம் பண்ணினுக் கரசன் பாடச்
சூடக மகளிர் சோர்ந்து செருக்கிய மஞ்ஞை யொத்தார்

ஆடகச் செம்பொற் பாவை யந்தணற் புகழ்ந்து செம்பொன்
மாடம்புக் கநங்கற் பேணி வரங்கொள்வ னாளை
யென்றாள் 2052

[செருக்கிய-மயங்கிய; மாடம் - காமன்கோட்டம்;
மஞ்ஞை-மயில்.]

மடலணி பெண்ணை யீன்ற மணிமருள் குரும்பை மான
உடலணி யாவி நைய வுருத்தெழு முலையி னாளும்
அடலணி தோழி மாரு மார்வத்திற் கழும விப்பாற்
சுடலணி திலகம் போலக் கதிர்திரை முளைத்த தன்றே

[பெண்ணை-பனை; மணிமருள் - நீலமணியைப்
பழிக்கும்; கழும-கூட; உருத்து-தோன்றி.]

பொன்னியன் மணியுந் தாருங் கண்ணியும் புனைந்து
செம்பொன்
மின்னியற் பட்டஞ் சேர்த்தி யானெய்பால் வெறுப்ப வூட்டி
மன்னியற் பாண்டில் பண்ணி மடந்தைகோல் கொள்ள
வையம்
இன்னியற் பாவை யேற்பத் தோழியோ டேறி னாளே 2054

[சேர்த்தி-அணிவித்து; வெறுப்ப-மிக; ஊட்டி-உண்
பித்து; பாண்டில்-எருது; பண்ணி-ஊர்தற்
கேற்பப் பூட்டி; வையம்-வண்டி.]

இவ்விதமாகத் தேவகானம், இன்னிசைக்கு அரச னான சீவகன் பாடினான். அவன் பாடிய போது வளையணிந்த மங்கையர், சோர்ந்து மயங்கிய மயிலைப் போலாயினர். ஆடகப் பொன்னாலான பொற்பாவை போன்ற சுரமஞ்சரியும் சீவகனைப் பாராட்டி, காம வேளின் செம்பொன் மாடக் கோவிலுக்குச் சென்று நாளை நான் விரும்பி வரங்கேட்பேன் என்றாள். மடல் நிறைந்த பனை மரத்தின், நீலமணியைப் போல் மயக்கந்தரும் குரும்பை போன்ற ஆடவரின் உடலில் தங்கிய உயிர் வருந்த அழகோடு தோன்றி வளரும் மார்புடைய

சுரமஞ்சரியும் கண்டாரை வருத்தும் அழகுடைய அவள் தோழிமாரும், வரங்கேட்கப் போகும் ஆர்வத்தில் வந்து கூடினர். இப்புறத்தே நீலக் கடலுக்கிட்ட கோலப் பொட்டினைப் போல் கடலலைமேல் காலை மலர்ந்து கதிரவன் எழுந்தான். பொன்னாலான மணிமாலையும் முடிக்கண்ணியும் அணிவித்து மின்னைப்போலும் ஒளிவிடும் பட்டத்தைச் சூட்டி, ஆவின் பாலும் நறுநெய்யும் தெவிட்ட ஊட்டுவித்து, விரைந்து செல்லும் சிறந்த எருதினை வண்டியில் பூட்டி, ஒரு பெண், எருதைச் செலுத்தும் கோலினைக் கையில் எடுத்துக் கொள்ள, இனிமை மிகும் பண்புடைய பாவை சுரமஞ்சரி தன் தோழியுடன் வண்டியில் ஏறினாள்.

ஆடவ ரிரிய வேகி யஞ்சொல்லார் சூழக் காமன்
மாடத்து ளிழிந்து மற்றவ் வள்ளலை மறைய வைத்துச்
சூடமை மாலை சாந்தம் விளக்கொடு தூப மேந்திச்
சேடியர் தொழுது நிற்பத் திருமகள் பரவு மன்றே 2055

[இரிய - போக; காமன்மாடம் - காமன் கோயில்; இழிந்து-இறங்கி; பரவுதல்-போற்றுதல்.]

பொன்னிலஞ் சென்னி புல்ல இடமுழந் தாளை யூன்றி
மின்னவிர் மாலை மென்பூங் குழல்வலந் தோளின் வீழக்
கன்னியங் கமுகின் கண்போற் கலனணி யெருத்தங் கோட்டித்
தன்னிரு கையுங் கூப்பித் தையலீ துரைக்கு மன்றே 2056

[புல்ல-பொருந்தும்படி; கன்னியங்கமுகு-ஈனாத இளங் கமுகு; கலன்-ஆபரணம்; எருத்தம்-கழுத்து.]

தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையி னாயோர்
காமமிங் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின்
மாமணி மகர மம்பு வண்சிலைக் கரும்பு மான்றேர்
பூமலி மார்ப வீவ லூரொடும் பொலிய வென்றாள் 2057

[சேர்த்தின்-சேர்வித்தால்; ஈவல்-தருவேன்; தமனியக் குழை-பொற்குழை.]

வண்டியிலேறிச் செல்லும் சுரமஞ்சரி, ஆடவர்கள் விலகிப் போக, அழகிய சொல்லுடைய மகளிர் வந்து சூழ்ந்து கொள்ளக் காமன் கோவிலில் வந்து இறங்கினாள். சீவகனை அங்கோர் அறையில் மறைவில் வைத்து, காமனுக்குச் சூடுவதற்கு எடுத்து வந்த மாலையும் சந்தனமும், விளக்கும் தூபமும் ஏந்தித் தோழிப் பெண்கள் பணிந்து தொழுது நிற்க, திருமகள் போன்ற அவள் காமனை வழிபடலானாள். பொன் பரப்பிய தரையிலே தலைதோய வீழ்ந்து வணங்கியும், இடது முழங்காலைக் கீழே ஊன்றி அழகு விளங்கும் மாலையும் மென்மலர்க் கூந்தலும் வலப்புறத் தோளில் வந்து விழ, ஊனாத இளங்கமுகின் பாளை போன்ற பொன்மணி புனைந்த கழுத்தை வலப்புறம் சாய்த்து இரு கையும் கூப்பித் தொழுது பணியும் சுரமஞ்சரி, 'தாமரை மலர் போன்ற கண்ணும், சிவந்த வாயும் பொற்குண்டலமும் அணிந்த பெருமானே, இங்கோர் வரம் விரும்பி வந்திருக்கின்றேன். காளையாகிய சீவகன் மார்போடு நான் பொருந்தச் செய்வாயாகில், பெரிய மீனக் கொடியும், அம்பும், கரும்பு வில்லும், தேரும் ஊரும் பூமலர் சூடிய மார்புடையவனே; உன் கோவில் விளங்கக் காணிக்கையாக நான் தருவேன்' என்றாள்.

**மட்டவிழ் கோதை பெற்றாய் மனமகிழ் காத லானை**
**இட்டிடை நோவ நில்லா தெழுகென ஏந்தல் தோழன்**
**பட்டிமை யுரைத்த தோராள் பரவிய தெய்வந் தான்வாய்**
**விட்டுரைத் திட்ட தென்றே வேற்கணாள் பரவி மீண்டாள்**

[பட்டிமை உரைத்தது-வஞ்சனையாகக் கூறியதை, ஓராள் - அறியாதவளாய்; பரவிய - தன்னாற் போற்றப்பட்ட.]

**அடியிறை கொண்ட செம்பொ னாடகச் சிலம்பி னாளக்**
**கடியறை மருங்கி னின்ற மைந்தனைக் கண்டு நாணி**
**வடியுறு கடைக்க ணோக்க நெஞ்சுதுட் கென்ன வார்பூங்**
**கொடியுற வொசிந்து நின்றாள் குழைமுகத் திருவோ**
**டொப்பாள் 2059**

[இறை-தங்குதல்; துட்கு-பயம்; ஒசிந்து-வளைந்து.]

இலங்குபொன் னோலை மின்ன வின்முகஞ் சிறிது கோட்டி
அலங்கலுங் குழலுந் தாழ வருமணிக் குழையோர் காதிற்
கலந்தொளி கான்று நின்று கதிர்விடு திருவில் வீச
நலங்கனிந் துருகி நின்றாள் நாமவேற் காமர் கண்ணாள்

[கோட்டி-சாய்த்து; அலங்கல்-மாலை; நலம் கனிந்து-அன்பு முற்றி; கான்று-ஒளிவீசி.]

'தேன் வழிந்து பெருகும் மலர் மாலை அணிந்தவளே! நீ விரும்பிய காதலனைப் பெறுவாய். உன் சிற்றிடை நோவ நீ இன்னும் வருந்தி நிற்க வேண்டாம்; எழுந்து வீடு செல்க' என்று, சீவகன் தோழன் வஞ்சகமாக அங்கு மறைந்திருந்து கூறியதை உணராதவளாகி, தான் வணங்கிய தெய்வந்தான் அப்படி வரங்கூறி அருளியிருக்கிறதென்று நினைத்து, வேல் போலும் கண்ணுடைய சுரமஞ்சரி காமனை மீண்டும் வணங்கி வீடு திரும்பினாள். காலிலே தஞ்சமென் றடைந்த பொற்சிலம்பும், காதிலணிந்த குண்டலமும் விளங்கத் திருமகள் போலும் முகமுடைய சுரமஞ்சரி, அங்கே மணவறை அருகில் நின்ற சீவகனைக் கண்டதும் வெட்கமுற்று, மாவடுப் போலும் கடைக் கண்ணால் அவனை நோக்கி, நெஞ்சு திடுக்கிடப் பூங்கொடி போல் நாணித் தலைகுனிந்து நின்றாள். அழகிய பொன்னோலை மின்னி ஒளிவீச, தன் எழில் முகத்தைச் சிறிது வளைத்து, கூந்தலும் மாலையும் தாழ, அழகிய மாணிக்கக் குண்டலம், மற்றொரு காதுக் குண்டலத்தின் ஒளியை வாங்கி, உமிழ்ந்து இந்திரவில் போல் மின்னி மிளிர அன்பு பெருகி நெஞ்சுருகி நின்றாள், பகைவர்க்கு அச்சந்தரும் வேல்போலும் வடிவுடைய, இன்பூட்டும் எழிற் கண்ணுடைய சுரமஞ்சரி.

எரிமணிக் கலாபத் திட்ட விந்திர நீல மென்னும்
ஒருமணி யுந்தி நேரே ஒருகதிர் உமிழ்வ தேபோல்
அருமணிப் பூணினாட னவ்வயி றணிந்த கோலத்
திருமயி ரொழுக்கம் வந்தென் றிண்ணிறை கவர்ந்த தன்றே

[எரிமணிக் கலாபம்-ஒளி விளங்குகின்ற மணி களையுடைய மேகலை; உந்தி- கொப்பூழ்.]

தேறினேன் தெய்வ மென்றே தீண்டிலே னாயி னுய்யேன்
சீறடி பரவ வந்தே னருளெனத் தொழுது சேர்ந்து
நாறிருங் குழலி னாளை நாகணை விடையிற் புல்லிக்
கோறொடுத் தநங்கன் எய்யக் குழைந்துதார் திவண்ட
தன்றே 2062

[நாகு அணை விடையின்-பசுவை அணைந்த ஏறு போல; கோல்-மலரம்பு; திவண்டது-வாடியது.]

கலைபுறஞ் சூழ்ந்த வல்குற் கார்மயிற் சாய லாளும்
மலைபுறங் கண்ட மார்பின் வாங்குவிற் றடக்கை யானும்
இலைபுறங் கண்ட கண்ணி யின்றமி ழியற்கை யின்பம்
நிலைபெற நெறியிற் றுய்த்தார் நிகர்தமக் கிலாத நீரார்

[கலை-மேகலை; மலைபுறம் கண்ட-மலையைத் தோற்கச் செய்த; துய்த்தார்-நுகர்ந்தார்.]

ஒளிவீசும் மணிகள் நிறைந்த மேகலையில் வைத்துப் பதித்த இந்திர நீலமணி உந்திச் சுழிக்கு நேராக நின்று கதிர் வீசுவதைப் போல, அழகிய மணியணிகள் புனைந்த, அவளுடைய வயிற்றை அழகு செய்து நின்ற மயிரொழுங்கு வந்தென் மனத் திண்மையைக் கவர்ந்தது என்று சீவகன் வியந்து நின்றான் 'நின்னைத் தெய்வமென்றே தெரிந்தேன், உன்னுடல் தீண்டாமல் நான் உயிர் வாழேன், உன் அழகிய திருவடி பணிந்து வாழவே வந்தேன், அருள் புரிவாய்' என்று வணங்கி நெருங்கிச் சேர்ந்து மன்மதன் மலரம்பு எய்தலால், மணமுடைய கருங் கூந்தலுடைய வளைப் பசுவினைத் தழுவி அணையும் காளையைப் போல் சீவகன் தழுவி அணைத்தான். இறுகிய முயக்கால் அவனணிந்த மாலை வாடி வதங்கியது. மேலே அழகிய ஆடை அணிந்த அல்குலுடைய, கார்காலங் கண்டு தோகை விரித்தாடும் மயில் போன்ற சாயல் உடைய சுரமஞ்சரியும் தழை நிறைந்த முடிக்கண்ணி சூடிய, மலையைப் பழிக்கும் திரண்ட மார்பும், அகன்ற கையும்

உடைய சீவகனும், இனிய தமிழ் கூறும் இயற்கை புணர்ச்சி இன்பத்தை முறையோடு துய்த்துத் தமக்கெவரும் நிகரில் லாத தன்மை பெற்றனர்.

குங்குமங் குயின்ற கொம்மைக் குவிமுலை குளிர்ப்பத் தைவந்து
அங்கலுழ் மேனி யல்குற் காசுடன் றிருத்தி யம்பொற்
பொங்குபூஞ் சிலம்பிற் போர்த்த பூந்துக ளவித்து மாதர்
கொங்கலர் கோதை சூட்டிக் குழனலந் திருத்தி னானே

[குங்குமம் குயின்ற-குங்குமச் சாந்தைப் பூசிய; கொம்மை-பெருமை, வட்டமுமாம்; தைவந்து-தடவி; துகள்-தூசு.]

வேறு

வானார் கமழ்மதுவுஞ் சாந்து மேந்தி மதுத்துளித்து வண்டுஞ் சுரும்பு மூசும்
தேனார் பூங்கோதாய் நினக்குக் காமன் சிலையிரண்டுஞ் செவ்வனே கோலித் தந்தான்
தானாரப் பண்ணித் தடறு நீக்கித் தண்குருதி தோய்த்துத் தகைமை சான்ற
ஊனார்ந்த வோரிணை யம்புந் தந்தா னென்னை யுளனாக வேண்டி னானே 2065

[மூசுதல்-மொய்த்தல்; ஆர்தல்-உண்ணுதல்; கோலி-வளைத்து; தடறு-உறை; ஊன்-மாமிசம்.]

கண்ணக்க கண்ணிக் கமழ்பூங் குழற்க ரும்பேர் தீஞ்சொலாள் கதிர்மு லைகளின்
வண்ணக்கு வானு நிலனு மெல்லாம் விலையே மழைமின்னு நுசுப்பி னாளைப்
பெண்ணுக் கணியாக வேண்டி மேலைப் பெரியோர் பெருமான் படைத்தா னென்று
புண்ணக்க வேலான் புகழ நாணிப் பூநோக்கிப் பூக்கொசிந்த கொம்பொத் தாளே 2066

[கள் நக்க கண்ணி-தேனைச் சிந்தவிட்ட பூமாலை; வண்ணக்கு-வண்ணத்துக்கு, அழகுக்கு.]

குங்குமக் குழம்பு பூசிய பருத்துக் குவிந்த மார்பு குளிரத் தடவி, அழகொழுகும் மேனி தொட்டு அல்குல் தழுவிய மேகலைக் காசுகள் திருத்தி, ஒலிக்கும் பாதச் சிலம்பில் படிந்த பூ மகரந்தப் பொடிகளைத் துடைத்து, சுரமஞ்சரிக்குத் தேன் வழியும் புது மலர் மாலை சூட்டிச் சரிந்த அவள் கூந்தலையும் சீவகன் திருத்திவிட்டான். பிறகு 'மிக உயர்ந்த தேனும் சாந்தமும் நிறைந்து படிந்த மலர்களில் துளிர்க்கும் தேனினை உண்ண, தும்பியும் வண்டும் வந்து மொய்க்கும் மலர்மாலை அணிந்தவளே! உனக்குக் காமவேள் தன் கைவில்லையும் சேமவில்லையும் வளைத்து அழகிய இரு புருவமாய் அமைத்துத் தந்திருக்கிறான். அல்லாமல் அவன் தான் தாழ்வடைய, பசிய செங்குருதி சேர்த்து, அழகோடு கூட்டிச் சதையாலமைத்த இரண்டு கண்களைக் கூரம்புகளாக உனக்குத் தந்திருக்கின்றான். இத்தோடு நில்லாமல் என்னையும் அக்கூரம்புக்கு இலக்காக்கி இருக்கிறான். தேன் சிதறும் பூமாலையும், வாசநெய் மணக்கும் பூ முடித்த கருங்கூந்தலும், கரும்பைப்போல் இனிக்கும் அழகிய சொல்லும் உடையவளே, ஒளிவீசும் உன் பூமார்பின் அழகுக்கு இவ்விண்ணும் மண்ணும் ஈடாகுமோ? மழையிடை நெளியும் மின்னல் போலும் இடை உடைய உன்னைப் பெண்ணினத்தின் லட்சியமாக இருக்க விரும்பி முன்னாள் மூத்தோர் தலைவனாகிய பிரமன் படைத்திருக்கிறான்' என்று, பகைவர் உடலைப் புண்செய்யும் வேலான் புகழ்ந்து போற்றினான். குவளை மலர் போலும் கண் விழித்து நோக்கும் சுரமஞ்சரி அதுகேட்டு வாடிய மலர்க்கொடி போல் நாணி நின்றாள்.

## வேறு

**இறங்கிய மாதர் தன்னை யெரிமணிக் கடகக் கையாற்**
**குறங்கின்மேற் றழுவி வைத்துக் கோதையங் குருதி வேலான்**
**அறந்தலை நீங்கக் காக்கு மரசன்யா னாக நாளைச்**
**சிறந்தநின் னலத்தைச் சேரே னாய்விடிற் செல்க**
**வென்றான் 2067**

[இறங்கிய மாதர் தன்னை - நாணங்கொண்ட சுரமஞ்சரியை; குறங்கு-துடை; அறம் தலை நீங்கக் காக்கும் அரசன்-தருமம் தன்னிடத்தி னின்றும் நீங்கும்படியாக உலகைக் காவல் செய்கின்ற கட்டியங்காரன்.]

வில்லிடு மணிசெ யாழி மெல்விரல் விதியிற் கூப்பி
நல்லடி பணிந்து நிற்ப நங்கைநீ நடுங்க வேண்டா
செல்கெனச் சிலம்பு செம்பொற் கிண்கிணி மிழற்ற வொல்கி
அல்குற்கா சொலிப்ப ஆயம் பாவைசென் றெய்தி னாளே

[வில்லிடு மணிசெய் ஆழி-ஒளிவிடுகின்ற மணியாற் செய்த மோதிரத்தையுடைய; ஆயம்-தோழியர் கூட்டம்.]

பருமணிப் படங்கொள் நாகப் பையெனப் பரந்த அல்குல்
எரிமணிப் பூணி னானுக் கின்னல மொழிய வேகித்
திருமணிச் சிவிகை யேறிச் செம்பொனீண் மாடம் புக்காள்
விரிமணி விளங்கு மாலை வெம்முலை வேற்க ணாளே

[பை-படம்; நலம் ஒழிய-அன்பு நிற்க; சிவிகை-பல்லக்கு.]

அப்படி நாணி நின்ற சுரமஞ்சரியை, ஒளிவிளங்கும் மணிகள் பதித்த பொற் கடகம் அணிந்த கையால் தழுவித் தன் மடிமீதிருத்தி மாலை அணிந்த, குருதிக் கறை படிந்த வேலுடைய சீவகன் கூறினான்! 'அறநெறி தவற அரசாளும் கட்டியங்காரன் ஆவேன், நாளை மீண்டும் வந்து நானுன் இன்பநலம் நுகராமல் போவேனே யானால். எனவே நீ இப்போது செல்க' என்று போக விட்டான். ஒளிவீசும் மணிக்கற்கள் பதித்த மோதிரம் அணிந்த மெல் விரல்களைக் கூட்டிக் கரங்கூப்பி அவளும் திருவடி பணிந்து நின்றாள். சீவகன், பெண்ணே! நீ வருந் தாது செல்க என்றான். பாதச் சிலம்பிசைக்க, செம்பொன் கிண் கிணி பாட, மேகலைக் காசொலிக்க ஆடி நடந்து

சுரமஞ்சரியும், தோழியர் கூட்டத்தை அடைந்தாள். பெரிய நாகமணியைத் தலையிலே கொண்ட பாம்பின் படம்போலப் பரந்த அல்குலும், மிக்க பேரொளி வீசும் மணிமாலையும், விம்மிப் புடைத்த பூமார்பும் வேல் போலும் கண்ணும் உடைய சுரமஞ்சரி, ஒளிவீசும் பொற் பூண் அணிந்த சீவகன்பால் இனிய அன்பு வைத்து, அழகிய மணிச்சிவிகையி லேறிப் பொன்னாலான நீள்மாட மாளிகையை அடைந்தாள்.

திருவிற்றான் மாரி கற்பான் றுவலைநாட் செய்வ தேபோல்
உருவிற்றாய்த் துளிக்குந் தேற லோங்குதார் மார்பன் தோழர்
பொருவிற்றா னம்பி காம திலகனென் றிருந்த போழ்திற்
செருவிற்றாழ் நுதலி னாள்கண் மணத்திறஞ் செப்பு கின்றார் 2070

[உருவிற்றாய்-வடிவுடையதாய்; துவலை-துளி.]

கனைகட லமுதுந் தேனுங் கலந்துகொண் டெழுதப் பட்ட
புனைகொடி பூத்த தேபோற் பொறுக்கலா நுசுப்பிற் பாவை
நனைகுடைந் துண்டு தேக்கி நன்மணி வண்டு பாடும்
புனைகடி மாலை மாதர் திறத்திது மொழிந்து விட்டார்

[கனைகடல்-ஒலிக்கின்ற கடல்; நனை - அரும்பு; தேக்கி-வயிற்றை நிறைத்து; கடி-வாசனை; திறத்து-உறவினரிடத்து.]

ஐயற்கென் றுரைத்த மாற்றங் கேட்டலு மலங்க னாய்கன்
வெய்யதேன் வாய்க்கொண் டாற்போல் விழுங்கலோ டுமிழ்தல் தேற்றான்
செய்வதெ னோற்றி லாதே னோற்றிலா டிறத்தி னென்று
மையல்கொண் டிருப்ப வப்பாற் குமரிதன் மதியிற் சூழ்ந்தாள் 2072

[மாற்றம்-வார்த்தை; வெய்ய தேன்-வெப்பத்தை யுடைய தேனை; மையல்-மயக்கம்.]

அழகிய வானவில் மழைபொழியக் கற்பதற்கு நீர்த் துளியை வாங்கிக் கொள்வது போன்ற வடிவுடைய தேன் துளிர்க்கும் மலர்மாலை அணிந்த வீங்கு புகழ் மார்புடைய சீவகனின் தோழர் அனைவரும் 'நாம் காம திலகன் என்று போற்றத் தகுந்தவனே சீவகன்' என்று மகிழ்ந்திருந்த போதில், போருக்குரிய வில்லைப் பழிக்கும் புருவமுடைய சுரமஞ்சரியிடம் மணவினை பற்றிப் பேசலானார்கள். ஒலிக்கும் கடலில் கிடைத்த அமுதும் தேனும் ஒன்றாகக் கலந்து எழுதிய அழகிய பூங்கொடி, இருமலர் பூத்ததே போல் உள்ள மார்பிரண்டையும் தாங்க இயலாத சிற்றிடை உடைய பெண்கள், மலரைக் குடைந்து தேனைப் பருக வயிறு நிறைந்த நீலமணி போலும் வண்டுகள் மொய்த்துப் பாடும், வாசமலர் மாலையணிந்த சுரமஞ்சரியின் சுற்றத்தாரிடம் மணத்தினைப்பற்றிப் பேசத் தக்காரை அனுப்பினர். சீவகனுக்குச் சுரமஞ்சரியை மண முடித்துத் தரவேண்டும் என்று கூறிய அவ் வார்த்தையினைக் கேட்ட அழகிய மாலையணிந்த குபேரதத்தன், சுரமஞ்சரியின் தந்தை சூட்டோடு வாயில் ஊற்றிய தேனை உள்ளே விழுங்கவும் முடியாது, வெளியே உமிழவும் முடியாது திகைப்பதைப் போல, அத் திருமணத்துக்கு உடன்படவோ, மறுக்கவோ முடியாமல், நல்வினை இல்லாத அவளுக்காக நல்வினையில்லாத நான் என்செய்வேன் என்று சிந்தை தடுமாறி நின்றபோது, மற்றோர் பக்கம் சுரமஞ்சரி தன் அறிவால் அறத்தொடு நிற்றலை எண்ணிய படி இருந்தாள்.

**பொற்பமை தாமக் கந்து பொருந்திய மின்னுப் போல**
**எற்பக வெரியு மாலைப் பவளத்தூண் பொருந்தி யின்னீர்க்**
**கற்பெனு மாலை வீசி நாணெனுங் களிவண் டோப்பிச்**
**சொற்புக ரின்றித் தோழிக் கறத்தினோ டரிவை**
**நின்றாள் 2073**

[பொற்பு - அழகு; தாமக்கந்து - மாலையையுடைய தூணை; எல்பக எரியும்-சூரியன் தோற்கும்படி

ஒளிவிளங்குகின்ற; ஓப்பி-ஓட்டி; சொற்புகர்-சொற்குற்றம்.]

வழிவளர் மயிலஞ் சாயற் பவழப்பூம் பாவை யன்ன
கழிவளர் கயற்க ணங்கை கற்பினை யறிந்து தோழி
அழிமது மாலை சேர்த்தி யடிபணிந் தார வாழ்த்திப்
பொழிமதுப் புயலைங் கூந்தற் செவிலியைப் பொருந்திச்
சொன்னாள் 2074

[கழிவளர்கயல்-உப்பங்கழியில் வளர்ந்த கயல்மீன்; அழிமது-ஒழுகுகின்ற தேனையுடைய.]

நனைவளர் கோதை நற்றாய் நங்கைக்கீ துள்ள மென்று
சுனைவளர் குவளை யுண்கட் சுமதிக்குச் செவிலி செப்பக்
கனையிருட் கனவிற் கண்டேன் காமர்பூம் பொய்கை வற்ற
அனையதாங் கன்னி நீரின் றற்றதா நங்கைக்
கென்றாள் 2075

[நனை-அரும்பு; தேன் எனலுமாம். கனைஇருள்-மிக்க இருளிடத்து.]

அழகுமிக்க மாலை பொருந்திய தூணோடு சேர்ந்து நின்ற மின்னலைப் போல, சூரிய ஒளி கெட விளங்கும் மணிமாலை தொங்கும் பவளத் தூணைப் பொருந்தி நின்று, இனிய கற்பு என்னும் மாலையை வீசி, நாணம் என்னும் கருவண்டை ஓட்டிச் சொற்குற்றம் நேராது சுரமஞ்சரி தோழியொடு அறவழியில் நின்றாள். வழி வழியாக வந்த அறவழியில் வளர்ந்த மயில் போலும் அழகிய சாயலுடையவளும் பவளத்தாலாக்கிய பாவை போன்றவளும் உப்பங்கழியில் வளர்ந்த மீன்போலும் கண்ணுடையவளுமாகிய சுரமஞ்சரியின் கற்பினைத் தோழி அறிந்து, தேன் வழியும் மலர் மாலையை அவளுக்கு அணிவித்து, அடிபணிந்து வாழ்த்தினாள். தேன் வழியும் கார்முகில் போன்ற ஐம்பால் கூந்தலுடைய அத்தோழி சுரமஞ்சரியின் செவிலித் தாயை அடைந்து, அவளிடம் சுரமஞ்சரி அறத்தொடு நின்றதை அறிவித்தாள்.

'தேன் வழியும் மலர்மாலை அணிந்த நற்றாயே! சுரமஞ்சரியின் உள்ளக் கருத்தும் நிலையும் இதுவாகும்' என்று, சுனையிலே பூத்த குவளை மலர்போலும் மையுண்ட கண்ணுடைய சுமதிக்குச் செவிலித்தாய் சென்று கூறினாள். அதுகேட்ட நற்றாய் சுமதி, 'நள்ளிரவில் நான் கனவில் அழகிய மலர்ப் பொய்கையில் ஒன்று வற்றக் கண்டேன். அது சுரமஞ்சரிக்குக் கன்னித்தன்மை நீங்கிய இதையே குறித்தது போலும்' என்றாள்.

**கெண்டையுஞ் சிலையுந் திங்க ளிளமையுங் கிடந்து
தேங்கொள்
தொண்டையங் கனியு முத்துந் தொழுதக வணிந்து தூங்கும்
குண்டல முடைய திங்க ளிதுவெனு முகத்தி தாதை
வண்புகழ்க் குபேர தத்தன் கேட்டனன் மனைவி
சொன்னாள் 2076**

*[தூங்கும்-தொங்குகின்ற; தாதை-தந்தை; தேங்கொள்-இனிமை கொண்ட.]*

**செருவிளைத் தனலும் வேலோய் சிறுமுதுக் குறைவி தானே
பெருவளைப் பிட்டுக் காத்த கற்பிது போலு மையன்
கரிவிளைத் தாய்ந்த சுண்ணம் வாட்டின னென்று கண்டாய்
திருவிளை தேம்பெய் மாரி பாற்கடற் பெய்த
தென்றாள் 2077**

*[வளைப்பு-காவல்; கரி-சான்று; தேம்பெய்-தேன் பெய்யும்.]*

**கேட்பது விரும்பி நாய்கன் கிளைக்கெலா முணர்த்தி
யார்க்கும்
வேட்பன வடிசி லாடை விழுக்கலன் மாலை சாந்தம்
கோட்குறை வின்றி யாக்கிக் குழுமியங் கறங்கி யார்ப்ப
நாட்கடி மாலை யாற்கு நங்கையை நல்கி னானே 2078**

*[கிளை-சுற்றம்; வேட்பன-விரும்பப்படுவனவாகிய; கோட்குறைவின்றி-கொள்ளுதலிற் குறைபாடில்லாமல்; குழுமு இயம்-கூடிய வாத்தியங்கள்.]*

கெண்டை மீன் போன்ற கண்களும், வில்போன்ற புருவமும், பிறைநிலவு போன்ற நெற்றியும் அமைந்து, தேன்போல் இனிக்கும் கொவ்வைக் கனியிதழும், முத்துப் பற்களும் அமைந்து, தொங்கும் காதுக் குண்டலம் அணிந்த முழுமதி போன்ற முகமுடைய சுரமஞ்சரியின் தந்தையாகிய குபேரதத்தன் அவன் மனைவி சுமதியிடம் சென்று கேட்க அவள் கூறுவாள்: 'போர் விளைத்து முழங்கும் வேலுடையவனே, சிறு பருவத்திலேயே பேரறிவு பெற்ற சுரமஞ்சரி தானே பெரிதும் காவல் செய்து காத்துக் கொண்டதாகிய இக்கற்பு, முன்பு சீவகன் சான்று காட்டித் தன் சுண்ணத்தைத் தாழ்ந்தது என்று கூறியதை எண்ணிக் காவல் செய்து கொண்டது போலும்! என்றாலும் அக்காவலும் கற்பு நோன்பும் இப்போது, செல்வம் பொங்கப் பொழிகின்ற தேன்மாரி பாற்கடலில் பெய்தது போலாயிற்று' என்றாள். குபேரதத்தன் இதை மகிழ்வோடு கேட்டுத் தன் சுற்றத்தார்க்கெல்லாம் அறிவித்து, விரும்பி வரும் யாவர்க்கும் உணவும் உடையும் பொற்பூணும் பூமாலையும் சந்தனமும் குறைவின்றிக் கொள்ளக் கொடுத்து, பலவித மங்கல வாத்தியங்களும் கூடி ஒலிக்க, நல்லதோர் நாளிலே மணமிக்க மாலையணிந்த சீவகனுக்குச் சுரமஞ்சரியை மணம் முடித்துக் கொடுத்தான்.

**பரியகஞ் சிலம்பு பைம்பொற் கிண்கிணி யார்ந்த பாதத்**
**தரிவைய ராடன் மிக்கா ரருமணி வீணை வல்லார்**
**உரியநூற் றெண்மர் செம்பொ னொன்றரைக் கோடி மூன்றூர்**
**எரியழன் முன்னர் நேர்ந்தே னென்மகட் கென்று சொன்னான் 2079**

[பரியகம்-காற்சரியென்னும் ஆபரணம்; நேர்தல்-கொடுத்தல்.]

**மாசறு மணியு முத்தும் வயிரமு மொளிரு மேனி**
**ஆசறு செம்பொ னார்ந்த அலங்கலங் குன்ற னானும்**

தூசுறு பரவை யல்குற் றூமணிக் கொம்ப னாளும்
காசறக் கலந்த வின்பக் கடலகத் தழுந்தி னாரே 2080

[தூசு-ஆடை; ஆசற-குற்றமற்ற.]

பொன்வரை பொருத யானைப் புணர்மருப் பனைய வாகித்
தென்வரைச் சாந்து மூழ்கித் திரள்வடஞ் சுமந்து வீங்கி
மின்வளர் மருங்குல் செற்ற வெம்முலை மணிக்கண் சேப்பத்
தொன்னலம் பருகித் தோன்ற றுறக்கம்புக் கவர்க
ளொத்தான் 2081

[சேப்ப-சிவப்ப; வீங்கி-பருத்து; மருங்குல்-இடை; செற்ற-வருத்திய.]

'காற்சரியும் சிலம்பும் பசும்பொன் கிண்கிணியும் அணிந்த காலுடைய பெண்கள், ஆடல் வல்லவர், அழகு மணிகளிழைத்த யாழில் வல்லவர் ஆகிய சிறந்த நூற்றியெட்டு பெண்களும், ஒன்றரைக்கோடிப் பொன்னும், மூன்று ஊர்களும் என் மகளுக்கு எரிநெருப்பின் முன்னே சீதனமாகத் தந்தேன்' என்று குபேரதத்தன் கூறினான். களங்கமில்லாத மணியும் முத்தும் வயிரமும் ஒளிவிடும் மேனியில், தூய சிவந்த பொன்னாலான மாலையணிந்த, நறும் பொற்குன்று போன்றவனும், அழகிய ஆடை அணிந்த பரந்த அல்குலுடைய எழில் மணிக்கொடி போன்றவளும் குற்றமறக் கூடி இன்பக்கடலில் அழுந்தினர். பொன் மலையோடு போர் செய்த யானையின் தந்தக்கொம்பு போன்றதாய், பொதியமலைச் சந்தனக் குழம்பிலே தோய்ந்ததாய், நிறைய முத்துச்சரஞ் சுமந்து பருத்து, மின்னல் கொடிபோன்ற இடையை வருத்தும் பருத்த மார்பின் நீலமணிக் கண்கள் சிவக்க, மிக்க பேரின்பம் நுகர்ந்து சீவகன் சொர்க்க வாழ்வு பெற்றவன் ஆனான்.

வரிக்கழற் குருசின் மார்பு மடந்தைவெம் முலையுந் தம்முட்
செருச்செய்து திளைத்துப் போரிற் சிலம்பொலி கலந்த
பாணி

அரிப்பறை யனுங்க ஆர்க்கு மேகலைக் குரலோ டீண்டிப்
புரிக்குழல் புலம்ப வைகிப் பூவணை விடுக்க லானே 2082

[வரி-கீற்று; பாணி-தாளம்; அனுங்க-கெட; ஈண்டி-
ஈண்ட, நெருங்க; வைகி-தங்கி.]

மணியியல் வள்ளத் தேந்த மதுமகிழ்ந் தனந்தர் கூர
அணிமலர்க் குவளைப் பைம்போ தொருகையி னருளி யம்பொற்
பிணையனா ளருகு சேரிற் பேதுறு நுசுப்பென் றெண்ணித்
துணையமை தோள்க டம்மாற் றோன்றறான் புல்லி னானே

[வள்ளம்-கிண்ணம்; துணை அமை-ஒப்பில்லாத;
அனந்தர்-மயக்கம்; பேதுறும்-துன்புறும்.]

மல்லலங் கங்கை போலும் பலர்முயங் கார மார்பிற்
புல்லன்மின் போமின் வேண்டா வென்றவள் புலந்து நீங்க
முல்லையங் கோதை யொன்றும் பிழைப்பிலேன் முனிய நீயென்று
அல்லலுற் றரத்த மார்ந்த சீறடி தொழுதிட் டானே 2084

[புலந்து-ஊடல்கொண்டு; ஒன்றும்-சிறிதும்; பிழைப்பு-
தவறு.]

வரியுடைய கழல் அணிந்த சீவகன் மார்பும் சுரமஞ்சரியின் பருத்த முலையும் தம்முள் போரிட்டு, அப்போரிலே திளைத்துத் தாளத்தோடொலிக்கும் பறை யோசை கெட, சிலம்பும் மேகலையும் சேர்ந்தொலிக்க, முறுக்கிய கூந்தல் கலைந்து குலையவும் பஞ்சணையை விடாதவனாய் இன்பந் துய்த்தான். பின்னர் மணிகள் இழைத்த பொற்கிண்ணத்திலே மதுவை ஏந்திக் கொடுக்க அவள் அதனைப் பருகி மகிழ்ந்து மயக்கங் கொள்ள, அழகிய குவளை மலரை ஒருகையால் அவள் கூந்தலுக்குத் தந்து பொன் மான் போன்ற அவளை இறுகத் தழுவினால் அவள் இடைமுறியும் என்று நினைத்துத் தன் அழகிய தோள்களால் அணைத்து மார்புறத் தழுவிக்கொண் டான். 'வளமிகு கங்கை போலப் பலரும் பலமுகமாகத்

தழுவும் மார்பினால் (என்னை இப்போது மார்புறத் தழுவாததினால்) என்னை இனித் தழுவ வேண்டாம்; தொடாமல் போய்விடுக' என்று கூறி அவள் ஊடி ஒதுங்கினாள். அவன் 'முல்லை மலர்மாலை அணிந்தவளே! நான் ஏதும் பிழைசெய்யவில்லை, என்னைக் கோபிக்காதே' என்று, வருந்தி செக்கச் சிவந்த அவள் சிற்றடிகளைப் பணிந்தான்.

வட்டிகைப் பாவை நோக்கி மகிழ்ந்திருந் திலிரோ
வென்னாத்
தொட்டிமை யுருவந் தோன்றச் சுவரையே பொருந்தி
நின்றாய்
கட்டழ குடைய நங்கை நீயெனக் கருதிக் கண்ணான்
ஒட்டியா னோக்கிற் றென்றா னொருபிடி நுசுப்பி னாட்கே

[வட்டிகைப்பாவை-வட்டிகையால் எழுதிய பாவை போல்வாள்; என்னா-என்று; நோக்கிற்று-நோக்கியது.]

நுண்டுகி னெகிழ்ந்த வல்குன் மணிபரந் திமைப்ப நொந்து
கண்களை யிடுகக் கோட்டிக் காமத்திற் செயிர்த்து
நோக்கிக்
குண்டல மிலங்கக் கோதை கூந்தலோ டவிழ்ந்து சோர
ஒண்டொடி யூடி நின்றா ளொளிமணிப் பூங்கொம்
பொப்பாள் 2086

[மணி-மேகலையிற் கட்டிய மணிகள்; இடுகக்கோட்டி-சுருங்கப் பார்த்து; செயிர்த்து-கோபித்து.]

கிழவனாய்ப் பாடி வந்தென் கீழ்ச்சிறை யிருப்பக் கண்டேன்
எழுதிய பாவை நோக்கி யிமையவித் திருப்பக் கண்டேன்
ஒழிகவிக் காம மோரு ரிரண்டஃக மாயிற் றென்றாங்கு
அழுதகண் ணீர்கண் மைந்த னாவிபோழ்ந் திட்டவன்றே

[சிறை-காவலிடம்; எழுதிய-எழுதும் பொருட்டு; அஃகம்-முறைமை.]

வட்டிகையால் சுவரில் எழுதிய ஓவியப் பாவையை நோக்கி நீர் மகிழ்ந்திருந்தீரோ என்று கேட்ட பிடி அளவே இடை உடைய சுரமஞ்சரிக்கு 'பாவையும் நீயும் ஒன்றுபோல் தோன்ற நீ சுவரோடு பொருந்தி நின்றனை. அவ்வுருவம் மிக்க பேரழகுடைய நீயே என்று நான் நினைத்துக் கண்ணாலே ஒப்பு நோக்கினேன்' என்று கூறியும் கேளாது மெல்லிய ஆடை நெகிழ்ந்து, அல்குலின் மேலணிந்த மேகலையின் ஒளி பரவ வருந்தி, கண்களைச் சுருக்கிப் பார்த்து, காமத்தால் சினந்து நோக்கி, குண்டலம் ஆடக் கூந்தல் கலைந்து மாலை அவிழ. அழகிய வளையல் அணிந்த ஒளிமிக்க மணிக் கொடி போன்றவள் அவனோடு ஊடி நின்றாள். 'கிழவனைப் போல் உருக்கொண்டு நீர் என் காவல் மாளிகையில் வந்து பாடியிருப்பதைக் கண்டேன். சுவரில் தீட்டிய சித்திரத்தை நோக்கி இமையாமல் இருப்பதையும் பார்த்தேன்; ஓர் ஊரில் இரு வழக்கு நிகழ்ந்தது. அதாவது அன்று நான் மிகவும் விரும்பப்பட்டேன்: இன்று இதே இடத்தில் என்னைக் காட்டிலும் ஓவியம் உயர்வாகிவிட்டது. எனவே இக்காம இன்பம் ஒழிக' என்று சுரமஞ்சரி ஊடலால் அழுது வடித்த கண்ணீர் வெள்ளம் சீவகன் உயிரை வருத்தியது.

**அலங்கல்தா தவிழ அஞ்செஞ் சீறடி யணிந்த அம்பூஞ்**
**சிலம்பின்மேற் சென்னி சேர்த்திச் சிறியவர் செய்த தீமை**
**புலம்பலர் பொறுப்ப ரன்றே பெரியவ ரென்று கூறி**
**இலங்குவேற் கண்ணி யூடல் இளையவ னீக்கி னானே**

[சேர்த்தி - அணிவித்து; புலம்பலர் - வெறுப்பில்லாத வராய்.]

**யாழ்கொன்ற கிளவி யாட னமிழ்துறழ் புலவி நீக்கிக்**
**காழின்றிக் கனிந்த காமக் கொழுங்கனி நுகர்ந்து காதல்**
**தாழ்கின்ற தாம மார்பன் தையலோ டாடி விள்ளான்**
**ஊழ்சென்ற மதியம் வெய்யோ னொட்டி யொன்றாய**
**தொத்தான் 2089**

[காழ்-விதை; கனிந்த-பழுத்த; தாழ்தல்-தங்குதல்; ஊழ்-முறை.]

**பச்சிலைப் பட்டு முத்தும் பவளமு மிமைக்கு மல்குல்**
**நச்சிலை வேற்கண் மாதர் நகைமுக முறுவன் மாந்தி**
**இச்சையுங் குறிப்பு நோக்கி எய்வதே கரும மாகக்**
**கைச்சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக்**
**காப்பான் 2090**

[மாந்தி-மாந்த, சீவகன் உண்ணும்படி; இச்சையும்-சீவகனது வேட்கையையும்.]

தன் மாலையில் நிறைந்த மகரந்தம் சிந்த அவளுடைய சிவந்த அழகிய சிற்றடியில் அணிந்த சிலம்பின் மேல் தன் தலையை வைத்து வணங்கி, 'சிறியவர்கள் செய்த தவற்றினை வெறுக்காது பெரியோர் பொறுத்துக் கொள்வர் அல்லவா (அதுபோல் என்குறையை நீயும் பொறுத்திடுக)' என்று கூறி அவள் ஊடலை நீக்கினான். இன்னிசை பொழியும் யாழினை வென்ற மொழியுடைய அவளும் அமுதை வென்ற தன் ஊடல் நீங்கினாள். விதையின்றிப் பழுத்த இன்ப வேட்கை யென்னும் நறுங்கனியை உண்டு, காதல் மணக்கின்ற மாலையணிந்த மார்புடையவனான சீவகன், சுரமஞ்சரியோடு கூடி நீங்காதவனாய், முறையால் நிறைந்த நிலவைக் கதிரவன் பொருந்திய தன்மை போலாயினான். பசிய இலைத் தொழில் நிறைந்த பட்டும், முத்தும், பவளமும் விளங்கும் அல்குலையும், நஞ்சில் தோய்த்தெடுத்த இலைவடிவான வேல்போலும் கண்களையும் உடைய சுரமஞ்சரியின் இன்முகப் புன்னகை காண விரும்பும் சீவகன் நினைவையும் அவள் குறிப்பையுங் கண்டு, அவர்களிருவரும் இணைய அம்பெய்வதே குறியாகக் கொண்டு, காமன் வில்லம்பும் கையுமாக அவ்வீட்டு வாயிலை எப்போதும் காத்து நிற்பானாயினான்.

**கடிப்பிணை காது சேர்த்திச் சிகழிகைக் காத நாறத்**
**தொடுத்தலர் மாலை சூட்டிக் கிம்புரி முத்த மென்றோள்**
**அடுத்தணிந் தாகஞ் சாந்தி னணிபெற வெழுதி யல்குல்**
**உடுத்தபொற் கலாபந் தைவந் தொளிவளை**
**திருத்தி னானே 2091**

[சிகழிகை-முடி; அடுத்து-சேர்த்து; தைவந்து-தடவி.]

இலங்குவெள் ளருவிக் குன்றத் தெழுந்ததண் தகரச் செந்தீ
நலனங்கிள ரகிலுந் தேனுங் கட்டியு நன்கு கூட்டிப்
புலம்பற வளர்த்த வம்மென் பூம்புகை யமளி யங்கண்
விலங்கர சனைய காளை வெள்வளைக் கிதனைச்
சொன்னான் 2092

[தகரம்-ஒரு வகை வாசனை மரம்; கட்டி-நேர்கட்டி யென்னும் வாசனைப் பொருள்; புலம்பு அற-குற்றங்கெட.]

கருமநீ கவல வேண்டா கயற்கணாய் பிரிவல் சின்னாள்
அருமைநின் கவினைத் தாங்க லதுபொரு ளென்று கூறப்
பெருமநீ வேண்டிற் றல்லால் வேண்டுவ பிறிதொன்
றுண்டோ
ஒருமைநின் மனத்திற் சென்றே னுவப்பதே யுவப்ப
தென்றாள் 2093

[கருமம்-யான் கூறும் காரியம் யாதென்றால்; பிரிவல்-பிரிவேன்.]

(சீவகன் சுரமஞ்சரியைப் பிரியக் கருதி) கடிப்பிணையைக் காதிலணிந்து தலைமுடியில் பூசிய மயிர்ச் சாந்தின் வாசம் நான்கு காத தூரம் வீச, அழகுறத் தொடுத்த பூவிரிந்த மாலையை அணிந்து, மகரவாய் வடிவமுள்ள முத்துமாலையை மெல்லிய தோளிலே புனைந்து, மார்பை வாசச் சாந்தினாலே அழகுற மெழுகி, அல்குலின் மேலணிந்த பொன் மேகலையைத் தடவி அவளுடைய அழகிய வளையைத் திருத்தினான். வெள்ளி போல் அருவி வீழுங்குன்றிலே வளர்ந்த மணமிக்க தகர விறகின் சிவந்த தீயில், வாசந் தரும் அகிலும் தேனும் நேர்கட்டியும் இட்டுக் கூட்டி, குற்றமற வளர்த்த புகை மணம் வீசியபடி இருக்க, அழகிய படுக்கையின் மேலமர்ந்து, விலங்குகளுக்கு அரசனான சிங்கம் போன்ற காளையாகிய சீவகன்

கூறுவான்: 'நான் சொல்லப் போவதாகிய ஒரு காரியம் உண்டு. அதற்காக நீ வருந்த வேண்டாம். மீன்போலும் கண்ணுடையவளே, உன்னைச் சிலநாள் நான் பிரிவேன். அப்போது நீ பிரிவால் வாடாமல், எழிலைத் தாங்கி, அழகு நலம் கெடாமல் இருக்கவேண்டும். இதுவே உன் கடமைக்குரிய பொருளாகும்' என்று கூறினான். சுரமஞ்சரி 'பெருமைக்குரியவனே நீ விரும்புவதையல்லாமல் வேறு நான் வேண்டுவதும் இருக்கிறதோ? உன் எண்ணம் போலவே நடப்பேன்' உன் விருப்பமே என் விருப்பமும் ஆகும்; என்றாள்.

**நாணொடு மிடைந்த தேங்கொள் நடுக்குறு கிளவி கேட்டே**
**பூண்வடுப் பொறிப்பப் புல்லிப் புனைநலம் புலம்ப வைகேன்**
**தேன்மிடை கோதை யென்று திருமக னெழுந்து போகி**
**வாண்மிடை தோழர் சூழத் தன்மனை மகிழ்ந்து**
**புக்கான் 2094**

[மிடைந்த - நெருங்கிய; தேம்கொள் - இனிமை கொண்ட; கிளவி - சுரமஞ்சரியின் சொல்லை; புலம்ப - தனித்து வருந்தும்படி; வைகேன் - பிரிந்திரேன்.]

**புரவியுங் களிறு நோக்கிப் பொன்னெடுந் தேரு நோக்கி**
**இரவினும் பகலு மோவா தென்மகன் யாண்டை யானென்று**
**அழுதகண் ணீரி னாலே கைகழீஇ அவலிக் கின்ற**
**மெழுகெரி முகந்த தொக்குந் தாய்மெலி**
**வகற்றி னானே 2095**

[ஒவாது-இடைவிடாமல்; கழீஇ-கழுவி; அவலிக் கின்ற-வருந்துகின்ற.]

**ஒற்றரு முணர்த லின்றி யுரையவித் துறுப்பி னாலே**
**சுற்றத்தார்க் குரைப்ப வீண்டித் தொக்குடன் றழுவிக்**
**கொள்வார்**
**எற்றுவா ரினைந்து சோர்வார் நம்பியோ நம்பி யென்னா**
**உற்றுடன் றழுத கண்ணீர் காலலைத் தொழிகிற்**
**றன்றே 2096**

[ஒற்றர்-அரசனால் ஒற்றறிய விடப்பட்டவர்கள்; உரையவித்து-தன் வாயினாலொன்றுங் கூறாமல்; காலலலைத்து-காலை யிழுத்து.]

நாணத்தோடு கலந்து, இனிமைச் சுவையூற, மனம் நடுங்கி அவள் கூறிய இம்மொழி கேட்டு, தன் மார்பில் அணிந்த பொற்பூணின் வடு அவள் மார்பில் பொருந்திப் பதிய அவளைத் தழுவி, 'புனைந்த உன் அழகுநலம் கெட நானுன்னைப் பிரிந்து தனித்திருக்க மாட்டேன்; தேன் நிறைந்த மலர்மாலை அணிந்தவளே, வருந்தற்க' என்று கூறிச் சீவகன் அவளை விட்டு நீங்கி, வாளேந்திய தன் தோழர்கள் சூழ்ந்து வர, மகிழ்வோடு தன் இல்லம் சென்று சேர்ந்தான். குதிரைகளையும் யானைகளையும் பார்த்தும், பொன்னாலான பெருந் தேரை நோக்கியும், இரவும் பகலும் ஓயாது, என் மகன் எங்குள்ளான் என்று கேட்டு, அழுது கண்ணீர் வடித்து, அக்கண்ணீர் வெள்ளத்தால் கை கழுவி வருந்தி, எரியிடைப்பட்ட மெழுகுபோல் உருகும் தாய், சுநந்தையை அங்குக் கண்டு அவள் படுந்துயரைப் போக்கினான். ஒற்றரும் உணர்ந்துகொள்ளமுடியாதபடி வாயால் சேதி சொல்லாமல், உறுப்பின் குறிப்பாலேயே சுற்றத்தார்க்கெல்லாம் தன் வருகையைத் தெரிவிக்க, அவரெல்லாம் ஒரு சேரத் திரண்டு வந்து தழுவிக் கொண்டு, நம்பியே, நம்பி என்று மார்பில் புடைத்துக் கொள்வாரும், வருந்தி அழுவாரும் ஆயினர். அப்படி அழும் அவர்கள் வடித்த கண்ணீர் காலை இழுத்து வழுக்குகின்ற வெள்ளமென ஓடியது.

**கந்துகன் கழறக் கல்லென் கடற்றிரை யவிந்த வண்ணம்**
**வந்தவர் புலம்பு நீங்க மறைபுறப் படுமென் றெண்ணி**
**எந்தைதா னிறந்த நாளின் றெனநக ரியம்பி யாரும்**
**அந்தமி லுவகை தன்னா லகங்குளிர்ப் பெய்தி னாரே 2097**

[கழற-அழுபவர்க்கு இடித்துக் கூறுதலால்; புலம்பு நீங்க-அழுகையை அகற்ற.]

செங்கயன் மழைக்கட் செவ்வாய்த் தத்தையு மகிழ்ந்து
தீஞ்சொல்
எங்கையைச் சென்று காண்மி னடிகளென் றிரந்து கூற
மங்கல வகையிற் சேர்ந்து மதுத்துளி யறாத மாலை
கொங்கலர் கண்ணி சேர்த்திக் குங்கும மெழுதி
னானே 2098

[சேர்ந்து-குணமாலையை அடைந்து; சேர்த்தி-குண மாலைக்கு அணிந்து.]

தீவினை யுடைய வென்னைத் தீண்டன்மி னடிகள் வேண்டா
பாவியே னென்று நொந்து பரிந்தழு துருகி நையக்
காவியங் கண்ணி யொன்றுங் கவலல்யா னுய்ந்த தெல்லாம்
நாவியே நாறு மேனி நங்கைநின் றவத்தி
னென்றான் 2099

[பரிந்து-வருந்தி; நைய-நைந்து நின்றாளாக; நாவி-புனுகு.]

'இவ்விதம் நாமிங்கே ஆரவாரித்தால், சீவகன் வந்திருக்கிறான் என்னும் உண்மை ஒற்றர்மூலம் கட்டியங் காரனுக்கு எட்டிவிடும் எனவே அமைதியடைக' என்று கந்துக்கடன் கூற, கடலலை ஓய்ந்தது போல் வந்தவர் எல்லாம் தம் அழுகுரலை நிறுத்தி அமைதி அடைந்து முன்னே அழுததற்குக் காரணம் இன்று கந்துக்கடன் தந்தை இறந்த நாள் என்று பிறர்க்குக் கூறி மிக்க மகிழ்ச்சியில் திளைத்து இருந்தனர். சிவந்த மீன் போலும் அழகிய கண்களையும் சிவந்த வாயையும் உடைய காந்தருவ தத்தை சீவகனைக் கண்டு மனமகிழ்ந்து, 'அன்புடைய வரே! இனிய மொழிபேசும் என் தங்கையைச் சென்று காண்க' என்று வேண்ட, அவனும் அவளை அடைந்து, மங்கல முறையால், தேன்துளி நீங்காத மாலையும், மணம் வீசும் முடிமலர்க் கண்ணியும் புனைந்து குங்குமம் அணிந் தான். அவன் புனைந்த மங்கல அணியினை ஏற்றுக் கொண்ட குணமாலை, 'அடிகளே, தீவினை உடைய

என்னைத் தொடாதீர்கள்! நான் ஒரு பாவி' என்று கூறி விலகி நின்று அன்பாலே அழுது உருகி வாடி நின்றாள். 'கருங்குவளை மலர்போலும் கண்ணுடையவளே, நீ எதற்கும் வருந்த வேண்டாம்! (தன்னைத் தீண்டியே சீவகன் கொலையுண்டான் என்று உலகம் பழி கூறியதால்) நான் உயிர் பிழைத்து வந்ததெல்லாம் புனுகு மணக்கும் மேனியுடையவளே, உன் தவப் பயனாலேயே' என்று கூறி அவளைத் தேற்றினான்.

**அன்னமென் னடையு நோக்குஞ் சாயலு மணியு மேரும்**
**மின்னினுண் ணுசுப்பும் வெய்ய முலைகளு முகமுந் தோன்ற**
**என்மனத் தெழுதப் பட்டா யாயினு மரிவை கேளாய்**
**உன்னையான் பிரிந்த நாளோ ரூழியே போன்ற**
**தென்றான் 2100**

[சாயல்-தன்மை; அணி-அழகு; ஏர்-எழுச்சி.]

**இளையவண் மகிழ்வ கூறி யின்றுயி லமர்ந்து பின்னாள்**
**விளைபொரு ளாய வெல்லாந் தாதைக்கே வேறு கூறிக்**
**கிளையவர் சூழ வாமான் வாணிக னாகிக் கேடில்**
**தளையவிழ் தாம மார்பன் றன்னகர் நீங்கி னானே 2101**

[விளைபொருள்-மேல் விளையுங் காரியத்தை; வேறு கூறி-துணிந்து சொல்லி; கிளையவர்-சுற்றத்தார்.]

'அன்னம் போல் மென் நடையும், அழகிய பார்வையும், அழகும், எழுச்சியும், மின்னலைப் போன்ற இடையும் பருத்த முலைகளும், முகமும் தோன்ற என் உள்ளத்தில் உயிரோவியமாய் எழுதப்பட்டு என்றும் நீ நிலைத்திருக்கிறாய்; என்றாலும், அன்புடையவளே, நானுன்னைப் பிரிந்த ஓர் நாளும் ஓர் ஊழி போலாகும்' என்று குணமாலை மனமகிழக் கூறி அவளோடு இனிமையுறத் தூங்கி அடுத்த நாள் தந்தையிடம் அடுத்து வருங் காரியங்கள் எல்லாம் தனித்தனியே எடுத்துக் கூறி, தோழர்கள் சூழ்ந்துவர, குதிரை வாங்கும் வணிகனாக வேடம் புனைந்து கொண்டு தன் மனையினீங்கிச் சென்றான்.

(சுரமஞ்சரியார் இலம்பகம் முற்றிற்று)

7

# 10. மண்மகள் இலம்பகம்

குடம்புரை செருத்தற் குவளைமேய் கயவாய்க் குவிமுலைப்
படர்மருப் பெருமை
நடந்தவா யெல்லா நறுமலர் மரையி னாகிலைச்
சொரிந்தவந் தீம்பால்
தடஞ்சிறை யன்னங் குருகொடு நாரைப் பார்ப்பின
மோம்புதண் மருதம்
மடங்கல்போற் றிறலார் மாமணி கறங்க வளவயற்
புள்ளெழக் கழிந்தார் **2102**

[செருத்தல்-பால் தங்கிய மடி; கயம்-பெருமை; நாகு-இளமை.]

புரிவளை யலறிப் பூசலிட் டீன்ற பொழிகதிர் நித்தில முழக்கி
வரிவளை சூழும் வலம்புரி யினத்துட் சலஞ்சல
மேய்வன நோக்கி
அரிதுண ரன்னம் பெடையெனத் தழுவி யன்மையி
னலமர லெய்தித்
திரிதரு நோக்கந் தீதிலார் நோக்கி நெய்தலுங்
கைவலத் தொழிந்தார் **2103**

[அலறி - நொந்து; நித்திலம் - முத்து; அலமரல்-தடுமாற்றம்.]

கோட்டிளங் கலையுங் கூடுமென் பிணையுங்
கொழுங்கதிர் மணிவிளக் கெறிப்பச்
சேட்டிளங் கொன்றைத் திருநிழற் றுஞ்சச் செம்பொறி
வண்டவற் றயலே

நாட்டிளம் படியார் நகைமுகம் பருகு நல்லவர்
போன்மலர் பருகும்
மோட்டிள முல்லை மொய்ம்மலர்க் கான முருகுவந்
தெதிர்கொள நடந்தார் 2104

[கலை-ஆண்மான்; பிணை-பெண்மான்; இளம் படியார்-மகளிர்.]

குடம்போன்ற பால்சுரக்கும் மடியையும், குவளை மலர்களை மேயும் பெரிய வாயையும், குவிந்த முலைக் காம்புகளையும், படர்ந்த கொம்புகளையும் உடைய எருமையானது, தான் நடந்துசென்ற இடம் எல்லாம், நல்ல தாமரை மலர் பூக்கும் தாமரைக்கொடியின் தளிர் இலைமேல் சொரிந்த சுவைமிக்க இனிய பால் நிறைந்து, பெரிய சிறகுகளை உடைய அன்னம், கொக்கு, நாரை ஆகியவற்றின் சிறிய குஞ்சுகளை வளர்க்கும். இத்தகைய வளம் நிறைந்த, குளிர்ந்த மருத நிலத்தைக் குதிரைகளின் கழுத்தில் கட்டிய கிண்கிணி மணியும், யானைகளின் பக்கத்தில் தொங்கும் பெரிய மணியும் எழுப்பும் ஒலி கேட்டு, அம் மருத நிலத்தின் வளமிக்க வயலில் அமர்ந் திருந்த பறவைகள் எல்லாம் பயந்து ஓடச் சிங்கம் போன்ற வலிமையுடையவர் கடந்து சென்றனர். முறுக்குடைய சங்குகள் சூல்முதிர்ந்து நொந்து முழக்கமிட்டுப் பெற்ற ஒளிவீசும் முத்துக்களைக் கலக்கி, சங்குகள் சூழத்திரியும் வலம்புரிக் கூட்டத்தில் சலஞ்சலம் மேய்வதைப் பார்த்து, அரியதை உணரவல்ல அன்னச் சேவல் அதைத் தன் பேடையென்று தழுவ, அது தன்பேடையாக இல்லாமல் சலஞ்சலமாக இருக்கக் கண்டு மனம் மயங்கித் திரும்பும். அப்படித் திரும்பும் அவற்றின் நோக்கத்தைத் தீமையில் லாத குணமுடைய சீவகனும் அவன் தோழர்களும் நோக்கியபடி, தனக்குரிய ஒழுக்க நெறிகாக்கும் நெய்தல் நிலத்தையுங் கடந்து சென்றனர். உயர்ந்து வளர்ந்த கொன்றைமரக் கன்றின் அழகிய நிழலிலே, திரண்ட கதிருடைய மணிவிளக்கு ஒளி செய்யக் கொம்பினை

உடைய ஆண் மான் தன் துணையாகிய பெண்மானோடு கூடித் துயில, செம்புள்ளிகளை உடைய வண்டுகள் அவற்றின் அருகாமையிலேயே நாட்டிலுள்ள இளமகளிர் அழகு முகத்தின் எழிலைப் பருகும் ஆடவரைப் போல் மொய்த்துக் கிடந்து மலர்த்தேன் பருகும் முல்லை மலர் பூத்த காட்டின் நறுமணம் வந்து எதிர்கொள்ள, அம் முல்லை நிலத்தையும் கடந்து சென்றனர்.

**குழவிவெண் டிங்கட் கோட்டின்மேற் பாயக்**
**குளிர்புனல் சடைவிரித் தேற்கும்**
**அழலவிர் சூலத் தண்ணலே போல வருவிநீர்**
**மருப்பினி னெறியக்**
**கழைவளர் குன்றிற் களிறுநின் றாடுங் கடிநறுஞ்**
**சந்தனச் சாரல்**
**இழைவளர் முலையார் சாயல்போற் றோகை**
**யிறைகொள்பூங் குறிஞ்சியு மிறந்தார் 2105**

[கோடு-நுனி; அழல்-நெருப்பு.]

**ஊன்றலைப் பொடித்தாங் கனையசெஞ் சூட்டி**
**னொளிமயிர் வாரண மொருங்கே**
**கான்றபூங் கடம்பின் கவட்டிடை வளைவாய்ப்**
**பருந்தொடு கவர்குரல் பயிற்றும்**
**ஆன்றவெம் பாலை யழன்மிதித் தன்ன வருஞ்சுரஞ்**
**சுடர்மறை பொழுதின்**
**ஊன்றினார் பாய்மா வொளிமதிக் கதிர்போற் சந்தன**
**மொருங்குமெய் புதைத்தே 2106**

[சூட்டு - உச்சிக்கொண்டை; வாரணம் - கோழி; கான்ற-பூக்களை யுதிர்த்த; கவடு-கிளை.]

**நிலையிலா வுலகி னின்றவண் புகழை வேட்டவ னிதியமே**
**போன்றும்**
**இலைகுலாம் பைம்பூ ணிளமுலைத் தூதி னின்கனித்**
**தொண்டையங் துவர்வாய்க்**
**கலைவலார் நெஞ்சிற் காமமே போன்றுங் கடவுளர்**
**வெகுளியே போன்றும்**
**உலைவிலார் நில்லா தொருபக லுள்ளே யுருப்பவிர்**
**வெஞ்சுரங் கடந்தார் 2107**

[வேட்டல்.விரும்புதல்; உருப்பு-வெப்பம்.]

வெண்மையான பிறை நிலவுக் கோட்டின் மேல் பட்டுப் பாயும்படிப் பெருகி வந்த குளிர்ந்த கங்கை நீரைத் தன் சடையை விரித்துத் தாங்கி நின்ற தீ எரிக்கும் திரிசூலத்தை ஏந்திய சிவபெருமானைப் போல, அருவியில் இருந்து வழிகின்ற நீர் தன் கொம்பிலே வீழ்ந்து வடிய, மூங்கில் கன்றுகள் வளரும் குன்றிலே யானைகள் நின்று நீராடிக் கொண்டிருக்கும். மணமிக்க சந்தன மரங்கள் நிறைந்த இம்மலைச் சாரலில், அணிமணிகள் புனைந்த மார்புடைய மங்கையரின் சாயலைப்போல் தோகை மயில்கள் தங்கி விளையாடிக் கொண்டிருக்கும். இத்தகைய அழகிய வளமுடைய குறிஞ்சி நிலத்தையும் அவர்கள் கடந்து சென்றனர். ஊன் தலையிலே விளங்குவதைப் போலச் சிவந்த உச்சிக் கொண்டையும், பளப்பளப்பான மயிரும் நிறைந்த கோழிகள் ஒன்றுகூடி மலர் உதிர்ந்த கடம்ப மரத்தின் கிளைகளிலிருந்து, வளைந்த அலகினை உடைய பருந்தோடு சேர்ந்து இரைகளைக் கவரக் குரலெழுப்பிக் கொண்டிருக்கும். வெப்பமிக்க கொடிய பாலைநிலத்தில் நெருப்பை மிதித்ததைப் போன்ற இக்காட்டு வழியை, ஒளிமிக்க நிலவினைப் போலக் குளிர்ச்சி தரும் சந்தனத்தை உடலெல்லாம் பூசிய அவர்கள் குதிரையை விரையச் செலுத்திக் கடந்து சென்றனர். நிலையற்ற இவ்வுலகில் நிலையான பேரின்பப் புகழை விரும்பியவன் செல்வம் கரைந்து போவது போலவும் இலைவடிவான பூண் அணிந்த இளமுலை மங்கையருடைய மறைந்து போம் தூதினைப் போலவும், இன்குரல் தொண்டையும் சிவந்த வாய்இதழும் உடைய, பாட்டும் கூத்தும் வல்ல மாறும் பரத்தையர் அன்பு போலவும், முனிவர்கள் கொண்ட கோபம் விரைந்து நீங்குவது போலவும், சோர்வில்லாத அவர் எங்கும் நில்லாது ஒரு பகல் பொழுதுக்குள் வெப்பமிகும் பாலையைக் கடந்து சென்றனர்.

புதுக்கலம் போலும் பூங்கனி யாலும் பொன்னிணர்ப்
பிண்டியும் பொருந்தி
மதுக்கலந் தூழ்த்துச் சிலம்பிவீழ் வனபோன் மலர்சொரி
வகுளமு மயங்கிக்
கதிர்த்ததண் பூணி கம்புதாழ் பீலிக் கனைகுர
ளாரைவண் டானம்
எதிர்த்ததண் புனல்சூ ழின்னதிக் கரைமே லிளையவ
ரயாவுயிர்த் தெழுந்தார் 2108

[பிண்டி-அசோகு; வகுளம்-மகிழம்பூ; பூணி-ஒரு பறவை; கம்புள்-சம்பங்கோழி.]

அள்ளிலைப் பலவி னளிந்துவீழ் சுளையுங் கனிந்துவீழ்
வாழையின் பழனும்
புள்ளிவா ழலவன் பொறிவரிக் கமஞ்சூன் ஞெண்டினுக்
குய்த்துநோய் தணிப்பான்
பள்ளிவாய் நந்து மாமையும் பணித்துப் பன்மலர் வழிபடக்
குறைக்கும்
வெள்ள நீர்ப் படப்பை விதையம்வந் தடைந்தே வேந்தனுக்
குணர்த்தமுன் விடுத்தார் 2109

[அள்-செறிவு; அளிந்து-கனிய முதிர்ந்து; அலவன்-ஆண் நண்டு; கமம்-நிறைவு; சூல்-கரு; படப்பை-தோட்டம்.]

வீட்டிடந் தோறும் வில்லக விரல்போற் பொருந்திநின்
றொருங்கெதிர் கொள்கென்
றேட்டின்மேற் றீட்டித் திருவெழுத் திட்டாங் கிறைவனுந்
தமர்களைப் பணிப்ப
நாட்டகத் தமிர்து நளிகட லமிர்து நல்வரை யமிர்தமு
மல்லாக்
காட்டகத் தமிர்துங் காண்வரக் குவவிக் கண்ணகன்
புறவெதிர் கொண்டார் 2110

[குவவி-குவித்து; புறவு-முல்லை நிலம்.]

புதிய மண்கலம் போல விளங்குகின்ற சிவந்த பழங்களை உடைய ஆலமரமும், பொன் போன்ற பூங்கொத்துக்களை உடைய அசோக மரமும் சேர்ந்து,

மலர்ந்த போது தேனைச் சொரிந்து பிறகு காம்பு கழன்றவுடன் சிலந்திப் பூச்சியைப் போலத் தரையில் வந்து விழுகின்ற மலர்களை உடைய மகிழ மரத்தோடு கூடிக் கிடந்தன. அழகிய பூணி என்னும் பறவையும், சம்பங்கோழியும், சிறுசின்ன வாத்தியம் போன்ற ஒலிக் குரலுடைய நாரையும், வண்டானம் என்னும் நாரை வகையும் எதிர்ப்படும், குளிர்ந்த நீர் நிறைந்த ஆற்றங் கரையின்மேல் உள்ள அம்மரக் காவில் அமர்ந்து இளைஞரெல்லாம் இளைப்பாறினர். செறிந்த இலை களை உடைய பலாமரத்தின் சுளையையும், கனிந்து விழும் வாழைப் பழத்தையும், அங்கே வாழும் புள்ளி யுடைய நண்டு, புள்ளியும் வரிக்கோடுகளும் உடைய, சூல் முதிர்ந்த தன் துணைக்குக் கொடுத்து அதன் ஆசையைத் தீர்க்க; தன்னுடன் வாழும் நத்தையையும் ஆமையையும் மிதித்துக் கொண்டு பலவித மலர்கள் நிறைந்து வழியாகும் படிப் பாய்கின்ற, வெள்ளநீர்ப் பெருக்குடைய, தோட்டங்கள் சூழ்ந்த விதேக நாட்டை அடைந்து, அரசனுக்கு முன்னறிவிப்புக் கூற ஆள் அனுப்பினர். தூதுவன் மூலம் சேதி அறிந்த அரசனும் 'இடமுள்ள பக்கமெல்லாம், வில்லைப் பிடித்திருக்கும் விரல்போல் மக்கள் நெருங்கி நின்று அவர்களை ஒன்றாக எதிர் கொண்டு அழைக்க' என்று, ஓலை எழுதி முத்திரை பொறித்து ஏவலர்க்கு அறிவிக்கும்படிப் பணிக்க, அவரும் நாட்டில் விளைந்த பொருள்களும், கடலில் கிடைத்த செல்வமும், மலையில் பிறந்த செல்வமும், காட்டில் கிடைத்த செல்வமும் ஆகியவற்றைக் கண்ணுக்குத் தெரியுமளவுக்குக் குவித்து சீவகன் முதலானோரை முல்லை நிலத்திலே சென்று எதிர்கொண்டழைத்து வந்தனர்.

**பொருமத யானைப் புணர்மருப் பேய்ப்பப் பொன்சுமந்**
**தேந்திய முலையார்**
**எரிமலர்ச் செவ்வாய் திறந்துதே னூற வேத்துவார்**
**பூக்கடுய்த் தொழுவார்**

**வருகுலைக் கமுகும் வாழையு நடுவார் வரையுமி ழாவிபோன் மாடத்**
**தருநறும் புகையு மேந்துவா ரூர்தோ றமரர்த முலகமொத் ததுவே 2111**

*[ஏய்ப்ப-ஒப்ப; தூய்-தூவி.]*

## வேறு

**பாடி னருவிப் பயங்கெழு மாமலை**
**மாட நகரத்து வாயிலுங் கோயிலும்**
**ஆடம் பலமு மரங்கமுஞ் சாலையும்**
**சேடனைக் காணிய சென்றுதொக் கதுவே 2112**

*[பாடு-ஒலி; பயம் கெழு-பயன் பொருந்திய; அம்பலம்-பலரும் கூடும் இடம்.]*

**பல்கதி ராரமும் பூணும் பருமித்துக்**
**கொல்சின வெந்தொழிற் கோடேந் திளமுலை**
**நல்லெழின் மங்கையர் நன்னுதற் சூட்டிய**
**வெல்கதிர்ப் பட்டம் விளங்கிற் றொருபால் 2113**

*[பூண்-ஆபரணம்;. பருமித்து-பல வரிசையாக அணிந்து.]*

**சுண்ணமுஞ் சூட்டுஞ் சொரிந்து வார்குழற்**
**கண்ணி மகாரொடு காற்சிலம் பார்த்தெழ**
**அண்ணலைக் காணிய ஆர்வத்திற் போதரும்**
**வண்ண மகளிர் வனப்பிற் றொருபால் 2114**

*[காணிய-பார்க்கவேண்டி; போதரும்-செல்கின்ற.]*

போர் மதயானைகளின் திரண்ட தந்தக் கொம்புகளைப் போல, பொன்னணிகள் பூண்ட, திரண்ட மார்புடைய மங்கையர்கள், முருக்கிதழ் போலச் சிவந்த தம் வாய்திறந்து பாடிப் புகழ்வர். பூக்களைத் தூவி வணங்குவர். அழகிய குலையுடைய கமுகும் வாழையையும் நடுவர். மலைமேல் தவழும் மேகம் போல, மாளிகை மாடங்களின் மேலெல்லாம் பரவ வாசமிகு

மணப்புகை ஏந்துவார். இல்படி விழாக்கோலம் பூண்டு ஒவ்வோர் ஊரும் தேவலோகம் போன்றிருந்தது. பாடி வரும் அருவி வீழும் பயன் தரும் உயர்ந்த மலையைப் போன்ற, பெரிய மாடங்களையுடைய நகரத்தின், வாயிற் புறத்திலும், அரண்மனையிலும், கூத்தரங்கங்களிலும், நாடக மேடைகளிலும், வழிநடக்கும் பாதைகளிலும் சீவகனைக் காண ஊரே திரண்டு வந்து கூடியது. அப்படிக் கூடியவர்களில் பல வண்ண ஒளிவீசும் முத்துச் சரங்களும், பொன்னணிகளும் அழகுற அணிந்த, கோபித்தால் கொல்லும் தன்மை உடைய யானைத் தந்தம் போன்ற நிமிர்ந்த மார்புடைய அழகு மங்கையர்கள் தம் நெற்றிப் பட்டம் ஒருபுறம் ஒளிவீசியது. பொற்சுண்ணப் பொடியும், நெற்றிச் சூட்டும் புனைந்து, சரிந்து விழும் பூங்குடுமியும் முடிக்கண்ணியும் உடைய தம் குழந்தைகளோடு, காலி லணிந்த பாதச் சிலம்பு ஒலிக்க, சீவகனைக் காணும் ஆர்வத்தினால் ஓடிவரும் அழகு மங்கையரின் மேனி வனப் பொருபால் விளங்கும்.

**எதிர்நலப் பூங்கொடி யெள்ளிய சாயற்**
**கதிர்நல மங்கையர் காறொடர்ந் தோட**
**முதிரா விளமுலை முத்தொடு பொங்க**
**அதிரரிக் கிண்கிணி யார்க்கு மொருபால் 2115**

*[எள்ளிய-இகழ்ந்த; முதிரா-முற்றாத.]*

**கருங்க ணிளமுலை கச்சற வீக்கி**
**மருங்குல் தளர மழைமருண் மாடம்**
**நெருங்க விறைகொண்ட நேரிழை யார்தம்**
**பெருங்க ணலமரும் பெற்றித் தொருபால் 2116**

*[வீக்கி-இறுகக்கட்டி; இறை-தங்குதல்.]*

**மின்னு குழையினர் கோதையர் மின்னுயர்**
**பொன்வரை மாடம் புதையப் பொறிமயில்**
**துன்னிய தோகைக் குழாமெனத் தொக்கவர்**
**மன்னிய கோல மலிந்த தொருபால் 2117**

[மின் உயர்-ஒளியால் உயர்ந்த; தொக்க-கூடிய.]

பாடன் மகளிரும் பல்கலை யேந்தல்குல்
ஆடன் மகளிரு மாவண வீதிதொ
றோட உதிர்ந்த அணிகலம் உக்கவை
நீடிருள் போழு நிலைமைத் தொருபால் 2118

[கலை-மேகலை; உக்கவை-சிந்தியவை; நீடு-நிலை பெற்ற; போழும்-நீங்கும்.]

பூங்கொடியைப் பழிக்கின்ற சாயலுடைய, அழகு நலமிக்க பெண்கள் விரைந்து ஓட, அவர்தம் இளமுலையும் முத்துவடமும் விம்மிப் புடைக்க, ஒலிக்கும் பரல்களுள்ள கிண்கிணிச் சதங்கைகள் காலைக் கட்டிக்கொண்டு, இவ்விதம் ஓடாதீர் என்று கூப்பிடுவதுபோல் ஒரு பக்கம் ஒலித்தபடியிருக்கும். கருங்கண்ணுடைய முலைகளைக் கச்சினால் இறுக்கக் கட்டி, இடை நோவ மழைமேகம் மயங்கித் தங்கும் உயர்ந்த மாடங்களின்மேல், நெருங்கி வந்து தங்கியிருக்கும் அழகு மங்கையரின் அகன்ற கண்கள் சீவகனைக் காணாது மயங்கிச் சுழன்றபடி இருக்கும் ஒரு பக்கம். ஒளிவிளங்கும் காதுக் குழையும், மாலையும் அணிந்த இளமங்கையர், வானுற உயர்ந்த பொன்மலை போன்ற மாடங்கள் மறையும்படிக் கூடியிருந்த தோற்றம், நெருங்கிய தோகை உடைய புள்ளி மயில்களின் கூட்டம் என விளக்கியது ஒரு பக்கம். பாடல் வல்ல பெண்களும் பல மணிகளுடைய மேகலை அணிந்த அல்குலுடைய ஆடல் வல்ல மகளிரும், கடை வீதியெங்கும் ஓடித் திரிவதனால் சிந்திச் சிதறி விழுந்த அவர் அணிந்த அணிகலன்களின் ஒளி, மிக்க பேரிருளையும் போக்கும் தன்மையோடு கிடக்கும் ஒரு பக்கம்.

கோதையுந் தாரும் பிணங்கக் கொடுங்குழைக்
காதன் மகளிரு மைந்தருங் காணிய
வீதியு மேலும் மிடைந்து மிடைமலர்த்
தாதடுத் தெங்குந் தவிசொத் ததுவே 2119

[மிடைந்து-நெருங்கி.]

மானக் கவரி மணிவண் டகற்றவங்
கானை யெருத்தத் தமர குமரனிற்
சேனைக் கடலிடைச் செல்வனைக் கண்டுவந்து
ஏனை யவரு மெடுத்துரைக் கின்றார் 2120

[கவரி-சாமரை; எருத்தம்-கழுத்து.]

தேமல ரங்கட் திருவே புகுதக
மாமலர்க் கோதை மணாளன் புகுதக
காமன் புகுதக காளை புகுதக
நாம வெழில்விஞ்சை நம்பி புகுதக 2121

[புகுதக-வருக என்று வரவேற்றல்; விஞ்சைநம்பி-வித்தியாதரகுமரன்.[

மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக
இன்றேன் கமழ்தா ரியக்கன் புகுதக
வென்றோன் புகுதக வீரன் புகுதக
என்றே நகர மெதிர்கொண் டதுவே 2122

[வரை-கிரவுஞ்சகிரி.]

கூந்தலில் சூடிய கோதையும், மார்பிலணிந்த மாலையும், பின்னும்படி, காதுக் குழையணிந்த, மகளிரும் இளைஞரும், சீவகனைக் காணும் ஆர்வத்தினால், தெருக்களிலும், மாடத்திலும் நெருங்கி நிறைய, அப்படி நெருங்குவதால் உதிர்ந்த பூவின் மகரந்தப் பொடிகள் எங்கும் நிறைந்து அணைபோல் படிந்தன. சிறந்த கவரிகள் வீசி வண்டுகளை விரட்ட, அத்தெருவிலே யானைக் கழுத்தின் மேலமர்ந்து, தேவ குமரனைப்போல, படைக் கூட்டங்களிடையே பவனி வந்த சீவகனைக் கண்டு மகிழ்ந்த பலரும் மற்ற எல்லாருக்கும் எடுத்துச் சொல்லலாயினர்.

தேனுடைய தாமரைத் திருமலரில் வாழும் செலவமே வருக! அழகு மலர்வாழும் மங்கை மணவாளனே வருக! அழகில் சிறந்த காமனே வருக! ஆற்றலில் மிக்க காளையே வருக! அஞ்சத்தக்க அழகுடைய வித்தியாதர மகனே வருக! மின்னல் தோய்ந்த மலைக்குன்றைப் பிளந்த

முருகப் பெருமானே வருக! இனிய தேன் மணக்கும் மாலையணிந்த கந்தருவ குமாரனே வருக! பகை வென்ற வனே வருக! புகழ் பெற்ற வீரனே வருக...வருக...,என்று அவனைக் கண்டவரெல்லாம் வாழ்த்தி நகரமெல்லாம் கூடி எதிர்கொண்டு வரவேற்றது.

**இடிநறுஞ் சுண்ணஞ் சிதறியெச் சாரும்**
**கடிகமழ் மாலையுங் கண்ணியுஞ் சிந்தித்**
**துடியடு நுண்ணிடைத் தொண்டையஞ் செவ்வாய்**
**வடியடு கண்ணியர் வாழ்த்துபு நிற்பார் 2123**

*[எச்சாரும்-எவ்விடமும்; கடி வாசனை; வாழ்த்துபு-வாழ்த்தி.]*

**சுரும்பிமிர் மாலை தொழுவனர் நீட்டி**
**இரும்பிடி நின்னடை கற்ற வெமக்கு**
**விரும்பினை யாய்விடின் மெல்ல நடமோ**
**கருங்கணிற் காமனைக் காணமற் றென்பார் 2124**

*[நடமோ-நடப்பாயாக.]*

**மடநடை பெண்மை வனப்பென்ப தோராய்**
**கடுநடை கற்றாய் கணவ னிழப்பாய்**
**பிடியலை பாவி எனப்பூண் பிறழ்ந்து**
**புடைமுலை விம்மப் புலந்தனர் நிற்பார் 2125**

*[மடநடை-மெல்லிய நடை; புலத்தல்-வெறுத்தல்.]*

**மயிர்வாய்ச் சிறுகட் பெருஞ்செவி மாத்தாட்**
**செயிர்தீர் திரள்கைச் சிறுபிடி கேள்வன்**
**அயிரா வணத்தொடு குளூறும் ஐயன்**
**உயிர்கா வலற்கொண் டுதவநில் லென்பார் 2126**

*[மா-பெருமை; சூளுறும்-சூளுறுவேம்.]*

இடித்த நறுஞ்சுண்ணப் பொடியை எப்புறமும் தூவியும், வாசமிக்க முடிக்கண்ணியும் மலர்மாலையும் வீசியும், துடிபோன்ற மெல்லிடையும், கொவ்வைக் கனி போன்ற செவ்வாயும், மா வடுப் போன்ற விழியும்

  

உடைய மகளிர் வாழ்த்துகள் கூறி நின்று, வண்டுகள் மொய்த்துப்பாடும் மலர் மாலையைத் தந்து தொழுதபடி, கரிய யானையே! உன் நடை பழகிய எமக்கு நீ அன்பு செய்யக் கூடியவளானால் சற்றே மெதுவாக நட; காமன் போன்ற இக்கட்டழகு உடையவனை நாங்கள் நன்றாகக் கண்டு கொள்கிறோம் என்பார்! மென் நடையே பெண்மைக்கு அழகு தரும் என்பதை யானையே நீ அறியாய் போலும்! இப்படி வேகமாகப் போகின்றாயே! இவ்வளவு வேகமாகப் போக, கடுநடை கற்ற நீ கணவனை இழப்பாய்! அடியே நீ பெண் அல்லை; பாவி! என்று தம் மார்பிலணிந்த பூண் பிறழ முலை விம்ம வருந்தி நிற்பர். மயிர் நிறைந்த வாயும், சிறிய கண்களும், விரிந்த காதும், பெரிய கால்களும் குறைவற நீண்டு திரண்ட துதிக்கையும் உடைய சிறிய பெண் யானையே! (நீ சற்றே நின்று போகாவிடில்) உன் கணவன் ஐராவதத்திடம் சொல்லி ஆணை இடவைப்போம்! எனவே நீயாகச் சற்றே நின்று, எம் உயிர்க் காவலனாகிய சீவகனைக் காண எமக்கு உதவுவாய் என்பர்.

**கருணைக் கவளந் தருதுங் கமழ்தார்**
**அருமை யழகிற் கரசனை நாளைத்**
**திருமலி வீதியெஞ் சேரிக் கொணர்மோ**
**எரிமணி மாலை யிளம்பிடி யென்பார்** **2127**

[கருணைக்கவளம் - பொரிக் கறியையுடைய உண்டையை.]

**என்னோர் மருங்கினு மேத்தி யெரிமணிப்**
**பொன்னார் கலையினர் பொற்பூஞ் சிலம்பினர்**
**மின்னார் குழையினர் கோதையர் வீதியுள்**
**மன்ன குமரனை வாழ்த்தி மகிழ்ந்தார்** **2128**

[மருங்கில் - அருகில்; என்னோரும் - எல்லாரும்.]

வேறு

விளங்குபாற் கடலிற் பொங்கி வெண்டிரை யெழுவ
வேபோற்
றுளங்கொளி மாடத் துச்சித் துகிற்கொடி நுடங்கும் வீதி
உளங்கழித் துருவப் பைந்தார் மன்னவன் கோவில்
சேர்ந்தான்
இளங்கதிர்ப் பருதி பெளவத் திருவரை யிருந்த தொத்தான்

[பெளவம்-கடல்; வரை-உதயகிரி.]

'பொரிக் கறி உடைய கவளச் சோற்றினை உனக்கு கொடுப்போம்! வாசமிகு மலர்மாலை அணிந்த அழகுக்கு அரசனாகிய சீவகனை நாளை செல்வங் கொழிக்கும், சிறப்பு மிக்க தெருவுடைய எம் சேரிக்கு அழைத்துக் கொண்டு வருவாய் ஒளிமிக்க மணிமாலை அணிந்த அழகிய யானையே' என்று சிலர் வேண்டி நிற்பர். மற்றும் பக்கத்தில், ஒளிவிளங்கும் மணிகள் பதித்த பொன்னா லான மேகலை அணிந்தவராய், பூ வேலைப் பாடமைந்த பொற் சிலம்புடையவராய், ஒளிமிக்க காதுக்குழையும் வாசமிக்க மலர்மாலையும் அணிந்தவராய் நின்று கொண் டிருந்த சில பெண்கள் வீதியில் பவனி வந்த அரச குமரனைப் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்திருப்பர். அழகோடு விளங்கும் பாற்கடலில் பொங்கி எழுகின்ற வெள்ளை நிற அலைகள்போல, ஒளிவிளங்கும் மாடத்தின் உச்சியில் அசைகின்ற கொடிகளுடைய தெருவின் நடுவே சென்று; இளங்கதிரை உடைய சூரியன், கடல் நடுவே உதயகிரியில் இருந்ததைப்போல், மக்கள் கடல் நடுவே, உதயகிரியை ஒத்த யானை மீதமர்ந்து வந்த சீவகன், அழகிய மாலை யணிந்த மன்னவன் அரண்மனையை அடைந்தான்.

இழையொளி பரந்த கோயி லினமலர்க் குவளைப் பொற்பூ
விழைதகு கமல வட்டத் திடைவிராய்ப் பூத்த வேபோற்
குழையொளி முகமுங் கோலக் கொழுங்கயற் கண்ணுந்
தோன்ற
மழைமின்னுக் குழாத்தின் மாலை மங்கையர் மயங்கி
நின்றார் 2130

[பொற்பூ-குழை; விழைவு-விருப்பம்; விராய்-கலந்து.]

**எரிக்குழாஞ் சுடரும் வைவே லேந்தலைக் கண்டு கோயில்**
**திருக்குழா மனைய பட்டத் தேவியர் மகிழ்ந்து செய்ய**
**வரிக்குழா நெடுங்க ணாரக் கொப்புளித் துமிழ வம்பூ**
**விரைக்குழா மாலைத் தேனும் வண்டுமுண் டொழுக**
**நின்றார் 2131**

[வரி-செவ்வரி; விரை-வாசனை.]

**அலங்கறா தவிழ்ந்து சோர வல்குற்பொற் றோரை மின்னச்**
**சிலம்பின்மேற் பஞ்சி யார்ந்த சீறடி வலத்த தூன்றி**
**நலந்துறை போய நங்கை தோழியைப் புல்லி நின்றாள்**
**இலங்கொளி மணித்தொத் தீன்ற வேந்துபொற் கொடியொ**
**டொப்பாள் 2132**

[பொற்றோரை - பொன்வடம்; துறைபோதல்-நிறைதல்.]

அணிமணிகளின் ஒளிநிறைந்து விளங்கும் அவ்வரண் மனையில், தம்மோடத்த குவளை மலரும் பொன்மலரும் விருப்பமூட்டும் முகவட்டமாகிய தாமரை மலரோடு சேர்ந்து பூத்ததைப்போல, காதுக்குழை ஒளி பரவிய முகமும், அழகிய கெண்டை மீன் போன்ற கண்ணும் உடைய மங்கையர்கள் முகிலிடை மின்னும் மின்னல் போல் மயங்கி நின்றனர். எரி நெருப்புச் சுடர்போல விளங்கும் கூர்வேலேந்திய சீவகனைக் கண்டு, அரண்மனையில் உள்ள திருமகள் கூட்டம் போன்ற பட்டத்தரசிகள் மனமகிழ்ந்து, செவ்வரி படர்ந்த நீண்ட கண்கள் நிறையக் கண்டுகளித்து, மலர் நிறைந்த மணமிக்க மாலையில் தும்பியும் வண்டும் மொய்த்துப் பருகிக் கொப்புளிக்கும் தேன் நிறைந்து வழிய நின்று கொண்டிருந்தனர். மாலையின் மகரந்தப் பொடிகள் சிந்த, உடை நெகிழ, அல்குல் மேல் அணிந்த பொன் வடம் மின்ன; சிலம்பணிந்த இடது காலின் மேல், செம்பஞ்சுக் குழம்பு தோய்ந்த அழகிய வலது காலை ஊன்றி, அழகு நலமெல்லாம்

ஒருங்கே அமையப்பெற்ற, ஒளி விளங்கும் மாணிக்கக் கொத்து பெற்ற பொற்கொடி போன்றவளாகிய நங்கை, இலக்கணை, அங்கே தன் தோழியைத் தழுவியபடி நின்று கொண்டிருந்தாள்.

**தாமரைப் போதிற் பூத்த தண்ணறுங் குவளைப் பூப்போற்**
**காமரு முகத்திற் பூத்த கருமழைத் தடங்கண் தம்மாற்**
**தேமலர் மார்பி னானை நோக்கினாள் செல்வன் மற்றப்**
**பூமலர்க் கோதை நெஞ்ச மூழ்கிப்புக் கொளித்திட் டானே**

[மூழ்கி-மறைந்து.]

## வேறு

**விண்ணாறு செல்வார் மனம்பேதுற போந்துப் வீங்கிப்**
**பண்ணாறு சொல்லாண் முலைபாரித்த வென்று நோக்கக்**
**கண்ணாறு சென்ற களியைங்கணைக் காம னன்ன**
**புண்ணாறு வேலான் மனமூழ்கினள் பொன்ன னாளே 2134**

[பேதுற-வருந்தும்படி; பாரித்த-தோன்றின.]

**மைதோய் வரையி னிழியும்புலி போல மைந்தன்**
**பெய்தாம மாலைப் பிடியின்னிழிந் தேகி மன்னர்**
**கொய்தாம மாலைக் கொழும்பொன்முடி தேய்த்தி லங்கும்**
**செய்பூங் கழலைத் தொழு தான்சென்னி சேர்த்தி னானே**

[இழிந்து-இறங்கி; சென்னி-தலை.]

தாமரை மலரோடு பூத்த குளிர்ந்த அழகிய குவளைப் பூப்போல, இன்பூட்டும் அழகு முகத்தில் மலர்ந்த கரிய பெருங் கண்களால் அவள், தேனிருக்கும் மலர்மாலை அணிந்த மார்புடைய சீவகனைப் பார்த்தாள். பார்த்த அளவிலே அவனும் அந்த அழகுமலர் மேனியாளின் நெஞ்சிலே நிறைந்து மறைந்தான். வானுலக மாந்தர் மனம் வருந்த, அவ்விண்ணாட்டின் அமுதகலசம் மண்ணுக்கு வந்து, முன்னிலும் சற்றே பருத்து, இன்னிசை போலிருக்கும் இனிய சொல்லுடைய இவள் இளமுலையாய்த் தோன்றியதோ, என்று சீவகன் அவளை நோக்கினான்.

  

அப்படி நோக்கிய அளவிலேயே, கண்ணுக்கு உருவாகிய இன்பத்தைத் தரும் காமனைப் போன்ற, புண் தோய்ந்த வேலுடையவனாகிய சீவகனின் மனத்திலே திருமகள் போன்ற அவளும் இரண்டறக் கலந்தாள். முகில் தவழும் மலைமேலிருந்து இறங்கி வருகின்ற புலியைப்போல, சீவகன், மாலையணிந்த யானையின் கழுத்திலிருந்தும் இறங்கி வந்து, போரில் கொய்த பகையரசர்களின் மாலையணிந்த மணிமுடிகள் அழுந்தித் தேய்த்த தழும்போடு விளங்கும், வீரக்கழல் அணிந்த மாமன் கோவிந்தன் மலரடிகளைத் தலையிலே தாங்கிப் பணிந்து வணங்கினான்.

**பொன்னங் குவட்டிற் பொலிவெய்தித் திரண்ட திண்தோள்**
**மன்னன் மகிழ்ந்து மருமானை விடாது புல்லித்**
**தன்னன்பு கூரத் தடந்தாமரைச் செங்கண் முத்தம்**
**மின்னும் மணிப்பூண் விரைமார்ப நனைப்ப நின்றான்**

*[கூர-மிகுதலால்; முத்தம்-நீர்த்துளி.]*

**ஆனாது வேந்தன் கலுழ்ந்தானெனக் கோயி லெல்லாம்**
**தானாது மின்றி மயங்கித்தடங் கண்பெய் மாரி**
**தேனார் மலரீர்த் தொழுகச்சிலம் பிற்சி லம்பும்**
**கானார் மயிலின் கணம்போற்கலுழ் வுற்ற தன்றே 2137**

*[ஆதும்-யாதும்; ஆனாது-அமையாமல்; சிலம்பு-மலை; சிலம்பும்-ஒலிக்கும்.]*

## வேறு

**பகைநரம் பிசையுங் கேளாப் பைங்கதிர்ப் பசும்பொற் கோயில்**
**வகைநலம் வாடி யெங்கு மழுகுரன் மயங்கி முந்நீர்**
**அகமடை திறந்த தேபோ லலறக்கோக் கிளைய நங்கை**
**மிகைநலத் தேவிதானே விலாவணை நீக்கி னாளே 2138**

*[முந்நீரகம்-கடலிடத்து; மடை-கரை; அலற-அலறுதலால்; விலாவணை-அழுகையை.]*

பொன் மலைபோல் அழகுறத் திரண்டு தோன்றும் திண்தோளுடைய மன்னனாகிய கோவிந்தன் மனமகிழ்ந்து மருமகனை விடாது தழுவிக் கொண்டு, நெஞ்சில் அன்பு மிக, தாமரை மலர் போலும் தன் பெரிய கண்களிலிருந்து வடியும் முத்துப்போன்ற கண்ணீர், அழகு விளங்கும் மணிக் கலன்கள் அணிந்த, மணமிக்க சீவகனின் மார்பை நனைக்க, நின்று கொண்டிருந்தான். வேந்தனாகிய கோவிந்தன் தான் அரசன் என்கின்ற தன்மை சிறிதும் இல்லாமல், வேந்தனைப் போல் அமையாமல், மனம் மயங்கி அழுதான் என நினைத்து அரண்மனை முழுதும், பெரிய கண்களில் இருந்து பெருகும் மழை போன்ற கண்ணீர் தம் மேலணிந்த மாலையில் உள்ள தேன் நிறைந்த மலர்களை இழுத்து ஒழுகும்படி, மலைகளில் இருந்து, துன்பத்தால் துடிக்கும் காட்டு மயில்கள் எழுப்பும் ஆரவார ஒலிபோல், ஒலியெழுப்பி அழுது புலம்பியது. பகைத்துயர் என்னும் பாட்டையே கேட்டறியாத பசும் பொன் அரண்மனையில் உள்ளவர்களின் அழகு நலம் வாடி, எங்கும் அழுகுரலே நிறைந்திட்டது. கடலின் உள்மடை திறந்ததைப்போல் பலரும் அலறும் ஒலி எங்கும் பரவியது. அரசனுக்கு இளைய நங்கையாகிய மிக்க புகழ்ப் பண்புடைய விசயை, தானே முன்வந்து அனைவர் அழுகையையும் நீக்கினாள்.

**பல்கதிர் மணியும் பொன்னும் பவழமுங் குயிற்றிச் செய்த**
**செல்வப்பொற் கிடுகு சூழ்ந்த சித்திர கூட மெங்கும்**
**மல்குபூந் தாமந் தாழ்ந்து மணிப்புகை கமழ வேந்தன்**
**வெல்புகழ் பரவ மாதோ விதியுளி யெய்தி னானே 2139**

[குயிற்றி-அழுத்தி; கிடுகு-தட்டி; விதியுளி-முறை யாலே.]

**எரிமணி யடைப்பை செம்பொற் படியக மிலங்கு பொன்வான்**
**கருமணி முகடு வேய்ந்த கஞ்சனை கவரி கொண்ட**
**வருமுலை மகளிர் வைத்து வான்றவி சடுத்து நீங்கப்**
**பெருமக னெண்ணங் கொள்வா னமைச்சரோ டேறி னானே**

  

[அடைப்பை-வெற்றிலை முதலியவை வைத்த பை;
கஞ்சனை-கலசப் பானை.]

உலந்தநா ளவர்க்குத் தோன்றா தொளிக்குமீன் குளிக்குங் கற்பிற்
புலந்தவே னெடுங்கட் செவ்வாய்ப் புதவிநாட் பயந்த நம்பி
சிலம்புநீர்க் கடலந் தானைச் சீதத்தற் கரசு நாட்டிக்
குலந்தரு கொற்ற வேலான் கொடிநகர் காக்க வென்றான்

[நாளுலந்தவர்க்கு-தமக்குரிய வாழ்நாள் கெடுதலை யுற்றவர்க்கு; மீன் குளிக்கும்-அருந்ததி தோற்கின்ற.]

பலவண்ண மணியும் பொன்னும் முத்தும் பவளமும் பதித்துச் செய்த, உயர்ந்த பொன்னாலாகிய கீற்றுகள் வேய்ந்து அமைத்த சித்திரகூடம் முழுதும் மலர் நிறைந்த மாலைகள் தொங்க, வாசமிகும் அகிற்புகை தவழ, அரசன் புகழ்ப்பரணி பலரும் பாட, அச்சித்திரகூடத்தை அடைந்தான். ஒளிவிளங்கும் மணிகளிழைத்த வெற்றிலைப் பையும், செம்பொன்னாலான எச்சில் படிக்கமும், ஒளி மிக்க பொன் வாளும், நீலமணி கொண்டு மேல் மூடிய கலசப்பானையும், கவரியும், அழகிய மார்புடைய மங்கையர் எடுத்து வந்து, உயர்ந்த மணித்தவிசின் அருகே வைத்துவிட்டுச் செல்ல, மந்திரிகளோடு இருந்து ஆராயச் சீவகனும் அவர்களுடன் கட்டிலில் ஏறி அமர்ந்தர்ன். வாழ்நாள் முடிந்தவர்களுக்கும் தெரியாமல், மறையும் விண்மீனாகி நிற்கும் அருந்ததியும் தோற்கும் கற்புடைய, வேலைப் பழிக்கும் நீண்ட கண்களும் சிவந்த வாயும் உடைய, புதவி என்னும் அரசி பெற்ற பிள்ளையாகிய, ஒலிக்கும் அலைகடல் போன்ற படை வரிசை உடைய சீதத்தனுக்கு முடிசூட்டி, குலத்தைக் காக்கும் வெற்றிப் புகழுடைய வேலேந்தியவனான கோவிந்தன் இந்நகரைக் காத்திடுக என்றான்.

  

மாற்றவ னொற்ற ரொற்றா வகையினின் மறைய நம்பிக்
காற்றின தோழர்க் கெல்லா மணிகல மடிசி லாடை
வேற்றுமை யின்றி வேண்டுட் டமைத்தன னருளி யிப்பால்
ஏற்றுரி முரச நாண வெறிதிரை முழக்கிற் சொன்னான்

*[ஆற்றின-உதவி செய்த; அருளி-தலையளி செய்து.]*

கட்டியங் கார னம்மைக் காண்பதே கரும மாக
ஒட்டித்தான் விடுத்த வோலை யுளபொரு ளுரைமி
னென்னத்
தொட்டுமேற் பொறியை நீக்கி மன்னனைத் தொழுது
தோன்ற
விட்டலர் நாகப் பைந்தார் விரிசிகன் கூறு மன்றே 2143

*[கருமம்-காரியம்; ஒட்டி-துணிந்து.]*

விதையத்தார் வேந்தன் காண்க கட்டியங் கார னோலை
புதையவிப் பொழிலைப் போர்த்தோர் பொய்ப்பழி பரந்த
தென்மேற்
கதையெனக் கருதல் செய்யான் மெய்யெனத் தானுங்
கொண்டான்
சிதையவென் னெஞ்சம் போழ்ந்து தெளிப்பினுந் தெளிநர்
யாரே 2144

*[சிதைய-கெடும்படி; போழ்ந்து-பிளந்து.]*

பகை ஒற்றர் கண்டு கொள்ளாத வகையில் மறைவாகச் சீவகனுக்கும் அவனுடைய மற்றைய தோழர்களுக்கும், அவரவர் விரும்பியவாறு உணவும், உடையும், அணி மணியும் வேறுபாடின்றி வேண்டிய அளவு தந்து அருள் செய்திருக்க இப்புறத்தே, காளை மாட்டின் தோலால் ஆன மணிமுரசம் வெட்கும்படி, அலைமோதும் கடல் போல முழக்கமிட்டுக் கோவிந்தன் கூறுவான்: 'கட்டியங்காரன் நம் கருத்தறிவதையே காரணமாகக் கொண்டு துணிந்து ஓலை அனுப்பியிருக்கிறான். அவன் அனுப்பிய ஓலையில் உள்ள பொருளைக் கூறுக' என்று கட்டளை இட்டான். ஓலையை எடுத்து அதன் மேல் பொறித்திருந்த

இலச்சினையை நீக்கி, மன்னன் கோவிந்தனை வணங்கி விட்டு, விரிந்து மலர்ந்த நாக மலர்மாலை அணிந்த விரிசிகன் என்பவன் ஓலையைப் படிக்கத் தொடங்கினான்.

'விதேக நாட்டு மன்னனே, கட்டியங்காரன் அனுப்பிய ஓலை இதைக் காண்பாயாக! சச்சந்த மன்னனை நான் கொன்றேன் என்கின்ற பழிச்சொல் இப்பூமியில் உள்ளோர் அறிவைக் கெடுத்து என்மேல் படிந்திருப்பதைக் கதை என்று கருதாமல் நீயும் அதை மெய்யென்றே நம்பிக் கொண்டிருக்கிறாய். இனி என் உயிர் போகும்படி என்னுள்ளத்தைப் பிளந்து காட்டினாலும் அதை நம்பக் கூடியவர்கள் இல்லை.

**படுமணிப் பைம்பொற் சூழிப் பகட்டின மிரியப் பாய்ந்து**
**கொடிநெடுந் தேர்க ணூறிக் கொய்யுளை மாக்கள் குத்தி**
**இடுகொடி யணிந்த மார்ப ிருவிசும் பேறச் சீறி**
**அடுகளிற் றசனி வேக மலமர வதனை நோனான் 2145**

[பகட்டினம்-யானைக்கூட்டம்; நூறி-அழித்து.]

**நூற்றுவர் பாகர் தம்மைப் பிளந்துயி ருண்ட தென்னும்**
**மாற்றத்தைக் கேட்டுச் சென்று மதக்களி றடக்கி மேற்கொண்**
**டாற்றலங் கந்து சேர்த்தி யாப்புற வீக்கும் போழ்திற்**
**கூற்றென முழங்கி வீழ்த்துக் கொல்லக்கோ லிளகிற் றன்றே 2146**

[மாற்றம்-வார்த்தை; யாப்புற-பிணிப்புறும்படி.]

**தனக்கியா னுயிரு மீவேன் றான்வரப் பழியு நீங்கும்**
**எனக்கினி யிறைவன் றானே யிருநிலக் கிழமை வேண்டி**
**நினைத் துத்தா னெடிதல் செல்லா தென்சொலே தெளிந்து நொய்தாச்**
**சினக்களி யானை மன்னன் வருகெனச் செப்பி னானே**

[கிழமை-உரிமை.]

ஒலிக்கும் மணியும் பசும் பொன்னாலான பட்டமும் உடைய யானைக் கூட்டம் பயந்து ஓடும்படிப் பாய்ந்து,

கொடி உடைய பெரிய தேர்களை அழித்து, ஒழுங்காகக் கத்தரிக்கப்பட்ட பிடரி மயிருடைய குதிரைகளைக் குத்திக் கொன்று, எழுது கொடியை அணிந்த மார்புடைய வீரர்கள் விண்ணிலே பறக்கவிட்டுப் பிளிறி, கொல் களிறாகிய அசனி வேகம் அலைந்துதிரிய அதைக் காணப் பொறாதவனானான். அவ்வசனி வேகம் இத்தோடு நில் லாது நூற்றுக்கணக்கான பாகருடலைப் பிளந்து உயிரைக் கொன்றது என்னும் சேதி அறிந்து சென்று அம் மதக் களிற்றை அடக்கி அதன் மேலமர்ந்து, கொண்டு வந்து அதை வலிமை மிக்க தறியோடு சேர்த்துப் பிணித்துக் கட்டும்போது, அது கூற்றுவனைப்போல் முழங்கி அரசன் மேல் பாய்ந்து கொல்லச் சச்சந்தனும் இறந்து பட்டான். (இந்த உண்மையை நீ அறிவாயாக. எனவே) கோவிந்தனாகிய உனக்கு நானென் உயிரையும் தருவேன். நீ இங்கு வந்தால் எனக்கு வாய்த்த பழிச் சொல்லும் நீங்கும். எனக்கினிமேல் நீயே அரசனாவாய். பெருநில ஆட்சியை விரும்பி, என் சொல்லை ஏற்று, இனியுங் காலங் கடத்தாது விரைவாக, சீற்றமுடைய யானைப்படையுடைய அரசனே வருக எனச் செப்பி னான்' என்று விரிசிகன் படித்து முடித்தான்.

**ஓலையுட் பொருளைக் கேட்டே யொள்ளெயி றிலங்க நக்குக்**
**காலனை யளியன் றானே கையினால் விளிக்கு மென்னா**
**நூல்வலீ ரிவனைக் கொல்லு நுண்மதிச் சூழ்ச்சி யீதே**
**போல்வதொன் றில்லை யென்றான் புனைமணிப் பொன்செய் பூணான் 2148**

[விளிக்கும்-அழைக்கின்றான்; சூழ்ச்சி-உபாயம்.]

**கள்ளத்தா னம்மைக் கொல்லக் கருதினா னாமுந் தன்னைக்**
**கள்ளத்தா லுயிரை யுண்ணக் கருதினே மிதனை யாரும்**
**உள்ளத்தா லுமிழ வேண்டா வுறுபடை வந்து கூட**
**வள்ளுவார் முரச மூதா ரறைகென வருளி னானே 2149**

[கள்ளம்-வஞ்சனை; உறுபடை-மிக்கசேனை.]

**கட்டியங் கார னோடு காவல னொருவ னானான்**
**விட்டுநீர் நெல்லும் பொன்னும் வழங்குமின் விளைவ கூறின்**
**ஓட்டல னிறைவன் சொன்னீர் நாநும வல்ல வென்னக்**
**கொட்டினான் தடங்கண் வள்வார்க் குளிறிடி முரச**
**மன்றே 2150**

*[விளவ-நடக்கப்போவதை: ஓட்டலன்-ஒவ்வான்.]*

அவ்வோலையில் இருந்த பொருளைக் கேட்டு, அழகிய பற்கள் வெளித்தெரிய நகைத்து, 'இரங்கத்தக்கவன், கூற்றுவனைத் தானே கைகூப்பி 'வா'வென்று அழைக்கின்றான் என நினைத்து, நூல் கற்றுணர்ந்த பெரியோரே! இவனைக் கொல்ல இதைவிட அறிவிற் சிறந்த தந்திரம் வேறெதும் இல்லை' என்றான் மணிகளிழைத்துப் பொன்னால் செய்த பூண் அணிந்த சீவகன். 'சூழ்ச்சியால் நம்மைக் கொல்ல நினைக்கிறான் கட்டியங்காரன், நாமும் அவனுயிரைச் சூழ்ச்சியாலே கவரவே நினைப்போம். இதை எவரும் மனதை விட்டு வெளிப்படுத்த வேண்டாம். எனவே புகழ்மிக்க இப்பழம்பதியில் படைகள் வந்து நிறையும்படி முரசறையுங்கள்' என்று வேந்தன் வள்ளுவனைப் பணித்தான்.

'கட்டியங்காரனோடு நம் வேந்தன் பகைமையை விட்டு நண்பன் ஆயினான். எனவே நீரும் பகையை விட்டு நெல்லும், நீரும், பொன்னும் இரு நாட்டிலும் ஒரு சேர வழங்குவீராக! இதற்கு மேலாக எவரேனும் ஏதும் உரைத்தால் அரசன் ஏற்றுக்கொள்ள மாட்டான். அவ்வாறு கூறுவோர் நாவும் அவர்களுடையதாகாது; (துண்டிக்கப்படும்)' என்று அடிபடும் பெரிய இடத்தையும், இறுக்கிய வாரையும் உடைய, இடிபோல் முழங்கும் முரசினை வள்ளுவன் எங்கும் அறைந்து தெரிவித்தான்.

**விண்டவ ருடலங் கீறிச் சுளித்துநின் றழலும் வேழம்**
**ஒண்கொடி யுருவத் திண்டே ரொளிமயிர்ப் புரவி பண்ணி**

வண்கழ லணிந்து மள்ளர் வாள்வலம் பிடித்து நாளைத்
தெண்டிரைப் பரப்பு நாணத் திருநகர்த் தொகுக
வென்றான் 2151

[சுளித்து-மாறுபட்டு; திரை-கடல்.]

ஏற்றுரி போர்த்த வள்வா ரிடிமுர சறைந்த பின்னாட்
காற்றெறி கடலிற் சங்கு முழவமு முரசு மார்ப்பக்
கூற்றுடன் றனைய தானை கொழுநில நெளிய வீண்டிப்
பாற்கடற் பரப்பின் வெள்வாட் சுடரொளி பரந்த வன்றே

[முழவம்-மத்தளம்; ஈண்டி-மிகுந்து.]

புதையிரு ளிரியப் பொங்கிக் குங்குமக் கதிர்க ளோக்கி
உதையத்தி னெற்றி சேர்ந்த வொண்சுடர்ப் பருதி போலச்
சுதையொளி மாடத் துச்சி வெண்குடை நீழற் றோன்றி
விதையத்தார் வென்றி வேந்தன் விழுப்படை காணு மன்றே

[ஒக்கி-புறப்படவிட்டு, சுதை-வெண்சாந்து.]

'பகைவர் உடலைப் பிளந்து கோபித்துச் சீறும் யானையும், சிறந்த கொடி புனைந்த பெரிய தேரும், அழகிய மயிருடைய குதிரையும் ஆகியவற்றை அழகுற அலங்கரித்துக் காலில் அழகிய கழலணிந்து, வீரர்களே, வாளை வலக்கையிலே தாங்கி, தெளிந்த அலை நிறைந்து விளங்கும் கடலும் வெட்கமுறும்படி நாளை நம் அழகு நகரிலே வந்து கூடுக' என்றும் முரசறைந்தான். இவ்வாறு காளை மாட்டின் தோலால் ஆன இறுக்கிய வாருடைய, இடிபோல் முழங்கும் முரசினை வள்ளுவன் அறைந்ததற்கு அடுத்தநாள், காற்றால் அலை நிறைந்து பெருகி ஒலிக்கின்ற கடல்போல, சங்கும் மத்தளமும் மணி முரசும் முழக்கமிட, யமனோடு கோபித்துப் போரிடக் கிளம்பியதைப் போன்ற பெரிய படை, வளமிக்க நிலம் பிளந்து போகும்படி வந்துகூடியது. பாற்கடல் பரப்பைப் போல அவ்வீரர்களுடைய வாளின் வெண்மையான ஒளி எங்கும் நிறைந்து பரவியது. நிறைந்து கிடக்கும் இருள் மறைந்து போகும்படி, சிவந்த குங்கும நிறக்கதிர்கள்

  

வெளித்தோன்ற, உதயகிரி மலைமேல் எழுந்த ஒளிமிக்க கதிர் உடைய சூரியனைப் போல, வெண்சாந்தின் ஒளி நிரம்பிய மாடத்தின் மேல், வெண் கொற்றக் குடை நிழலின் கீழ் வந்து நின்று, விதைய நாட்டின் வெற்றிப் புகழுக்குரிய வேந்தன், ஆற்றல் மிக்க சிறந்த தன் படையினைப் பார்வையிட்டான்.

## வேறு

அரும்பனைத் தடக்கை யபரகாத் திரம்வாய் வாலெயி
றைந்தினுங் கொல்வ
கருங்கடற் சங்குங் கறந்தவான் பாலுங் கனற்றிய காலுகி
ருடைய
பெரும்புலி முழக்கின் மாறெதிர் முழங்கிப் பெருவரை
கீண்டிடுந் திறல
திருந்தியே முறுப்புந் திண்ணிலந்தோய்வ தீயுமிழ் தறுகணிற்
சிறந்த 2154

*[அபரகாத்திரம்-கால்கள்; கனற்றிய-கெடுத்த.]*

கவிழ்மணிப் புடைய கண்ணிழ னாறிற் கனன்றுதந்
நிழலொடு மலைவ
அவிழ்புயன் மேக மனையமும் மதத்த வறுபதிற் றறுபதா
நாகம்
புகழ்பருந் தார்ப்பப் பூமதம் பொழிவா னின்றன விராயிரங்
கவுள்வண்டு
இகழ்மதஞ் செறித்த விராயிரத் தைஞ்ஞூ றிளையவு
மத்துணைக் களிறே 2155

*[புடை-பக்கம்; கவுள்-கன்னம்.]*

குந்தமே யயில்வாள் குனிசிலை மூன்றுங் குறைவிலார்
கூற்றொடும் பொருவார்
அந்தர மாறா யானைகொண் டேறப் பறக்கெனிற்
பறந்திடும் திறலார்
முந்தமர் தம்முண் முழுமெயு மிரும்பு மேய்ந்திட வெஞ்சமம்
விளைத்தார்
கொந்தழ லஞ்சாக் குஞ்சர மிவர்ந்தார் கோடியே
விருத்தியா வுடையார் 2156

[குந்தம்-எறிகோல்; அயில்-வேல்; அந்தரம் ஆறா-ஆகாயமே வழியாக; விருத்தி-சீவிதம்.]

பெரிய பனைமரம் போன்ற துதிக்கையும், கால்களும், வாயும், வாலும், தந்தக் கொம்பும், ஆகிய ஐந்தினாலும் கொல்வன. கருங்கடலில் பிறந்த வெண் சங்கையும், பசுவின் பாலையும் பழிக்கின்ற கால் நகங்களும் உடையன. பெரிய புலி முழங்கிப் பாயவந்தால், எதிர்த்து முழக்கமிட்டுப் போரிடும், மலையைப் பிளக்கும் வலிமை உடையன. நான்கு கால்களும், துதிக்கையும், வாலும், தந்தமும் ஆகிய ஏழுறுப்புகளும் பரந்த நிலத்திலே படிய நடப்பன. நெருப்புப் பொறி பறக்கும் அஞ்சாத கண்களும் உடையன. கவிழ்ந்த மணிகள் இரு பக்கமும் உடையன. தம் கண்ணில் படுகின்ற தம் நிழலைக் கண்டே, கோபித்துப் போரிடுவன. பொழிகின்ற மழை நீரைப் போல் மும்மதம் சொரிவனவாகிய மூவாயிரத் தறுநூறு யானைகள். சிறந்த பருந்தும் ஒலிசெய்ய மதம் வடிய நிற்கும் களிறுகள் இரண்டாயிரம். வண்டு இகழும்படி கன்னக்கதுப்பில் மதம் வடிந்து தேங்கி நிற்கும் யானைகள் இரண்டாயிரத்து ஐந்நூறு; இதைப் போலவே குட்டி யானைகள் இரண்டாயிரத்து ஐந்நூறும் ஆகப் பத்தாயிரத்தைந்நூறு யானைகள் வந்து நிறைந்தன. எறிகோல் வீசுவதிலும், கூர்வாள் ஏந்திப் போரிடுவதிலும், வில்வளைத்து அம்பெய்வதிலும் வல்லவர்களும், எமனோடும் போரிடக் கூடிய ஆற்றல் மிக்கவர்களும், வான் வழியாக யானையைக் கொண்டு மேலேறிப் பறந்து செல்க என்றாலும், பறந்து செல்லக்கூடிய திறமை மிக்கவர்களும், முந்தி நடந்த போர்களில் தங்கள் உடல் முழுவதும் படைக்கலங்கள் வந்து மொய்க்கும்படி வீரப் போரிட்டவர்களும் ஆகிய, யானைமறவர் கூடினர். பெரு நெருப்பைக் கண்டும் அஞ்சாத யானைகள் மேலமர்ந்து அதைச் செலுத்திவரும் இவர்கள் கோடிப் பொன்னை வாழ்வூதியமாக உடையவர் ஆவார்கள்.

  

குங்கும நறுநீர் பந்திநின் றாடுங் குதிரையா றாயிரத் திரட்டி
பொங்குவெண் மயிர்சூழ் பொற்படை பொலிந்த வறுபதி
னாயிரம் புரவி
வெங்கணை தவிர்ப்ப வெள்ளிவெண் படைய வாய்விடி
னிலவரை நில்லாப்
பைங்கதிர்க் கொட்டைக் கவரிசூழ்ந் தணிந்த பகரினத்
தொகையன பாய்மா 2157

*[கொட்டைக்கவரி-குமிழையுடைய கவரி.]*

வேய்நிறக் கரும்பின் வெண்ணிறப் பூப்போன்
மிடைந்தொளிர் குந்தமும் வாளும்
தோநிலை யரவின் றோற்றமே போலுஞ் சிலைகளும்
பிறைகளுந் துறைபோய்
ஊனமொன் றில்லா ருயர்குடிப் பிறந்தா ராயிர மடுகளங்
கண்டார்
பானிலாப் பூணார் படைத்தொழிற் கலிமாப் பண்ணுறுத்
தேறினா ரவரே 2158

*[தோம்-குற்றம்; ஊனம்-குறை.]*

## வேறு

தறுக ணாண்மைய தாமரை நிறத்தன தகைசால்
மறுவில் வான்குளம் புடையன மாளவத் தகத்த
பறையி னாலுவ படுசினை நாவலின் கனிபோற்
குறைவில் கோலத்த குளிர்புனற் சிந்துவின் கரைய 2159

*[தகை-அழகு; மறு-குற்றம்; ஆலுதல்-முழங்குதல்.]*

வரிசையுற நின்று குங்குமம் கலந்த பனிநீர் ஆடும் குதிரைகள் பன்னீராயிரமும், அடர்ந்த வெண் மயிர் நிறைந்த பொற் சேணம் பூட்டி குதிரைகள் அறுபதினாயிரமும், தம் மேலிருந்து விடும் அம்பு பின்னடைய முன்னோக்கிச் செல்வனவும், வெள்ளி யாலமைந்த சேணம் உடையனவும், வாயில் பூட்டிய கடிவாளத்தைத் தளர்த்தினால் தரையில் தங்காது காற்றைப் போலப் பறப்பனவும், பொன்னொளி வீசும்

குமிழுடைய கவரியை நெற்றியில் அணிந்தனவும் ஆகிய குதிரைகளின் எண்ணிக்கை அறுபதினாயிரம் ஆக, மொத்தம் ஒரு லட்சத்து முப்பத்திரண்டாயிரங் குதிரைகள் வந்து நிறைந்தன. மூங்கிலைப் போலும் நிறமுடைய கரும்பினது, வெள்ளை நிறப் பூவினைப்போல நெருங்கி ஒளி விடும் எரியீட்டியும், வாளும், நஞ்சுடைய பாம்பினைப் போன்ற வில்லும், பிற படைப் பயிற்சியும் குறைவறக் கற்றுத் தேர்ந்த, மாசற்ற உயர் குடியில் பிறந்தவர்; போர்க் களமாயிரம் கண்டவர்; பால் நிலாக் காய்வது போலும் ஒளிவிடும் பொற்பூண் அணிந்தவர் ஆகிய வீரர்கள், குதிரைகளை அலங்கரித்து ஏறி அமர்ந்தனர். அக் குதிரைகளில், அஞ்சாத வீரமும், தாமரை மலர் போலும் நிறமும், அழகு பொருந்திய குற்றமற்ற வெண்ணிறக் குளம்புகளும் உடையவை மாளவ நாட்டினைச் சேர்ந்த குதிரைகள். பறை போல முழங்குவனவும், பழுத்த நாவல் பழம் போலும் குறை வற்ற அழகுடையனவும். குளிர்ந்த நீருடைய சிந்து நதிக் கரையைச் சேர்ந்த குதிரைகள்.

**பார சூரவம் பல்லவ மெனும்பதிப் பிறந்த**
**வீர வாற்றல விளைகடுந் தேறலி னிறத்த**
**பாரிற் றேர்செலிற் பழிபெரி துடைத்தென நாணிச்**
**சோரும் வார்புய றுளங்கவிண் புகுவன துரகம்** **2160**

[தேறல்-தேன்; துரகம்-குதிரை.]

**பீலி மாமயி லெருத்தெனப் பெருவனப் புடைய**
**மாலை மாரட்டத் தகத்தன வளரிளங் கிளியே**
**போலு மேனிய பொருகடற் கலத்தின்வந் திழிந்த**
**கோல நீர்ப்பவ ளக்குளம் புடையன குதிரை** **2161**

[கலம்-கப்பல்; இழிந்த-இறங்கிய.]

**இன்ன பொங்குளைப் புரவிபண் ணுறுத்தன இயல்தேர்**
**பொன்னும் வெள்ளியு மணியினும் பொலிந்துவெண் மதியம்**
**தன்னை யூர்கொண்ட தகையன தொகைசொலி னறுநூறு**
**என்னு மீறுடை யிருபதி னாயிர மிறையே** **2162**

  

[தகையன-தன்மை உடையன; இறை-அரசன்.]

**நொச்சி மாமலர் நிறத்தன நொடிவரு முந்நீர்**
**உச்சி மாக்கதிர் போற்சுடு மொளிதிக ழயில்வாள்**
**எச்சத் தல்லவு மெறிபடை பயின்றுதம் மொன்னார்**
**நிச்சங் கூற்றினுக் கிடுபவர் தேர்மிசை யவரே** **2163**

[அயில்-கூர்மை; நிச்சம்-நித்தம்; ஒன்னார்-பகைவர்.]

அவற்றில், பாரசூரவம், பல்லவம் என்னும் நாட்டில் பிறந்த குதிரைகள் வீரப்போருக் கேற்ற வலிமையுடையன; முதிர்ந்து வடிந்த தேனின் நிறமுடையன; தன்னைப் பூட்டிய தேர் தரையில் செல்வது இழுக்கென்று நினைத்து வெட்கமுற்று, நீர் முகந்து செல்லும் முகிலைப் பிளந்து கொண்டு வானில் பறக்கும் வல்லமை உடையன. தோகை மயிலின் கழுத்தைப் போன்ற நிறமுடையனவும் பேரழகுடையனவுமாகிய குதிரைகள் உயர்ந்த மராட்டி யத்தைச் சேர்ந்தவை. வளரும் பச்சைப் பசுங்கிளி போலும் மேனி வனப்பும் கடலில் பிறந்த பவளம் போலச் சிவந்த குளம்பும் உடைய குதிரைகள், கடல்வழியே மரக்கலங் களில் வந்து இறங்கியவை. இத்தகைய சிலிர்க்கும் பிடரி மயிருடைய குதிரைகளைப் பூட்டி அலங்கரித்த அழகிய இருபதினாயிரத்தறுநூறு தேர்கள் பொன்னாலும் வெள்ளியாலும் மணியாலும் அலங்கரிக்கப்பட்டு, நிலா வட்டஞ் சூழ்ந்த வெண்ணிலவைப் போல், அரசன் முன் வந்து நின்றன. அப்படி வந்து நின்ற தேரில் உள்ள வீரர்கள், நொச்சி மலரின் நிறத்தையும், கடலில் நிறைந்து கிடக்கின்ற நீரை உச்சி வானின் மேலிருந்து சுடுகின்ற சூரியனைப் போன்ற சுட்டெரிக்கின்ற தன்மை யையும் உடையவர்; ஒளிமிக்க வாளும் மற்ற படைக்கலப் பயிற்சிகளும் குறைவறக் கற்றுத் தேர்ந்தவர்கள். அவர்கள் தம் பகைவரை எமனுக்கு விருந்தாக அளிக்கும் வல்லமையும் உடையவர்கள்.

## வேறு

எயிற்றுப்படை யாண்மையினி னிடிக்கும்புலி யொப்பார்
பயிற்றியவில் வாள்பணிக்கும் வேலொடுடன் வல்லார்
துயிற்றியபல் கேள்வியினர் தூற்றிக்கொளப் பட்டார்
அயிற்றுப்படை யார்கண்மத யானைகத னறுப்பார் 2164

[கேள்வி-அறிவு; கதம்-கோபம்; துப்பு-வலிமை.]

காலனொடு சூழ்ந்தகடு நோய்களையு மொப்பார்
ஆலுங்கட றூர்த்தன்மலை யகழ்தலிவை வல்லார்
ஞாலமறி யாண்டொழிலர் நான்கிலக்க முள்ளார்
மேலுநும ராலுரிமை யுட்சிறப்புப் பெற்றார் 2165

[நான்குஇலக்கம்-நான்கு நூறாயிரம்.]

சிங்கத்துரி போர்த்தசெழுங் கேடகமும் வாளும்
பொங்குமயில் வேலும்பொரு வில்லுமுடன் பரப்பி
மங்குலிடை மின்னுமதி யுஞ்சுடரும் போல
வெங்கட்டொழிற் கூற்றுமரண் சேரவிரிந் தன்றே 2166

[சிங்கத்துரி-சிங்கத்தின் தோல்; மங்குல்-மேகம்.]

அவ்வீரர்கள் வலிமையில், பலமிக்க பல்வரிசையுடைய பாயும் புலிப் போன்ற தன்மை உடையவர்கள்; வில்லும் வாளும் பயின்று, தம்மிடம் பாடங்கேட்க மற்றவரை வேலோடு வந்து கூடச் செய்யும் திறமை மிக்கவர்கள்; நிறைந்து தங்கிய கல்வி அறிவுடையவர்கள்; நாட்டில் எல்லார்க்கும் அறிமுகம் ஆனவர்கள்; தம்முடைய வேலின் வலியாலே பகைவர் மதயானைகளின் கோபத்தைக் கொல்லக் கூடியவர்கள். இன்னும் அவர்கள், பகைவரைக் கொல்வதில் எமனையும், அவனோடு சேர்ந்த கொடிய நோய்களையும் போன்றவர்கள்; அலையொலிக்கும் கடலைத் தூர்ப்பதிலும், மலையை ஆழப் பிளப்பதிலும் வல்லவர்கள்; உலகம் புகழும் வீரச்செயல் புரியவல்ல இவர்கள் நான்கு நூறாயிரம் பேருடையார், அரசர் போற்றும் சிறப்புடையார். இவர்கள் சிங்கத்தின்

தோலை மேல் போர்த்த கேடயமும், வாளும், ஒளிசிந்தும் கூர்வேலும், போர்வில்லும் தாங்கி, மேகத்திடை மின்னு கின்ற நிலவும், சூரியனும் போல, கொலைத் தொழில் வல்ல எமனும் கண்டஞ்சித் தனக்குப் புகலிடம் தேடிக் கொள்ளும்படி வந்து நிறைந்தனர்.

### வேறு

செம்பொ னீண்முடித் தேர்மன்னர் மன்னற்குப்
பைம்பொ னாழிதொட் டான்படை காட்டினான்
அம்பொ னொண்கழ லானயி ராவணம்
வெம்ப வேறினன் வெல்கென வாழ்த்தினார் 2167

[ஆழி-மோதிரம்; வெம்ப-விரைந்து.]

சிறுவெண் சங்குமு ரன்றன திண்முர
சறையு மாக்கடல் காரென ஆர்த்தன
நெறியி னல்கின புள்ளுநி மித்தமும்
இறைவன் கண்வல னாடிற்று இயைந்தரோ 2168

[முரன்றன-முழங்கின; அறையும்-ஒலிக்கின்ற.]

மல்லல் யானைக் கறங்கு மணியொலி
அல்ல தைங்கதி மான்கொழுந் தாரொலி
கல்லெ னார்ப்பொலி மிக்கொளிர் வாண்மினிற்
செல்லு மாக்கடல் போன்றது சேனையே 2169

[ஐங்கதிமான்-ஐந்து வகையான செலவையுடைய குதிரை; தார்-கிண்கிணிமாலை.]

மாலை மாமதி வெண்குடை மல்கிய
கோலக் குஞ்சி நிழற்குளிர் பிச்சமும்
சோலை யாய்ச்சொரி மும்மதத் தானிலம்
பாலை போய்மரு தம்பயந் திட்டதே 2170

[குஞ்சி-சிற்றணுக்கன் என்னும் ஒருவகை விருது; பிச்சம்-பீலிக்குடை.]

செம்பொன்னாலான நீண்ட மணிமுடி புனைந்த தேருடைய மன்னர் மன்னனாகிய கோவிந்தனுக்கு ஏனாதி

மோதிரமணிந்த சேனாபதி, மேற்சொன்னவாறு வந்து நிறைந்த நால்வகைப் படை வரிசையையும் காட்டினான். அவற்றைக் கண்டு முடித்த அழகிய பொற்கழல் அணிந்த கோவிந்தன், ஐராவதம் என்னும் தன் யானை மீதேறி அமர்ந்தவுடன், அப்படை வீரர் எல்லாம் மன்னர் வாழ்க என வாழ்த்தினர். அப்போது சிறிய வெள்ளைச் சங்குகள் ஒலித்தன. ஒலிக்கும் விரிந்த கடல்போலும், கார்முகில் போலும் பெரிய முரசுகள் முழங்கின. பறவைகளும் பிறவும் கூட்டிய நன்நிமித்தங்கள் தோன்றின. அரசனுடைய வலது கண்ணும் துடித்தது. வளமிக்க யானையின் கழுத்தில் கட்டிய மணி யெழுப்பும் ஒலியும், அத்தோடு, ஐங்கதியிலும் செல்லக் கூடிய குதிரையின் கழுத்தில் பூட்டியுள்ள மாலையிலுள்ள மணிகள் எழுப்பும் ஒலியும், 'கல்' என்னும் ஒலியெழுப்பி ஆரவாரத்தோடு செல்லும் காலாட்படை எழுப்பும் ஒலியும் மிக, விளங்கும் வாள் ஒளியோடு செல்கின்ற படைவரிசை பெரிய கடல் போலத் திரண்டது. மாலையில் தோன்றும் முழுநிலவு போன்ற வெண்கொற்றக் குடையும், நிறைந்த சிற்றணுக்கன் என்னும் விருதும், குளிர்ந்த நிழல் தரும் பீலிக் குடையும் நெருங்கிச் சோலைபோல் நிழல் தர, யானைகள் பொழிந்த மதநீரினால், (அப்படை நடந்த) பாலைபோல் கிடந்த இடம், தன் தன்மைகெட்டு மருதநிலம் போலானது.

**மன்றன் மாமயி லார்த்தெழ மானினம்**
**கன்றி னோடுக லங்கின காற்பெய**
**வென்றி வேற்படை யஞ்சிவ னத்தோடு**
**குன்றெ லாங்குடி போவன போன்றவே** **2171**

[மன்றல்-மணத்தல்; கன்று-மான்கன்று; காற்பெய-ஓட.]

## வேறு

**படுகண் முழவி னிமிழருவி வரையுங் காடும் பலபோகி**
**இடுமண் முழவி னிசையோவா வேமாங் கதநாட்**
**டெய்தியபின்**

நெடுவெண் ணிலவி னெற்றிதோய் நிழலாற் செம்பொற்
புரிசையே
கடிமண் காவல் கருதினான் கோயி லாகக் கருதினான்

[மண் இடு முழவு-மார்ச்சனையிட்ட மத்தளம்; ஓவா-
நீங்காத; புரிசை-மதில்.]

போக மகளிர் வலக்கண்க டுடித்த பொல்லாக்
கனாக்கண்டார்
ஆக மன்னற் கொளிமழுங்கிற் றஞ்சத் தக்க குரலினாற்
கூகை கோயிற் பகற்குழறக் கொற்ற முரசம் பாடவிந்து
மாக நெய்த்தோர் சொரிந்தெங்கு மண்ணும் விண்ணு
மதிர்ந்தவே 2173

[ஆகம்-உடல்; கூகை-கோட்டான்; குழற-கூவ.]

பெடையோடு கூடிய மயில்கள் பயந்து ஓட, மான் கூட்டம் தன் கன்றுகளோடு கலங்கி ஓட, வெற்றிப் புகழ் மிக்க வேலேந்திய இப்படை வரிசையைக் கண்டு பயந்து காடும் மலையும் குடிபெயர்ந்து போவனபோல் தோன்றின. ஒலிசெய்யும் கண்ணுடைய முழவைப்போல, ஒலி செய்து விழுகின்ற அருவியும் குன்றும் உடைய காடுகள் பல வற்றைக் கடந்து, மார்ச்சனையிட்ட மத்தளத்தின் இன்னிசைப் பண்ணொலி நீங்காதிருக்கின்ற, ஏமாங்கத நாட்டை அடைந்த பின்பு, முழுநிலவின் உச்சியைச் சென்று தொடுகின்ற, மின்னும் பொன்னொளி உடைய, மதிற்புறத்தையே, சீவகன் ஆளுகைக்குரிய இடமாகச் செய்யக் கருதிய மன்னன் கோவிந்தன் தன் இருப்பிட மாகக் கொண்டு தங்கினான். இவ்வாறு கோவிந்தன் ஏமாங்கத நாட்டில் இராசமாபுரத்தின் மதிற் புறத்தே வந்து தங்கியவுடன், அங்கே உட்புறத்தின் அரண் மனையில், கட்டியங்காரனுடைய, காமக்கிழத்தியரின் வலக்கண்கள் துடித்தன. அவர்கள் தீய கனவுகளைக் கண்டனர். கட்டியங்காரனுடைய மேனி வனப்பும் குறைந்தது. கேட்டவர் பயந்து நடுங்கும்படி ஆந்தை யானது, அரண்மனையின் பக்கத்தில் இருந்து, பகலிலே

  

கூவியது. வெற்றி முரசின் ஒலி அவிந்தது. வானிலிருந்து குருதி மழை பொழிந்தது. பூமி அதிர்ந்தது. வானம் இடியிடித்தது.

கூற்றம் வந்து புறத்திறுத்த தறியான் கொழும்பொ
னுலகாள்வான்
வீற்றிங் கிருந்தே னெனமகிழ்ந்து வென்றி வேழ மிருநூறும்
காற்றிற் பரிக்குந் தேர்நூறுங் கடுங்கா லிவுளி யாயிரமும்
போற்றி விடுத்தான் புனைசெம்பொற் படையே யணிந்து
புனைபூணான் 2174

*[பரிக்கும்-செல்லும்; கூற்றம்-எமன்.]*

மன்ன னாங்கோர் மதவேழம் வாரி மணாள னென்ப தூஉம்
மின்னுங் கொடித்தேர் விசயமும் புரவி பவன வேகமும்
பொன்னிற் புனைந்து தான்போக்க நிகழ்வ தோரான்
மகிழ்வெய்தி
முன்யான் விட்ட வினக்களிற்றி னிரட்டி விடுத்தா
னெனப்புகழ்ந்தான் 2175

*[ஓரான்-அறியான்; இரட்டி-இரட்டித்த.]*

வேறு

வீங்குநீர் விதையத் தார்கோன் கட்டியங் காரன் தன்னோ
டாங்கவ னொருவ னாகி யன்பெனு மயில்கொள் வாளால்
வாங்கிக்கொண் டுயிரை யுண்பான் வஞ்சத்தாற்
சூழ்ந்த வண்ணம்
ஓங்குநீ ரோத வேலிக் குணரயா முரைத்து மன்றே 2176

*[கோன்-அரசன்; அயில்-கூர்மை.]*

இவ்விதம் தீ நிமித்தங்கள் தோன்ற, எமன் அரண்மனை வாயிலின் மதிற்புறத்தே வந்து தங்கியிருப்பதை அறியாத பூணணிந்த கட்டியங்காரன், வளமிக்க திரண்ட செல்வத்தை ஆளப்பிறந்திருப்பவன் தானென்று மகிழ்ந்து வெற்றி மதயானை இருநூறும், காற்றைப் போலப் பறக்கும் தேர்கள் நூறும், விரைந்து செல்லும் காலுடைய குதிரைகள் ஆயிரமும் ஆகிய இவற்றை அழகிய பொன்

னணிகளால் புனைவித்துத் தன்னைத்தானே புகழ்ந்தபடி கோவிந்தனை எதிர்கொள்ள அனுப்பி வைத்தான். இதற்கு மாற்றாகக் கோவிந்த மன்னனும், வரிமணாளன் என்கிற மதயானையையும், கொடி பறக்கும் விசயம் என்னும் அழகிய தேரையும், பவனவேகம் என்னும் குதிரையையும், பொன் அணிகளால் புனைவித்துக் கட்டியங்காரனிடம் அனுப்பி வைக்க, அடுத்து நிகழப் போவதை அறியாத கட்டியங்காரனும், அவற்றைக் கண்டு மகிழ்ந்து, தான் முன் அனுப்பிய யானை, தேர், குதிரை போன்றவற்றின் இரட்டித்த சிறப்புடையவற்றைத் தனக்குக் கோவிந்தன் திரும்பத் தந்திருக்கின்றான் என்று புகழ்ந்தான். நீர் நிறைந்த விதைய நாட்டு மன்னனாகிய கோவிந்தன், கட்டியங்காரனோடு நட்புரிமை பூண்டு, அன்பென்னும் கூர்வாளால் அவன் உயிர் கொன்று குடிக்க, வஞ்சகத்தால் செய்த சூழ்ச்சியை, நீர் நிறைந்த கடலை வேலியாக உடுத்த இந்நிலவுலகிற்கு இனி நாம் விளக்கிக் கூறுவோம்.

**பெருமகன் காதற் பாவைப் பித்திகைப் பிணையன் மாலை**
**ஒருமக ணோக்கி னாரை யுயிரொடும் போகொ டாத**
**திருமக ளவட்குப் பாலா னருந்திரி பன்றி யெய்த**
**அருமக னாகு மென்றாங் கணிமுர சறைவித் தானே 2177**

[பிணையல்-பிச்சி மாலை; போகொடாத-திரும்பப் போகவிடாத.]

**ஆய்மதக் களிறு திண்டே ரணிமணிப் புரவி யம்பொற்**
**காய்கதிர்ச் சிவிகை செற்றிக் கலந்ததை நுரைக ளாகத்**
**தோய்மழை யுலக வெள்ளந் தொன்னகர்த் தொக்க தேபோல்**
**ஆய்முடி யரச வெள்ள மணிநக ரீண்டிற் றன்றே 2178**

[சிவிகை-பல்லக்கு; செற்றி-நெருங்கி; உலகவெள்ளம்-ஊழிப் பெருவெள்ளம்.]

**நல்லவள் வனப்பு வாங்க நகைமணி மாலை மார்பர்**
**வில்லன்றே யுவனிப் பாரும் வெங்கணை திருத்து வாரும்**

**சொல்லுமி னெமக்கு மாங்கோர் சிலைதொட**
**நாளென் பாரும்**
**பல்சரம் வழங்கு வாரும் பரிவுகொள் பவரு மானார் 2179**

[நகை-ஒளி; உவனிப்பார்-குறிபார்த்தெய்வார்.]

கோவிந்த மன்னன் 'அன்புக்குரிய மகளும், பிச்சி மலர் மாலை அணிந்தவளும் தன்னை நோக்கியவரை உயிருடன் போகவிடாத பேரழகியும் திருமகள் போன்றவளும் ஆகிய இலக்கணைக்குக் கணவனாகக் கூடியவன் திரிபன்றியை அடித்து வீழ்த்தும் வல்லமை உடையவன் எவனோ அவனே ஆகும்' என்று எங்கும் அழகிய முரசறைந்து தெரிவித்தான். அம் முரசொலி கேட்டு, தேர்ந்து எடுத்த யானைகளும், பெரிய தேரும், அழகிய மணிகள் புனைந்த குதிரைகளும், ஒளி வீசும் பொற்சிவிகையும் ஆகியவை நெருங்கிக் கலந்து நுரைகளாக, பெருகிய நீருடைய ஊழிப் பெருவெள்ளம், புகழ்மிக்க அப்பழம்பதியிலே கூடியதைப்போல, அழகிய முடி புனைந்த அரசர் கூட்டம் அவ்வழகு நகரிலே வந்து திரண்டது. நல்லவளாகிய இலக்கணையின் அழகு நலம் மனத்தைக் கவர, ஒளி சிந்தும் மணிமாலை புனைந்த மார்புடைய மன்னர்கள் அப்போதிருந்தே வில்லை வளைப் போரும் குறிபார்த்து அம்பு எய்வோரும் ஆயினர். சிலர் நாங்களும் அங்கே சென்று வில்லைத் தொட நல்ல ஒரு நாளைக் கூறுங்கள் என்று வேண்டி நிற்பா; சிலர் அம்புகளை விடுவர்; இன்னுஞ் சிலர் இவை ஒன்றுந் தெரியாமல் வருந்தி நிற்பர்.

**பிறையெயிற் றெரிகட் பேழ்வாய்ப் பெருமயிர்ப்**
**பைம்பொற் பன்றி**
**ஆறையெனத் திரியு மாய்பொற் பூமியி னிறைந்து மன்னர்**
**உறுகணை யொன்றும் வில்லு முடன்பிடித் துருவ நேமிப்**
**பொறிதிரி வதனை நோக்கிப் பூமுடி துளக்கி**
**நின்றார் 2180**

[பேழ்வாய்-பெரியவாய்; முடி துளக்கி-தலையை யசைத்து.]

ஏந்தெழி லாகஞ் சாந்தி னிடுகொடியெழுதிக் காதிற்
காய்ந்தெரி செம்பொற் றோடுங் கனமணிக் குழையு மின்ன
வேந்தருள் வினிதை வேந்தன் வெஞ்சிலை தளர வாங்கி
ஆய்ந்தபொற் பன்றி நெற்றி யருந்துக ளார்ப்ப
வெய்தான் 2181

[இடுகொடி-எழுதுகொடி; துகள் ஆர்ப்ப-தூசி எழ.]

குடர்தொடர் குருதிக் கோட்டுக் குஞ்சர நகரத் தார்கோன்
சுடர்நுதற் பட்ட மின்னச் சுரும்பிமிர் கண்ணி சிந்த
அடர்கதிர்ப் பைம்பொற் பூணு மாரமு மகலத் தொல்கப்
படர்சிலை குழைய வாங்கிப் பன்றியைப் பதைப்ப
வெய்தான் 2182

[கோடு - தந்தம்; படர் - துன்பம்; பதைப்ப - அசையும்படி.]

பிறை நிலவைப் போன்ற பற்களும், பிளந்த வாயும், தடித்த மயிரையும் உடைய பசும்பொன்னாலான பன்றி, என்னைக் கொல்க என்று கூறி, திரிவதைப் போலிருக்கும் அப்பொன் மண்டபத்தில் மன்னர்கள் வந்து நிறைந்து, கையிலே அழகிய வில்லும் அம்பும் பிடித்து, அழகிய சக்கரத்தினுள்ள பன்றிப்பொறி சுழல்வதைப் பார்த்துத் தம் அழகிய மணிமுடி அசைத்து நின்றார். நிமிர்ந்த பரந்த மார்பிலே சாந்தினால் அழகிய கொடியாக எழுதி, காதுகளில் மின்னி ஒளிவிடும் பொன் தோடும், மாணிக்கக் குழையும் விளங்க, அவ்வேந்தருள் ஒருவனான வினிதை நாட்டு வேந்தன், தன் கொடிய வில்லை வளைத்து, பொன்னாலான அழகிய அப்பன்றியின் நெற்றி யிலே அம்புபட்டுத் துண்டுகளாகுமாறு எய்தான். குடலைப் பிளந்து தோய்ந்த குருதிக் கொம்புடைய யானையின் பெயரோடு பொருந்திய அத்தினபுரத்து மன்னன், அழகிய தன் நெற்றியிலே பட்டம் மின்ன, வண்டுகள் மொய்த்துப் பாடும் மாலையின் மலர்கள் சிந்த, மிக்க ஒளியுடைய பொன்னணியும், மணியாரமும் மார்பில் அசைய,

பகைவர்க்குத் துன்பந்தரும் வில்லை வளைய வளைத்துப் பன்றி அசைய எய்தான்.

வார்மதுத் துளிக்கு மாலை மணிமுடித் தொடுத்து நாலக்
கார்மதங் கடந்த வண்கைக் காம்பிலிக் காவன் மன்னன்
ஏர்மதக் கேழ லெய்வா னேறலும் பொறியி னேறுண்டு
ஆர்மதக் களிற்று வேந்தர்க் கருநகை யாக வீழ்ந்தான்

[தொடுத்து-கட்டி; நால-தொங்க; கேழல்-பன்றி.]

முலைவட்டப் பூணு முத்து முள்கலிற் கிழிந்து பொல்லா
இலைவட்டத் தாம மார்பிற் கோசலத் திறைவ னெய்த
குலைவட்டக் குருதி யம்பு வானின்மேற் பூச லுய்ப்பான்
சிலைவட்ட நீங்கி விண்மேற் செவ்வனே யெழுந்த
தன்றே 2184

[செவ்வனே-நேராக; முள்குதல்-தழுவுதல்.]

ஊடிய மடந்தை போல வுறுசிலை வாங்க வாரா
தாடெழு வனைய திண்டோ ளவந்திய னதனை நோனான்
நாடெழுந் தார்ப்ப மற்றந் நன்சிலை முறித்திட் டம்பை
வாடினன் பிடித்து நின்றான் மணமகன் போல நின்றான்

[நோனான்-பொறாதவனாய்.]

தேன் மிகுந்து துளிக்கும் மலர்மாலை மணிமுடியில் இருந்து தொங்கும்படி, முகிலின் செருக்கை அடக்கிய (அதற்கும் மேலாகக்) கொடையளிக்கும் கையுடையவனாகிய காம்பிலி நாட்டையாளும் அரசன், அழகிய—செருக்குடைய பன்றியை எய்து வீழ்த்துதற்கு, ஆழியின் மேல் வந்து ஏறியவுடன், அவ்வாழியின் விசையாலே தாக்கப்பட்டு நிறை மதமுடைய யானைப் படையுடைய மன்னர்களின் சிரிப்புக் கிடமாகக் கீழே வீழ்ந்தான். மங்கையர் மார்பிலணிந்த வளைந்த பூணும், முத்தும் பட்டு மலர் கிழிந்து சிதற, அழகில்லாத இலைகளே நிறைந்த—வளைந்த மாலையணிந்த மார்புடைய கோசல நாட்டு மன்னன் எய்த, வட்டமான இறகுடைய குருதி தோய்ந்த அம்பு, வில் வளையத்தினின்றும் வெளிப்பட்டு,

விண்ணோடு போர் செய்யக் கிளம்பியதைப் போலக் குறி தவறி மேல்நோக்கிச் சென்றது. ஊடிப் பிணங்கிய மங்கையரைப் போலத் தன் வில் வளைக்க வராது போக, வெற்றி மிக்க, கணைய மரம் போன்ற திண் தோளுடைய அவந்தி நாட்டு மன்னன், அதைக் கண்டு பொறாதவனாகி ஏமாங்கத நாட்டார் கைகொட்டி ஆரவாரிக்க, அந்த அழகிய வில்லை முறித்தெறிந்துவிட்டு மணமகன்போல வெறும் அம்பை மட்டும் கையிலேந்தி வருந்தியபடி நின்றான்.

**பில்கித்தே னொழுகுங் கோதைப் பிறர்மனை யாள்கட் சென்ற**
**உள்ளத்தை யுணர்வின் மிக்கா னொழித்திடப் பெயர்ந்த தேபோல்**
**மல்லனீர் மகத ராசன் துரந்தகோன் மருள வோடிப்**
**புல்லியப் பொறியை மோந்து புறக்கொடுத் திட்ட தன்றே 2186**

*[பில்கி-துளித்து; மல்லன்-வளம்; மோந்து-தீண்டி.]*

**தென்வரைப் பொதியி லார மகிலொடு தேய்த்த தேய்வை**
**மன்வரை யகலத் தப்பி மணிவடந் திருவில் வீச**
**மின்னென விட்ட கோலை விழுங்கக்கண் டழுங்கி வேர்த்துக்**
**கன்மலிந் திலங்கு திண்டோட் கலிங்கர்கோன் மெலிந்து மீண்டான் 2187**

*[ஆரம்-சந்தனம்; தேய்த்த - அரைத்த; தேய்வை-குழம்பு; அழுங்கி-வருந்தி.]*

**கன்மழைப் பொற்குன் றேந்திக் கணநிரை யன்று காத்து**
**மன்னுயி ரின்று காக்கும் வாரண வாசி மன்னன்**
**மின்னிழை சுடர வாங்கி விட்டகோ லுற்று றாதாய்**
**மன்னுயிர் நடுங்க நாணி மண்புக்கு மறைந்த தன்றே**

*[நாணி-வெட்கி; புக்கு-புகுந்து.]*

தேன் துளித்து வடியும் மலர்மாலை அணிந்த பிறன் மனையாளிடம் வைத்த மனத்தை, அறிவிற் சிறந்தவன் நல்லுரை கூறி மீட்க, அம்மனமும் மீண்டு வந்து நல்வழிப் பட்டதைப்போல, நீர்வளமிக்க மகதநாட்டு மன்னன் எய்த அம்பு கண்டவர் மயங்கி இது பன்றியை வீழ்த்து மென்று நினைக்க விரைந்து சென்று, அப்பொறியின்மேல் பட்டு மீண்டு வந்து வீழ்ந்தது. தெற்குப் பொதியமலைச் சந்தனத்தையும் அகிலையும் அரைத்த குழம்பை, மலை போலப் பொருந்திய தன் மார்பிலே பூசி, கழுத்திலணிந்த முத்துவடம் வானவில் போல் ஒளிவீச, மின்னலைப் போல் விரைந்து எய்த அம்பைப் பன்றிப் பொறி விழுங்கக் கண்டு, கல் எனத் திரண்டு விளங்கும் திண்தோளுடைய கலிங்க நாட்டு மன்னன் மனம் வருந்தி உடல் வியர்த்துத் திரும்பினான். முன்பொருநாள் பெய்த கல்மழையைத் தடுக்கக் கண்ணன் அழகிய மலையைக் குடையாக ஏந்திப் பசுக்கூட்டத்தைக் காப்பாற்றியதுபோல், இன்று தன் வலிமையால் மன்னுயிர் காத்தளிக்கும் காசி நாட்டரசன் பொன்னணிகள் ஒளி வீச வில்லை வளைத்துவிட்ட அம்பு, பன்றிப் பொறியைப் பட்டும் படாமலும் சென்று, எங்கே தம்மேல் விழுந்து விடுமோ என்று மற்ற உயிர்கள் கண்டு அஞ்ச, மண்ணில் விழுந்து மறைந்தது.

**எரிகதிர்ப் பைம்பொற் சுண்ண மிலங்கமெய்ம் முழுது மப்பிப்**
**புரிகழ லணிந்த நோன்றாட் போதன புரத்து வேந்தன்**
**அரிதினிற் றிகிரி யேறித் திரிந்துகண் சுழன்று சோர்ந்து**
**விரிகதிர்க் கடவுள் போல வெறுநிலத் தொலிப்ப**
**வீழ்ந்தான் 2189**

[நோன்றாள்- வலிவுடைகால்; அரிதினின் - அரிதாக; திகிரி-சக்கரம்.]

**மலையச்செஞ் சாந்து முந்நீர் வலம்புரி யீன்ற முத்தும்**
**இலைவைத்த கோதை நல்லா ரிளமுலைப் பொறியு மார்ந்து**
**சிலைவைத்த மார்பிற் றென்னன் திருமணிப் பன்றி நோக்கித்**
**தலைவைத்த தம்பு தானுந் தரணிமேற் பாதம் வைத்தான்**

[மலையம்-பொதியமலை; தென்னன்-பாண்டியன்.]

விற்றிறல் விசய னென்பான் வெங்கணை செவிட்டி
நோக்கி
ஒற்றுபு திருத்திக் கைம்மே லுருட்டுபு நேமி சேர்ந்தாங்
குற்றதன் சிலையின் வாய்ப்பெய் துடுவமை பகழி வாங்க
இற்றுவின் முறிந்து போயிற் றிமைப்பினி னிலங்கித்
திட்டான் 2191

[செவிட்டி-நேராக நின்று; ஒற்றுபு - கையின்மேல் அமுக்கி; உருட்டுபு-உருட்டி; உடு-சிறகு; இலங்கித் திட்டான்-குதித்தான்.]

ஒளி விளங்கும் பொற்சுண்ணப் பொடியை உடல் முழுதும் பூசிய, வீரக்கழலணிந்த காலுடைய போதன புரத்து மன்னன், அரிதாக முயன்று ஆழியின்மீது ஏறியதும், அதன் சுழற்சியைக் கண்டு மயக்கமுற்று, கண் சோர்ந்து, ஞாயிறுபோல் சுழன்று, பலரும் பரிகசிக்க வெறுநிலத்திலே வந்து விழுந்தான். பொதிய மலையில் விளைந்த முதிர்ந்த சந்தனமும், கடலில் வலம்புரிச் சங்கு பெற்ற முத்தும், இலையிடை இட்டுத் தொடுத்த மலர் மாலையணிந்த மங்கையர் இளமுலை பதிந்த வடுவும் நிறைந்த, மலையை உவமிக்கத் தக்க மார்புடைய தென்பாண்டி நாட்டு வேந்தன், அழகிய மணிகள் இழைத்த பொற்பன்றியைப் பார்த்துத் தலைக்கு நேரே குறிவைத்ததும் ஆழிப்பொறியின் மேல் நிற்க முடியாமல் அவனும் கீழே இறங்கினான். பிறகு வில்வல்ல விசயன் என்பவன் கொடிய தன் அம்பை எடுத்து ஒருக்கணித்துப் பார்த்து, கைமேல் அமுக்கித் திருத்தி, உருட்டிவிட்டு, ஆழிப்பொறியை அடைந்து, பிறகு அதைத் தன் வில்லோடு பொருந்தச் சேர்த்து, சிறகமைந்த அம்பினை வில் நாணோடு சேர்த்து இழுக்கவும், வில் முறிந்து இரண்டா யிற்று. அவனும் நொடிப் பொழுதில் ஆழிப்பொறியை விட்டுக் கீழிறங்கிக் கொண்டான்.

குண்டல மிலங்க வாங்கிக் குனிசிலை யுறையி னீக்கிக்
கொண்டவன் கொழும்பொற் றாரு மாரமு மிளிர வேறிக்
கண்டுகோ னிறைய வாங்கிக் காதுற மறித லோடும்
விண்டுநா ணற்ற தாங்கே விசயனும் வீக்க மற்றான் 2192

[மிளிர-பிறழ; விண்டு-விட்டு; நாண்-கயிறு.]

உளைவனப் பிருந்த மான்றே ரொளிமுடி மன்ன ரெல்லாம்
வளைவனப் பிருந்த தோளாள் வருமுலைப் போகம் வேண்டி
விளைதவப் பெருமை யோரார் விற்றிறன் மயங்கி யாரும்
களைகலார் பொறியை யாங்கோ ராறுநாள் கழிந்த
வன்றே 2193

[உளை-பிடரி மயிர்; போகம்-இன்பம்.]

### வேறு

பனைக்கை யானை மன்னர் பணியப் பைம்பொன் முடியிற்
கனைக்குஞ் சுரும்பார் மாலை கமழ மதுவுந் தேனும்
நனைக்குங் கழலோன் சிறுவ னாம வெள்வேல் வலவன்
நினைக்க லாகா வகையா னேரா ருயிர்மே லெழுந்தான்.

[வலவன்-வெற்றியையுடையவன்; நேரார்-பகைவர்.]

விசயன் தன் காதுக் குண்டலம் ஒளிவீச, சேமவில்லை வாங்கி உறையிலிருந்தும் நீக்கி எடுத்துக்கொண்டு, பொன் மாலையும் முத்தாரமும் மின்ன, மீண்டும் ஆழிச் சக்கரத்தின் மேலேறி, பன்றி மூன்றும் ஒரு குறியில் கூடுகின்ற காலத்தைக் கண்டு, அம்பினைவிட, நன்றாக நாணை இழுக்க, அது காதோடு செல்ல மீள்கின்ற அளவிலே, நாண் முறுக்குவிட்டு அறுந்தது. அத்தோடு அவனும் அம்பெய்யும் கருத்தை விட்டுப் பெருமை இழந்து நின்றான். அழகான பிடரிமயிர் பொருந்திய குதிரை பூட்டிய தேருடைய முடிமன்னர் எல்லோரும், மூங்கிலைப் போலும் அழகிய தோளுடைய இலக்கணையின் அழகு முலை தோயும் இன்பக்கூடலை விரும்பி, விளையும் பேறும், வில்லெய்யும் திறமும் தமக்கில்லை என்பது உணராதவராய், வில்வலி இழந்து மயங்கி நின்றனர். பன்றிப்

பொறியை அம்பெய்து வீழ்த்த யாருமின்றி ஆறு நாட்கள் கழிந்தன. பனைபோலும் துதிக்கை உடைய, யானைப் படை உடைய மன்னர்கள் வந்து பணிய, அம்மன்னர்கள் முடிமேல் தும்பியும் வண்டும் மொய்க்கும் தேன் நிறைந்த வாசமிகு மலர்மாலையில் உள்ள தேன் வடிந்து நனையும் வீரக்கழலணிந்த சச்சந்த மன்னனின் மகன், அச்சுறுத்தும் வெற்றி வேலேந்தியவன், பகைவர் எண்ணிப் பார்க்க முடியாத வகையில் அவர் உயிரைக் கொள்ள எழுந்தான்.

**காரின் முழங்குங் களிறுங் கடலின் முழங்குந் தேரும்**
**போரின் முழங்கும் புரவிக் கடலும் புகைவாட் கடலும்**
**சீரின் முழங்கு முரசு மலறுஞ் சிறுவெண் சங்கும்**
**நீரின் முழங்க முழங்கு நீல யானை யிவர்ந்தான் 2195**

[காரின்-மேகத்தைப்போல; சீர்-சிறப்பு; புகை-சினம்.]

**கல்லார் மணிப்பூண் மார்பிற் காம னிவனே யென்ன**
**வில்லார் கடலந் தானை வேந்தர் குழாத்துட் டோன்றப்**
**புல்லான் கண்ணி னோக்கிப் புலிகாண் கலையிற் புலம்பி**
**ஒல்லா னொல்லா னாகி யுயிர்போ யிருந்தான் மாதோ**

[குழாம்-கூட்டம்; புல்லான்-பகைவன்.]

**புலியாப் புறுத்திக் கொண்டேன் போக்கி விட்ட பிழைப்பும்**
**வலியார் திரடோண் மதனன் னவனைப் பிழைத்த பிழைப்பும்**
**நலியு மென்னை நவியு மென்னக் களிற்றி னுச்சி**
**இலையார் கடகத் தடக்கை புடைத்து மெய்சோர்ந்**
**திருந்தான் 2197**

[கடகம்-கையிலணியும் ஒருவகை அணி; பிழைப்பு-தவறு.]

இடிபோல் முழங்கும் யானையும், கடல் போல் ஒலிக்கும் தேரும், போரென முழங்கும் கடல் போன்ற குதிரைப் படையும், சீறிப்பாயும் வாளேந்திய காலாட் படையும், வெற்றிச் சிறப்போடு முழங்கும் முரசமும், ஒலியெழுப்பும் வெள்ளைச் சிறு சங்கும், முறையோடு ஒலி செய்து முழங்க, சீவகன் பிளிறும் கரிய யானைமீது ஏறி

அமர்ந்தான். கல்லிழைத்த மணிப்பூணணிந்த மார்புடைய காமன் இவனே என்று கூறும்படி, வில்விளங்கும் கடல் போன்ற படை உடைய மன்னர் கூட்டத்தில் சீவகன் வந்து தோன்றியதைப் பகைவனாகிய கட்டியங்காரன் கண்டவுடன், புலியைக் கண்டு நடுங்கும் மான்போல, தன் நிலையறியாது, நிலைகெட்டு, உயிரிழந்த சவம்போல் இருந்தான். 'புலியைக் கைப்பற்றிய நான், கைநழுவ அதை வாலுருவிப் போகவிட்ட தவறும், வலிமை மிக்க திண்தோளுடைய மதனன் சீவகனைத் தப்பிப் போக விட்ட தவறும், என்னை வந்து வருத்துகிறதே, வருத்துகிறதே' என நினைத்து, யானையின் தலையை இலை வடிவுடைய பொற்கடகம் அணிந்த தன் கையினால் தாக்கி, உடல் சோர்ந்து இருந்தான்.

**மைபூத் தலர்ந்த மழைக்கண் மாழை மானேர் நோக்கிற்**
**கொய்பூங் கோதை மடவார் கொற்றங் கொள்கென்**
**றேத்தப்**
**பெய்பூங் கழலான் வேழத் திழிந்து பிறைபோற் குலாய**
**செம்பூண் சிலைநா ணெறிந்தான் சேரார் நாளுக்**
**கனவே 2198**

[பூத்து-அழகுபெற்று; மாழை-இளமை.]

## வேறு

**கனிபடு மொழியி னாடன் காரிகை கவற்ற வந்து**
**குனிசிலை தோற்ற மன்னர் கொங்குகொப் புளிக்கும் நீலப்**
**பனிமலர்க் காடு போன்றார் படர்சிலை தொடாத வேந்தர்**
**இனிதினின் மலர்ந்த வேரார் தாமரைக் காடு**
**போன்றார் 2199**

[காரிகை-அழகு; கவற்ற-வருத்த; கொங்கு-தேன்; ஏர்-அழகு.]

**போர்த்தகல் விசும்பில் வந்து பொறித்திரி பன்றி மூன்றும்**
**நீர்த்தகப் புணர்ந்த போதி னெடுந்தகை மூன்று மற்றுச்**

**சூர்த்துடன் வீழ நோக்கிச் சுடுசரஞ் சிதற வல்லான்**
**ஓர்த்தொன்றே புணர்ப்ப நாடி யொருபகல் காறு**
**நின்றான் 2200**

[சூர்த்து - சுழன்று; சுடுசரம் - கொதிக்கும் அம்பு; ஓர்த்து-கூர்ந்து பார்த்து.]

மைதீட்ட அழகுற மலர்ந்த மலர்போலும் குளிர்ந்த கண்ணில், இளைய மான் போன்ற மருண்ட பார்வையும், நறுமலர் கொய்து தொடுத்த புதுமண மாலையும் உடைய மங்கையர், மன்னவனே வெற்றி பெறுக என்று வாழ்த்த, அழகிய பூங்கழல் அணிந்த சீவகன் யானையை விட்டு இறங்கி, பிறைபோல வளைந்த பூண் பூட்டிய வில்லின் நாணினைத் தொட்டு ஒலியெழுப்பப் பகைவரின் வாழ் நாட்கள் தேய்ந்து மடிந்தன. கனிபோலும் இனிய மொழியுடையவளின் அழகு வந்து வருத்த, வில் வளைத்துத் தோற்று வலிமை இழந்த மன்னவர்கள், தேன் தெறிக்கும் குளிர்ந்த நீலோற்பல மலர்க்கூட்டத்தைப் போலாயினர். துன்பந்தரும் அவ் வில்லைத் தொடாத - போட்டியில் ஈடுபடாத - வேந்தர்கள் இதற்கு முற்றிலும் மாறாகத் தேன் நிறைந்து மலர்ந்த செந்தாமரைக் காடு போலாயினர். விசும்பில் மேலே திரிகின்ற பொறியில் அமைத்த போரிடத்தக்க திரிபன்றி மூன்றும் வந்து ஒன்றுசேரக் கூடுகின்ற போது, அம்மூன்றும் அறுபட்டுக் கீழே ஒருசேர விழும்படி அம்பெய்ய, அவை மூன்றும் அப்படி ஒன்றாகச் சேருங்காலத்தைக் கூர்ந்து பார்த்தபடி கொல்லும் அம்புமாரி பொழியவல்ல சீவகன், ஒரு பகல்பொழுது (ஒரு முகூர்த்தம்) முழுவதும் அங்கே நின்றுகொண்டிருந்தான்.

**பொறியின்மே லேறல் தேற்றார் நாணினாற் போதல்**
**செய்யார்**
**நெறியின்வில் லூன்றி நிற்ப நிழன்மணிப் பன்றி யற்று**
**மறியுமோ வென்று முன்னே மணிமுடி சிதறி வீழ்ந்த**
**செறிகழன் மன்னர் நக்குத் தீயத்தீ விளைத்துக்**
**கொண்டார் 2201**

[மறியுமோ-வீழுமோ; நக்கு-நகைத்து; தீய-தீந்து போக.]

சிரற்றலை மணிகள் வேய்ந்த திருந்துபொற் றிகிரிச் செம்பொன்
உரற்றலை யுருவப் பன்றி யிடம்வலந் திரிய நம்பன்
விரற்றலைப் புட்டில் வீக்கி வெஞ்சிலை கணையோ டேந்திக்
குரற்றலை வண்டு பொங்கக் குப்புற்று நேமி சேர்ந்தான் 2202

[சிரல்தலை-சிச்சிலியென்னும் பறவை; உரல்தலை-உரல்போலும் தலை; புட்டில்-விரல் சரடு; குரல்-மயிர்; குப்புற்று-குதித்து.]

ஒள்ளழல் வைரப் பூணு மொளிர்மணிக் குழையு மின்ன
ஒள்ளழற் கொள்ளி வட்டம் போற்குலாய்ச் சுழலப் பொன்ஞாண்
ஒள்ளழ னேமி நக்க மண்டல மாக நின்றான்
ஒள்ளழற் பருதி மேலோர் பருதிநின் றதனை யொத்தான் 2203

[குலாய்-வளைந்து; நேமி-சக்கரம்; மண்டலம்-வட்டம்.]

பன்றி சுழலும் சக்கரப் பொறியின்மேல் ஏறவும் அறியாதவராய், வெட்கத்தால் அதை விட்டு விலகி வரவும் முடியாதவராய், முறைப்படி வில்லை ஊன்றி நின்ற அளவில், அழகிய மணிகள் இழைத்துச் செய்த பன்றி அறுந்துவிழுமோ என்று முன்னே பன்றியை எய்ய முற்பட்டுத் தோற்று மணிமுடி சிதற வீழ்ந்த கழல் அணிந்த மன்னரெல்லாம் சிரித்துத் தாங்கள் கெடத் தாங்களே தீமைதேடிக் கொண்டவராயினர். சிச்சிலிப் பறவையின் தலைபோன்ற நிறமுடைய மணிகள் பதித்த, அழகிய பொன்னாலான சக்கரப் பொறியின் மேலமைந்த செம்பொன்னாலான உரல்போலும் தலையுடைய பன்றி, இடத்திலும் வலத்திலும் திரிந்தபடியிருக்க, சீவகன் தன் விரலால் விரற்சாட்டை நீக்கி, கொடிய வில்லும் அம்பும்

  

கையிலே ஏந்தி, தன் முடிக்கண்ணியை மொய்த்திருக்கும் வண்டுகள் எழுந்து ஓடக் குதித்து அப்பொறியை அடைந்தான். ஒளிவீசும் வைரப்பூணும் அழகு விளங்கும் காதுக் குழையும் மின்ன, பொன்னாண் அணிந்த சீவகன் மண்டலமிட்டு அழல் நெருப்புக் கொள்ளி வட்டம் போன்றிருந்த சுழலும் சக்கரப் பொறியின் மேலிருந்தான். அப்போது அவன் அழல் நெருப்புடைய பகுதி வட்டத்தின் மேல் மற்றோர் பகுதி இருந்ததொத்திருந்தான்.

**அருந்தவக் கிழமை போல இறாதவில் அறாத நாண்வாய்த்**
**திருந்தினார் சிந்தைபோலுந் திண்சரஞ் சுருக்கி மாறாய்**
**இருந்தவன் பொறியும் பன்றி யியற்றரும் பொறியு மற்றாங்**
**கொருங்குட னுதிர வெய்தா னூழித்தீ யுருமோ**
**டொப்பான் 2204**

[இறாத-முறியாத; அறாத-அற்றுப்போகாத; உரும்— இடி.]

**இலங்கெயிற் றேன மேவுண் டிருநிலத் திடித்து வீழக்**
**கலங்குதெண் டிரையுங் காருங் கடுவளி முழக்கு மொப்ப**
**உலம்புபு முரசங் கொட்டி யொய்யெனச் சேனை யார்ப்பக்**
**குலம்பகர்ந் தறைந்து கோமான் கோவிந்தன் கூறி னானே**

[ஏனம் - பன்றி; ஏவுண்டு - அம்புபட்டு; உலம்புபு - முழங்கி.]

**வானிடை யொருவன் றோன்றி மழையென முழங்கிச்**
**சொல்லும்**
**தேனுடை யலங்கல் வெள்வேற் சீவக னென்னுஞ் சிங்கம்**
**கானுடை யலங்கன் மார்பிற் கட்டியங் கார னென்னும்**
**வேன்மிடை சோலை வேழத் தின்னுயிர் விழுங்கு**
**மென்றான் 2206**

அரிதின் முயன்று பெற்ற தவப் பயன்போல, ஒடிந்து விழாத வில்லினது அறுந்து போகாத நாணிலே, தேர்ந்து தவம் புரிந்து தெளிந்திருந்தவர் உள்ளம்போல நிலை மாறாத அம்பினைப் பூட்டி, பகை கொண்டிருந்த

கட்டியங்காரன் வினைப்பயனும், பன்றி பொருத்தியிருந்த சுழலும் யந்திரப் பொறியும், ஒருங்கே அறுந்து விழும்படி அம்பை எய்தான், ஊழித்தீயும் ஒலிக்கும் இடியும் போன்ற சீவகன். வெளித் தெரியும் பெரிய பற்களை உடைய பன்றி அம்பினால் அடிபட்டுப் பேரொலியோடு தரையிலே விழுந்தவுடன், தெளிந்த நீருடைய அலை கடலும் கார்முகிலும் பெருங்காற்றும்போலப் படைகள் முழக்கமிட்டு, முரசறைந்து 'ஒய்' எனும் ஒலியெழுப்பி ஆரவாரிக்க, கோவிந்த மாமன்னன் சீவகனுடைய குலத்தை முதலில் கட்டியங்காரனுக்குக் கூறி; பிறகு மற்ற வர்க்கும் தெரியச் சொல்லினான்.

அப்போது விண்ணிலே ஒரு இயக்கன் தோன்றி இடி போல முழங்கிச் சொல்வான்: 'தேன் நிறைந்து வழியும் மலர்மாலை அணிந்த, வேலேந்திய சீவகனாகிய சிங்கம், மணமிக்க மாலையணிந்து விளங்கும் மார்புடைய கட்டியங்காரன் என்னும், வேல் நிறைந்த படைவரிசை யாகிய சோலையில் இருந்து வாழும் யானையின் உயிரைக் கொல்லும்' என்றான்.

வேறு

விஞ்சையர் வெம்படை கொண்டுவந் தாயென
அஞ்சுவ லோவறி யாயென தாற்றலை
வெஞ்சம மாக்கியுன் வீக்கறுத் துன்னொடு
வஞ்சனை வஞ்சம் மறுத்திடு கென்றான் 2207

[விஞ்சையர்-வித்தியாதரர்; வீக்கம்-பெருமை.]

சூரியற் காண்டலுஞ் சூரிய காந்தமஃது
ஆரழ லெங்ஙனங் கான்றிடு மங்ஙனம்
பேரிசை யானிசை கேட்டலும் பெய்ம்முகிற்
காரிடி போன்மத னன்கனன் றிட்டான் 2208

[கான்றிடும்-கக்கும்; கனன்றிடல்-கோபித்தல்.]

காற்படை யுங்களி றுங்கலி மாவொடு
நூற்படு தேரு நொடிப்பினிற் பண்ணி
நாற்படை யுந்தொகுத் தான்மக்கள் நச்சிலை
வேற்படை வீரரோர் நூற்றுவர் தொக்கார் **2209**

[காற்படை-காலாட்படை; நச்சு-நஞ்சு.]

விற்றிற லான்வெய்ய தானையும் வீங்குபு
செற்றெழுந் தான்படை யுஞ்சின மொய்ம்பொடு
மற்றவர் மண்டிய வாளமர் ஞாட்பினுள்
உற்றவர்க் குற்றதெ லாமுரைக் குற்றேன். **2210**

[மொய்ம்பு-வன்மை; அமர்-போர்; ஞாட்பு-போர்.]

இதைக் கேட்ட கட்டியங்காரன், சீவகனை நோக்கி, 'வித்தியாதரர் படை கொண்டு நீ வந்திருக்கிறாய் என்று நான் பயப்படுவேனோ? பயப்பட மாட்டேன். என் வலிமையை நீ அறிய மாட்டாய்; உன் தந்தை அறிவான். உன்னோடு நான் இப்போது போரிடின் உன் பெருமையைக் குலைத்து, உன்னையும் உன்னோடு வஞ்சனையால் என்னைச் சூழவந்த உன் மாமன் கோவிந்தன் சூழ்ச்சியையும் கொன்று தொலைத்திடுவேன்' என்றான். சூரியனைக் கண்டதும் சூரியகாந்தக்கல் எப்படி அதன் ஒளியை உமிழ்ந்திடுமோ, அப்படிச் சீவகனுடைய வெற்றிப் புகழைக் கேட்டவுடன் மழைக்கால இடிமேகம் போல் மதனன் கொதித் தெழுந்தான். காலாள், யானை, குதிரைப்படைகளோடு சிறப்புறச் செய்த தேர்ப் படையும் விரைவில் அலங்கரித்து—நால்வகைப் படையையும் கூட்டினான், கட்டியங்காரன். நஞ்சில் தோய்ந்த இலைபோலும் வடிவுடைய வேலேந்திய நூறு வீரராகிய அவன் மக்கள் நூற்றுவரும் திரண்டனர். வில் வல்ல சீவகனுடைய பெரிய படையும், கோபத்தோடு சீறியெழுந்த கட்டியங்காரனுடைய படையும் கொதித்தெழுந்து புரிந்த வாட்போரிலே கலந்து கொண்டவர்க்கு நேர்ந்த தெல்லாம் கூறத் தொடங்குகிறேன்.

## வேறு

அத்தமா மணிவரை யனைய தோன்றல
மத்தகத் தருவியின் மணந்த வோடைய
முத்துடை மருப்பின முனைக்கண் போழ்வன
பத்தியிற் பண்ணின பரும யானையே 2211

[போழ்வன-எதிர்ந்தவரைக் கொல்வன; பத்தி-வரிசை.]

கோல்பொரு கொடுஞ்சிலை குருதி வெம்படை
மேலவ ரடக்குபு வேழ மேறலின்
மாலிரு விசும்பிடை மணந்த வொண்கொடி
கால்பொரு கதலிகைக் கான மொத்தவே 2212

[கோல்-அம்பு; அடக்குபு-அடக்கி; மணந்த-கலந்தெழுந்த; கால்பொரு - காற்றாலடிக்கப்பட்ட. கதலிகை-வாழை.]

குடையுடை நிழலின கோல மார்ந்தன
கிடுகுடைக் காப்பின கிளர்பொற் பீடிகை
அடிதொடைக் கமைந்தன வரவத் தேர்த்தொகை
வடிவுடைத் துகின்முடி வலவர் பண்ணினார் 2213

[துகில்முடி வலவர்-தலைக்கட்டையுடைய தேர்ப்பாகர்; கிடுகு-தடுப்புக் கருவி.]

கொய்யுளைப் புரவிகள் கொளீஇய திண்ணுகம்
பெய்கயி றமைவரப் பிணித்து முள்ளுறீஇச்
செய்கயி றாய்ந்தன சிலையு மல்லவும்
கையமைத் திளைஞருங் கருவி வீசினார் 2214

[கொளீஇய-பூட்டிய; பெய்கயிறு-நுகத்திற் கோத்த கயிற்றை; பிணித்து-தேரிற்கட்டி; முள் உறீஇ-தாற்றுக்கோலைப் பொருத்தி.]

அத்தகிரி மலையைப் போன்ற தோற்றத்தையும், அம்மலை அருவி போலத் தலையிலே பொருந்திய நெற்றிப் பட்டத்தையும், முத்துப் பூண் அணிந்த தந்தக் கொம்பு

களையும் உடைய, போர்முனையில் பகைவர் உடலைப் பிளக்கின்ற யானைகள் ஒரு அணியில் வந்து திரண்டன. அம்பெய்யும் வளைந்த வில்லையும், குருதி தோய்ந்த பிற படைக்கலங்களையும் ஏந்தி யானையைச் செலுத்தும் மறவர், யானையை அடக்கி அதன்மேல் ஏறி அமர்ந்தவுடன், வானுறப் பறக்க எடுத்த கொடிகள் காற்றிலடி பட்டுக் கிழிந்து, புயலில் சிக்கிய வாழைக் காடு போலாயின. மேலமைத்த குடையின் நிழல் அழகு செய்திட, அம்பு படாமல் தற்காத்துக் கொள்ள அமைத்த கேடயம் காவல் செய்திட, ஒளி விளங்கும் பொன் பீடங்கள் அடிவைப்பதற்கும் அம்பு தொடுப்பதற்கும் அமைய, முழங்கிச் செல்லும் தேர்களை, ஆடையால் புனைந்த அழகிய தலையணி உடைய தேர்வல்லார்கள் அலங்கரித்தனர். ஒழுங்குறக் கத்தரிக்கப்பட்ட பிடரி மயிருடைய, குதிரைகள் பூட்டிய நுகத்தடியில், நுகத்தில் கோத்த கயிற்றைத் தேரோடு பிணித்துக் கட்டித் தாற்றுக் கோலும், கடிவாளமும் கையில் கொண்டு, வில்லும் பிற படைகளும் ஏந்தி எழுந்த தேர் வீரர்கள், மார்பில் கவசம் அணிந்தனர்.

பறந்திய றருக்கின பரவை ஞாட்பினுட்
கறங்கெனத் திரிவன கவரி நெற்றிய
பிறந்துழி யறிகெனப் பெரிய நூலவர்
குறங்கெழுத் துடையன குதிரை யென்பவே 2215

[பரவை-கடல்; கறங்கு-காற்றாடி.]

கொன்னுனைக் குந்தமுஞ் சிலையுங் கூர்நுதி
மின்னிலை வாளொடு மிலேச்ச ரேறலிற்
பொன்னரிப் புட்டிலுந் தாரும் பொங்குபு
முன்னுருத் தார்த்தெழப் புரவி மொய்த்தவே 2216

[அரி-பரல்; புட்டில்-கெச்சை.]

மாலையுங் கண்ணியு மணந்த சென்னியர்
ஆலுபு செறிகழ லார்க்குங் காலினர்
பாலிகை யிடையறப் பிடித்த பாணியர்
சாலிகை யுடம்பினர் தறுக ணாளரே 2217

[பாலிகை-வாள்பிடி; பாணியர்-கையினர்; சாலிகை-கவசம்.]

**போர்மயிர்க் கேடகம் புளகத் தோற்பரம்**
**வார்மயிர்க் கிடுகொடு வள்ளித் தண்டையும்**
**நேர்மரப் பலகையு நிரைத்த தானையோர்**
**போர்முகப் புலிக்கடல் புகுந்த தொத்ததே** **2218**

[புளகத் தோற்பரம்-கண்ணாடி தைத்த கிடுகு வள்ளித்தண்டை - பிரப்பங்கொடியாற் செய்த கிடுகு.]

பறந்து செல்லும் கம்பீரமும், பரந்த போரிலே காற்றாடி போலச் சுழலும் தன்மையும், கவரி அமைந்த நெற்றியும், பிறந்த நாட்டை அறிகவென்று குதிரை நூல் வல்லோர் துடையில் எழுதிய எழுத்தும் உடையன தேரில் பூட்டிய அக் குதிரைகள். கொல்லும் கூரிய முனையுடைய எரியீட்டியும், வில்லும், கூரிய மின்னோடு ஒளிமிக்க இயல்பும் உடைய வாளுங் கொண்டு, மிலேச்சர்கள் அக் குதிரை மீதேறி அமர்ந்தவுடன், பொன்பரல்கள் நிறைந்த கெச்சையும் கிண்கிணி மாலையும் நிறைய அணிந்த அக் குதிரைகள் ஆரவாரித்து எழுந்தன. காலாட் படையினர் மலர் மாலையும் முடிக் கண்ணியும் அணிந்த தலையினர்; முழங்கும் ஒலியுடைய சிலம்பணிந்த காலினர்; வாளின் பிடியை விடாமல் இறுக்கிப் பிடித்த கையினர்; கவசம் அணிந்த உடலினர்; எதற்கும் அஞ்சாத இயல்பினர். கரடி மயிர் போர்த்த கேடயமும் கண்ணாடி பதித்த கேடயமும், நீண்ட மயிர்க்கிடுகும் பிரப்பங் கொடியாற் செய்த கிடுகும் நீண்ட மரப் பலகையும் நிறைய உடைய அக்காலாட்படை போர்க் களத்தில் புலிக் கூட்டம் புகுந்த தொத்தது.

  

## வேறு

பார்நனை மதத்த பல்பேய் பருந்தொடு பரவச் செல்லும்
போர்மதக் களிறு பொற்றேர் நான்கரைக் கச்சமாகும்
ஏர்மணிப் புரவி யேழா மிலக்கமேழ் தேவ கோடி
கார்மலி கடலங் காலாள் கற்பகத் தாரி னாற்கே 2219

[கச்சம்-கோடியைக் குறிக்கும் ஒரு அளவு; ஏழாம் இலக்கம்-ஏழு லட்சம்.]

நிழன்மணிப் புரவித் திண்டேர் நிழறுழாய்க் குனிந்து குத்தும்
அழறிகழ் கதத்த யானை யைந்தரைக் கச்ச மாகும்
எழின்மணிப் புரவி யேழா மிலக்கமேழ் தேவ கோடி
கழன்மலிந் திலங்குங் காலாள் கட்டியங் காரற் கன்றே

[நிழல்-ஒளி; துழாய்-துழாவி.]

## வேறு

குலங்கெழு மகளிர்தங் கோல நீப்பவும்
அலங்குளைப் புரவியுங் களிறு மாளவும்
நிலமக ணெஞ்சுகை யெறிந்து நையவும்
புலமகன் சீறினன் புகைந்த தெஃகமே 2221

[குலம் கெழு-நற்குலத்திற் பொருந்திய; கோலம்-மங்கல அணிகள்; எஃகம்-வேல்.]

பூமி நனையும்படிப் பொழிகின்ற மதத்துடன், பல பேயும் பருந்தும் சூழச் செல்கின்ற, போருக்குரிய மதயானைகளும் பொன்தேரும் நான்கரைக் கோடியாகும். அழகிய மணிகள் புனைந்த குதிரைகள் ஏழு இலட்சமாகும். இன்னும் கற்பகமாலை அணிந்த சீவகனுக்குக் கருங்கடல் போன்ற காலாட்படை ஏழு தேவ கோடியாகும். ஒளிவீசும் மணிகள் அணிந்த குதிரைகள் பூட்டிய திண்தேரும் தன் நிழலைக்கண்டு தானே சினந்து அதைத் தன் கொம்பாலே குனிந்து குத்தும் — நெருப்பினைப் போலச் சுடும் — கோபமிக்க யானைகளும் கட்டியங் காரனுக்கு ஐந்தரைக் கோடி ஆகும். அழகிய மணிக்

குதிரைகள் ஏழு இலட்சமாகும். இத்தோடு அவனுடைய காலாட்படையின் எண்ணிக்கை ஏழு தேவ கோடியாகும்.

இவ்வாறாக இரு தரப்பிலும் படை குவிந்து போர் துவங்கிட, உயர்ந்த குடியில் பிறந்த பெண்கள் புனைந்து கொள்ளும் தங்கள் ஒப்பனைகளை நீக்கினர். அசையும் பிடரி மயிருடைய குதிரைகளும் யானைகளும் இறந்து படவும் பூமிப்பெண் தன் மார்பில் அடித்துக் கொண்டு புலம்பவும் அறிவுமிக்க சீவகன் சீறி எழுந்தான். அவன் வேலும் சினந்து பொங்கியது.

**குணில்பொரக் குளிறின முரசம் வெள்வளை**
**பணைபரந் தார்த்தன பம்பை வெம்பின**
**இணையில வெழுந்ததாழ் பீலி யெங்கணும்**
**முணையினாற் கடலக முழக்க மொத்தவே** **2222**

*[குணில் - குறுந்தடி; குளிறின-முழங்கின; பணை-ஒரு வகை முரசம்; வெம்பின - ஒலித்தன; முணை - மிகுதி.]*

**முடிமன ரெழுதரு பருதி மொய்களிறு**
**உடைதிரை மாக்கல மொளிறு வாட்படை**
**அடுதிற லெறிசுறா வாகக் காய்ந்தன**
**கடலிரண் டெதிர்ந்ததோர் கால மொத்ததே** **2223**

*[கலம்-கப்பல்; மா-குதிரை; திரை-அலை.]*

**அருங்கணை யடக்கிய ஆவ நாழிகை**
**பெரும்புறத் தலமரப் பிணித்த கச்சினர்**
**கருங்கழ லாடவர் கருவில் வாய்க்கொளீஇச்**
**சொரிந்தனர் கணைமழை விசும்பு தூர்ந்ததே** **2224**

*[கணை-அம்பு; ஆவநாழிகை-அம்பறாத் தூணி; புறம்-முதுகு; அலமர-அசையும்படி; கருங்கழல்-கொடிய வீரக்கழல்.]*

**நிணம்பிறங் ககலமுந் தோளு நெற்றியும்**
**அணங்கருஞ் சரங்களி னழுத்தி யையென**

மணங்கமழ் வருபுனன் மறலு மாந்தரிற்
பிணங்கமர் மலைந்தனர் பெற்றி யின்னதே. 2225

[நிணம்-கொழுப்பு; அகலம்-மார்பு; அணங்கரும்-வருந்துதற்கரிய; மறலும்-மாறுபடுதல்.]

குறுங்கோல் கொண்டு அடித்த முரசுகள் முழங்கி ஒலி செய்தன. வெள்வளைச் சங்கும் பணைமுரசும் ஒலி செய்து ஆர்த்தன. பம்பைகள் முழங்கின. இணையற்ற இன்னொலி எழுப்பும் சிறு சின்னங்கள் எங்கும் நிறைந்து ஒலித்தன. இவையெல்லாம் சேர்ந்து எழுப்பிய ஓசை மிகுந்து கடல் முழக்கத்தை ஒத்தது. முடியுடைய மன்னர்கள் கடல் மேலெழுந்த கதிரவனாகவும், நிறைந்து நெருங்கிய யானைகள் அக்கடலில் மிதக்கும் மரக்கல மாகவும், மோதிச் சிதறுகின்ற அலைகள் குதிரை களாகவும், வீரர் ஏந்திய ஒளிமிக்க வாட்படை அக் கடலில் சுற்றித் திரியும் சுறாமீனாகவும் விளங்கத் தம்முள் போரிடக் கிளம்பிய கடல்கள் இரண்டு மோதிக் கொண்ட காட்சி ஒத்தது அவ்விருவர் படைகளும் போரிட்ட காட்சி. கூர் அம்புகள் நிறைந்த அம்பறாத் தூணி, பெரிய முதுகிலே அசையுமாறு சேர்த்துக் கட்டிய கச்சினை உடைய கொடிய கழல் அணிந்த வீரமறவர்கள், பெரிய வில்லிலே பூட்டிப் பொழிந்த அம்பு மழை வானையும் மறைத்தது. விழுப்புண் விளங்கும் மார்பிலும், தோளிலும், நெற்றியிலும், வருத்தும் கூரம்புகள் தைத்துப் பெருகிய குருதி வழிய நின்று போரிடும் வீரமறவர்கள், பொங்கி வரும் புதுமணப் புனலில் விளையாடித் திளைக்கின்ற மக்களின் தன்மையை ஒத்தனர்.

கழித்தனர் கனலவாள் புகைந்து கண்கடீ
விழித்தன தீந்தன விமைகள் கூற்றெனத்
தெழித்தனர் திறந்தன ரகல மின்னுயிர்
அழித்தன ரயிலவ ரரவ மிக்கதே 2226

[தீந்தன - கருகின; தெழித்தனர் - ஆரவாரித்தனர்; அயிலவர்-வேல் வீரர்.]

பொருங்களத் தாடவர் பொருவில் பைந்தலை
அரும்பெறற் கண்ணியோ டற்று வீழ்வன
கருங்கனிப் பெண்ணையங் கானங் கால்பொர
இருங்கனி சொரிவன போன்ற வென்பவே 2227

[களம்-போர்க்களம்; பெண்ணை-பனை; கால்பொர-காற்றடிக்க.]

பணைமுனிந் தாலுவ பைம்பொற் றாரின
கணைவிசை தவிர்ப்பன கவரி நெற்றிய
துணையமை யிளமைய தோற்ற மிக்கன
இணைமயிர்ப் புரவியோ டிவுளி யேற்றவே 2228

[பணை-குதிரைப்பந்தி; துணை-உதவி; தோற்றம்-வடிவு.]

கூருளி முகம்பொரக் குழிசி மாண்டன
ஆரொளி யமைந்தன வாய்பொற் சூட்டின
காரொளி மின்னுமிழ் தகைய காலியல்
தேரொடு தேர்தமுட் சிறந்து சேர்ந்தவே 2229

[குழிசி-குறடு; மாண்டன-மாட்சிமைப்பட்டன; ஆர்-ஆரக்கால்; சூட்டு-விளிம்பு; தமுள்-தம்முள்.]

வீரர் நெருப்புப் பொறி பறக்கும்படி வாளை உறையிலிருந்தும் நீக்கிக் கண்கள் தீ உமிழ விழித்து நோக்கினர்; இமைகள் கரிந்திடக் கூற்றுவனைப்போல சீறி எழுந்து பகைவர் உடலைப் பிளந்து உயிரைக் கொன்றனர். இத்தகைய வேலுடைய வீரர்கள் ஒலி எங்கும் நிறைந்தது. போர்க்களத்தில் போரிடும் வீரர்களுடைய கரிய தலைகள் அவரணிந்த முடிக் கண்ணிகளோடு அறுந்து விழுந்தன. அப்படி வீழ்ந்த தலைகள், பெரிய பழுத்த காய்களை யுடைய பனந்தோப்பு புயலடித்துத் தன் கனிகளை உதிர்ப்பதைப்போல் தோன்றும். வரிசையில் நிற்பதை வெறுத்தனவும் பொன்னாலான கிண்கிணிமாலை அணிந்தனவுமாகிய குதிரைகள் தம் மேலிருந்து எய்யும் அம்பின் வேகத்தை முந்திச் சென்று தடுக்கும். கவரி அணிந்த

நெற்றியும், போருக்குரிய இளமையும், அழகும் உடைய ஒத்த பிடரிமயிருமுடைய அத்தகைய குதிரைகள் ஒன்றோ டொன்று போரிட்டுக் கொள்ளும். கூரிய உளியால் செதுக்கிச் செய்த சிறந்த குறடும், அழகிய ஆரக்கால் களும், பொன்னாலான விளிம்பும் உடைய, முகிலிடைத் தோன்றும் மின்னல் போன்ற, சக்கரம் அமைந்து செல்லும், தேர்களும் ஒன்றோடொன்று போரிட்டுக் கொள்ளத் தொடங்கின.

**அஞ்சன மெழுதின கவள மார்ந்தன**
**குஞ்சரங் கூற்றொடு கொம்மை கொட்டுவ**
**அஞ்சன வரைசிற குடைய போல்வன**
**மஞ்சிவர் குன்றென மலைந்த வேழமே 2230**

[அஞ்சனம்-மை; கொம்மை கொட்டல் - கை தட்டி யழைத்தல்; அஞ்சனவரை-கரிய மலை.]

**மாக்கடற் பெருங்கலங் காலின் மாறுபட்**
**டாக்கிய கயிறரிந் தோடி யெங்கணும்**
**போக்கறப் பொருவன போன்று தீப்படத்**
**தாக்கின வரசுவாத் தம்மு ளென்பவே 2231**

[தீப்பட - தீப்பிறக்கும்படி; அரசுவா - அரசரேறிய யானைகள்.]

**விடுசரம் விசும்பிடை மிடைந்து வெய்யவன்**
**படுகதிர் மறைந்திருள் பரந்த தாயிடை**
**அடுகதி ரயிலொளி யரசர் மாமுடி**
**விடுகதிர் மணியொளி வெயிலிற் காய்ந்தவே 2232**

[மிடைந்து-நெருங்குதலால்; ஆயிடை-அப்பொழுது.]

**பூண்குலாம் வனமுலைப் பூமி தேவிதான்**
**காண்கலேன் கடியன கண்ணி னாலெனாச்**
**சேண்குலாங் கம்பலஞ் செய்ய தொன்றினால்**
**மாண்குலாங் குணத்தினான் மறைத்திட் டாளரோ 2233**

[கடியன-கொடியனவாகிய பாவச் செயல்களை' சேண்குலாம்-நெடுந்தூரம் பரந்த; செய்யது

கம்பலம்-இரத்தமாகிய சிவந்த போர்வை; மாண்குலாம்-மாட்சிமை பொருந்திய.]

மைபூசப் பெற்றனவும் கவளச் சோற்றினை நிறைய உண்டனவும் எமனையும் போரிடக் கைதட்டிக் கூப்பிடுகின்றனவும் கரிய மலைகள் சிறகு பெற்றதைப் போன்றனவும் முகில் தவழும் குன்றுகளை ஒத்தனவும் ஆகிய யானைகள் ஒன்றோடொன்று போரிட்டன. பெரிய கடலில் புயலில் சிக்கிய மரக்கலங்கள் நங்கூரம் கட்டிய கயிறு அறுந்துபடத் திசை தடுமாறித் திரிந்து, தம்முள் மோதிக் கொள்வதைப்போல, மன்னர் ஏறிய யானைகள் தம் கொம்புகளோடு கொம்புகள் உராய்ந்து தீப்பொறி பறக்க மோதிப் போரிட்டுக் கொண்டன. வில்லில் இருந்து விடுபட்ட அம்புகள் வானில் நிறைய, ஞாயிற்றின் ஒளிமங்க இருள் கவிந்தது. அப்போது போரில் ஈடுபட்ட படைக்கலங்கள் சிந்திய ஒளியும், அரசர் மணிமுடிகளில் இருந்த மணிகள் சிந்திய ஒளியும் சேர்ந்து வெயில்போல் காய்ந்தன. பொற்பூண் அணிந்த அழகிய மார்புடைய நிலமகள், இக்கொடுமைகளை எல்லாம் கண்ணால் காணமாட்டேன் என்று கூறுவதைப் போலத் தன்னுடைய பெருமை மிக்க பண்பினால், நெடுந்தூரம் பரவிய இரத்தமாகிய சிவந்த போர்வையினால் தன்னை மறைத்துக் கொண்டாள்.

## வேறு

**கலைக்கோட்ட வகலல்குற் கணங்குழையார் கதிர்மணிப் பூண்**
**முலைக்கோட்டா லுழப்பட்ட மொய்ம்மலர்த்தா ரகன்மார்பர்**
**மலைக்கோட்ட வெழில்வேழந் தவநூறி மதயானைக்**
**கொலைக்கோட்டா லுழப்பட்டுக் குருதியுட் குளித்தனரே**

[கலைகோட்ட-மேகலையை யணிந்த பக்கத்தையுடைய; தவநூறி-மிக அழித்து.]

**மணமாலை மடந்தையர்த மெல்விரலாற் றொடுத்தணிந்த**
**இணர்மாலை யிருங்குஞ்சி யீர்ங்குருதிப் புனலலைப்ப**

**நிணமாலைக் குடர்சூடி நெருப்பிமையா நெய்த்தோரிற்**
**பிணமாலைப் பேய்மகட்குப் பெருவிருந் தயர்ந்தனரே 2235**

[அலைப்ப-அலைத்தலால்; நெய்த்தோர்-இரத்தம்.]

**தோலாப்போர் மறமன்னர் தொடித்தோள்க ளெடுத்தோச்சி**
**மேலாண்மேல் நெருப்புமிழ்ந்து மின்னிலங்கு மயில்வாளாற்**
**காலாசோடு அறவெறிந்த கனைகழற்கா லலைகடலுள்**
**நீலநீர்ச் சுறாவினம்போ னெய்த்தோருட் பிறழ்ந்தனவே**

[தோள்-கை; எடுத்து-உயர்த்தி; ஆசு-கவசம்.]

மேகலையணிந்த பக்கமுயர்ந்த அல்குலையும் குழை யணிந்த காதினையும் உடைய மகளிரின் ஒளிமணிகள் பதித்த பூண் அணிந்த முலை முகட்டால் மோதப்பட்ட, மாலைகள் நிறைந்த அகன்ற மார்புடைய வீரர்கள், மலை முகட்டினைப் போன்ற அழகிய யானைகளைக் கொன்று, பிறகு அந்த யானைகளின் கொம்புகளாலேயே குத்தப் பட்டுக் குருதி வெள்ளத்தில் கிடப்பர். இத்தகையோர், மணமங்கையர் தம் மெல் விரலால் தொடுத்தணிந்த பூங்கொத்துக்களாலான மாலை அணிந்த தம் தலை முடியை, வழியும் குருதி நீர் அலைத்திட, குடலாகிய நிணமாலையைச் சூடி, இரத்தப் பெருக்கிலே நெருப்பைப் போல் விழித்திருந்து, பிணந்தின்னும் இயல்புடைய பேய்க்கு விருந்தாகத் தம்மை ஆக்கிக் கொள்வர். தோல்வி யறியாத போர் பல கண்ட வீரமிக்க வேந்தர்கள், வலிய கைகளால் தீச்சொரிந்து மின்னுகின்ற தம் கூரிய வாளை எடுத்து வீசி யானை மேலிருப்போரை, கால் கவசத்துடன் கழன்று விழும்படி வெட்டி வீழ்த்திட, இற்று விழுகின்ற, ஒலிக்கும் கழல் அணிந்த, அக் கால்கள் அலைகடலில் நீலச் சுறாமீன் நெளிவதைப் போல் குருதி வெள்ளத்திலே விழுந்து துடிக்கும்.

**கருவியூ டுளங்கழிந்து கணைமொய்ப்பக் கதஞ்சிறந்து**
**குருவிசேர் வரைபோன்ற குஞ்சரங் கொடியணிந்த**
**உருவத்தே ரிறமுருக்கி யுருணேமி சுமந்தெழுந்து**
**பருதிசேர் வரைபோலப் பகட்டினம் பரந்தனவே 2237**

*[ஊடு-நடுவே; கதம்-கோபம்; இறமுருக்கி-அழியக் கெடுத்து.]*

**மாலைவாய் நெடுங்குடைமேன் மதயானைக் கைதுணிந்து**
**கோலநீள் கொழுங்குருதி கொளவீழ்ந்து கிடந்தன**
**மேலைநீள் விசும்புறையும் வெண்மதியம் விசும்பிழுக்கி**
**நீலமா சுணத்தோடு நிலத்திழிந்த தொத்தனவே 2238**

*[கை-துதிக்கை; இழுக்கி-தப்பி; நீலமாசுணம்-கரும் பாம்பு.]*

**அஞ்சன நிறநீக்கி யரத்தம்போர்த் தமருழக்கி**
**இங்குலிக விறுவரைபோன் றினக்களி றிடைமிடைந்த**
**குஞ்சரங்கள் பாய்ந்திடலிற் குமிழிவிட் டுமிழ்குருதி**
**இங்குலிக வருவிபோன் றெவ்வாயுந் தோன்றினவே 2239**

*[குமிழி-கொப்புளம்; எவ்வாயும்-எவ்விடத்தும்.]*

*தம் மேலணிந்த கருவி வழியாகச் சென்று அம்பு தைக்க நினைவிழந்த சில யானைகள் குருவிகள் அமர்ந்த குன்றுபோலிருந்தன. (யானையின் உடலிலே தைத்த அம்புக்குக் குன்றிலே இருந்த குருவி உவமை.) சினமிகுந்த சில யானைகள் கொடி புனைந்த அழகிய தேர் தூளாகும் படி அதை முறித்து அதன் வட்டமான உருளையைச் சுமந்து, ஞாயிறு சேர்ந்த மலைபோல் நின்றன. மாலையோடு கூடிய பெரிய குடை மேல், மதமிக்க யானை தன் துதிக்கை இழந்து, செங்குருதி சோர விழுந்து கிடந்த தோற்றம், முன்பு நீண்ட வானிலே தங்கிக் கிடந்த வெண்ணிலவு, விண்ணை விட்டு நழுவிக் கரும் பாம்புடன் மண்ணிலே வந்து விழுந்ததைப் போன்றிருந்தது. தம்முடைய கருமை நிறம் மறைய, செங்குருதி தோய்ந்து சிவப்பு நிறம் பெற்றதால், சாதிலிங்கத்தை உடைய பெரிய மலையைப் போலத் தோன்றும் நெருங்கிய யானைக் கூட்டம், போர் முகத்தில் பாய்ந்துசென்று பகையரசர் யானைகளைத் தாக்கக் குமிழியிட்டுப் பொங்கியெழும் குருதிவெள்ளம் சாதிலிங்க அருவி போல் எங்கும் நிறைந்தது.*

குஞ்சரந் தலையடுத்துக் கூந்தன்மாக் காலணையாச்
செஞ்சோற்றுக் கடனீங்கிச் சினவுவாள் பிடித்துடுத்த
பஞ்சிமேற் கிடந்துடைஞாண் பதைத்திலங்கக் கிடந்தாரை
அஞ்சிப்போந் தினநரியோ டோரிநின் றலறுமே 2240

[பஞ்சிமேல்-ஆடையின்மீது; ஓரி-கிழட்டு நரி.]

காதலார்க் கமிர்தீந்த கடற்பவழக் கடிகைவாய்
ஏதிலாப் புள்ளுண்ணக் கொடேமென்று வாய்மடித்துக்
காதணிந்த பொற்றோடுங் குண்டலமு நகநகா
வீதழைந்த வரைமார்பர் விஞ்சையர்போற் கிடந்தனரே

[ஏது-காரணம்; வீ-மலர்.]

குடர்வாங்கு குறுநரிகள் கொழுநிணப் புலாற்சேற்றுள்
தொடர்வாங்கு கதநாய்போற் றோன்றின தொடித்
திண்டோள்
படர்தீரக் கொண்டெழுந்த பறவைகள் படநாகம்
உடனேகொண் டெழுகின்ற வுவணப்பு ளொத்தனவே

[தொடர்-சங்கிலி; தோள்-கை; உவணப்புள்-கருடன்.]

போரில் இறந்து விழுந்த யானைகளைத் தலையணை யாகவும் குதிரைகளைக் கால் அணையாகவும் கொண்டு சினமிக்க வாளைப் பிடித்தபடி, மேலணிந்த ஆடையின் மேல் அரைஞாண் கிடக்கத் துடித்து, செஞ்சோற்றுக் கடன் கழிக்க வந்து போரில் செத்துக் கிடந்த வீரர்களின் கிட்டே வர அஞ்சி நரிகள் நின்றலறும். எம் காதல் மனை யாட்டிக்கு அமுதம் அளித்த, கடல் பவழம் போன்ற எம்வாயை, எச்சிறப்பும் இல்லாத பறவைகளே உமக்குண்ணத் தரமாட்டோம் என்பதுபோல், உதட்டை மடித்து, காதிலணிந்த பொன்தோடும் குண்டலமும் ஒளிவிட்டுச் சிரிக்கத் தாமும் சிரித்து வித்தியாதரரைப் போல் விழுந்து கிடந்தனர் சிலபோர் வீரர்கள். நிணவாடை வீசும் குருதிச் சேற்றி லிருந்து குடலைப் பிடுங்கித் தின்னும் நரிகள், சங்கிலியைப்பற்றி இழுக்கும் வெறிநாய் போல் தோன்றின. வலிய திண்தோளுடன்,

இரை தேடும் துன்பந் தீர எழுந்த பறவைகள், படமுடைய பாம்பைப் பற்றிக் கொண்டு வானில் பறக்கின்ற கருடனை ஒத்தன.

வரையோடு உருமிடிப்ப வளையெயிற்றுக் கொழுங்குருதி
நிரையுளை அரிநன்மா நிலமிசைப் புரள்வனபோற்
புரையறுபொன் மணியோடைப் பொடிப்பொங்கப் பொருதழிந்து
அரைசோடு மரசுவா வடுகளத்து ளாழ்ந்தனவே 2243

[அரிமா-சிங்கம்; புரை-குற்றம்; அரைசு-அரசர்கள்; அரசுவா-அரசு யானை.]

தடம்பெருங் குவளைக்கட் டாழ்குழலார் சாந்தணிந்து
வடந்திளைப்பப் புல்லிய வரைமார்பம் வாள்புல்ல
நடந்தொழுகு குருதியு ணகாக்கிடந்த வெரிமணிப்பூண்
இடம்படு செவ்வானத் திளம்பிறைபோற் றோன்றினவே

[சாந்து-குங்குமச் சாந்து; நகா-சிரித்து.]

## வேறு

காளமா கிருளைப் போழ்ந்து சுதிர்சொரி கடவுட் டிங்கள்
கோளரா விழுங்க முந்நீர்க் கொழுந்திரைக் குளித்த தேபோல்
நீளம ருழக்கி யானை நெற்றிமேற் றத்தி வெய்ய
வாளின்வாய் மதனன் பட்டான் விசயன்போர் விசயம் பெற்றான் 2245

[காளம்-கருமை நிறம்; கதிர்-கிரணம்; கோளரா-இராகு என்னும் பாம்பு; குளித்தல்-அழுந்துதல்; தத்தி-பாய்ந்து.]

வளைந்த பற்களையும் குருதிக் கறை படிந்த பிடரி மயிரையும் உடைய சிங்கங்கள், இடியோசை கேட்டு மலைகளோடு உருண்டு வந்து, செங்குருதி படிந்த மண்ணிலே கிடந்து புரள்வதைப்போல, அழகிய கற்கள் பதித்த, பொன்னாலாகிய நெற்றிப் பட்டத்தில் உள்ள

மணிகள் பொடிப்பொடியாய்ச் சிந்தும்படி போர் செய்து வீழ்ந்த அரச யானைகளுடன், அரசுகள் போர்க்களத்திலே விழுந்து புரண்டன. அகன்று விரிந்த குவளை மலர் போலும் கண்ணும் நீண்ட கூந்தலுமுடைய பெண்கள் தாமே பூசிக்கொண்ட சந்தனக் குழம்பு தோய்ந்த, தம் மார்பில் அணிந்த முத்துமாலை அழுந்தத் தழுவிய, மலை போலகன்ற மார்பை, கூர்வாள் வந்து தழுவப் பெருகி வழிகின்ற குருதியிலே, ஒளி விளங்கக் கிடந்த முத்துவடம், விரிந்து பரந்த செக்கர் வானில் தோன்றிய பிறை நிலவு போல் தெரிந்தது. காரிருட்டு மேலும் பரவாமல் தடுத்து ஒளியைத் தருகின்ற தெய்வத் திங்கள், உயரப்போய்ப் பின் கொடிய இராகுவெனும் பாம்பு விழுங்கக் கடலி லழுந்தி மறைந்ததைப்போல, மதனன் வீரப்போர் செய்து விசயனுடைய யானையின் நெற்றிமேல் தத்தி ஏறி அவனுடைய வாளுக்கிலக்காகி வீழ, விசயன் போரில் வெற்றி பெற்றான்.

**மன்மத னென்னுங் காளை மணியொலிப் புரவித் தேர்மேல்**
**வின்மழை சொரிந்து கூற்றிற் றெழித்தனன் தலைப்பெய் தார்ப்பக்**
**கொன்மலி மார்பன் பொற்றேர் கொடுஞ்சிலை யறுப்பச் சீறிப்**
**பொன்வரைப் புலியிற் பாய்ந்து பூமிமேற் றோன்றி னானே 2246**

[தலைப்பெய்து-வளைத்து; கொன்-அச்சம்; மலி-மிகுந்த.]

**நெற்றிமேற் கோல்கண் மூன்று நெருப்புமிழ்ந் தழுந்த எய்யச்**
**சுற்றுபு மாலை போலத் தோன்றறன் னுதலிற் சூடிப்**
**பொற்றதோர் பவழந் தன்மேற் புனைமணி யழுத்தி யாங்குச்**
**செற்றெயி றழுந்தச் செவ்வாய் கெளவிவா ளுரீஇ னானே**

[கோல்கள்-அம்புகள்; செற்று-கோபித்து.]

**தோளினா லெஃக மேந்தித் தும்பிமே லிவரக் கையால்**
**நீளமாப் புடைப்பப் பொங்கி நிலத்தவன் கவிழ்ந்து வீழக்**

**கீளிரண் டாகக் குத்தி யெடுத்திடக் கிளர்பொன் மார்பன்**
**வாளினாற் றிருகி வீசி மருப்பின்மேற் றுஞ்சி னானே 2248**

[தும்பி-யானை; வீசி-வெட்டி; அஞ்சினான்-இறந்தான்.]

இவ்வாறு மதனன் இறந்துபட அவன் தம்பி மன்மதன் என்பவன் மணி ஒலிக்கும் குதிரைகள் பூட்டிய தேர்மேல் ஏறி, வில்மழை பொழிந்து, எமனைப்போல் முழக்கமிட்டு விசயனைச் சூழ்ந்து ஆரவாரித்தான். அச்சுறுத்தும் வீர மிக்க மார்பை உடையவனாகிய விசயன் மன்மதனுடைய அழகிய பொன் தேரையும் வளைந்த வில்லையும் துண்டாக உடைத்தெறிந்தான். இதைக் கண்டு கோப முற்ற மன்மதன் பொன்மலை மேலிருந்து பாயும் புலி போலத் தேரிலிருந்து கீழே குதித்து நிலத்திலே வந்து நின்றான். வந்து நின்ற மன்மதனின் நெற்றிக்கு நேராக, மூன்று அம்புகளைத் தீ உமிழ்ந்து கொல்லுமாறு விசயன் ஏவினான். அவன் அவற்றைத் தன் நெற்றியிலே மாலை போலச் சூடி, அழகிய பவழத்தின் மேல் முத்தை ஒப்பனை செய்து பதித்து வைத்ததைப்போல் கோபத்தால் தன் முகம் சிவக்க, உதட்டில் பற்கள் அழுந்துமாறு, வாயை மடித்துப் பல்லால் கடித்துக் கொண்டு கையில் வாளை ஏந்தி நின்றான். மன்மதன் வாளைக் கையிலேந்தி விசயன் இருந்த யானையை நோக்கி வர, அது கண்ட விசயனின் யானை மிகவும் கோபமுற்றுத் தன் துதிக்கையால் அவனை நிலத்திலே அடித்து வீழ்த்த அவனும் கீழே விழுந்தான். கீழே விழுந்த அவனை அந்த யானை தன் கொம்பிலே குத்தி இரு கூறாகக் கிழித்து எடுக்க, பொன் ஒளி விளங்கும் மார்புடைய அவனும் துடித்துத் தன் கை வாளால் யானையை வெட்டி அதன் கொம்பிலேயே இறந்தான்.

**நனைகலந் திழியும் பைந்தார் நான்மறை யாளன் பைம்பொற்**
**புனைகலக் குப்பை யொப்பான் புத்திமா சேனன் பொங்கி**

  

வளைகலத் திகிரித் தேர்மேன் மன்னரைக் குடுமி
கொண்டான்
கனையெரி யழலம் பெய்த கண்ணுதன் மூர்த்தி
யொத்தான் 2249

[சுலக்குப்பை-அணிகலக் குவியல்; குடுமி கொண்டான்-
வெற்றி கொண்டான்.]

செண்பகப் பூங்குன் றொப்பான் தேவமா தத்தன் வெய்தா
விண்புக வுயிரைப் பெய்வான் வீழ்தரு கடாத்த வேழம்
மண்பக விடிக்குஞ் சிங்க மெனக்கடாய் மகதர் கோமான்
தெண்கடற் றானை யோட நாணிவேல் செறித்திட்
டானே 2250

[வெய்தா-விரைவாக; பெய்தல்-செலுத்தல்; கடாய்-
செலுத்தி.]

சின்னப்பூ வணிந்த குஞ்சிச் சீதத்தன் சினவு பொன்வாள்
மன்னருட் கலிங்கர் கோமான் மத்தகத் திறுப்ப மன்னன்
பொன்னவிர் குழையும் பூணு மாரமுஞ் சுடர வீழ்வான்
மின்னவிர் பருதி முந்நீர்க் கோளொடும் வீழ்வ தொத்தான்

[சின்னப்பூ-விடு பூ; சினவுதல்-கோபித்தல்; மத்தகம்-
தலை; இறுப்ப-தங்கிற்றாக.]

அரும்புகள் நிறைந்து தொடுத்த, மலர்ந்த மலர்களில் இருந்து வடிகின்ற தேன் நிறைந்த மலர்மாலை அணிந்தவனும், குவித்து வைத்த பொன் அணிகளின் சேர்க்கை போன்றவனுமாகிய புத்திசேனன், பொங்கியெழுந்து, மண்கலம் வனையச் சுழலும் சக்கரம்போலச் சுற்றித் திரிகின்ற தேர்மீது இருந்து, முடிமன்னர் பலரை வெற்றி கொண்டான். அவன் அப்போது எரிதழலாகிய அம்பினை எய்துத் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளைப் போலிருந்தான். பொன்னணிகள் நிறையப் பூண்டு, செண்பகப் பூ நிறைந்த மலையைப் போன்று பொலிபவனாகிய தேவ தத்தன் என்பவன், விரைந்து பல உயிரை விண்ணுலகுக்கு அனுப்ப, பொழிகின்ற மதமுடைய யானையின் மீது,

நிலம் பிளந்து போகும்படி முழங்குகின்ற சிங்கம் போலமர்ந்து, அதைச் செலுத்தி வர, அதைக் கண்டு மகதநாட்டு மன்னனுடைய கடல் போன்ற சேனை பயந்து ஓடியது. இதைக் கண்டு வெட்கமுற்ற தேவதத்தன் தன் வேலை உறையிலே இட்டுத் திரும்பினான். சிறிய விடு பூ அணிந்த குடுமியுடைய சீதத்தனின் தீ உமிழும் பொன்வாள் மன்னரிற் சிறந்த கலிங்க மன்னனின் தலை மீது சென்று தாக்க, பொன்னொளி வீசும் காதுக்குழையும், பூணும் முத்துமாலையும் மின்ன, ஒளிவீசும் ஞாயிறு உடுக்களுடனே சென்று கடலில் வீழ்வதைப் போல, அவனும் படை நடுவே இறந்து வீழ்ந்தான்.

**கொடுஞ்சிலை யுழவன் மான்றேர்க் கோவிந்த னென்னுஞ் சிங்கம்**
**மடங்கருஞ் சீற்றத் துப்பின் மாரட்ட னென்னும் பொற்குன்**
**றிடந்துபொற் றூளி பொங்கக் களிற்றொடு மிறங்கி வீழ**
**அடர்ந்தெறி பொன்செ யம்பி னழன்றிடித் திட்ட தன்றே**

*[மடங்கரு-மடக்குதற்கரிய; துப்பு-வன்மை; இடந்து-பிளந்து; இறங்கி-தாழ்ந்து; அழன்று-கோபித்து.]*

**கோங்குபூத் துதிர்ந்த குன்றிற் பொன்னணி புளகம் வேய்ந்த**
**பாங்கமை பரும யானைப் பல்லவ தேச மன்னன்**
**தேங்கமழ் தெரியற் றீம்பூந் தாரவ னூர்ந்த வேழம்**
**காம்பிலிக் கிறைவ னூர்ந்த களிற்றொடு மலைந்த தன்றே**

*[வேய்ந்த-தைத்தணிந்த; மலைதல்-போரிடுதல்.]*

**கொந்தழல் பிறப்பத் தாக்கிக் கோடுகண் மிடைந்த தீயால்**
**வெந்தன விலையி லாத சாமரை வீர மன்னன்**
**அந்தரம் புதைய வில்வா யருஞ்சரம் பெய்த மாரி**
**குந்தத்தால் லிலக்கி வெய்ய கூற்றென முழங்கி னானே**

*[அந்தரம்-ஆகாயம்; குந்தம்-எறிகோல்.]*

கொன்றழிக்கும் வில்லேர் உழவனும் குதிரை பூட்டிய தேரை உடையவனுமாகிய கோவிந்தன் என்னும் சிங்கம், வெல்லுதற்கரிய கோபமும், வலிமையும் உடைய,

மாரட்டன் என்கின்ற பொன்மலையைத் தூள் பறக்கப் பிளந்து, அம்மலை, யானையோடு சரிந்து தரையில் வீழும் படி, நெருப்புப் பொறி பறக்கும் பொன்னாலான தன் அம்பினால் அடித்தது. கோங்க மலர்கள் பூத்து, உதிர்ந்து கிடக்கின்ற குன்றைப் போலப் பொன்னால் செய்த, கண்ணாடி பதித்த, முகபடாம் பொருந்த அணிந்த, யானையுடையவன் பல்லவ நாட்டரசன் உலோகபாலன். தேன் துளிக்கும், மலர் நிறைந்து விளங்கும் மாலை யணிந்த இவன் ஏறி வந்த யானை, காம்பிலி நாட்டரசன் ஏறிவந்த யானையோடு மோதியது. அப்படி மோதிய யானைகள் தீப்பொறி பறக்கத் தம் கொம்புகளால் தாக்கிக் கொள்ள, எழுந்த நெருப்பினால் விலை மதிக்க முடியாத சாமரைகள் வெந்து தீய்ந்தன. அவ்வளவில் உலோகபாலன், ஆகாயம் மறையும்படி ஏவிய அம்பு மழையைக் காம்பிலி மன்னன் குந்தமென்னும் தன்னுடைய படையால் விலக்கி, எமனைப்போல எழுந்து முழக்கமிட்டான்.

**மற்றவ னுலோக பாலன் வயங்குபொற் பட்ட மார்ந்த**
**நெற்றிமே லெய்த கோலைப் பறித்திட வுமிழ்ந்த**
**நெய்த்தோர்**
**உற்றவன் களிற்றிற் பாயத் தோன்றுவா னுதயத் துச்சி**
**ஒற்றைமாக் கதிரை நீட்டி யொண்சுட ரிருந்த தொத்தான்**

[நெய்த்தோர்-இரத்தம்; உதயம்-உதயகிரி.]

**கொடுமரங் குழைய வாங்கிக் கொற்றவ னெய்த கோல்கள்**
**நெடுமொழி மகளிர் கோல நிழன்மணி முலைக ணேர்பட்டு**
**உடனுழ வுவந்த மார்ப மூழ்கவிற் சிங்கம் போலக்**
**கடன்மருள் சேனை சிந்தக் காம்பிலி மன்னன் வீழ்ந்தான்**

[கொடுமரம்-வில்; வாங்கி-வளைத்து.]

**பொன்னிறக் கோங்கம் பொற்பூங் குன்றெனப் பொலிந்த**
**மேனி**
**நன்னிற மாவின் மேலா னலங்கொடார் நபுல னென்பான்**

  

**மின்னிற வெஃக மேந்தி வீங்குநீர் மகதை யார்கோன்**
**கொன்னிறக் களிற்றி னெற்றிக் கூந்தன்மாப்**
**பாய்வித் தானே 2257**

[மகதை-மகதநாடு; கூந்தன்மா-குதிரை.]

பிறகு அவன், உலோகபாலனுடைய பொன்னாலான நெற்றிப் பட்டம் விளங்கும் நெற்றியிலே தைக்கும்படி அம்பை எய்தான். அவ்வம்பை உலோகபாலன் தன் கையாலே பிடுங்கி எடுத்திட, அம்புபட்ட இடத்திலிருந்து பெருகிய குருதி அவன் அமர்ந்திருந்த யானைமீது வழிந்தோடியது. அப்போது அவனது தோற்றம் உதயகிரியின் மீது ஒளிமிக்க சூரியன் சிவந்த தன் கதிர்களைப் பரப்பி இருந்ததை ஒத்தது. அந்நிலையில் உலோகபாலன் தன்னுடைய வில்லை வளைத்து எய்த அம்புகள், மிக உயர்ந்த கற்புடைய பெண்களின் அழகுமிக்க மணிகள் புனைந்து அலங்கரிக்கப்பட்ட மார்புகளோடு சேர்ந்து முயங்கிய காம்பிலி நாட்டரசன் மார்பிலே சென்று தைத்தது; கடல்போன்ற தன்படை கலங்கி ஓட அவனும் இறந்தான். பொன்னைப்போன்ற நிறமுடைய கோங்கமும், அழகுடைய மலர்க்குன்றமும் போன்று விளங்கும் மேனி வனப்புடையவனும், சிறந்த குதிரையின் மீதுள்ளவனுமான, அழகிய மலர் மாலையணிந்த நபுலன், ஒளிவீசும் வாளை ஏந்தி நீர்வளமிக்க மகத நாட்டு மன்னனுடைய, கண்டோரைப் பயமுறுத்தும் வலிவுடைய யானையின் மேல் தன் குதிரையைப் பாய விட்டான்.

**ஏந்தல்தன் கண்கள் வெய்ய விமைத்திட வெறித லோம்பி**
**நாந்தக வுழவ னாணி நக்குநீ யஞ்சல் கண்டாய்**
**காய்ந்திலே னென்று வல்லே கலினமாக் குன்றிற் பொங்கிப்**
**பாய்ந்ததோர் புலியின் மற்றோர் பகட்டின்மேற் பாய்வித்**
**தானே 2258**

[நாந்தகம்-வாள்; பகடு-யானை.]

கைப்படை யொன்று மின்றிக் கைகொட்டிக் குமர னார்ப்ப
மெய்ப்படை வீழ்த்த னாணி வேழமு மெறிதல் செல்லான்
மைப்படை நெடுங்கண் மாலை மகளிர்தம் வனப்பிற் சூழ்ந்து
கைப்படு பொருளி லாதான் காமம்போற் காளை மீண்டான்

[எறிதல்-வெட்டுதல்; மைப்படு-மை தீட்டிய.]

## வேறு

மண்காவலை மகிழாதிவ னுடனேபுக ழொழிய
விண்காவலை மகிழ்வீர்நனி யுளிரோவென விபுலன்
வண்காரிருண் மின்னேயுமிழ் நெய்வாயதொ ரயில்வாள்
கண்காவல கழுகோம்புவ துயராநனி வினவும் 2260

[இவனுடனே-இவ்வுலகத்துடனே; அயில் - கூர்மை;
ஓம்புவது-பாதுகாப்பது.]

அது கண்டு மகதநாட்டரசன் விரைவாகத் தன் கண்கள் இமைக்கப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தான். விழித்தபடி மேல்பாயவரும் பகையைக் கண்டு அப்படி அழித்திமைத்த ஒரு கோழையின் மேல் அம்பு எய்வதற்கு நாணிய வாளுழவனாகிய நபுலன், அவன் மேல் வாள் வீசுவதை நிறுத்தி, அம்மகத மன்னனின் இரங்கத்தக்க நிலையைக் கண்டு சிரித்து, உன்னை நான் இனித் துன் புறுத்த மாட்டேன் வருந்தாதே என்று கூறித் தன்னுடைய குதிரையை, ஒரு குன்றிலிருந்து மற்றோர் குன்றுக்குப் பாய்ந்து செல்லும் புலியைப்போல, மகத மன்னன் இருந்த யானையைவிட்டு மற்றோர் யானையின்மீது பாயச் செலுத்தினான். அப்படி அவன் செலுத்திய யானை மீதிருந்த குமரன் தன்கையில் படைக்கலம் ஒன்றுமில்லாத தால், மற்போர் செய்யத் தோள்தட்டி ஆரவாரிக்க, படைக்கலம் இல்லாதிருப்பவனை வாளால் வெட்டி வீழ்த்த விரும்பாதவனாய், நபுலன் அந்த யானையையும் கொல்லாமல், மையுண்ட நீண்ட கண்களையும், மலர் மாலையும் உடைய பெண்களின் அழகை விரும்பி அவர் களோடு கூட நினைத்தாலும், கையிலே பொருளின்றி

வருந்தும் கையாலாகாதவனைப் போல, வீரமிருந்தும் போரிட ஆளின்றி வீணே திரும்பினான். இவ்வாறு நபுலன் திரும்பியதும் அவன் தம்பி விபுலன், 'உலகாண்டது போதும்; மேலும் உலகாள்வதில் விருப்பம் இல்லாமல், இதுவரை ஈட்டிய புகழ் இவ்வுலகோடு நிற்க, வானுலக வாழ்வை விரும்பி அடைய நினைப்பவர்கள் யாரேனும் இருக்கின்றீர்களா?' என்று மிக்க பேரிருட்டில் மின்னலைப்போல் ஒளி செய்யும் நெய் பூசிய வாயுடைய, கண்ணைக் குத்துகிற, கொன்று குவித்த உயிர்களைக் கழுகுக்கு விருந்தாக்குகின்ற, கூர்வாளைத் தூக்கிப் பிடித்தபடி கேட்டான்.

**வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியான்**
**ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்**
**மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான்**
**ஆறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன் 2261**

*[வீறு-வெற்றி; மாறு-ஒப்பு; மறம்வாடும்-வீரம்கெடும்; ஆறு-நல்லநெறி.]*

**ஒன்றாயினும் பலவாயினு மோரோச்சினு ளெறிய**
**வென்றாயின மதவேழமு முளவோவென வினவிப்**
**பொன்றாழ்வரைப் புலிப்போத்தெனப் புனைதார்மிஞி றார்ப்பச்**
**சென்றானிகல் களிறாயிர மிரியச்சின வேலோன் 2262**

*[ஓரோச்சினுள்-ஒரு வெட்டிலே; புலிப்போத்து-ஆண் புலி.]*

**புடைதாழ்குழை பொருவில்லுயர் பொன்னோலையொ டெரிய**
**உடைநாணொடு கடிவட்டினொ டொளிர்வாளினொ டொருவன்**
**அடையாநிக ரெறிநீயென வதுவோவென நக்கான்**
**கிடையாயின னிவனேயெனக் கிளராணழ குடையான்**

[புடை - பக்கத்தில்; உடைநாண் - அரைநாண்; வட்டுடை-முழந்தாளளவாக உடுக்கும் உடை; கிடை-ஒப்பு.]

போர்மத யானைகளும் விலங்குவகைகளைச் சேர்ந்தவையாகும். எனவே அத்தகைய விலங்கோடு போரிட்டுப் பெறுகிற வெற்றி புகழுடையதாகாது என்றெண்ணி அவற்றையும் கொல்லவில்லை. முன் பிறர் படைக்கலத்தால் தாக்கப் பட்டிருப்பவர்கள் தனக்குச் சமமான வீரர்கள் என்றாலும், பிறர் தீண்டிய எச்சில் என்று அவரையும் போரிட்டுக் கொல்லவில்லை தன்னிலும் இளையவர்கள், தனக்கு நிகரானவர் அல்லர் என்பதால், அப்படிப்பட்டவருடன் போரிட்டால் அது தன் வீரத்துக்கு இழுக்காகும் என்று அவரையும் கொல்லவில்லை. தன்னினும் முதிர்ந்த வயதுடைய பெரியோருடன் போரிட்டுக் கொல்வது நீதியாகாது என்பதால் அவரையும் போர்க்களத்திலே விபுலன் கொல்லவில்லை. ஒன்றோ இல்லை ஒன்றுக்குமேல் பலவோ, ஒரேவெட்டில் இரண்டு துண்டாக்கிக் கொல்ல, பல போரிலும் வென்ற எனக்குப் போதுமான அளவுக்கு யானைகள், இங்கே இருக்கின்றனவோ என்று கேட்டபடி, பொன் மலைமீது உலவும் புலிக் குட்டி போல, மேலணிந்த மலர் மாலையில் மொய்த்துக் கிடக்கும் வண்டுகள் சிதறியெழ, போர் யானைகள் ஆயிரம் பயந்து நடுங்க, கொல்லும் வேலேந்தித் தன் யானையைச் செலுத்தியபடி விபுலன் சென்றான். தோளின் பக்கம் தாழ்ந்து தொங்குகின்ற காதுக்குழை ஒளிவீசும் அழகிய பொன் தோட்டுடன் விளங்க, அரைநாணும் வட்டுடையும், அழகிய உடைவாளும் உடைய ஒருவன் விபுலனுக்கு அருகில் வந்து, 'நீ எனக்கு நிகரான வீரன்: எனவே என்மேல் வாளை எறி' என்று கூறினான். அது கேட்டு ஆ! அப்படியா என்று சிரித்தான் உலகோர் போற்றும் வீரத்துக் கொப்பான ஆணழகன் விபுலன்.

இன்னீரின திரைமேலிரண் டிளவெஞ்சுட ரிகலி
மின்னோடவை சுழன் றாயிடை விளையாடுகின் றனபோற்
பொன்னாணினர் பொருவில்லுயர் புனைகேடகந் திரியாக்
கொன்வாளினர் கொழுந்தாரினர் கொடிமார்பினர்

திரிந்தார் 2264

[ஆயிடை-அவ்விடத்து; கொன்-அச்சம்.]

விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத்தாற்
கரும்பூணற வெறிந்தாங்கவ னினதூழினி யெனவே
எரிந்தாரயி லிடைபோழ்ந்தமை யுணராதவ னின்றான்
சொரிந்தார்மல ரரமங்கையர் தொழுதார்விசும்

படைந்தான் 2265

[பூண்-கவசத்தை; இனி நினது ஊழ்-இனிமேல் உன்னுடைய முறையாகும்; அரமங்கையர் - தேவ மகளிர்.]

## வேறு

நித்திலக் குப்பை போல நிழலுமிழ்ந் திலங்கு மேனிப்
பத்திப்பூ ணணிந்த மார்பிற் பதுமுகன் பைம்பொற் சூழி
மொய்த்தெறி யோடை நெற்றி மும்மதக் களிற்றின் மேலான்
கைத்தலத் தெஃக மேந்திக் காமுகற் கண்டு

காய்ந்தான் 2266

[சூழி-முகபடாம்; நித்திலம்-முத்து; பத்தி-வரிசை.]

கண்ணுக்கினிய காட்சி தரும் நீர் நிறைந்த நீலக் கடலின் அலைகளின் மேல் இரண்டு இளஞாயிறுகள் தோன்றிப் போரிட்டுத் தம் கையில் பிடித்த மின்னல் கொடிகளைச் சுழற்றி மேலிருந்து விளையாடுவதைப் போல, பொன் நாணும் கொல்லும் வாளும் அழகிய மாலையும் கொடியெழுதிய மார்பும் உடைய அவ் வீரர்கள், ஒப்பில்லாத உயர்ந்த கேடயத்தைக் கவசமாகக் கொண்டு யானைமீது சாரிகை திரிந்தனர். விபுலன், நான் போர்க்களத்துக்கு வந்ததற்குப் பின்பே நீ வந்தனை. 'ஆகையால் நீ எனக்கு விருந்தினன் ஆனாய்.

எனவே நீயே முதலில் வாளெறிவாய்' என்று கூறி மணங்கமழும் தன் மார்பைக் காட்டியபடி நின்றான். இவனோடு போரிட வந்த அவனும், விபுலனுடைய மார்புக் கவசம் அறுந்து விழும்படி வாளை எறிந்துவிட்டு, அடுத்து உன் முறை என்று கூறி நின்றான். நின்றவன் விபுலன் எய்த தீ உமிழும் கூர்வேல் விரைந்து தாக்கி மார்பைப் பிளந்து செல்ல, இமைப்பொழுதில், அது தாக்கியது உணராமலே, விண்ணுலகம் அடைந்தான். வானவர் மகளிரும் அவ்வீரன் அடிகளில் மலர் சொரிந்து தொழுதனர். முத்துக் குவியல் போலப் புத்தொளி வீசித் திகழும் மேனி வனப்புடையவனும் வரிசையுற மார்பில் பொற்பூண் அணிந்தவனுமாகிய பதுமுகன், பசும் பொன்னாலாகிய முகபடாத்தையும் நெற்றிப் பட்டத்தையும் அணிந்த, பொழிகின்ற மும்மதமும் உடைய யானையின் மீதமர்ந்து, கையிலே வேலேந்தியபடிக் காமுகன் என்னும் போர்வீரனைக் கண்டு அவனோடு போரிடச் சீறிக் கிளம்பினான்.

**மாற்றவன் சேனை தாக்கித் தளர்ந்தபின் வன்கண் மள்ளர்**
**ஆற்றலோ டாண்மை தோன்ற வாருயிர் வழங்கி வீழ்ந்தார்**
**காற்றினாற் புடைக்கப் பட்டுக் கடலுடைந் தோடக் காமர்**
**ஏற்றிளஞ் சுறாக்க ளெங்குங் கிடந்தவை போல**
**வொத்தார் 2267**

*[புடைக்கப்பட்ட-தாக்கப்பட்ட; மள்ளர்-வீரர்.]*

**தூசுலாம் பரவை யல்குற் றுணைமுலை மகளி ராடும்**
**ஊசல்போற் சேனை யோடப் பதுமுகன் களிற்றை யுந்தி**
**மாசில்சீர் மழையி னெற்றி மாமதி நுழைவ தேபோற்**
**காய்சினக் களிற்றி னெற்றி ஆழிகொண் டழுத்தி னானே**

*[தூசு-ஆடை; உந்தி-செலுத்தி.]*

**பெருவலி யதனை நோனான் பிண்டிபா லத்தை யேந்தி**
**அருவரை நெற்றிப் பாய்ந்த ஆய்மயிற் றோகை போலச்**
**சொரிமதக் களிற்றின் கும்பத் தழுத்தலிற் றோன்றல் சீறிக்**
**கருவலித் தடக்கை வாளிற் காளையை வெளவி னானே**

[நோனான் - பொறாதவனாகி; கும்பம் - மத்தகம்;
வெளவினான்-வெட்டினான்.]

காமுகனோடு போரிடப் பதுமுகன் கிளம்பிய போது, காமுகன் படை வந்து தாக்கப் பதுமுகன் படை தோல்வியுற்றது. தோல்வியுற்ற பதுமுகன் படையில் இருந்த வீர மறவர்கள் வலிமையும் வீரமும் பொங்கப் போரிட்டு உயிரிழந்தனர். அப்படி உயிரிழந்து வீழ்ந்து கிடந்த போற்றத்தக்க அவ்வீரர்கள், பெருங்காற்றினால் அலைக் கழிக்கப்பட்டுக் கடல்நீர் பொங்கி வழியக் கரையெங்கும் சிதறிக் கிடக்கும் சுறாமீன்களை ஒத்தனர். ஆடையணிந்த அல்குலும் அழகிய எழில் மார்பும் உடைய மங்கையர் ஆடும் ஊஞ்சலைப்போல, தோற்றோடிய படை மீண்டும் வந்து போரிடக் கண்ட பதுமுகன் தன் யானையைச் செலுத்தி வந்து, குற்றமற்ற அழகிய முகிலூடே தவழ்ந்து முழுமதி செல்வதைப் போலக் காமுகன் ஏறிவந்த சினமிக்க யானையின் தலையில் பாயும்படி சக்கரத்தை வைத்து அழுத்தினான். மிக்க வலியுடைய காமுகன் இதைக் காணச் சகியாதவனாய், பிண்டிபாலம் என்னும் படைக்கலத்தை எடுத்து, பெருமலைக் குன்றின்மீது பாயும் அழகிய தோகை மயில் போல, மதம் பொழியும், பதுமுகனுடைய யானையின் தலையிலே பாயும்படி வீசவும், பதுமுகன் கொதித்தெழுந்து வலிமை மிக்க தன் கையிலேந்திய வாளினால் காமுகனை வெட்டி வீழ்த்தினான்.

**தீமுகத் துமிழும் வேற்கட் சில்லரிச் சிலம்பி னார்தம்**
**காமுகன் களத்து வீழக் கைவிர னுதியிற் சுட்டிப்**
**பூமுக மாலை மார்பன் பொன்னணி கவச மின்னக்**
**கோமுகன் கொலைவல் யானை கூற்றெனக் கடாயி னானே**

[சில்-சில; அரி-பரல்; நுதி-நுனி; வீழ-வீழ்ந்துபட.]

**சாரிகை திரியும் யானை யுழக்கலிற் தரணி தன்மேல்**
**ஆர்கலிக் குருதி வெள்ள மருந்துகள் கழுமி யெங்கும்**

**வீரியக் காற்றிற் பொங்கி விசும்புபோர்த் தெழுதப் பட்ட**
**போர்நிலைக் களத்தை யொப்பக் குருதிவான் போர்த்த**
**தன்றே 2271**

[துகள்-தூசி; கழுமி-திரண்டு; வீரியக்காற்று-பெருங் காற்று; போர்த்து-மறைத்து; குருதிவான்-செக்கர்வானம்.]

**சென்றது தடக்கை தூணி சேந்தகண் புருவங் கோலி**
**நின்றவிற் குனிந்த தம்பு நிமிர்ந்தன நீங்கிற் றாவி**
**வென்றிகொள் சரங்கண் மூழ்கி மெய்ம்மறைத் திட்டு**
**மின்றோய்**
**குன்றின்மேற் பவழம் போலக் கோமுகன் றோன்றி னானே**

[தூணி-அம்பறாத்தூணி; சேந்த-சிவந்த; கோலிநின்ற-வளைந்து நின்றன; குனிந்தது-வளைந்தது.]

தீ உமிழும் வேல்போலும் கண்ணுடைய, சில பரல்கள் உடைய சிலம்பணிந்த மங்கையர் கண்டு காமுறும் காமுகன் என்னும் அவ்வீரன் களத்திலே இறந்துபட, பூப்போலும் முகமுடைய மலர்மாலையணிந்த மார்பு டைய, அவன் தம்பி கோமுகன் என்பவன், பொன்னா லாகிய வீரக்கவசம் ஒளிவீச, தன் தமையனைக் கொன் றவன் இவனே என்று, பதுமுகனைக் கைவிரல்களால் சுட்டிக் காட்டியபடி, கொல்லுதல் வல்ல தன்யானையை எமனைப் போலச் செலுத்திக் கொண்டு சென்றான். அப்படி அவன் செலுத்திச் சென்ற கவசமணிந்த யானை போர்க்களத்தைக் கலக்கக் கடல் போன்ற இரத்த வெள்ளத்திலிருந்து தெளித்த துளிகள் தரை யெல்லாம் சிந்தி, வீசிய பெருங்காற்றாலே எங்கும் பரவி விண்ணை மறைக்க, போர்க்களத்துக்குப் பொருந்த எழுதப்பட்ட ஓவியம் போல் வானிலும் செக்கர் படர்ந்தது. கோமுகனுடைய போர்க்கோலத்தைக் கண்ட வுடன், பதுமுகனுடைய அகன்ற கை அம்பறாத் தூணியை நாடியது; கண்கள் சிவந்தன; புருவங்கள்

வளைந்து குறுகின. வில் வளைந்து அம்புகள் நிமிர்ந்து நேரே செல்ல, எதிரே இருந்த படை வீரர்களின் உயிர் போயிற்று. விழுப்புண் உண்டாக்கிய அம்புகள் மேலெல் லாம் அழுந்தி உடலை மறைக்க, அம்புபட்ட இடத்தி லிருந்தும் குருதி வழிந்தோட இருந்த கோமுகன், மின்னல் தவழும் குன்றின் மேலுள்ள பவழம் போல் தோன்றினான்.

**பனிவரை முளைத்த கோலப் பருப்புடைப் பவழம் போலக்**
**குனிமருப் புதிரந் தோய்ந்த குஞ்சரங் கொள்ள வுந்திக்**
**கனிபடு கிளவி யார்தங் கதிர்முலை பொருது சேந்த**
**துனிவரை மார்பன் சீறிச் சுடுசரஞ் சிதறி னானே 2273**

*[முளைத்த - தோன்றிய; பருப்புடை - பருமையை யுடைய; துனி-அச்சம்.]*

**பன்னலம் பஞ்சிக் குன்றம் படரெரி முகந்த தொப்பத்**
**தன்னிரு கையி னாலுந் தடக்கைமால் யானை யாலும்**
**இன்னுயிர் பருகிச் சேனை யெடுத்துக்கொண் டிரிய**
**வோட்டிக்**
**கொன்முரண் தோன்ற வெம்பிக் கொலைக்களிற் றுழவ**
**னார்த்தான் 2274**

*[கொன்-அச்சம்; வெம்பி-கோபித்து.]*

**தருக்கொடு குமர னார்ப்பத் தன்சிலை வளைய வாங்கி**
**ஒருக்கவன் கையும் வாயு முளங்கிழித் துடுவந் தோன்றச்**
**சுருக்குக்கொண் டிட்ட வண்ணந் தோன்றலெய் திடுத**
**லோடும்**
**மருப்பிறக் களிறு குத்தி வயிரந்தான் கழிந்த தன்றே 2275**

*[தருக்கு-செருக்கு; உடுவம்-ஈர்க்கு.]*

பனிமலையில் தோன்றிய அழகிய பெரிய பவழம் போல வளைந்த தந்தக் கொம்புகளில் ரத்தம் வழிய நின்றுகொண்டிருந்த யானையைப் போர்க்களத்தில் மேலும் செலுத்தி, இனிக்கும் கனிபோல இன்மொழி பேசும் பெண்களின் பருத்த மார்பகம் அழுந்தச் சிவந்த, மலையைப் பழிக்கும் அகன்ற மார்புடைய, கோமுகன்

கொதித்தெழுந்து பல வெங்கணைகளை ஏவினான். பறித்தெடுத்த பஞ்சாலாக்கிய மாலையை, பரவிய பெருநெருப்புப் பற்றிக் கொண்டதைப் போல, தன்னுடைய இரண்டு கையாலும், துதிக்கை உடைய யானையாலும், பகைவர்களின் உயிரைக் கொன்று, எதிரிகள் படை நடுங்கி ஓடும்படி, தன் வலிமை விளங்கக் கோபித்துக் கொல் யானை மீதேறி வந்த கோமுகன் ஆர்த்தெழுந்தான். கோமுகன் இவ்வாறு ஆணவம் மிகுந்து ஆரவாரிக்கக் கண்ட பதுமுகன் தன் வில்லை வளைத்து, கோமுகனுடைய கையும் வாயும் உடலும் ஒருங்கே கிழிந்து, சுருக்கிட்டுக் கோத்ததைப் போல் அம்பின் ஈர்க்கு வெளித்தெரிய அம்புமாரி பொழிந்தான். அந் நிலையில் பதுமுகனுடைய யானையோடு வந்து மோதிய கோமுகனுடைய யானையின் பூண் ஒடிந்துபோயிற்று.

**நித்தில மணிவண் டென்னு நெடுமதக் களிறு பாய**
**முத்துடை மருப்பு வல்லே யுடைந்துமுத் தொழுகு குன்றின்**
**மத்தக யானை வீழ்ந்து வயிரங்கொண் டொழிந்த தாங்குப்**
**பத்திரக் கடிப்பு மின்னப் பதுமுகன் பகடு பேர்த்தான் 2276**

[வயிரம்-தீராத கோபம்; பத்திரம் - அழகு; கடிப்பு- குதம்பை என்னும் ஒருவகைக் காதணி.]

**பத்திரக் கடிப்பு மின்னப் பங்கியை வம்பிற் கட்டிக்**
**கொத்தலர்த் தும்பை சூடிக் கோவிந்தன் வாழ்க வென்னாக்**
**கைத்தலத் தெஃக மேந்திக் காளைபோய் வேறு நின்றான்**
**மத்தக யானை மன்னர் வயிறெரி தவழ்ந்த தன்றே 2277**

[பங்கி-தலைமயிர்; வம்பு - கச்சு; கைத்தலத்தில் - கையில்.]

**மேகலைப் பரவை யல்குல் வெள்வளை மகளிர் செஞ்சாந்**
**தாகத்தைக் கவர்ந்து கொண்ட வணிமுலைத் தடத்து வைகிப்**
**பாகத்தைப் படாத நெஞ்சிற் பல்லவ தேய மன்னன்**
**சேவகன் சிங்க நாதன் செருக்களங் குறுகி னானே 2278**

[ஆகம்-மார்பு; வைகி-தங்கி.]

  

'நித்தில மணி வண்டு' என்னும் பெயருடைய பதுமுக னுடைய பெரிய போர் யானை, தன்மேல் மோதிய கோமுகனுடைய யானையின் மீது பாய்ந்தவுடன் அந்த யானையின் முத்துக்கள் உடைய தந்தக் கொம்புகள் ஒடிந்தன. முத்துக்கள் சிதற விழும் குன்றைப்போல அந்த யானை, சினம் பொங்கக் கீழே விழுந்து இறந்தது. பதுமுகன் வெற்றிக் களிப்பில் குதம்பை என்னும் தன் காதோலை மின்னத் தன் யானையை அடக்கி நிறுத்தினான். தன்னுடைய அழகிய காதோலை மின்னி ஒளி செய்ய, தலைமயிரைக் கயிற்றால் இறுக்கக் கட்டி, மலர்ந்த தும்பை மலர்க்கொத்தை அணிந்து, கோவிந்தன் வாழ்க என்று முழக்கமிட்டபடித் தன் கையிலே வேலை ஏந்திச் சிங்கநாதன் தன் பகைவர் முன்னே தனியே போய் நின்றான். அவனைக் கண்டவுடன் பகை யரசர் வயிறு பற்றியெரிந்தது. மேகலையணிந்த பரந்த அல்குலும், வெள்ளை வளையலும் உடைய பெண்களின், குங்குமக் குழம்பு பூசிய மார்பைக் கவர்ந்து எழுந்த, அழகிய முலை முகட்டோடு முயங்கிக் கிடந்தாலும், அவர்கள் தரும் இன்பத்தில் ஆழ்ந்து சிந்தை இழந்து விடாத நெஞ்சுறுதி உடையவனாகிய, பல்லவ நாட்டு மன்னன் உலோகபாலனின் சேவகனாகிய சிங்கநாதன் (தனியே வந்து நின்ற தன்னை எதிர்க்கப் பகையரசர் எவரும் முன்வராததால்) தானே போர்க்களத்தை நோக்கிச் சென்றான்.

**புனைகதிர் மருப்புத் தாடி மோதிரஞ் செறித்துப் பொன்செய்**
**கனைகதிர் வாளை யேந்திக் கால்கழ லணிந்து நம்மை**
**இனையன பட்ட ஞான்றா லிறைவர்க ணினைப்ப தென்றே**
**முனையழன் முளிபுற் கான மேய்ந்தென நீந்தி னானே 2279**

[மருப்புத் தாடி-யானைக் கொம்பாற் செய்த கைப் பிடி; முளி புற்கானம்-உலர்ந்த புல்லையுடைய காடு; நீந்தினான்-கடந்தான்.]

**தாரணி பரவை மார்பிற் குங்கும மெழுதித் தாழ்ந்த
ஆரமும் பூணு மின்ன வருவிலைப் பட்டி னங்கண்
ஏர்படக் கிடந்த பொன்ஞா ணிருள்கெட விழிப்ப வெய்ய
பூரண சேனன் வண்கைப் பொருசிலை யேந்தி னானே 2280**

*[பரவை-பரத்தல்; ஏர்பட-அழகு பொருந்த; பொன் ஞாண்-பொன்னாற் செய்த அரைஞாண்.]*

**ஊனமர் குறடு போல இரும்புண்டு மிகுத்த மார்பில்
தேனமர் மாலை தாழச் சிலைகுலாய்க் குனிந்த தாங்கண்
மானமர் நோக்கி னாரு மைந்தருங் குழீஇய போருட்
கானமர் காம னெய்த கணையெனச் சிதறி னானே 2281**

*[கான்-வாசனை; இரும்பு-படைக்கருவிகள்.]*

அழகிய மோதிரத்தை யானைக் கொம்பினால் செய்த கைப்பிடியில் பதித்து, அப்பிடியின் மேல் பொன்போல் ஒளி வீசும் வாளை ஏந்தி, வீரக்கழலைக் காலில் அணிந்து, அரசர்கள் நம்மை எண்ணிக் கொண்டாடுவது எல்லாம் இத்தகைய வெற்றிகள் உண்டாக்கித் தரும் போர்களால் தான்போலும் என்று கருதிய சிங்கநாதன் காய்ந்த புல்லுடைய காட்டில் பற்றிய பெருநெருப்பைப் போலப் போரில் ஈடுபட்டான். மலர்மாலையணிந்த, அழகிய தன் மார்பிலே குங்குமக் குழம்பு பூசி, முத்துவடமும் பொற் பூணும் ஒளிவீச அணிந்து, அழகிய பட்டாடைகளின் மேல் கிடந்த அரைஞாண் இருளைப் போக்கும்படி ஒளி செய்ய, வலிமை மிக்க பூரணசேனன் (கட்டியங்காரனின் படைத் தலைவன்) என்பவன் தன் அழகிய கையிலே போர்வில்லை எடுத்தான். இறைச்சியைக் கொத்தும் மரக்கட்டையைப் போல, படைக்கலங்கள் பாய்ந்து புண்ணான மார்பிலே, மாலை தாழ உடல் வளைய வில்லை வளைத்து நின்ற பூரணசேனன், மான்போன்ற நோக்குடைய மகளிரும் இளைஞரும் கூடிய காமப்போரிலே, காமன் ஒருவனாக நின்று அம்பெய்வதைப்போல பகைவர்மேல் அம்பு மழை பொழிந்தான்.

வண்டலை மாலை தாழ மதுவுண்டு களித்து வண்கைப்
புண்டலை வேலை யேந்திப் போர்க்களங் குறுகி வாழ்த்திக்
கண்படு காறு மெந்தை கட்டியங் கார னென்றே
உண்டொலை யார்க வேலென் றுறுவலி தாக்கி னானே

[ஒலை-ஒல்லை, விரைவாக; ஆர்க-வயிறு நிறைவ தாக.]

கூற்றென வேழம் வீழாக் கொடிநெடுந் தேர்க ணூறா
ஏற்றவர் தம்மைச் சீறா வேந்திர நூழில் செய்யா
ஆற்றலங் குமரன் செல்வா னலைகடற் றிரையி னெற்றி
ஏற்றுமீ னிரியப் பாய்ந்த வெறிசுறா ஏறு போன்றான் 2283

[நூறா-நூறி, அழித்து; ஏற்றவர்-எதிர் பொருதவர்; சீறா-கோபித்து.]

மாலைக்க ணாம்பல் போல மகளிர்தங் குழாத்திற் பட்டார்
கோலவாட் போருட் பட்டாற் குறுமுயற் கூடு கண்டு
சாலத்தாம் பனிக்கும் பொய்கைத் தாமரை நீர ராயின்
ஞாலத்தா ராண்மை யென்னா மெனநகா வருகின் றானே

[போருள்பட்டால்-போரிடத்துச் சென்றால்; முயற் கூடு-சந்திரனை.]

தேனுண்டு பாடும் வண்டுகள் மொய்க்கும் மாலைகள் தாழ, கொடையளிக்கும் வளமிக்க தன் அழகிய கையிலே, பகைவருடலைப் புண்ணாக்கும் வேலையேந்திப் போர்க் களம் அடைந்து, 'உலகம் உள்ளளவும் எந்தலைவனாகிய கட்டியங்காரன் வாழ்க' என்று வாழ்த்தி, 'இவ்வேல் பகைவர் உயிரைக் கொண்டு வயிறு நிறைக' என்று கூறி மேலும் வேலை எடுத்து வீசினான் வலிமை மிக்க அப் பூரணசேனன். எமனைப் போல யானைகளை வீழ்த்தி, கொடியுடைய பெருந்தேர்களை அழித்து, எதிர்த்த பகைவரைச் சினந்து தாக்கி, யந்திரம் போல் கொன்று குவித்துச் செல்லுகின்ற வலிமை மிக்க அப்பூரணசேனன்,

அலைகடல் மேல் திரியும் மீன்கள் அஞ்சி ஓடும்படிப் பாய்ந்த பெரிய சுறாமீனை ஒத்தான். மாலைக் காலத்திலே விரிந்து மலர்கின்ற ஆம்பல் மலரைப்போல மங்கையர் கூட்டத்தைக் கண்டால் மகிழ்கின்ற இவ்வீரர்கள், அழகிய வாள் மோதும் போர்க்களம் கண்டவுடன், நிலவைக் கண்டு வருந்தி முகஞ்சுருக்கும் பொய்கையில் உள்ள தாமரைப் பூப்போல நடுங்குவார்கள் என்றால், இவ்வுலகில் ஆண்மையும் வீரமும் என்ன ஆகும் என்று பூரணசேனன் தனக்குள்ளாகச் சிரித்துக் கொண்டான்.

**முடிச்சடை முனிவ னன்று வேள்வியிற் கொண்ட வேற்கண்**
**மடத்தகை மகளிர் கோல வருமுலை யுழக்கச் சேந்து**
**கொடிப்பல வணிந்த மார்பிற் கோவிந்தன் வாழ்க வென்று**
**நடத்துவா னவனை நோக்கி நகாச்சிலை பாரித் தானே**

[பாரித்தல்-வளைத்தல்; மடம்-இளமை.]

**போர்த்தநெய்த் தோர னாகிப் புலாற்பருந் தார்ப்பச் செல்வான்**
**சீர்த்தகை யவனைக் கண்டென் சினவுவே லின்னு மார்ந்தின்று**
**ஊர்த்துயி ருன்னை யுண்ணக் குறைவயி றாரு மென்றாங்கு**
**ஆர்த்தவாய் நிறைய வெய்தா னம்புபெய் தூணி யொத்தான்**

[ஆர்ந்தின்று-வயிறு நிறைந்ததில்லை; ஊர்த்து-ஊற்றி; ஆரும்-நிறையும்.]

**மொய்ப்படு சரங்கண் மூழ்க முனையெயிற் றாளி போல்**
**அப்பணைக் கிடந்த மைந்த னருமணித் திருவில் வீசும்**
**செப்பிள முலையி னார்கண் சென்றுலாய்ப் பிறழச் சிந்திக்**
**கைப்பட வெடுத்திட் டாடும் பொலங்கழற் காயு மொத்தான்**

[முனை-கூர்மை; ஆளி-சிங்கம்; உலாய்-உலாவி; பிறழ-மாறுபட.]

சடைமுடி உடைய இறைவன் வீரபத்திரனாகி, தக்கன் வேள்வியை அழிக்க எடுத்த வேலைப்போன்ற கண்களுடைய, இளமையும் அழகுமிக்க மகளிருடைய பருத்த மார்புகள் மோதிச் சிவந்த, பல வெற்றிக் கொடி

  

கள் எழுதிய, மார்புடைய கோவிந்தன் வாழ்க என்று கூறிப் போர்செய்யும் சிங்கநாதன், சிரித்து நின்ற பூரண சேனனைப் பார்த்துச் சிரித்தபடி தானும் வில்லை வளைத்தான். அம்புபட்டு வழிந்த குருதி உடலை மறைக்க, இறைச்சி தேடிவரும் பருந்துகள் சுற்றிவந்து ஒலியெழுப்ப வரும் பூரணசேனன், தனக்கேற்ற வீரன் என்று கருதத் தக்க சிங்கநாதனைக் கண்டு, 'என்னுடைய கோபமிக்க வேலின் வயிறு இன்னும் நிறையாமலிருக்கிறது. உன்னுயிரைக் கொன்று தின்றால் அதன் குறை வயிறும் நிறையும்' என்று கூறியபடி ஆர்த்தெழுந்தான். அப்படி ஆர்த்தெழுந்த பூரணசேனனின் வாய் நிறையும்படி சிங்கநாதன் அம்புகளை எய்ய, பூரணசேனன் (தன் உடலெங்கும் அம்புகள் நிறைய) அம்புகள் வைக்கும் அம்பறாத் தூணியைப் போலானான். மேலும் சிங்கநாதன் தொடர்ந்து பொழிந்த அம்புகள் சென்று தைத்து உடலெல்லாம் மூழ்க, கூரிய பற்களுடைய ஆளியைப் போல, அம்புப் படுக்கையின் மேல் விழுந்து கிடந்த பூரணசேனன், அழகிய மணிக்கலன்கள் வானவில்போல் ஒளி வீசும், செப்பினைப்போலும், அழகிய மார்புடைய மங்கையர் கண்கள் ஓடித்தாவக் கையால் எடுத்து விளையாடும் பொன்னாலான கழற்காயைப்போலத் தோன்றினான்.

**புனைகதிர்ப் பொன்செய் நாணிற் குஞ்சியைக் கட்டி நெய்த்தோர்**
**நனைகதி ரெஃக மேந்தி நந்தன்வாழ் கென்ன நின்ற**
**வினையொளிர் காளை வேலைக் கடக்கலார் வேந்தர் நின்றார்**
**கனைகடல் வேலை யெல்லை கடக்கலா வண்ண நின்றார்**

*[குஞ்சி-தலைமயிர்; வேலை எல்லை-கடலின் கரை.]*

**நின்றவப் படையு ளானே யொருமக னீலக் குஞ்சி**
**மன்றல மாலை நெற்றி மழகளி றன்றி வீழான்**

வென்றியங் கொளிறும் வெள்வேன் மின்னென வெகுண்டு
விட்டான்
சென்றவேல் விருந்து செங்கண் மறவனக்
கெதிர்கொண் டானே 2289

[மழகளிறு-இளங்களிறு; ஒளிரும்-விளங்கும்.]

மான்வயி றார்ந்து நோக்கும் வெருவுறு மருளி னோக்கின்
தேன்வயி றார்ந்த கோதைத் தீஞ்சொலார் கண்கள்
போலும்
ஊன்வயி றார்ந்த வெள்வே லொய்யெனப் பறித்து நக்கான்
கான்வயி றார்ந்து தேக்கிக் களிவண்டு கனைக்குந்
தாரான் 2290

[வயிறார்ந்து - வயிறு நிறைந்து; வெருவுறு-அச்ச
முற்ற.]

ஒளிவீசும் அழகிய பொன்னாலான கயிற்றால் தன் குடுமியை இறுக்கிக் கட்டி, குருதி தோய்ந்து நனைந்த வேலை ஏந்தி, 'நந்தட்டன் வாழ்க' என்று கூறிநின்ற வீரமிக்க மறவன் கைவேலை வென்று மேல் செல்ல முடியாது நின்ற மன்னர்கள், ஒலிக்கின்ற அலைமிகுந்த கடற் பரப்பைக் கடக்க முடியாது நிற்பன்தைப்போல் நின்றனர். அப்படிக் கலங்கி நின்ற படையில் உள்ளவனாகிய ஒரு வீரன், கரிய மயிர்க் கூந்தலுடையவன், மணமிக்க மாலையணிந்த யானைகளையே அன்றி மற்றவற்றைப் போரிட்டு வீழ்த்த விரும்பாதவனாய் நின்றவன், வெற்றிப்புகழ் பரவி நிற்கும் தன்வேலை எடுத்து, கோபக் கனல் தெறிக்க மின்போல் எறிந்தான். அப்படி அவன் எறிந்த வேலைக் கோபத்தால் சிவந்த கண்ணுடைய நந்தட்டனின் சேவகன் போர் விருந்தாகக் கருதி எதிர் கொண்டான். உண்டு வயிறாறிய மான் அச்சத்தால் மருண்டு நோக்குவதைப் போன்ற பார்வையும், வண்டுகள் தேனை உண்டு வயிற்றை நிறைத்துக் கொள்ளும் வளமிக்க மாலையும் உடைய, இனிய மொழிபேசும் மகளிருடைய

 

கண்களைப் போன்ற பல உயிர்களைக் கொன்று தின்று வயிறு நிரம்பிய, அவ்வேலை எதிர்கொண்டு தன் கையில் பற்றியபடி களித்து நின்றான், நந்தட்டனுடைய சேவகனாகிய அவ்வீர மறவன்.

விட்டழல் சிந்தி வெள்வேல் விசும்பின்வீழ் மின்னி
னொய்தாக்
கட்டழ னெடுங்கண் யாது மிமைத்திலன் மகளி ரோச்சும்
மட்டவிழ் மாலை போல மகிழ்ந்துபூண் மார்பத் தேற்றுக்
கட்டழ லெஃகஞ் செல்லக் காலெனெறி யாயி னானே 2291

[ஓச்சும்-வீசுகின்ற; கால் நெறியாயினான்-காற்று நுழைந்து செல்லும் சாளரமாயினான்.]

கவிமதங் கடந்து காமர் வனப்புவீற் றிருந்த கண்ணார்
குவிமுலை நெற்றித் தீந்தேன் கொப்புளித் திட்ட பைந்தார்ச்
செவிமதக் கடலங் கேள்விச் சீவகன் கழல்கள் வாழ்த்திச்
சவிமதுத் தாம மார்பிற் சலநிதி தாக்கி னானே, 2292

[கொப்புளித்திட்ட-உமிழ்ந்த; செவி மதக்கடலங் கேள்வி-காதிற்குப் பொருந்திய கடல் போலும் கேள்வி அறிவு; சவிமது-செவ்வியுடைய தேன்.]

குஞ்சரங் குனிய நூறித் தடாயின குருதி வாடன்
நெஞ்சக நுழைந்த வேலைப் பறித்துவான் புண்ணு ணீட்டி
வெஞ்சம நோக்கி நின்று மிறைக்கொளி திருத்து
வாற்கண்டு
அஞ்சிமற் றரசர் யானைக் குழாத்தொடு மிரிந்திட் டாரே

[தடாயின-வளைந்த; நீட்டி-செருகி; சமம்-போர்; மிறை-வளைவு.]

கட்டியங்காரனுடைய படைவீரரில் ஒருவன் எறிந்த வேலை விருந்தாக எதிர் கொண்டு கையிலே பற்றி நின்ற நந்தட்டனின் சேவகன் எறிந்த போர்வேல், நெருப்பைச் சிந்திக் கொண்டு விண்ணிலிருந்து பாயும் மின்னலைக் காட்டிலும் வேகமாகச் செல்லக் கண்டும், கட்டியங்காரனுடைய படைவீரன் நெருப்புப் போலும் சிவந்த தன்

கண்கள் இமைக்காது நின்று கொண்டிருந்தான். அது மட்டுமல்லாது தன்மேல் மேலும் வந்து பாய்ந்த வேல் களை, பெண்கள் வீசிய தேன் நிறைந்த மலர்மாலை களை ஏற்பதுபோல் பொற்பூண் அணிந்த தன் மார்பிலே மகிழ்ச்சியோடு ஏற்று, சல்லடைக் கண்களாகத் தன் உடல் துளைபட நின்று கொண்டிருந்தான். கவிஞர் போற்றும் சிறப்பையும் மீறி இன்பூட்டும் அழகிய கண் ணுடைய பெண்களின் மார்பின் மேல் இனிய தேன் தெளிக்கும் அழகிய மாலையினையும், கேட்போர் காது களுக்கு இன்பம் அளிக்கும் அறிவினையும் உடைய சீவகனின் வீரக்கழல் அணிந்த திருவடிகளை வாழ்த்தி, தேன் நிறைந்து வழியும் மாலையணிந்த மார்புடைய வனாகிய சலநிதி என்பவன் போரிடத் தொடங்கினான். யானைகள் செத்து வீழும்படி வீசி வளைந்து போன இரத்தந் தோய்ந்த வாளை, தன் மார்பிலே வந்து தைத்திருந்த வேலைப் பிடுங்கி எடுத்துவிட்டு, அவ்வேல் பாய்ந்து நுழைந்த புண்ணிலே நுழைத்து, அதன் வளைவை நிமிர்த்தியபடி, தாம் ஈடுபடத்தக்க சிறந்த போர் இனியில்லை என்றிருக்கும் வீரனைக் கண்டு பயந்து நடுங்கி மற்ற அரசர்கள் யானைகளோடு ஓடலாயினர்.

**தோட்டுவண் டொலியன் மாலைத் துடியிடை மகளி ராய்ந்த**
**மோட்டுவெண் முத்த மின்னு முகிழ்முலை யுழுது சாந்தம்**
**கோட்டுமண் கொண்ட மார்பங் கோதைவாள் குளித்து மூழ்கிக்**
**கோட்டுமண் கொள்ள நின்றான் குருசின்மண் கொள்ள நின்றான் 2294**

*[கோடு-உச்சி; மண்கொண்ட-அலங்கரிக்கப் பெற்ற.]*

**எரிமணிக் குப்பை போல இருளற விளங்கு மேனித்**
**திருமணிச் செம்பொன் மார்பிற் சீவகன் சிலைகை யேந்தி**
**அருமணி யரச ராவி யழலம்பிற் கொள்ளை சாற்றி**
**விரிமணி விளங்கு மான்றேர் விண்டொழ ஏறி னானே 2295**

[குப்பை - தொகுதி; அழலம்பு - தீயாகிய அம்பு; கொள்ளை சாற்றி - கொள்ளை கொள்ளும் தன்மையை நினைந்து.]

**கருவளி முழக்குங் காருங் கனைகட லொலியுங் கூடி**
**அருவலிச் சிங்க வார்ப்பு மாங்குடன் கூடிற் றென்னச்**
**செருவிளை கழனி மள்ள ரார்ப்பொடு சிவணிச் செம்பொற்**
**புரிவளை முரச மார்ப்பப் போர்த்தொழி றொடங்கி**
**னானே 2296**

[கருவளி-பெருங்காற்று; செரு-போர்; மள்ளர்-வீரர்; சிவணி-பொருந்தி.]

பூவிதழ்களிலே வண்டுகள் மொய்த்துப் பாடும் மாலையையும், துடிபோன்ற இடையையும் உடைய பெண்கள் தேர்ந்தெடுத்து அணிந்த அழகிய பெரிய முத்துக்கள் அணிந்து ஒளிவீசும், தாமரை அரும்பு போன்ற மார்புகள் முயங்கி அழுந்தப் படிந்த சந்தனக் குழம்பு தோய்ந்த தன் மார்பில், மாலையணிந்த வாள் நுழைந்து, நுனியிலே சதையைக் குத்தியெடுக்க, (அதை உணராது போரைப் பற்றிய நினைவாகவே இருந்த சலநிதி) சீவகன் புகழ் விளங்க நின்று கொண்டிருந்தான். ஒளிவீசும் மணிக்குவியல் போல இருள்கெட விளங்கும் அழகிய மேனியையும், பேரழகுடைய மணிகள் பதித்த பொன்னணி புனைந்த மார்பினையும் உடைய சீவகன், கையிலே வேலையேந்தி, அழகிய மணிமுடி புனைந்த வேந்தர்களுயிரை நெருப்புப் போலும் தன் கை அம்பால் கொள்ளை கொள்வதை நினைவில் கொண்டு, ஒளிமிக்க மணிகள் புனைந்த குதிரைகள் பூட்டிய தேரிலேறி அமர்ந்தான். பெரும் புயலின் ஒலியும், இடியோசையும், கடல் முழக்கமும் சேர்ந்து, பேராற்றலுடைய சிங்கத்தின் முழக்கத்தோடு ஒன்று கூடியதைப்போல, போர்க்களத்தில் போர் வீரர்கள் எழுப்பும் ஆரவாரத்துடன் சேர்ந்து, செம்பொன்னால் அழகுசெய்யப்பட்ட சங்கும் முரசும் முழங்கி ஒலிசெய்ய அவன்போர் செய்யத் தொடங்கினான்.

அரசர்த முடியும் பூணு மாரமும் வரன்றி யார்க்கும்
முரசமுங் குடையுந் தாரும் பிச்சமுஞ் சுமந்து மாவும்
விரைபரித் தேரு மீர்த்து வேழங்கொண் டொழுகி வெள்ளக்
குரைபுனற் குருதி செல்லக் குமரன்விற் குனிந்த தன்றே

[வரன்றி-வாரிக் கொண்டு; பிச்சம்-மயிற்பீலி; ஈர்த்து-இழுத்து; குரைபுனல்-ஒலிக்கின்ற நீர்.]

கேழ்கிள ரெரிகட் பேழ்வாய்க் கிளர்பெரும் பாம்பி னோடும்
சூழ்கதிர்க் குழவித் திங்க டுறுவரை வீழ்வ தேபோல்
தாழிருந் தடக்கை யோடுந் தடமருப் பிரண்டு மற்று
வீழ்தரப் பரந்த வப்பு நிழலிற்போர் மயங்கி னாரே 2298

[கேழ் கிளர்-நிறம் விளங்குகின்ற; துறுவரை-பெரிய மலையினின்றும்; தடக்கை-வளைந்த துதிக்கை.]

ஆடவ ராண்மை தோற்றும் அணிகிளர் பவழத் திண்கை
நீடெரி நிலைக்கண் ணாடிப் போர்க்களத் துடைந்த மைந்தர்
காடெரி கவரக் கல்லென் கவரிமா விரிந்த வண்ணம்
ஓடக்கண் டுருவப் பைந்தா ரரிச்சந்த னுரைக்கின்
றானே 2299

[ஆண்மை - வீரம்; அணிகிளர் - அழகு விளங்கும்; உருவம்-அழகு.]

அரசர்களணிந்த மணிமுடிகளையும் அணிகலன் களையும் முத்தாரங்களையும் வாரிக்கொண்டு, ஒலிக்கும் முரசையும் குடையையும், மயிற்பீலியையும் சுமந்து, குதிரையையும் விரைந்து செல்லும் குதிரை பூட்டிய தேரையும் அடித்துக்கொண்டு, யானையையும் இழுத்துச் செல்லும் ஒலிக்கும் அருவி நீர் போன்ற இரத்தவெள்ளம் பெருக்கெடுக்கும்படி சீவகன் வில் வளைந்தது. சிவப்பு நிறம் விளங்கத் தீ எரியும் கண்ணையும், அகன்ற வாயையும் உடைய இராகு என்னும் பெரிய பாம்போடு, ஒளி விளங்கும் அழகுடைய பிறை நிலவு பெரிய மலை யிலிருந்தும் வீழ்வதைப்போல, நீண்ட பெரிய துதிக்கை யோடு தந்தக் கொம்புகள் இரண்டும் அற்று யானை

விழும்படி நடந்த போரில் அம்புகள் நிறைந்து பரவியு நிலை கண்டு அரசர் மனங்கலங்கி நின்றனர். ஆண்களின் வீரம் விளங்கும் — அழகு மிக்க பவழத்தாலாகிய கைப் பிடியும், மிகுந்த ஒளியும் உடைய நிலைக்கண்ணாடி ஆகிய போர்க்களத்தில் மனமுடைந்து நின்ற வீரர்கள், காட்டிலே தீப்பற்றிக் கொள்ள, 'கல்' என்று ஒலியெழுப்பி ஓடுகின்ற கவரிமான் கூட்டத்தைப்போலப் பயந்து ஓடுவதைக் கண்டு அழகிய மாலையணிந்த அரிச்சந்தன் என்கிற கட்டியங்காரனுடைய அமைச்சன் கூறுவான்.

**மஞ்சிவர் மின்ன னார்தம் வாலரிச் சிலம்பு சூழ்ந்து**
**பஞ்சிகொண் டெழுதப் பட்ட சீறடிப் பாய்த லுண்ட**
**குஞ்சியங் குமரர் தங்கண் மறம்பிறர் கவர்ந்து கொள்ள**
**அஞ்சியிட் டோடிப் போகி னாண்மையார் கண்ண தம்மா**

[மஞ்சு-மேகம்; மறம்-வீரம்; அஞ்சியிட்டு-பயந்து.]

**உழையின முச்சிக் கோடு கலங்குத லுற்ற போதே**
**விழைவற விதிர்த்து வீசி விட்டெறிந் திடுவ தொப்புக்**
**கழலவ ருள்ள மஞ்சிக் கலங்குமே லதனை வல்லே**
**மழைமினி னீக்கி யிட்டு வன்கண்ண ராப வன்றே** 2301

[உழையினம்-மான்கூட்டம்; கோடு-கொம்பு; விழைவு-விருப்பம்; விதிர்த்து-உடம்பு நடுங்கி.]

**தற்புறந் தந்து வைத்த தலைமகற் குதவி வீந்தாற்**
**கற்பக மாலை சூட்டிக் கடியர மகளிர்த் தோய்வர்**
**பொற்றசொன் மாலை சூட்டிப் புலவர்கள் புகழக் கன்மேல்**
**நிற்பர்தம் வீரந் தோன்ற நெடும்புகழ் பரப்பி யென்றான்**

[தற்புறந்தந்து-தன்னைப் பாதுகாத்து; வீந்தால்-இறந்தால்; பொற்ற-பொலிவு பெற்ற.]

'முகிலிடைத் தோன்றும் மின்னலைப் போன்ற பெண்களின், மணிப்பரல்களமைந்த சிலம்புகள் சூடிய, செம்பஞ்சுக் குழம்பு தோய்ந்த அழகிய கால்கள் மோதி விளையாடும் குடுமிகளுடைய இவ்வீரர்கள், தம் வீரத்

தைப் பிறர் கவர்ந்து கொள்ள, இப்படிப் பயந்து ஓடினால் வீரம் வேறு எவரிடந்தான் இருக்கும்? கலை மான்கள் தம் தலைமேல் உள்ள கொம்புகள் தளர்ந்து அசையக் கண்டு மனங் கலங்க ஆரம்பித்தவுடனேயே, அதன் மேல் வைத்த ஆசை தீரும்படி அதை அசைத்து வீசியெறிவதைப்போல, வீரக்கழலணிந்த இவ்வீரர்கள் உள்ளம் உயிர்மேல் வைத்த ஆசையால் அஞ்சி நடுங்கும் என்றால், அத்தகைய, உயிர்மேல் வைத்த ஆசையை, முகிலிடைத் தோன்றி மறையும் மின்னலைப்போல, நொடிப்பொழுதில் துடைத்தெறிந்து விட்டு அஞ்சாமை உடையவராய்த் திகழவேண்டும். துன்பம் வந்தால் தமக்குதவுவார் என்று தம்மை வைத்துப் பாதுகாத்த தலைவனுக்கு உதவி செய்து, போரில் இறந்து வீரசுவர்க்கம் அடைந்தால், கற்பக மாலை சூட்டி வானவர் மகளிர் பணிந்து தொழுவர். இங்கே இந்நிலவுலகிலும் புலவர்கள் போற்றிப் புகழ்பாட, வீரக்கல்லெடுக்க நிற்கும் புகழுக்குரியவராகத் திகழ்வர்.

**பச்சிரும்பு எஃகிட் டாங்குப் படையைக்கூர்ப் பிடுத லோடும்**
**கச்சையுங் கழலும் வீக்கிக் காஞ்சனத் தளிவம் வாய்க்கிட்டு**
**அச்சுற முழங்கி யாரா வண்ணலங் குமரன் கையுள்**
**நச்செயிற் றம்பு தின்ன நாளிரை யாக லுற்றார் 2303**

[பச்சிரும்பு-உருகிய இரும்பு; ஆரா-ஆர்த்து.]

**வடதிசை யெழுந்த மேகம் வலனுராய் மின்னுச் சூடிக்**
**குடதிசைச் சேர்ந்து மாரி குளிறுபு சொரிவ தேபோற்**
**படர்கதிர்ப் பைம்பொற் றிண்டேர் பாங்குற விமைப்பி**
**னூர்ந்தான்**
**அடர்சிலை யப்பு மாரி தாரைநின் றிட்ட தன்றே 2304**

[வலன் உராய்-வலமாக உலாவி; குளிறுபு-முழங்கி; அப்புமாரி-அம்புமழை.]

**அற்றுவீழ் தலைகள் யானை யுடலின்மே லழுந்தி நின்ற**
**பொற்றதிண் சரத்திற் கோத்த பொருசரந் தாள்க ளாகத்**
**தெற்றிமேற் பூத்த செந்தா மரைமலர் போன்ற செங்கண்**
**மற்றத்தா துரிஞ்சி யுண்ணும் வண்டின மொத்த வன்றே**

*[அத்தாது-அந்தத் தாமரையிலுள்ள பூந்தாதை; அற்று-அறுந்து; தெற்றி-திண்ணை.]*

உருக்கிய இரும்பிலே கூரிய வேலை வைத்ததைப் போல, அரிச்சந்தன் என்னும் அமைச்சன் இத்தகைய தன்னுடைய வீர உரைகளால் தன் படை வீரரை முனைப்புக் கொள்ளச் செய்தான். அவர்கள் உடனே தங்கள் இடைக்கச்சையையும் வீரக்கழலையும் இறுக்கிக் கட்டி, பொன்னாலாகிய சின்னத்தை வாயில் வைத்துக் கண்டவர் அஞ்ச முழங்கி ஆர்த்தெழுந்து பெருமை மிக்க சீவகன்கையில் உள்ள நஞ்சினைப்போலும் பற்கள் உடைய அம்புகளால் உண்ணப்பட்டு, தம் வாழ்நாளை அதற்கு இரையாக்கினர். வடக்குத் திசையில் தோன்றிய மேகம், வலமாகச் சென்று, மின்னலை அணிந்து மேற்குத் திசையைச் சேர்ந்து குளிர்ந்து மழையாக முழங்கிப் பொழிவதைப் போல, ஒளி பரந்து வீசும் பொன்னாலாகிய திண்தேரில் நொடிப் பொழுதில் ஏறியமர்ந்து சீவகன் அதைச் செலுத்த அம்புமாரி இடையறாது பொழிந்தது. அப்படிப் பொழிந்த அம்பு மழையால் அறுந்து விழுந்த தலைகள், யானைகளின் உடல்மேல் தைத்திருக்கும் அம்புகளில் குத்திக்கொண்டு நிற்கும். அப்படிக் குத்திய அம்புகள் தண்டுகளாக, குத்திக்கிடக்கும் அத்தலைகள் திண்ணையில் மலர்ந்த (கரிய யானைமீது இருத்தலால் திண்ணை எனப்பட்டது) செந்தாமரை மலர்போல் தோன்றும். அத்தலைகளில் உள்ள சிவந்த கண்களோ அம்மலரை உண்ணவரும் வண்டுகள் போல் காட்சி தரும்.

## வேறு

திங்க ளோடுடன் குன்றெலாந் துளங்கி மாநிலஞ்
சேர்வபோற்
சங்க மத்தகத் தலமரத் தரணி மேற்களி றழியவும்
பொங்கு மாநிரை புரளவும் பொலங்கொள் தேர்பல முறியவும்
சிங்கம் போற்றொழித் தார்த்தவன் சிறுவர் தேர்மிசைத்
தோன்றினார் 2306

[துளங்கி-அசைந்து; தொழித்து-கோபித்து.]

சந்த னஞ்சொரி தண்கதிர்த் திங்க ளந்தொகை தாம்பல
குங்கு மக்கதிர்க் குழவியஞ் செல்வ னோடுடன் பொருவ
போல்
மங்குன் மின்னென வள்ளறேர் மைந்தர் தேரொடு
மயங்கலின்
வெங்கண் வில்லுமிழ் வெஞ்சர மிடைந்து வெங்கதிர்
மறைந்ததே 2307

[மங்குல்-மேகம்; மிடைந்து-நெருங்குதலால்; கதிர்-சூரியன்.]

குருதி வாளொளி யரவினாற் கொள்ளப் பட்டவெண்
டிங்கள்போல்
திருவ நீர்த்திகழ் வலம்புரி வாய்வைத் தாங்கவன்
தெழித்தலும்
பொருவில் கீழ்வளி முழக்கினாற் பூமி மேற்சன நடுங்கிற்றே
அரவ வெஞ்சிலை வளைந்ததே யண்ணல் கண்ணழ
லுமிழ்ந்ததே 2308

[தெழித்தல்-முழக்குதல்; சனம்-மக்கள் கூட்டம்.]

நிலவோடு சேர்ந்து மலைக்குன்றுகள் நிலைகுலைந்து தரையில் வீழ்வதைப் போல, சீவகனுடைய படை யானைகள் மத்தகத்தில் அணிந்திருந்த சங்குகள் அசையத் தரையில் விழுந்து இறக்கவும், பொங்கிப் பாயும் குதிரைக் கூட்டம் மண்ணிலே விழுந்து புரள்வும், பொன்னாலான தேர் பல முறிந்து அழியவும், சிங்கம்

போலப் பொங்கியெழுந்த கட்டியங்காரனுடைய மைந்தர்கள் தேர்மீது நின்று ஆர்ப்பரித்தனர். குளிர்ந்த சந்தனத்தைப்போல தண்ணொளி வீசும் கதிர்களுடைய நிலவுக் கூட்டம், குங்குமம் போலச் சிவந்த கதிர் வீசும் சூரியனுடன் போரிடுவதுபோல, முகிலிடைத் தோன்றும் மின்னலைப் போன்று கட்டியங்காரனுடைய மைந்தர்கள் தேருடன், சீவகன் தேர் கலக்க, இருபுறமும் இருந்து கொடிய வில்விடுக்கும் அம்புகள் நெருங்கி நிறைய, கதிரவனும் மறைந்தான். செங்குருதியைப் போலும் சிவந்த பாம்பினால் கௌவப்பட்ட வெண்ணிலவைப் போல, அழகிய வெள்ளை வலம்புரிச் சங்கைச் சீவகன் தன் சிவந்த வாயில் வைத்து முழக்கியவுடன், ஒப்புவமையில்லாத, மேலிருந்து கீழ்நோக்கி வீசும் புயல்காற்றினைப் போலும், அச்சங்கொலியைக் கேட்டுப் பூமியில் மக்கள் கூட்டம் அஞ்சி நடுங்கியது. பாம்பினைப் போலும் கொடிய வில்லும் வளைந்தது. சீவகனுடைய கண்களில் நெருப்புப் பொறி பறந்தது.

**கங்கை மாக்கடற் பாய்வதே போன்று காளைதன் கார்முகம்**
**மைந்த ரார்த்தவர் வாயெலா நிறைய வெஞ்சரங் கான்றபின்**
**நெஞ்சம் போழ்ந்தழ லம்புண நீங்கி னாருயிர் நீண்முழைச்**
**சிங்க வேறுகள் கிடந்தபோற் சிறுவர் தேர்மிசைத்**
**துஞ்சினார் 2309**

**நிவந்த வெண்குடை வீழவும் வேந்தர் நீள்விசும் பேறவும்**
**உவந்து பேய்க்கண மாடவு மோரி கொள்ளைகொண்**
**டுண்ணவும்**
**கவந்த மெங்கணு மாடவுங் களிறு மாவொடு கவிழவும்**
**சிவந்த சீவக சாமிகண் புருவ மும்முரி முரிந்தவே 2310**

[நிவந்த-உயர்ந்த; ஓரி-கிழநரி; கவந்தம்-தலையற்ற உடல்; முரிமுரிந்த-வளைந்தன.]

**பொய்யதை போர்க்களம் புறவிதழ் புலவு வாட்படை புல்லிதழ்**
**ஐய கொல்களி றகவித ழரச ரல்லிதன் மக்களா**

**மையில் கொட்டையம் மன்னனா மலர்ந்த தாமரை**
**வரிசையாற்**
**பைய வுண்டபின் கொட்டைமேற் பவித்தி ரத்தும்பி**
**பறந்ததே2311**

[ஐய - வியக்கத்தக்க; மை இல்-குற்றமில்லாத; பவித்திரத்தும்பி - பரிசுத்தமான சீவகனாகிய வண்டு.]

ஆயிரம் முகமாகக் கடலிலே சென்று கலக்கும் கங்கை யாற்றைப் போலச் சீவகனுடைய வில், ஆர்த்தெழுந்த கட்டியங்காரனுடைய மைந்தர்கள் வாயெல்லாம் நிறையு மாறு கூர் அம்புகளைச் சொரிந்தவுடன், அவ்வம்புகளில் சில அவர் உடலைப் பிளந்து உயிரை உண்டன. உயிர் நீங்கிய அவர்கள் நீண்ட குகைகளில் செத்துக் கிடக்கின்ற ஆண் சிங்கங்களைப்போலத் தங்கள் தேர்மேல் கிடந்தனர். உயர்ந்த வெள்ளைக் குடை வீழவும், உடன் போரிட வந்த மன்னர்கள் வீரமரணம் எய்தி விண்ணுலகம் புகவும், பேய்க்கூட்டம் மகிழ்ந்து ஆடவும், நரிக் கூட்டம் நல்ல விருந்து கிடைத்தது என்று விரும்பி உண்ணவும், தலையற்றுத் துடிக்கும் முண்டங்கள் எழுந்து எங்கும் ஆடவும், யானைகள் குதிரைகளோடு கிடந்து புரளவும் நடந்த போரில் சீவகனுடைய கண்கள் சிவந்து, புருவங்கள் நெறிந்தன.

போர்க்களம் பொய்கையாக, அப்பொய்கையில் பூத்த புதுமலரின் புற இதழ்கள் வாட்படையாக, அப்புற இதழுக்குள்ளிருக்கும் புல்லிதழ் வியக்கத்தக்க போர் யானையாக, அக இதழ் அரசனாக, அல்லியிதழ் அவன் மக்களாக, மாசற்ற அம்மலர்க்காய் கட்டியங்காரனாகத் தன்னைச் சுற்றி விரிந்த பத்மவியூகத்தை மெல்ல விலக்கிக் கொன்று, குடிச்சிறப்பும் குணநலமும் மிக்க தூய சீவகன் என்னும் தும்பி அக்காயின் மேலே வந்து (வியூகத்தை விலக்கி) வெளியே பறந்தது.

  

## வேறு

கலைமுத்தங் கொள்ளு மல்குற் கார்மழை மின்ன னார்தம்
முலைமுத்தங் கொள்ளச் சாந்த மழிந்துதார் முருகு விம்மும்
மலைமுத்தங் கொள்ளு மார்பின் மன்னனுங் கண்டு
காய்ந்தான்
சிலைமுத்தங் கொள்ளுந் திண்டோட் செம்மலுந் தீயிற்
சேந்தான் 2312

*[கார்மழை-கரிய மேகத்திடத்து; தார்முருகு-மாலையிலுள்ள தேன்.]*

தன்மதந் திவண்ட வண்டு தங்கிய காட்டுள் வேழம்
பின்மதஞ் செறித்திட் டஞ்சிப் பிடிமறந் திரிந்துபோகும்
வென்மதக் களிற்று வெய்ய அசனிவே கத்தின் மேலான்
மின்னுமிழ் மாலை வேந்தன் வீரற்கு விளம்பினானே 2313

*[திவண்ட-மூழ்கிய; செறித்திட்டு-மிக்கு.]*

நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுத மாகும்
இல்லையே லமுது நஞ்சா மின்னதால் வினையி னாக்கம்
கொல்வல்யா னிவனை யென்று மிவன்கொல்லு மென்னை
யென்றும்
அல்லன நினைத்தல் செல்லா ரறிவினாற் பெரிய நீரார்

*[நீரார் - தன்மையார்; நினைத்தல் செல்லார்-நினையார்.]*

முத்துக்கள் பதித்த மேகலையணிந்த அல்குலுடைய, கார்முகிலில் தோன்றும் மின்னல் கொடி போன்ற மகளிரின், முலைகள் தோய்ந்து தழுவ, மேல் பூசிய சந்தனம் அழிந்து, தேன் பொங்கி வழியும் மலர்மாலை விளங்கும் மலைபோன்ற, அகன்ற, மார்பினை உடைய கட்டியங்காரன் சீவகனைக் கண்டு சீறி எழுந்தான். வில் பொருந்திய திண் தோளுடைய சீவகனும் அவனைக் கண்டு தீப்போலக் கொதித்தெழுந்தான். தன்னுடைய மதத்திலே மூழ்கிய வண்டுகளின் கூட்டம் சென்று தங்கிய

காட்டிலிருக்கின்ற யானைகள், அவற்றின் நாற்றத்திற்கு அஞ்சி மதத்தை அடக்கித், தம் பிடியை மறந்து, கெட்டுப் போவதற்குக் காரணமான,- வெற்றிப் புகழுடைய மத யானையாகிய கொடிய அசனிவேகம் என்னும் யானை மீதமர்ந்துள்ள, ஒளி விளங்கும் மணிமாலை அணிந்த கட்டியங்காரன் சீவகனை நோக்கிச் சொல்வான்: 'நல் வினைப் பயன் உடையவர்கள் கொல்லும் நஞ்சினை உண்டாலும் அது அவர்க்கு அமுதமாகும். அப்படி யில்லாதவர்க்கு அமுதும் நஞ்சாகிவிடும். அவரவர் செய்த வினைப்பயன் இத்தன்மை உடையதாகும். அப்படியிருக்க இவனை நான் கொல்வேன் என்றோ, அல்லது என்னை இவன் கொல்வானென்றோ எண்ணும் அறிவற்ற செயலில் அறிவிற் சிறந்த பெரியோர் சிந்தை செலுத்த மாட்டார்.'

அகப்படு பொறியி னாரை யாக்குவா ரியாவ ரம்மா
மிகப்படு பொறியி னாரை வெறியராச் செய்ய லாமோ
நகைக்கதிர் மதியம் வெய்தா நடுங்கச்சுட் டிடுத லுண்டே
பகைக்கதிர்ப் பருதி சந்து மாலியும் பயத்த லுண்டே 2315

[வெறியரா - நல்வினையில்லாதவராக; சந்து - சந்தனம்; ஆலி-ஆலங்கட்டி.]

புரிமுத்த மாலைப் பொற்கோல் விளக்கினுட் பெய்த நெய்யும்
திரியுஞ்சென் றற்ற போழ்தே திருச்சுடர் தேம்பி னல்லால்
எரிமொய்த்துப் பெருக லுண்டோ இருவினை சென்று தேய்ந்தாற்
பரிவுற்றுக் கெடாமற் செல்வம் பற்றியா ரதனை வைப்பார்

[சுடர்-பிழம்பு; எரி-தீ; மொய்த்து-நிறைந்து.]

நல்லொளிப் பவளச் செவ்வாய் நன்மணி யெயிறு கோலி
வில்லிட நக்கு வீர னஞ்சினா யென்ன வேந்தன்
வெல்வது விதியி னாகும் வேல்வரி னிமைப்பே னாயிற்
சொல்லிநீ நகவும் பெற்றாய் தோன்றன்மற் றென்னை யென்றான் 2317

[கேசரி வில்லிட-வரிசையாக ஒளிவிடும்படி; நக்கு-சிரித்து.]

'உன்னுடைய கையிலே அகப்பட்டு இறக்கும் தீவினை உடையாராக என் மக்களை ஆக்கியது யார்? அப்படி ஆக்கிய வல்லமை உடையவரை வெறியராக்கி வெற்றி கொள்ள இயலுமா? அழகிய ஒளி வீசும் முழுநிலவு கொதிப்படைந்து சூரியனைப்போல் சுடுவதுண்டா? இல்லை. வருத்துங் கொடிய கதிருடைய கதிரவன்தான் தன் வெப்பம் மறைந்து குளிர்ந்த சந்தனமும் பனிக்கட்டி யும் பொழிவதுண்டோ? முறுக்கிய முத்துமாலை சேர்ந்த, பொன்னாலாகிய தண்டுடைய, விளக்கில் ஊற்றிய நெய் வறண்டு திரி தீய்ந்தவுடனே, அழகிய அவ்விளக்கின் சுடர் அவிந்து போகாமல் மேலும் சுடர்வீசிப் பிரகாசிப்ப துண்டோ? இல்லையல்லவா! அதைப் போலவே வினைப் பயன் தீர்ந்து முடிந்தால் போகிற செல்வத்தை அழிந்து கெடாதபடி யாரால் பாதுகாத்து வைக்க இயலும்' என்றான்! கட்டியங்காரன் கூறிய இது கேட்ட சீவகன், பவளம் போலச் சிவந்த தன் வாயின் முத்துப் போலும் அழகிய பற்கள் ஒளிவிட்டு வெளித் தோன்றச் சிரித்து, நீ என்னைக் கண்டு பயந்தாய் என்று கூற, கட்டியங்காரன் 'வெல்வதும் தோற்பதும் வினைவழி வருவதாகும். எனவே நீ வீசும் வேலைக் கண்டு நடுங்கி நான் கண் இமைத்தால், வேண்டுமானால் வீரனே, நான் உன்னைக் கண்டு பயந்தேன் என்று நீ கூறிக்கொள்' என்றான்.

பஞ்சிமெல் லடியி னார்தம் பாடகந் திருத்திச் சேந்து
நெஞ்சுநொந் தழுத கண்ணீர் துடைத்தலி னிறைந்த கோல
அஞ்சனக் கலுழி யஞ்சே றாடிய கடக வண்கை
வெஞ்சிலை கொண்டு வெய்ய வுருமென முழங்கிச்
சொன்னான் 2318

[பாடகம்-மகளிர் கால் அணி; கலுழி-கலக்கம்; உரும்-இடி.]

## வேறு

இல்லாளை யஞ்சி விருந்தின்முகங் கொன்ற நெஞ்சிற்
புல்லாள னாக மறந்தோற்பின் எனப்பு கைந்து
வில்வா ளழுவம் பிளந்திட்டு வெகுண்டு நோக்கிக்
கொல்யானை யுந்திக் குடைமேலுமொர் கோல்
தொடுத்தான் 2319

[மறம் - வீரம்; புல்லாளன் - அற்பன்; புகைந்து-
கோபித்து.]

தொடுத்தாங்க வம்பு தொடைவாங்கி விடாத முன்னம்
அடுத்தாங்க வம்புஞ் சிலையும் அதன் நாணு மற்றுக்
கடுத்தாங்கு வீழக் கதிர்வான்பிறை யம்பி னெய்தான்
வடித்தாரை வெள்வேல் வயிரம்மணிப் பூணி னானே 2320

[தொடை-மீண்டும் தொடுத்தலை; வடித்தல்-பயிற்
றல்; தாரை-ஒழுங்கு.]

பஞ்சினைப் போலும் மெல்லிய பாதமுடைய பாவையர் அணிந்த பாடகம் என்னும் காதணியைத் திருத்தி, சிறந்த அம்மங்கையர் மனம் வருந்தி அழுது வடித்த விழிநீரைத் துடைத்ததால், அவர்கள் அணிந் திருந்த மையாகிய சேறு படிந்த, பொற்கடகம் அணிந்த தன் அழகிய கையிலே கொடிய வில்லை ஏந்தி, பேரிடி போல முழங்கிக் கட்டியங்காரன் கூறுவான்: 'மனைவிக்குப் பயந்து விருந்தாக வந்தவரை அகமும் முகமும் மகிழ விருந் தோம்பாமல் விட்ட வன்நெஞ்சமுடைய கீழ்மகனாகக் கடவேன், நான் வீரம் இழந்தால்' என்று வஞ்சினங் கூறித் தீப்போலக் குமுறி, விற்படை வீரர்களைக் கொன்று குவித்துச் சினந்து பார்த்தபடி, கொல்லும் தன் மத யானையை மேலும் செலுத்திச் சச்சந்தனைக் கொன்ற பழியின்மேல் மேலும் ஒரு பழிவந்து தொடரும்படி (சீவகனையும் இப்போது கொல்ல) கட்டியங்காரன் அம்பை வில்லிலே தொடுத்தான். அப்படித் தொடுத்த அம்பினை நாணோடு சேர்த்து இழுத்து அவன் எய்து

வதற்கு முன்னே, அந்த அம்பும், வில்லும், வில்லின் நாணும் அறுபட்டு முறிந்து கோபத்தோடு போனாற் போலக் கீழே விழும்படி, பிறைபோலும் வடிவும் ஒளியு முடைய அம்பினை, வடித்தெடுத்த வெள்வேலேந்திய, வயிரமணிப் பூண் அணிந்த சீவகன் எய்தான்.

அம்புஞ் சிலையு மறுத்தானென் றழன்று பொன்வாள்
வெம்பப் பிடித்து வெகுண்டாங்கவன் றேரின் மேலே
பைம்பொன் முடியான் படப்பாய்ந்திடு கென்று பாய்வான்
செம்பொன் னுலகி னிழிகின்றவொர் தேவ னொத்தான்

[அழன்று-கோபித்து; பட-இறக்கும்படி.]

மொய்வார் குழலார் முலைப்போர்க்கள மாய மார்பிற்
செய்யோன் செழும்பொற் சரஞ்சென்றன சென்ற தாவி
வெய்தா விழியா வெருவத்துவர் வாய்ம டியா
மையார் விசும்பின் மதிவீழ்வது போல வீழ்ந்தான் 2322

[வெருவ-கண்டஞ்ச; மை-மேகம்.]

## வேறு

கட்டியங் கார னென்னுங் கலியர சழிந்த தாங்குப்
பட்டவிப் பகைமை நீங்கிப் படைத்தொழி லொழிக
வென்னாக்
கொட்டினர் முரச மள்ள ரார்த்தனர் குருதிக் கண்ணீர்
விட்டழு தவன்க ணார்வ மண்மக ணீக்கி னாளே 2323

[பட்ட-தோன்றிய; மள்ளர்-வீரர்; மண்மகள்-பூமி தேவி.]

தன் கை அம்பையும் வில்லையும் சீவகன் ஒடித்தான் என்று கோபம் கொண்டு தன் பொன் உடைவாளைச் சினத்தோடு கையிலேந்திக் குமுறியபடி, சீவகன் தன் தேர் மேலேயே வீழ்ந்து கிடக்கும்படி அவனை வெட்டி வீழ்த்து கிறேன் என்று கூறியபடி, தன் யானையை விட்டிறங்கிச் சீவகனை நோக்கிப் பாயும் பொன்முடி யணிந்த கட்டியங்

காரன், விண்ணுலகில் இருந்து தரையில் வந்து விழுகின்ற வானவனை ஒத்திருந்தான். நீண்ட கருங் கூந்தலுடைய மங்கையர்களின் முலை முயங்கும் போர்க்களமாகிய கட்டியங்காரனுடைய மார்பில், சூரியனைப் போன்ற சீவகனின் அழகிய கூரம்புகள் சென்று தைக்க அவன் உயிரும் பிரிந்தது. கோபக் கனல் தெறிக்க விழித்து நோக்கி, பார்த்தவர் பயந்து நடுங்கச் சிவந்த வாயை மடித்தபடி கார்மேகம் கவிந்த வானின் மீதிருந்து நிலவு தரையில் வீழ்வதைப்போலக் கட்டியங்காரனும் மண்ணில் சாய்ந்தான்.

கட்டியங்காரன் என்னும் கொடுங்கோன்மை ஒழிந்தது. எனவே இதுகாறும் உண்டான பகைமை தீர்ந்து போர் ஒழிக என்று வெற்றி முரசுகள் கொட்டி வீர மறவர்கள் ஆரவாரித்தனர். இரத்தக் கண்ணீர் விட்டழுது நில மகளும் அவன்பால் கொண்ட அன்பினைத் துறந்தாள்.

ஒல்லைநீ ருலகு மஞ்ச ஒளியுமிழ் பருதி தன்னைக்
கல்லெனக் கடலி னெற்றிக் கவுட்படுத் திட்டு நாகம்
பல்பகல் கழிந்த பின்றைப் பன்மணி நாகந் தன்னை
வல்லைவாய் போழ்ந்து போந்தோர் மழகதிர் நின்ற
தொத்தான் **2324**

[நெற்றி-உச்சி; ஒல்லை-விரைவு; கவுட்படுத்திடல்-விழுங்குதல்; வல்லை-விரைய.]

கோட்டுமீன் குழாத்தின் மள்ளர் ஈண்டினர் மன்னர்
சூழ்ந்தார்
மோட்டுமீன் குழாத்தி னெங்குந் தீவிகை மொய்த்த முத்தம்
ஆட்டுநீர்க் கடலி னார்த்த தணிநகர் வென்றி மாலை
கேட்டுநீர் நிறைந்து கேடில் விசயைகண் குளிர்ந்த வன்றே

[கோட்டுமீன் - கொம்பையுடைய சுறாமீன்; மோட்டுமீன்-மேலேயுள்ள நட்சத்திரம்; தீவிகை-விளக்கு.]

அணிமுடி யரசர் மாலை அழல்நுதி வாள்க ளென்னும்
மணிபுனை குடத்தி னெய்த்தோர் மண்ணுநீர் மருள
ஆட்டிப்

**பணமுலைப் பைம்பொன் மாலைப் பாசிழைப் பூமி தேவி**
**இணைமுலை யேக மாக நுகரிய வெய்தி னானே 2326**

[ஆட்டி - ஆட்டுவித்து; ஏகமாக - தானொருவனாக; நுகரிய-அனுபவித்தற்கு; மண்ணு நீர்-மஞ்சன நீர்.]

கடல் சூழ்ந்த இவ்வுலகம் கண்டு அஞ்சுமாறு, ஒளி பொழியும் சூரியனை, 'கல்' என்னும் ஒலியுண்டாகும் கடலலை மேல், கேது என்னும் பாம்பு விழுங்கியதற்குப் பின் பலநாள் கழித்து, பல மணிகளுடைய அந் நாகத்தின் வாயை விரைவில் பிளந்து கொண்டு வெளித்தோன்றும் உதயசூரியனைப் போலச் சீவகன் தன் குலப்புகழ் மேல் படிந்த பழியைத் துடைத்துப் பகையை வென்று, வெற்றிப் புகழோங்க நின்றான். நின்ற சீவகனைச் சுற்றிச் சுறாமீன் கூட்டத்தைப் போல வீரர்கள் திரண்டனர். அரசர்கள் வந்து சூழ்ந்தனர். சிறப்பு மிக்க விண்மீன்களைப் போல நகர் எங்கும் அழகிய விளக்குகள் ஒளி செய்தன. முத்துக் களை அலைக்கரத்தால் தாலாட்டும் நீருடைய கடலலை போல் அழகிய அந்நகரம் ஆரவாரித்தது. சீவகன் பெற்ற வெற்றிப் புகழைக் கேட்டுப் பெருமை மிக்க விசயையின் கண்களின் ஆனந்தக் கண்ணீர் துளிக்க, அவள் உள்ளமும் குளிர்ந்தது.

அழகிய மணிமுடி புனைந்த மன்னர்களுடைய மாலை யணிந்த கூரிய நுனியுடைய வாள்களென்னும் மணிகள் பதித்த குடத்தினால், குருதியாகி நறும் மஞ்சன நீர் ஆட்டுவித்துப் பருத்த மார்பும், பசும் பொன்னாலாகிய மாலையும் அணிமணிகளும் நிறைய அணிந்து நிலமகளைப் பொதுவறப் பொருந்திச் சீவகனும் இன்பமுற்றான்.

(மண்மகள் இலம்பகம் முற்றிற்று.)

# 11. பூமகள் இலம்பகம்

கண்ணாடி யன்ன கடிமார்பன் சிவந்து நீண்ட
கண்ணாடி வென்று களங்கண்டு நியம முற்றிக்
கண்ணாடி வண்டு பருகுங்கமழ் மாலை மூதூர்க்
கண்ணாடி யானை யவர்கைதொழச் சென்று புக்கான்

[மூதூர்க்கண் - இராசமாபுரத்தே; ஆடுயானையவர்- வெற்றியைக் கொண்ட யானையையுடைய வீரர்.]

கூடார் புலியு முழைக்கோளரி யேறு மன்ன
கூடார் மெலியக் கொலைவேல்நினைந் தானை யேத்திக்
கூடார மாலைக் குவிமென்முலைக் கோதை நல்லார்
கூடார மாட மயில்போலக் குழீஇயி னாரே 2328

[கூடு ஆர் புலி-கூட்டிலே இருந்த புலி; அன்ன-ஒத்த; கூடார்-பகைவர்.]

வேறு

மாலைச் செற்றான் மக்களொ டெல்லா முடனேயிம்
மாலைச் செற்றான் வைந்நுனை யம்பின் னிவனென்பார்
மாலைக் கின்றே மாய்ந்தது மாயாப் பழியென்பார்
மாலைக் கேற்ற வார்குழல் வேய்த்தோண் மடநல்லார்

[வைந்நுனை-கூரிய முனை; வேய்-மூங்கில்.]

நாகந் நெற்றி நன்மணி சிந்தும் மருவிபோல்
நாகந் நெற்றிந் நன்மணி யோடை நறவிம்மும்

  

**நாகந் நெற்றிந் நன்மலர் சிந்தி நளிர்செம்பொன்**
**நாகந் நெற்றி மங்கைய ரொத்தார் மடநல்லார்** **2330**

[நாக நெற்றி-மலையின் உச்சியில்; நாகம்-யானை; நற - தேன்; நாக நெற்றி - சுரபுன்னைமரத்தின் உச்சி.]

கண்ணாடியின் இயல்புடைய அழகிய மார்புடைய சீவகன் சிவந்து நீண்ட தன் கண்கள் எல்லோரிடமும் சென்று நலம் கூற, போர்க்களத்தைச் சுற்றிவந்து கள வேள்வி செய்து, தேனுண்ண வண்டுகள் வந்து மொய்க்கும் மாலைகள் மார்பிலணிந்து அழகு செய்ய, இராசமா புரத்தின் வெற்றிப் புகழ் மிக்க யானை உடைய படைவீரர் போற்றி வணங்க நகருக்குள் சென்று சேர்ந்தான். கூண்டில் அடைபட்ட புலியும், குகையில் வாழும் சிங்க ஏறும் போன்ற பகைவர் அழியக் கொலைவல்ல வேலேந்திய சீவகனைப் பாராட்டி, கோத்தணிந்த முத்து மாலை அணிந்த குவிந்த மார்புடைய பெண்கள் நெற்கூடு களிலும் மாடங்களிலும் மயில் போலக் கூடி நின்றனர். சச்சந்தனைக் கொன்ற கட்டியங்காரனையும் அவன் மக்களையும் சீவகன் இம்மாலைப் பொழுதில் கூரிய தன் வேல் நுனியால் கொன்றான் என்றும், குணமாலைக்கு இதுவரை நீங்காதிருந்த பழியும் இன்றோடு நீங்கிற்று என்றும் கூறி நிற்பர். மலர் மாலை சூடுதற்கேற்ற நீண்ட கருங்கூந்தலும் வளைந்த மூங்கில் போன்ற தோளும் உடைய அம்மங்கையர், மலை உச்சியிலிருந்து நன்மணி களைச் சிந்தி வீழுகின்ற அருவியைப் போன்ற, அழகு மணிகள் பதித்த யானையின் நெற்றிப் பட்டத்தின் மேலே, சுரபுன்னை மரத்தின் உச்சியிலிருந்து தேன் வழியும் அழகிய மலர்கள் உதிர்ந்துவிழ, மாடங்களில் நின்ற அம்மங்கையர், வானுலகில் இருந்து பூமழை பொழிகின்ற தேவ மகளிரை ஒத்தனர்.

**கோடிக் கோடுங் கூம்புயர் நாவாய் நெடுமாடம்**
**கோடிப் பட்டிற் கொள்கொடி கூடப் புனைவாரும்**

கோடித் தானைக் கொற்றவற் காண்பா னிழைமின்னக்
கோடிச் செம்பொற் கொம்பரின் முன்முன் றொழுவாரும்

[கூம்பு-பாய்மரம்; கோடி-புதுமை; தானை-சேனை; நாவாய்-மரக்கலம்.]

அம்புகை வல்வில் லார்கழன் மள்ளர் திறலேத்த
அம்புகைக் கொண்டா லாரிவற் கீண்டு நிகராவார்
அம்புகை யார்ந்த வந்துகி லல்குல் லவிர்கோதாய்
அம்புகைக் காணா மையனைக் கையிற் றொழுதென்பார்

[அம்பு உகை-அம்பைச் செலுத்துகின்ற; அம்பு-நீர்; அவிர்தல்-விளங்குதல்; அம்பு-வளையல்.]

மைத்துன நீண்ட மாமணி மாடம் மிசையேறி
மைத்துன நீண்ட வாட்டடங் கண்ணார் மலர்தூவ
மைத்துன மன்னர் மால்களி றேறிப் புடைசூழ
மைத்துன நீண்ட மாமணி வண்ண னவனொத்தான் 2333

[மை-மேகம்; துன-துன்ன, நெருங்க; மைத்து-ஒளி மழுங்கி; மை துன-கருமை பொருந்த.]

## வேறு

ஊது வண்டரற் றும்முயர் தாமரைப்
போது பூங்கழு நீரொடு பூத்துடன்
வீதி மல்கின போன்மிளிர் வேற்கணும்
மாத ரார்முகப் பூவு மலர்ந்தவே 2334

[ஊதுவண்டு-தாதை ஊதுகின்ற வண்டு; கழுநீர்-செங்கழு நீர் மலர்; மல்குதல்-நிறைதல்; முகப்பூ-முகப்பொலிவு.]

கோள்களால் திசையறிந்து, செலுத்த ஓடுகின்ற உயர்ந்த பாய்மரமுடைய மரக்கலங்கள் கொண்டு வந்து சேர்த்த புதிய பட்டினால், நீண்ட மாடங்கள் நிறையக் கொடிகளைப் புனைந்து கட்டுவாரும், கோடிப் படை வீரருடைய அரசனைக் காண்பதற்கு, பொன்னணிகள் மின்ன செம்பொன் கொடி போல வளைந்து அவன் முன்

தொழுவாருமாக மகளிர் நிறைந்தனர். அம்பெய்யும் வலிய வில்லேந்திய, பொற்கழல் அணிந்த வீர மறவர்கள் திறத்தைப் போற்றி, இவர்கள் இந்த உலகத்தையே கைப்பற்றினாலும் இவர்க்கு நிகரானவர்கள் யார் இருக்கின்றார்கள்? வாசப் புகையூட்டப்பட்ட அழகிய ஆடையணிந்த பெண்ணே என்று தம் தோழியைக் கேட்டு மகளிர், சீவகனைக் கையால் தொழுது நிற்பர். அப்படித் தொழுது நிற்க உடல் மெலிந்து வளைகழன்றோட, அவர் கை வளையைக் காணோம் என்று தவிப்பர். மேகஞ் சூழ்ந்த பெரிய மணிமாடங்கள் மேலிருந்து, வாளின் ஒளியை மழுங்கச் செய்கின்ற நீண்ட கண்ணுடைய அழகிய மகளிர் மலர் பொழிய, மைத்துன மன்னர்கள் பெரிய யானை மீது அமர்ந்து புடை சூழ்ந்துவர, உலாவரும் சீவகன் கருமை நிறந்தோய்ந்த நீலமணி வண்ணனைப் போன்றான். தேனுண்ண வண்டுகள் மொய்த்துப் பாடும் தாமரை மலர்கள், அழகிய செங்கழுநீர்ப் பூக்களோடு சேர்ந்து மலர்ந்து தெருவெங்கும் நிறைந்ததைப் போல பெண்களின் அழகுமிக்க முகமலரும் கண் மலரும் அங்கு எங்கும் நிறைந்தன.

**வீணை வித்தகன் வேந்தடு வீங்குதோள்**
**காணுங் காரிகை யார்கதிர் வெம்முலைப்**
**பூணு மாரமு மீன்றுபொன் பூத்தலர்ந்து**
**யாண ரூரம ராபதி போன்றதே** 2335

[வேந்து-பகையரசர்; அமராபதி-இந்திரலோகம்.]

**தேம்பெய் கற்பகத் தாரவன் சேர்தலும்**
**பூம்பெய் கோதைப் புரிசைக் குழாநலம்**
**ஓம்பு திங்க ளுலந்து சுடர்கண்ட**
**ஆம்பல் ஆய்மலர்க் காடொத் தழிந்ததே** 2336

[சுடர்-சூரியன்; உலந்து-மறைந்து; நலம்-அழகு.]

## வேறு

மாகம் முழக்கின் மணிநாகம் பதைப்ப வேபோல்
ஆகம் மறவ ரகன்கோயில்புக் கம்பொன் மாலைத்
தோகைம் மடவார் துவர்வாய்துடித் தஞ்ச வெம்பா
வேகம் முடைத்தாய் விழியாத்தொழித் தேகு கென்றார்

[நாகம்-பாம்பு; வெம்பா-வெம்பி; விழியா-விழித்து;
தொழித்து-கோபித்து.]

செய்பாவை யன்னார் சிலம்பார்க்கு மென்சீ றடியார்
செய்பூந் தவிசின் மிசையல்லது சேற லில்லார்
மையார்ந்த கண்ணீர் மணிப்பூண்முலை பாய விம்மா
வெய்தா மடவார் வெறுவெங்நிலத் தேகி னாரே 2338

[பூந்தவிசு-பூக்களாலாகிய மெத்தை; விம்மா-விம்மி;
வெய்தா-வெம்மையாக.]

யாழிசையில் தேர்ந்தவனாகிய சீவகனுடைய பகையரசரைக் கொன்றழித்த பருத்த தோள்களைக் கண்டு மகிழும் பெண்கள், தாங்கள் பூமார்பின் மேல் அணிந்துள்ள அழகிய, ஒளிமிக்க பொற்பூணையும் மணியாரத்தையும் தர, எங்கும் பொன் பரந்து இறைந்து கிடக்கும் புது வருவாயுடைய இராசமாபுரம், இந்திரனுடைய அமராவதி பட்டினத்தைப்போல் தோன்றும். இவ்வாறு வெற்றிப் புகழ் விளங்கத் தேன் நிறைந்த கற்பகமாலை யணிந்த சீவகன் அரண்மனையை அடைந்தவுடன், மலர் நிறைந்த மாலையணிந்து மாடத்தின் மேலிருந்த மங்கையர் கூட்டம், இரவில் மகிழ்வித்திருந்த நிலவு மறைந்து, கதிரவன் தோன்றக் கண்டு குவிந்த அல்லிமலர்க் கூட்டத்தைப்போலத் தம் அழகு நலம் வாடி நின்றது. இடியோசை கேட்டு அஞ்சி நடுங்குகின்ற மணியுடைய நாகப்பாம்புகளைப்போல, சீவகனுடைய வெற்றி முழக்கத்தைச் கேட்டு நடுங்கும் கட்டியங்காரனைச் சேர்ந்த மகளிர் இருக்கும் அரண்மனைக்குள் நுழைந்த சீவகனுடைய வீரர்கள், அழகிய பொன்னணி பூண்ட தோகை மயில்

போன்ற அம் மங்கையர்களின் சிவந்த வாய் துடித்து நடுங்க விழித்துப் பார்த்துக் கோபித்து 'விரைந்து இவ்விடத்தை விட்டுச் செல்க' என்று ஆணையிட்டனர். சித்திரப்பாவை போன்ற, சிலம்பொலிக்கும் அழகிய சிற்றடி உடைய, அழகிய பூமலர்ப் பஞ்சணை மேலன்றித் தரையில் பொருந்த நடந்தறியாத அம்மங்கையர், மை யெழுதிய தங்கள் மலர்க்கண்களில் இருந்து வடிகின்ற கண்ணீர் பொற்பூண் அணிந்த மார்பில் பாய்ந்து வழிய விம்மி வருந்தி வேதனைப்பட்டு வெறுந்தரையில் நடந்து சென்றனர்.

**நெருப்புற்ற போல நிலமோந்துழிச் செய்ய வாகிப்**
**பருக்கென்ற கோல மரல்பல்பழம் போன்று கொப்புள்**
**வருத்தம் மிழற்றிப் பசும்பொற்சிலம் போசை செய்யச்**
**செருக்கற்ற பஞ்சி மலர்ச்சீறடி நோவச் சென்றார்** **2339**

[மோந்துழி - பொருந்தியவிடத்து; செருக்கற்ற-வாடின; மலர்-இலவமலர்; பருக்கென்ற-பருத்துக் காட்டின; கொப்புள்-கொப்புளம்; மரல்-கற்றாழை.]

**பொற்பூண் சுமந்து பொருகோட்டை யழித்து வெம்போர்**
**கற்பா னெழுந்த முலையார்களங் கண்டு நீங்கி**
**நற்பூ ணணிந்த முலையார்நிலை கால்ச ரிந்து**
**நெற்றிந் நிறுத்து வடம்வைத்த முலையி னாரும்** **2340**

[அழித்து-கெடுத்து; நிலைகால் சர்ந்து-நிலைதளர்ந்து; நெற்றி நிறுத்து-உச்சியில் ஏந்திய; வைத்த-கிடந்த.]

**செங்காற் குழவி தழீஇயினார்திங்கள் பக்க நீரார்**
**அங்கான் முலையி னரும்பால்வரப் பாயி னாரும்**
**பைங்காசு முத்தும் பவழத்தொடு பைம்பொ னார்ந்த**
**பொங்கார் முலையார் திருமுற்ற நிறைந்து புக்கார்** **2341**

[திங்கள் புக்க நீரார்-ஒரு மாதக் கருவுடையார்; பாயினார்-கருப்ப முற்றியவர்.]

**பெய்யார் முகிலிற் பிறழ்பூங்கொடி மின்னின் மின்னா**
**நெய்யார்ந்த கூந்த லிழற்பொன்னரி மாலை சோரக்**
**கையார் வளையார் புலிகண்ணுறக் கண்டு சோரா**
**நையாத் துயரா நடுங்கும்பிணை மான்க ளொத்தார் 2342**

*[நெய்-புழுகு; நிழல்-ஒளி; சோரா-சோர்ந்து; துயரா-துன்பமுற்று.]*

நெருப்பை மிதித்ததுபோல நிலத்தில் பட்டவுடன் மகளிர் கால்கள் சிவந்தன. பெரிய கற்றாழைப் பழங்களைப் போலக் கொப்புளங்கள் தோன்றி வருத்தின. அவ்வருத்தத்தைக் கூறிப் பாதச்சிலம்புகள் புலம்பி ஒலி செய்ய, வாடி வதங்கிய இலவ மலரைப் போன்று, செம்பஞ்சுக் குழம்பு பூசிய சிற்றடிகள் வருந்தி வாட அம்மகளிர் நடந்து சென்றனர். பொற்பூண் அணிந்த, போரிடத் தக்க யானையின் தந்தக்கொம்பைத் தோற்கச் செய்து, இன்பப்போர் விளைவிக்க எழுந்த இணைமார்புடையவரும், அவ்வின்பப் போரிலே ஈடுபட்டு வென்று பொன்னணி பூண்ட புகழ் மார்புடையவரும், நிலை தளர்ந்து சாய்ந்ததின்மேல் முத்துவடம் புரளும் மார்புடையவரும், செக்கச் சிவந்த சின்னக் கால்களை உடைய குழந்தைகளைத் தூக்கிக் கொண்டிருப்போரும், ஒரு மாதம் நிறைந்த தாய்மை அடைந்தவரும், அழகிய வாசமிகும் அம்மார்பில் இனிய பாலூறச் சூல் முதிர்ந்தவரும், பொற்காசும் முத்தும் பவழமும் பொன்னணிகளும் புனைந்த பருத்த மார்புடைய இளமங்கையரும், ஆகப் பெண்கள் அரண்வாயில் நிறைந்து சென்றனர். பெருமழை பொழியும் கருமுகிலில் தோன்றி மறையும் மின்னல் கொடிபோல் நடுங்கி, வாசநெய் பூசிய அழகிய கூந்தலிலணிந்த பொன்னரி மாலை நழுவி விழ நடந்து செல்லும், கையில் வளையல் அணிந்த அம்மகளிர், புலியைக் கண்டு நடுங்கும் புள்ளிமான் கூட்டத்தைப்போலத் துயருற்று வருந்திச் சோர்ந்தனர்.

**வட்டம் மலர்த்தா ஏவனாலருள் பெற்று வான்பொற்**
**பட்டம் மணிந்தா ளிவர்தங்களுள் யாவ ளென்ன**

மட்டா ரலங்க லவன்மக்களுந் தானு மாதோ
பட்டா ரமருட் பசும்பொன்முடி சூழ வென்றார் 2343

[மட்டு-தேன்; அலங்கல்-மாலை.]

மாலே றனையா னொடுமக்களுக் கஃதோ வென்னா
வேலேறு பெற்ற பிணையின்னனி மாழ்கி வீழ்ந்து
சேலேறு சின்னீ ரிடைச்செல்வன போன்று செங்கண்
மேலேறி மூழ்கிப் பிறந்தாழ்ந்த விறந்து பட்டாள் 2344

[மால்-பெருமை; சின்னீர்-வற்றி அரித்துச் செல்லும் நீர்.]

ஐவாய் அரவி னவிரா ரழல் போன்று சீறி
வெய்யோ னுயிர்ப்பின் விடுத்தேனென் வெகுளி வெந்தீ
மையா ரணல மணிநாகங் கலுழன் வாய்ப்பட்டு
உய்யா வெனநீ ருடன்றுள்ள முருகல் வேண்டா 2345

[அழல்-விடம்; அணலம்-கழுத்து; கலுழன்-கருடன்.]

மண்கேழ் மணியி னுழையுந்துகி னூலின் வாய்த்த
நுண்கேழ் நுசுப்பின் மடவீர் நும்மை நோவ செய்யேன்
ஒண்கேழ்க் கழுநீ ரொளிமுத்த முமிழ்வ தேபோற்
பண்கேழ் மொழியீர் நெடுங்கண்பனி வீழ்த்தல் வேண்டா

[முத்தம்-நீர்த்துளி; மண்-கழுவுதல்; கேழ்-ஒளி.]

'வட்டமாகத் தொடுத்த மலர்மாலை அணிந்த கட்டியங்காரனால் போற்றித் தலைமைப் பட்டம் அளிக்கப்பட்ட மங்கை இவர்களுக்குள் யார்?' என்று சீவகன் தன் ஏவலரை வினவினான். அப்போது போர்க்களச் செய்திகளைக் கட்டியங்காரன் பட்டத் தலைவிக்குக் கூறுகின்றவர், 'தேன் நிறைந்து வழியும் மலர்மாலை அணிந்த கட்டியங்காரனும் அவன் மக்களும் பாவம், தங்கள் மணிமுடி கவிழப் போரில் இறந்து பட்டனர் என்று கூறினர். அது கேட்டு, பெருமை மிக்க ஆணேறு போன்ற மன்னனுக்கும் அவன் மக்களுக்கும் நேர்ந்த கதி இதுவோ என்று, வேலால் தாக்குண்ட பெண்மானைப்போல மயங்கி

விழ்ந்து, சேல்மீன் வற்றி வடிந்த நீர்த்தடத்தில் ஒற்றி ஊர்ந்து செல்வதைப் போலத் தன் சிவந்த கண்கள், மேல் கீழாய் சுழன்று புரள அத்தலைவி உயிர் துறந்தாள்' என்றனர். 'ஐந்து தலையுடைய பாம்பின் கொடிய நஞ்சு போல, நானும் முதலில் கொதித்தெழுந்து கட்டியங்காரனைக் கொன்ற பின் என் பகையையும் சினத்தையும் விட்டு விட்டேன். கரிய நிறமுடைய கழுத்தில் மாணிக்கத்தை உடைய பாம்பு கருடனின் வாய்ப்பட்டால் பிறகு பிழைக்காமல் போவதைப்போல, என்னுடைய பகைமைக்கு ஆளான நீங்களும், இனிப்பிழைத்து வாழ முடியாதென்று வருந்தி அழவேண்டாம். ஆடைக்குள்ளே மறைந்த தூய ஒளிமிக்க மணியைப் போன்ற, நூல் போலும் மெல்லிய, இடையுடைய மங்கையர்களே! உம்மை நான் வருந்தச் செய்யேன். அழகிய நிறமுடைய செழுங்கழுநீர்ப் பூக்கள் சொரியும் முத்துப் போன்ற நீர்த்துளிகளைப் போல, இன்னிசை போலும் நன்மொழி உடையீர், உங்களின் நீண்ட கண்கள் இனிக் கண்ணீர் சிந்தவேண்டாம்.'

**என்னுங்கட்கு உள்ளம் இலங்கீர்வளைக் கையி னீரே**
**மன்னிங்கு வாழ்வு தருதும்மவற் றானும் வாழ்மின்**
**பொன்னிங்குக் கொண்டு புறம்போகியும் வாழ்மி**
**னென்றான்**
**வின்னுங்க வீங்கி விழுக்கந்தென நீண்ட தோளான் 2347**

[ஈர்த்தல்-அறுத்தல்; புறம் போகியும்-வெளியிடங்களிலே சென்றும்; வில்நுங்க-வில்லை விழும்படி; விழு-சிறந்த; கந்து-தூண்.]

**தீத்தும்மும் வேலான் திருவாய்மொழி வான்மு ழக்கம்**
**வாய்த்தங்குக் கேட்டு மடமஞ்ஞைக் குழாத்தி னேகிக்**
**காய்த்தெங்கு சூழ்ந்த கரும்பார்தம் பதிகள் புக்கார்**
**சேய்ச்செந் தவிசூ நெருப்பென்றெழுஞ் சீற டியார் 2348**

[வாய்த்து-வாய்ப்ப; சேய்ச் செந்தவிசும்-மிகச் சிவந்த மெத்தையையும்; எழும்-அங்கு நின்றும் நீங்கும்.]

காதார் குழையுங் கடற்சங்கமுங் குங்கு மமும்
போதா ரலங்கற் பொறையும்பொறை யென்று நீக்கித்
தாதார் குவளைத் தடங்கண்முத் துருட்டி விம்மா
மாதார் மயிலன் னவர்சண்பகச் சாம்ப லொத்தார் 2349

[குழை-குண்டலம்; பொறை-சுமை; முத்து-நீர்த்துளி;
விம்மா-விம்மி.]

ஆய்பொற் புரிசை யணியாரகன் கோயி லெல்லாம்
காய்பொற் கடிகைக் கதிர்க்கைவிளக் கேந்தி மள்ளர்
மேய்பொன் னறையும் பிறவும்விரைந் தாய்ந்த பின்றைச்
சேய்பொற் கமல மகள்கைதொழச் சென்று புக்கான் 2350

[கடிகை-மூங்கிற்றுண்டு; கதிர்-ஒளி; பொன்னறை-
கருவூலம்; மேய்-மேவிய.]

'அறுக்கப்பட்ட வளையல் அணிந்த கையுடைய மங்கையரே! உங்கள் கருத்தைச் சொல்லுங்கள். உம் அரசன் உங்களுக்குத் தந்த வாழ்வுக்குரிய பொருளைத் தருகிறேன். அவற்றைக் கொண்டு வாழ்ந்திருங்கள். அல்லது நான் தரும் பொன்னை எடுத்துச் சென்று, நீங்கள் விரும்புகிற இடத்தில் சென்று வாழ்ந்திருங்கள்' என்று கூறினான் வில் வளைத்துப் பருத்த, சிறந்த கற்றூண் போன்ற தோளுடைய சீவகன். தீ உமிழும் வேலுடைய சீவகனின் இவ்வழகிய வாய்ச் சொல்லாகிய முகில் முழக்கத்தைப் பொருந்திக் கேட்டு, மயில் கூட்டம் போல ஒன்றாகச் சென்று, காய்த் தென்னையும், கரும்புஞ் சூழ்ந்த தம் நகரங்களை அடைந்தனர், மிகச் சிவந்த பட்டு மெத்தைப் படுக்கையையும், நெருப்பென்று கருதி நீக்கும் சிற்றடியுடைய அப்பெண்கள். காதில் அணிந்த குழையும், கடற் சங்கினால் செய்த வளையும் மோதிரமும், குங்குமமும், பூந்தாதவிழும் மலர் நிறைந்த மாலையும் வழி நடக்கச் சுமையாகும் என்று கருதி நீக்கி விட்டு, தேன் நிறைந்த குவளை மலரைப் போன்ற கண்கள் முத்துப் போலும் கண்ணீர் சிந்தி விம்மியழ,

காதல் மயில் போலிருந்த அம்மங்கையர் வாடி உலர்ந்த செண்பகப்பூப் போலாயினர். இவ்வாறு மங்கையர்கள் அரண்மனையை விட்டுச் சென்றிட, சிறந்த, பொன்னாலான, மதில் சூழ்ந்த, பரந்த அழகிய அவ்வரண்மனை எங்கும், காய்ந்த பொற் தண்டுகளில் ஏற்றி வைத்த கைவிளக்கை வீரர்கள் ஏந்தி, பொன்னிருக்கும் கருவூலத்தையும், பிற இடங்களையும் ஆராய்ந்து காப்பிட்ட, பின் சிவந்த பொற்றாமரையில் வாழும் திருமகள் கைதொழுது வணங்கச் சீவகன் அரண்மனைக்குள் நுழைந்தான்.

முலையீன்ற பெண்ணைத் திரள்தாமங்கள் தாழ்ந்து முற்றும்
மலையீன்ற மஞ்சின் மணிப்பூம்புகை மல்கி விம்மக்
கலையீன்ற சொல்லார் கமழ்பூவணைக் காவல்
கொண்டார்
கொலையீன்ற வேற்கண் ணவர்கூடிய மார்பற் கன்றே

[பெண்ணை-பனை; மஞ்சு-வெண்மேகம்; பூவணை-பூவாலாகிய படுக்கையை; கண்ணவர்-மகளிர்.]

போர்க்கோல நீக்கிப் புகழ்ப்பொன்னி னெழுதப் பட்ட
வார்க்கோல மாலை முலையார்மண் ணுறுப்ப வாடி
நீர்க்கோலஞ் செய்து நிழல்விட்டுமிழ் மாலை மார்பன்
தார்க்கோல மான்தேர்த் தொகைமாமன் தொழுது
சொன்னான் 2352

[வார்-கச்சு; கோலம்-அலங்காரம்; நிழல்-ஒளி; தார்-படை.]

எண்கொண்ட ஞாட்பி னிரும்பெச்சிற் படுத்த மார்பர்
புண்கொண்டு போற்றிப் புறஞ்செய்கெனப் பொற்ப
நோக்கிப்
பண்கொண்ட சொல்லார் தொழப்பாம்பணை அண்ணல்
போல
மண்கொண்ட வேலா னடிதைவர வைகி னானே 2353

[எண்கொண்ட ஞாட்பின்-எண்ணு தலைக் கொண்ட பழைய போர்களைப்போல; தைவர-தடவ.]

பெண்களின் மார்பைப் போன்ற காய்கள் விளையும் பனைமரம் போலும் பெரிய தாமமாலைகள் தவழ, அரண் மனை மேல்மாடமெல்லாம், மலை சூழ்ந்து கிடக்கும் மேகத்தைப் போல வாச நறும்புகை நிறைந்து வழிய, கொலை வல்ல வேல் போலும் கண்ணுடைய மங்கையர் மணாளனாகிய சீவகனுக்கு, கலை மலிந்த சொல்லுடைய பெண்கள் கூடி வாசமிகு அவன் மலரணையைக் காவல் காத்து நின்றனர். தன்னுடைய போர்க் கோலத்தை நீக்கி விட்டு, சிறந்த பொன்னாலாக்கிய வார்க்கச்சு அலங்கரிக்க மாலை தவழும் மார்புடைய மங்கையர், நீராட்ட, நீராடி, அணிமணி பூண்டு, ஒளிவீசித்திகழும் முத்துச்சரம் அணிந்து, சீவகன் கொடிப் படையும் தேர்ப்படையும் உடைய தன் மாமனைத் தொழுதான் 'என்றும் நினைவிலிருக்கத்தக்க இப்போரில் படைக்கலங்களால் புண்படுத்தப்பட்ட மார்புடைய வீரர்களின் விழுப்புண்ணைப் போற்றி அவர் வீரத்தைத் காத்தருளுவீராக' என்று தன் மாமனிடம் கூறி அவ்வீரர்களை அன்போடு பார்த்தான். இன்னிசைப் பண்போலும் இனிய மொழி பேசும் மங்கையர் வணங்கித் திருவடி தடவப் பாம்பணைப் பள்ளியில் துயில் கொள்ளும் திருமாலைப் போலச் சீவகன் உறங்கினான்.

## வேறு

**வாள்க ளாலே துகைப்புண்டு வரைபுண் கூர்ந்த**
**போல்வேழம்**
**நீள்கால் விசைய நேமித்தேர் இமைத்தார் நிலத்திற்**
**காண்கலாத்**
**தாள்வல் புரவி பண்ணவிழ்த்த யானை யாவித் தாங்கன்ன**
**கோள்வா யெஃக மிடம்படுத்த கொழும்புண் மார்ப ரயா**
**வுயிர்த்தார் 2354**

[கால் - காற்று; எஃகம்-வாள்; அயாவுயிர்த்தார்- இளைப்பாறினார்; கூர்ந்த-மிகுந்த.]

**கொழுவாய் விழுப்புண் குரைப்பொலியுங் கூந்தன் மகளிர் குழைசிதறி**
**அழுவா ரழுகைக் குரலொலியு மதிர்கண் முரசின் முழக்கொலியும்**
**குழுவாய்ச் சங்கின் குரலொலியுங் கொலைவல் யானைச் செவிப்புடையும்**
**எழுவார் யாழு மேத்தொலியு மிறைவன் கேளாத் துயிலேற்றான் 2355**

*[கேளா - கேட்டு; துயிலேற்றான்-தூக்கத்தினின்றும் விழித்தான்.]*

**தொடித்தோண் மகளி ரொருசாரார் துயரக் கடலு ளவர்நீந்த**
**வடிக்கண் மகளி ரொருசாரார் வரம்பி லின்பக் கடனீந்தப்**
**பொடித்தான் கதிரோன் திரைநெற்றிப் புகழ்முப் பழநீர்ப் பளிங்களைஇக்**
**கடிப்பூ மாலை யவரேந்தக் கமழ்தா மரைக்கண் கழீஇயினான் 2356**

*[பொடித்தல் - தோன்றுதல்; அளைஇ - கலந்து; பளிங்கு-கருப்பூரம்.]*

வாளால் வெட்டப்பட்டதனால் மலையில் புண் உண்டானதைப் போன்ற யானையும், பெருங்காற்றைப் போல் விரைந்து செல்லும் தேரும், கண்ணிமைக்கும் நேரத்தில் தரையில் காணமுடியாது பறக்கின்ற குதிரைகளும், வாய் பிளந்து யானை கொட்டாவி விட்டதைப் போல, கொல்லும் வாள் பிளக்கப் பெரும் புண்பெற்ற மார்புடைய வீரரும் இளைப்பாறத் துயின்றனர். இன்ப வேதனை தரும் விழுப்புண் வழியே காற்றுப் புகுந்துவரும் ஒலியும் இறந்த வீரருடைய மகளிர் கூந்தல் கலையக் காதுக் குழையைக் கழற்றி எறிந்துவிட்டு அழுகின்ற ஒலியும், வெற்றி முழக்கும் முரசு முழங்கும் ஒலியும், திரண்டு குவிந்த வாயுடைய சங்கு முழங்க எழுந்த ஒலியும், புண்பட்டு

நொந்த யானைகள் காதை அடித்துக்கொள்வதால் எழு கின்ற ஒலியும், யாழ்மீட்டும் பாட்டொலியும், வீரத்தைப் போற்றி முழக்கும் வாழ்த்தொலியும் கேட்டவாறு சீவகன் துயின்றான். போரில் இறந்த வீரர்களின் மகளிராகிய, வளையணிந்த தோளுடைய பெண்கள் துயரக் கடலில் நீந்தவும், போரில் வென்று மீண்ட புகழுடையவருடைய மாவடுப் போலும் கண்ணுடைய மங்கையர், எல்லை யில்லாத இன்பக் கடலில் நீந்தவும், அலைகடல் மேலே செங்கதிரோன் தோன்றி எழுந்தான். சிறப்புமிக்க முப்பழங்களான கடு, நெல்லி, தான்றி ஆகியவற்றை ஊற வைத்த நீரிலே கற்பூரத்தைக் கலந்து, மணமிக்க மலர் நிறைந்த மாலையணிந்த மகளிர் ஏந்தத் தாமரை மலர் போலும் கண்களைச் சீவகன் அந்நீரால் கழுவிக் கொண்டான்.

முனைவற் றொழுது முடிதுளக்கி முகந்து செம்பொன் கொளவீசி
நினைய லாகா நெடுவாழ்க்கை வென்றிக் கோல விளக்காகப்
புனையப் பட்ட அஞ்சனத்தைப் புகழ வெழுதிப் புனைபூணான்
கனைவண் டார்க்கு மலங்கலுங் கலனு மேற்பத் தாங்கினான் 2357

[துளக்கி-வணங்கி; நெடுவாழ்க்கை-அரசச் செல்வம்; அஞ்சனம்-மை.]

முறிந்த கோல முகிழ்முலையார் பரவ மொய்யார் மணிச்செப்பில்
உறைந்த வெண்பட் டுடுத்தொளிசேர் பஞ்ச வாசங் கவுட்கொண்டு
செறிந்த கழுநீர்ப் பூப்பிடித்துச் சேக்கை மரீஇய சிங்கம்போல்
அறிந்தார் தமக்கு மங்கனாய் அண்ணல் செம்மாந் திருந்தானே 2358

[முறிந்த-தளிர்த்த; சேக்கை-ஆசனத்தில்; மரீஇய-பொருந்திய.]

**வார்மீ தாடி வடஞ்சூடிப் பொற்பார்ந் திருந்த**
**வனமுலையார்**
**ஏர்மீ தாடிச் சாந்தெழுதி இலங்கு முந்நீர் வலம்புரிபோற்**
**கார்மீ தாடிக் கலம்பொழியுங் கடகத் தடக்கைக்**
**கழலோனைப்**
**போர்மீ தாடிப் புறங்கண்ட புலால்வேன் மன்னர்**
**புடைசூழ்ந்தார் 2359**

*[வார்-கச்சு; கார் மீதாடி-மேகத்தை வென்று; ஏர்-அழகு.]*

கண்விழித் தெழுந்த சீவகன் அருகனைத் தொழுது தலைவணங்கி, செம்பொன்னை அள்ளி எல்லாரும் கொள்ளக் கொடுத்து, நெஞ்சால் நினைக்க முடியாத பெருஞ் செல்வத்திற்கும், வெற்றிப் புகழுக்கும் விளக்கமாக அமையும்படி கையால் அஞ்சன மையைக் கண்களில் அழகுற எழுதி, பொற்பூண் புனைந்து, வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும் மலர் மாலையும் பொன்னணிகளும் அணிந்து கொண்டான். நிறைந்த அழகு நலங்காட்டும் மார்புடைய மங்கையர் வணங்க, மணிகள் வைத்துப் பதித்த சிமிழில் இருந்த வெண் பட்டுடையை அணிந்து ஒளிமிக்க ஐந்து முகவாசம் கன்னத்தில் அடக்கிக் கொண்டு, அழகிய செழுங்கழுநீர் மலரைக் கையிலே பிடித்து, ஆண்மை மிக்க சிங்கம் போல் அரியாசனத்தில் அமர்ந்து, கண்டவர் மயங்கக் காமனைப்போல் சீவகன் வீற்றிருந்தான். மார்புக் கச்சினை மீறிப் பருத்த, முத்துமாலை அணிந்த, அழகுற அணி செய்யப்பட்ட முலை உடைய மகளிர் அழகு மேம்படச் சாந்தை எழுதி, பாற்கடலில் பிறந்த சங்குநிதி போல், முகிலைப் பழிக்கும்படி பொற்கலன்களைப் பொழிகின்ற, பொற்கடகம் அணிந்த கையும் வீரக்கழல் அணிந்த காலும் உடைய சீவகனை, போரிலே வென்று பகைவரைப் புறங்கொள்ளச் செய்த வேல் மன்னர் வந்து சூழ்ந்தனர்.

## வேறு

**தொல்லை நால்வகைத் தோழருந் தூமணி நெடுந்தேர்**
**மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்**
**செல்வன் தாதையுஞ் செழுநக ரொடுவள நாடும்**
**வல்லைத் தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே**

*[தொல்லை-பழமை; மல்லல்-வளம்; மதுவிரி-தேன் பரவுகின்ற; வல்லை-விரைய.]*

**துளங்கு வெண்மதி யுகுத்தவெண் கதிர்தொகுத் ததுபோல்**
**விளங்கு வெள்ளியம் பெருமலை யொழியவந் தெழிலார்**
**வளங்கொண் மாநகர் மழகதிர் குழீஇயின போலக்**
**களங்கொண் டீண்டினர் கதிர்முடி விஞ்சையர் பொலிந்தே**

*[உகுத்த-சொரிந்த; ஒழிதல்-தங்குதல்; களம்-இடம்.]*

**எண்ண மென்னினி யெழின்முடி யணிவது துணிமின்**
**கண்ண னாரொடு கடிகையும் வருகென வரலும்**
**பண்ணி னார்முடி பழிச்சிய மணிபொனிற் குயிற்றி**
**அண்ண லாய்கதி ரலம்வரப் புலமக ணகவே** **2362**

*[வரலும்-வந்தவுடன்; குயிற்றி-அழுத்தி; அலம்வர-சுழல.]*

அந்நிலையில் நெடுநாள் பழகி உறவான நான்கு தோழர்களும், அழகிய மணிகள் இழைத்த பெரிய தேருடைய சிறந்த தம்பியும், மாமன் கோவிந்தனும், தேன் நிறைந்து வழியும் மலர்மாலையணிந்த சீவகனுக்குத் தந்தையாகிய கந்துக்கடனும், செல்வச் சிறப்பு மிக்க ஊரோடு வளமிக்க நாடும் அவ்வரண்மனையில் ஒருங்கே வந்து நிறைந்தது. நீந்தி ஓடும் வெண்ணிலவின் கதிர் களைப் பிடித்துத் தேக்கி வைத்ததைப் போல விளங்கும் பெரிய வெள்ளி மலையை விட்டிறங்கி வந்து, அழகிய வளமிக்க இராசமாபுரத்திலே இளங்கதிர்ச் சூரியன் தங்கிய தைப் போல மிக்க பேரொளிவீசும் மணிமுடி புனைந்த வித்தியாதரர் யாவரும் அங்கு வந்து நிறைந்தனர். இனி

மேலும் எண்ணுவதற்கு என்ன இருக்கிறது? முடி சூட்டுவதைப் பற்றிச் சிந்தியுங்கள் என்று அரசர்கள் அமைச்சர்களை நோக்கிக் கூற, புரோகிதரும் நிமித்தம் கூறுவாரும், புகழ்க் கதிர் பரவவும், பூமகள் மகிழவும், தேர்ந்தெடுத்த அழகிய மாணிக்க மணிகளைப் பொன்னிலே அழுத்தித் திருமுடி செய்து வருகவென் றழைக்க எல்லாரும் வந்து நிறைந்தனர்.

**விரியு மாலையன் விளங்கொளி முடியினன் துளங்கித்**
**திருவின் மால்வரைக் குலவிய தனையதோர் தேந்தார்**
**அருவி போல்வதோ ராரமு மார்பிடைத் துயல**
**எரியும் வார்குழை யிமையவ னொருவன்வந் திழிந்தான்**

*[துயல-அசைய; எரியும்-விளங்கும்; இழிந்தான்-இறங்கினான்.]*

**கொம்மை யார்ந்தன கொடிபட வெழுதின குவிந்த**
**அம்மை யார்ந்தன அழகிய மணிவட முடைய**
**வெம்மை செய்வன விழுத்தகு முலைத்தட முடைய**
**பொம்மெ லோதியர் பொழிமின்னுக் கொடியென விழிந்தார்**

*[கொம்மை - வட்டம்; கொடி - தொய்யிற்கொடி; அம்மை-அழகிய கருமை; வெம்மை-விருப்பம்; தடம்-உயர்ந்த இடம்.]*

**மையல் யானையின் படுமதங் கெடப்பகட் டரசன்**
**செய்த மும்மதம் போற்றிசை திசைதொறுங் கமழும்**
**தெய்வ வாசத்துத் திருநகர் வாசங்கொண் டொழிய**
**வெய்யர் தோன்றினர் விசும்பிடைச் சிறப்பொடும்**
**பொலிந்தே 2365**

*[மையல் - மயக்கம்; பகட்டரசன் - யானைகளுக்குத் தலைவனான யூதநாதன்.]*

வானவில் மாலையாக மாறி ஒரு மலையோடு பொருந்தியதைப் போலத், தேன் வழியும் ஒரு மலர் மாலையும், அம்மலையில் இருந்து பாயும் நீர் அருவியைப் போல ஒரு முத்தாரமும் மார்பில் புரள, ஒளி விளங்கும்

மேனி வனப்பும், மணிமுடியும் உடைய, பொன்னொளி வீசித்திகழும் நீண்ட காதுக் குழையணிந்த வானவன் ஒருவன், (சுதஞ்சணன்) வந்து இறங்கினான். பருத்துத் திரண்ட, தொய்யில் கொடிகள் எழுதிய குவிந்த, கரிய கண்ணுடைய, அழகிய முத்து வடம் புரள்கின்ற, இன்பூட்டுகின்ற, சிறந்த அழகிய மார்பும், நிறைந்த மென் கூந்தலும் உடைய அவன் தேவியர், ஒளிபொழியும் மின்னல் கொடிபோல அவனோடு கூடவே விண்ணி லிருந்தும் இறங்கினர். மயக்க மிக்க யானையின் மதம் கெடும்படி களிற்றரசன் உண்டாக்கிய மதத்தைப் போல, திசைதோறும், நோக்கும் இடமெல்லாம், அவ்வானவர் மண்ணில் வந்திறங்க உண்டான தெய்வீக மணத்தாலே, அவ்வழகிய நகரின் இயற்கையான வாசம் அடங்க, விஞ்சையர் வந்து தோன்றினர். விண்ணும் மண்ணும் பொலிவுபெற்றுச் சிறந்து திகழ்ந்தது.

**வெருவி மாநகர் மாந்தர்கள் வியந்துகை விதிர்ப்பப்**
**பருதி போல்வன பாற்கட னூற்றெட்டுக் குடத்தாற்**
**பொருவில் பூமழை பொன்மழை யொடுசொரிந் தாட்டி**
**எரிபொ னீண்முடி கவித்தனன் பவித்திரற் றொழுதே 2366**

[வெருவி-அச்சமுற்று; பொரு-ஒப்பு; பவித்திரன்-தூயவன்.]

**தேவ துந்துபி தேவர்கட்கு ஓகையுய்த் துரைப்பான்**
**ஆவி யம்புகை யணிகிளர் சுண்ணமோ டெழுந்த**
**நாவி னேத்தின ரரம்பையர் நரம்பொலி யுளர்ந்த**
**காவன் மன்னருங் கடிகையுங் கடவது நிறைத்தார் 2367**

[நரம்பு-வீணையின் நரம்பு; ஒலி-மிடற்றுப்பாட்டின் ஒலி; கடவது-கடமையை; ஓகை-மகிழ்ச்சி.]

**திருவ மாமணிக் காம்பொடு திரள்வடந் திளைக்கும்**
**உருவ வெண்மதி யிதுவென வெண்குடை யோங்கிப்**
**புரவை மாநில மளித்தது களிக்கயன் மழைக்கட்**
**பொருவில் பூமகட் புணர்ந்தன இமையவ**
**னெழுந்தான் 2368**

[திளைக்கும்-இடைவிடாமல் தங்கும்; உருவம்-அழகு; பரவை-கடல்; களி-மகிழ்வு.]

அப்பெருநகரில் உள்ள மக்கள் எல்லாரும் கண்டஞ்சி வியக்கும்படி, பொன் பருதி போன்ற நூற்றியெட்டுப் பொற்குடத்தில் பாற்கடலில் இருந்து கொண்டுவந்த நந்நீரால் நீராட்டி, ஒப்பற்ற பூமழையும் பொன்மழையும் மேலிருந்து பொழிய, தூயவனாகிய சீவகனை வணங்கி, ஒளிவிடும் அழகிய மணிமுடியை, சுதஞ்சனன் அவன் தலையில் சூட்டினான். அப்போது தேவதுந்துபிகள் முழங்கி, இம்மங்கலச் சேதியை ஓமப் புகையோடும் அழகு விளங்கும் சுண்ணப் பொடியோடும் எடுத்துச் சென்று வானவர்க்குக் கூறின. வான மங்கையர் வாழ்த்துகள் கூறினர். வீணையின் நரம்புகள் இன்னிசை மீட்டின. காவல் மன்னர் காணிக்கை செலுத்தினர். கடிகையர் மங்கலம் பாடினர். அழகிய மாணிக்க மணிக்காம்பிலே கோத்த முத்துவடம் பொருந்த விளங்கும் அழகிய வட்ட நிலா இது வென்று சொல்லுமாறு உயர்ந்த, வெண் கொற்றக் குடை அணி செய்தது. கடல் சூழ்ந்த இந்நில உலகைக் காத்தளித்து, மகிழ்வூட்டும் கயல் போலும் குளிர்ந்த கண்ணுடைய நிலமகளைத் தழுவிச் சீவகன் அரசாளத் தொடங்கினான். சுதஞ்சணனும் தன் பொன் னுலக்குப் புறப்பட்டுச் சென்றான்.

### வேறு

**மின்னுங் கடற்றிரையின் மாமணிக்கை வெண்கவரி**
**விரிந்து வீசப்**
**பொன்னங் குடைநிழற்றப் பொன்மயமா முழைக்கலங்கள்**
**பொலிந்து தோன்ற**
**மன்னர் முடியிறைஞ்சி மாமணியங் கழலேந்தி**
**யடியீ டேத்தச்**
**சின்ன மலர்க்கோதைத் தீஞ்சொலார் போற்றிசைப்பத்**
**திருமால் போந்தான் 2369**

[நிழற்ற - நிழல்தர; உழைக்கலம் - ஆளும் பாத்தி ரங்கள்.]

**மந்தார மாமாலை மேற்றொடர்ந்து தழுவவராத் தாம மல்கி**
**அந்தோவென் றஞ்சிறைவண்டு ஏக்கற இன்புகைபோய்க் கழுமி யாய்பொற்**
**செந்தா மரைமகளே யல்லதுபெண் சாராத திருவின் மிக்க**
**சிந்தா மணியேய்ந்த சித்திரமா மண்டபத்துச் செல்வன் புக்கான் 2370**

[கழுமி-செறிந்து; ஏக்கற-ஏக்கமுற.]

**பைங்க ணுளையெருத்திற் பன்மணி வாளெயிற்றுப் பவள நாவிற்**
**சிங்கா சனத்தின்மேற் சிங்கம்போற் றேர்மன்னர் முடிகள் சூழ**
**மங்குன் மணிநிற வண்ணன்போல் வார்குழைகள் திருவில் வீசச்**
**செங்கட் கமழ்பைந்தார்ச் செஞ்சுடர்போல் தேர்மன்னன் இருந்தா னன்றே 2371**

[உளை-பிடரிமயிர்; மங்குல்-மேகம்.]

ஒளி வீசும் பாற்கடலின் அலை போல, அழகிய மணிகள் இழைத்த வெண்கவரி விரிந்து வீச, அழகிய பொற்குடை நிழல் தர, பொன்னாலான மற்ற கலங்கள் எல்லாம் அருகிருந்து அழகு செய்ய, சிற்றரசர்கள் அடிபணிந்து சீவகன் மணிக்கழலைத் தலையிலே தாங்கிப் போற்ற, விடுபூவும் மாலையும் அணிந்த இன்மொழி மங்கையர் போற்றிகள் கூறச் சீவகன் சித்திர மண்டபத் துக்குப் புறப்பட்டான். மந்தார மலர்மாலை மேலணிந்து, தழுவமுடியாத பெரிய மற்ற மலர் மாலை களையும் சூடி, அம்மாலைகளின் தேனை உண்ண முடியாது வருந்தி அந்தோ, என்று வண்டுகள் ஏங்கும்படி, இனிய நன் மணப் புகை நிறைந்த, அழகிய பொன்னா லான செந்தாமரை மலர் மேலுள்ள திருமகளே அல்லாது வேறு பெண் சேராத செல்வச் சிறப்புமிக்க சிந்தா மணியின் தன்மை பொருந்திய, ஓவியம் எழுதிய சித்திர

மண்டபத்துக்குள் சீவகன் நுழைந்தான். பசிய மணிக் கண்களையும், பிடரி மயிருடைய கழுத்தையும், பல மணிகளாற் செய்தமைத்த கூரிய பற்களையும் பவளத்தாலான நாவினையும் உடைய சிம்மாசனத்தின்மேல், சிங்கம் போன்ற வலிமையும் தேருமுடைய மன்னர்களின் மணி முடிகள் சூழ, கருமுகிலையும் நீலமணியையும் போன்ற நிறமுடைய திருமாலை ஒத்த சீவகன், காதுக்குழை ஒளி வீச, சிவந்த கண்களும் வாசமிகு மாலையும் உடைய சூரியனைப் போல வீற்றிருந்தான்.

## வேறு

வார்பிணி முரச நாண வானதிர் முழக்க மேய்ப்பத்
தார்பிணி தாம மார்பன் தம்பியை முகத்துள் நோக்கி
ஊர்பிணி கோட்டஞ் சீப்பித் துறாதவ னாண்ட நாட்டைப்
பார்பிணி கறையி னீங்கப் படாமுர சறைவி
யென்றான் 2372

*[படா ஒலி அடங்காத; சீப்பித்து-இடிப்பித்து.]*

கடவுள ரிடனுங் காசில் கணிபெறு நிலனுங் காமர்
தடவளர் முழங்குஞ் செந்தீ நான்மறை யாளர் தங்கள்
இடவிய நிலத்தோ டெல்லா மிழந்தவர்க் கிரட்டி யாக
உடனவை விடுமி னென்றா னொளிநிலா வுமிழும் பூணான்

*[காசில்-குற்றமற்ற; தடம்-ஓமகுண்டம்; இடவிய-பரந்த.]*

என்றலுந் தொழுது சென்னி நிலனுறீஇ யெழுந்து போகி
வென்றதிர் முரசம் யானை வீங்கெருத் தேற்றிப் பைம்பொற்
குன்றுகண் டனைய கோலக் கொடிநெடு மாட மூதூர்ச்
சென்றிசை முழங்கச் செல்வன் திருமுர சறைவிக்
கின்றான் 2374

*[எருத்தம்-கழுத்து; இசை-புகழ்.]*

வாரால் கட்டப்பட்ட முரசின் ஒலி தோற்கவும் வான் இடிமுழக்கத்தை ஒப்பவும் மாலைகள் நிறைந்த மார்புடைய சீவகன், தம்பி நந்தட்டன் முகத்தைப்

பார்த்து, 'ஊரிலுள்ளவரைப் பிணித்து வைத்திருக்கும் சிறைக் கோட்டங்களையெல்லாம் தகர்த்து, நம் பகைவன் ஆண்ட நாட்டு மக்களை வருத்தும் அரசிறையிலிருந்தும் பதினாறு ஆண்டுக்காலம் விலக்க முரசறையச் செய்வாய்' என்றான். அத்தோடு ஒளியுமிழும் பொற்பூண் அணிந்த சீவகன், 'கோவிலுக்கு இறையிலியாக விட்ட நிலமும், குற்றமற நிமித்தம் கூறும் கணிகள் பரிசாகப் பெற்ற நிலமும், அழகிய ஓமத்தீ வளர்க்கும் வேதியர்க்குத் தானமாகத் தந்த நிலத்தோடும், மற்றும் முன்பு பெற்று இழந்தவர்களுக்கு அதைப்போல இருபங்கு நிலமும் இறையிலியாக விடுக' என்று அமைச்சருக்கு ஆணையிட்டான். சீவகன் இது கூறியதும், நந்தட்டன் தலைமுதல் அடி தோயத் தரையிலே விழுந்து சீவகனை வணங்கிச் சென்று, வெற்றி முழக்கும் முரசை யானையின் பெரிய பிடரியிலே ஏற்றி, புதிய பொன்னாலான மலையினைப் போன்ற அழகுடைய, கொடியும் நீண்ட மாடங்களும் அணி செய்யும் இராசமாபுரத்தில் எங்கும் இன்னிசை முழங்கப் பொன் முரசை, வள்ளுவனைக் கொண்டு அறைவித்தான்:

**ஒன்றுடைப் பதினை யாண்டைக் குறுகட னிறைவன் விட்டான்**
**இன்றுளீ ருலகத்து என்றும் உடனுளீ ராகி வாழ்மின்**
**பொன்றுக பசியு நோயும் பொருந்தலில் பகையு மென்ன**
**மன்றல மறுகு தோறு மணிமுர சார்த்த தன்றே 2375**

[ஒன்றுடைப் பதினையாண்டைக்கு — பதினாறு ஆண்டுகளுக்கு; கடன்-வரி; மன்றல மறுகு-மணத்தையுடையனவாகிய வீதிகள்.]

**நோக்கொழிந் தொடுங்கி னீர்க்கும் நோய்கொளச் சாம்பி னீர்க்கும்**
**பூக்குழன் மகளிர்க் கொண்டான் புறக்கணித் திடப்பட் டீர்க்கும்**

**கோத்தரு நிதியம் வாழக் கொற்றவன் நகரோ டென்ன**
**வீக்குவார் முரசங் கொட்டி விழுநக ரறைவித் தானே**

[நோக்கு-பார்வை; சாம்புதல்-சோர்தல்; நகர்-வீடு.]

**திருமக னருளப் பெற்றுத் திருநிலத் துறையு மாந்தர்**
**ஒருவனுக் கொருத்தி போல உளமகிழ்ந் தொளியின் வைகிப்**
**பருவரு பகையு நோயும் பசியுங்கெட் டொழிய விப்பால்**
**பெருவிறல் வேந்தர் வேந்தற் குற்றது பேச லுற்றேன்**

[பருவரு-துன்பந்தரும்; விறல்-வலிமை.]

'இன்று முதல் பதினாறு ஆண்டுகளுக்கு அரசன் வரிவிலக்களித்திருக்கிறான். இப்போது உள்ள நீவீர் எல்லாம், எப்போதும் இது போலவே உலகத்தோடு பொருந்தி வாழ்வீராக! மக்களை வருத்தும் பசியும் பிணியும் பொருந்தாப் பகையும் போயொழிக', என்று அழகிய அந்நகரின் தெருக்கள் தோறும் முரசுகள் முழங்கின. மேலும் 'கண் பார்வை குன்றித் தளர்ந்த வர்க்கும், நோயுற்று மெலிந்தவர்க்கும், பூ முடித்த கூந்தலுடைய பரத்தையரைச் சேர்ந்த கணவனால் புறக்கணிக்கப்பட்டவர்க்கும் வாழ்வதற்கு மனையும் பெருநிதிச் செல்வமும் வேந்தன் தருவான்' என்று, அப்பெருநகர் எங்கணும் வார் முரசம் அறைந்து தெரி வித்தான். இவ்வாறு அரசன் அருள் சொரிந்து காக்க, அவனுடைய திருநாட்டில் வாழும் மக்கள் ஒருவனும் ஒருத்தியும் போல மனமகிழ்ந்து, புகழோடு பொருந்தி, பகைப்பிணியும், பசித்துயரும், நோய்த்துன்பமும் இல்லாது வாழ்ந்திருக்க, இனி, பேராற்றலுடைய மன்னர் மன்ன னாகிய சீவகனுக்கு நேர்ந்ததை சொல்லத் தொடங்கி னேன்.

**(பூமகள் இலம்பகம் முற்றிற்று)**

# 12. இலக்கணையார் இலம்பகம்

## வேறு

அலங்க லேந்திய குங்கும வருவரை மார்பன்
கலந்த காரிகை யவர்களைத் தருகென வருள
இலங்கு மாலைவெள் ளருவிய எழில்வரை மணந்த
புலம்பு நீள்சுரம் போய்க்கொணர்ந் தருளொடுங்
கொடுத்தார் 2378

*[மணந்த-கலந்த; புலம்பு-வருத்தம்; சுரம்-காட்டு வழி.]*

மோடு கொண்ணிலா முளைத்தெழு பருதிகண் டறியாப்
பாடு வண்டொடு பறவையு நடுக்குறுங் காப்பின்
மாட மாமணிச் சிவிகையின் மயிலென விழிந்தார்
வீடு கண்டவர் போன்றுமின் னிடுகொடி யனையார் 2379

*[மோடு-பெருமை; வீடு-மோட்சம்.]*

அன்று சூடிய மாலைய ராடிய சாந்தர்
பொன்றி வாடிய மேனியர் பொன்னிறை சுருங்கார்
சென்று காதலன் திருவிரி மரைமல ரடிமேல்
ஒன்றி வீழ்ந்தனர் குவளைக்க ணுவகைமுத் துகவே 2380

*[மரைமலர்-தாமரை மலர் போன்ற; உவகை முத்து-ஆனந்தக் கண்ணீர்.]*

இலங்கு பூண்வரை மார்புற வெடுத்தவன் முயங்க
மலங்கி வாட்கண்கள் வருபனி சுமந்துடன் வெருவிக்
கலங்கு நீரிடைக் கலக்குறு கருங்கய லிணைபோற்
புலம்பி யோடின செவுயுற நெடியன பொலிந்தே 2381

[வரு பனி-கண்ணீர்; வெருவி-பயந்து; மலங்கி-கலங்கி.]

மலர்மாலை சூடிய, குங்கும மலைபோலும் மார்புடைய சீவகன், தான் மணம் புரிந்து கொண்ட மங்கையரைக் கொண்டு வந்து சேர்ப்பீராக என்று தம்பியரைப் பணிக்க, அவரும் மாலையணிந்தது போல் வெள்ளருவிகள் பாய்ந்தோடும் அழகிய மலைகள் சூழ்ந்த, அஞ்சத்தக்க காட்டு வழியைக் கடந்து சென்று அவரை அழைத்து வந்தனர். புகழ் மிக்க நிலவையும் கடலிடைத் தோன்றி எழும் கதிரவனையுங் கண்டறியாத, பாடும் பறவைகளும் வண்டும் கூடச் சென்றடைய அஞ்சுகின்ற, காவலுடைய மாடம் போன்ற பெரிய மணிப் பல்லக்கிலிருந்து மயிலைப் போல இறங்கி வந்தனர், பேரின்ப வீட்டுலகம் கிடைக்கப் பெற்றவரைப் போல மகிழ்ச்சி கொண்ட அவன் மனைவியர். சீவகன் தங்களைப் பிரிந்த அன்று சூடிய மாலையோடும், மேலே பூசிய சாந்தொடும், சோகத்தால் வாடி மெலிந்த மேனிப் பொலிவோடும், சொக்கத் தங்கம் போலக் குன்றாக் கற்பின் வலிவோடும் வந்த அவர்கள், சீவகனுடைய தாமரை மலர் போன்ற பாதங்களில், குவளை மலர்போலும் தங்கள் கண்களில் இருந்து ஆனந்தக் கண்ணீர் சொரிய ஒன்றாக விழுந்து வணங்கினர். அப்படி விழுந்து வணங்கிய அவரைப் பொற்பூண் அணிந்த மலைபோலும் தன் மார்போடு சீவகன் எடுத்துத் தழுவிக் கொண்டான். அவன் பிரிவை எண்ணிக் கலங்கிப் பெருக்கிய கண்ணீர் வெள்ளத்திலே வருந்தித் தத்தளித்த கயல்போலும் இணைக்கண்கள், அவன் எடுத்துத் தழுவிக் கொண்ட அளவிலே, மகிழ்ச்சியால் விரிந்து மலர்ந்து காது வரை நீண்டன.

**வேனல் வாய்ப்பட்டு விரிமுகை தளிரொடு கரிந்த**
**கானக் கார்முல்லை கார்மழைக் கெதிர்ந்தன போல**
**மான மங்கையர் வாட்டமும் பரிவுந்தங் கணவன்**
**தேனெய் மார்பகந் தீண்டலுந் தீர்ந்தொளி சிறந்தார் 2332**

[கரிந்த-கருகிய; கார்மழைக்கு-கரிய மழையை; எதிர்தல்-ஏற்றுக் கொள்ளல்; பரிவு-வருத்தம்.]

**சேலுண் கண்ணியர் சிலம்பொடு திலகமுந் திருத்தி**
**மாலை நல்லன மதுக்கமழ் தகையன மிலைச்சிக்**
**கோல மென்முலைக் குங்குமம் இடுகொடி யெழுதிச்**
**சோலை வேய்மருள் தோள்முத்துந் தொழுதக வணிந்தார்**

[மிலைச்சி-அணிந்து; இடுகொடி-தொய்யில்.]

**நஞ்சு மேய்ந்திளங் களிக்கயன் மதர்ப்பன போல**
**அஞ்சி வாட்கண்கண் மதர்த்தன அலர்ந்துடன் பிறழப்**
**பஞ்சு சூழ்மணி மேகலை பரிந்தவை சொரிய**
**வஞ்சி நுண்ணிடை கவின்பெற வைகினன் மாதோ 2384**

[மதர்த்தன-செருக்கடைந்தன; பஞ்சு-ஆடை; பரிந்து-அற்று.]

**அரிபொற் கிண்கிணி அணிகிளர் சிலம்பொடு சிலம்பும்**
**திருவச் சீறடிச் செழுமலர்க் கொழுங்கயல் மழைக்கண்**
**உருவ நுண்ணிடை யொளிமணி வருமுலை யுருவார்**
**எரிபொன் மேகலை யிலக்கணை கடிவினை நொடிவாம்**

[அரி-மென்மை; நொடிவாம்-சொல்வோம்; கடிவினை-மணவிழா.]

கோடை வெப்பந்தாங்காது, புதுமலரும் இளந்தளிரும் கருகக் கிடந்த காட்டிலுள்ள முல்லைக் கொடிகள், கார்கால மழையை எதிர் கொண்டு ஏற்றுக் கொள்வதைப் போல ஊடிக்களிக்கும் அம்மகளிர், தாம் கொண்ட துன்பமும் மெலிவும் தீர்ந்து, தேன்போல இனிமை தரும் அவன் மார்போடு பொருந்தித் தழுவியவுடன் இன்பநலம் பெற்றனர். மீன்போன்ற மையுண்ட அழகிய கண்களை யுடைய தோழிப் பெண்கள், காலில் சூட்டிய சிலம்பில் இருந்து நெற்றியில் இருந்த பொட்டுவரை அழகுறப் புனைந்து, தேன் மணம் பரப்பும் நறுமணமலர் மாலைகளை அணிவித்து, அழகிய பூமார்பின் மேலே குங்குமத்

தாலே தொய்யில் கொடி எழுதி, சோலை மூங்கிலையும் மயக்கும் அழகிய தோள்களில் முத்துவடங்களைச் சீவகன் போற்ற அணிவித்தனர். அழகிய சிறு கயல் மீன்கள் நஞ்சினைச் சுமந்து பெருமையோடு திரிவதைப்போல வாள்போலும் கண்களும் உடலும் சிலிர்த்து விம்ம, ஆடையின் மேலணிந்த மேகலையின் மணிக்காசுகள் சிந்திச்சிதற, வஞ்சிக்கொடி போன்ற அம்மகளிர் சிற்றிடை களிக்கச் சீவகனும் உடன் கூடி மகிழ்ந்தான்.

இனி, பரல் பொதிந்த பொன்னாலான கிண்கிணியும் பாதச் சிலம்பும் சேர்ந்து ஒலிக்கின்ற, அழகிய தாமரை மலர் போன்ற சிறிய அடிகளையும், அழகிய கயல்மீன் போன்ற நீண்ட கருங்கண்களையும், கொடி போன்ற அழகிய நுண்ணிடையையும், முத்து மணிமாலை சுமந்த மார்பினையும், அழகுறச் செய்த பொன்னாலான மேகலையையும் உடைய இலக்கணையின் மணவிழாவைப் பற்றிக் கூறுவோம்.

ஆழி மால்கட லகன்பெருங் கேள்விகள் துறைபோய்
ஊழி னன்றியு முறுவினை யோரையின் முடிப்பான்
சூழி யானையுந் துளங்குபொற் சிவிகையு முடையான்
வேழ வேந்தற்கு விழுப்பெருங் கணிவிரித்
துரைத்தான் 2386

[ஆழி-கரை; துறைபோதல்-முற்றக்கற்றல்; கணி-சோதிடன்.]

ஓங்கு கொற்றவற் கோதிய வுயர்பெரு நாளால்
வீங்கு வெள்ளியங் குன்றென விளங்கொளி யுடைய
தேங்கொண் மாலையுந் திலகமு மணிந்ததிண் குணத்த
பாங்கிற் பண்ணின நூற்றெட்டுப் படுமதக் களிறே 2387

[ஓதிய-கூறிய; வீங்கு-பருத்த.]

விளங்கு வெண்டுகி லுடுத்துவெண் சாந்துமெய் பூசித்
துளங்கு மஞ்சிகை துளைச்சிறு காதினுட் டுளங்க
வளங்கொண் மாலைகள் சூடிமுத் தணிந்துவண் முரசம்
கலங்கொள் வேழத்தி னேற்றினர் கடிமுர
சறைவான் 2388

[மஞ்சிகை-ஒருவகை காதணி; துளங்க-அசைய.]

**கேண்மின் கேண்மின்கள் யாவரு மினியன கேண்மின்**
**பூண்மி னித்தில மணிவடம் பூசுமின் சாந்தம்**
**வாண்மி னுண்ணிடை வருந்தினுஞ் சூட்டணிந் தழகார்**
**ஆண மாகிய அருவிலை வண்ணணப்பட் டுடுமின் 2389**

[ஆணம்-அன்பு; அருவிலை-விலைமிக்க.]

கரையுடைய பெருங் கடலைப்போன்ற அரிய நூல்களைக் குறைவறக் கற்றுத் தேர்ந்தவனும், நெற்றிப் பட்டம் அணிந்த யானையையும் அழகிய பொன்னாலாகிய சிவிகையையும் விருதாகப் பெற்றவனுமாகிய சிறந்த நிமித்திகன் ஊழ்வினைப் பயனோடு மட்டுமில்லாமல், நல்வினைப் பயனும் பொருந்தக் கூடியிருக்கிற இத்திருமணத்தை, நல்ல வேளையிலேயும் முடிக்கக் கருதியவனாகி, இம்மண நாளினை யானைப்படை உடைய மன்னர்க்கெல்லாம் விளக்கிக் கூறினான். அப்படி மன்னருக்குக் கூறியதோர் நன்னாளிலே, பெரிய வெள்ளி மலை போல விளங்கும் அழகுடைய, தேன் நிறைந்து வழியும் மலர் மாலையும், நெற்றிப் பொட்டும் அணிந்த, நன்கு பழக்கப்பட்ட நூற்றியெட்டு மதயானைகள் அழகுற அலங்கரிக்கப்பட்டன. தூயவெள்ளை ஆடை அணிந்து, மேனியில் வெள்ளைச் சந்தனத்தைப் பூசி, சிறிய துளை உடைய காதில் மஞ்சிகை என்னும் காதணி விளங்க, அழகிய தும்பை மலர்மாலை அணிந்து தூய முத்துச் சரங்கள் புனைந்து, முரசறைவோர் மங்கல முரசை பட்டத்து யானையின் மேலேற்றி நகரெங்கும் முரசறைந்து கூறுவாராயினர்.

'கேட்பீராக! கேட்பீராக! இங்கே கூறும் இவ்வினிய மொழிகளைச் சற்றே செவிமடுத்துக் கேட்பீராக! எல்லாரும் முத்துமாலை சூடிக் கொள்ளுங்கள்! மாணிக்கச் சரம் அணிந்து கொள்ளுங்கள். மேனி வனப்புற சந்தனம் பூசுங்கள். மின்னலைப் போன்ற மெல்லிய இடை சுமை

தாங்காது வருந்துவதானாலும் நெற்றிச் சூட்டைத் தவறாது அணிந்து கொள்ளுங்கள்; அழகிய விலைமதிப் பரிய இன்பூட்டும் எழிற்பட்டாடைகளை உடுத்திக் கொள்ளுங்கள்.'

**பிள்ளை வெண்பிறைச் சிறுநுதற் பெரும்பட்ட மணிமின்**
**உள்ள மேனியு மொளிர்மணிக் கலங்களிற் புனைமின்**
**வள்ளல் வாய்மொழி யான்படு பாலமிர் தல்லால்**
**உள்ள மேவினும் பிறவுணப் பெறீரெழு நாளும் 2390**

*[பிள்ளை வெண்பிறையென்றது மூன்றாம் பிறையை; பாலமிர்து-பாற்சோறு.]*

**வாழை மல்கிய மணிக்குலைக் கமுகொடு நடுமின்**
**தாழ நாற்றுமின் தாமங்க ளகிற்குடம் பரப்பி**
**யாழின் பாடலு மாடலு மரங்குதோ றியற்றிப்**
**போழு மால்விசும் பெனப்பல பொலங்கொடி**
**யெடுமின் 2391**

*[போழும்-பிளக்கும்; பொலம் கொடி-பொற்கொடி.]*

**மாலை வாண்முடி மன்னவன் மணவினை யெழுநாட்**
**சீல மில்லன சினக்களி றகற்றுகென் றணிந்த**
**கோல மார்முர சிடியுமிழ் தழங்கென முழங்க**
**நீல மாக்கட னெடுநகர் வாழ்கென வறைந்தார். 2392**

*[சீலம்-ஒழுக்கம்; தழங்கு-ஓசை.]*

## வேறு

**முரச மார்ந்தபின் முவிரு நாள்கள்போய்**
**விரைவொ டெங்கணும் வெள்வளை விம்மின**
**புரையில் பொன்மணி யாழ்குழல் தண்ணுமை**
**அரவ வானி னதிர்ந்த அணிமுழா 2393**

*[வெள்வளை - வெள்ளிய சங்குகள்; விம்மின - ஒலித்தன.]*

'மூன்றாம் பிறை நிலவு போன்ற சிறு நெற்றியிலே பெரிய பட்டத்தை அணிந்து கொள்ளுங்கள். உடலெங்கும்

அழகிய மணிகளிழைத்த அணிகலன்களைப் புனைந்து அலங்கரித்துக் கொள்ளுங்கள். இது அரசன் ஆணை! பசுவின் பால் கலந்த இனிய சோற்றையல்லாமல் மற்ற வற்றை இன்னும் ஏழு நாட்களுக்கு விரும்பி யாரும் உண்ணாதிருப்பீராக. வாழை மரங்களை, மணிபோன்ற காயுடைய குலைகளோடு கூடிய கமுகோடு சேர்த்து நடுங்கள். வீதியெல்லாம் மாலைகளைத் தொங்கக் கட்டுங்கள். அகிற்புகை மணம் பரப்பும் தூபக்குடங்களை நிறைய நிறுத்தி, யாழிசைப் பாட்டும், ஆடும் எழிற் கூத்தும், அரங்குகள் தோறும் நிகழ்ந்திருக்க, விண்ணைப் பிளக்குமாறு பல வண்ணப் பொன் கொடி வளைவுகளை அமையுங்கள். மாலையும் ஒளிமிக்க மணிமுடியும் உடைய அரசனுடைய மணவினை நிகழும் ஏழு நாளிலும் ஒழுக்க மில்லாத கொலை மதயானைகளை நகரின் எல்லையை விட்டு நீக்கி வையுங்கள்! நீலக்கடல் சூழ்ந்த இப்பெருநகர் வாழும் மக்கள் எல்லாம் நலமுற்று வாழ்க' என்று வாழ்த்தி. அழகிய மங்கல முரசம் இடிபோல் ஒலியெழுப்பி முழங்க முரசறைந்து தெரிவித்தனர். இவ்விதம் முரசறைந்து ஆறு நாட்கள் கழிந்தபின் எங்கும் வெண் சங்குகள் விரைந்து ஒலித்தன. குற்றமில்லாத அழகிய மகரயாழும், குழலும், தண்ணுமையும் முழவும், முழக்க மிடும் மேகத்தைப் போலக் கூடி ஒலி செய்தன.

விண்வி ளக்குவ போல்விரி பூந்துகள்
கண்வி ளக்கிக் கலந்தவெண் சாந்தினால்
மண்வி ளக்கி மலர்ப்பலி சிந்தினார்
பண்வி ளக்கிய பைங்கிளி யின்சொலார் 2394

[பலி-பூசைத் திரவியம்; துகள்-தூள்.]

ஆய்ந்த மோட்டின வான்படு பாலுலை
போந்து பொங்கிய வாவியி னாற்பொலிந்து
ஏந்து மாடங்க டாமிழி னென்பன
பூந்து கில்புறம் போர்த்தன போன்றவே 2395

[ஆய்ந்த-அழகமைந்த; மோடு-வயிறு.]

திருவி னல்லவர் செம்மலர்ச் சீறடி
பரவி யூட்டிய பஞ்சரத் தக்களி
விரவி மீநிலஞ் சேர்ந்தொளி பூத்துராய்க்
குருதி வானிலங் கொண்டது போன்றதே 2396

[பஞ்சு அரத்தக் களி-செம்பஞ்சுக் குழம்பின் சிவந்த சேறு; மீநிலம்-நிலத்தின் மேல்; உராய்-பரவி.]

பால்வெண் டிங்கண் மணிக்கை படுத்தவை
போலு மாடியி னோக்கிப் பொலங்கலக்
கோலஞ் செய்பவர் கோல வெறிப்பினால்
மாலை வண்டின மாலைக்கண் கொண்டவே 2397

[வெறிப்பு-கண்ஒளி மழுங்கல்; ஆடி-கண்ணாடி.]

வானுலகக் குப்பையைக் கூட்டிக் குவித்ததைப்போல விரிந்த பூவுதிர்த்த பூந்தாதையும், அதோடு கலந்த மணி முதலியவற்றையும் கூட்டித் துடைத்து, வெள்ளைநிறச் சாந்தினால் தரையை மெழுகி, வீட்டுறை தெய்வத்திற்கு மலர்ப்பூசனை புரிந்தனர், பண்ணிசை போலும் இன் மொழி பேசும் பாவையர். அழகிய வயிறுடைய பசுக்களின் இனிய பால், உலையிலே பொங்கி வெளியே வழிய, அப்படிப் பொங்கிய பாலாவி படிந்து விளங்கும் உயர்ந்த மாடங்கள், மெல்லிய ஆடையை மேலே போர்த்தி யிருப்பதைப்போலத் தோற்றந்தரும். திருமகளினும் மேலான பெருநலம் உடைய பெண்களின், சிவந்த தாமரை மலர்போலும் அழகிய திருவடிகளில், சேடிப் பெண்கள் விரும்பிப் பூசிய செம்பஞ்சுக் குழம்பு, நிலத்தின் மேல் நிறையப் படிந்து ஒளிவீசிக் கிடக்க, அக்காட்சி செக்கர் வானம் நிலத்திலே வந்து கிடந்ததைப்போலத் தோற்றமளிக்கும். பால் போன்ற வெண்ணிலவுக்குக் கைப்பிடி வைத்ததைப் போலிருக்கும் கண்ணாடியில் பார்த்தபடி, பொன்னணி புனைந்து தங்களை அலங் கரித்துக் கொள்ளும் மங்கையரின் ஒளி மிக்க அழகு,

  

கண்ணைத் தெறிப்பதனால் வண்டின் கூட்டம் கண்டு தெரியாது கலங்கும்.

**போக மாமழை போழ்ந்து புதத்தொறும்**
**மாக மேந்துவ போன்மணித் தோரணம்**
**ஆக நாற்றின தாம மணிக்குடம்**
**ஏக மாநகர் வீதி நிரைத்தவே** 2398

[புதவு-வாயில்; மாகம்-வானம்; ஆக-பொருந்த.]

**ஆடன் மங்கையர் கிண்கிணி யார்ப்பொலி**
**பாட லின்னொலி பண்ணமை யாழொலி**
**மோடு கொள்முழ வின்முழக் கீண்டிய**
**மாட மாநகர் மாக்கட லொத்ததே** 2399

[ஈண்டிய-சேர்ந்த; பண்ணமை-பண்ணோடு பொருந்திய.]

**சுந்த ரத்துகள் பூந்துகள் பொற்றுகள்**
**அந்த ரத்தெழு மின்புகை யாலரோ**
**இந்தி ரன்னகர் சாறயர்ந் திவ்வழி**
**வந்தி ருந்தது போன்மலி வுற்றதே** 2400

[சுந்தரத்துகள் - சிந்துரப்பொடி; அந்தரம்-வானம்; சாறு-விழா.]

## வேறு

**நிரந்து கன்னலு நெய்யு நீந்தப்பெய்து**
**இரந்து பாலமிர் தெங்கு மூட்டுவார்**
**பரந்து பூந்துகில் பன்ம ணிக்கலம்**
**சுரந்து கொள்கெனச் சுமக்க நல்குவார்** 2401

[நிரந்து-ஒழுங்குற; பாலமிர்து-பாற்சோறு.]

உயிரளிக்கும், வளந்தரும் முகிலைப் பிளந்து வானளாவச் செல்வதுபோல் அமைத்த, மணியாலான தோரணங்களில் மாலைகளைத் தொங்கக்கட்டி, மணிக் குடங்களை வரிசையாக அமைத்து ஒப்பற்ற அழகுடைய

அந்நகரின் வீதிதோறும் அழகு விளங்கச் செய்தனர். ஆடும் அழகு மங்கையரின் பாதச் சிலம்பின் ஓசையும், பாட்டின் இசையும், பண்ணோடு பொருந்திய யாழின் ஒலியும், மிக்க புகழுடைய முழவின் முழக்கமும் நிறைந்து முழங்க, அப்பெரு நகரம் ஒலிக்கும் அலையுடைய கடலை ஒத்தது. ஆடும் மங்கையர் மேலணிந்த செந்தூரப் பொடிகளும், அவர் சூடிய பூவிலுள்ள மகரந்தப் பொடிகளும், பொற் சுண்ணப்பொடிகளும், வானளாவிய இனிய அகிற் புகை மணமும் கலந்து, அமராவதி நகர் விழாக்கோலங் கொண்டு வந்து தங்கியதைப்போல அவ்வழகு நகரும் பொலிவு பெற்றுத் திகழ்ந்தது. எங்கும் நிறையக் கருப்பஞ் சாற்றையும் நெய்யையும் வெள்ளம்போலப் பெய்து பால் சோற்றை வருந்திச் சென்று உண்பிப்பர்; அழகிய ஆடை வகைகளையும், அணிமணிகளையும் எடுத்துச் செல்கவென்று சுமக்கும் அளவுக்குக் கொடுப்பர்.

**வருக்கை யின்பழம் வாழை யின்கனி**
**திருக்கொண் மாங்கனி தெளித்த தேறலைக்**
**கருப்புச் சாற்றொடு கலந்து கைசெய்து**
**யுரித்த தெங்கிள நீரும் பூரிப்பார் 2402**

[தேறல் - தெளிந்த சாறு; கைசெய்து - பக்குவம் பண்ணி; புரிதல்-விரும்புதல்; பூரிப்பார்-நிரப்பி வைப்பார்.]

**கூந்த லேந்திய கமுகங் காய்க்குலை**
**ஆய்ந்த மெல்லிலை பளித மாதியா**
**மாந்தர் கொள்ளைகொண் டுண்ண மாநிலம்**
**ஏந்த லாம்படித் தன்றி யீட்டுவார் 2403**

[கூந்தல்-உச்சி; பளிதம்-கருப்பூரச் சுண்ணம்.]

**தூம மார்ந்தன துப்பு ரவ்வுகள்**
**ஏம மாயின வேந்தி நிற்றலால்**
**நாம நன்னகர் நன்பொற் கற்பகம்**
**காம வல்லியுங் களங்கொண் டிட்டதே 2404**

[துப்புரவுகள்-நுகர்பொருள்கள்; ஏமம்-பாதுகாப்பு, இன்பமுமாம்; நாமம்-புகழ்.]

**வழுவின் மாந்தரு மாவு மல்கிய**
**தொழுதி தன்னையான் சுமக்க லேனெனா**
**முழுது மண்மகள் முற்றும் வாய்திறந்து**
**அழுதிட் டாள்நெயும் பாலு மாகவே** 2405

[வழு-குற்றம்; மா-விலங்குகள்; தொழுதி-தொகுதி.]

பலாப்பழத்தின் இனிய சுளையையும், வாழை மரத்தின் நறுங்கனிகளையும், சுவைமிக்க மாம்பழங் களையும், வடித்தெடுத்த தேனோடும், கருப்பஞ் சாற்றோடும் கலந்து சமைத்து, விரும்பியுண்ணும் இளநீரோடு நிரப்பி வைப்பர். கமுகின் உச்சியில் பழுத்த பாக்குக் குலைகளையும், நல்ல துளிர் வெற்றிலை களையும், கருப்பூரச் சுண்ணம் முதலான முக வாசங் களையும், மக்களெல்லாம் விரும்பிப் பெற்று உண்ணும்படி இப்பூமி சுமக்க முடியாத அளவு நிறையக் குவிப்பர். நறுமணந்தரும் புகைப்பொருள்களையும், மற்றுமுள்ள வாசந்தரும் எல்லா இன்ப நுகர் பொருள்களையும், ஏந்தி நிற்பர். இங்ஙனம் வீதியெங்கும் நிறைந்து விளங்க அந்நகரம், கற்பகத்தருவும் காமவல்லிக் கொடியும் விண்ணைவிட்டு மண்ணில் வந்து இடங்கொண்டதைப் போலக் காட்சி தந்தது. இத்தகைய குற்றமற்ற நல்லொழுக்கமுடைய மக்களும் விலங்குகளும் நிறைந்த கூட்டத்தை, என்னால் முற்றிலும் சுமக்க முடியா தென்று வாய் முற்றுந்திறந்து, நெய்யும் பாலும் ஒழுக நிலமடந்தை அழுவது போல் தோன்றினாள்.

## வேறு

**கொடியெழுந் தலமருங் கோயில் வாயில்கள்**
**மடலெழுந் தலமருங் கமுகும் வாழையும்**
**மடியிருந் துகிலுடை மாக்க ணாடியும்**
**புடைதிரள் பூரண குடமும் பூத்தவே** 2406

[அலமரும்-சுழலும்; புடைதிரள்-பக்கந் திரண்ட.]

கடிமலர் மங்கையர் காய்பொற் கிண்கிணி
உடைமணி பொற்சிலம் பொலிக்குங் கோயிலுட்
குடைநிழன் மன்னர்தங் கோதைத் தாதுவேய்ந்
தடிநிலம் பெறாததோர் செல்வ மார்ந்ததே 2407

[கடி-வாசனை; தாது-பூந்தாது.]

துளங்குபொற் குழைகளுந் தோடுஞ் சுண்ணமும்
கிளர்ந்தகில் சாந்துபூக் கமழ்ந்து கேழ்கிளர்
இளங்கதி ரெறிமணிப் பூணு மாரமும்
விளங்கிமே லுலகினை வெறுப்பித் திட்டதே 2408

[கேழ்-நிறம்; மேலுலகு-சுவர்க்கம்.]

விரிந்துவான் பூத்தென விதானித் தாய்கதிர்
அருங்கலப் பொடியினா லாய்பொற் பூமகள்
மருங்குல்போற் குயிற்றிய நகரின் மங்கலப்
பெருந்தவி சடுத்தனர் பிணையன் மாலையார் 2409

[விதானித்து-மேற்கட்டி கட்டி; மருங்குல்-இடை;
குயிற்றிய-அமைத்த.]

இவ்வாறு அந்நகரில் கொடிபறந்து ஆடும் அரண்மனை வாயில்களில் எல்லாம் மடல் விரிந்து அசையும் கமுகும், வாழையும், பட்டுத் துகில் போர்த்த பெரிய நிலைக் கண்ணாடியும், பூரண கும்பங்களும் நிறைந்தன. வாச மலர் சூடிய மங்கையர் அணிந்த பொற்சதங்கையும், மணிமேகலையும், சிலம்பும் கலந்து ஒலிசெய்யும் அரண் மனைக்குள், வெண்கொற்றக்கொடி உடைய மன்னர் அணியும் மாலைகளில் உள்ள பூந்தாதுகள் சிந்தின; மகளிரின் சேவடிகள் அப்படிச் சிந்திய மலர்த் தாதுகள் மேலன்றி மற்றபடி தரையில் பதியாத பெருமை பெற்றன. ஒளி விளங்கும் காதுக் குழையும் பொன்னா லான தோடும் வாசப்பொடியும் நிறைந்து விளங்க, மணந்தரும் அகிலும், சாந்தும், மலர்களும் கலந்து மணம்

வீச, நிறம் மிகுந்து ஒளிவீசும் பொற்பூணும் மணியாரமும் நிறைந்து அந்நகர் வானுலகை வெட்கச் செய்தது. நீலவான் விரிந்து விண்மீன்களை மலரச்செய்ததோ என்று தோன்றுமாறு விதானம் அமைத்து அதன் கீழே, ஒளி சிந்தும் அழகிய வண்ணப் பொடிகளால், பொன் பரவும் நிலமகளின் சிற்றிடைபோல் கோலமிட்ட இடத்தில், தொடுத்த மாலையணிந்த மங்கையர் பெரிய மங்கல இருக்கையை அமைத்தனர்.

**நலங்கிளர் காணமு மணியு நன்பொனும்**
**வலம்புரி முத்தமுங் குவித்த மங்கலம்**
**இலங்கின மணிவிளக் கெழுந்த தீம்புகை**
**கலந்தவா யிரத்தெண்மர் கவரி யேந்தினார்** 2410

*[காணம்-பொற்காசு; இலங்கின-விளங்கின.]*

**மங்கலப் பெருங்கணி வகுத்த வோரையால்**
**மங்கல மன்னவன் வாழ்த்த வேறலும்**
**மங்கல அச்சுதந் தெளித்து வாய்மொழி**
**மங்கலக் கருவிமுன் னுறுத்தி வாழ்த்தினார்** 2411

*[ஓரை-முகூர்த்தம்; அச்சுதம்-அறுகும் அரிசியும்.]*

**முழங்கின வின்னிய மொய்த்த தேத்தொலி**
**கொழுங்கயற் கண்ணினார் கொண்டு பொன்னகல்**
**இழிந்தனர் திருமயி ரேற்ப நீரதில்**
**நிழன்றன சாமரை நிரைசங் கார்த்தவே** 2412

*[இயம் - வாத்தியங்கள்: நிழன்றன - நிழலைச் செய்தன.]*

**பாற்கடன் முளைத்ததோர் பவளப் பூங்கொடி**
**போற்சுடர்ந் திலங்கொளிப் பொன்செய் கோதையை**
**நாட்கடி மயிர்வினை நன்பொற் றாமரைப்**
**பூக்கடி கோயிலாள் புலம்ப வாக்கினார்** 2413

*[புலம்ப-வருந்த: பூக்கடி-பூவாகிய மணம் மிகுந்த.]*

ஒளிவிளங்கும் பொற்காசும், மணியும் பொன்னும், வலம்புரிச்சங்கு தந்த முத்தும் எங்கும்குவித்தனர். மங்கல வாழ்த்துக்கள் முழக்கினர். மணிவிளக்குகள் ஏற்றினர். வாசமணப் புகைகள் பரவ, மகளிர் ஆயிரத்தெட்டு பேர் கவரி ஏந்தி வீசினர். பிறகு நன்நிமித்தங்கள் கூறும் அரசவை நிமித்திகன் கூறிய நல்ல பொழுதிலே, மன்னவன் மற்றவர்கள் வாழ்த்த இருக்கையில் ஏறி அமர்ந்தான். மங்கல அறுகும் அரிசியும் இட்டு மந்திரித்த மங்கலப் பொன்கருவியைச் சீவகன் சிகை கழிக்க மயிர் வினைஞன் எடுக்கவும் பிறர் வாழ்த்தி நின்றனர். அவ்வளவில் இன்னிசைக் கருவிகள் முழங்கின. பிறர் வாழ்த்திப் புகழ்ந்த ஒலி மிகுந்து நிறைந்தது. அழகிய மீன்போலும் கண்ணினை உடைய மகளிர், சீவகன் தலையினின்றும் மழித்த அழகிய முடியை பொன் வட்டிலிலே எடுத்துக் கொண்டு மண்டபத்தை விட்டுச் சென்றனர். சாமரை வீசி நிழல் தந்தது. சங்குகள் முழங்கி ஒலிசெய்தன. பாற்கடலிலே தோன்றிய பூங்கொடிபோல, பொன் னொளி வீசித் திகழும் அழகிய மாலை அணிந்த இலக்கணையை; நலமிகு பொற்றாமரைப் பூவில் வாழும் திருமகள் வருந்தப் புருவம் எழுதி அழகு செய்தனர்.

## வேறு

**விரைத்தலை மாலை சூட்டி மின்னனா ரங்கை சேப்ப**
**அரைத்தசாந் தணிந்த கோட்ட வாயிரத் தெட்டு வேழம்**
**நிரைத்தன மண்ணு நீர்க்கு முரசொடு முழவம் விம்ம**
**வரைத்தலைத் துவலை போன்று மதநில நனைப்ப வன்றே**

[சேப்ப-சிவப்ப; கோட்ட-தந்தத்தையுடைய; விம்ம-ஒலிப்ப.]

**நான்முகம் புதைத்த தெண்ணீர் கவர்ந்துபொற்**
**குடங்க ளார்த்தி**
**ஊன்முகம் புதைத்த வேற்கண் ணவர்களிற் றுச்சி யேற்றி**

வான்முகம் புதைத்த பன்மீன் மதியென மருண்டு நோக்கத்
தேன்முகம் புதைத்த மாலைக் குடைநிழற் றிருவிற் றந்தார்

[கான்-வாசனை; ஆர்த்தி-நிறைத்து; திருவின்-செல்வத்தோடு.]

இழைத்தபொன் னகரின் வெள்ளி யிடுமணை மன்ன ரேத்தக்
குழைப்பொலிந் திலங்கு காதிற் கொற்றவ னிருந்த பின்றை
மழைக்கவின் றெழுந்த வார்கொண் மணிநிற வறுகை நெய்தோய்த்
தெழிற்குழை திருவில் வீச மகளிர்நெய் யேற்று கின்றார்

[மழைக் கவின்று-மழையால் அழகு பெற்று; மணிநிற அறுகை-நீலமணி போன்ற அறுகம்புல்லை.]

மின்னுமிழ் வைரக் கோட்டு விளங்கொளி யிமய மென்னும்
பொன்னெடுங் குன்றம் போலப் பூமிமேல் நிலவி வையம்
நின்னடி நிழலின் வைக நேமியஞ் செல்வ னாகி
மன்னுவாய் திருவோ டென்று வாழ்த்திநெய் யேற்றி னாரே

[கோடு-உச்சி; வைக-தங்க.]

வாசமிகு தலைமாலை அணிந்த, மின்னல் போலும் அழகிய மகளிர் தங்கள் உள்ளங்கை சிவக்க அரைத்த சந்தனம் பூசிய தந்தக் கொம்புகளுடைய, யானைகள் ஆயிரத்தெட்டு, நீராட்டத் திருமஞ்சன நீர் கொண்டு வர, முரசும் முழவும் முழங்க, மலையருவிபோல மதம் நிறைந்து வழிய வரிசையாக நின்றன. வாச மலர் மிதக்கும் தெளிந்த தண்ணீரை முகந்து பொற்குடங்களிலே நிறைத்து, ஊன் தோய்ந்த வேல்போலும் கண்ணினை உடையவர்கள், நீல வானை நிறைத்து இருக்கும் நிலவும், நட்சத்திரங்களுமோ என்று அப்பொற் குடங்களைக் கண்டவர்கள் வியந்து நோக்க, அவற்றை யானைத் தலைகளின் மேலேற்றி, வண்டுகள் மொய்க்கும் மாலையுடைய குடைநிழலில் மங்கலச் சிறப்போடு கொண்டுவந்து சேர்த்தனர். பொன்மணி பதித்த மண்ட

பத்தில் வெள்ளியால் செய்த இருக்கையின்மேல், மன்னர் புகழ, பொற்குழை காதில் விளங்க, வேந்தன் அமர்ந்த வுடன், நல்ல மழையால் செழிப்புற்று நீலமணி போலத் தழைத்து வளர்ந்திருக்கும் அறுகம் புல்லை நெய்யிலே தோய்த்து வானவில் போலும் ஒளிவீசும் காதுக் குழை யணிந்த அழகிய மகளிர் நெய்யேற்றத் தொடங்கினர். 'ஒளியள்ளி வீசிக் கொண்டிருக்கும் வைர உச்சியை உடைய, அழகிய பொன் இமயப் பெரு மலைபோல், உன்னடி நிழலில் உலகம் நிலை பெற்று வாழ்க; சக்ரவாளக் கோட்டத்திற்குத் தலைவனாகித் திருமகள் போலும் இலக்கணையோடு பொருந்தி வாழ்க' என்று வாழ்த்தி அம்மகளிர் நெய்யேற்றினர்.

## வேறு

**நீடு நீர்மணி நீரு மல்லவும்**
**ஆடு நீரன அத்து மண்களும்**
**ஊடு மின்னனா ருரிஞ்சி யாட்டினார்**
**கூடி யின்னியங் குழுமி யார்த்தவே 2418**

[அத்து-துவர்; உரிஞ்சி-தேய்த்து; கூடி-தம்முள் ஒத்து; குழுமி-திரண்டு.]

**திருவ மன்னவன் சென்னித் தேர்மன்னர்**
**பொருவெண் பொற்குட முமிழும் பொங்குநீர்**
**பருதி தன்னொளி மறையப் பான்மதி**
**சொரியுந் தீங்கதிர்த் தோற்ற மொத்தவே 2419**

[வெண்பொன்-வெள்ளி; உமிழும்-சொரியும்.]

**துளங்கு மாமணித் தூண்க ணான்கினால்**
**விளங்கு வெள்ளிவேய்ந் தாய்ந்த மாலைசூழ்**
**வளங்கொள் மாமணிக் கூடஞ் சேர்த்தினார்**
**இளங்க திர்கொலோ விருந்த தென்னவே 2420**

[துளங்கும் - ஒளி அசையும்; மணிக்கூடம் - அழகிய கூடம்.]

**ஆய்ந்த பானிற மாய்பொற் கம்பலம்**
**வேய்ந்த பொங்கணை வெண்பொற் கட்டின்மேல்**
**நீந்து நித்தில விதான நீழலாற்கு**
**ஏந்தி னாரணி யேந்து நீர்மையார் 2421**

[கம்பலம்-மேற்கட்டி; நித்திலம்-முத்து; விதானம்-பந்தல்.]

கங்கை முதலிய நதிகளின் நீர், சந்திரகாந்தக் கல்லின் நீர் ஆகியவற்றினுடன், மேல் பூசும் வாசங்களாலும் துவராலும், மண்ணாலும் மற்றுமுள்ள நறு மஞ்சனங்களாலும் தேய்த்து, மின்னல் போலும் இடையுடைய மகளிர் நீராட்ட, இன்னிசைக் கருவிகள் பண்ணோடு ஒத்துஒலி செய்தன. திருவிளங்கும் மன்னவன் தலைமேல் தேருடைய வேந்தர்கள் வெள்ளிக் குடத்திலே இருந்து எடுத்துச் சொரிகின்ற நீர், சூரியனின் ஒளிமறையும்படி வெண்ணிலவு பொழியும் இனிய தண்ணொளிபோல் தோன்றியது. பிறகு ஒளிவீசும் பொன்மணிகள் பதித்த நான்கு தூண்களும், வெள்ளியால் வேய்ந்த மேல் கூரையும், தேர்ந்தெடுத்துத் தொடுத்த மலர்நிறைந்த மாலைகளும், உள்ள அழகிய மணிக்கூடத்திலே, அமர்ந் திருப்பது இளஞாயிறோ என்று கண்டவர் வியந்து பாராட்டும்படி சீவகனை இருக்கச் செய்தனர். பாலின் நல்ல வெண்ணிறத்தைப் பழிக்கும் தூய ஆடை விரித்த, தலையணை உடைய, வெள்ளியால் செய்த கட்டிலின் மேல், கடலில் தோன்றிய ஆணிப் பொன் முத்தாலமைத்த பந்தலின் கீழ் இருந்த சீவகன் அணிவதற்கேற்ற அணிகளை, ஒப்பனைக்குரிய மகளிர் ஏந்தி நின்றனர்.

**ஈரங் கொன்றபி னிருண்ம ணிச்சுடர்**
**நீர வாய்நிழ லுமிழுங் குஞ்சியை**
**ஆர கிற்புகை வெறியி னாலமைத்**
**தேர்ப டச்செய்தா ரெழுதிற் றென்னவே 2422**

[கொன்றபின்-போக்கிய பின்பு; வெறி-மணம்; ஏர்பட-அழகு உண்டாக.]

**ஈடில் சந்தன மேந்து தாமரைத்**
**தோடின் பயில்வினாற் பூசித் தூமலர்**
**வீடு பெற்றன வின்றொ டென்னவே**
**சூடி னானரோ சுரும்புண் கண்ணியே 2423**

[தாமரைத் தோடின் பயில்வு-தாமரைப்பூவினது அகவிதழின் அளவு; சுரும்பு-வண்டு.]

**மற்ப கம்மலர்ந் தகன்ற மார்பின்மேல்**
**விற்ப கக்குலா யாரம் வில்லிடக்**
**கற்ப கம்மலர்ந் தகன்ற தோவெனப்**
**பொற்ப கப்பொலங் கலங்கள் தாங்கினான் 2424**

[மல்-மல்யுத்தம்; பக-நீங்க; மலர்ந்து-பரந்து; பொற்பு-அழகு ]

**உருவ மார்ந்தன வுரோமப் பட்டுடுத்**
**தெரியும் வார்குழை சுடர விந்திர**
**திருவி லன்னதார் திளைப்பத் தேங்குழல்**
**அரிபெய் கண்ணியர்க் கநங்க னாயினான் 2425**

[உருவம் - செந்நிறம்; உரோமப்பட்டு - எலிமயிராற் செய்த பட்டு; திளைப்ப-தங்க; அரி-செவ்வரி.]

கருநீல மணிபோலும் அழகுடைய கூந்தலை ஈரம் போக உலர்த்திய பின், நல்ல அகில் புகை மணம் தோயக் காட்டி, சித்திரத்தில் எழுதியது போல அழகுற, அதை வாரி முடித்தனர். ஒப்புவமையற்ற உயர்ந்த சந்தனத்தைத் தாமரைப் பூ இதழின் அளவு மேலெல்லாம் பூசிய பிறகு நறுமலர்கள் இனிப்பெருமை பெற்றன எனும்படி, வண்டுகள் மொய்க்கும் மலர் நிறைந்த மாலையை அணிந்து கொண்டான். மற்போர் திறன் பிறரைவிட்டு நீங்கித் தன்னிடத்தே வந்து தங்கும்படிப் பரந்தகன்ற மார்பின்மேல் வானவில்லை வெட்கச் செய்யும் ஒளியுடைய அழகிய முத்துச்சரங்கள் விளங்கி ஒளி செய்ய, கற்பகத்தரு பூத்துக் குலுங்கியதோ என்று தோன்றும்படி

அழகுமிக்க மற்ற அணிகலன்களையும் அணிந்து கொண்டான். செந்நிறம் உடைய கம்பளிப் பட்டாடை அணிந்து, ஒளிவீசும் காதுக்குழை அழகு செய்ய, வானவில் போலும் அழகிய பூமாலை தோளிலே அசைய, தேன் வழியும் மலர்க் கூந்தலும், செவ்வரி படர்ந்த கண்களும் உடைய மகளிர் காண நேரின் வருத்தும் காமனைப் போல் விளங்கினான்.

தாவி றாழ்வடந் தயங்க நீருறீஇ
மேவி யச்சுதந் தெளித்த பின்விரைந்
தாவி யும்புகை சுழற்றி யாடியும்
வீவில் வெஞ்சுடர் விளக்குங் காட்டினார் 2426

*[தா-கெடுதல்; உறீஇ-உறுத்தி, பொருத்தி; வீவுஇல்-கெடுதல் இல்லாத.]*

உவரி மாக்கட லொல்லென் வெண்டிரை
இவரி யெழுவபோன் றிலங்கு வெண்மயிர்க்
கவரித் தொகைபல வீசுங் காவலர்
இவரித் தொகையென்ப தின்றி யாயினார் 2427

*[இவரி-பரந்து; உவரி-உப்பு நீருடைய.]*

அறுகு வெண்மல ரளாய வாசநீர்
இறைவன் சேவடி கழுவி யேந்திய
மறுவின் மங்கலங் காட்டி னார்மணக்
குறைவில் கைவினைக் கோல மார்ந்ததே 2428

*[அளாய-கலந்த; இறைவன் - சீவகன்; ஆர்ந்தது-நிறைந்தது.]*

## வேறு

ஊனிமிர் கதிர்வெள்வே லுறைகழித் தனபோலும்
தேனிமிர் குவளைக்கட் டிருமக ளனையாளைப்
பானிமிர் கதிர்வெள்ளி மணைமிசைப் பலர்வாழ்த்தி
வானிமிர் கொடியன்னார் மணியணை மிசைவைத்தார்

*[கழித்தல்-நீக்குதல்; மணைமிசை-இருக்கை மேல்.]*

ஒச்சமற்ற முத்து வடங்களைத் தங்கள் அழகு விளங்க அணிந்த பெண்கள் விரைந்து வந்து, காப்பரிசியை நீரோடு சேர்த்துத் தெளித்த பின், புகைக் கலத்திலே வாய்விட்டு வரும் புகையைச் சுழற்றி, பெரிய கண்ணாடியையும், அணையாத சுடர் விளக்கினையும் காட்டினர். உப்பு நீருடைய பெருங்கடலில் 'ஓ'வென்று ஒலியெழுப்பி வெள்ளை அலைகள் புரண்டெழுந்து வருவதைப்போல், வெண் மயிர்க் கவரி வீசும் வீரர் தொகை, இவ்வளவு என்று கூறமுடியாத அளவுக்கு மண்டபம் எங்கும் நிறைந்து இருந்தது. அறுகம் புல்லும் மலரும் இட்ட வாசநறுந் தண்ணீரால் சீவகன் திருவடிகளைக் கழுவி, எட்டு வகை மங்கலங்களும் எடுத்துக் காட்ட போற்றத் தக்க சீவகனின் மணக்கோலம் பூரணத்துவம் பெற்றது. உறையை விட்டு எடுத்த ஊன் தோய்ந்த வேலைப் போல மாற்றார்க்குத் துன்பத்தையும், வண்டுகள் மொய்த்துப் பாடும் குவளை மலர்களைப்போல மருவியவர்க்கு இன்பத்தையும் தரும் அழகிய கண்களுடைய இலக்கணையை, பால்போலப் பட்டொளி வீசும் வெள்ளி மணையின்மேல் பலரும் வாழ்த்த, வானத்து மின்னலைப் போன்ற வனப்புடைய மங்கையர்கள் அழைத்து வந்து இருக்கச் செய்தனர்.

வரைவிளை வளர்பொன்னே வலம்புரி யொருமணியே
திரைவிளை யமிர்தம்மே திருவிழை யெனவேத்தி
வரைவளை முழவிம்ம மணிகிள ரொலியைம்பால்
அரைவிளை கலைநல்லா ரறுகினெய் யணிந்தனரே 2430

[வரை வளை-மலையில் விளைந்த; வரி-கீற்று; முழ-முழவு.]

கள்ளவிழ் கமழ்கோதைக் காவலன் றிருமகளை
வெள்ளணி மதயானை விழுமணிக் குடமேற்றித்
தெள்ளறன் மண்ணுந்நீ ராட்டினர் தேமலர்மேல்
ஒள்ளிழை யவளொத்தா ளுருவநுண் ணுசுப்பின்னாள் 2431

[விழுமணி-சிறந்த மணி; வெள்ளணி-வெள்ளுடை.]

வான்மலர் நுரைசூடி மணியணி கலன்சிந்தாத்
தானிள மணலெக்கர்த் தவழ்கதிர் மணியாரம்
ஏனைய நறுஞ்சுண்ணங் குங்கும மிடுங்களியாத்
தேனின மிசைபாடத் தீம்புன னடந்ஃதே 2432

[களி-சேறு; எக்கர்-நுண்மணல்.]

நான்றபொன் மணிமாலை நகுகதிர்ப் பவளத்தூண்
ஊன்றின வொளிமுத்த மண்டபத் தொளிர்திங்கள்
கான்றன கதிர்காய்த்தும் வட்டணைக் கதிர்முத்தம்
ஈன்றபொன் விதானத்தின் னீழலுய்த் திரீஇயினரே 2433

[நான்ற-தொங்கிய; காய்த்தும்-எறிக்கும்.]

அப்படி அழைத்து வந்த அரசியல் கலை நுணுக்கங்கள் அறிந்த மகளிர், அழகிய அணிமணிகள் அணிந்த இலக்கணையை 'மலையில் விளைந்து வளர்ந்த பொன்னே, வலம்புரிச் சங்கு தந்த முத்தே, கடலிடைப் பிறந்த அமுதமே' என்று போற்றி, வரியுடைய சங்கும் முழவும் முழங்கி ஒலிசெய்ய, கருநீல மணிபோல் விளங்கும் அவளுடைய ஐம்பால் கூந்தலிலே அறுகம் புல்லால் தோய்த்து நெய்யை அணிவித்தனர். தேன் சொரியும் மணமலர் மாலையணிந்த கோவிந்த மன்னன் திருமகளான இலக்கணையை, வெள்ளணி புனைந்த மதயானைகள் இரண்டின் மேல், சிறந்த பொற்குடங்களில் நிரப்பிக் கொண்டு வந்த தெளிந்த திருமஞ்சன நீரால் நீராட்டவும், தேன் வழியும் தாமரை மலர்மேல் வாழும் சிறந்த அணி புனைந்த திருமகளைப்போல, அழகிய சிற்றிடை உடைய இலக்கணை தோன்றினாள். இவ்வாறு அவர்கள் இலக்கணையை நீராட்டிய திருமஞ்சன நீர், சிந்திய சிறந்த மலர்கள் நுரையாக, சிதறி விழுந்த முத்தும், மணியும், ஆரமும் மற்றுமுள்ள அணிகலன்களும் இட்ட நுண்மணல் பரப்பாக, வழிந்துவரும் வாசப் பொற்சுண்ணமும், சாந்தும், வண்டலாகக் கொண்டு, வண்டுகள் மொய்த்துப் பாட வழி நடக்கும், ஆறாகப் பெருக்கெடுத்துச் சென்றது.

நீராடிய இலக்கணையைப் பொன்னாலும் மணியாலும் அமைத்த மாலைகள் தொங்குகிற, ஒளிமிக்க பவளத் தூண்கள் நாட்டிய, அழகிய முத்து மண்டபத்தில், ஒளி நிலவின் கதிரைப் பரப்பும் வட்ட வடிவ அணையின் மேல், ஒளி சிந்தும் முத்துக்கள் பதித்த பொன் விதானத்தின்கீழ் அழைத்து வந்து அமர்த்தினர்.

**மையணி மதயானை மத்தக வகலல்குல்**
**நெய்யணி குழன்மாலை நிழலுமிழ் குழைமங்கை**
**மெய்யணி கலன்மாலை மின்னிருந் துகிலேந்திக்**
**கையணி குழன்மாலைக் கதிர்முலை யவர்சூழ்ந்தார் 2434**

*[நெய்-புழுகு; குழை-காதணி.]*

**அவ்வளை யவிராழிக் கால்பொலிந் தழகார்ந்த**
**மைவிளை கழுநீர்க்கண் விலாசியு மணியல்குற்**
**கைவளை யலங்கார மாலையுங் கமழ்கோதை**
**நைவள மிகுசாய னங்கையைப் புனைகின்றார் 2435**

*[மை-கருமை; நைவளம்-ஒரு பண்; சாயல்-மெல்லிய மொழி: ஆகுபெயர்.]*

**யானையு ளரசன்ற னணிகிளர் வலமருப்பீர்ந்**
**தூனமி லொளிர்செம்பொன் பதித்தொளி மணியழுத்தி**
**வான்மண முறச்செய்த மங்கல மணிச் சீப்புத்**
**தான்முகில் கழிமதிபோற் றன்னுறை நீக்கினளே 2436**

*[வலமருப்பு-வலப்பக்கத்துத் தந்தம்; ஊனம்-குற்றம்; வான்மணம்-சிறந்த வாசனை. விலாசியும் அலங்காரமாலையும் இலக்கணையின் தோழிமார்கள்.]*

அஞ்சனம் அணிந்த மதயானையின் மத்தகம் போன்ற அகன்ற அல்குலும், வாசநெய் பூசிய கூந்தலும், மலர்மாலையும், ஒளிவீசும் காதுக்குழையும் உடைய இலக்கணையை, அவள் மேலணியத் தக்க அணிகலன்களையும், மாலைகளையும், ஒளிவீசும் உயர்ந்த வகை ஆடைகளையும் ஏந்தியபடி, கையால் வாரிமுடித்த கூந்தலும், மாலையும் அழகிய மார்பும் உடைய மங்கையர் சூழ்ந்து

  

நின்றனர். அழகிய வளைந்த விரல் மோதிரமுடைய காலும், நீலோற்பல மலர் போன்ற கண்களும் உடைய விலாசியும், மணிபுனைந்த மேகலையும் கைவளையும் உடைய அலங்கார மாலையும், மணமிக்க மலர்மாலை அணிந்த, நைவளப் பண்ணிலுமிக்க இனிய மொழி பேசும் இலக்கணையை அலங்கரிக்கத் தொடங்கினர். யானைகளிலே உயர்ந்த பட்டத்து யானையின் வலப்பக்கத் தந்தத்தை அறுத்து, மாசற்ற தூய ஒளிமிக்க பொன்னிலே பதித்து, ஒளிமிக்க மணிகள் வைத்தழுத்தி மணம் தங்கச் செய்த மங்கல மணிச்சீப்பை, மேகத் திரையை நீக்கிக் கொண்டு வெளிவரும் நிலவைப் போல் அதன் உறையில் இருந்து விலாசி வெளியே எடுத்தாள்.

## வேறு

மைந்நூற் றனைய மாவீ ழோதி வகுத்துந் தொகுத்தும் விரித்தும்
கைந்நூற் றிறத்திற் கலப்ப வாரிக் கமழு நானக் கலவை
ஐந்நூற் றிறத்தின் னகிலின் னாவி யளைந்து கமழ வூட்டி
எந்நூற் றிறமு முணர்வா ளெழிலேற் றிமிலின் னேற்ப முடித்தாள் 2437

[மை நூற்றன்ன-மையை நூலாக நூற்றாற்போன்ற; மா-வண்டு; ஓதி-கூந்தலை; ஏற்று இமிலின்-காளையின் திமிலைப்போல.]

கரும்புந் தேனும் மமிழ்தும் பாலுங் கலந்த தீஞ்சொன் மடவாட்
கரும்பும் மிலையு மயக்கி யாய்ந்த முல்லைச் சூட்டு மிலைச்சித்
திருந்து திங்கள் சூழ்ந்த மின்னிற் செம்பொற் பட்டஞ் சேர்த்தி
விரும்பும் முத்தம் மாலை நான்ற விழுப்பொன் மகரஞ் செறித்தாள் 2438

[மகரம்-ஒருவகை அணி; செறித்தாள்-அணிந்தாள்.]

கள்ளுந் தேனும் மொழுகுங் குவளைக் கமழ்பூ நெரித்து
வாங்கிக்
கிள்ளை வளைவா யுகிரிற் கிள்ளித் திலகந் திகழப்
பொறித்துத்
தெள்ளும் மணிசெய் சுண்ணம் மிலங்கத் திருநீர் நுதலின்
னப்பி
உள்ளம் பருகி மதர்த்த வாட்கண் ணுருவம் மையிற்
புனைந்தாள் 2439

*[நெரித்து - ஒடித்து; கிள்ளை - கிளி; உகிரின் -நகத்தால்.]*

மையை நூலாக நூற்று நெய்ததைப் போல இருண்டு திரண்ட, வண்டுகள் மொய்க்கும் மலருடைய கூந்தலைப் பிரித்தும் விரித்தும், சேர்த்து இணைத்தும், தன் கையாலே அழகுற வாரி முடித்து, வாசமிக்க கத்தூரிக் கலவையும் அகில் புகையும் நூல்முறை வகுத்தபடி போற்றத்தக்க விதத்திலே காட்டி, எந்த நூல் புலமையிலும் வல்லவளாகிய விலாசி எனுந் தோழி அழகிய எருதின் திமில் போலக் கூந்தலை அலங்கரித்தாள். கரும்பும் தேனும் அமுதும் பாலும் கலந்த கலவைபோல் இனிய மொழி பேசும் இலக்கணைக்கு அரும்பும் தழையும் இடையிட்டுக் கட்டிய, முல்லைப் போதாலான தழைமாலையுடன், முழு நிலவைச் சூழ்ந்த மின்னலைப் போல் முகத்துக்கு அழகு செய்யும் செம்பொன்னாலான நெற்றிப் பட்டத்தையும், விரும்பி அணியும், முத்துமாலை தொங்கும், மகரகண்டி யையும் அணிவித்தாள். தேனும் வண்டும் நிறைந்து மணம் வீசும் குவளை மலரை, கிளியின் வளைந்த வாய்போன்ற நகத்தாலே கிள்ளியெடுத்துக் கூந்தலைக் கோத்து வாங்கி அதனுள்ளே பொருத்தி, தெளிந்த நறுஞ்சுண்ணத்தாலான பொட்டை அழகிய நெற்றியிலே இட்டு, கணவன் அழகை அள்ளிப் பருகி மகிழ்ந்த வாள்போலும் கண்களுக்கு மையுந் தீட்டினர்.

நாகம் மருப்பி னியன்ற தோடுங் நலங்கொள் சுறவுக்
குழையும்
போக நீக்கிப் பொருவி ஃ றிருவில் லுமிழ்ந்து மின்னுப்
பொழியும்
ஏக மாகி யெரியும் மணியின் னியன்ற கடிப்பு வாங்கி
மேக விசும்பிற் றேவர் விழைய விளங்கச் சேர்த்தி னாளே

[நாகமருப்பு-யானைத் தந்தம்; சுறவுக்குழை-மகர குண்டலம்; எரியும்-ஒளிவிடும்; கடிப்பு-ஒருவகைக் காதணி.]

## வேறு

விலங்கரம் பொருத சங்கின் வெள்வளை தெளிர்க்கு
முன்கை
நலங்கிளர் பவள நன்பொன் விரன்மணி ஆழி மின்னக்
கலந்தின்று பணைத்த தோளுங் கவின்வளர் கழுத்துமார்ந்த
வலம்புரி யீன்ற முத்த மணிநிலா நக்க வன்றே 2441

[தெளிர்க்கும் - ஒலிக்கும்; கலம்தின்று-ஆபரணத்தை உள்ளே அடக்கி; பணைத்த - பெருத்த.]

மாமணி முகடு வேய்ந்த மரகத மணிச்செப் பன்ன
தூமணி முலைக டம்மைத் தொழுதகக் கமழுஞ் சாந்திற்
காமரு காம வல்லிக் கொடிகவின் கொண்டு பூத்துத்
தூமணிக் கொழுந்து மென்றோட் டுயல்வர வெழுதி னாளே

[முகடு-உச்சி; மணி - அழகு; காமரு-விருப்பூட்டும்; துயல்வர-அசையும்படி.]

யானைத் தந்தத்தால் ஆன தோட்டையும், அழகிய மகரக் குழையையும் காதிலிருந்து நீக்கிவிட்டு, ஒப்பற்ற வானவில்போல் பல வண்ண ஒளிவீசும், அழகிய ஒளி மிக்க மணிகளால் செய்யப்பட்ட காதணியை, முகில் தவழும் வானுலகில் வாழும் தேவமகளிரும் விரும்பிப் போற்றும் படி அணிவித்தனர். வளைந்த வாளால் அறுத்த சங்கு வளையல்கள் ஒலிசெய்யும் முன்கையின் பவளம் போன்ற

அழகிய சிவந்த விரல்களில் ஆணிப் பொன் மோதிரங்கள் மின்ன, பொற்கலன் அணிந்து பருத்த தோளிலும், அழகிய நீண்ட கழுத்திலும் அணிந்த வலம்புரிச் சங்கின் முத்துக்கள் வீசும் ஒளி நிலவின் அழகைக் கொடுத்தது. மணிகளால் புனைந்து, முடிவிலே மரகதத்தை வைத்து அழுத்திச் செய்த மாணிக்கச் செப்புப் போன்ற அழகிய மார்பை இடமாகக் கொண்டு இன்பூட்டும் காமவல்லிக்கொடி அழகுற வளர்ந்து மெல்லிய தோளிலே தளிராக அசையும் படி, போற்றத்தகும் வாசநறுஞ் சாந்தினால் எழுதி முடித்தாள்.

**நாண்சுமக் கலாத நங்கை நகைமின்னு நுசுப்பு நோவப்**
**பூண்சுமக் கலாத பொன்ஞாண் வடத்தொடு புரள நோக்கிப்**
**பாண்குலாய் வண்டு பாடும் படுகணை மறந்து காமன்**
**காண்கிலேன் கடிய வென்னா வுருகிமெய் கரந்திட் டானே 2443**

[நகை-ஒளி; நுசுப்பு-இடை; பாண்-இசை.]

**அவாக்கிடந் தகன்ற வல்கு லணிகிளர் திருவிற் பூப்பத்**
**தவாக்கதிர்க் காசு கண்டா ராவியைத் தளரச் சூட்டிக்**
**கவாய்க்கிடந் தணங்கு நாறுங் கண்கொளாப் பட்டு டுத்தாள்**
**உவாக் கதிர்த் திங்க ளம்மென் கதிர்விரித் துடுத்த தொத்தாள் 2444**

[தவாக்கதிர்-கெடாத ஒளி; உவா-கலைநிறைதல்.]

**இடைச்செறி குறங்கு கௌவிக் கிம்புரி யிளக மின்னும்**
**புடைச்சிறு பரடு புல்லிக் கிண்கிணி சிலம்போ டார்ப்ப**
**நடைச் சிறு பாதங் கோல மணிவிர லணிந்து நாகத்**
**துடைச்சிறு நாவிற் றோகை யிரீஇயினள் மாலை சேர்ந்தாள் 2445**

[குறங்குசெறி-துடையில் அணியும் ஓரணி; நாகத்து-பாம்பினது; தோகை-முன்றானை.]

  

சுமக்க முடியாத நாணமுடைய பெண்ணிவளின் ஒளிமிக்க மின்னல் போன்ற இடை வருந்த, மேலும் அதற்குச் சுமையாக மணிப்பூணும், பொன்நாணும், முத்து வடமும் அணிந்திருக்கக்கண்ட காமனும், பண்ணோடு கூடி வண்டுகள் பாடும், தேன் நிறைந்த மலரம்புகளை எய்வதையும் மறந்து, இத்தகைய பேரழகின் அதிசயத்தைக் கண்டதில்லை என்று கருதி, மனம் உருகி அவள் உடலோடு மறைந்து வேட்கையை விளைவித்தான். ஆசையைப் போல் அகன்ற அல்குல்மேல் அணிந்த மேகலையில் ஒளிவீசும் வானவில் போலத் தோன்றும் அழகிய பொற்காசுகளை, கண்டவர் உயிர் தளரச் சூட்டி, உடலோடு பொருந்தித் தெய்வத்தன்மை பொலியச் செய்யும் நெருக்கி நெய்த பட்டையும் அணிந்துகொண்ட இலக்கணை, நிலவு தன் அழகிய கதிரை விரித்து ஆடையாக உடுத்திக் கொண்டதைப்போல் தோன்றினாள். மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட ஒரு இணை குறங்கு செறி எனும் அணிகலன் துடையில் பொருந்தி அசையவும், அழகிய கணுக்காலைப்பற்றிக் கிண்கிணிச் சிலம்பு ஒலி செய்யவும், நடைபழகும் சிற்றடியிலும் கைவிரல்களிலும் பாதச் சிலம்பும் பன்மணி மோதிரமும் அணிந்தபின், நாகப்பாம்பின் நீண்ட சிறு நாக்கினைப் போன்ற முன்தானையை விலாசி மேலே அணிவித்தபின் அலங்கார மாலை வந்தாள்.

**அம்மல ரடியுங் கையு மணிகிளர் பவழ வாயும்**
**செம்மலர் நுதலு நாவுந் திருந்தொளி உகிரோடு அங்கேழ்**
**விம்மிதப் பட்டு வீழ அலத்தக மெழுதி யிட்டாள்**
**அம்மலர்க் கண்ட முள்ளிட் டரிவையைத் தெரிவை**
**தானே 2446**

[வீழ-விரும்ப; அலத்தகம்-செந்நிறம்; உகிர்-நகம்.]

**வாண்மதர் மழைக்க ணோக்கி வருமுலைத் தடமு நோக்கிக்**
**காண்வர வகன்ற வல்குற் கண்விருப் புற்று நோக்கிப்**

பாணுவண் டரற்றுங் கோலச் சிகழிகைப் படியு நோக்கி
ஆண்விருப் புற்று நின்றா ரவ்வளைத் தோளி னாரே 2447

[காண்வர-அழகுவர; பாணு-பாட்டு; சிகழிகை-மயிர்முடி.]

## வேறு

தெருள்கலான் படைத்தவன் காணிற் செவ்வனே
மருள்கலா தவர்களு மருள்வர் மம்மர்நோய்
இருளிலா ரெங்ஙன முய்வ ரின்னதால்
அருளிலா ரவணல மணிந்த வண்ணமே 2448

[தெருள்கலான்-அறியான்; மம்மர்-மயக்கம்.]

அழகிய மலர் போன்ற சேவடியிலும், கையிலும் அழகிய பவளத்துண்டு போன்ற சிவந்த வாயிலும், அழகிய நெற்றியிலும், நாவிலும், ஒளியுடைய நகத்திலும், கண்டவர் மயங்க விருப்பூட்டும் செந்நிறத்தை; இலக்கணைக்கு அலங்காரமாலை, மாலையணிந்த அவள் கழுத்தை உள்ளிட்டு எழுதினாள். ஒளிமிக்க உடைய, மழைபோலக் குளிர்ச்சி பொழியும் கண்களையும், விம்மிய மார்பையும் பார்த்து, அழகுற விரிந்த மேகலையையும் ஆசையோடு நோக்கி, இசைபாடும் வண்டுகள் மொய்த்து முழங்கும், அழகிய கூந்தல் முடிப்பையுங் கண்டு, அவளை அடைந்தின்புறும் ஆண்மையை விரும்பி நின்றனர் அவளுடைய தோழிகள். இவளைப் படைத்தவன் கண்டாலும் இவள் தான் படைத்த வடிவமா என்றெண்ணி மயங்குவான்; பெண்ணழகில் மயங்காத பெருஞ்சித்தம் உடையவர்களும் இவள் அழகைக் கண்டால் மதிமயங்கிப் போவார்கள் என்றால், இயல்பாகவே பெண்மையில் மயங்கும் இயல்புடைய இல்லற வாழ்விலே ஈடுபட்டிருப்பவர்கள் எப்படித் தப்பிப் பிழைப்பார்கள் என்றெண்ணும்படி இருந்தது, இரக்கமில்லாத அவள் தோழிகள் அவள் அழகை அலங்கரித்த விதம்.

  

அலர்ந்தவந் தாமரை யல்லிப் பாவையைப்
புலந்துகண் சிவந்தன போன்று நீர்பிரிந்
திலங்கிமின் னுமிழ்ந்துலா மேனி யேந்துபொன்
மலர்ந்ததோர் கற்பக மணிக்கொம் பாயினாள் 2449

[புலந்து-வெறுத்து; அல்லிப்பாவை-திருமகள்.]

மருடகு மல்லிகை மாலை வல்லவன்
பொருடகத் தொடுத்தன புனைந்த பூஞ்சிகை
இருடுணித் திடையிடை யியற்றி வெண்ணிலாச்
சுருடுணித் தொருவழித் தொகுத்த தொத்ததே 2450

[மருள் தகு-மயக்கம் பொருந்தற்குக் காரணமான;
பூஞ்சிகை-அழகிய முடி.]

கோமக ளுருவமாய்க் கூற்றம் போந்தது
போமினும் முயிருயக் கொண்டு போய்மனம்
காமின மெனக்கலை சிலம்பு கிண்கிணி
தாமனும் வாயினாற் சாற்று கின்றவே 2451

[கலை-மேகலை; மனும்-மன்னும், மிகவும்.]

அருளிலா ரிவள்தம ரன்ன ராயினும்
உருடிரை யுலகெலா முருளு மின்றெனக்
கருதின கவரிசாந் தாற்றி வெண்குடை
அரிவையை மறைத்தன ஆல வட்டமே 2452

[தமர்-உறவினர்; உருளும்-கெடும்; சாந்தாற்றி-
சிற்றால வட்டம்.]

விரிந்து மலர்ந்த தாமரையில் இருந்து வாழும் திருமகளை வெறுத்து விழித்ததைப்போல, மையெழுதியதால் கண்ணீர் வடிந்து சிவந்த கண்களையுடைய இலக்கணை ஒளிமிக்க பொற்பூண் அணிந்து அழகுக்கு அழகு செய்யும் தன்மேனி வனப்பால் ஒளி விளங்கும் பொன் மலர்ந்த ஒரு கற்பகப் பூங்கொடி போலாயினாள். நன்மாலை தொடுப்பதில் கைதேர்ந்தவன் பொருள் பொதியத் தொடுத்துத் தந்த, மயக்கந்தரும் மல்லிகை

மாலையைச் சூடிய அவள் கருங்கூந்தல், இருளைப் பிளந்து இடையிடையே வெண்ணிலவின் ஒளிக் கீற்றுகளைக் குவித்து வைத்த தன்மையைப் பெற்றது. 'கொல்லுகின்ற எமன் கோவிந்தமன்னன் மகளுருவத்தில் வந்திருக்கிறான். எனவே உயிர் தப்பிப் பிழைக்க விரும்புபவர்கள் இவளைக் காணாது போய் விடுங்கள். போவது மட்டுமல்ல! உங்கள் உள்ளம் இவள்பால் செல்லாமலும் பாதுகாத்துக் கொள்க!' என்று பறை அறைவதுபோல் அவளணிந்த மேகலையும் சிலம்பும் ஒலி செய்தன. இவ்வாறு கண்டவர் மதி மயங்கிக் கலங்க இவள் அழகுக்கு அழகு செய்தவர்கள் இரக்கமே இல்லாதவர்கள். என்றாலும், உருளும் அலையுடைய கடல் சூழ்ந்த உலகம், இவள் அழகைக் காண நேரின் உருண்டழியுமே என்று கருதி, வீசுகிற வெண் கவரியும் சாந்தாற்றியும் வெள்ளைக் குடையும் ஆலவட்டமும் அவள் அழகை மறைத்தன.

### வேறு

**கரும்பே தேனே யமிர்தே காமர் மணியாழே**
**அரும்பார் மலர்மே லணங்கே மழலை யன்னம்மே**
**சுரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்**
**பெரும்பூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமானே 2453**

[மழலை யன்னம்-இளைய அன்னம்; பிணைமான்-பெண்மான்.]

**அம்மெல் லனிச்சம் மலரு மன்னத் தூவியும்**
**வெம்மை யாமென் றஞ்சி மெல்ல மிதியாத**
**பொம்மென் னிலவப் பூம்போ தனநின் னடிபோற்றி**
**இம்மென் கலையா ரிடுவென் றேத்த வொதுங்கினாள்**

[கலையார் - மேகலையையணிந்த மகளிர்; ஒதுங்கினாள்-நடந்தாள்; பொம்மென், இம்மென்-ஒலிக் குறிகள்.]

**தூமாண் தூமக் குடமா யிரமாய்ச் சுடர்பொற்றூண்**
**தாமா யிரமாய்த் தகையார் மணித்தூ ணொருநூறாய்ப்**

பூமாண் தாமத் தொகையாற் பொலிந்த குளிர்பந்தர்
வேமா னியர்தம் மகளின் விரும்ப நனிசேர்ந்தாள் 2455

*[தூ-தூய்மை; தகை-அழகு; பூமாண் தாமம்-பூக்களால் சிறந்த மாலை.]*

தேனார் காமன் சிலையுங் கணையுந் திறைகொண்ட
வானார் மதிவாண் முகமும் மடமான் மதர்நோக்கும்
கோனார் மகள்தன் வடிவு நோக்கிக் குடைமன்னர்
ஆனார் கண்ணூ டழல்போ யமையா ரானாரே 2456

*[காமன்சிலை-கரும்பு; திறைகொண்ட-வென்ற.]*

'கன்னல் கரும்பே! கொம்புத்தேனே! உயிரளிக்கும் அமுதே! உணர்வூட்டும் நல்யாழே! அரும்பி மலரும் மலர்மேல் வாழும் திருமகளே! ஆசை அன்னமே! வண்டுகள் பாடும் வண்ணமலர்ச்சோலை வாழும் இன்ப மயிலே! இன்னிசைக் குயிலே! ஒளிமிக்க பொற்பூண் அணிந்த கோவிந்த மன்னன் பெற்றவளே! பூமகளே! பெண்மானே! அழகிய மெல்லிய அனிச்ச மலரும் அன்னத்தின் தூவியும் உன் காலுக்குத் துன்பந்தரும் என்று அவற்றை மிதிக்கவும் எண்ணாத, 'பொம்' என்று வண்டுகள் மொய்த்துப் பாடும் இலவமலர் போன்ற உன் அழகிய சேவடியை எடுத்து வை' என்று 'இம்' என்று ஒலியெழுப்பும் மேகலையணிந்த தோழியர்கள் வேண்ட இலக்கணையும் எழுந்து நடக்கலானாள். தூய்மை உடைய சிறந்தவாசநறும் புகைக் குடங்கள் ஆயிரமும், ஒளிவிளங்கும் பொற்றூண்கள் ஆயிரமும், அழகிய மணித்தூண்கள் ஒரு நூறும், பூமலிந்த மாலைத் தொகையும் மலிந்து சிறந்த பூப்பந்தலை, தேவமகளைப்போலக் கண்டவர் வியக்கச் சென்று சேர்ந்தாள். வேட்கையை விளைவிக்கும் காமனது வில்லையும் மது நிறைந்த மலர்க்கணைகளையும் வெற்றி கொண்ட, வானத்து முழுநிலவின் அழகுடைய ஒளிமுகமும், மானைப் பழிக்கும் அழகிய பார்வையும் உடைய கோவிந்தமன்னன் மகளாகிய இலக்

கணையின் அழகைக் கண்டு வந்திருந்த மன்னர் எல்லாம் பொறிகலங்கி மதி மயங்கிப் போயினர்.

## வேறு

வண்டலர் கோதை வாட்கண் வனமுலை வளர்த்த தாயர்
கண்டுயி ருண்ணுங் கூற்றங் கயிறுரீஇக் காட்டி யிட்டார்
உண்டுயிர் சிலர்கண் வாழ்கென் றுத்தரா சங்கம் வைத்தார்
தெண்டிரை வேலி யெங்குந் தீதின தாக மாதோ 2457

[உத்தராசங்கம்-மேலாடை; திரைவேலி-உலகம்.]

கண்ணினா லின்று கண்டாங் கூற்றினைக் காமர் செவ்வாய்
ஒண்ணுத லுருவக் கோலத் தொருபிடி நுசுப்பிற் றீஞ்சொல்
வண்ணித்த லாவ தில்லா வருமுலை மதர்வை நோக்கிற்
பெண்ணுடைப் பேதை நீர்மைப் பெருந்தடங் கண்ணிற்
றம்மா 2458

[கோலத்து - அழகையும்; பெண் - அமைதித்தன்மை; கண்ணிற்று-கண்களையுடையது; வண்ணித்தல்-வருணித்தல்.]

அரத்தக மருளிச் செய்த சீறடி யளிய தம்மாற்
குரற்சிலம் பொலிப்பச் சென்னிக் குஞ்சிமேன் மிதிப்ப
நோற்றான்
திருக்குலாய்க் கிடந்த மார்பிற் சீவக னாங்க ளெல்லாம்
தரித்திலந் தவத்தை யென்று தார்மன்ன ரேமுற் றாரே

[அரத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு; குலாய் - விளங்கி; ஏமுற்றார்-மயக்கமடைந்தனர்.]

'வண்டுகள் மொய்க்கும் மலர் நிறைந்த மாலை அணிந்த இலக்கணையை வளர்ந்ததாயர் இவளது வாள் போலும் கண்ணும், வனப்புடைய மார்பும் கண்டவர் உயிரைக் கொல்லும் கூற்றம் என்பதைத் தெரிந்திருந்தும் அந்தோ! அவற்றை வார்க்கச்சினால் இறுக்கக் கட்டி வைத்தனர். என்றாலும் அன்பு கொண்டு இவள் கண்கள் மட்டும், சிலர் உயிர் உண்டு பிழைக்க இருக்கட்டும் என்று கருதியவராய் அதை

  

மறைக்காமல், மார்பை மட்டும் மூட மேலாடையை அணிவித்தனர். உயிரை வாங்கும் எமனை இன்று கண்ணினால் கண்டோம். விருப்பூட்டும் சிவந்த வாயையும், அழகிய நெற்றியையும், புதுமை பூண்ட தோற்றத்தையும், கைப்பிடிக்குள்ளடங்கும் சிற்றிடையையும், இனிய சொல்லையும் வார்த்தைகளால் வருணிக்க முடியாத அழகிய மார்பையும், மான் போன்ற பார்வையையும் பெற்று, பெண்ணில் பேரழகாய், பெரிய கண்கள் உடையதாய், அந்த எமன் இதோ இவளுருவில் வந்திருக்கிறதே! செம்பஞ்சுக் குழம்பு பூசிய, பிறர் கண்டு மருளக்கூடிய, அடைந்தவர்க்கு அன்பளிக்கத்தக்க சிற்றடிகள், சிலம்பு ஒலிக்கத் தலைமாலையின் மேல்படத் தவமிருந்து நோற்றவன், திருமகள் பொருந்திக் கிடக்கும் மார்புடைய சீவகனே அன்றி அத்தகைய பெருந்தவப் பேற்றை நாங்களும் பெற்றிலமே' என்று மனமுடைந்து, மலர்மாலையணிந்த மன்னவர் எல்லாம் மயங்கி நின்றனர்.

**கோவிந்த னென்னுஞ் செம்பொற் குன்றின்மேற் பிறந்து கூர்வேற்**
**சீவக னென்னுஞ் செந்நீர்ப் பவளமா கடலுட் பாய்வான்**
**பூவுந்தி யமுத யாறு பூங்கொடி நுடங்கப் போந்து**
**தாவிரி வேள்விச் சாலை மடுவினுட் டாழ்ந்த தன்றே 2460**

[பூவுந்தி-நந்தியாவட்டப் பூவைப்போன்ற கொப்பூழ்; தாஇரி-குற்றம் நீங்கிய.]

**சாணிடை நெடிய வாட்கண் தளையவிழ் குவளை பூப்பப்**
**பூணுடை முலையின் பாரம் பொறுக்கலாச் சுளிவின் மேலும்**
**நாணட நடுங்கிக் கையா னகைமுகம் புதைத்த தோற்றம்**
**சேணிடை யரவு சேர்ந்த திங்களை யொத்த தன்றே 2461**

[சாணிடை-சாணளவு; சுளிவு-கோபம்; நாண் அட-நாணம் வருத்துதலால்; சேணிடை-ஆகாயத்திடை.]

**முத்துமிழ் திரைக ளங்க மொய்கொள்பா தால முத்தீ**
**ஒத்தன வேலை வேள்வி யொலிகட னான்கு நாண**
**வைத்த நான் மறையுநீந்தி வான்குண மென்னுஞ் சாலி**
**வித்திமே லுலகத் தின்பம் விளைத்துமெய் கண்ட நீரார்**

*[அங்கம்-வேதாங்கம்; சாலி-ஒருவகை நெல்; வித்தி-விதைத்து.]*

**தருமணற் றருப்பை யார்ந்த சமிதையிம் மூன்றி னானும்**
**விரிமல ரணிந்த கோல வேதிகை யியற்றி யானெய்**
**ஒருமணி யகலுட் பெய்தோர் பொன்னக லார்ந்த தூபம்**
**இருமணி யகலுள் நீர்பெய் திடவயி னிரீஇயி னாரே 2463**

*[வேதிகை - திண்ணை; பொன்னகல் - பொன்னாற் செய்த அகல்; இரீஇயினர்-இருத்தினர்.]*

கோவிந்த மன்னன் என்னும் செல்வச்செழும் பொற் குன்றிலே உற்பத்தியாகி, கூர்மிக்க வேலுடைய சீவகன் என்னும் புதுநீருடைய பவளப்பெருங் கடலில் சங்கமம் ஆகவேண்டி வழிநடந்து வந்த, மலர் உந்தியுடைய, அமுத ஊற்றாகிய, இலக்கணை என்னும் ஆறு புனித மிகும் வேள்விச் சாலையாகிய மடுவிலே (மணவறையிலே) சற்றே தங்கியது. பொற்பூண் அணிந்த முலைகளின் பாரத்தைச் சுமக்க முடியாத கோபத்தோடுகூட, நாணம் வேறு வந்து வாட்ட வருந்தி, ஒரு சாண் அளவு நீண்ட, வாள் போன்ற, விரிந்து மலர்ந்த குவளை மலர்போலும் அழகிய கண்கள் மறையக் கைகளால் புன்னகை பொலியும் முகத்தை மறைத்த தோற்றம், விண்ணிடைப் பாம்பு பற்றிய நிலவின் தன்மையை ஒத்தது. முத்துகள் சிந்தும் அலைகள் அங்கமாகவும், வலிமை மிக்க பாதாளம் முத்தீயாகவும், புரிகின்ற தவவேள்வி பொருந்திய கரைகளாகவும் ஒலியெழுப்பி முழங்குகின்ற கடல் நான்கும் வெட்கும் படி வேதம் ஓதிக் கரைகண்டு நல்லொழுக்கமாகிய சாலி நெல்லை விதைத்து, வானுல இன்பத்தை விளைவிக்கும், மெய்ப்பயனாகிய மேன்மை கண்ட அந்தணர், அக்கினி

குண்டத்திலே இடக்கொண்டு வந்த மணலையும், தருப்பைப் புல்லையும், சமிதையும் பரப்பி, புதுமலர்கள் நிறைய இட்டு அழகுறத் திண்ணை அமைத்து, ஒரு மணி அகலிலே பசுவின் நெய்யையும், ஒரு பொன் அகலிலே வாசப்புகை மணக்கும் தூபத்தையும், இன்னுமிரு மணியகல்களிலே நீரையும் நிறைத்து முறைப்படி அவற்றிற்குரிய இடங்களில் வைத்தனர்.

நெற்பொரி நிறையப் பெய்து நிழலுமிழ் செம்பொன் மூழிக்
கற்புரி கடவு ளான்பா லவியொடு கலப்ப வைத்து
முற்பெரி யானை யாகத் தருப்பையான் முடிந்து மூன்று
பொற்புரி வரையும் பொய்தீர் சமிதைகளி ரண்டும் வைத்தார்

[மூழி-பொற்கலம்; முற்பெரியான்-பிரமன்.]

மந்திர விதியின் மாண்ட சிறுவிரற் றருப்பை சூழ்ந்து
முந்துநா மொழிந்த நெய்யை முனைமுதிர் தருப்பை தன்னால்
மந்திரித் தமைய முக்கான் மண்ணிமற் றதனை நீக்கிச்
சிந்தித்து மறையிற் செந்தீத் தண்டிலத் தங்கண் வைத்தார்

[முக்கால் மண்ணி-மும்முறை கழுவி; தண்டிலம்-ஓமகுண்டம்.]

தண்டிலத் தகத்திற் சாண்மே லெண்விரற் சமிதை நானான்
எண்டிசை யவரு மேத்தத் துடுப்புநெய் சொரித லோடும்
கொண்டழற் கடவுள் பொங்கி வலஞ்சுழன் றெழுந்த தென்ப
தெண்டிரை வேலி யெங்குந் திருவிளை யாட மாதோ 2466

[அழல்-நெருப்பு; தெண்-தெளிந்த.]

கரையுடைத் துகிலிற் றோன்றுங் காஞ்சன வட்டின் முந்நீர்த்
திரையிடை வியாழந் தோன்றத் திண்பிணி முழவுஞ் சங்கும்
முரசொடு முழங்கி யார்ப்ப மொய்கொள்வேன் மன்ன ரார்ப்ப
அரசரு ளரச னாய்பொற் கலசநீ ரங்கை யேற்றான் 2467

[காஞ்சன வட்டில் - பொற்கிண்ணம்; அங்கை-உள்ளங்கை.]

நெல்லால் ஆக்கிய பொரியை ஒளிவீசும் செம் பொன்னாலான பாத்திரத்தில் நிறைய இட்டு, அம்மி யையும், பசுவின் பாலோடு கலந்த நெய்யையும் வைத்து, தருப்பைப் புல்லாலே பிரம்மமுடி புனைந்து, முப்புறமும் கீறி இரண்டு சமிதையும் வைத்தனர். சிறு விரலிலே தருப்பை அணிந்து, முன்பு கூறிய ஓம நெய்யை, வேதாகமப்படி சிறந்த, முற்றிய, தருப்பைப் புல்லின் நுனியால் மந்திரித்து, அதை மூன்று முறை கழுவித் தீயிலே இட்டு, வேதம் ஓதி ஓமத்தீக்கு அருகே வைத்தனர். எட்டு விரற்கிடை அகலமும் ஒரு சாண் உயரமும் பதினாறு சமிதும் இட்டுப் பரப்பிய ஓமகுண்டத்தில் எட்டுத் திக்கிலு முள்ள தேவர்கள் போற்றத் துடுப்பினால் நெய்யை வார்த்தனர். அதையுண்டு வேள்வித் தீ, நீர் சூழ்ந்த உலக மெல்லாம் நிறைசெல்வம் பொங்கி, வாழ்வு சிறக்க வலப் புறமாகச் சுழன்று எழுந்தது. வெண்பட்டு உடையில் பொலியும் பொன் வட்டுப்போல, கரை சூழ்ந்த கடலலை மேல் வியாழ தேவன் தோன்ற, இழுத்துக் கட்டப்பட்ட முழவும், முரசும், சங்கும் முழங்கி ஒலியெழுப்ப, வேற் படை நிறைந்த மன்னர்கள் வாழ்த்தி ஆரவாரிக்க, மன்னர்க்கு மன்னன் ஆகிய மாமன்னன் சீவகன், சிறந்த பொன்னால் செய்த கமண்டலத்தின் நீரைத் தன் கையிலே ஏந்திவிட்டான்.

**குளிர்மதி கொண்ட நாகங் கோள்விடுக் கின்ற தேபோல்**
**தளிர்புரை கோதை மாதர் தாமரை முகத்தைச் சேர்ந்த**
**ஒளிர்வளைக் கையைச் செல்வன் விடுத்தவ ளிடக்கை பற்றி**
**வளரெரி வலங்கொண் டாய்பொற் கட்டிறா னேறி னானே 2468**

*[கோள்-கிரகணம்; தளிர்புரை-தளிர் போன்ற.]*

**விளங்கொளி விசும்பிற் பூத்த அருந்ததி காட்டி ஆன்பால்**
**வளங்கொளப் பூத்த கோல மலரடி கழீஇய பின்றை**

இளங்கதிர்க் கலத்தி னேந்த அயினிகண் டமர்ந்தி ருந்தான்
துளங்கெயிற் றுழுவை தொல்சீர்த் தோகையோ டிருந்த
தொத்தான் 2469

[பூத்த-தோன்றிய; ஆன்பால்-பசுவின்பால்; கலம்-பாத்திரம்; கலத்தில் அயினியை ஏந்தக் கண்டு. அயினி-அன்னம்; உழுவை-புலி; தோகை-மயில்.]

வேறு

பொன்னங் காழிற் பொலிந்த முத்து விதானம்
புணர்ந்துதேன்
மன்னு மாலை பலதாழ்ந்து மணப்புகை விம்மி மல்கிய
அன்னத் தூவி யடர்பஞ்சி யவிர்மயி ராதி யாகப்
பன்னிச் சொன்ன பதினைந்தும் படுத்தார் பாவை மார்களே

[பொன்னங்காழ்-பொற்காம்பு; தாழ்ந்து - தாழப் பட்டு.]

வெண்ணிலவைப் பற்றிய இராகு என்னும் பாம்பு விட்டதும் நீங்குகிற கிரகணத்தைப்போல, இலக்கணையின் தாமரை மலர் போன்ற முகத்தை மூடி மறைத்திருந்த தளிர் போன்ற கைகளை மாலையணிந்த மங்கையர் விடுவிக்க, சீவகன் அவளின் வளையணிந்த இடது கையைப் பற்றி வளரும் ஓமத்தீயை வலம் வந்து அழகிய பொன்கட்டிலிலே ஏறியமர்ந்தான். ஒளிவீசும் வானத்திலே மின்னும் அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டி, அழகுற அமைந்த மலர் போலும் காலடியைப் பசுவின் பாலால் கழுவிய பின்னர், மின்னொளி வீசும் பொற்கலத்தில் பெண்கள் ஏந்திய உணவை நோக்கியபடி அமர்ந்திருந்த சீவகன், ஒளி வீசும் பற்களுடைய புலி புகழ்ப் பெருமை மிக்க ஒரு மயிலோடு இணைந்து இருந்ததைப் போல் தோன்றினான். பொன்னுருக்கிச் செய்த கால்களை நிறுத்தி அதன்மேல் முத்துச் சரங்களைக் கோத்துக் கட்டி, தேன் நிறைந்து வழியும் மலர் மாலைகள் பல தொங்கித் துவள வாச நறும் புகை மிகுந்து கமழும்

மணவறையில், அன்னத்தின் தூவி அடர்ந்த பஞ்சு, கம்பளி ஆகிய படுக்கை மென்விரிப்புகள் பதினைந்தையும் பணிப் பெண்கள் பரப்பி வைத்தனர்.

### வேறு

பனிமயிர் குளிர்ப்பன பஞ்சின் மெல்லிய
கனிமயிர் குளிர்ப்பன கண்கொ ளாதன
எலிமயிர்ப் போர்வைவைத் தெழினி வாங்கினார்
ஒலிமயிர்ச் சிகழிகை யுருவக் கொம்பனார் 2471

[பனித்தல்-நடுங்குதல்; எழினி-உருவுதிரை.]

விழுத்தகு மணிச்செவி வெண்பொற் கைவினை
எழிற்பொலி படியக மிரண்டு பக்கமும்
தொழிற்பட வைத்தனர் துளும்பு மேகலைக்
கழித்தவே லிரண்டுகண் டனைய கண்ணினார் 2472

[கைவினை-தொழில்; படியகம்-காளாஞ்சி.]

### வேறு

அங்கருங் காலி சீவி யூறவைத் தமைக்கப் பட்ட
செங்களி விராய காயுஞ் செம்பழுக் காயுந் தீந்தேன்
எங்கணுங் குளிர்த்த வின்னீ ரிளம்பசுங் காயு மூன்றும்
தங்களி செய்யக் கூட்டித் தையலார் கைசெய் தாரே 2473

[செங்களி-செங்குழம்பு; குளிர்த்த - குளிர்ப்பித்த; காய்-பாக்கு.]

கைசெய்து கமழு நூறுங் காழ்க்கும்வெள் ளிலையுங் காமம்
எய்தநன் குணர்ந்த நீரா ரின்முக வாச மூட்டிப்
பெய்த பொற் செப்பு மாலைப் பெருமணிச் செப்புஞ் சுண்ணம்
தொய்யறப் பெய்த தூநீர்த் தொடுகடற் பவளச் செப்பும் 2474

[கமழும் நூறு-வாசனைச் சுண்ணாம்பு; காழ்க்கும் வெள்ளிலை-உறைக்கின்ற வெற்றிலை; நீரார்-தன்மையராகிய மகளிர்; தொய்-குற்றம்.]

நீர் துளித்துக் குளிர்ச்சி தருவதும், பஞ்சைக் காட்டிலும் மெல்லியதும், தீயிலே வேகாமல் குளிரச்செய்வதும், கண் பார்வை நுழைய முடியாதபடி நெருக்கி நெய்ததும் ஆகிய, எலி மயிரைக் கொண்டு செய்த அழகிய திரையை, தழைத்து வளர்ந்த முடிக் கூந்தலுடைய அழகிய பூங்கொடி போன்ற பெண்கள் அமைத்தனர். பிறகு அழகுற மணிகள் பதித்துச் செய்த காதுடைய, வெள்ளியால் செய்த, வேலைப்பாடுகள் மிக்க, அழகிய படிக்கங்களை, இருவருக்குமாக இரண்டு பக்கமும், ஒளிமிக்க மேகலையும், உறை நீக்கிய வேல் போலும் கூரிய இரு கண்களும் உடைய பணிப்பெண்கள் பாங்குற அமைத்தனர். அழகிய கருங்காலி மரத்தைச்சீவி, ஊறவைத்துக் காய்ச்சிய செங்குழம்பு நிறமான களிப்பாக்கு, முற்றிய கொட்டைப் பாக்கு, சுவை மிக்க தேன் போலக் குளிரச் செய்யும் பச்சைப் பாக்கு ஆகிய மூன்றையும் பெண்கள் இனிமை தரக் கூட்டி வைத்தனர். இன்ப வேட்கை இருவருக்கும் ஈடின்றி உண்டாகச் செய்யும் வகையறிந்த பெண்கள், வகையுறச் செய்த வாசச் சுண்ணாம்பும், உறைக்கின்ற வெற்றிலை இனிய முகவாசங்கள் கலந்து வைத்த பொன் சிமிழும், மாலைகள் நிறைத்து வைத்தபெரிய மணி வட்டிலும், நறுமணப் பொடிகளைப் பழுதின்றி நிரப்பி வைத்த தூய நீருடைய கடலில் தோன்றிய பவளத்தால் செய்த, பெட்டியும்,

**தாமணி நானச் செப்புஞ் சலஞ்சலக் கலன்பெய் செப்பும்**
**தூமணித் துகில்க ளார்ந்த வலம்புரித் துலங்கு செப்பும்**
**காமநீர்க் காம வல்லி கவின்கொண்டு வளர்ந்த தேபோல்**
**நாமவே னெடுங்கட் பாவை நயப்பன வேந்தி னாரே 2475**

*[நானம்-வாசப்புனுகு; சலஞ்சலம்-சங்குவகை.]*

**விரிகதி ரார மின்னித் தாரெனுந் திருவில் வீசிக்**
**குரிசின்மா மேகம் பெய்த கொழும்புயற் காம மாரி**
**அரிவைதன் னெஞ்ச மென்னு மகன்குள நிறைந்து வாட்கட்**
**கரியமை சேறு சிந்திக் கலிங்குகள் திறந்த வன்றே 2476**

[ஆரம்-முத்துமாலை; மா - கருமை; கலிங்குகள்-மதகுகள்.]

**தோக்கையுந் துகிலி னாள்தன் துணைமுலை பொருது சேந்த**
**ஏக்கொசி விலாத வில்லா னிடுகொடி யகல மின்றேன்**
**தேக்கிவண் டிமிருங் கோதை செல்வன்றா ருழக்க நைந்து**
**பூக்கொய்து துவண்ட கொம்பின் பொற்பின ளாயி**
**னாளே 2477**

[ஏக்கு ஒசிவிலாத-விற்றொழிலுக்குக் கெடுதலில்லாத; தோக்கை-கொய்சகம்.]

**அணித்தகு பவள மேற்பக் கடைந்துமுத் தழுத்தி யம்பொன்**
**துணித்தடி விளிம்பு சேர்த்தித் தொழுதகச் செய்த வண்கை**
**மணிச்சிரற் சிறகு நாண வகுத்தசாந் தால வட்டம்**
**பணித்தகு மகளிர் வீசிப் பாவையைக் குளிர்ப்பித் தாரே**

[கை-விசிறியின் காம்பு; மணிச்சிரல்-நீலமணியைப் போன்ற சிச்சிலியென்னும் பறவை.]

மாலை புனைந்த கத்தூரிச் செப்பும், சங்கு வடிவமாகச் செய்த அணிமணிகள் நிறைத்த சிமிழும், தூய அழகிய ஆடைகள் வைத்த வலம்புரிச் சங்கு வடிவாகச் செய்யப்பட்ட பெட்டியும் ஆகிய பிறவற்றையும், காம வேட்கையாகிய நீரிலே தோன்றிய அழகிய காமவல்லிக் கொடிபோன்ற, வருத்தும் வேல் போன்ற நீண்ட கண்களுடைய இலக்கணை விரும்ப, (பணிப் பெண்கள்) ஏந்தி நின்றனர். மிகுந்த ஒளியுடைய மணி ஆரங்கள் மின்னலாய் மின்ன, மேலணிந்த மாலைகள் வானவில்லாய் ஒளிவீச, சீவகனாகிய பெரிய கருமுகில் பெய்த பெருமழையாகிய இன்ப வெள்ளம், இலக்கணையின் உள்ளம் என்னும் அகன்ற குளமுற்றும் நிறைந்து வழிய, வாள் போன்ற கண்களாகிய மதகு, எழுதிய மையாகிய சேறு வழிய, மகிழ்ச்சியால் விரிந்து மலர்ந்து திறந்தன. விற்போருக்குச் சளைக்காத வில்லை ஏந்திய சீவகனுடைய கொடி எழுதப்பட்ட மார்பாகிய மலையோடு, கொசுவம் வைத்துக்

  

கட்டிய அழகிய ஆடையணிந்த இலக்கணையினுடைய இருமார்பும் மோதிச் சிவந்தன. அதேபோல் சீவகனுடைய மாலைகள் அவள்மேல் படிந்து முயங்க அவளும், மலர்கள் எல்லாம் பறிக்கப்பட்ட பின்னர்த் துவண்டு நிற்கும் பூங் கொடியைப் போலானாள். அழகிய பவளத்தில் அருமையாகக் கடைந்து, முத்து வைத்தழுத்தி, பொன் துண்டுகளை விளிம்பிலே பொருத்திச் செய்த உயர்ந்த கைப்பிடி உடைய, அழகிய சிச்சிலிப் பறவையின் சிறகைப் பழிக்கும் சந்தன ஆலவட்டத்தாலே, பணிபுரியும் பண்பில் வல்ல பணி மகளிர் விசிறி, இலக்கணையின் சோர்வைப் போக்கினர்.

### வேறு

**சேந்து நீண்டசெழுந் தாமரைக் கண்களின்**
**ஏந்தி மாண்டமுலைக் கண்களி னெழுதிச்**
**சாந்த மாகமெழு தித்தகை மாமலர்**
**ஆய்ந்து சூட்டியவ னஞ்சலி செய்தான்** 2479

*[சேந்து-சிவந்து; மாண்ட-சிறப்பு மிக்க.]*

**மணிசெய் வீணைமழ லைக்குழல் பாண்டிலொ**
**டணிசெய் கோதையவர் பாடிய கீதம்**
**பணிவில் சாயல்பரு கிப்பவ ளக்கொடி**
**மணியு முத்துமலர்ந் திட்டதொத் தாளே** 2480

*[பாண்டில்-தாளம்; மணி-பவளம்.]*

**எய்த்து நீர்ச்சிலம் பின்குரன் மேகலை**
**வித்தி மாதர்வருத் தம்விளைத் தாளெனத்**
**தத்து நீர்த்தவ ளைக்குரற் கிண்கிணி**
**உய்த்தொர் பூசலுட னிட்டன வன்றே** 2481

*[எய்த்து-உணர்ந்து; பூசல்-சண்டை.]*

**ஏந்தி நாங்களுட னேயிடு பூசலை**
**வேந்தர் வேந்தன்கொடுங் கோலின னர்கி**
**ஆய்ந்து கேட்டுமரு ளானென் றவிந்தன**
**சாந்த மேந்துமுலை யாள்கலந் தாமே** 2482

*[அவிந்தன-ஒலியடங்கின; கலம்-ஆபரணம்.]*

சீவகன், சிவந்து நீண்ட தன் செந்தாமரைக் கண்களினால் அவள் அழகை அளந்து, நிமிர்ந்து உயர்ந்த அவளின் முலைமீதும் மார்பின் மேலும் சந்தனத்தாலே தொய்யில் கொடியெழுதி, நறுமலர்களாக எடுத்துச் சூட்டினான். (ஆனால் இலக்கணையோ கூடலுக்கு இடையூறு செய்தான் என்று ஊடினாள். அதனை உணர்ந்த அவன்) தனது தாமரை மலர் போலும் கண்களால் அவளது முலைக் கண்களை ஒற்றிக் காலடியில் வீழ்ந்து வணங்கினான். (இலக்கணை ஊடல் தீர்ந்தாள்.) மணிகள் பதித்த கோடுடைய யாழும், மழலைபோல் ஒலிக்கும் குழலும், அழகு தரும் மாலை சூடிய மங்கையர் தாளத்தோடு பாடிய பாட்டும் கேட்டு அழகு நலமுடைய இலக்கணை, ஒரு பவளக்கொடி முத்தும் மணியும் கொண்டு மலர்ந்ததைப் போலிருந்தாள். காதலை விளைத்து இவள் தமக்கு வருத்தம் உண்டாக்கினாள் என்று நினைத்து, ஒலிக்கும் தன்மையுடைய சிலம்பும், இனிய குரல் உடைய மேகலையும், நீர்த்தவளையின் குரலைப்போல ஒலியெழுப்பும் கிண்கிணிச் சிலம்பும் ஒன்றோடொன்று பூசலிட்டுக்கொண்டன. இலக்கணை வருந்துவாளே என்று கருதி, அவள் நலங்கருதி நாங்களிட்ட பூசலை, அரசர்க்கு அரசனாகிய சீவகன் அறிந்தாலும், ஆராய்ந்து நீதி வழங்கமாட்டான். அவள் காதலையும், புணர்ச்சியையும் இவனும் விரும்புவதால், கொடுங்கோலனாகி நம்மையே தண்டிப்பான், என்று கருதியவையாய்ச் சந்தனம் அப்பிய மார்புடைய அவள் அணிகலங்கள் பூசல் ஒழித்துப் பொறுமை அடைந்தன.

### வேறு

**வீடுமலி யுலகினவர் போலவிளை யாடும்**
**தோடுமலி கோதையொடு துதைந்தவரை மின்போல்**
**ஆடுகொடி யணிந்தவுய ரலங்கல்வரை மார்பன்**
**கூடுமயிர் களையும்வகை கூறலுறு கின்றேன் 2483**

[தோடு-இதழ்; துதைந்த-நெருங்கிய.]

  

உச்சிவரை வளர்ந்திளமை யொழிந்தவுயர் திண்காழ்
இச்சவிய வல்லவென வெழுதியவை யூன்றிக்
கச்சுவிளிம் பணிந்ததொழிற் கம்பல விதானம்
நச்சுமணி நாகருறை நாகமென விரித்தார் **2484**

[காழ்-மூங்கில்; சவி-அழகு; ஊன்றி-நட்டு; நாகம்-நாக லோகம்.]

முத்தக நிறைந்தமுளை யெயிற்றுமத யானை
மத்தகமுந் திருமகடன் வடிவும்பட மாதோ
ஒத்தகல மெண்முழமென் றோதிநக ரிழைத்தார்
மொய்த்தெரிசெம் பொற்றுகளி னூன்முடிவு கண்டார்

[நகர்-மண்டபம்; இழைத்தார்-கோலஞ் செய்தார்; நூல்-சிற்பநூல்.]

உழுந்துபய றுப்பரிசியப்பமருங் கலங்கள்
கொழுந்துபடக் கூப்பிநனி யாயிர மரக்கால்
செழுந்துபடச் செந்நெனிறைத் தந்நுண்கொடி யறுகின்
கொழுந்துகுறைத் தணிந்து கொலை வேற்கணவ
ரமைத்தார் **2486**

[செழுந்து - செழுமை, வளப்பம்; கொடியறுகின் கொழுந்து-அறுகம்புல்.]

வானுலகில் வாழும் இன்பம் பெற்றவரைப் போல இன்ப விளையாட்டிலே, இதழ் விரித்து மலர்ந்த, மலர் நிறைந்த மாலையணிந்த இலக்கணையுடன் கூடி ஈடுபட்டிருந்த, நெருங்கிய மலைமேல், மின்னல்போல் அசையும், கொடிகள் சூடுவதற்கேற்ற பெரிய மாலையணிந்த மார்புடையவனாகிய, சீவகனுக்கு நிகழ்ந்த மயிர்களையும் சடங்கினைப் பற்றி இனிக் கூறுவோம்.

மலை உச்சியிலே வளர்ந்து நன்கு பழுத்து முற்றிய உயர்ந்த மூங்கில்கள் இவ்வளவு அழகுடையவை அல்ல என்று கண்டவர் வியக்க எழுதியமைத்து, கச்சினாலே விளிம்பு கட்டி கம்பளிப் பட்டினாலே மேல் விரிப்பை

அமைத்து, நஞ்சும் மணியும் உடைய நாகர்கள் வாழும் நாகலோகம் போல மனையை அலங்கரித்தனர். முத்துக்கள் நிறையக் கொண்ட தந்தக் கொம்புடைய யானைகளின் உருவம் இருபுறமும் இருக்க, இடையே திருமகளின் உருவத்தை மிக்க ஒளி வீசும் பொன் தூள் களால் அமைத்து, மண்டபத்தின் மொத்த அகலம் எட்டு முழம் என்று கொண்டு சிற்ப நூல் வல்லவர் அதை அலங்கரித்தனர். பிறகு உழுந்து, பயறு, உப்பு, அரிசி, அப்பம் ஆகியவற்றை அழகிய பொற்கலங்களிலே நிறைத்து, அழகுற ஆயிரம் மரக்கால்களில் வளந்தரும் செந்நெல்லைக் குவித்து, அவற்றின் நுனியிலே அழகிய கொடி அறுகம் புல்லின் கொழுந்தையும் கிள்ளி அணி வித்தனர், கொல்லும் வேல்போலும் கண்ணுடைய மங்கையர்.

**செங்கய லிரட்டைதிரு வார்சுடர்க ணாடி**
**பொங்குகொடி வார்முரசந் தோட்டிபுணர் கும்பம்**
**மங்கலங்க ளெட்டுமிவை மணியிற்புனைந் தேந்தி**
**அங்கயற்க ணரிவையர்கள் தென்கிழக்கி னின்றார் 2487**

[கணாடி-கண்ணாடி; தோட்டி-அங்குசம்.]

**வெள்ளுருவ மாலைவட கீழிருவர் மின்போல்**
**ஒள்ளுருவ வாளுருவி நின்றனர்தென் மேல்பால்**
**உள்ளுருக நோக்கியுய ருழுத்தகலு மேந்திக்**
**கள்ளுருவ மாலையவர் கைதொழுது நின்றார் 2488**

[உழுத்தகல்-உழுந்தை நிரப்பிய அகல்; கள்-தேன்; உருவம்-அழகு.]

**தோரைமலர் நீரறுகு துளும்புமணித் தாலம்**
**ஆரவட மேற்றிசைக்க ணிருந்தவவிர் பஞ்சிச்**
**சீர்நிறைய வரையகலந் திருத்தத்திரு நோக்கும்**
**வாரமுறைக் கருவிவடக் கிருந்தனகண் மாதோ 2489**

[தோரை - மூங்கிலரிசி; மணித்தாலம் - மாணிக்கத் தட்டு; ஆர-பொருந்த.]

**பானுரையி னொய்யவணைப் பைங்கதிர்கள் சிந்தித்**
**தானிரவி திங்களொடு சார்ந்திருந்த தேபோல்**
**வேனிரைசெய் கண்ணியொடு மெல்லென விருந்தான்**
**வானுயர வோங்குகுடை மன்னர்பெரு மானே 2490**

[நொய்ய-மென்மை உடைய; இரவி-சூரியன்.]

சிவந்த இணைக்கயல்கள் இரண்டும், சாமரையும், சுடர்விளக்கும், கண்ணாடியும், அழகிய கொடியும், வாராலே இழுத்துக் கட்டப்பட்ட முரசும், அங்குசமும், பூரண கும்பம் ஆகியவற்றை ஏந்தியபடி, அழகிய அணிமணிகளால் தங்களை அலங்கரித்துக் கொண்ட, அழகிய மீன் போலும் கண்ணுடைய மங்கையர் தென் கிழக்குத் திசையிலே நின்றனர். வடகிழக்குத் திசையில் இருவர் மின்னல் கொடி போல ஒளி வீசும் வெள்ளை நிற மாலையணிந்து, ஒளி வீசும் வாளை உருவியபடி நின்றனர். தென் மேற்குத் திசையில், தேன் நிறைந்த மலருடைய மாலையணிந்த மங்கையர், உழுந்து நிறைந்த அகலை ஏந்தியபடி, உள்ளம் உருகத் தெய்வத்தை வணங்கியபடி நின்றனர். மூங்கில் அரிசியும், வாசமலரும், தூயநீரும், அறுகம்புல்லும் மணித்தாம்பாளத்திலே வடமேற்குத் திசையிலே பொருந்தி இருக்க, மலை போன்ற மார்பைச் சிறப்புறச் செய்யும் திருமகள் நோக்கும் பொற்கருவி, வெள்ளாடையின் மேல் வடக்குத் திசையில் இருந்தது. பாலின் நுரை போன்ற மிக மெல்லிய இருக்கையின் மேல், சூரியன் நிலவோடு சேர்ந்து பொன்னொளி வீச அமர்ந் திருந்ததைப்போல, இரு கூரிய வேல் போன்ற இரு கண் களுடைய இலக்கணையுடன், அமர்ந்திருந்தான் வானம் அளவு உயர்ந்தோங்கும் வெண்கொற்றக்குடை உடைய வேந்தர் பெருமானாகிய சீவகன்.

## வேறு

குளநென் முன்றிற்கனி தேன்சொரி சோலைக் குளிர்மணி
வளமை மல்கியெரி யம்மட மந்திகை காய்த்துவான்
இளமை யாடியிருக் கும்வனத் தீர்ஞ்சடை மாமுனி
கிளையை நீங்கிக்கிளர் சாபத்தி னாவித னாயினான் **2491**

[குளநெல்-ஒருவகை நெல்; மடமந்தி-இளைய பெண் குரங்கு; கிளை-சுற்றம்.]

ஆய்ந்த கேள்வியவன் கான்முளை யாய்வழித் தோன்றினான்
தோய்ந்த கேள்வித்துறை போயலங் காரமுந் தோற்றினான்
வேந்தன் றன்னாற்களிற் றூர்தி சிறப்பொடு மேயினான்
வாய்ந்த கோலமுடை யான்பெரு மஞ்சிகர்க் கேறனான்

[கான்முளை - பிள்ளை; துறைபோய் - முற்றக்கற்று; மஞ்சிகர்-நாவிதர்.]

## வேறு

நித்தில வடமும் பூணு மாரமு நிழன்று தாழ
ஒத்தொளிர் குழைகள் காதி னான்றுபொன் னூச லாடப்
பைத்தர வல்குற் பாவை கரகநீர் சொரியப் பாங்கின்
வித்தகன் பூசி வெள்வேல் வேந்தனுக் கிறைஞ்சி னானே

[நிழன்று - ஒளிவீசி; நான்று - தொங்கி; பாங்கின்-முறைப்படி.]

குளநெல் உலர்த்திக் கிடக்கும் இல்வாயிலிலும், கனிகள் பழுத்துத் தேன் சிந்தும் சோலையிலும், குளிர்ந்த மாணிக்கமணிகள் கிடந்து ஒளிவீச, அவற்றை எரியும் செந்தீ என்று நினைத்து இளமந்திகள் குளிர் காயக் கை நீட்டும் பசுமை நிறைந்த காட்டினுள் வாழ்ந்த, குளிர்ந்த சடைமுடி உடைய முனிவன் ஒருவன் சாபத்தினால், சுற்றத்தைப் பிரிந்து நாவிதனாக வந்து பிறந்தான். அவன் தேர்ந்த கல்வி அறிவுடைய முனிவன் மரபிலே வந்து தோன்றியவன். தெளிந்த நூலறிவு உடையவன். அலங்காரம் என்னும் நூலையும் சிறப்புறக் கற்றவன். அரசன்

பரிசாக அளித்த யானையும் மற்றுமுள்ள சிறப்புகளும் உடையவன். மிக்க அழகுடையவன். நாவிதர்களுக்குள்ளே சிங்கம் போன்றவன். முத்துமாலையும் பொற்பூணும் பூமாலைகளும் ஒளிவீச, அழகுறப் பொருந்திய ஒளி விளங்கும் குழைகள் காதிலே தொங்கிப் பொன்னூஞ்சல் ஆட, பாம்பின் படம் போன்ற அல்குலுடைய பணிப்பெண் ணொருத்தி, கமண்டலத்திலிருந்து பொழிந்த நீரினால், மேதையாகிய அந்நாவிதன் வாய் கழுவி வெள்ளிய வேலுடைய வேந்தனாகிய சீவகனுக்கு வணக்கம் கூறினான்.

நச்செயிற் றரவி னோக்கின் மன்னரை நடுங்க நோக்கி
வச்சிர வண்ணன் காப்ப வாழிய ரூழி யென்னா
அச்சுதங் கொண்டு மன்ன னடிமுடித் தெளித்து நங்கை
உச்சிவண் டிமிரு மாலை யொளிமுடிச் சிதறி னானே 2494

[அச்சுதம்-அரிசியும் அறுகும்; சிதறுதல்-தெளித்தல்.]

வாக்கினிற் செய்த பொன்வாண் மங்கல விதியி னேந்தி
ஆக்கிய மூர்த்தத் தண்ணல் வலக்கவு ளுறுத்தி யார்ந்த
தேக்கணின் னகிலி னாவி தேக்கிடுங் குழலி னாளை
நோக்கல னுனித்து நொய்தா விடக்கவு
ளுறுத்தி னானே 2495

[வாக்கு-திருத்தம்; கவுள்-கன்னம்.]

ஆய்ந்தபொன் வாளை நீக்கி யவிர்மதிப் பாகக் கன்மேற்
காய்ந்தவாள் கலப்பத் தேய்த்துப் பூநிறீஇக் காமர்
பொன்ஞாண்
தோய்ந்ததன் குறங்கில் வைத்துத் துகிலினிற்
றுடைத்துத் தூய்தா
வாய்ந்தகைப் புரட்டி மாதோ மருடகப் பற்றி னானே 2496

[குறங்கு-துடை; தேய்த்து-தீட்டி.]

பிறகு, 'நஞ்சுடைய பாம்பின் பார்வையைப்போல நீயும் உன் பகையரசர் அஞ்சி நடுங்க விழித்து, குபேரன்

காக்கச் செல்வச் சிறப்புடன் பல்லாண்டு, பல்லாண்டு, பலகோடி நூறாண்டு வாழ்வாயாக'என்று வாழ்த்தி, அரிசியையும், அறுகம்புல்லையும் எடுத்து அரசன் அடியிலும் முடியிலும் தெளித்து, வண்டுகள் மொய்த்துப் பாடும் மலர் நிறைந்த, மாலைகள் அணிந்த இலக்கணையின் அழகிய முடிமீதும் தூவினான். திருத்தமுறப் பொன்னால் செய்த கத்தியை, மங்கல முறைப்படி கையிலே எடுத்து, நல்ல முகூர்த்தத்திலே வேந்தனுடைய வலதுபுறக் கன்னத்திலே தொட்டு பிறகு, தேன் கலந்த இனிய அகில்புகை தங்கித் தவழும் கூந்தலுடைய இலக்கணையைக் கூர்ந்து நோக்காதவனாய், அவளது இடது கன்னத்திலும் கத்தியால் சிறிது தொட்டான். அப்படித் தொட்ட பொன்னாலாக்கிய வாளை எடுத்துவிட்டு, இரும்பும் எஃகும் கலந்து வார்த்த இரும்புக் கத்தியை எடுத்துப் பிறைநிலவைப் போலத் தோன்றும் கல்லிலே தீட்டி, பூவை அக்கல்லிலே நிறுத்தி அழகிய பொன்ஞாண் பூட்டிய தன் துடையிலே வைத்துத் துணியாலே துடைத்து, தன்னுடைய கையிலே பொருத்தித் தூய்மையுறப் புரட்டி, கத்தி வைத்தது தெரியாதபடி முகத்திலே பொருத்தினான்.

## வேறு

**ஏற்றி யும்மிழித் தும்மிடை யொற்றியும்**
**போற்றிச் சந்தனம் பூசுகின் றானெனக்**
**கூற்ற னான்முகங் கோலஞ்செய் தான்கடற்**
**றோற்றுஞ் செஞ்சுடர் போலச் சுடர்ந்ததே** **2497**

[ஒற்றி-ஒதுக்கி; தோற்றும்-தோன்றும்.]

**கோதைப் பாரத்தி னானுந்தன் னாணினும்**
**ஏதி லான்முக நோக்கும் மிளிவினும்**
**பாத நோக்கிய பான்மதி வாண்முகம்**
**ஏத மின்றியெ டுத்தனண் மெல்லவே** **2498**

[நாண்-நாணம்; இளிவு-இளிவரவு.]

உருவச் செங்கய லொண்ணிறப் புள்வெரீஇ
இரிய லுற்றன போற்றிணைக் கண்மலர்
வெருவி யோட விசும்பிற் குலாவிய
திருவிற் போற்புரு வங்கள் திருத்தினான் 2499

[புள்-சிச்சிலிப்பறவை; வெரீஇ-வெருவி.]

ஆர மின்ன வருங்குயந் தான்களைந்
தோரு மொண்டிறற் கத்தரி கைத்தொழில்
நீரிற் செய்தடி யேத்துபு நீங்கினான்
தாரன் மாலைத் தயங்கிணர்க் கண்ணியான் 2500

[குயம் - மயிர்க்கத்தியை; ஒரும்: அசை; ஏத்துபு- புகழ்ந்து.]

மேலேற்றி ஒதுக்கியும், தாழக் கழித்தும், நடுவில் திறந்தும், சந்தனத்தைக் குழைத்துப் பூசுகின்றான் என்று தோன்றும்படி, பகையரசர்க்கு எமனைப் போன்றவனாகிய சீவகனுடைய முகத்தை அழகு செய்தான். அவ்வளவில் அவன் முகமும் கடலிடைத் தோன்றும், செஞ்ஞாயிறு போலச் சிறந்த அழகுடன் திகழ்ந்தது. மேலணிந்த மாலையின் சுமையாலும், தனக்கு இயல்பாக அமைந்த நாணத்தினாலும், அயலவனான நாவிதன் பார்க்கின்ற இழிவினாலும், தன் கால் பெருவிரலை நோக்கிக் கவிழ்ந்திருந்த பால்நிலவு போன்ற தன்முகத்தை இலக்கணை குறைவின்றி மெல்ல நிமிர்த்திச் சீவகனை நோக்கினாள். ஒளிமிக்க நிறமுடைய சிச்சிலிப் பறவையைக் கண்டு அழகிய செம்மீன்கள் பயந்து ஓடுவதைப்போல, அழகிய அவள் இரு விழிகளும் அவன் அழகு முகம் கண்டு அஞ்சி ஓட, நாவிதன் வானில் வளைந்து நிமிர்ந்த வான வில்லைப்போலச் சீவகனது புருவங்களை அழகுற அமைத்தான். பிறகு மாலையணிந்தவனும், மாலையாகத் தொடுத்த பூங்கொத்துக்கள் நிறைந்த முடிக்கண்ணியைச் சூடியவனுமாகிய அந்நாவிதன், மாலை ஒளிவீச, அழகிய கத்தியை நீக்கி, மிக்க திறமுடைய கத்திரிகையால்

மயிர்வினையைச் சிறப்புறச் செய்து முடித்துவிட்டு சீவகன்து திருவடி பணிந்து சென்றான்.

வேறு

அன்னப் பெடைநடுக்கி யசைந்து தேற்றா நடையாளும்
மன்னர் குடைநடுக்கும் மாலை வெள்வேன் மறவோனும்
மின்னு மணிக்குடத்தின் வேந்த ரேந்தப் புனலாடிப்
பொன்னங் கடிமலருந் துகிலுஞ் சாந்தும்
புனைந்தாரே 2501

[நடுக்கி-அஞ்சுவித்து; அசைந்து-இளைத்து.]

எஞ்சுற்ற மென்றிரங்கா தாக மெல்லாங் கவர்ந்திருந்து
தஞ்சுற்றம் வேண்டாத முலைக்கீழ் வாழ்வு தளர்கின்ற
நஞ்சுற்ற வேனெடுங்கட் பாவை நல்கூர் சிறுநுசுப்பிற்
கஞ்சுற் றுழிப்புலர்ந்தாங் கணிந்தா ரம்ம
மணிவடமே 2502

[மணிவடம்-முத்துமாலை; புலர்தல்-விடிதல்.]

சுடுமண் மிசைமாரி சொரியச் சூழ்ந்து சுமந்தெழுந்து
நெடுநன் னிமிராவி நாறு நெய்தோய் தளிர்மேனி
துடிநுண் ணிடைப் பெருந்தோட் டுவர்வா யேழை
மலர்மார்பன்
கடிநன் மலர்ப்பள்ளி களிப்பக் காமக் கடலாழ்ந்தான் 2503

[துடி-உடுக்கை; துவர்-பவளம்.]

பெண் அன்னம் கண்டஞ்சுகிற பெருமித நடை உடையவளாகிய இலக்கணையும், பகையரசர் கொற்றக் குடையை அச்சுறுத்தும் மாலையணிந்த வேலுடையவனாகிய சீவகனும் பொன்னால் செய்து மணிகள் பதித்த குடங்களில் வேந்தர்கள் ஏந்தி நின்ற நீரில் குளித்து, பொன் அணிகளும், புது மலரும், பட்டுடைகளும் வாசச்சாந்தும் அணிந்து கொண்டனர். தனக்கு உறவாயிற்றே என்று கருதாமல் மார்பு முழுவதும் பரவிய, அதற்கு உறவான மார்பும் வெறுக்கின்ற, கொடிய தன்மை உடைய, மென்முலைகளின்

கீழிருந்து வாழ்ந்து கொண்டிருக்கிற, நஞ்சினைப்போலக் கொல்லும் தன்மையும், வேல்போல் நீண்ட வடிவழகும் உடைய கண்களும் பெற்ற இலக்கணையினுடைய, தேய்ந்து சிறுத்த மெல்லிடைக்குப் பயந்து, தப்பியோட நினைத்தபோது விடிந்துவிட்டதைப்போல மணிவடத்தை அதைச் சுற்றி அணிவித்தனர். நீர்சுமந்து எழுந்த முகில் உலகை வலமாக வந்து வெக்கை மிகுந்த மண்ணிலே மழையாகப் பொழிய, எழுகின்ற மணமிக்க ஆவியைப் போல வாசம் வீசும் நெய்யில் முழுகிய தளிர்போன்ற மேனியும் உடுக்கைபோலச் சிறுத்த இடையும் அழகிய தோள்களும் சிவந்த வாயும் உடைய இலக்கணை, மண மிக்க மலர்விரித்த பஞ்சணைப் பள்ளியிலே களித்தின் புறும்படி, மாலைதவழும் மார்புடைய சீவகன் இன்பக் கடலில் மூழ்கினான்.

## வேறு

வழங்கு தாரவன் மார்பிடை மட்டுகப்
புழுங்கு கோதைபொற் பின்றிறம் பேசலாம்
விழுங்கு மேகம் விடாது தழீஇக்கிடந்
தொழிந்த மின்னுக் கொடியொத் தொழிந்திட்டாள் 2504

*[மட்டு-தேன்; புழுங்கும்-வதங்கும்; தழீஇ-தழுவி.]*

தாம மார்பனுந் தையலு மெய்யுணர்
வாமி தென்றறி யாதுக ளித்தவர்
தூமங் கொப்புளிக் குந்துகிற் சேக்கைமேற்
காம னப்பணைக் கள்ளுக வைகினார் 2505

*[சேக்கை-படுக்கை; அப்பணை-அம்பாகிய பஞ்சணை; கள்-தேன்; உக-சிந்த.]*

## வேறு

மாதர்தன் வனப்பு நோக்கி மகிழ்ந்துகண் ணிமைத்தல் செல்லான்
காதலித் திருப்பக் கண்கள் கரிந்துநீர் வரக்கண் டம்ம

**பேதைமை பிறரை யுள்ளி யழுபவர்ச் சேர்த லென்றாள்**
**வேதனை பெருகி வேற்கண் டீயுமிழ்ந் திட்ட வன்றே**

[உள்ளி-நினைந்து; பேதைமை-அறியாமை.]

**நாறுசாந் தழித்து மாலை பரிந்துநன் கலன்கள் சிந்திச்**
**சீறுபு செம்பொ னாழி மணிவிர னெரித்து விம்மா**
**ஏறியு மிழிந்து மூழூழ் புருவங்கண் முரிய நொந்து**
**தேறுநீர் பூத்த செந்தா மரைமுகம் வியர்த்து நின்றாள்**

[பரிந்து-அறுத்து; சீறுபு-கோபித்து; ஊழூழ்-முறை முறையே; முரிய- வளையும்படி.]

உலகம் போற்றும் புகழ் மாலை அணிந்த சீவகன் மார்பில், தேன் சிந்த அழுந்தி முயங்கி மயங்கும் மலர் மாலை போன்றவளாகிய இலக்கணையினுடைய, அழகின் சிறப்பைப்பற்றி இனிக் கூறலாம். தானமுந்திக் கிடந்த கருமேகத்தைவிட்டு வெளியே வந்து அதைத் தழுவிக் கிடக்கும், இருட்தன்மை ஒழிந்த, ஒளி மின்னல்போல் இலக்கணை இருந்தாள். மலர்மாலை அணிந்த மார்புடைய சீவகனும் இலக்கணையும், தாம் இருவர் என்ற உணர்வற்று ஒருணர்வுடையவராய், வாசநறும் புகை மணக்கும் துணிவிரித்த பஞ்சணையின்மேல், காமன் எய்யும் மலரம்பின் தேன்பொழிவில் இருந்து மகிழ்ந்தனர். இலக்கணையின் அழகை உண்டு மகிழ்ந்து, கண்களை இமைக்கவும் விரும்பாதவனாகி அப்படி இமைக்கின்ற சிறு போதுகூட அவள் அழகுருவைப் பார்க்காதிருக்க நினையாதவனாய் அவளையே நோக்கியபடி மகிழ்ந்திருந்தான். அதனால் அவன் கண்களில் நீர்க்சியக் கண்ட இலக்கணை, ஐயோ பிறரை எண்ணி அழுபவரோடுகூடி மகிழ்தல் அறியாமையே என்று வருந்தி வேதனைப்பட்டு வேல் போன்ற கண்களில் நெருப்பைச் சிந்தியபடி இருந்தாள். மேலே பூசிய வாசச்சாந்தை அழித்துக்கொண்டு, புனைந்த அணிமணிகள் அறுத்தெறிந்து, கோபத்தால், பொன் மோதிரம் அணிந்த விரல்களைப் புடைத்து, விம்மி,

புருவங்கள் ஏறி இறங்கி முரியும்படி நெற்றி சுருங்க வேதனைப்பட்டு, தெளிந்த பனிநீர் பட்ட செந்தாமரை போல் முகம் வியர்த்துக்கொட்ட வருந்தி நின்றாள்.

**இற்றதென் னாவி யென்னா வெரிமணி யிமைக்கும் பஞ்சிச்**
**சிற்றடிப் போது புல்லித் திருமகன் கிடப்பச் சேந்து**
**பொற்றதா மரையிற் போந்து கருமுத்தம் பொழிப வேபோல்**
**உற்றுமை கலந்து கண்கள் வெம்பனி யுகுத்த வன்றே**

[பஞ்சிச்சிற்றடி-செம்பஞ்சு பூசிய சிறிய பாதம்; பொற்ற-பொலிவுடைய.]

**கொண்டபூ ணின்னைச் சார்ந்து குலாய்க்கொழுந் தீன்ற கொம்பே**
**கண்டுகண் கரிந்து நீரா யுகுவது கரக்க லாமே**
**பண்டியான் செய்த பாவப் பயத்தையார்க் குரைப்பென் தேன்காள்**
**வண்டுகாள் வருடி நங்கை வரந்தர மொழிமி னென்றான்**

[பூண்-ஆபரணம்; கரக்கலாமே - மறைக்கலாமோ; தேன்காள்-வண்டுகளே.]

**பூவையுங் கிளியுங் கேட்டுப் புழைமுகம் வைத்து நோக்கிக்**
**காவலன் மடந்தை யுள்ளங் கற்கொலோ இரும்பு கொல்லோ**
**சாவம்யா முருகி யொன்றுந் தவறில னருளு நங்கை**
**பாவையென் றிரத்து மென்ற பறவைகள் தம்முள் தாமே**

[பூவை-நாகணவாய்ப்புள்; புழை-கூட்டின் வாயில்; இரத்தும்-வேண்டிக் கொள்கிறோம்.]

அவள் வருந்தக் கண்டு, என் உயிர் போயிற்றே என்று அழகிய ஒளிமிக்க மணிச்சிலம்பும் செம்பஞ்சுக் குழம்பும் தழுவிக் கிடக்கும் அவள் கால்களைத் தழுவியபடி சீவகன் இருக்க, சிவந்த அழகிய தாமரை மலரிலிருந்து கரிய முத்துகள் சிதறுவதைப்போல, கொண்ட ஊடலை நீக்கிக் கொள்ளக் கருதியவளாகிய இலக்கணையின் கண்கள்

மைகலந்த வெப்பக் கண்ணீரை உதிர்த்தன. அவள் ஊடல் தீர்க்க முன் வந்ததைக் கண்ட சீவகனும், 'உன் உடலிலே பொருந்தியதால் இன்னும் ஒளி பெற்றுத் திகழ் கின்ற, பொன் அணிகளைப் புனைந்த பூங்கொம்பு போன்றவளே! உன்னை இமைக்காமல் நோக்கியத னாலேயே என் கண்கள் கரித்து நீர் கசிந்தன என்பதை நீ அறியமாட்டாயோ? அப்படி அறியாமல் நீ வருந்துவது நான் செய்த பாவத்தின் பயன்தானோ என்னவோ! நான் இதை யாரிடம் போய்ச் சொல்லுவேன்! இவள் மலர்க்கூந்தலை மொய்த்துக் கிடக்கும் வண்டுகளே! நீங்களாவது இவள் மனமிரங்கச் சொல்லுங்கள்' என்று அவள் பாதங்களை வருடியபடி இருந்தான். இப்படி இவன் படும் வருத்தத்தைப் பறவைகளும் கிளிகளும் கேட்டு, கூண்டுக்குள் முகம் வைத்து அவர்களைப் பார்த்து, 'வேந்தன் இத்தனை வருந்தியும் இரங்காத இவள் மனம் இரும்போ இல்லை கல்லோ! நாங்களாக இருந்தால் இந்நேரம் எங்கள் இணைப்பறவைகளை இப்படி வருந்தி ஊடல் தீர்க்க வைப்பது கூடாது என்று கருதி இறந்து பட்டிருப்போம்! எனவே பெண்மகளே, உன் தலைவன் ஒரு தவறும் செய்திலன், அவனுக்கு இரங்குவாய்' என்று அவை தமக்குள்ளாக வேண்டிக் கொள்ளும்.

**பெற்றகூ ழுண்டு நாளும் பிணியுழந் திருத்தும் பேதாய்**
**முற்றிமை சொல்லி ளங்கை மூன்றுநா ளடிசில் காட்டாள்**
**பொற்றொடி தத்தை யீரே பொத்துநும் வாயை யென்றே**
**கற்பித்தார் பூவை யார்தங் காரணக் கிளவி தம்மால் 2511**

[உழத்தல்-வருந்துதல்; முற்றிமை-அறிவுடைமை.]

**பழியொடு மிடைந்த தேனுஞ் சீறடி பரவி னாற்கு**
**வழிபடு தெய்வ மாகி வரங்கொடுத் தருளல் வேண்டும்**
**ஒழிபடைக் களிறு போல வுயங்கவு முருகி நோக்காப்**
**பிழிபடு கோதை போலாம் பெண்டிரைக் கெடப்பி**
**றந்தாள் 2512**

  

[மிடைந்ததேனும் - பொருந்தியதானாலும்; உயங்க-
வருந்த.]

ஈன்றதா யானு மாக விதனைக்கண் டுயிரை வாழேன்
நான்றியான் சாவ லென்றே நலக்கிளி நூலின் யாப்ப
மான்றவண் மருண்டு நக்காள் வாழிய வரம்பெற்
றேனென்று
ஆன்றவ னாரப் புல்லி யணிநலம் பரவி னானே 2513

[நூலின் யாப்ப-நூலால் கழுத்தை இறுக்கிக் கட்டிக்
கொள்ள; மான்றவள்-மயங்கின இலக்கணை.]

'நாம் கிடைத்த உணவை உண்டு கூண்டுக்குள்ளே அடைபட்டிருப்பவர்கள். இப்படிப்பட்ட நாம் போய் மன்னன் மகளுக்கு அறிவுரை கூறத் தொடங்குவோமானால் பொன் வளையல் அணிந்த அவள் மூன்று நாளைக்கு உணவை நமது கண்ணிலும் காட்டமாட்டாள். ஆகையால் பேதைக் கிளிப்பிள்ளைகளே, நீங்கள் வாயைப் பொத்திக்கொண்டு சும்மா இருங்கள் என்று நாகணவாய்ப் பறவைகள் பின்னால் விளையக்கூடியதை முன்கூட்டி மொழிந்தன. 'வேலால் தாக்குண்டு வருந்தி நின்ற யானையைப்போலக் கணவன் படுந்துன்பத்தைப் போக்கி அருள மனம் இரங்காமல், பொருள் தருவோர் இயல்புக் கேற்பத் தம் இயல்பு கெட்டு அவரோடு உறவாடும் பரத்தையர் கெட்டார் எனும்படிக்கு நற்குடிப் பிறந்தவளாகிய இலக்கணை, கணவன் செயல் தவறுடையதே என்றாலும், அதைப் பொறுத்தருள வேண்டுமென்று அடிபணிந்து நின்றவனுக்கு, தெய்வம்போல் இருந்து விரும்பிய வரத்தைக் கொடுத்திருக்கவேண்டும். அப்படிச் செய்யாத இவளைப் பெற்ற கொடிய தாயாக இல்லாமல் இவளுக்கு வரும் பழியைக் கண்டும் நான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்க மாட்டேன். இதோ இந்த நூலிலே சுருக்கிட்டுக் கொண்டு உயிரை விட்டு விடுகிறேன்' என்று அழகிய அக்கிளி, நூலிலே கழுத்தை மாட்டிக் கொள்ள

அதைக் கண்டு மயங்கிய இலக்கணை ஊடல் தவிர்ந்து வாய்விட்டுச் சிரித்தாள்! உடனே சீவகனும் 'கிளியே உன்னால் நான் இன்னருள் பெற்றேன்' என்று, அன்போடு தழுவி அதன் அழகு நலத்தைப் பாராட்டினான்.

## வேறு

நிறையோத நீர்நின்று நீடவமே செய்யினும் வாழி நீலம்
அறையோ வரிவை வரிநெடுங்கண் ஒக்கிலையால் வாழி
நீலம்
கண்ணொவ்வா யேனுங் களித்து நகுதிநின்
வண்ண மிதுவோ மதுவுண்பார் சேரியையோ வாழி நீலம்

[ஓதநீர்-கடல்நீர்; நீலம்-நீலோற்பலமலர்; அறையோ-வஞ்சினம் கூறவோ; நகுதி-சிரி.]

## வேறு

பாண்குலாய்ப் படுக்கல் வேண்டா பைங்கிளி பூவை
யென்னும்
மாண்பிலா தாரை வைத்தா ரென்னுறா ரென்று நக்கு
நாண்குலாய்க் கிடந்த நங்கை நகைமுக வமுத மீந்தாள்
பூண் குலாய்க் கிடந்த மார்பிற் பொன்னெடுங் குன்ற
னாற்கே 2515

[பாண் - தாழ்ச்சி; படுக்கல் - அகப்படுதல்; நாண்-நாணம்.]

நலங்குவித் தனைய மாதர் நன்னல மாய வெல்லாம்
புலம்புவித் தருளி னீங்கிப் பகைப்புலம் புக்க வேந்திற்
கலங்குவித் தனைய நம்பி கவர்ந்திடக் கலாப மேங்கச்
சிலம்புநொந் திரங்கத் தேன்றார் பரிந்துதே னெழுந்த
தன்றே 2516

[நலம்-இன்பம்; புலம்புவித்து-வருந்தச்செய்து.]

திருநிறக் காம வல்லி திருக்கவின் கொண்டு பூத்துப்
பெருநிறங் கவினி யார்ந்த கற்பகம் பிணைந்த தேபோல்

  

**அருநிறக் குருசின் மார்பத் தசைந்தன ளலங்கல் வேலும்**
**நெரிபுறத் தடற்று வாளு நீலமு நிகர்த்த கண்ணாள் 2517**

[திரு-அழகு; நீலம்-நீலோற்பலமலர்.]

'நிறைந்து விளங்கும் கடல் நீரிலே நின்று நீ ஒற்றைக் காலிலே தவம் செய்தாலும் நீலோற்பல மலரே, நீ என் இலக்கணையின் கண்ணைப் போலாக மாட்டாய். இதற்காக நான் உன்னைப் பழி கூற வேண்டுமா? வேண்டியதில்லை! என்றாலும் நீலமே, நீ அவள் கண்ணைப் போல் இல்லையெனினும், அதற்காக வருந்தாமல் மகிழ்ந்தபடி இருக்கிறாய்! இது உன் குல வழக்கம். மற்றும் நீ மது உண்போர் சேரியில் வேறு வாழ்கிறாய்! வாழ்ந்து போ!' என்று சீவகன் இலக்கணை யின் கண்களைப் புகழ்ந்து பாராட்டினான். அது கேட்ட இலக்கணை, 'புகழ் மொழியால் என்னைக் கவர நினைக்க வேண்டாம். இத்தகைய கிளிகளையும் பறவைகளையும் வளர்த்து வைத்திருப்பவர்கள், இப்படித்தான் தாழ்ச்சி அடைவார்கள்' என்று கூறிச் சிரித்தபடி நாணம் மிக இருந்த இலக்கணை, அணிமணிகள் நிறைந்து பொருந்தப் பொன் மலைபோல் வீற்றிருந்த சீவகனுக்கு இன்னமுதாகிய மகிழ்ச்சியைத் தந்தாள். பெண்களின் அழகு நலத்தை எல்லாம் குவித்து வைத்திருப்பதைப் போலிருக்கும் இலக் கணையின் சிறப்பு நலத்தை எல்லாம், பகையரசர் நாட்டில் புகுந்து கவர்ந்து கொண்ட வேந்தனைப்போல் அணிமணிகள் குவித்து வைத்த பொற்குன்று போலிருந்த சீவகன் இரக்கமின்றிக் கவர்ந்து கொள்ள, அவளணிந்த மேகலை வருந்திற்று. பாதச்சிலம்பு புலம்பிற்று. சூடிய மாலையில் தொடுத்த தேன் நிறைந்த மலர்கள் சிதற வண்டுகள் பயந்து எழுந்தோடின. மாலையணிந்த வேலினையும், சொரசொரப்பான மேல் பாகத்தை உடைய உறையிலிருக்கும் வாளினையும் ஒத்த, நீலமலர் போன்ற கண்களுடைய இலக்கணை, அழகு நிறமுடைய காம வல்லிக்கொடி, திருவிளங்கப் பூத்து, அழகுற வளர்ந்த

கற்பகத் தருவைத் தழுவிக் கிடந்ததைப்போல, சீவக னுடைய அழகிய மார்பிலே சோர்ந்து சாய்ந்து தூங்கினாள்.

## வேறு

மணிக்கண் மாமயிற் சாயன் மாதரும்
அணிக்கந் தன்னதோ ளரச சீயமும்
பிணித்த காதலாற் பின்னிச் செல்வுழிக்
கணித்த நாள்களேழ் கழிந்த காலையே 2518

[அணிக்கந்து-அழகிய தூண்; பிணித்த-கட்டப்பட்ட; கணித்த-நிச்சயித்த.]

சூட்டுஞ் சுண்ணமு மணிந்து சுந்தரம்
ஓட்டி யொண்பொனூ லோங்கு தாரொடு
பூட்டிக் குண்டலம் பொற்பப் பெய்தபின்
மோட்டு முத்தொளிர் வடம்வ ளாயினார் 2519

[ஓட்டி-பூசி; பெய்தபின்- அணிந்த பின்பு; வளாயினார்- வளைத்தார்.]

பானு ரைய்யன பைந்து கிலணிந்து
ஆனி ரைய்யினத் தலங்க லேறனான்
மானி ரைய்யினம் மருளுநோக்கினார்
ஊனு யிருனு மொருவ னாயினான் 2520

[ஏறு-காளை; மானிரை-மான் கூட்டம்; இனம்- தொகுதி.]

சுநந்தை தன்மகன் சுடர்பொற் சூழித்தேன்
இனங்க வர்ந்துண விலிற்று மும்மதத்
தநந்த னன்னகை யானை யேறினான்
குனிந்த சாமரை குளிர்சங் கார்த்தவே 2521

[இலிற்றும்-பிலிற்றுகின்ற; சூழி-முகபடாம்; குனிந்த- வீசின.]

நீலமணிக் கண்களையும் மயிலின் சாயலையும் உடைய இலக்கணையும், அழகிய பொற்றூண் போன்ற

  

தோள்களை உடைய வேந்தரில் சிங்கம் போன்றவனாகிய சீவகனும், இணைந்து பிணைந்து காதலில்களித்து வாழ்ந்த ஏழு நாட்களும் கழிந்தன. எட்டாவது நாளிலே, முடிக்கண்ணியும் பொற்சுண்ணமும் அணிந்து, சிந்தூரப் பொடிபூசி, பொன் புரியும் பூமாலையும் புனைந்து, பொற் குண்டலம் அணிந்தபின், பெரிய முத்துக்களால் ஆன முத்துமாலையை எடுத்து அணிந்தனர். பால் நுரை போலும் தூயபட்டுடை அணிந்து, பசுக்கூட்டங்களுக் கிடையே மாலையணிந்த காளைபோல் விளங்கிய சீவகன் மான் கூட்டம் கண்டு மயங்கும் கண்களுடைய பெண்களின் உள்ளத்தையும் உயிரையும் ஒருங்கே கவரும் ஒப்பற்ற அழகனாய் விளங்கினான். சுநந்தையின் மகனாக வளர்ந்த சீவகன், ஒளிவீசும் பொன்னாலான முகபடாம் அணிந்த, வண்டுகள் சூழ்ந்து மொய்க்க மதநீர் பொழி கின்ற, ஆதிசேடன் என்னும் பாம்பைப் போன்ற நீண்ட துதிக்கையும் உடைய, யானையின் ஏறி மீது அமர்ந்தான். அவ்வளவில் சாமரைகள் வீசி நிழல் தந்தன. சங்குகள் முழங்கி ஒலி செய்தன.

## வேறு

**இரும்பிடி நூறு சூழ விறுவரை நின்ற தேபோற்**
**கரும்பொடு காய்நெற் றுற்றிக் கருப்புரக் கந்தி னின்ற**
**சுரும்புசூழ் மதத்த சூளா மணியெனுஞ் சூழி யானைப்**
**பெருந்தகைப் பிணையன் மன்னர் முடிமிதித் தேறி னானே**

[பிடி-பெண்யானை; இறுவரை-பெரியமலை; துற்றி-உண்டு; கந்து-கம்பம்; சுரும்பு-வண்டு.]

**சட்டகம் பொன்னிற் செய்து தண்கதிர் வெள்ளி வேய்ந்து**
**வட்டநல் வைரம் வாய்ப்ப நிரைத்துமேன் மணிகள் சேர்த்திச்**
**சுட்டுதற் கரிய முத்தின் தொத்துவாய் நாற்ற முந்நீர்ப்**
**பட்டவான் பவளக் காம்பின் குடைநிழற் பருதி யொத்தான்**

[சட்டகம்-சட்டம்; தொத்துவாய்-விளிம்பு; நாற்ற-தொங்கவிட.]

**மடற்பனைக் குழாத்திற் பிச்ச நிரைத்தன மன்னர் சூழ்ந்து**
**புடைக்களி றேறித் திங்கட் பொழிகதிர்க் குப்பை யன்ன**
**எடுத்தெறி கவரி வீச வியம்பல முழங்கி யார்ப்பக்**
**கடற்படை வெள்ளஞ் சூழக் காவலன் வீதி சேர்ந்தான்**

*[பிச்சம்-பீலிக்குடை; புடை-பக்கத்தில்; குப்பை-குவியல்.]*

**அடிநில முறுத னாணி யருவருத் தமரி னாலித்**
**திடுமயிர் சிறக ராக வெழுந்துமேற் பறப்ப போலப்**
**படுமழைத் துளியிற் பாய்மாப் பரந்தன நிரந்த பொற்றேர்**
**இடைநில மின்றி வேழ மீண்டின மள்ளர் தொக்கார் 2525**

*[ஆலித்து-முழங்கி; மள்ளர் - வீரர்; தொக்கார்-கூடினார்.]*

கரிய பெண் யானைகள் ஒரு நூறு சுற்றிச் சூழ்ந்திருக்கப் பெரிய மலை நிற்பதைப்போல, கரும்பையும் காய்ந் நெற்கதிர்களையும் உண்டு. கற்பூரம் அணிந்த தூணிலே கட்டப்பட்டு நின்ற, வண்டுகள் மொய்க்கும்படி மதம் வழிகின்ற, முகபடாம் அணிந்த, சூளாமணி என்னும் பட்டத்து யானையின் மேல், பெருமைக்குரிய பூமாலை அணிந்த மன்னர்கள் முடி மீது கால் வைத்துச் சீவகன் ஏறி அமர்ந்தான். பொன்னிலே சட்டம் செய்து, குளிர்ந்த ஒளி உடைய வெள்ளிக் கம்பிகளால் அதை வேய்ந்து, வட்டப் பகுதியை வைரக் கற்களால் நிறைத்து, அவ்வட்டத்தின் மேல் மாணிக்க மணிகளைப் பதித்து விலைமதிப்பில்லாத முத்துக்களை விளிம்பைச் சுற்றிலும் தொங்கவிட்டு, கடலில் பிறந்த பவளத்தால் காம்பமைத்துச் செய்த குடையின்கீழ், சீவகன் ஞாயிறுபோல் வீற்றிருந்தான். பனைமரக் கூட்டம்போலப் பீலிக்குடைகள் நிறைந்து வர, சுற்றிலும் மன்னர்கள் யானை மீதேறித் தொடர்ந்துவர, நிலவின் ஒளிக் கீற்றுகளைப்போல வெண்சாமரம் வீசிவர, இன்னிசை வாத்தியங்கள் பல முழங்கி ஒலி செய்ய, கடல் போலப் பெரும்படை உடன் தொடர்ந்துவரச் சீவகன் தெருவை அடைந்தான். அவனோடு, அடி நிலத்தில்

பொருந்துதலை நாணி, போர் முகத்திலே வந்து, வாச மிட்ட பிடரிமயிர், சிறகு போல் சிலிர்த்துக் கிளம்பி வானில் பாய்ந்து செல்லும் குதிரைகள், பெருமழைத் துளிகள் போல் நிறைந்து வந்தன. பொன் தேர்களும் சேர்ந்தன. இடைவெளியின்றி யானைப் படைகளும் கூடின. வீர மறவர்களும் வந்து திரண்டனர்.

**கொழுமடற் பெண்ணை யீன்ற குரும்பையுஞ் செப்புங் கொன்ற**
**இழைமுலைத் தடத்தி னாள்தன் கணவனைக் காண வேகிக்**
**கழுமொலி யரவ வானங் கனைபெயல் கடற்பெய் தன்ன**
**குழுமொலி யரவ மீண்டிக் கொடிநகர் பொலிந்த தன்றே**

[பெண்ணை-பனை; கழும் ஒலி-நிறைந்த ஒலி; குழும்-கூடும்.]

**ஒள்ளிலைச் சூலந் தெண்ணீ ருலாமுகில் கிழிக்கு மாடக்**
**கொள்கொடிக் குழாத்தி னாலுங் கொழுநறும் புகையி னாலும்**
**தெள்ளுறு சுண்ணத் தாலுந் தேமலர்த் துகளி னாலும்**
**புள்ளினம் பொழுது காணா புலம்பிக்கூ டடைந்த வன்றே**

**[புள்ளினம்-பறவைக் கூட்டம்; துகள்-பூந்தாது.]**

**பைந்தொடி மகளிர் பாங்கர் பரிந்துநூல் சொரிந்த காசு**
**சிந்தின தழலென் றஞ்சிச் சிறையன்ன நிலத்தைச் சேரா**
**இந்திர கோப மாமென் றிளமயில் குனிந்து குத்திச்**
**சிந்தையிற் றேம்பத் தாமே திருமணி நக்க வன்றே 2528**

[பாங்கர்-பக்கத்தே; சிந்தையின் தேம்ப-நெஞ்சால் வருந்த.]

செழித்து வளர்ந்த பனைமரத்தின் பாளை ஈன்ற குரும்பையையும், பொன் சிமிழையும் பழிக்கின்ற, அணி மணிகள் புனைந்த மார்புடைய இலக்கணையின் கணவனைக் காண வந்து, மிக்க ஒலிசெய்யும் கருமுகில் பெருமழையைக் கடலிலே பெய்ததைப் போன்ற

பேரொலியுடன் கூடிக் கொடியுடைய நகரம் விளங்கியது. உச்சியிலே நடப்பட்டுள்ள, ஊர்ந்து செல்லும் மேகங் களைக் கிழிக்கின்ற, அழகிய இலைவடிவான சூலங்கள் நடப்பட்டுள்ள, மாடங்களில் அசைந்தாடுகின்ற கொடி களின் கூட்டத்தினாலும், நிறைந்து பெருகிய அகில் புகை யினாலும் தெளிந்த நறுஞ்சுண்ணப் பொடியாலும், தேன் நிறைந்த பூந்தாதுகளினாலும் மூடப்பட்டு நின்ற கதிரவனைக் காணாது, மாலை மறைந்து அந்திப் போது வந்துவிட்டதோ என்று மயங்கிப் பறவைகள் கூடு திரும்பின. பசும்பொன் வளை அணிந்த பெண்கள் அணிந் திருந்த மேகலையின் நூல் அறுந்துவிடச் சிந்திய மணிக் கற்கள் ஒரு பக்கத்திலே சிதறிக் கிடக்க, அவற்றை நெருப்புத் துண்டங்கள் என்று நினைத்துக் கொண்டு பயந்து அழகிய சிறகுடைய அன்னப் பறவைகள் நிலத் துக்கு வராமல் நீரிலேயே இருந்தன. இளமயில்கள் இவற்றை இந்திரகோபப் பூச்சிகள் என்று நினைத்துக் குனிந்து அலகால் குத்திப் பார்த்துவிட்டு, அவை வேறாக இருக்கக் கண்டு வருந்த, இவற்றை எல்லாம் கண்ட அவ் வழகிய மணிகள் தமக்குள்ளாகவே சிரித்துக் கொள் வதைப்போல் ஒளிவீசின.

**வெள்ளைமை கலந்த நோக்கிற் கிண்கிணி மிழற்றி**
**யார்ப்பப்**
**பிள்ளைமை காதல் கூரப் பிறழ்ந்துபொற் றோடு வீழத்**
**துள்ளுபு செலீஇய தோற்றந் தொடுகழற் காமன் காமத்**
**துள்ளுயி ரறியப் பெண்ணாய்ப் பிறந்ததோர் தோற்ற**
**மொத்தார் 2529**

*[செலீஇய-சென்ற; உள்ளுயிர்-உண்மைநிலை.]*

**தன்னெறி வளரக் காமன் தான்முலை யிரண்டு மாகி**
**முன்னரே வளர்கின் றாற்போன் முகிழ்முலை முத்த மேந்திப்**
**பொன்னெறி மணியிற் பொங்கிக் குழல்புறம் புடைப்ப**
**வோடிப்**
**பின்னிறீஇ வைத்த போலப் பெதும்பையர் விதும்பி நின்றார்**

  

[புறம்-முதுகு; பின்-பின்னால்; நிறீஇ-நிறுத்தி.]

**அணிநிலா வீசு மாலை யரங்குபுல் லென்னப் போகித்**
**துணிநிலா வீசு மாலைப் பிறைநுதற் றோழி சேர்ந்து**
**மணிநிலா வீசு மாலை மங்கையர் மயங்கி நின்றார்**
**பணிநிலா வீசும் பைம்பொற் கொடிமணி மலர்ந்த**
**தொத்தார் 2531**

[நிலா-ஒளி; புல்லென-பொலிவழிந்து தோன்ற.]

**வள்ளுகிர் வரித்த சாந்தின் வனமுலை நோக்கி னாரை**
**உள்ளுயி ருண்ணுங் கூற்றி னுடன்றுகண் கரிந்து பொங்கக்**
**கள்ளுயி ருண்ணு மாலைக் கதுப்பொரு கையி னேந்தி**
**நள்ளிருள் விளக்கிட் டன்ன நங்கைமார் மல்கி னாரே 2532**

[கள்-தேன்; உயிர்-ஈண்டு மணம்; கதுப்பு-கூந்தல்.]

கள்ளங் கபடமற்ற உள்ளத்துடன் கிண்கிணிச் சதங்கைகள் ஒலியெழுப்பி முழங்க, குழந்தை மனத்தின் தூய அன்போடு, பொன்தோடு கழன்றுவிழ, துள்ளி வரும் பேதைப் பெண்கள், பூங்கழல் அணிந்த காமன், இன்ப வேட்கையின் உண்மை உணர்வறியப் பெண்ணாக வந்து பிறந்ததைப்போல் தோன்றினர். தன் கொள்கையாகிய இன்ப விழைவு உலகிலே நிலைபெற்று வளர, காமவேளே முலையுருவில் முன்பிருந்தே வளர்வதைப்போல, வளர்ந்துள்ள மார்பின் மேல் முத்துக்களை அணிந்து, பொன்னின் ஒளியோடு வந்து மோதும் நீலமணியைப் போன்ற கருங்கூந்தல் முதுகிலே புரண்டு துவள ஓடிப் பின் நிறுத்தி வைத்ததைப் போல, பெதும்பைப் பருவத்து மகளிர் மனம் மருகி நின்றனர். தாம் விளையாடும் அழகிய நிலா ஒளி வீசும் மாலை உடைய அரங்கு, பொலிவிழந்துபோக அதை விட்டுச் சென்று, தெளிந்த ஒளியை உமிழும் மாலைக் காலத்துப் பிறைநிலவைப் போன்ற நெற்றியுடைய தம் தோழியைத் தழுவியவாறு, ஒளிசிந்தும் மணிமாலை அணிந்த மங்கையர் மயங்கி நின்றனர். அத் தோற்றம், மற்ற கொடிகள் பணிய, ஒளிவீசும் பசும்பொன்னாலாகிய

கொடி, மணிகள் மலர நின்றதைப் போலிருந்தது. கூரிய நகத்தாலே எழுதிய சாந்து பூசிய முலைகள், தம்மைக் கண்டாரைக் கொல்லுங் கூற்றுவனைப்போலக் கோபித்துக் கண்கரிந்து பொங்க, மாலையின் மணத்தைப் பருகிய கூந்தலை ஒரு கையிலே ஏந்தியபடி, காரிருட்டிலே விளக்கேற்றி வைத்ததைப்போல் விளங்கும் கவினுடைய மங்கையர் எங்கும் நிறைந்தனர்.

மட்டொளித் துண்ணு மாந்தர் மாண்புபோன் மறைந்து வண்ணப்
பட்டொளித் தொழிய வல்குற் பசுங்கதிர்க் கலாபந் தோன்றக்
குட்டநீர்க் குவளைக் கண்கள் விருந்துண விரும்பி நின்றார்
அட்டுந்தே னணிந்த மாலைப் பவளக்கொம் பணிந்த தொத்தார் 2533

[மட்டு-கள்; வண்ணம்-நிறம்; கலாபம்-மேகலை.]

பெரும்பொரு ணீதிச் செங்கோற் பெருமக னாக்கம் போலப்
பரந்திட மின்றி மேலாற் படாமுலை குவிந்த கீழால்
அரும்பொரு ணீதி கேளா வரசனிற் சுருங்கி நந்து
மருங்கு நொந் தொழிய வீதி மடந்தைய ரிடங்கொண் டாரே 2534

[ஆக்கம்-செல்வப் பெருக்கு; மருங்கு-இடை; நொந் தொழிய-வருந்தும்படி.]

செல்வர்க்கே சிறப்புச் செய்யுந் திருந்துநீர் மாந்தர் போல
அல்குற்கு முலைக்கு மீந்தா ரணிகல மாய வெல்லாம்
நல்கூர்ந்தார்க் கில்லை சுற்ற மென்றுநுண் ணுசுப்பு நைய
ஒல்கிப் போய் மாடஞ்சேர்ந்தா ரொருதடங் குடங்கைக் கண்ணார் 2535

[ஒல்கி-அசைந்து; தடம்-பெரிய; குடங்கை-உள்ளங் கை.]

மறைந்திருந்து மதுவை உண்டு மகிழும் மனிதர்களைப் போல, அழகிய பட்டாடைகள் அல்குலை மறைத்தும்,

மறையாமல் வெளியே தெரியும்படி பொன்னொளி வீசிக் கிடக்கும் மேகலை அணிந்த, தேன் வழியும் மலர்மாலை அணிந்த பவளக்கொடியைப் போன்ற மங்கையர், ஆழமான குளத்திலே மலர்ந்த குவளை மலர்போலும் தம் கண்களால், அவன் அழகு நலத்தை அவனறியாமல் அள்ளிப் பருகினர். சிறந்த செல்வமாகிய அறத்தைச் செவ்வனே செய்கின்ற செங்கோலரசனின் செல்வப் பெருக்கைப் போல, மார்பில் இடமின்றிப் பரந்து, சாயாது மென் முலைகள் குவிந்து சிறந்திருக்க, அதற்குக் கீழே, சிறந்த பொருளாகிய அறத்தைச் செழிப்புறச் செய்யாமல் நீதி முறை தவறவிட்டு வளம் அற்றுப்போன வேந்தனது பெருமையைப்போல, சிறுத்துக் குறுகிய இடையை உடைய மடந்தையர், தெருவீதி எங்கும் நிறைந்து நின்றனர். பொருள் நிறைய உடையவர்க்கே மேலும் பொருள் சேரப் பெருமை செய்யும் பொல்லாத குண முடைய மனிதர்களைப்போல, அல்குலிலும் முலைமீதும் எல்லா அணிமணிகளையும் புனைந்துவிட்டு, செல்வச் சிறப்பில்லா ஏழைகளுக்கு ஏதும் இல்லை என்பதைப்போல வருந்தும் இடையையும் உள்ளங்கை அளவு கண்களும் உடைய பெண்கள், தங்கள் இடைவருந்த அசைந்து சென்று, மாளிகையின் மேல் மாடத்தை அடைந்தனர்.

**கார்வளர் மின்னு வீசுங் குண்டலங் காய்பொ னோலை**
**ஏர்வளர் பட்ட மேற்ப வணிந்திருள் சுமந்து திங்கள்**
**நீர்வளர் நீலம் பூத்து நிரைத்தபோ னிரைத்த மேலால்**
**வார்வளர் முலையி னார்த மாழைவாண் முகங்கண் மாதோ**

[கார்-மேகம்; ஏர்-அழகு; வார்-கச்சு; மாழை-இளமை.]

**குறையணி கொண்ட வாறே கோதைகால் தொடர வோடிச்**
**சிறையழி செம்பொ னுந்தித் தேன்பொழிந் தொழுக வேந்திப்**
**பறையிசை வண்டு பாடப் பாகமே மறைய நின்றார்**
**பிறையணி கொண்ட வண்ணல் பெண்ணொர்பால் கொண்ட தொத்தார்** 2537

[கோதை-கூந்தல்; பறை-பறத்தல்; சிறையழி-அளவு கடந்து.]

**பொன்னரி மாலை பூண்டு பூஞ்சிகை குலாவி முன்கை**
**மின்னரிச் சிலம்பு தொட்டு விருப்பொடு விரைந்து போவான்**
**கன்னிய ராடி நோக்கித் தம்மைத்தாங் கண்டு நாணிப்**
**பின்னவை யணிந்து செல்வா ரிடம்பெறா தொழிந்து போனார் 2538**

[பூஞ்சிகை-பூக்களை யணிந்த முடி; ஆடி-கண்ணாடி.]

கருமேகத்திடை நெளிகின்ற மின்னலைப்போல் ஒளிவீசும் காதுக் குண்டலமும் பொன்னால் செய்த ஓலையும் அழகுக்கு அழகுதரும் நெற்றிப் பட்டமும் பொருந்த அணிந்து, காரிருள் போன்ற கூந்தலைச் சுமந்து, நீரிலே பூத்த நீலோற்பல மலர்கள் நிறைந்ததைப்போன்ற கண்களும், கச்சினால் இறுக்கக் கட்டிய மார்பும் உடைய, ஒளிவீசும் நிலவைப்போன்ற அழகிய முகமுடைய பெண்கள் மேன்மாடங்கள் எங்கும் நிறைந்தனர். அரைகுறையாக அணிந்துகொண்ட ஆபரணங்களுடனே தொடுத்துக்கொண்டிருந்த பூமாலைகள் கலைந்து குலைய, அதிலிருந்து பெருகி வழியும் தேன் சிவந்த பொன்போன்ற உந்திச் சுழியிலே சிந்த அந்த மாலைகளை ஒருகையிலே ஏந்தி, அம்மாலையை மொய்த்துக் கிடந்த வண்டுகள் எழுந்து இசைபாட, தங்களுடலின் ஒரு பக்கமே மறைய அம்மாடங்களில் அரைகுறை அலங்காரத்தோடு நின்றுகொண்டிருந்தவர்கள், பிறை சூடிய பெருமான் ஒருபக்கம் கொண்ட பெண்ணைப்போல் தோன்றினர். கூந்தலிலே சூடவேண்டிய பொன்னரி மாலையைக் கழுத்தில் அணிந்துகொண்டு, அழகிய கூந்தலை அரைகுறையாக வாரி முடித்துக்கொண்டு காலில் அணியத்தக்க பரலணிந்த சிலம்பைக் கையிலே அணிந்து, சீவகனைக் காணச் சீக்கிரமாகச் செல்ல விரும்புகின்ற பெண்கள் கண்ணாடியில் தெரிந்த தங்களின் அவசரகோல அலங்காரத்தைக்

கண்டு தங்களுக்குள்ளாகவே வெட்கப்பட்டு, அவற்றைத் திருத்தி அணிந்து அழகு செய்துகொண்டு போவதற்குள், நேரம் நீண்டு அங்குக் கூட்டம் சேர்ந்து விடவே, நிற்க இடம் கிடைக்காமல் தவித்தனர்.

முத்துலாய் நடந்த கோல முலைமுதன் முற்ற மெல்லாம்
வித்திய வேங்கை வீயும் விழுப்பொனும் விளங்கக் காமத்
தொத்துநின் றெரிந்து கண்டார் கண்சுடச் சுடர்ந்து நின்றார்
ஒத்தொளிர் காம வல்லி யொருங்குபூத் துதிர்ந்த தொத்தார் 2539

*[தொத்து-கொத்து; கண்சுட-கண்களை வருத்த.]*

உகிர்வினை செய்து பஞ்சி யொள்ளொளி யரத்த மூட்டி
அகில்கம ழங்கை சேப்ப வரிவைய ரலங்க றாங்கி
வகிர்படு மழைக்கண் சின்னீர் மாக்கய லெதிர்ந்தவே போல்
முகில்கிழி மின்னி னோக்கி முரிந்திடை குழைந்து நின்றார் 2540

*[வகிர் - மாவடுவின் பிளவு; அரத்தம் - செந்நிறக் குழம்பு.]*

முனித்தலைக் கண்ணி நெற்றிச் சிறார்முலை முழாலிற் பில்கிப்
புனிற்றுப்பால் பிலிற்றித் தேமா வடுவிறுத் தாங்குப் பாய
நுனித்துக்கண் ணரக்கி நோக்கா தொசிந்துநின் றார்க ளன்றே
கனிப்பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம் பொத்தார் 2541

*[முழாலின் - தழுவுதலால்; பிலிற்றி - கொப்பளித்து; அரக்கி-அமுக்கி; பொறை-பாரம்.]*

அவிரிழை சுடர முல்லை யலங்கலங் கூந்தல் சோரத்
தவிர்வெய்ய காமந் தாங்கித் தடமுலைக் கால்கள் சாய
இவர்தரு பிறவி யெல்லா மின்னமா கென்று நின்றார்
சுவர்செய்தாங் கெழுதப் பட்ட துகிலிகைப் பாவை யொத்தார் 2542

[தவிர்-தவிர்ந்த; துகிலிகை-எழுதுகோல்.]

முத்தணிகள் கிடந்து புரளும் முலை முதல் மார்பு வரை, விரிந்த வேங்கை மலரும், சிறந்த பொன் காசுகளும் போன்ற பசலை படர்ந்து நிற்க, சுடுகின்ற காமத்தீயின் கொழுந்து போலக் கண்டவர் கண்களை வருத்த நின்ற மகளிர், அழகுற வளர்ந்த காமவல்லிக் கொடிகள் எல்லாம் ஒன்றாகப் பூத்துக் குலுங்கியதைப்போல் தோன்றினர். நகத்தை அழகாகச்சீவி, பஞ்சினாலே செக்கச் சிவந்த செம்பஞ்சுக் குழம்பைப்பூசி, அகில்புகை வாசங்கமழும் தங்கள் உள்ளங்கை சிவக்க மாலையைத் தாங்கியபடி, பிளந்த மாவடுவைப் போன்ற கயற் கண்களில் நீர் கசிய, முகிலைப் பிளந்து வரும் மின்னலைப் போல, ஆசையோடு அவனை நோக்கி, இடைவருந்தப் பெண்கள் மயங்கி நின்றனர். தவமுனிவர்களின் சடை முடிபோன்ற தலையும், முடிக்கண்ணி அணிந்த நெற்றியும் உடைய சிறுவர்கள் மார்பைச் சேர்ந்து தழுவுவதால், தாய்மை மீதூறப் பொங்கிய பால், காம்பு முறிந்த மாவடுவிலிருந்து பீறிட்டுக் கிளம்புவதைப்போல, ஊறி வழிந்தது. அம்முலைக் காம்புகளைக் கையால் அழுத்திய படியே அரசனைக் கூர்ந்து நோக்க வெட்கப்பட்டுக் கொண்டு மறைந்து நின்றவர்கள் தாய்மைப் பேறாகிய கனிச் சுமையை சுமந்து நின்ற கற்பகத் தருவை ஒத்தனர். ஒளி விளங்கும் அணிமணிகள் விளங்க, முல்லை மலரணிந்த முடிக்கூந்தல் குலைய, காமவேட்கை மறையப் பருத்த மார்புகள் துவள, இனிவரும் பிறவிகளில் எல்லாங்கூட இத்தகைய இன்பங்களே கிடைப்பதாகுக என்று வேண்டி நின்றவர்கள், சுவரமைத்து அதிலே வண்ணத் தூரிகை யால் எழுதிய சித்திரப்பாவைகள் போன்றனர்.

**வேரிநா றலங்கன் மாலை மின்னிழை மயங்கி யெங்கும்**
**பூரித்துப் புதவந் தோறுங் குவளையு மரையும் பூத்துப்**
**பாரித்துப் பைம்பொ னாக ருலகிவண் வீழ்ந்த தேபோல்**
**மாரிமா மயில னாரு மைந்தரு மயங்கி னாரே 2543**

*[வேரி-தேன்; புதவம்-வாயில்; மரை-தாமரை.]*

**கோதைதாழ் குடையி னீழற் கொற்றவன் பருதி யாக**
**மாதரார் முகங்க ளென்னுந் தாமரை மலர்ந்த தெண்ணீர்க்**
**காதநான் ககன்ற பொய்கைக் கடிநகர் குவளை பூத்துப்**
**பேதுறு கின்ற போன்ற பெருமழைக் கண்கண்**
**மாதோ 2544**

*[பேதுறல்-துன்புறுதல்; தெண்ணீர்-தெளிந்த நீர்.]*

**மாந்தரு மாவுஞ் செல்ல மயங்கிமே லெழுந்த நீறு**
**தேந்தரு கோதை யார்தந் தெண்மட்டுத் துவலை மாற்ற**
**ஆய்ந்தபொன் னகர மெங்கு மணிகல வொளியி னாலே**
**காய்ந்துகண் கலக்கப் பூத்த கற்பக மொத்த தன்றே 2545**

*[மா-குதிரை; நீறு-தூசி; மட்டுத்துவலை-தேனின் துளி.]*

**பெண்பெற்ற பொலிசை பெற்றார் பிணையனார் பெரியயாமும்**
**கண்பெற்ற பொலிசை பெற்றா மின்றெனக் கரைந்து முந்நீர்**
**மண்பெற்ற வாயுள் பெற்று மன்னுவாய் மன்ன வென்னாப்**
**புண்பெற்ற வேலி னான்மேற் பூமழை தூவி னாரே 2546**

*[பொலிசை - இலாபம்; பிணையனார் - மகளிர்; கரைந்து-வாயாரக்கூறி.]*

இவ்வாறு, நகரம் முழுவதும் தேன்மணக்கும் மாலையும் ஒளிவீசும் அணிமணிகளும் கலந்து, வாயில்கள் தோறும் குவளை மலர்களும் தாமரை மலரும் போன்ற விழிகளும், முகங்களும் பொங்கிப் பூரிக்க, விண்ணுலகத்தவரும் நாகலோகத்தவரும் இவ்விடத்தை விரும்பி வந்து பரவி நின்றதைப்போல, மழைமேகங் கண்டு களிக்கின்ற மயில்போன்ற மகளிரும் மைந்தரும் கலந்து நின்றனர். மாலை தாழ்ந்தசையும் குடை நிழலில் உள்ள சீவகன் சூரியனாக, பெண்களின் முகங்களாகிய தாமரைகள்

விரிந்து மலர்ந்தன. இப்படி அவ்வழகு நகரிலே நான்கு காத தூரம் மலர்ந்திருந்த தாமரைப் பொய்கையிலே, குவளை மலர்கள் பூத்து மயங்குவதைப்போல, அப்பெண்களின் பெரிய, குளிர்ச்சி தரும் கண்கள் மயங்கிச் சுழன்றன. மக்களும் குதிரைகளும் நிறைந்து செல்வதால் மேலெழுந்த தூசியினை, தேன் நிறைந்த மாலையணிந்த மங்கையர் வீசுகின்ற பூக்களில் உள்ள தேன் துளிகள் போக்க, பொன் கொழிக்கும் அவ்வழகு நகரம் முற்றும், மைந்தர்கள் மகிழ்ச்சி மீதூற அரசன்முன் எடுத்து வீசிய அணிமணிகளின் ஒளியாலே சிறந்து வானுலகக் கற்பகத்தை மாறு கொள்ள மண்ணிலே எழுந்த கற்பகத்தருவை ஒத்திருந்தது. 'புகழ்மகளும் திருமகளும் உன்னைப் பொருந்தியதால் பெண்ணாகப் பிறந்ததின் பெரும் பயனைப் பெற்றார்கள். பெருமைக்குரிய நாங்களும் உன்னைக் காணப்பெற்றதால் கண்பெற்ற பயனை இன்று பெற்றோம்'என்று பாராட்டி, அம்மகளிர் 'மன்னனே நீ நிலம்போலும் நெடுங்கடல் போலும் நீண்ட வாழ்வு பெற்று வாழ்க' என்று வாழ்த்தி, விழுப்புண் பெற்ற வேலுடைய சீவகன்மேல் பூமாரி பெய்தனர்.

## வேறு

**சுண்ண மேற்சொ ரிவார் தொழுது தொங்கல் வீழ்ப்பார்**
**தண்ணெண் சந்த னநீ ரார்ந்து தேன்று ளும்பும்**
**வண்ணப் பத்தெ றிவார் வளையொ லிப்ப வோச்சிக்**
**கண்ணி யிட்டெ றிவார் கலவை நீர்தெ ளிப்பார்** 2547

[தொங்கல்-மாலை; வளை-வளையல்; ஆர்ந்து-நிறைந்து.]

**முந்து சூர்த டிந்த முருக னம்பி யென்பார்**
**ஐந்து ருவ வம்பி னநங்க னென்ற யர்வார்**
**கந்து கன்வ ளர்த்த சிங்கங் காண்மி னென்பார்**
**சிந்தை யிற்க ளிப்பார் சேணெ டிய கண்ணார்** 2548

[முந்து-முன்பு; சூர்-சூரன்; சேண் நெடிய-மிக நீண்ட.]

19

தேசி கமு டியுந் திருந்து பட்டு டையும்
பாச மாக நின்று பன்ம லர்க்க ழுநீர்
மூசி வண்டி மிரும் மொய்ய லங்கல் தாழக்
காசில் காமஞ் செப்பிக் கண்ணி னாலி ரப்பார் 2549

[தேசிகம்-ஒளி; மூசி-மொய்த்து; காசு-குற்றம்; பாசம்-கயிறு.]

வண்ட றைந்த தாரான் வண்ணங் கண்ட பின்றைக்
கண்டி லேனென் மாமை கைவ ளையொ டென்பார்
ஒண்டோ டியி வன்றன் னுருவு கண்டு வாழ்வார்
பெண்டி ராய்ப்பி றந்தார் பெரியர் போத வென்பார் 2550

[மாமை-பசலை நிறம்; போத-மிக.]

சிலமகளிர் பொற்சுண்ணப் பொடிகளை அவன்மீது தூவுவார்; வணங்கி மாலைகளைத் தருவார்; குளிர்ந்த சந்தனத்தையும் பனிநீரையும் கலந்து, தேன்வழியும் அழகிய மலர்ப்பந்தோடு எடுத்து வீசுவார்; வளையல்கள் ஒலி செய்யக் கையை வீசி, முடிக்கண்ணியை எடுத்து வீசுவார்; வாசனைப் பொருள் கலந்த கலவை நீரைத் துருத்தியால் பீச்சுவார்; முன்னர் சூரபதுமனை வீழ்த்திய முருகனே இச்சீவகன் என்பார்; ஐந்து வகை மலரம்பு களையும் உடைய காமன் இவன் என்று வருந்துவார்; கந்துக்கடன் வளர்த்த ஆண்சிங்கம் இவன்தான் கண்டு கொள்ளுங்கள் என்பார்; கண்டு நெஞ்சால் களிப் பாரும் ஆயினர், நீண்ட கண்ணுடைய அந்நகரத்து மகளிர் எல்லாம். ஒளிவீசும் அவனுடைய வைரமணிக் கிரீடமும் பூம்பட்டுடையும், தங்கள் உயிரைப் போக் காமல் நிறுத்தி வைத்திருக்கும் பாசக்கயிறு என்று, வண்டுகள் மொய்த்து முழங்கும் செழுங்கழுநீர்ப் பூக்களால் தொடுத்த மாலை தாழ, தங்களின் மாசற்ற காமவேட்கையைக் கண்கள் எடுத்துக் காட்ட, அவன் கருணையை வேண்டி நின்றனர் இன்னுஞ் சில மகளிர். வண்டுகள் மொய்த்து இன்னிசை பாடும் எழில் மாலை

யணிந்த இவன் அழகைக் கண்ட பிறகு என் அழகு நிறமும் கைவளையல்களும் எங்கோ போய்விட்டனவே என்பார் சில மகளிர்! ஒளிமிக்க வளையணிந்த என் தோழியே, இவனுருவைக் கண்ணால் கண்டு வாழப் பெண்களாய்ப் பிறந்தவர்கள் மிக்க பெருமை உடையவர்களே என்பர் சில மகளிர்.

### வேறு

கொழித்திரை ஓத வேலிக் குமரனைப் பயந்த நங்கை
விழுத்தவ முலக மெல்லாம் விளக்கிநின் றிட்ட தென்பார்
பிழிப்பொலி கோதை போலாம் பெண்டிரிற் பெரியள் நோற்றாள்
சுழித்துநின் றறாத கற்பிற் சுநந்தையே யாக வென்பார்

[இரை-ஒலிக்கின்ற; ஓதவேலி-உலகம்; பிழி-தேன்.]

சாந்தகங் கிழிய மாலைத் தடமுலை ஞெமுங்கப் புல்லிச்
சேர்ந்தெழு நங்கை மாரே திருநங்கை மார்க ளல்லார்
கூந்தலு முலையு முத்துங் கோதையுஞ் சுமந்து நைவான்
போந்தவந் நங்கை மார்கள் பொய்ந்நங்கை மார்க ளென்பார்

[ஞெமுங்க-அழுந்த; நைதல்-வருந்துதல்.]

இடம்பட வகன்று நீண்ட விருமலர்த் தடங்க ணென்னும்
குடங்கையி னொண்டு கொண்டு பருகுவார் குவளைக் கொம்பின்
உடம்பெலாங் கண்க ளாயி னொருவர்க்கு மின்றி யேற்ப
அடங்கவாய் வைத்திட் டாரப் பருகியிட் டிமி னென்பார்

[ஆர இட்டுவைத்து-நிறைய இட்டு வைத்து; குடங்கை-உள்ளங்கை.]

முலைமுத றுறந்த வன்றே முரித்தா ளாளி யானைத்
தலைநிலம் புரள வெண்கோ டுண்டதே போன்று தன்கைச்
சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செகுத்த நம்பி
நிலவுமிழ் குடையி னீழற் றுஞ்சுக வைய மென்பார் 2554

[முரித்தாள்-வலிய கால்; தெவ்வர்-பகைவர்; செகுத்தல்-அழித்தல்.]

  

சில மகளிர் முத்தும் பவளமும் கொழிக்கின்ற அலை நிறைந்த கடல் சூழ்ந்த இவ்வுலகில், சீவகனைப் பெற்ற தாயாகிய விசயையின் பெருந்தவம் உலகம் போற்றத் தக்க துஎன்பார்; தேன் பொழியும் பூமாலை போன்ற பெண்களில் பெருமைக்குரிய சிறப்புடையவள் நீங்காத, நிலையான கற்புடைய சுநந்தையே என்பார். சந்தனச் சாந்து பூசிய மார்பு கிழியும்படி, மாலையணிந்த பெரிய மார்புகள் அழுந்தத்தழுவி இவனோடு கலந்து வாழும் மங்கையரே நல்லறம் செய்த அழகு மங்கையர்; மற்றவரெல்லாம், கூந்தலும், மார்பும், முத்தும், மாலையும் சுமந்து வீணே வருந்தப் பிறந்த, பெயரளவில் பெண்களாய் இருப்பவர்கள் என்று சிலர் கூறினர். காதளவு இடம் கொள்ள நீண்ட, குவளைமலர் போலும் தங்களது இருகண்களையும் உள்ளங் கைகளாகக் கொண்டு அவன் அழகை அள்ளிப்பருகுவார்; குவளைமலர் மேலெல்லாம் பூத்துக் குலுங்கும் கொடிபோல, உடல் எல்லாம் கண்களாக நிறைந்திருக்குமானால், வேறு ஒருவர்க்கும் இன்றி இவன் மேனி அழகு முழுவதையும், அக்கண்களாகிய வாயால் அள்ளிப் பருகுவீர். ஏன் எனில் அவன் அழகைக் கண்டு மகிழ இந்த இரண்டு கண்கள் போதா என்பார் சிலர். வலிமை மிக்க காலுடைய சிங்கக்குட்டி தாய்ப்பால் மறந்தவுடனேயே, யானையின் தலை நிலத்திலே புரள அதைக் கொன்று அதன் தந்தத்தைப் பற்றி உண்பதைப் போல, தன்கையிலே வில்லைப் பிடிக்கப் பழகிய நாளிலேயே பகைவரை வெற்றி கொள்ளத் தொடங்கிய சீவகனது அருளாட்சியின் கீழே இவ்வுலகம் இன்புறுக என்பாருமாக மகளிர் எங்கும் நிறைந்திருந்தனர்.

### வேறு

**இந்நகரப் புறங்காட்டி லிவன்பிறந்த வாறும்**
**தன்னிகரில் வாணிகனிற் றான்வளர்ந்த வாறும்**
**கைந்நிகரில் வேந்தர்தொழப் போந்ததுவுங் கண்டால்** 2555
**என்னைதவஞ் செய்யா திகழ்ந்திருப்ப தென்பார்**

[புறங்காடு-சுடுகாடு; பிறந்தஆறு-பிறந்தபடி.]

பெருமுழங்கு திரைவரைக ணீந்திப்பிணி யுறினும்
திருமுயங்க லில்லையெனி னில்லைபொரு ளீட்டம்
ஒருமுழமுஞ் சேறலில ரேனும்பொரு ளூர்க்கே
வரும்வழிவி னாயுழந்து வாழ்கதவ மாதோ 2556

[வழிவினாய்-வழி கேட்டு; உழந்து-விரும்பி.]

நஞ்சுகுடித் தாலுநவை யின்றுதவ நின்றால்
அஞ்சியொளித் தாலுமர ணில்லைதவ முலந்தாற்
குஞ்சரத்தின் கோட்டிடையு முய்வர்தவ மிக்கார்
அஞ்சலில ரென்றுமற னேகளைக ணென்பார் 2557

[நஞ்சு-விடம்; நவை-துன்பம்; அரண்-பாதுகாப்பு.]

'இச்சீவகன் இந்நகரத்தின் எல்லையிலே சுடுகாட்டிலே பிறந்ததையும், தனது குலமுறைக்குப் பொருந்தாத வணிகன் கந்துக்கடன் வீட்டிலே வளர்ந்ததையும், புகழ் மிக்க அரசர் பலர் பணிந்து நிற்பதையும், பார்த்த பிறகும் மற்றவர்கள் அத்தகைய உயர்வைத் தரும் தவத்தைச் செய்யாமல் இருப்பது ஏன்? அலை ஒலிக்கும் கடலையும், பெருமலைகளையும் கடந்து சென்று வருந்தி உழைத்தாலும், ஆகிவரும் நல்வினைப் பயன் இல்லை என்றால் பொருள் சேர்தல் இல்லை. பொருளைத் தேடி, உழைக்க ஒரு முழதூரம்கூட செல்லாதவர்கள் என்றாலும், நல்வினைப்பயன் இருப்பின் பொருள் தானே வலுவில் அவர் இருக்கும் இடம் தேடி வரும்! எனவே இத்தகைய சிறப்புக்களைத் தரும் தவம் வாழ்வதாக! நஞ்சினைக் குடித்தாலும் தவப்பயன் இருக்குமானால் அதனால் தீமை இல்லை. தவப்பயன் இல்லாதவர் சாவைக் கண்டு எங்கே ஓடி ஒளிந்தாலும் தப்பித்துக் கொள்ளமாட்டார். தவப்பயன் மிக்கவர்கள், யானைத் தந்தங்களினிடையே சாகச் சிக்கிக் கொண்டாலும், சாகாமல் பிழைத்துக் கொள்வர். தருமமே துணையென்று எப்போதும் நம்பி இருப்போர் எதற்கும் பயப்படவும் மாட்டார்கள்' என்று பல கூறிப் பாராட்டினர்.

## வேறு

முரல்வாய சூற்சங்க முடமுட் டாழை முகைவிம்மும்
கரைவாய முத்தீன்று கானன் மேயுங் கடற்சேர்ப்பன்
உரைவாய நகர்பரவப் போகி யொண்பொ னெயில்சூழ்ந்த
விரைவாய பூம்பிண்டி வேந்தன் கோயிற் கெழுந்தானே

*[முரல்வாய-ஒலிக்கின்ற வாயையுடைய; விம்மும்-அலருகின்ற; கானல் - கடற்கரைச் சோலை; பொன் எயில்-பொன்மதில்.]*

அருகு மயிலகவ வன்ன மேங்கக் குயில்கூவக்
குருகு பொறையுயிர்க்குங் கொடுமுட் டாழை
வெண்டோட்டு
முருகு பொறையுயிர்க்கு மொய்பூங் காவிற் படைநீக்கித்
திருகு கனைகழலான் செம்பொற் கோயில் சேர்ந்தானே

*[ஏங்க-ஒலிக்க; குருகு - நாரை; பொறையுயிர்க்கும்-ஈனுகின்ற.]*

திறந்த மணிக்கதவந் திசைக ளெல்லா மணந்தேக்கி
மறைந்த வகிற்புகையான் மன்னர் மன்னன் வலஞ்செய்து
பிறந்தே னினிப்பிறவேன் பிறவா தாயைப் பெற்றேனென்
றிறைஞ்சி முடிதுளக்கி யேத்திக் கையாற் றொழுதானே

*[பிறவாதாயை - பிறவாத உன்னை; முடிதுளக்கி-தலைதாழ்த்தி வணங்கி.]*

வளைந்த முள்ளுடைய தாழை மலர்கள் விரிந்து மலர்கின்ற கடற்கரைச் சோலையில் ஒலிக்கும் வாயுடைய சங்குகள் முத்துக்களை ஈன்று திரிய, அப்பெருங்கடல் பரப்பை உடைய சீவகன், நகரை வலமாக வந்து, அழகிய பொன் மதில் சூழ்ந்த, மணம் மாறாத அசோக மரநீழலில் வாழும் அருகப்பெருமான் கோவிலுக்குப் புறப்பட்டான். பக்கத்தில் இருந்து மயில் அகவ, அன்னம் ஒலிக்க, குயில் கூவ, நாரை முட்டை இடும் கூரிய முள்ளுடைய தாழை மடல்கள் தம் வெள்ளை நிற

மடலிலே சுமந்திருந்த தேனைச் சொரிகின்ற, மலர் நிறைந்த சோலையில் படையை நிறுத்தி வைத்துவிட்டு, முறுக்கிச் செய்த ஒலிக்கும் சிலம்பணிந்த சீவகன், அருகப் பெருமான் கோவிலுக்குள் சென்றான். அவ்வளவில், மணிகள் இழைத்த இறைவன் கோவில் கதவுகள் திறந்தன. திசைகள் தோறும் அகிற்புகையின் நறுமணம் நிறைந்து கமழ்ந்தது, அரசர்க்கரசனான சீவகன் கோவிலை வலம் வந்து, 'பிறவாத உன்னைச் சரண டைந்தேன்! பெருமானே,எண்ணிறந்த பிறவிகளில் இடர்ப் பட்டேன். இனி இத்துன்பப் பிறப்பிலே மீண்டும் வந்து பிறவாத பெரும்பேறும் பெற்றேன்' என்று தோத்தரித்துத் தலைவணங்கிக் கையால் தொழுதான்.

## வேறு

**திருமறு மார்பினை திலகமுக் குடையினை**
**அருமறை தாங்கிய வந்தணர் தாதையை**
**அருமறை தாங்கிய வந்தணர் தாதைநின்**
**எரிபுரை மரைமல ரிணையடி தொழுதும் 2561**

[திருமறு மார்பினை-திருமகளாகிய மறுவையுடைய மார்பினை உடையாய்; மரை-தாமரை.]

**உலகுணர் கடவுளை யுருகெழு திறலினை**
**நிலவிரி கதிரணி நிகரறு நெறியினை**
**நிலவிரி கதிரணி நிகரறு நெறியைநின்**
**அலர்கெழு மரைமல ரடியிணை தொழுதும் 2562**

[திறல்-வீரியம்; கதிரணி-கதிரை ஒத்த; நெறி-சுக்கிலத் தியானமாகிய நெறி.]

**மறுவற வுணர்ந்தனை மலமறு திகிரியை**
**பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வனை**
**பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வநின்**
**நறைவிரி மரைமலர் நகுமடி தொழுதும் 2563**

[மறு-குற்றம்; மலம்-குற்றம்; திகிரி-தருமசக்கரம்; பொறி-இந்திரியங்கள்.]

## வேறு

**நந்தா விளக்குப் புறமாகென நான்கு கோடி**
**நொந்தார்க் கடந்தான் கொடுத்தான்பின்னை நூறு மூதூர்**
**கந்தார் கடாத்த களிறுங்கொடித் தேர்க ளூறும்**
**செந்தா மரைமே னடந்தானடி சேர்த்தி னானே** **2564**

[நந்தாவிளக்கு - அணையாவிளக்கு; விளக்குப்புறம்-விளக்கெரிப்பதற்காக அளித்த இறையிலி நிலம்.]

'திருவிளங்கும் மறுவுடைய மார்புடையவனே! விளங்கும் முக்குடை உடையவனே! போற்றற்கரிய மறை முதல் பொருளானவனே! மறையோதும் அந்தணர்க்கு முதல்வோனே! அழல்போலச் சிவந்த, உன் அழகிய தாமரை மலர்போன்ற பாதங்களைப் பணிகின்றோம்! உலகம் போற்றும் ஒப்பற்ற பெரியோனே! தீமையை அச்சுறுத்தும் திறல்மிக உடையவனே! நிலவின் ஒளி போலும் ஒப்பற்ற தூயநெறி உடையவனே! அத்தகைய ஒப்பற்ற தூய நன்னெறி உடைய, அருள் பொழியும் தாமரை மலர் போன்ற உன் பொன்னடிகளைப் போற்று கின்றோம்! ஐயம் திரிபற யாவும் உணர்ந்தவனே! குறை சுடியும் அறவாழி உடையவனே! ஐம்பொறிகளுக்கும் எல்லையாகிய நல்லறத்தின் பயனானவனே! அத்தகு நல்லறத்தின் பயனான முழுமுதல் பொருளே! உன் தாமரை மலரனைய தாள்களைத் தொழுகின்றோம்' என்று அருகனைப் பணிந்து போற்றினான் சீவகன். பகைவர் பலரைவென்ற சீவகன், அணையா விளக்கிற் கென ஆலயத்திற்கு நான்கு கோடிப் பொன்னும், நூறு பழம்பதிகளும், தூணில் சேர்த்துக் கட்டிய மதயானைகள் நூறும், கொடியுடைய தேர்கள் ஒரு நூறும் மனம் என்ற மலர்மேல் நடந்த அருகப் பெருமான் வழி பாட்டிற்கு என்று மானியமாகக் கொடுத்தான்.

**வாடாத மாலை மணிமாலைபொன் மாலை முத்த**
**நீடார மாலை நிழன்மாண்ட பவழ மாலை**

மாடார்ந் திழியு மருவிம்மலர் பொற்ப வேற்றிக்
கூடார்க் கடந்தான் வலங்கொண்டிடஞ் சென்று புக்கான்

*[நிழல் மாண்ட-ஒளி மிகுந்த; மாடு ஆர்ந்து-மலையின் பக்கத்தே பொருந்தி; பொற்ப-அழகுபட.]*

## வேறு

உலமரு நெஞ்சி னொட்டா மன்னவ ரீர்ந்த யானை
வலமருப் பீர்ந்து செய்த மணிகிளர் கட்டிலேறி
நிலமகள் கணவன் வேந்தர் குழாத்திடை நிவந்தி ருந்தான்
புலமகள் புகழப் பொய்தீர் பூமகட் புணர்ந்து மாதோ **2566**

*[ஈர்ந்து-அறுத்து; நிவந்து - உயர்ந்து; புலமகள்-நாமகள்; புலம்-அறிவு.]*

எத்துணைத் தவஞ்செய் தான்கொ லென்றெழுந் துலக மேத்த
வித்திய புகழி னாற்கு விருந்தர சியற்றி நாடும்
ஒத்தன னல்கித் தன்னை யுழந்தனள் வளர்த்த தாய்க்குச்
சித்திரத் தேவிப் பட்டந் திருமக னல்கி னானே **2567**

*[விருந்தரசு-புதிய அரசுரிமையை; சித்திரம்-நன்மை.]*

இனக்களி யானை மன்ன ரிளவுடை யானென் றேத்தத்
தனக்கிளை யானை நாட்டித் தான்றனக் கென்று கூறிச்
சினக்களி யானை மன்னர் மகளிரைச் சேர்த்தி நம்பன்
மனக்கினி துறைக வென்று வளங்கெழு நாடு மீந்தான்

*[மன்னர்-சிற்றரசர்; இளவுடையான் - இளவரசன் இனக்களி-களிற்றுக் கூட்டம்.]*

வாடாத மாலைகளாகிய மணியாலமைந்த மாலையும் பொன்னால் செய்த மாலையும் நீண்ட முத்துக்களால் தொடுத்த மாலையும் ஒளிமிக்க அழகிய பவழ மாலையும் மலையின் பக்கத்திலிருந்து சுரந்துவரும் அருவிகளின் நீரும் மலரும் அருகன் திருவடி பொருந்தச் சேர்த்து, பகையரசர் பலரை வென்ற சீவகன் அரண்

மனையை அடைந்தான். சீவகனைக் கண்டால் கலங்கு கின்ற பகையரசர் ஏறிவந்த யானைகளை வென்று, அவற்றின் தந்தக் கொம்புகளைக் கொண்டு செய்து, மணிகள் வைத்துப் பதித்த கட்டிலிலே அமர்ந்து, உலகாளப் பிறந்தவனாகிய சீவகன், நாமகள் போற்ற சீர்மிக்க திருமகள் துணையிருக்க, மன்னர்களிற் சிறந்த மன்னனாய் வீற்றிருந்தான். இப்படி வாழ இவனைப் பெற்றவன் எப்படி எல்லாம் தவம் இருந்தானோ, என்று உலகம் எல்லாம் போற்றும் புகழுடைய கந்துக்கடனுக்கு, விருப்போடு அரசுரிமையும் நாடும் தந்து, தன்னை வருந்தி வளர்த்த தாயாகிய சுநந்தைக்குப் 'பெருந்தேவி' என்னும் பட்டமும் சீவகன் கொடுத்தான். யானைப்படையுடைய மன்னர்களிடம் தன் தம்பி நந்தட்டனை இளவரசன் என்று பாராட்டி அவனைத் தன் இளவரசனாய் இருக்கச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, சீற்றமிக்க வேழப்படையுடைய மன்னர் மகளிரை மணம் புரிவித்து மகிழ்வோடு வாழ்க என்று வாழ்த்தி அவர்க்கு நாடும் நற்பொருளும் பரிசாகத் தந்தான்.

**ஆழ்கடல் வையத் தில்லா வருநிதி யரசு நல்ல**
**சூழ்மணி யாழி செம்பொற் சூட்டொடு கண்ணி காதற்**
**றோழர்கட் கருளித் தொல்லை யுழந்தவர் தம்மைத் தோன்ற**
**வாழ்கென நிதியு நாடு மன்னவன் கொடுப்பித் தானே.**

[ஆழி-ஏனாதி மோதிரம்; சூட்டு-பட்டம்; கண்ணி-முடிமாலை.]

**வளர்த்தகைத் தாயர் தம்மை வருகென அருளித் தங்கள்**
**கிளைக்கெலாஞ் சிறப்புச் செய்து கேட்டவர் மருள வைந்தூர்**
**விளைத்துள கெடாத வைக லாயிர மிறுப்புத் தண்டக்**
**கொளக்கொடுத் தயாவு யிர்த்தான் கொற்றவ னென்ப வன்றே** 2570

[கைத்தாயர் - செவிலித்தாயர்; அயாவுயிர்த்தான்-இளைப்பாறினான்.]

**கைத்தல மந்தி கொண்ட கைம்மகப் போன்று தங்கட்**
**பத்திமை விடாது மேனாட் படைக்கல நவின்ற பொற்றேர்**
**மைத்துன மன்னர்க் கெல்லாம் வளநிதி மணிசெய்**
**மான்றேர்**
**தத்துநீர் மிசைச்சென் மாவுந் தவழ்மதக் களிறு மீந்தான்**

[பத்தி-ஒழுங்கு, பக்தி; மா-குதிரை.]

ஆழ்ந்த கடல் சூழ்ந்த உலகில் பிறர் அடைய முடியாத பெருஞ் செல்வமாகிய அரசுரிமையையும், மணிகள் இழைத்த ஏனாதி பட்டத்துக்குரிய மோதிரத்தையும், செம்பொன்னால் செய்த பட்டயத்தையும், முடிக்கண்ணி யையும், தன் தோழர்களுக்குத் தந்து, தன் பொருட்டு முன்னால் துன்பமேற்றவர்கள் இன்புற்று வாழ அவர் களுக்குப் பொன்னும் பொருளும் அமைச்சரைக்கொண்டு சீவகன் கொடுக்கச்செய்தான். தன்னைவளர்த்த செவிலித் தாயர்களை எல்லாம் வருக என்று வரவேற்று, அவர் களுக்கும், அவர்களுடைய உறவினர்களுக்கும் வேண்டிய சிறப்புக்கள் எல்லாம் செய்து, கேட்டவர் மயங்குபடி, விளைபொருள்கள் எல்லாம் குறைவற விளைந்து, நாளொன்றுக்கு ஆயிரம் பொன் இறுப்புத் தண்டலாகக் கொள்ளும்படி கெடாத ஐந்தூர்களையும், பரிசாகத்தந்து அரசன் சற்றே இளைப்பாறினான். ஆண் குரங்கைத் தன் கைகளால் இறுகப்பற்றிக் கொண்டிருக்கும் ஒழுங் குள்ள குட்டிக் குரங்குகளைப்போல, தன்னிடம் கொண்ட பக்தியை விடாது, முன்பு தன்னிடம் படைத்தொழில் பயின்ற மைத்துன மன்னர்களான உலோக பாலன் விசயன் முதலியவர்களுக்கு எல்லாம், மணிகள் இழைத்த குதிரை பூட்டிய தேரும், நீர் அலைகள்மேல் பாய்ந்து செல்லத்தக்க குதிரைகளும், மதம் பொழியும் யானை களும் தந்தான்.

**கோமகன் கோல மான்றேர்க் கோவிந்த னென்னுங்**
**கொய்தார்**
**மாமற்கு மடங்க லாற்றற் கட்டியங் கார னென்ற**

தீமக னுடைய வெல்லாந் தேர்ந்தனன் கொடுத்துச்
செல்வன்
ஓவலில் கறவை யொத்தா னுலோகபா லற்கு மாதோ 2572

[ஓவலில் கறவை-இடைவிடாது பொழிகின்ற பசு.]

பேரிடர் தன்க ணீக்கிப் பெரும்புணை யாய தோழற்
கோரிடஞ் செய்து பொன்னா லவனுரு வியற்றி யூரும்
பாரிடம் பரவ நாட்டி யவனது சரிதை யெல்லாம்
தாருடை மார்பன் கூத்துத் தான்செய்து நடாயி னானே

[புணை - தெப்பம்; கூத்து-நடகம்; நடாயினான்-நடத்தினான்.]

ஊன்விளை யாடும் வைவே லுறுவலி சிந்தித் தேற்பத்
தான்விளை யாடி மேனா ளிருந்ததோர் தகைநல் லாலைத்
தேன்விளை யாடு மாலை யணிந்துபொற் பீடஞ் சேர்த்தி
ஆன்விளை யாடு மைந்தூ ரதன்புற மாக்கி னானே 2574

[ஊன்-மாமிசம்; உறுவலி-மிக்க வலியுடைய சீவகன்; ஆன்-பசுக்கள்.]

## வேறு

கொட்ட மேகம ழுங்குளிர் தாமரை
மொட்டின் வீங்கிய வெம்முலை மொய்குழல்
அட்டுந் தேனழி யும்மது மாலையார்
பட்ட மெண்மரும் பார்தொழ வெய்தினார் 2575

[வீங்கிய-பெருத்த; அட்டும்-சொரிகின்ற; கோட்டம்-மணம்.]

பிறகு சீவகன், அழகிய குதிரைகள் பூட்டிய தேருடைய தன்னுடைய மாமனாகிய கோவிந்தனுக்கு, வலிய சிங்கம் போன்ற தீய கட்டியங்காரனுடைய உடைமைகளையெல்லாம் தந்து, செல்வன் உலோகபாலனுக்கு ஓயாது அருள்கின்ற அமுதசுரபி போலானான். தனக்குண்டான மிகப்பெரும் துன்பத்தைப் போக்கி பெருந் தோணிபோல் துணைபுரிந்த சுதஞ்சணனுக்கு ஒரு

கோவிலைக்கட்டி, பொன்னால் அவனுருவை அதில் அமைத்து உலகம் போற்ற அத் தேவமகன் கோவிலுக்கு மானியமாகப் பல ஊர்களைக் கொடுத்து, அவன் வரலாற்றை அழகிய ஆடற்கூத்தாக அமைத்து, மாலை புரளும் மார்புடைய சீவகன் நாடெங்கும் நடத்தச் செய்தான். பகைவர் உயிர் குடிக்க அவர் உடலோடு பொருந்தி விளையாடும் வேலேந்திய வலிமை மிக்க சீவகன், மேலும் எண்ணிப் பார்த்து, பிள்ளைப் பருவத் திலே தான் இருந்து விளையாடிய பெரிய ஆலமரத்திற்கு, தேன் உண்ண வண்டுகள் மொய்க்கும் மாலையை அணி வித்து, அதன்கீழ்ப் பொன்னால் செய்த பீடம் ஒன்று அமைத்து, அதைச் சுற்றிலுமுள்ள, பசுக்கள் மேய்ந்து விளையாடும், ஐந்தூர்களையும் மானியமாக வழங்கி னான். மணம் வீசும் தாமரை மொட்டைப்போலப் பருத்த பூமார்புகளையும், கூந்தலையும் உடைய தேன் வழியும் மாலையணிந்த காந்தருவதத்தை முதலிய எட்டு மனைவிகளும், உலகம் புகழ 'அரசியர்' பட்டம் ஏற்றனர்.

**பஞ்சிசூ ழல்குற் பல்வளை வீங்குதோள்**
**வஞ்சி நுண்ணிடை வம்பணி வெம்முலை**
**விஞ்சை யன்மகள் சீறடி வீழ்ந்தனர்**
**அஞ்சி லோதிய ரும்பவிழ் கோதையார்** **2576**

[பஞ்சி-துகில்; வம்பு-கச்சு; அம் சில் ஓதி-அழகிய சிலவாகிய கூந்தல்.]

**வீடி லைந்தரைக் கோடி விருத்திமேல்**
**நாடி யாயிர நாடொறு நங்கைமார்க்**
**காடு சாந்தடி சிற்புற மாக்கினான்**
**கோடு வாலொளிக் குங்குமக் குன்றனான்** **2577**

[வீடு இல்-விடுதலில்லாத; விருத்தி-சீவிதம், சீவிப் பதற்காக விட்ட நிலம்; புறம்-இறையிலி நிலம்.]

ஆனை மும்மத மாடிய காடெலாம்
மானை நோக்கியர் வாய்மது வாடின
வேனல் மல்கிவெண் டேர்சென்ற வெந்நிலம்
பானன் மல்கிவெண் பாலன்னம் பாய்ந்தவே 2578

[ஆடிய-திரிந்த; வேனல்-வேனிற்காலம்; வெண்டேர்-வெள்ளிய பேய்த்தேர்; வெந்நிலம்-பாலைநிலம்; பானல்-குவளை.]

மாரி மல்கிவ ளங்கெழு மண்மகள்
வாரி மல்கிவ ரம்பில ளாயினாள்
ஆரி யாவடி சிற்றளியா னெய்வார்ந்
தேரி யாயின வெங்கணு மென்பவே 2579

[மாரி-மழை; மண்மகள் - பூமி; வாரி-வருவாய்; ஆரியா-அதற்கு மேலாக; அடிசில்தளி-மடைப் பள்ளி.]

இப்படிப் பட்டம் அணிந்து கொண்ட அழகிய கூந்தலும் அரும்பலரும் மலர்மாலையும் அணிந்த குணமாலை முதலிய மற்றைய ஏழு பேர்களும், பட்டுடை அணிந்த அல்குலும், பல வளையல்கள் அணிந்த பருத்த தோளும், வஞ்சிக்கொடி போன்ற மெல்லிய இடையும், கச்சணிந்த பருத்த முலையும் உடைய காந்தருவதத்தையின் காலில் விழுந்து பணிந்தனர். அப்படிப் பணிந்த அம்மங்கையர்க்கு, குறையாத வாழ்க்கைப் பணமாக ஐந்தரைக் கோடிப் பொன் கொடுத்தாள். மேலும் நாள்தோறும் அவர் தேவைக்கு வேண்டும் சாந்துக்கும், உணவு முதலிய வற்றிற்கும் என்று, அன்றாடம் ஆயிரம் பொன் கிடைக்கும் வகையில் அருகில் உள்ள நிலத்தை, அசையும் குங்குமக் குன்றுபோன்ற சீவகன் மானியமாகக் கொடுத்தான். இவ்வாறு எல்லார்க்கும் குறைவறக் கொடையளித்த பின் சீவகன், மதம் பொழியும் யானைகள் அலைந்து திரிந்த காடுகள் எல்லாம் மானைப் பழிக்கும் கண்களுடைய மங்கையர் வாய் கொப்புளிக்கும் தேன் நிறைந்தது. பெரிய பேய்த்தேர்கள் சென்ற வெப்பமிக்க

பாலை நிலமெல்லாம், குவளை மலர்கள் நிறைந்து, வெண்மையான பால் போன்ற சிறகுடைய அன்னப் பறவைகள் நிறைந்தன. காடழித்து நாடு, நகரம், மலர்ச் சோலைகளாக்கினான். நாட்டிலும் மழை குறைவின்றிப் பெய்ய, நிலமகள் தந்த வளமெல்லாம் எல்லையின்றிப் பொங்க, அதற்கு மேலாக மடைப்பள்ளி உணவோடு ஊற்றிய நெய் நிறைந்து வழிந்து எவ்விடமும் ஏரிகள்போல் தோன்றின.

ஏக வெண்குடை யின்னிழற் றண்ணளி
மாக மாய்க்கட லெல்லை நிழற்றலாற்
போக பூமியும் பொன்கிளர் பூமியும்
நாகர் நாகமு நாணி யொழித்தவே 2580

[போகபூமி-உத்தரகுரு; பொன்கிளர்பூமி-சுவர்க்கம்; ஒழித்த-தம் பெருமையைக் கைவிட்டன.]

வண்டு மேய்ந்து வரிமுரல் பூஞ்சிகைக்
கெண்டை வென்றகண் ணார்களுங் கேள்வரும்
உண்டு மூத்திடை யூறிலர் சேறலாற்
பண்டை யூழியிற் பார்மலி வுற்றதே 2581

[வரிமுரல் - பாட்டை ஒலிக்கின்ற; கெண்டை-கெண்டை மீனை; கேள்வர்-கணவர்; உண்டு-இன்பம் நுகர்ந்து; மூத்து-மூப்படைந்து.]

வேறு

செருநாடு செஞ்சுடர்வேற் றிருகுசெம்பொற்
கனைக ழற்கால்
திருநாடு தேம்பைந்தார்ச் செல்வன்செவ்வி பெறா
தொழிந்து
பெருநாட் டருங்கலங்கள் சுமந்துபேரு மிடம் பெறாஅ
தொருநாட் டரசுணங்க வுரவோன் கொற்ற முயர்ந்ததே

[செவ்வி - சமயம்; பெறாது - பெறாமையால்; ஒரு நாட்டு-ஒரே நிலையில்; உணங்க-வருந்த.]

## வேறு

**வலையவர் முன்றிற் பொங்கி வாளென வாளை பாயச்**
**சிலையவர் குரம்பை யங்கண் மானினஞ் சென்று சேப்ப**
**நிலைதிரிந் தூழி நீங்கி யுத்தர குருவு மாகிக்**
**கொலைகடிந் திவற லின்றிக் கோத்தொழி னடாத்து**
**மன்றே 2583**

*[சிலையவர்-வேடர்; குரம்பை-குடிசை; சேப்ப-தங்க; இவறல்-பேராசை.]*

இவ்விதமாகச் சீவகன் ஏகச்சக்கராதிபதியாகி அவனுடைய வெண்கொற்றக்குடை விண்வரை உயர்ந்து, கடல் சூழ்ந்த மண்ணுலகம் முழுதும் இன்னருள் பொழிந்து நிழல்தரக் கண்ட, தேவலோகமும் இந்திரலோகமும் நாகலோகமும் தங்கள் பெருமையை இழந்து தாழ்ந்தன. வண்டுகள் மொய்த்துத் தேனை உண்டு இசைபாடும் பூக்கள் நிறைந்த கூந்தலும், கெண்டை மீனைப் பழிக்கின்ற கண்களும் உடைய மகளிரும் அவர் தம் கணவரும், உண்டு மகிழ்ந்து இன்புற்று ஒரு குறையுமின்றி வாழ்ந்து வருவதால் சீவகன் ஆட்சியில் இம்மண்ணுலகம் முதல் ஊழியான திரேதாயுகம் போல் சிறந்திருந்தது. வீரம் விளைக்கப் போரினைத் தேடும் சிவந்த ஒளிமிக்க வேலையும், பெற்ற வெற்றிகளின் புகழ் முழக்கும் வீரக்கழலணிந்த காலையும், திருமகள் விரும்பி வந்தடையும் தேன் வழியும் பூமாலை அணிந்த மார்பையும் உடைய சீவகனது தன்மை பெறாது புகழ் குன்றி, பெரிய படைக்கலங்களைச் சுமந்த படி, புகழ்ப் பெயரும் சிறப்பிடமும் பெறாத மற்ற நாட்டரசர்கள் வருந்த, சீவகனுடைய ஆட்சி ஓங்கி உயர்ந்தது. வலைஞருடைய வீட்டு வாயிலிலே வாள் போலும் வாளைமீன்கள் துள்ளும்படியும், வேடுவர் குடிசையுள்ளே மான்கள் சென்று தங்கும்படியும், நாட்டில் கொலைத் தொழில் நீங்க, உலகம் கலியுகத்தின் தன்மை கெட்டு இந்த யுகத்திலேயே திரேதாயுகத்தின் தன்மை

பெற்றதுபோல்,மக்களும் பேராசை இன்றி வாழச் சீவகன் ஆட்சி நடத்தலானான்.

## வேறு

கதங்கனல் யானை நெற்றிக் கட்டிய பட்ட மேபோல்
மதங்கமழ் கோதை யல்குன் மனாக்கிடந் திமைத்துக் காமப்
பதம்பல பார்க்குஞ் சாயற் பாவைமற் றநங்க மாலை
விதம்படக் கருதி மாதர் விளைத்தது விளம்ப லுற்றேன்

[கதம்-கோபம்; மனா-மணி; காமப்பதம்-காமத்தை யுண்டாக்கும் செவ்வி.]

## வேறு

ஈர்ந்தண் கோதையிளையார் குழாத்திடையாளெங்கோனடி சேர்வலென்
றார்ந்தசெந்தாமரை முகத்தினாளடிகள் வந்தீங்ககன் கடையுளாள்
சார்ந்தசாயற்றட மாமுலைத்தையல் வல்லேவரு கென்றான்
சேர்ந்துமன்னர் முடிவைர விற்றிளைக்குஞ் செம்பொற் செறிகழலினான் 2585

[கடை-வாயில்; வல்லே-விரைந்து.]

அருவிலைநன் கலஞ்செய்போர்வையன்ன நாணவடி யொதுங்கிச்சென்று
உருவமொவ்வாதொசியு நுசுப்பொல்கிக் கோமானடி தொழுதபின்
மருவின்சாயன் மணிமெல்விரல் கூப்பியோலை மரபினீட்ட
இரவியென்ன விளங்குமொளி யிறைவன் கொண்டாங்கது நோக்குமே 2586

[கலம்-ஆபரணம்; ஒசியும்-ஒடியும்; நுசுப்பு-இடை.]

கோபத்தால் குமுறும் யானையின் நெற்றியிலே கட்டிய பட்டத்தைப் போல, அல்குல் மேகலையில் மணிகள் கிடந்து ஒளிவீச, காம இன்பம் உண்டாக்கும், வாசமிக்க மலர்மாலை கமழும், மென் சாயலுடைய

  

தேசிகப் பாவை, அநங்கமாலையின் கூற்றிலே படக் கருதி வந்ததை இனி கூறத் தொடங்குவோம்!

'அரசே, அழகிய தாமரை மலர்போலும் முகமுடைய குளிர்ச்சி தரும் மலர்மாலை போன்ற பெண்ணொருத்தி, தோழிகள் கூட்டத்திடையே வந்து, எம் அரசன் திருவடிகளைக் காணவேண்டும் என்று கூறி அரண்மனையின் பெரிய ஆசார வாசலிலே நின்று கொண்டிருக்கிறாள்' என்று வாயிலோன் கூறினான். வைரமுடிக் கிரீடம் உடைய மன்னர்கள் பணிந்து தொழுவதால் பரவி ஒளி வீசும், பொன்னால் செய்த வீரக்கழல் அணிந்த சீவகன், 'மென்சாயலும் பெருமார்பும் உடைய அவளை வரவிடுக' என்றான். உள்ளே உடலில் அணிந்துள்ள அழகிய விலை மதிப்பரிய அணிகலன்களை வெளியே தெரியக் காட்டும், மெல்லிய போர்வையை மேலே அணிந்து, அன்னப்பறவை வெட்க அடியெடுத்து வைத்து நடந்து வந்து, உருவம் வெளித் தெரியாத அளவு மெல்லிதான இடைவருந்த சீவகன் அடிபணிந்து வணங்கிய பின், அழகிய நறுஞ்சாயல் உடைய அவள் விரலைக் கூப்பி ஓலையை நீட்ட, ஞாயிறு போல விளங்கும் ஒளியையுடைய சீவகன் அதை வாங்கிப் படிக்கலானான்.

**அடிகள் கண்டாங்கு வந்தருளுகவ நங்கமாலையடி வீழ்ச்சிமுன்**
**கொடியவேலான் கொதித்தரங்கினீக்கிக் கோயிற் சிறைவைத்தபின்**
**கடிசெய்பைந்தார்க் கமழ்மாலை வேற்கந்துகற் குச்சிறுவ யானிப்**
**ப்டிஅனல்காய்பசுமணிகள் வேய்ந்தோங்கும் பைம்பொற் செறிகழலினாய் 2587**

[கொதித்து-கோபித்து; அனல்காய்-தீயைப் பழிக்கும்.]

**என்னநாளுமரற்றப் பொறான்விடுப்பப் போகியின மழைகணமொய்த்**
**தன்னந்துஞ்சுமடிக் குடிலினுள்ளன்றியான் கொண்ட நாடகத்தினைத்**

துன்னிநம்பியுருவுதீட்டித்தொங்கல் வேய்ந்துதொழுதாற்றநீ
மன்னர்மன்னமதி தோய்குடையாய்மகளிர் காமமறைத்
தொழிதியோ 2588

[அடிக்குடில்-அடிச்சேரி; துன்னி-துன்ன, பொருந்தியிருந்தானாக; தொங்கல்-மாலை; ஆற்ற-செல்ல; ஒழிதியோ-தவிர்கின்றாயோ.]

கண்கடுஞ்சாகதிர்முத்த மேகாலுங்கையார் வளை
கழலுமாற்
பண்கொள் சொல்லார் மாமை நீங்கிப்பைம்பொன் போர்த்த
படாமுலைகளும்
மண்கொள்வேன்மன்னர் நண்பின்மையைவையக்கெல்லா
முடனறையவோ
பெண்களாவி விடுத்தொழிபவோ பெரியோர்
நண்படைந்தார் பெயர்பவோ 2589

[துஞ்சுதல்-உறங்குதல்; முத்தம்-நீர்த்துளி; மாமை-பொன்னிறம்; வையக்கு-உலகுக்கு.]

'அநங்கமாலை அடிகளில் வீழ்ந்து வணங்குவதைக் கண்டு வேந்தே மகிழ்ச்சி கொள்க! முன்னே கட்டியங்காரன் கோபித்துக் கூத்தரங்கினின்றும் கொண்டுபோய் அரண்மனையிலே சிறைவைத்தபின், மணம் வீசும் மாலையும் வாசம் மணக்கும் மாலை சூடிய வேலும் உடைய கந்துக்கடனின் செல்வனே, நெருப்புமிகும் மாணிக்க மணிக்கற்களும் மரகதக்கற்களும் நிறைத்த, பொன்னால் செய்த, அழகிய சிலம்பணிந்தவனே, நான் எந்நேரமும் சிறையில் வருந்திப் புலம்பிக் கொண்டிருப்பதைக் காணப் பொறுக்காத கட்டியங்காரன் என்னை விடுவிக்க நான் வெளியேறி முகில் கூட்டம் மொய்த்திருக்கும், அன்னங்கள் துயில்கொள்ளும் சேரியில் இருந்ததல்லாமல், நான் ஆடிய கூத்தை நீ விரும்பிப் பார்த்ததைப்போல், ஓர் ஓவியத்தில் எழுதி மாலையணிவித்து, வணங்கியிருக்க, மன்னர் மன்னவனே! நிலவைப்போலும் அழகிய வெண்கொற்றக் குடை உடையவனே! நீ மட்டும், மங்கையரிடத்துக் காம

இன்பம் தோன்றாமல் தவிர்த்து விலக்கியிருக்கின்றாயோ? கண்கள் இரவெல்லாம் தூங்காது கண்ணீராகிய முத்துக்களையே சிந்துகின்றன. கைமுழுவதும் உள்ள வளையல்கள் கழன்று விழுகின்றன! இன்னிசைப் பண்போல் ஒலிக்கும் இனிய குரலுடைய மங்கையர்க்கு இயல்பாக உள்ள நிறம் மாறி, சாயாத மார்பும் பசலை பூத்துத் திகழ்கின்றது! எனவே உலகம் காக்கும் வேலேந்திய மன்னரின் நட்பிழந்து போனதை நான் பறையறைந்து உலகுக்கெல்லாம் அறிவிக்கவோ! பெண்கள் உயிர் அவரை விட்டுப்போகப் பொருந்துமோ? இல்லை பெரியோர் நட்பைப் பெற்றவர்கள் அதை இழத்தல் தான் கூடுமோ!'

**அறனிழலாயுலகளிக்கு நின்னாரமாலையணி வெண்குடைப்**
**புறனிழலினயலேனோயான் புல்லாமன்னர் நிணம்பொழியும் வேல்**
**மறனிழன்மதயானையாய்வந்தவென்றோழிவாமலேகை**
**திறனழியாமையின்னேவிடுத்தருளுகதேர்வேந்தர் வேந்தனே 2590**

[புல்லாமன்னர்-பகையரசரது; நிழல்மறல்-தன்னிழலைக் கோபிக்கின்ற; திறனழியாமை - வருந்தாமல்.]

**புள்ளும்யாழுங்குழலுமேங்கப்புனைந்துவல்லானினைந் தியற்றிய**
**பள்ளிச்செம்பொற்படையமளிமேன் மழலைமணியாழ்தான் வெளவிக்**
**கொள்ளுந்தீஞ்சொலலங்காரப்பூங்கொடியைப் புல்லி மணிக்குவட்டினை**
**எள்ளிவீங்கித் திரண்ட தோண்மேற் குழைவில் வீச விருந்தானே 2591**

[புள்-வளை; குழல் - வேய்ங்குழல்; ஏங்க-ஒலிக்க; பள்ளி-இடம்.]

**அங்கைசேப்பக்குருகிரங்கவலங்கலம்பூங்குழறுயல்வர**
**மங்கைநல்லார்பவழவம்மியரைத்தசாந்தமலர் பெய்மாலை**

**பொங்குதூமக்கொழுமென்புகைபுரிந்தபஞ்சமுகவாசமும்**
**தங்குதாம மார்பினாற் குந்தையலாட்குங்கொண்டேந்தி**
**னாரே 2592**

[குருகு இரங்க-வளை ஒலிப்ப; குழல் துயல்வர-கூந்தல் அசைய.]

'தருமநெறி காத்து உலகை ஆளுகின்ற, முத்தாரம் அணிந்த உன் வெண்கொற்றக்குடை நிழலுக்கு, நான் மட்டும் அயலவளோ? பகையரசர் உடலைப் பிளந்த சதை ஒழுகும் வேலும், வீரத்தின் விளக்கமான மதயானையும், மணித்தேரும் உடைய மன்னவன் மகனே! இம் முடங்கலை ஏந்தி உன்னிடம் வந்திருக்கின்ற என் தோழி வாமலேகையின் மனம் வருந்தாதபடி மறுமொழி கூறி அனுப்புக' என்றிருந்தது. ஓலையைப் படித்த சீவகன், கை வளையும், யாழும், குழலும் ஒலித்து எழுப்பிய இன்னிசை கேட்டு, கைத்திறம் மிக்கவன் எண்ணி ஆராய்ந்து செய்த, செம்பொன்னாலமைத்த கட்டில் பஞ்சணைமேல், இனிய மழலை மொழிபேசும் யாழ் என்று கருதத்தக்க இனிய குரலுடைய, அலங்கரிக்கப்பட்ட அழகிய மலர்க்கொடி போன்ற, தேசிகப்பாவையை மணிகள் பொருந்திய மலையைப் பழிக்கும்பருத்துத் திரண்ட தோளோடு சேரத் தழுவிக் காதுக்குண்டலம் ஒளிவீச அமர்ந்திருந்தான். உள்ளங்கை சிவக்க, வளைகள் ஒலிசெய்ய, மாலையணிந்த அழகிய மலர்க்கூந்தல் அசைய, பவழ அம்மியில் அரைத்த சாந்தினையும் மலர் நிறைந்த மாலையையும் வாசம் வீசும் மணப் புகையையும், விரும்பியுண்ணும் பஞ்சமுக வாசங்களையும், மாலையணிந்த சீவகனும் மங்கை தேசிகப் பாவையும் ஏற்கப் பணிப்பெண்கள் ஏந்தி நின்றனர்.

**அருளுமாறென்னைய நங்கமாலையடித்தி தோழியன்**
**றோவெனத்**
**தெருளலான் செல்வக்களி மயக்கினாற் றிசைக்குமென்**
**அறிவளக்கியகருதி**

மருளிற் சொன்னாய் மறப்பேனோ யானின்னையென்ன
மகிழைங்கணை
உருளுமுத்தார்முகிழ்முலை யினாளுள்ளத்துவகை
தோற்றினாளே 2593

[அளக்கிய-அளந்து காட்ட; அடுத்தி-தலைவி.]

முறுவற்றிங்கண் முகவரங்கின் மேன்முரிந்துநீண்ட
புருவக்கைகள்
நெறியின்வட்டித்து நீண்டவுண்கண்சென்றும் வந்தும்
பிறழ்ந்து மாடப்
பொறிகொள் பூஞ்சிலம்புமேகலை களும்புணர்ந்த
இன்னியங் களார்ப்பவேந்தன்
அறியுநாடகங்கண் டான்பைந்தார லர்ந்துமாதர்
நலங்குழைந்ததே 2594

[வட்டித்து-சுழற்சி; குழைந்தது-நெகிழ்ந்தது.]

நான்மருப்பின் மதயானைநறியபைந் தாமரை மடந்தையைத்
தேன்மதர்ப்பத்திளைத் தாங்கவன்றிருவின் சாயல்நலங்க
வர்ந்தபின்
ஊன்மதர்த்த வொளிவேற்கண்ணார் பரவவிவ் வாறொழுகு
மன்றே
வானகத்துநிலத்து மில்லாவண்ணமிக்க மணிப்பூணினான்

[நால்மருப்பின்-நான்கு தந்தங்களையுடைய; சாயல்-அழகு; நலம்-இன்பம்.]

'சீவக மன்னனே! நீ என்னை ஆட்கொண்டதற்குக் காரணம் என்ன? நான் தலைவியாகிய அநங்கமாலையின் தோழி என்பதாலோ' என்று தேசிகப்பாவை பரிகசித்தாள். அதற்கு மறுமொழியாகச் சீவகன், 'நான் என் செல்வச் செருக்கால் உன்னை மறந்தேன் என்பதை உலகுக்கு எடுத்துக்காட்ட, அறியாமையால் இம்மொழி கூறத்துணிந்தாய். அன்பே, நான் உன்னை மறக்க முடியுமோ' என்று கூறினான். இன்பூட்டும் ஐந்து காமன் கணைகளையும் தன்னிடத்தே கொண்ட, முத்துமாலை புரளும் தாமரை மலர் போன்ற மார்புடைய, தேசிகப்

பாவையின் உள்ளத்திலே மகிழ்ச்சி நிறைந்தது. பூவேலைப் பாடுகளுடன் செய்த சிலம்பும் மேகலையுமுடன் சேர்ந்து இன்னிசை வாத்தியங்கள் முழங்க, மென் நகை பூத்திருக்கும் நிலவைப் போன்ற முகமாகிய அரங்கின் மேல், வளைந்த புருவங்களையும் கைவிரல்களையும் முறைப்படி வளைத்துச் சுழற்றி; மைதீட்டி நீண்ட கண்கள் ஏறியும் இறங்கியும் சுழல, முன்னர் அவளிடத்தே கண்ட ஆடற்கலையைச் சீவகன் மீண்டும் கண்டு களிக்கக் கண்ட அவள் உள்ளம் உருகியது. நான்கு தந்தக் கொம்பு களுடைய ஐராவதம் என்னும் யானையின் மேலே உள்ள பொய்கையில் மலர்ந்த மணமிக்க தாமரை மலரில் வாழும் திருமகளை, தேனுண்டு வண்டுகள் மகிழ்வதைப்போல, தேசிகப் பாவையின் இன்பநலத்தை விண்ணிலும் மண்ணிலும் காணக் கிடைக்காத அழகிய மணிக்கலங்கள் உடைய சீவகன் நுகர்ந்து, உடல் சிலிர்க்கச் செய்யும் ஒளி மிக்க வேல்போலும் கண்ணுடைய மங்கையர் போற்ற வாழ்ந்து வரலானான்.

## வேறு

**நரம்புமீ திறத்தல் செல்லா நல்லிசை முழவும் யாழும்**
**இரங்குதீங் குழலு மேங்கக் கிண்கிணி சிலம்பொ டார்ப்பப்**
**பரந்தவாள் நெடுங்கட் செவ்வாய்த் தேசிகப் பாவை கோல**
**அரங்கின்மே லாடல் காட்டி யரசனை மகிழ்வித் தாளே**

*[நரம்புமீது இறத்தல் செல்லா-நரம்பின் ஓசையைத் தப்பாத; இரங்கு-ஒலிக்கின்ற.]*

**கடற்படை மன்னர் தம்மைக் காதலின் விடுத்துக் காமன்**
**தொடுத்தகோன் மார்பிற் றங்கத் தூமலர்க் கொம்பனாளை**
**வடித்தவின் னமிர்தி னாரப் பருகலின் மழைக்கட் செவ்வாய்**
**துடித்துவண் டுண்ணத் தூங்குஞ் செந்தளி ரொத்த தன்றே 2597**

*[காதலின் - அன்போடு; கோல் - மலரம்பு; ஆர- நிறைய.]*

**இளைமையங் கழனிச் சாய லேருழு தெரிபொன் வேலி**
**வளைமுயங் குருவ மென்றோள் வரம்புபோய் வனப்பு வித்திக்**

**கிளைநரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம**
**விளைபய னினிதிற் றுய்த்து வீணைவேந் துறையு மாதோ**

[கேழ்த்து-நிறத்து; துய்த்து-நுகர்ந்து.]

யாழ் நரம்பின் இசைக்கேற்ப மத்தளமும் யாழும் குழலும் கூடி இசைக்க, பாதச் சிலம்பும் பன்மணி நிறைந்த கிண்கிணிச் சதங்கையும் ஒலி செய்ய, ஒளி பரவிய நீண்ட கண்களும் சிவந்த வாயும் உடைய தேசிகப்பாவை, அழகிய ஆடரங்கிலே நாட்டியமாடி அரசனை மகிழ்வித்தாள். கடல் போன்ற படை உடைய மன்னர்கள் எல்லாம் நாடகம் கண்டு சென்ற பின், காமன் எறிந்த மலரம்பு தைத்து வருந்தும், அழகிய மலர்க்கொம்பு போன்ற தேசிகப்பாவையைத் தெளிந்த இனிய அமுதம் பருகுவது போல் சீவகன் நுகர்ந்து மகிழ்ந் தான். மழைபோல் குளிர்ந்து இன்பந்தரும் கண்களுடைய அவள் செவ்விதழ் துடித்து, வண்டுகள் தேனுண்டு தூங்கி மகிழும் சிவந்த தளிரை ஒத்தது. ஒளிவீசும் அழகிய பொற் பூணாகிய வேலி சுற்றிலும் அமைந்த, இளமைப் பருவம் என்னும் வயலிலே, தன் தோற்றம் என்னும் ஏர் கொண்டு உழுது, வளைகள் நிறைந்த மெல்லிய தோளாகிய வரப்பை அமைத்து, அழகு நலத்தை விளைவித்ததால், அது கிளை நரம்புகளுடைய யாழிசையும், கூத்துமாகத் தழைத்து வளர்ந்து, பின் தந்த காம இன்பமாகிய பயனை நிறைய உண்டு, யாழிசையில் வல்லோனாகிய சீவகன் நலமுடன் வாழ்ந்து வந்தான்.

இலக்கணையார் இலம்பகம் முற்றிற்று.

# 13. முத்தி இலம்பகம்

## 1. விசயை துறவு

நீரேந்தி நெய்ம்மிதந்து நிணம்வாய்ப் பில்கி யழல்விம்மிப்
போரேந்திப் பூவணிந்து புலவு நாறும் புகழ்வேலோன்
காரேந் திடிமுரச மார்ப்பக் காய்பொற் கலன்சிந்திப்
பாரேந்திச் செல்லுநாட் பட்ட தானாம் பகர்வதே 2599

*[அழல் விம்மி-கோபத் தீ நிறைந்து; புலவு-மாமிச நாற்றம்; பட்டது-நிகழ்ந்தது.]*

விண்பாற் சுடர்விலக்கி மேகம் போழ்ந்து விசும்பேந்தி
மண்பாற் றிலகமாய் வான்பூத் தாங்கு மணிமல்கிப்
பண்பால் வரிவண்டுந் தேனும் பாடும் பொழிற்பிண்டி
எண்பா லிகந்துயர்ந்தாற் கிசைந்த கோயி லியன்றதே

*[விசும்பேந்தி - ஆகாயத்தின் மேலாய்; எண்பால் இகந்து-காதி முதலாகிய எட்டுக் கன்மங்களி னின்றும் நீங்கி.]*

அடிசிற் கலங்கழீஇக் கருனை யார்ந்த விளவாளை
மடுவின் மதர்த்துணரா வாழைத் தண்டிற் பலதுஞ்சும்
நெடுநீர்க் கழனிசூழ் நியமஞ் சேர்த்தி விழவ யர்ந்து
வடிநீர் நெடுங்கண்ணார் கூத்தும் பாட்டும் வகுத்தாரே

*[கருனை-பொரிக்கறியை; வாளை-ஒருவகை மீன்; உணரா-அறியாவாய்; நியமம்-ஊரை; விழவு-திருவிழா.]*

நெய் மிதந்து வழிய, கோபத்தீ பொங்கப் போரிலே ஈடுபட்டு, நிணச்சதைதோய்ந்து வழிய, மண்ணு நீராடி, மலர்மாலை சூடி, புலால் வாசம் வீசும் புகழ்பெற்ற வேலுடையவனாகிய சீவகன், இடிபோலக் கொடை முரசம் ஆர்க்க, பொற்பூண்களை எல்லையில்லாமல் எல்லார்க்கும் வழங்கி, நிலவுலகைக் காத்து அளித்து வருகின்ற நாளிலே நடந்த ஒரு சேதியைக் கூறுவோம்!

வானத்து மேகத்தைப் பிளந்து, நிலவையும் கதிரையும் தாண்டி அதற்கு மேலும் உயர்ந்து, மண்ணுலகம் விளக்க முற, வானத்து மீன்கள் மின்னுவதைப் போல மணிக் கற்கள் ஒளிவீச, பண்ணோடு பொருந்தித் தும்பியும் வண்டும் இன்னிசை பாடுகின்ற அசோக மரச்சோலையிலே காதி முதலிய எட்டுக் கன்மங்களிலும் இருந்து விடுபட்டு எண் குணத்தாலும் உயர்ந்த அருகப் பெருமானுக்குச் சீவகன் ஆணையால் அழகிய கோயில் ஒன்று அமைந்தது. உணவு சமைக்கும் கலங்களைக் கழுவிய நீர்நிறைந்த மடுவிலே, வாளைமீன்கள் பொரிக் கறியை நுகர்ந்தபடி, கரையேறத் தெரியாமல் வாழைத் தண்டிலே படுத்துத் தூங்கும் வளமிக்க நஞ்சை வயல் சூழ்ந்த ஊர்களை அருகன் கோவிலுக்குச் சீவகன் மானியமாகத் தந்து விழாக் கொண் டாடினான். அழகிய கண்ணுடைய கூத்துமகளிர் பாட்டும் கூத்தும் நடத்தினர்.

**அல்லி யரும்பதமு மடகுங் காயுங் குளநெல்லும்**
**நல்ல கொழும்பழனுங் கிழங்குந் தந்து நவைதீர்த்தார்க்**
**கில்லையே கைம்மாறென் றின்ப மெல்லா மவர்க்கீந்தாள்**
**வில்லோன் பெருமாட்டி விளங்கு வேற்கண் விசயையே**

[அல்லியரும்பதம் - அல்லியரிசியாலாக்கிய உணவு; அடகு-கீரை.]

**தனியே துயருழந்து தாழ்ந்து வீழ்ந்த சுடுகாட்டுள்**
**இனியா ளிடர்நீக்கி யேமஞ் சேர்த்தி யுயக்கொண்ட**

**கனியார் மொழியாட்கு மயிற்குங் காமர் பதிநல்கி**
**முனியாது தான்காண மொய்கொண் மாடத் தெழுது**
**வித்தாள் 2603**

[ஏமம்சேர்த்தி-பாதுகாப்பான தாபதப் பள்ளியில் சேர்ப்பித்து; மயிற்கும்-மயிற் பொறிக்கும்.]

**அண்ணல் பிறந்தாங் கைஞ்ஞூற் றைவர்க் களந்தான்பால்**
**வண்ணச் சுவையமுதம் வைக நாளுங் கோவிந்தன்**
**வெண்ணெ யுருக்கிநெய் வெள்ள மாகச் சொரிந்தூட்டப்**
**பண்ணிப் பரிவகன்றாள் பைந்தார் வேந்தற் பயந்தாளே**

[ஆன்பால் அளந்து-பசுவின் பாலைப் பங்கிட்டளந்து பரிவு-துன்பம்; பயந்தாள்-பெற்றவள்.]

அல்லி அரிசியால் ஆக்கிய உணவும், கீரையும், காய்களும், குளநெல்லும், இனிய கனி வகைகளும், கிழங்கும் தந்துதவித் தன் பசித்துன்பத்தைப்போக்கிய துறவிகளுக்கு, கைம்மாறாகக் கொடுத்துதவுதற்கு ஒன்றுமில்லையே என்று கருதி, தான் அருகனை வழிபட்டுப் பெற்ற பூசனையின் பயனையெல்லாம் அத்துறவிகளுக்கு தானமாகத் தந்தாள், சச்சந்த மன்னனின் மனைவியாகிய வேல்போல விளங்கும் கண்ணுடையவளாகிய விசயை! பிறகு கணவனைப் பிரிந்து தனியே வந்து சுடுகாட்டிலே வீழ்ந்து துன்பப்பட்ட தனக்கு, சண்பகமாலை என்னும் தோழி உருவில் வந்து உதவித் துயர்போக்கித் தன்னைப் பாதுகாப்பான தவப் பள்ளியிலே விட்டுச்சென்ற, மிக்க அருளுடைய தெய்வத்திற்குக் கோயில் கட்டித் தான் எப்போதும் காணும்படி மயில்பொறியின் உருவைத் தன்மாடத்திலே ஓவியமாகவும் எழுதச் செய்தாள். அடுத்து, சீவகன் பிறந்த இடமாகிய சுடுகாட்டிலே, ஐந்நூற்று ஐந்து குழந்தைகட்கு அன்றாடம் பசும்பாலும், இனிய சுவைமிக்க நல்லுணவும், வெண்ணெய் உருக்கிய நெய் வெள்ளமாக ஓடப்பெய்து, கோவிந்த மன்னனைக் கொண்டு கொடுக்கச் செய்து, பசிய மலர்மாலை அணிந்த சீவகனைப் பெற்ற அவன் தாய் துயரம் நீங்கப் பெற்றாள்.

  

தோடார் புனைகோதை சுநந்தை சேர்ந்து தொழுதாளைப்
பீடார் பெருஞ்சிறுவற் பயந்தீர் வம்மி னெனப்புல்லி
நாடார் புகழாளை நாண மொழிகள் பலகூறிக்
கோடாக் குருகுலத்தை விளக்கிட் டாளை
விளக்கினாள் 2605

[கோடா - மாறுபடாத; புல்லி - தழுவி; பீடு-பெருமை.]

மறையொன் றுரைப்பனபோன் மலர்ந்துநீண்டு செவி
வாய்வைத்
துறைகின்ற வோடரிக்க ணுருவக் கொம்பி னெண்மரும்
இறைவி யடிபணிய வெடுத்துப் புல்லி யுலகாளும்
சிறுவர்ப் பயந்திறைவற் றெளிவீ ரென்றாள்
திருவன்னாள் 2606

[மறை - இரகசியம்; உருவம் - அழகு; தெளிதல்-அறிதல்.]

பொங்கு மணிமுடிமேற் பொலிந்தெண் கோதைத்
தொகையாகிக்
கங்குற் கனவகத்தே கண்ணுட் டோன்றி வந்தீர்நீர்
எங்கும் பிரியற்பீ ரென்று கண்கண் மலர்ந்திருந்து
கொங்கு ணறும்பைந்தார்க் கோமா னிங்கே
வருகென்றாள் 2607

[எண்கோதை-எட்டுப் பூமாலை; கங்குல்-இரவு.]

சிங்க நடப்பதுபோற் சேர்ந்து பூத்தூய்ப் பலர்வாழ்த்தத்
தங்கா விருப்பிற்றம் பெருமான் பாத முடிதீட்டி
எங்கோ பணியென்னா வஞ்சா நடுங்கா விருவிற்கண்
பொங்க விடுதவிசி லிருந்தான் போரே றனையானே 2608

[பூத்தூய்-பூவைத் தூவி; இருவிற்கண்-இரண்டு விற்கிடையில்; பொங்கவிடுதவிசில் - அகல விட்ட ஆதனத்தில்.]

தன்னை வந்து பணிந்த இதழ் விரிந்த மலர்மாலை அணிந்த சுநந்தையை, பெருமைக்குரிய சீவகனைப் பெற்ற

வளே (வளர்த்த காரணத்தால்) வருக என்று கூறித் தழுவிக்கொண்டு உலகம் போற்றும் புகழ் உடைய அவள் வெட்கமுறும்படி மேலும், பல புகழ் மொழி கூறிப் பாராட்டி, குறைவற்ற குருகுலம் விளங்கப் பிறந்த சீவகனை வளர்த்த தாயாகிய சுநந்தையை, விசயை பெருமைப்படுத்தினாள். காதோடு இரகசியம் பேசப் போயிருப்பதைப்போல காதுவரை நீண்டு வளர்ந்த, செவ்வரி படர்ந்த கண்களுடைய சீவகன் மனைவிமார்கள் எட்டுப் பேரும் வந்து விசயையின் திருவடி பணிந்து வணங்க அவர்களைத் தூக்கித் தழுவிக் கொண்டு, உலகம் போற்றும் மக்களைப்பெற்று, அருகன் அருளைப் பெற்று வாழ்க என்று வாழ்த்தினாள். ஒளிவிளங்கும் மணிமுடியிலே பொருந்தி அழகு தரும் எட்டு மாலைகளைப்போல, இரவில் மலர்ந்த கனவைப்போல் என் கண் முன்னே வந்து நின்ற நீங்கள் எட்டுப்பேரும் எங்கும் பிரியாதிருங்கள் என்று கூறிக் கண் குளிர அவர்களைக் கண்டு மகிழ்ந்தாள். மணமிக்க மலர்மலை அணிந்த மன்னன் சீவகனை நோக்கி, மகனே அருகே வருக என்றாள். உடனே சீவகனும், சிங்கம் நடப்பது போலச் சென்று, பலர் மலர் தூவி வாழ்த்த உள்ளத்தில் ஊறிப் பொங்கிய அன்போடு அன்னையின் கால்களில் தன்முடி பதிய வணங்கி, அன்னையே எனக்கு இன்னும் இடுகிற கட்டளை என்னவோ என்று கேட்டபடி, இரண்டு விற்கிடை நீளம் அகலமமைந்த மணித்தவிசில், போர்ச்சிங்கம் போன்ற சீவகன் வீற்றிருந்தான்.

### வேறு

**கொற்றவி மகனை நோக்கிக் கூறினளென்ப நுங்கோக்**
**குற்றதைப் பிறர்கள் கூற வுணர்ந்தனை யாயி னானும்**
**இற்றென வுரைப்பக் கேண்மோ விலங்குபூ ணலங்கன் மார்பிற்**
**செற்றவர்ச் செகுத்த வைவேற் சீவக சாமி யென்றாள் 2609**

  

[கொற்றவி-விசயை; செற்றவர்-பகைவரை.]

நாகத்தால் விழுங்கப் பட்ட நகைமதிக் கடவுள் போலப்
போகத்தால் விழுங்கப் பட்டுப் புறப்படான் புன்சொல் நாணான்
ஆகத்தா னமைச்சர் நுண்ணூற் றோட்டியா லழுத்தி வெல்லும்
பாகர்க்குந் தொடக்க நில்லாப் பகடுபோற் பொங்கி யிட்டான் 2610

[நாகம்-இராகுவென்னும் பாம்பு; போகம்-மகளி ரின்பம்; பகடு-யானை.]

நுண்மதி போன்று தோன்றா நுணுகிய நுசுப்பி னார்தம்
கண்வலைப் பட்ட போழ்தே கடுநவை யரவோ டொக்கும்
பெண்மையைப் பெண்மை யென்னார் பேருணர் வுடைய நீரார்
அண்ணலைத் தெருட்டல் தேற்றா தமைச்சரு மகன்று விட்டார் 2611

[நுண்மதி-நுட்பமான அறிவு; கடுநவையரவு-கடிய குற்றத்தையுடைய பாம்பு; தெருட்டல் தேற்றாது-தெளிவித்தலை யறியாது.]

கற்சிறை யழித்து வெள்ளங் கடற்கவா யாங்குக் கற்றோர்
சொற்சிறை யழித்து வேந்தன் றுணைமுலை துறத்தல் செல்லான்
விற்சிறை கொண்ட போலும் புருவத்து விளங்கு வேற்கண்
நற்சிறைப் பட்டு நாடு நகரமுங் காவல் விட்டான் 2612

[அவாயாங்கு-விரும்பினாற்போல; சிறை-காவல்.]

விசயை சீவகனைப் பார்த்துச் சொல்லுவாள்: 'பேரரசர் உன்னுடைய தந்தைக்கு நேர்ந்த கதியினைப் பிறர் கூறக் கேட்டிருப்பாய் என்றாலும், அத்துன்பக் கதையை நானும் கூறுகிறேன்: ஒளிவிளங்கும் பொற் பூணும், எழில் துலங்கும் மலர்மாலை அணிந்த மார்பும், பகைவரைக் கொல்லும் கூர்வேலும் உடைய

சீவக சாமியே, பாம்பினால் பற்றப்பட்ட ஒளி மிக்க நிலவைப்போல, காம இன்பத்திலே அழுந்தி அதிலிருந்தும் மீளமுடியாதவனாய், பிறர் கூறும் இழிமொழிகளைக் கேட்டும் வெட்கமடையாதவனாய் அமைச்சர்கள் திருந்துதற்குக் கூறும் அறிவுரைகளையும் கேட்காதவனாய், திறமை மிக்க பாகர்களுக்கும் அடங்காது திரிகின்ற வெறிபிடித்த மதயானையைப் போல, மன்னன் அக்காம இன்பத்திலேயே அழுந்திக் கிடந்தான். கூர்த்த அறிவுடைமை போல, பிறர் காண வெளித் தெரியாத மெல்லிய இடை உடைய பெண்களின் கண்களாகிய வலையில் சிக்கிக் கொண்ட உடனே பெருந் துன்பந் தருகின்ற பாம்பைப் போன்ற கொடிய பெண்மையை, அறிவுடைய பெரியோர், பெருமைக்குரிய பெண்மை என்று கொள்ள மாட்டார்கள். எனவே அத்தகைய பெண்கள் வலையில் சிக்கிய மன்னவன் மனதை மாற்றவும் வகை அறியாத அமைச்சர்கள், அவனைவிட்டு நீங்கினர். கல்லணையை உடைத்துக் கொண்டு வெள்ளம் கடலை நோக்கிப் புரண்டோடுவதைப்போல, அமைச்சர்கள் தரும் அறிவுரைகளாகிய கட்டுக் காவல்களை மீறிக் கொண்டு, மன்னன் மங்கையரின் மென்முலைப் போகத்தை நீங்காதவனாய், வில்லைச் சிறை வைத்தது போல விளங்கும் அழகிய புருவத்தின்கீழ்ப் புரளும் வேல்போலும் கண்களால் சிறைப்பட்டு, நாட்டையும் நகரத்தையும் காத்தளிக்கத் தவறினான்.

பிளிறுவார் முரசத் தானைப் பெருமகன் பிழைப்பு நாடிக்
களிறுமென் றுழிழப் பட்ட கவழம்போற் றகர்ந்து நில்லா
தொளிறுவேற் சுற்ற மெல்லா முடைந்தபி னொருவ
னானான்
வெளிறுமுன் வித்திப் பின்னை வச்சிரம் விளைத்த லாமோ

[பிழைப்புநாடி-தப்பை ஆராய்ந்து; கவழம்-கவளம்;
தகர்ந்து-சிதறி.]

  

வனைகலக் குயவ னாணின் மன்னரை யறுத்து முற்றிக்
கனைகுர லுருமி னார்ப்பக் காவல னின்னை வேண்டி
வினைமயிற் பொறியி னென்னைப் போக்கிவிண் விரும்பப்
புக்கான்
புனைமுடி வேந்த போவல் போற்றென மயங்கி வீழ்ந்தான்

*[வனைகலம்-வனையும் பாண்டம்; உரும்-இடி.]*

சீதநீர் தெளித்துச் செம்பொற் றிருந்துசாந் தாற்றி தம்மான்
மாதரார் பலரும் வீச வளர்ந்தெழு சிங்கம் போலப்
போதொடு கலங்கள் சோர வெழுந்துபொன் னார மார்பன்
யாதெனக் கடிகள் முன்னே யருளிய தென்னச்
சொன்னாள் 2615

*[சீதம்-குளிர்ச்சி; போது-மலர்; கலம்-ஆபரணம்.]*

'ஒலியெழுப்பும், வாரால் இறுக்கக் கட்டிய முரசு முழங்கும் படையுடைய மன்னன் செய்யும் தவற்றினை நினைத்து, யானை மென்று தின்னச் சிதறிய சோற்றுப் பருக்கைகள்போல ஒளிமிக்க வேலுடைய அரசரும், மற்று முள்ள சுற்றத்தாரும் சிதறி விலகிப் போக, உன் தந்தை தனியானார். பதரை விளைத்து விட்டுப் பலனை அறுவடை செய்ய முடியுமோ? முடியாதல்லவா! அதைப் போலவே வேந்தன் விளைத்த தீச்செயல் அவன் வாழ்வுக்கே தீமையாய் முடிந்தது. குயவன்தான் சக்க ரத்திலே வனைந்த மண்பாண்டங்களைக் கயிற்றால் அறுத்துப் பிரிப்பதைப்போலக் கட்டியங்காரன் மற்ற பகை யரசர்களைப் பிரித்துத் தன் சுற்றத்தாராக்கிக் கொண்டு, அரண்மனையையும் அந்தப்புரத்தையும் முற்றுகையிட்டு, பேரிடிபோல் முழங்கக் கேட்ட சச்சந்த மன்னன், நீயும் நானும் பிழைக்கவேண்டும் என்பதற்காக, என்னை மயில் போலச் செய்த ஒரு பொறியில் வைத்து அனுப்பிவிட்டு, தனியாக நின்று கட்டியங்காரனோடு போரிட்டு விண் ணுலகம் அடைந்தான். எனவே நீயும் உன் தந்தையைப் போலக் காமச்சேற்றிலே அழுந்தாது வாழ்க; நான்

துறவறம் ஏற்கப் போகிறேன்' என்று விசயை கூறியதைக் கேட்டதும், சீவகன் மயங்கி விழுந்தான். உடனே அவன் முகத்தில் குளிர்ந்த நீரைத் தெளித்து, செம்பொன்னால் செய்தமைத்த பிடி உடைய விசிறிகள் பலவற்றையுங் கொண்டு மங்கையர்கள் வீச, மயக்கம் தெளிந்தது. துயில் நீங்கி எழுகின்ற சிங்கம்போல, மேலணிந்த மலரும் அணிகலன்களும் சிதற எழுந்த, பொன்மாலை பூண்ட மார்புடைய சீவகன், அன்னையே எனக்கு நீங்கள் சற்று முன்னே அருளிச் செய்தது என்னவென்று கேட்க விசயையும் மேலே சொல்லத் தொடங்கினாள்.

**பிறந்துநாம் பெற்ற வாணா ளித்துணை யென்ப தொன்றும்**
**அறிந்திலம் வாழ்து மென்னு மவாவினு ளழுந்து கின்றாம்**
**கறந்துகூற் றுண்ணு ஞான்று கண்புதைத் திரங்கி னல்லால்**
**இறந்தநாள் யாவர் மீட்பா ரிற்றெனப் பெயர்க்க லாமோ**

[வாணாள்-வாழும் நாட்கள்; ஒன்றும்-சிறிதும்; கண் புதைத்து-கண்ணைப் பொத்தி.]

**சுமைத்தயிர் வேய்ந்த சோற்றிற் றுய்த்தினி தாக நம்மை**
**அமைத்தநா ளென்னு நாகம் விழுங்கப்பட் டன்ன தங்கண்**
**இமைத்தகண் விழித்த லின்றி யிறந்துபா டெய்து கின்றாம்**
**உமைத்துழிச் சொறியப் பெற்றா மூதியம் பெரிதும் பெற்றாம் 2617**

[சுமைத்தயிர்-கட்டித்தயிர்; சோற்றின் - சோற்றைப் போல; உமைத்துழி - தினவுகின்ற இடத்தே; ஊதியம்-இலாபம்.]

**கடுவளி புடைக்கப் பட்ட கணமழைக் குழாத்தி னாமும்**
**விடுவினை புடைக்கப் பாறி வீற்றுவீற் றாயி னல்லால்**
**உடனுறை பழக்க மில்லை யொழிமதி யத்தை காதல்**
**வடுவுடைத் தென்று பின்னு மாபெருந் தேவி சொன்னாள்**

[வளி-காற்று; விடுவினை - தீவினை; பாறி-சிதற அடிக்கப்பட்டு; வீற்றுவீற்றாயினல்லால் - வேறு வேறாய்ப் போவதல்லாமல்.]

'நாம் வாழப் பிறந்துள்ள இவ்வுலகில் நம்முடைய வாழ்நாள் எவ்வளவு என்பதை நாம் யாரும் அறியமாட்டோம்! ஆனால் நாம் நெடுநாள் வாழ்ந்து கொண்டே இருப்போம் என்னும் ஆசையில் அழுந்திக் கிடக்கின்றோம்! திடீரென்று எமன் ஒரு நாள் வந்து நம் வாழ்வைப் பறித்துக்கொண்டு, உயிரைக் கொல்லுகின்ற போது, அதைக் காணச் சகிக்காமல் கண்ணைப் பொத்திக் கொண்டு அழுவதையல்லாமல் நாம் வாழ்ந்து கழித்த நாட்களை நம்மால் மீண்டும் திரும்பப் பெறமுடியுமா? இழந்த வாழ்வை மீட்கத்தான் முடியுமா! கட்டித்தயிர் விட்டுப் பிசைந்த சோற்றை ஆசையோடு நாம் உண் பதைப்போல, வாழ் நாட்கள் என்னும் பாம்பு நம் வாழ்வைச் சிறிது சிறிதாக விழுங்க, முடிவில் ஒரு நாள் மூடிய கண் திறக்க முடியாமல் இறந்து படுகின்றோம்; என்றாலும் அரிப்பெடுத்த இடத்திலே சொறிந்து கொள் வதைப்போல, இக்குறுகிய வாழ்நாளிலும் நாம் தவம் செய்து பயனடைய முயலும் பேறு பெற்றிருக்கிறோம்! பெருங்காற்றால் கலைக்கப்பட்ட மழை மேகத்தைப் போல, நாமும் தீவினை வந்து தாக்கத் தனித்தனியாகப் பிரிந்து போவதல்லாமல் கூடி வாழ்ந்திருக்க முடிவதில்லை! எனவே துன்பந்தரும் ,இத்தகைய தீயகாதலைக் கைவிடு வாயாக,' என்று கூறி மேலும் விசயை சீவகனுக்கு அறிவுரை சொல்லத் தொடங்கினாள்!

## வேறு

முருந்தனைய தூமுறுவன் முற்றிழையார் சேரி
இருந்திளமைக் கள்ளுண் டிடைதெரித லின்றிக்
கருந்தலைகள் வெண்டலைக ளாய்க்கழியு முன்னே
அருந்தவமுந் தானமு மாற்றுமினே கண்டீர் 2619

[முருந்தனைய-மயிலிறகின் அடிப்புறம் போன்ற; சேரி-சேர்ந்த இடத்தில்.]

உடற்றும் பிணித்தீ யுடம்பினுயிர் பெய்திட்
டடுத்துணர்வு நெய்யாக வாற்றறுவை யாகக்
குடித்துண்ணுங் கூற்றங் குடில்பிரியா முன்னே
கொடுத்துண்மின் கண்டீர் குணம்புரிமின் கண்டீர் 2620

[பெய்திட்டு - சோறாகப் பெய்துகொண்டு; துவை - துவையல்; குடில் - உடம்பை.]

உழந்தாலும் புத்தச்சொன் றிட்டூர்த றேற்றாது
இழந்தார் பலரா லிடும்பைநீர் யாற்றுள்
அழுந்துமா லப்பண்டி யச்சிறா முன்னே
கொழுஞ்சீலங் கூலியாக் கொண்டூர்மின் பாகீர் 2621

[உழந்தாலும் - சகடம் பழகினாலும்; புத்தச்சு ஒன்று இட்டு - புதிய அச்சு ஒன்றை இட்டு; இடும்பை - துன்பம்; அப்பண்டி - அந்தச் சகடம்; பாகீர் - பாகர்களே.]

பிறந்தவர்க ளெல்லா மவாப்பெரிய ராகித்
துறந்துபுகழ் வேண்டாரோர் துற்றவிழு மீயார்
அறங்கரிது சேய்த்தென்ப தியாதுமறியாரேல்
வெறும்பொருள தம்மா விடுத்திடுமி னென்றாள் 2622

[துற்று அவிழும் - உண்ணப்படும் சோற்றையும்; சேய்த்து - சிவப்பு நிறமுடையது.]

'மயிலிறகின் அடிக்காம்பைப் போன்ற தூய வெள்ளைப் பற்கள் வெளித் தெரியச் சிந்தும் மென் முறுவலும், அணிமணிகள் புனைந்த அழகும் உடைய பெண்களைச் சேர்ந்து, அவர்கள் தரும் இளமை இன்ப மென்னும் மதுவை உண்டு, அறநெறி தெரியாமல் வாழ்ந்து, கருங்கூந்தல் நரைத்து வெள்ளை முடியாகி வாழ்நாள் கழிந்து சாகுமுன்னே தானமும் தவமும் செய்க! கூற்றுவன், வருத்தும் பலநோய்களாகிய தீயுடைய உடலிலே, உயிரைச் சோறாகவும், உணர்வை நெய்யாகவும், வலிமையைத் துவையலாகவும் சேர்த்துப் பிசைந்து நம் வாழ்வைக் கொன்று, தின்பான்! எனவே எமன் இப்படி

  

நம்முயிரைக் கவருமுன், உயிர் உடலை விட்டுப் போகுமுன், இல்லாதவர்க்குக் கொடுத்து உதவுங்கள்! இனிய குணத்தைக் கொளுங்கள்! பழயதாகி இற்றுத் தேய்ந்தாலும் இவ்வுடலாகிய வண்டியைப் புதியதாக்கி வாழ முடியாமல், அதை இழந்தவர் பலபேர் ஆவார்கள்! துன்பநீர் நிறைந்த ஆற்றுமடுவென்னும் சாவிலே அழுந்திக் கழியுமே அல்லாமல், இவ்வண்டி ஒருநாளும் கரை ஏறாது! எனவே பிறவிப் பயனாகிய இவ்வண்டி பழயதாகி அச்சொடிந்து விழுவதற்கு முன்னே, நல்லொழுக்கமாகிய பயனைக்கொண்டு உடலாகிய வண்டியை ஓட்டும் பாகர்களே, வாழ்ந்து நலம் பெறுக! மண்ணில் மனிதராய்ப் பிறந்தவர்கள் எல்லாம், பேராசை கொண்டவர்களாய், மெய்ப்புகழ் அடைய விரும்பாமல், அதைவிட்டு விலகி, உண்ணும் சோற்றிலே ஒரு பருக்கையைக்கூட பிறர்க்குத் தந்துதவாமல், தருமநெறி கருப்பா சிவப்பா என்பது கூடத் தெரியாமல் வாழும் வாழ்வு பயனற்றதாகும்! எனவே என்னைத் துறவறமேற்க விட்டிடுக' என்றாள்!

## வேறு

**முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய பாலடிசின் மகளி ரேந்த**
**நல்ல கருனையால் நாள்வாயும் பொற்கலத்து நயந்துண் டார்கள்**
**அல்ல லடைய அடகிடுமின் ஓட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ்**
**செல்வம் நமரங்காள் நினையன்மின் செய்தவமே நினைமின் கண்டீர் 2623**

[கருனை - பொரிக்கறி; நாள்வாயும்-நாள்தோறும்; அடகு - இலைக்கறி; அயில்வார் - உண்பவர்கள்; நமரம்-சுற்றம்.]

**அம்பொற் கலத்து ளடுபா லமர்ந்துண்ணா வரிவை யந்தோ**
**வெம்பிப் பசிநலிய வெவ்வினையின் வேறாயோ ரகல்கை யேந்திக்**

கொம்பிற் கொளவொசிந்து பிச்சை யெனக்கூறி நிற்பாள் கண்டு
நம்பன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே நினைமின் கண்டீர் 2624

[அடுபால்-காய்ச்சிய பால்; அமர்ந்து-விரும்பி; வெவ் வினையின்-தீவினையால்.]

வண்ணத் துகிலுடுப்பின் வாய்விட் டழுவதுபோல் வருந்து மல்குல்
நண்ணாச் சிறுகூறை பாகமோர் கைபாக முடுத்து நாளும்
அண்ணாந் தடகுரீஇ யந்தோ வினையேயென் றழுவாள் கண்டும்
நண்ணன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே நினைமின் கண்டீர் 2625

[உடுப்பின்-உடுத்தால்; கூறை-ஆடை; அடகுஉரீஇ-இலையைப் பறித்து.]

'முல்லை மலரின் அரும்பெடுத்துக் குவித்ததைப் போல இனியபால் சோற்றைப் பணிப்பெண்கள் ஏந்தி நிற்க, சுவைமிக்க பொரிக் கறியுடன் உணவைத் தங்கத் தாம்பாளத்திலே வைத்துத் தினந்தோறும் உண்டு மகிழ்ந்தவர்கள், பிறகு துன்புற்று வறுமை வந்து வாட்ட, எச்சில் ஓட்டிலே இழிந்த கீரைக்கறியையாவது போடுங்கள் என்று இரந்து உண்பதைக் கண்ட பிறகும் நிலையற்ற செல்வத்தை நிலையானதென்று எண்ணிக் கொண்டிருக் கிறீர்களே! எனவே செல்வத்தை நினைக்காமல் செயற் கரிய தவத்தைச் செய்ய முயலுங்கள்! அழகிய பொன் குவளையிலே, அருமையாகக் காய்ச்சித் தந்த பாலை விரும்பிப் பருகாமல் வெறுத்தொதுக்கிய பெண்கள், பரிதாபம், பிற்காலத்தில் தீவினை வந்து தாக்க, வறுமை யிலகப்பட்டு, பசித்துயர் தாங்காமல், மண்கலயத்தைக் கையிலே ஏந்தியபடி, வாடிய மலர்க்கொடி போன்ற இடை அசைய வருந்தி, பிச்சை போடுங்கள் என்று கேட்டு

நிற்பதைக் கண்ணால் கண்ட பிறகும், சுற்றத்தார்களே, நிலையற்ற செல்வத்தை நிலையானது என்று நம்பி ஏமாறாதீர்கள்! நல்லறமே செய்யுங்கள். அழகிய ஆடை உடுத்தியிருந்தாலே வாய்விட்டு அழுவதைப் போல வருந்தும் அல்குலை, பிறர் காணக் கூசும் கந்தலாலும் கையாலும் மூடிமறைத்துக் கொண்டு, வானத்தை அண்ணாந்து பார்த்தபடி, அன்றைய உணவுக்குக் கீரையை ஆய்ந்துகொண்டு, ஐயோ தீவினையே என்று அன்றாடம் அழுது புலம்புபவர்களைக் கண்ணால் பார்த்திருந்தும், செல்வம் நிலைக்குமென்று நம்பலாமா! சுற்றத்தார்களே நம்பாதீர்கள்! நல்லற வாழ்வையே பின்பற்றுங்கள்!'

**மைதிரண்ட வார்குழன்மேல் வண்டார்ப்ப மல்லிகைமென்**
**மாலை சூடிக்**
**கைதிரண்ட வேலேந்திக் காமன்போற் காரிகையார் மருளச்**
**சென்றார்**
**ஐதிரண்டு கண்டங் குரைப்பவோர் தண்டூன்றி யறிவிற்**
**றள்ளி**
**நெய்திரண்டாற் போலுமிழ்ந்து திற்கு மிளமையோ**
**நிலையா தேகாண் 2626**

[மை-கருமை; கைதிரண்ட - காம்புதிரண்ட; ஐ- சிலேட்டுமம்; கண்டம் குரைப்ப-கழுத்தில் ஒலி உண்டாதலால்.]

## வேறு

**என்றலுஞ் சுநந்தை சொல்லு மிறைவிதான் கண்ட தையா**
**நன்றுமஃ தாக வன்றே யாயினு மாக யானும்**
**ஒன்றினன் றுறப்ப லென்ன ஒள்ளெரி தவழ்ந்த**
**வெண்ணெய்க்**
**குன்றுபோல் யாது மின்றிக் குழைந்துமெய்ம் மறந்து**
**நின்றான் 2627**

[ஒன்றினன் - அக்காரியத்திற்குப் பொருந்தினேன்; ஒள்ளெரி-பெருநெருப்பு.]

## வேறு

ஒருயி ரொழித்திரண் டுடம்பு போவபோல்
ஆரிய னொழியவங் கெளவை மார்கள்தாம்
சீரிய துறவொடு சிவிகை யேறினார்
மாரியின் மடந்தைமார் கண்கள் வார்ந்தவே 2628

[சிவிகை-பல்லக்கு; மாரியின் வார்ந்த-மேகத்தைப் போல் நீர் வடிந்தன.]

'கன்னங் கருத்த கருங்கூந்தலின் மேல், வண்டுகள் வந்து மொய்க்கும் வாசம் மிகுந்த மல்லிகை மாலையை அணிந்து கொண்டு, கையிலே அழகிய பிடியுடைய வேலை ஏந்தியபடி, கண்ட பெண்கள் மயங்கக் காமனைப்போல வீதிவழி சென்ற இளைஞர்கள், பின்னால் கபம் கட்டித் தொண்டை இரும, விழுது நெய்யைப்போலக் கோழை வழிய, முதுமைப் பருவம் அடைந்து தன்னுணர்வு இழந்து, தனக்காதரவாகக் கைத்தடி ஊன்றிச் செல்லக் காரண மான இளமையும் நிலையற்றது என்பதை அறிவாயாக!', என்று விசயை அறிவுரை கூறக்கேட்ட சுநந்தை சொல்லு வாள்: 'விசயமாதேவி கூறிய யாவும் ஐயனே, நல்லவையே ஆயினும் சரி, அல்லாத தீயவை என்றாலும் சரி, நான் விசயை கூறிய நன்னெறியைப் பின்பற்றித் துறவை மேற்கொள்கிறேன்' என்றாள். சுநந்தை இவ்வாறு கூறி யதைக் கேட்டதும், எரிநெருப்புத் தீ சூழ்ந்து கொண்ட வெண்ணெய் மலைபோலச் சீவகன் மனமுருகி செய்வதறி யாது, மறுமொழி கூற வழியின்றி, மெய்மறந்து நின்றான். ஓர் உயிரைத் தவிக்க விட்டுவிட்டு அதைப் பிரிந்து தனியே இரண்டு உடல்கள் செல்வதைப்போல, சீவகனை விட்டு விட்டு விசயையும் சுநந்தையும் சிறப்பு மிக்க துறவை ஏற்றுச் சிவிகையில் ஏறிப்போயினர். இதைக் கண்டு அங்கி ருந்த மங்கையரின் கண்கள் மழை போல் கண்ணீர் சிந்தின.

நன்மயிற் பொறியின்மேற் போய நாளினும்
புன்மையுற் றழுகுரன் மயங்கிப் பூப்பரிந்

திங்கள் கால்பொரு கடலி னெங்கணும்
மன்னனி லாகுல மயங்கிற் றென்பவே 2629

[புன்மையுற்று-வருத்தத்தையடைந்து; கால்-காற்று; ஆகுலம்-துயரம்.]

அழுதுபின் னணிநகர் செல்ல வாயிரந்
தொழுதகு சிவிகைகள் சூழப் போயபின்
இழுதமை யெரிசுடர் விளக்கிட் டன்னவள்
பழுதில்சீர்ப் பம்மைதன் பள்ளி நண்ணினாள் 2630

[தொழுதகு-தொழத்தக்க; இழுது-நெய்; பள்ளி-தவச்சாலை.]

அருந்தவக் கொடிக்குழாஞ் சூழ வல்லிபோல்
இருந்தறம் பகர்வுழி யிழிந்து கைதொழு
தொருங்கெமை யுயக்கொண்மி னடிக ளென்றனள்
கருங்கய னெடுந்தடங் கண்ணி யென்பவே 2631

[பகர்வுழி-கூறுமிடத்து; இழிந்து-இறங்கி.]

## வேறு

ஆரழன் முளரி யன்ன வருந்தவ மரிது தானம்
சீர்கெழு நிலத்து வித்திச் சீலநீர் கொடுப்பிற் றீந்தேன்
பார்கெழு நிலத்து ணாறிப் பல்புக ழீன்று பின்னால்
தார்கெழு தேவ ரின்பந் தையலாய் விளைக்கு மென்றாள்

[நிலம் - உத்தரகுரு; நாறி - தோன்றி; முளரி-விறகு; வித்தி-விதைத்து.]

விசயை மயில் பொறியில் ஏறிப்போன நாளாகிய சச்சந்த மன்னன் இறந்த நாளைக் காட்டிலும், இரு மாதர்களும் இன்று துறவறம் ஏற்றுச் சென்றதைக் கண்டு வருந்திய நகரமக்கள் அழுது புலம்பிய குரல் காற்றால் கலக்கப்பட்ட கடலலைபோல் இராசமாபுரம் எங்கும் கேட்டது. மங்கையர் கூந்தலில் சூடிய மலரை எடுத்து எறிந்தனர். மக்கள் எல்லாம் மன்னனைப் போலவே மாளாத் துயரில் மூழ்கினர். இவ்வாறு அழுது புலம்பும் இராசமா

  

புரம் பின்தங்க, போற்றத்தக்க பல்லக்குகள் ஆயிரம் உடன்வரச் சென்று, எரியும் நெய்விளக்குச் சுடர் போன்ற மாசற்ற புகழுடைய பம்மை என்பவளின் தவப்பள்ளியை, விசயை சுநந்தையுடன் அடைந்தாள்.

அரிய தவவேடந் தாங்கிய மகளிர் கூட்டம் புறஇதழ் போல் சுற்றிச் சூழ்ந்திருக்க, அவர்கள் நடுவே அல்லிப் பூப் போல அமர்ந்து, பம்மை அறவுபதேசம் செய்தபடி யிருக்கும் தவப்பள்ளியை நெருங்கியதும், சிவிகையை விட்டிறங்கிக் கைகூப்பி வணங்கியபடி, கரியநெடுங் கண்ணுடைய விசயை, 'அடிகளே எங்களை எல்லாம் பிறவித் துயரிலிருந்து காத்தருள்க' என்று பணிந்தாள். பணிந்த விசயையிடம் பம்மை 'பெண்ணே, விறகோடு பொருந்தி நிற்கும் நெருப்பைப் போன்ற பெரிய தவத்தை நீ மேற்கொள்வது இயலாத காரியம். எனவே பற்றை விட்டு மனம் என்கிற நிலத்திலே, நீ தானம் என்கிற விதையை விதைத்து, நல்லொழுக்கமாகிய நீரைப் பாய்ச்சி வந்தால், அது பேரின்ப வீடாகிய புண்ணிய பூமியிலே வேர் விட்டு முளைத்து, மிக்க புகழைத் தந்து வாடாத மாலை அணிந்த வானவர் நாட்டின்பத்தையும் உனக்கு உண்டாக்கித் தரும்' என்றாள்!

**அறவுரை பின்னைக் கேட்டு மடிகண்மற் றெமக்கு வல்லே**
**துறவுதந் தருளு கென்னத் தூநக ரிழைத்து மேலால்**
**நறவிரி தாம நாற்றி வானகம் விதானித் தாய்ந்து**
**திறவிதிற் றவிசு தூபந் திருச்சுடர் விளக்கிட் டாரே 2633**

[கேட்டும்-கேட்கின்றோம்; நகரிழைத்து-நகரை அழகு செய்து; விதானித்து - மேற்கட்டுக் கட்டி; திறவிதின்-நன்றாக.]

## வேறு

**பாலினாற் சீறடி கழுவிப் பைந்துகில்**
**நூலினா லியன்றன நுனித்த வெண்மைய**
**காலனைக் கண்புதைத் தாங்கு வெம்முலை**
**மேல்வளாய் வீக்கினார் விதியி னென்பவே 2634**

[வளாய்-சூழ்ந்து; வீக்கினார்-கட்டினார்.]

**தேனுலா மாலையுங் கலனுஞ் சிந்துபு**
**பானிலாக் கதிரன வம்மென் பைந்துகில்**
**தானுலாய்த் தடமுலை முற்றஞ் சூழ்ந்தரோ**
**வேனிலான் வருநெறி வெண்முள் வித்தினார் 2635**

*[கலன்-ஆபரணம்; சிந்துபு-சிந்தி; கதிர்-ஒளி.]*

**முன்னுபு கீழ்த்திசை நோக்கி மொய்ம்மலர்**
**நன்னிறத் தவிசின்மே லிருந்த நங்கைமார்**
**இன்மயி ருகுக்கிய விருந்த தோகைய**
**பன்மயிற் குழாமொத்தார் பாவை மார்களே 2636**

*[முன்னுபு-ஆதனத்தைப் பொருந்தி; உகுக்கிய-உகுத்தற்கு.]*

இதைக்கேட்ட விசயை, 'அடிகளே, தங்கள் அறிவுரைகளை நாங்கள் பின்னர் கேட்டுக் கொள்கிறோம்! இப்போது எங்களுக்குத் துறவு மார்க்கத்தை உடனே காட்டி அருள்க' என்று கேட்கவும், தவமகளிர் உடனே, அவ்விடத்தைத் தூய்மைப்படுத்தி, மேலெல்லாம் மணம் நிறைந்த மலர்மாலைகளைத் தொங்கவிட்டு, மேலே விதானம் அமைத்து, கீழே இருக்கையும், தூபக்கால்களும் ஒளிவிளக்குகளும் ஒழுங்குற அமைத்தனர். பிறகு வேத நூல் முறைப்படி, அவர்கள் பாதங்களைப் பாலால் கழுவி, நூலால் நெய்ததும், தூயதுமாகிய, புதிய வெள்ளை ஆடையால், கொல்லும் காமன் கண்களைக் கட்டுவது போல இன்பூட்டும் மார்பின்மேல் இறுக்கிக் கட்டினர். அப்படி அவர்கள் தேனுண்ண வண்டுகள் மொய்த்துக் கிடக்கும் மலர்மாலைகளையும், பொற்பூண்களையும் கழற்றிவிட்டு, பால் நிலவின் ஒளிக்கதிர்கள் போன்ற அழகிய வெள்ளை உடைகளை அவர்கள் மார்பை மறைக்க அணிவித்ததின்மூலம், காமன் வரும் வழியை, இன்ப வேட்கையை, வெள்ளை முள்ளால் அடைத்து மறைத்தனர். கிழக்குத் திசை நோக்கித் தூயமலர்கள் இட்டுப் பரப்பிய ஆசனத்தின் மேல், தலைமுடி கழித்துக்

 



கொள்ளத் தயாராக இருந்த விசயையும் சுநந்தையும் மற்றுமுள்ள பெண்களும், தங்கள் இன்மயிர் சிந்தத் தயாராக இருந்த தோகை மயில் கூட்டம் போல் இருந் தனர்.

மணியியல் சீப்பிடச் சிவக்கும் வாணுதல்
அணியிருங் கூந்தலை யௌவை மார்கடாம்
பணிவிலர் பறித்தனர் பரமன் சொன்னநூற்
றுணிபொருள் சிந்தியாத் துறத்தன் மேயினார் 2637

[ஔவைமார்கள் - தவமகளிர்கள்; பணிவிலர்-தாழ் வில்லாதவராய்; சிந்தியா-எண்ணி.]

கன்னிய ராயிரர் காய்பொற் கொம்பனார்
பொன்னியற் படலிகை யேந்திப் பொன்மயிர்
நன்னிலம் படாமையே யடக்கி நங்கைமார்
தொன்மயி ருகுத்தநன் மயிலிற் றோன்றினார் 2638

[படலிகை-தட்டு; மயிலின்-மயிலைப்போல்.]

பொற்குடந் திருமணி பொழியப் பெய்தபோல்
எற்புடம் பெண்ணிலாக் குணங்க ளானிறைத்து
உற்றுட னுயிர்க்கருள் பரப்பி யோம்பினார்
முற்றுட னுணர்ந்தவ னமுத முன்னினார் 2639

[எற்புடம்பு - எலும்பாலாகிய உடல்; உற்றுடன்- உடனே.]

புகழ்ந்துரை மகிழ்ச்சியும் பொற்பில் பல்சனம்
இகழ்ந்துரைக் கிரக்கமு மின்றி யங்கநூல்
அகழ்ந்துகொண் டரும்பொருள் பொதிந்த நெஞ்சினார்
திகழ்ந்தெரி விளக்கெனத் திலக மாயினார் 2640

[பொதிந்த - கட்டிவைத்த; பல்சனம் - பலவகை மக்கள்.]

மணிகள் வைத்துப் பதித்த தங்கச் சீப்பினைத் தலையில் சீவுதற்கு வைத்தாலே சிவந்து போகக்கூடிய மென்மையும் அழகும் உடைய நெற்றியோடு பொருந்தி நிற்கும்

அழகிய கருங்கூந்தலை, தாழ்வற்ற உயர்ந்த துறவு நெறி மேற்கொண்டு வாழும் தவமகளிர், அருகன் கூறிய மெய்ப் பொருளை எண்ணியபடிக் கழித்து நீக்கினர். கன்னிப் பெண்கள் ஆயிரம்பேர், உருக்கி ஊற்றிய பொற்கொடி போன்றவர்கள், பொன்னாலான தட்டிலே, நீக்கிய தலை முடியைத் தவப்பள்ளியிலே சிந்தாமல், ஏந்திச் சென்று வெளியே கொட்ட, விசயையும் சுநந்தையும் மற்றுமுள்ள மங்கையரும் தோகை இழந்த தூமயில் போல் தோன்றினர். பொன்னால் ஆக்கிய குடத்திலே அழகிய மணிகளை இட்டு நிறைத்ததைப்போல, எலும்பு தோல் போர்த்த உடம்பினை எண்ணமுடியாத நற்குணங்களால் நிறைத்து வளர்த்து, பிற உயிர்களுக்கு வந்த துன்பத்தைத் தன்னுயிர்க்கு வந்த துன்பமாகக் கருதி அருளும் தவத்தை, எல்லாமறிந்த, எல்லையில்லாப் பரம்பொருளின் அருள் நெறியைப் பின்பற்றும் அம்மங்கையர் மேற்கொண்டனர். புகழுரை கூறுவதால் உண்டாகிற மகிழ்ச்சியையும், அறிவற்ற சாமானியர் கூறுகிற இகழுரையால் வருகின்ற வருத்தத்தையும் மனதில் கொள்ளாது, அருகநூல் ஆகமத்தில் கூறிய, மெய்ப்பொருளை உணர்ந்து கொண்ட நெஞ்சம் உடையவர்களாய், கலக்கமின்றி ஒளிவீசித்திகழும் சுடர் விளக்குப்போல அம்மங்கையர் விளங்கினர்.

### வேறு

**அலைமணிக் கவரி மான்றே ரடுகளி யானை பாய்மா**
**நிலநெளி கடலந் தானை நிரந்துபூச் சுமப்ப மன்னன்**
**சிலமலர் தானு மேந்திச் சென்றுநீர் பெருக வாழ்த்தி**
**இலமலர்ப் பஞ்சிப் பாதத் தெழின்முடி தீட்டி னானே. 2641**

[நிரந்து-பரந்து; இலமலர்-இலவம்பூ; தீட்டினான்-சேர்வித்தான்.]

**கடியவை முன்பு செய்தேன் கண்ணினாற் காணச் சின்னாள்**
**அடிகளிந் நகரி னுள்ளே யுறைகென வண்ணல் கூற**
**முடிகெழு மன்னற் கொன்று மறுமொழி கொடாது தேவி**
**படிமம் போன் றிருப்ப நோக்கிப் பம்மைதான் சொல்லி**
**னாளே 2642**

[கடியவை-தீவினை; காண-காணும்படி; ஒன்றும்-சிறிதும்.]

காதல னல்லை நீயுங் காவல நினக்கி யாமும்
ஏதில மென்று கண்டா யிருந்தது நங்கை யென்னத்
தாதலர் தாம மார்ப னுரிமையுந் தானு மாதோ
போதவிழ் கண்ணி யீர்த்துப் புனல்வரப் புலம்பி னானே

[ஏதிலம்-அயலாராக உள்ளேம்; உரிமை-மனைவியர்.]

ஏதில னாயி னாலு மிறைவர்தம் மறத்தை நோக்கக்
காதல னடிக ளென்னக் கண்கனிந் துருகிக் காசின்
மாதவ மகளி ரெல்லா மாபெருந் தேவி யாரை
ஏதமொன் றில்லை நம்பிக் கின்னுரை கொடுமி னென்றார்

[ஏதம்-குற்றம்; ஏதிலார்-அயலார்; காசில்-குற்றமற்ற.]

அசைந்தாடும் மணிச் சாமரையும், குதிரைகள் பூட்டிய தேரும், கொல்லும் மதயானையும், பாய்ந் தோடும் குதிரையும், பூமி பிளக்கும்படி நடந்து செல்கின்ற காலாட்படையும், மலர் சுமந்து வர, சீவகனும் கை நிறைய மலர்களை எடுத்துச் சென்று வாழ்த்தி, இலவ மலர்போலும் பாதத்திலே தன் மணிமுடி பதியவைத்து வணங்கினான். 'முன்பு செய்த தீவினையின் பயனாகத் தங்களைக் காணாது தவித்திருக்கலானேன், என்றாலும் மீண்டும் நான் மகிழ வந்த அடிகளே! அன்னையே! இந் நகரில் சிலநாள் தங்கி இருக்கவேண்டும்' என்று சீவகன்கூற, முடிமன்னன் சீவகனுக்கு மறுமொழி கூறாது பாவைபோல் விசயை இருக்க, பம்மை சொல்லுவாள்: 'மன்னவனே, நீ எம்மால் விரும்பப் படுபவன் அல்லன்; நாங்களும் உனக்கு வேண்டிய சுற்றத்தார்கள் அல்லேம், எனவேதான் விசயை மறுமொழி கூறாது இருந்தாள்' என்றிட, தேன் வழியும் மலர்மாலை அணிந்த சீவகனும் அவன் மனைவியும் மலர் மாலை சிதறப் புலம்பி அழுதனர். பிறகு சீவகன் அவர் களை நோக்கிச் சொல்லுவான்: 'நான் தங்களுக்கு அயல வனே ஆனாலும், அருகப் பெருமான் கூறிய மறைமொழி

களை மனதில் கொண்டு பார்த்தால், அருகன் அடிபரவும் எல்லார்க்கும் எல்லாரும் உறவுடையவர்களே ஆவார்கள். ஆகையினால் அடிகளே நானும் உங்கள் அன்புக்கு உரியவனே' என்று கூற, குற்றமற்ற தவமகளிர் எல்லாம் அவன் பால் இரக்கம் மிகக்கொண்டு, விசயையை நோக்கி சீவகன் விருப்பத்தை நிறைவேற்றுவதில் தவறொன்றும் இல்லை, எனவே அவனுக்கு இன்னுரை கூறுக என்றனர்.

திரைவள ரிப்பி யீன்ற திருமணி யார மார்பின்
வரைவளர் சாந்த மார்ந்த வைரக்குன் றனைய திண்டோள்
விரைவளர் கோதை வேலோய் வேண்டிய வேண்டி
னேமென்
றுரை விளைத் துரைப்பக் காளை யுள்ளகங் குளிர்ந்து
சொன்னான் 2645

*[இப்பி-சிப்பி; விரை-வாசனை.]*

அடிகளோ துறக்க வொன்று முற்றவர் யாது மல்லர்
சுடுதுய ரென்கட் செய்தாய் சுநந்தைநீ யெளவை யல்லை
கொடியைநீ கொடிய செய்தாய் கொடியையோ கொடியை
யென்னா
இடருற்றோர் சிங்கந் தாய்மு னிருந்தழு கின்ற
தொத்தான் 2646

*[ஔவை-தாய்; துறக்க-துறவுபூண.]*

சென்றதோ செல்க விப்பாற் றிருமக ளனைய நங்கை
இன்றிவள் துறப்ப யானின் னரசுவந் திருப்பே னாயின்
என்றெனக் கொழியு மம்மா பழியென விலங்கு செம்பொற்
குன்றனான் குளிர்ப்பக் கூறி கோயில்புக் கருளு
கென்றாள் 2647

*[கோயில்-அரண்மனை; குளிர்ப்ப-மனங்குளிர.]*

'அலைகடலுக்கடியில் கிடந்த சிப்பியில் வளர்ந்த அழகிய மணிகளோடு கலந்த முத்துமாலை புரளும் மார்பையும் மலையில் வளர்ந்த சந்தனக் குழம்பு

தோய்ந்த வைரக்குன்று போலத் திரண்ட தோளையும் மணம் வீசும் மாலையணிந்த வேலையும் உடையவனே! நீ விரும்பியதை நாமும் விரும்பி ஏற்றுக்கொண்டோம்' என்று தவமகளிர் கூற, சீவகன் மனம் மகிழ்ந்து சொல்லு வான்: 'அடிகளாகிய விசயை துறவை ஏற்கட்டும்! ஏன் எனில் அவர் எனக்காக ஏதும் துன்பப்பட்டவர் அல்லர்! ஆனால் என்னை வருந்தி வளர்த்த தாயாகிய சுநந்தையே! நீயே எனக்கு மிக்க துன்பத்தைச் செய் தாய்! இதுவரை எனக்கு ஒரு துன்பமும் செய்யாத நீ, துறவை மேற்கொண்டதன் மூலம் மிகக்கொடிய துன்பத் தைச் செய்துவிட்டாய். கொடியவளே! நீ மிகக்கொடிய வளே!' என்று, துன்புற்ற இளஞ்சிங்கம் ஒன்று தன் தாய் முன் நின்றழுவதுபோல் சீவகன் வருந்தி நின்றான். அப்படி நின்ற சீவகனை நோக்கிச்சுநந்தை, 'சென்றது போக; இனி நான் திருமகள் போன்ற விசயை துறவறம் ஏற்பதைக் கண்ட பின்னும் அவளைப் பின்பற்றாது, உன் அரசவாழ் வைக் கண்டு மகிழ்ந்து உன்னுடனேயே இருந்திருப்பேன் என்றால், எனக்கு அதனால் வரும் பழி எப்போது நீங்கும்' என்று, பொன்குன்று போன்ற சீவகன் உள்ளம் மகிழக் கூறி, அவனை அரண்மனை அடைந்து நல்லறம் காத் தருள்க என்றும் பணித்தாள்.

**பந்தட்ட விரலி னார்தம் படாமுலை கிழித்த பைந்தார்**
**நந்தட்டன் றன்னை நோக்கி நங்கையா ரடிகள் சொன்னார்**
**நொந்திட்டு முனிய வேண்டா துறந்தில நும்மை யென்னக்**
**கந்தட்ட திணிதிண் டோளான் கற்பக மலர்ந்த**
**தொத்தான் 2648**

[பந்து அட்ட - பந்தை வருத்தின; நொந்திட்டு- நொந்து.]

**துறந்தவிந் நங்கை மார்தந் தூமல ரனைய பாதம்**
**உறைந்தவென் சென்னிப் போதின் மிசையவென்**
**றொப்ப வேத்திக்**

**கறந்தபா லனைய கந்திக் கொம்படுத் துருவப் பைம்பூண்**
**பிறங்குதார் மார்பன் போந்து பெருமணக் கோயில்**
**புக்கான் 2649**

[கந்தி-தவமகள்; மிசை-மேல்; போது-மலர்.]

**வடிநிரை நெடிய கண்ணார் மாமிமார் விடுப்ப வேகிக்**
**கடிநிரை சிவிகை யேறிக் கதிர்மணிக் குடையின் செல்ல**
**உடை திரைப் பரவை யன்ன வொளிறுவேன் மறவர் காப்பக்**
**கொடிநிரைக் கோயில் புக்கார் குங்குமக்**
**கொடிய னாரே 2650**

[வடிநிரை-வடுவகிரின் வரிசையைப்போன்ற; உடை-உடைகின்ற; திரை-அலை.]

**வேறு**

**முழுதுல கெழிலேத்து மூரிவேற் றானை மன்னன்**
**தொழுதகு பெருமாட்டி தூமணிப் பாவை யன்னாள்**
**பொழிதரு மழைமொக்குட் போகம்விட் டாசை நீக்கி**
**வழிவரு தவமெய்தி வைகினள் தெய்வ மன்னாள் 2651**

[மன்னன்-சச்சந்தன்; பெருமாட்டி-விசயை; மூரி-பெருமை.]

சுநந்தை அவ்வாறு கூறவும், பந்தாடி வருந்திய மென் விரல்களை உடைய, மங்கையர் மார்பு வருந்த முயங்கிய நந்தட்டனை நோக்கி விசயை சொல்லுவாள். 'செல்வங்களே, நீங்கள் வருந்திக் கலங்கவேண்டாம்! உங்களை நாங்கள் பிரியவில்லை' என்று கூறியவுடன், கற்றூணைப் பிளக்கும் வலிய திண்தோளுடைய நந்தட்டன், கற்பகம் மலர்ந்ததைப் போல் மகிழ்ச்சி அடைந்தான். துறவறத்தை மேற்கொண்ட பெண்களின் தூய மலர்போலும் திருவடிகள், தன் தலையிலுள்ள மலர்களோடு பொருந்தட்டும் என்னும்படி, அவர் பாதம் பணிந்து வணங்கி, கறந்த பால்போலும் தூய கந்தி அடிகளோடு பொருந்தி அவர்கள் இருக்க விட்டுவிட்டு அழகிய பொற்பூணும் பூமாலையும் அணிந்த மார்புடைய சீவகன் அவர்களை

விட்டுப் பிரிந்து அரண்மனையை வந்தடைந்தான். சீவகனோடு மாவடுப் போன்ற நீண்ட கண்களும், குங்குமக் கொடி போன்ற கோல உடலும் உடைய காந்தருவதத்தையும் மற்ற அவன் மனைவியரும் தங்கள் மாமிமார்களைப் பிரிந்து, வரைந்து செல்லும் (முறைப்படி செல்லும்) அழகிய பல்லக்கிலே ஏறி அமர்ந்து, ஒளிவீசும் அழகிய மணிக்குடைகள் பின்தொடர, அலைகடல்போல் பெருகிய மறவர்கள் வாளேந்திக் காத்துவர, கொடிகள் நிறைந்து ஆடும் அரண்மனையை வந்தடைந்தனர். இவ்வாறாக உலகம் எல்லாம் போற்றிப் புகழும் அழகுடைய, வெற்றிவேல் படைவீரன் சச்சந்த மன்னனின் வாழ்வரசியான தெய்வத்தாய் போன்றவளாகிய விசயை, மழைநீரில் தோன்றும் நீர்க்குமிழி போன்ற இவ்வுகல இன்பங்களையும், ஆசைகளையும் விட்டொழித்து, வேதாகமத்தில் கூறிய இனிய தவநெறியை மேற்கொண்டாள்.

## 2. நீர் விளையாட்டணி

**உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்**
**படர்கதிர்த் திங்க ளாகப் பரந்துவான் பூத்த தென்னா**
**அடர்பிணி யவிழு மாம்ப லலைகடற் கானற் சேர்ப்பன்**
**குடைகெழு வேந்தற் கிப்பா லுற்றது கூற லுற்றேன் 2652**

[அடர்பிணி அவிழும்-இதழ் பிணித்த கட்டு அவிழும்; ஓசனித்தல்-சிறகடித்தல்.]

**துறவின்பாற் படர்த லஞ்சித் தொத்தொளி முத்துத் தாமம்**
**உறைகின்ற வுருவக் கோலச் சிகழிகை மகளி ரின்பத்து**
**இறைவனை மகிழ்ச்சி செய்து மயக்குவா னமைச்ச ரெண்ணி**
**நிறையநீர் வாவி சாந்தங் கலந்துடன் பூரித் தாரே 2653**

[படர்தல் - செல்லுதல்; சிகழிகை - மயிர் முடியையுடைய; பூரித்தார்-நிறைத்தார்.]

நீரணி மாட வாவி நேர்ம்புணை நிறைத்து நீணீர்ப்
போரணி மாலை சாந்தம் புனைமணிச் சிவிறி சுண்ணம்
வாரணி முலையி னார்க்கு மன்னற்கும் வகுத்த வாவி
ஏரணி கொண்ட விந்நீ ரிறைவகண் டருளு கென்றார்

[நேர்ம்புணை-மெல்லிய தெப்பத்தை; சிவிறி-நீர்வீசு கருவி; வகுத்து-செய்து.]

கணகமலை யரசன் மங்கை கட்டியங் கார னாகப்
பணைமுலை மகளி ரெல்லாம் பவித்திரன் படைய தாக
இணைமலர் மாலை சுண்ண மெரிமணிச் சிவிறி யேந்திப்
புணைபுறந் தழுவித் தூநீர்ப் போர்த்தொழி றொடங்கி னாரே 2655

[கணம்-கூட்டம்; புணை-தெப்பம்.]

உடைந்து விழுகின்ற அலைகள் சிந்தத் தெறித்து விழுகின்ற முத்துக்களைக் கண்டு, பயந்து பறக்கின்ற அன்னப்பறவைகள் ஒளிவீசும் நிலவாகவும், அலைபுரளும் கடல் நீலவானமாகவும், தெறித்து விழுகின்ற முத்துக்கள் நட்சத்திரங்களாகவும் காட்சி தர, இவற்றையெல்லாம் கண்டு மயங்கி இரவு வந்துவிட்டது என்று அல்லிமலர்கள் இதழ் விரித்து மலரும் கடற்கரைச் சோலைக்குத் தலைவ னாகிய வெண்கொற்றக்குடையுடைய சீவக மன்னனுக்கு நேர்ந்ததை இனிக் கூறுவோம்!

சீவகன் சிந்தையும் துறவறத்தில் ஈடுபாடு கொண்டு விடுமோ என்று பயந்து, ஒளிநிறைந்த அழகிய முத்துச்சரங்களும், ஒப்பனை செய்த முடிக்கூந்தலும் உடைய பெண்களின் இன்பத்தில், சீவகனைத் திளைத் திருக்கச் செய்யக் கருதிய அமைச்சர்கள், தூயநன் நீரையும் சந்தனத்தையும் கலந்து குளத்தை நிறைத்து வைத்தனர். மாடங்களுடைய நீராடும் அத்தெப்பத்துறை முழுதும், தெப்பங்களால் நிறைத்து, பெரிய நீர்விளையாட் டாகிய காதல் போருக்கு ஏற்ற அழகிய மலர்மாலையும், வாசச் சந்தனமும், பொற்சுண்ணமும், பீச்சுக் குழாய்

 


களும், மன்னர்க்கும் மகளிர்க்கும் என்று தனித்தனியே அமைத்து வைத்து, 'வேந்த! அழகிய இத்தெப்பத் திருவிழாவை வந்து கண்டருள்க' என்று மன்னனை மந்திரிகள் வேண்டி நின்றனர். அவ்வளவில் பெருமலைத் தொடர்களுக்கு உரிய மலையரசன் மகளாகிய காந்தரு வதத்தை கட்டியங்காரனாகவும், மற்ற மங்கையர் எல்லாம் சீவகன் படைகளாகவும் பிரிந்து நின்று, மலர் மாலைகளையும், சுண்ணப்பொடிகளையும் மணியால் செய்த பீச்சுக் குழாய்களையும் ஏந்தி, தெப்பத்தின் உள்ளும் புறமுமாக நின்று நீர் விளையாட்டைத் தொடங்கினர்.

தூமலர் மாலை வாளாச் சுரும்பெழப் புடைத்துந் தேன்சோர்
தாமரைச் சதங்கை மாலை சக்கர மென்ன வீழ்த்தும்
காமரு கணைய மாகக் கண்ணிக ளொழுக விட்டும்
தோமர மாகத் தொங்கல் சிதறுபு மயங்கி னாரே 2656

[தோமரம்-தண்டு; கணையம்-தண்டாயுதம்.]

அரக்குநீர்ச் சிவிறி யேந்தி யாயிரந் தாரை செல்லப்
பரப்பினாள் பாவை தத்தை பைந்தொடி மகளி ரெல்லாம்
தரிக்கில ராகித் தாழ்ந்து தடமுகிற் குளிக்கு மின்போற்
செருக்கிய நெடுங்கண் சேப்பச் சீதநீர் மூழ்கினாரே 2657

[குளிக்கும்-மறையும்; செருக்கிய-மகிழ்ந்த.]

தானக மாட மேறித் தையலார் ததும்பப் பாய்வார்
வானகத் திழியுந் தோகை மடமயிற் குழாங்க ளொத்தார்
தேனின மிரியத் தெண்ணீர் குளித்தெழுந் திருவி னன்னார்
பான்மிசைச் சொரியுந் திங்கள் பனிக்கடன் முளைத்த
தொத்தார் 2658

[தானகமாடம்-விரிந்த இடத்தையுடைய நீர் மாடம்;
இரிய-ஓட.]

அழகிய மலர்மாலை வாளாக, மொய்த்துக் கிடக்கும் வண்டுகள் பறந்து ஓட எடுத்து வீசியும், தேன் வழியும்

  

தாமரை மலர்போன்ற கைகளால் சதங்கை மாலையைச் சக்கரம் போல் எடுத்து எறிந்தும், இன்பூட்டும் முடிக் கண்ணிகளைத் தண்டாயுதமாகத் தண்ணீரில் மிதக்க விட்டும், பெரிய திண்டுமாலைகளைத் தண்டாக வீசியும் தம்முள் போரிட்டனர். இங்குலிகம் கலந்த சிவப்பு நீரைப் பீச்சுக் குழாய்களிலே நிறைத்து ஆயிரம் தாரை களாகச் சொரியும்படி காந்தருவதத்தை வீச, பசும் பொன் வளையணிந்த மற்ற மகளிர் எல்லாம் அந்நீர்த் தாரைகளைப் பொறுக்க மாட்டாமல் தாழ்ந்து, அடர்ந்த மேகங்களுக்கிடையே மறையும் மின்னல் கொடிகளைப் போல, மகிழ்ச்சியால் விரிந்து நீண்ட கண்கள் சிவக்கக் குளிர்ந்த குளத்து நீரிலே மூழ்கினர். இவ்வாறு நீரிலே மூழ்கி அங்கேயே நெடுநேரம் இருக்கமாட்டாதவராய், வெளிவந்து மாடங்கள் மீதேறி மீண்டும் நீருக்குள் குதிக்கின்ற மங்கையர்கள், மேலிருந்து பறந்து வருகின்ற தோகை மயில்கள்போல் தோன்றினர். மாலையில் மொய்க்கும் வண்டுகள் பறந்தோடத் தண்ணீரில் மூழ்கி எழும் அழகு மங்கையர்கள், வானிலிருந்து பால்போல் பட்டொளி வீசும் வெண்ணிலவு குளத்து நீரில் குளித்து எழுந்து வருவதுபோல் காட்சி தந்தனர்.

**கண்ணிகொண் டெறிய அஞ்சிக் கால்தளர்ந் தசைந்து சோர்வார்**
**சுண்ணமுஞ் சாந்தும் வீழத் தொழுதன ரிரந்து நிற்பார்**
**ஒண்மலர் மாலை யோச்ச வொசிந்துகண் பிறழ வொல்கி**
**வெண்ணெயிற் குழைந்து நிற்பார் வேற்கணா ராயி னாரே**

*[ஓச்ச-ஓச்சுதலால்; ஒசிந்து-ஒடிந்து; ஒல்கி-ஒதுங்கி.]*

**கூந்தலை யொருகை யேந்திக் குங்குமத் தாரை பாயப்**
**பூந்துகி லொருகை யேந்திப் புகுமிடங் காண்டல் செல்லார்**
**வேந்தனைச் சரணென் றெய்த விம்முறு துயர நோக்கிக்**
**காய்ந்து பொற் சிவிறி யேந்திக் கார்மழை பொழிவ தொத்தான்** 2660

*[சரண்-அடைக்கலம்; கார்-மேகம்.]*

 


வீக்கினான் தாரை வெய்தாச் சந்தனத் தளிர்நன் மாலை
ஓக்கினார் கண்ணி சுண்ண முடற்றினா ருருவச் சாந்திற்
பூக்கமழ் துகிலுந் தோடு மாலையுஞ் சொரியப்
போர்தோற்று
ஆக்கிய வநங்கன் சேனை ஆறல் ஆறாயிற் றன்றே 2661

[வெய்தா - வேகமாக; தோடு - காதணி; அநங்கன் சேனை-மன்மதன் படையாகிய மகளிர்; ஆறுஅல் ஆறு-வழியல்லாத வழி.]

தலையில் சூடிய மாலைகளை எடுத்து வீசியதால், அதைக் கண்டு நடுங்கிக் கால் தளர்ந்து சோர்வார் சிலர். சுண்ணப்பொடிகளையும், சந்தனக் குழம்புகளையும் இழந்து கைதொழுது நிற்பர் சில பெண்கள்! அழகிய மலர் மாலையைச் சிலர் எடுத்து வீச, கண் முரிந்து பிதுங்கி விழும் படி, வெண்ணெய்போல் குழைந்து உருகி, வேல்போலும் கண்ணுடைய சில பெண்கள் நின்றுகொண்டிருப்பர். கலைந்து குலைந்த கூந்தலை ஒரு கையிலே பிடித்துக் கொண்டும், தத்தை வீசும் நீர்த்தாரைகள் பாய அவிழ்ந்து சோர்ந்த, மெல்லுடையை ஒரு கையால் ஏந்தியபடியும், போய் மறைய ஓர் இடமும் காணாமல், வேந்தனைத் தஞ்சம் என்று பெண்கள் சென்றடைய, அவர்கள் படும் துன்பத்தைக் கண்டு கொதித்தெழுந்த சீவகன், தன் னுடைய பொன் சிவிறியைக் கொண்டு அடைமழை பொழி வதைப்போல் நீரைப் பீச்சி அடித்தான். சீவகன் இவ்வாறு நீரைப் பீச்சி அடிக்கக் காந்தருவதத்தையின் பக்கமிருந்த வர்கள், சந்தனத் தளிரால் ஆன மாலையை எடுத் தெறிந்து வீசினர். முடிக்கண்ணிகளையும் சுண்ணப்பொடி களையும் அவன் வருந்த எடுத்து வீசினர். இவ்வாறாகப் பூமணமும் ஆடையும், தோடும், வண்ணப்பொடிகளும் சிதற, காந்தருவதத்தையின் படை இன்பப்போராகிய அந்நீர் விளையாட்டிலே தோற்று, வழியல்லா வழிகளில் எல்லாம் சென்றது.

  

அன்னங்க ளாகி யம்பூந் தாமரை யல்லி மேய்வார்
பொன்மயி லாகிக் கூந்தல் போர்த்தனர் குனிந்து நிற்பார்
இன்மலர்க் கமல மாகிப் பூமுகம் பொருந்த வைப்பார்
மின்னுமே கலையுந் தோடுங் கொடுத்தடி தொழுது நிற்பார்

[அம்பூ-அழகிய பூ; கமலம்-தாமரை.]

பண்ணுரை மகளிர் மாலை பைந்துகில் கவர்ந்து கொள்ளக்
கண்ணுரை மகளிர் சோர்ந்து காரிருட் டிவளு மின்போற்
பெண்ணுரைப் பிடிக்கைக் கூந்தற் பொன்னரி மாலை தாழ
வெண்ணுரை யுடுத்து நின்றார் வேந்தனோக் குண்ண
நின்றார் 2663

[திவளும்-விளங்கும்; நோக்கு-அழகு.]

தன்படை யுடையத் தத்தை சந்தனத் தாரை வீக்கி
ஒன்பது முகத்தி னோடி யுறுவலி யகலம் பாயப்
பொன்படு சுணங்கு போர்த்த பொங்கிள முலையிற் றூவான்
முன்படு குலிகத் தாரை முழுவலி முறுக்க லுற்றான் 2664

[உடைய-தோற்றுப் போக; சுணங்கு-தேமல்; முறுக்க-தாக்க.]

அப்படித் தோற்ற படையில் உள்ள பெண்கள் அன்னப் பறவைகளைப்போல் அழகிய தாமரை மலரையும் அல்லி மலரையும் மேய்ந்தபடி இருப்பர். சிலர் பொன்னாலான மயில்போல் தங்கள் உடலைக் கூந்தலால் மறைத்துக் கொண்டு பணிந்து நிற்பர். இன்னும் சிலர் அழகிய தாமரை மலரோடு மலராகத் தங்கள் முகத்தைப் பூவோடு பொருத்தியபடி நிற்பர். இன்னும் பலர் ஒளிவீசும் தோடும் மேகலையும் தந்து அடிபணிந்து நிற்பர். இன்னிசை போலும் இனிய மொழி பேசும் அரசன் பக்கமிருந்த பெண்கள், தத்தையின் பக்கமிருந்த பெண்களின் மாலை களையும், துகில்களையும் கவர்ந்து கொள்ள, கண்ணாலே மன்னர்க்கு வருத்தத்தை உண்டாக்கும் காந்தருவதத்தை யின் படையினர், காரிருட்டில் நெளியும் மின்னல் கொடி போலத் துன்பத்தால் துடித்து, பெண்களுக்குப் பெருமை

தரத்தக்கது என்று சொல்லப்படும், பெண் யானையின் துதிக்கை போன்ற கூந்தலிலே அணிந்த பொன்மாலை தாழ்ந்து குலைய, நீரிலே மிதக்கும் வெண்நுரையை ஆடையாகக் கொண்டு, வேந்தன் பார்வையில்பட நின்றனர். தன் படை தோற்றுப் போகக் கண்ட காந்தருவதத்தை, சந்தனம் கரைத்த நீரைப்பாய்ச்ச அது ஒன்பது தாரையாக ஓடி வலிமை மிக்க சீவகனின் வலிமை மிக்க மார்பிலே தைக்க, சீவகன் பொன் காசுகள் போன்ற தேமல் படர்ந்து வளர்ந்த அவள் மார்பின் மேல் தூவாமல், தத்தையின் வலியை அடக்கும் சிவந்த இங்குலிக நீரை அவள்மேல் பீச்சத் தொடங்கினான்.

**மெய்ப்படு தாரை வீழி னோமிவட் கென்ன அஞ்சிக்**
**கைப்படை மன்ன னிற்பக் கதுப்பயன் மாலை வாங்கிச்**
**செப்பட முன்கை யாப்பத் திருமகன் றொலைந்து நின்றான்**
**பைப்புடை யல்கு லாளைப் பாழியாற் படுக்க லுற்றே 2665**

*[நோம்-துன்பமுண்டாகும்; கதுப்பு-கூந்தல்; செப்பட-செவ்விதாக; யாப்ப-கட்ட; பைப்புடை-பாம்புப் படத்தின் பக்கத்தைப் போன்ற; பாழி-வன்மை.]*

**அடுத்தசாந் தலங்கல் சுண்ண மரும்புனல் கவர வஞ்சி**
**உடுத்தபட் டொளிப்ப வொண்பொன் மேகலை யொன்றும் பேசா**
**கிடப்பமற் றரச னோக்கிக் கெட்டதுன் றுகின்மற் றென்ன**
**மடத்தகை நாணிப் புல்லி மின்னுச்சேர் பருதி யொத்தான்**

*[அலங்கல்-மாலை; புல்லி-தழுவி.]*

**விம்மகிற் புகையின் மேவி யுடம்பினை வேது செய்து**
**கொம்மென நாவி நாறுங் கூந்தலை யுலர்த்தி நொய்ய**
**அம்மல ருரோமப் பூம்பட் டுடுத்தபி னனிச்ச மாலை**
**செம்மலர்த் திருவி னன்னார் சிகழிகைச் சேர்த்தி னாரே**

*[விம்முதல் - கக்குதல்; நாவி-கத்தூரி; நொய்ய-மெல்லிய.]*

அப்படிப் பீச்சத் தொடங்கிய சீவகன், நீர்த்தாரை இவள்மேல் அதிகம் பட்டால் அதனால் இவள் உடல் வருந்தும் என்று கருதியவனாய்க் கைசோர்ந்து இருக்க, காந்தருவதத்தை இதுதான் சமயம் என்று அவன் முன்கைகளைத் தன் கூந்தலில் உள்ள மாலையால் கட்ட, பாம்பின் படம் போன்ற அல்குலுடைய காந்தருவதத்தையைத் தன் வலிமையால் வெல்ல முயன்ற சீவகன், அவள் முன் தோல்வியுற்று நின்றான். உடலில் பூசிய சந்தனமும் வாசப்பொடியும், சூடிய மாலையும் சிவிறி வீசிய நீரால் கலைந்து குலைய, அணிந்திருந்த பட்டாடை துவண்டு அவிழ, பொன் மேகலை ஒலியெழுப்பாது ஒய்ந்து கிடக்க, இவற்றை எல்லாம் கண்ட மன்னன் அவளிடம், உன் ஆடை போயிற்றென்று கூறினான். அவள் நாணம் மிகக் கொண்டு அவனை வந்து தழுவிக்கொள்ள, சீவகனும் மின்னல் கொடியோடு பொருந்திய சிவந்த சூரியனைப் போலிருந்தான். மிகுந்த அகில் புகையைக் கொண்டு, நீர்விளையாட்டால் குளிர்ந்த உடலுக்கு வெப்பம் ஊட்டி, வாசமணங்கமழ்ந்து வீசும் கூந்தலை உலர்த்தி, அழகிய பூவேலைப்பாடுடைய பட்டுத்துணியை உடுத்தியபின், அனிச்சமலர் மாலையை, தாமரைத் தண்மலரில் வாழும் திருமகளைப் போன்ற பெண்கள் அவள் கூந்தலில் அணிவித்தனர்.

## 3. இருதுநுகர்வு

### வேறு

**கார்கொள் குன்றன கண்கவர் தோளினான்**
**நீர்கொ ணீரணி நின்றுக னற்றலின்**
**வார்கொண் மென்முலை வம்பணி கோதையார்**
**ஏர்கொள் சாயலுண் டாடுமற் றென்பவே** 2668

[நீரணி-மகளிரது நீர்மை கொண்ட நீர் விளையாட்டு; வம்பு-கச்சு; சாயல்-மென்மை; உண்டாடும்-நுகர்வான்.]

(முதுவேனில்)

வேனில் வாய்க்கதிர் வெம்பலின் மேனிலைத்
தேனு லாங்குளிர்ச் சந்தனச் சேற்றிடைத்
தானு லாய்த்தட மென்முலைத் தங்கினான்
பானி லாக்கதிர் பாய்தரு பள்ளியே 2669

*[வேனில்வாய்-முதுவேனில் பருவத்தில்; கதிர் வெம்பலின்-வெயில் கொதித்தலால்; உலாய்-பொருந்தி.]*

முழுது மெய்ந்நல மூழ்கலி னீர்சுமந்
தெழுது கண்ணிரங் கப்புரு வக்கொடி
தொழுவ போன்முரி யச்சொரி பூஞ்சிகை
அழுவ போன்றணி நித்தில முக்கவே 2670

*[நலம்-மகளிரின்பம்; எழுதுகண்-மையெழுதிய கண்; முரிய-வளைய; நித்திலம்-முத்து; உக்க-சிந்தின.]*

எழுத்தின் பாடலு மாடலு மென்றிவை
பழுத்த கற்பகப் பன்மணிக் கொம்பனார்
அழுத்தி யன்னவ ணிவளைத் தோண்மிசைக்
கழிக்கு மைங்கணைக் காமற்குங் காமனே 2671

*[பழுத்த-முற்றிய; கொம்பனார்-மகளிர்.]*

கார்முகில் தழுவக் கிடக்கும், குன்றைப் போன்ற, கண்டவர் மயங்கும் தோளுடைய சீவகன், நீர்விளையாட்டில் ஈடுபட்ட மங்கையரின் அழகு உள்ளத்தில் நின்று வருத்த, வார்க்கச்சினால் இறுக்கக் கட்டிய வாசச் சாந்தணிந்த பூமார்புடைய மங்கையரின் அழகு நலத்தை உண்டு அவரோடு கூடி விளையாடலானான்.

முதுவேனில் பருவத்தில் மிகுந்திருக்கும் சூரிய வெப்பத்துக்கு ஆற்றாது, மேலே நிறைந்த, வண்டுகள் மொய்க்கும், வாசச்சந்தனக் குழம்பிலே உலவி, பால் நிலவின் ஒளிபோன்று பட்டொளி வீசும் பஞ்சணைப் பள்ளியிலே, சீவகன் மங்கையர் மார்புதரும் இன்பத்தை

  

நுகர்ந்திருந்தான். இப்படி அவன் அவர்களின் உடலின்பமாகிய பொய்கையிலே மூழ்க, அவர்களின் மைதீட்டிய கண்கள் நீர்சுமந்து வருந்தி நிற்க, புருவமாகிய கொடி வணங்குவதுபோல் வளைய, மலர்க்கூந்தல் வருந்தி அழுவதுபோல், அணிந்திருந்த முத்துக்கள் சிந்திச் சிதறின. எழுத்தில் வடித்த பாட்டையும் கூத்தையும் கேட்டும் பார்த்தும் மகிழ்ந்திருக்கும் பழுத்த கற்பகத் தருவின் பன்மணிக் கொடிபோன்ற மகளிரின், அழகிய வளையல்களை அழுத்தி வைத்ததுபோல், அணிந்த தோள்களிலே, ஐந்து மலரம்புகளையும் உடைய காமனையும் வருத்தும் காமனைப் போன்ற சீவகன், முதுவேனில் பருவத்தைக் கழிக்கலானான்.

(கார்)

நீர்து ளும்பு வயிற்றின் னிழன்முகில்
பார்து ளும்ப முழங்கலிற் பல்கலை
ஏர்து ளும்ப வெரீஇயிறை வற்றழீஇக்
கார்து ளும்பு கொம்பிற்கவி னெய்தினார் 2672

[முகில்-மேகம்; பார்-பூமி; கலை-மேகலைகள்; வெரீஇ-அஞ்சி.]

இழிந்து கீழ்நிலை யின்னகிற் சேக்கைமேற்
கிழிந்து சாந்தழி யக்கிளர் மென்முலை
தொழிந்து மட்டொழு கத்துதை தார்பொர
அழிந்த மேகலை யஞ்சிலம் பார்த்தவே 2673

[இழிந்து-இறங்கி; மட்டு-தேன்; பொர-போரிட.]

தேனி றாலன தீஞ்சுவை யின்னடை
ஆன றாமுலைப் பாலமு தல்லதொன்
றானு மேவல ரச்சுற வெய்திய
மான றாமட நோக்கிய ரென்பவே 2674

[தேனிறால்-தேனடை; அறா-நீங்காத; அச்சுறவு-அஞ்சுதல்.]

நீர் நிறைந்து வழியும் அழகிய கருமுகில், நிலம் நடுங்க இடியிடித்து முழங்க, பல வண்ண மணிகளுடைய மேகலையின் அழகு ஒளிசிந்த, அசைந்து நடுங்கிய மங்கையர் அரசனைத் தழுவிக் கொண்டு கார் மழை கண்டசையும் பூங்கொம்புபோலப் பூரிப்படைந்தனர். பின்னர் மழைக் காலம் வரவே, கீழிறங்கி இனிய அகில்புகை மணக்கும் பள்ளியின்மேல், மார்பில் பூசிய சந்தனம் அழியவும், மலர்மாலைகள் சிதறித் தேன் நிறைந்து ஒழுகவும், மார்புறச் சீவகன் அவர்களைச் சேர்ந்து தழுவ, மேகலையும் சிலம்பும் கூடி ஒலிசெய்தன. இனிய தேனடை போன்ற சுவை உடைய பண்ணியத்தையும், வற்றாது பால்சுரக்கும் பசுவின் பாலால் ஆக்கிய உணவையும் அல்லாது, அச்சந்தரும் மானின்மருண்ட பார்வை உடைய மங்கையர்கள், வேறெதையும் விரும்பாதவராய்ச் சீவகனோடு இன்ப விளையாட்டில் இணைந்தனர்.

(கூதிர்)

## வேறு

**கூதிர்வந் துலாவலிற் குவவு மென்முலை**
**வேதுசெய் சாந்தமும் வெய்ய தேறலும்**
**போதவிழ் மாலையும் புகையுஞ் சுண்ணமும்**
**காதலித் தார்கருங் குவளைக் கண்ணினார் 2675**

[வேது-வெம்மை; வெய்யதேறல்-வெம்மையையுடைய் கள்ளின் தெளிவு.]

**சுரும்புநின் றறாமலர்த் தொங்க லார்கவின்**
**அரும்புகின் றார்கட லமிர்த மேயெனா**
**விரும்புகின் றானிள வேனில் வேந்தனைஞ்**
**சரங்கள்சென் றழுத்தலிற் றரணி மன்னனே 2676**

[அறா-நீங்காத; சரங்கள்-அம்புகள்.]

**குழைமுக மிடவயிற் கோட்டி யேந்திய**
**அழனிறத் தேறலுண் மதிகண் டையென**

நிழன்முகப் பகைகெடப் பருகி நீள்விசும்பு
உழலெனா நோக்குவாண் மதிகண் டூடினாள் **2677**

[கோட்டி-சாய்த்து; நிழல்-ஒளி; உழலுதல்-வருந் துதல்.]

பருகினேற் கொளித்துநீ பசலை நோயொடும்
உருகிப்போ யின்னுமற் றுளையென் றுள்சுடக்
குருதிகண் கொளக்குண மாலை யூடினாள்
உருவத்தா ருறத்தழீஇ யுடற்றி நீக்குவான் **2678**

[குருதி-செந்நிறம்; உருவத்தார்-அழகிய மாலை; உடற்றி-வருத்தி.]

நங்கைநின் முகவொளி யெறிப்ப நன்மதி
அங்கதோ வுள்கறுத் தழகிற் றேய்ந்தது
மங்கைநின் மனத்தினால் வருந்த லென்றவள்
பொங்கிள வனமுலை பொருந்தி னானரோ **2679**

[ஒளியெறிப்ப-ஒளிவீச; வனம்-அழகு.]

கார்காலம் கழிந்து கூதிர்ப்பருவம் வர, திரண்ட மார்பை வெதுவெதுப் படையச்செய்யும் அகிலையும், சந்தனத்தையும், தெளிந்த மதுவையும், மலர்ந்த மாலையையும், வாசப்புகையினையும், சுண்ணப்பொடிகளையும் கரிய குவளைமலர்போலும் கண்ணுடைய மகளிர் நாடுவாராயினர். வண்டுகள் நீங்காது மொய்க்கும் மலர் மாலை புனைந்த அழகிற் சிறந்த மங்கையரை, பாற் கடலில் பிறந்த அமுதம் எனக்கொண்டு அவர்களை விரும்பி அடைந்து, இளவேனில் அரசனாகிய காமன் எய்த ஐந்து மலரம்புகளும் தைக்க வருந்திய சீவகன் இன்பம் நுகரலானான். தனக்குத்தர ஏந்திய தெளிந்த மதுவினுள் தெரிந்த நிலவை, காதுக்குழை அணிந்த தன் முகத்தை இடப்பக்கமாக வளைத்துப் பார்த்த குணமாலை, அந்நிலவைத் தன்முகத்துக்கு வந்த பகையாகக் கருதி, அப்பகை அழிய அம் மது முழுவதையும் விரைந்து குடித்து, 'நிலவே நீ வானில் சென்று உழல்வாயாக' என்று

கூறியவள் வானிலே மீண்டும் அந்நிலவு தெரிவதைக் கண்டு ஊடலானாள். 'நீ முற்றிலும் அழிந்துபோமாறு, மது முழுவதையும் நான் பருகி இருக்க, நிலவே நீயோ என்னுள்ளம் உருக எனக்குப் பசலைநோய் தந்ததல்லாமல், இன்னும் உயிரோடு இருக்கின்றாயே' என்று, மனம் வருந்திக் கண் சிவக்கக் குணமாலை ஊடி நின்றாள். அழகிய மலர்மாலை அணிந்த சீவகன் அவளைத் தழுவி, அவள் ஊடலைப் போக்கக் கருதி, 'பெண்ணே உன் முகத்தின் ஒளி வான் வரை சென்றுவீச, அங்கே உள்ள வெண்ணிலவு ஒளியிழந்து கறுத்துத் தேய்ந்து கிடக்கிறது. எனவே மங்கையே நீ மனம்' வருந்தற்க என்று கூறிச்சீவகன் அவள் மென் மார்புகள் இன்புறத் தழுவினான்.

(முன்பனி)

## வேறு

**கொங்கு விம்முபூங் கோதை மாதரார்**
**பங்க யப்பகைப் பருவம் வந்தென**
**எங்கு மில்லன வெலிம யிர்த்தொழிற்**
**பொங்கு பூம்பகைப் போர்வை மேயினார்** 2680

*[கொங்கு-மணம்; பங்கயம்-தாமரை.]*

**கூந்த லின்புகைக் குவவு மென்முலைச்**
**சாந்த மேந்திய தமால மாலையும்**
**ஆய்ந்து தாங்கினா ரரவ மேகலை**
**காய்ந்து நித்திலங் கடிய சிந்தினார்** 2681

*[தமாலம்-பச்சிலை மரம்; காய்ந்து-வெறுத்து.]*

**அளிந்த தீம்பழ மிஞ்சி யார்ந்தநீர்**
**விளைந்த வல்விளை வரிசி வேரியும்**
**வளைந்த மின்னனார் மகிழ்ந்து சண்பகம்**
**உளைந்து மல்லிகை யொலியல் சூடினார்** 2682

*[அளிந்த-மிகப்பழுத்த; உளைந்து-வெறுத்து; வேரி-மது; ஒலியல்-மாலை.]*

**தொத்து டைம்மலர்த் தொங்கல் கண்பொர**
**முத்து டைம்முலைக் கண்க ணொந்தவென்று**
**எய்த்த டிச்சிலம் பிரங்கு மின்குரல்**
**கைத்தெ டுத்தலிற் காமந் தாழ்ந்ததே** **2683**

[தொத்து-பூங்கொத்து; எய்த்து-அறிந்து; இரங்கும்-ஒலிக்கும்; கைத்து-செலுத்தி.]

வாசம் வீசும் மலர்மாலை அணிந்த மாதர்கள், தாமரைக்குப் பகையாகிய முன்பனிக்காலம் வந்ததென்று, எங்கும் காணக் கிடைக்காத அரிய எலிமயிரால் செய்த போர்வையையும் மிக்க புகை பரவும் மூட்டத்தையும் விரும்பி அடைந்தனர். கூந்தலுக்கு இனிய புகை ஊட்டினர். முன்னர் சந்தனம் பூசியிருந்த பூமார்புகளின் மேல் பச்சிலையால் தொடுத்த மாலையையும் தேர்ந்தெடுத்து அணிந்துகொண்டனர். ஒலிசெய்யும் மேகலையையும் குளிர்ச்சி தரும் முத்துக்களையும் வெறுத்து ஒதுக்கினர். பழுத்த எலுமிச்சம் பழ நீரிலே ஊறிய செவ்விஞ்சியையும், அரிசியால் ஆன பொரி அவல் முதலியவற்றையும், மதுவையும், வளைந்த மின்னல் கொடி போன்ற மகளிர் உண்டு மகிழ்ந்தனர். சண்பக மலர்களை வெறுத்து மல்லிகை மாலையைச் சூடினர். கொத்துக் கொத்தாக உள்ள மலர்மாலைகள் முலைக் கண்களைத் தாக்குமாறு தழுவுதலால் முத்துக்களை உடைய அம்முலைக்கண்கள் வருந்தின என்று காலில் அணிந்த சிலம்புகள் ஒலிசெய்து எழுப்பக் கூடி மகிழும் இன்பம், அங்கே குறைவின்றி நிகழ்ந்தது.

**பொன்ப னிப்புறும் பொற்பி னார்நலம்**
**அன்ப னித்தலை யணங்க வத்தலை**
**முன்ப னித்தலை முழுது நீங்கிப்போய்ப்**
**பின்ப னித்தலை பேண வந்ததே** **2684**

[பனிப்புறும்-நடுங்குதற்குக் காரணமான; அணங்க-வருத்த; பேண-விரும்ப.]

(பின்பனி)

வெள்ளி லோத்திரம் விளங்கும் வெண்மலர்க்
கள்செய் மாலையார் கண்கொ ளாத்துகில்
அள்ளி யேந்திய வரத்த வல்குலார்
ஒள்ளெ ரிம்மணி யுருவப் பூணினார் **2685**

[வெள்ளிலோத்திரம் - ஒருவகை மரம்; அரத்தம் - செந்நிறம்.]

செந்நெ ருப்புணுஞ் செவ்வெ லிம்மயிர்
அந்நெ ருப்பள வாய்பொற் கம்பலம்
மன்ன ருய்ப்பன மகிழ்ந்து தாங்கினார்
என்ன ரொப்புமில் லவர்க ளென்பவே **2686**

[பொன்-பொலிவு; கம்பலம்-ஆடை.]

ஆட லின்சுவை யமர்ந்து நாடொறும்
பாடன் மெய்ந்நிறீஇப் பருகிப் பண்சுவைத்
தோடு மாமதி யுரிஞ்சு மொண்பொனின்
மாடக் கீழ்நிலை மகிழ்ந்து வைகினார் **2687**

[அமர்ந்து - விரும்பி; மெய்ந்நிறீஇ - தம்முடம்பில் நிறுத்தி; உரிஞ்சும்-உராயும்.]

திருமகளும் கண்டஞ்சத்தக்க மங்கையரின் அழகு நலம் சீவகனை மிகுதியும் வருத்த, அத்தோடு முன்பனிக் காலம் முழுதும் முடிந்து பின் பனிக்காலம் அவர்கள் விரும்ப வந்தது. வெள்ளிலோத்திரம் என்னும் மரத்தில் பூத்த, ஒளிவிளங்கும், வெள்ளை மலரால் தொடுத்த, தேன் வழியும் மாலையையும், கண்ணால் காணமுடியாத, மிக மெல்லிய- செந்நிறத் துகில் அணிந்த அல்குலையும், அழகிய ஒளிவீசும் மணிப் பூண்களையும் உடைய மகளிர், சிவந்த நெருப்பின் நிறம்போன்ற, எலிமயிரால் செய்யப் பெற்ற, அந்நெருப்பைப் போலவே குளிருக்கு வெப்பந் தரத்தக்கன என்று மன்னனால் ஆராய்ந்து அனுப்பப் பட்ட, கம்பளிகளை விரும்பி அணிந்துகொண்டு எவரும் ஒப்புவமைகூற இயலாதபடி இருந்தனர். ஆடல் கலையின்

அழகை உண்டும், நாள்தோறும் பாடும் இசையின் பண்ணும் பதமும் சுவைத்தும், வானில் நீந்தி ஓடும் நிலவுடன் மோதுமளவுக்கு உயர்ந்துள்ள மாடத்தின் கீழ் நிலத்தில் மகிழ்ந்து இருந்தனர்.

## வேறு

**புரிக்குழன் மடந்தையர் பொம்மல் வெம்முலை**
**திருக்கழற் குருசிறார் திளைக்கும் போரினுட்**
**செருக்குரற் சிறுபறை சிலம்பு கிண்கிணி**
**அரிப்பறை மேகலை யாகி யார்த்தவே 2688**

[பொம்மல்-பெருமை; செரு-போர்.]

**ஏச்செயாச் சிலைநுத லேழை மார்முலைத்**
**தூச்செயாக் குங்குமந் துதைந்த வண்டினம்**
**வாய்ச்சியா லிட்டிகை செத்து மாந்தர்தம்**
**பூச்செயா மேனிபோற் பொலிந்து தோன்றுமே 2689**

[ஏச்செயாச்சிலை-அம்பெய்யாமல் வளைந்த வில்; தூச்செயா-கழுவாத; வாய்ச்சி-செதுக்கும் கருவி; இட்டிகை - செங்கல்; செத்தும் - செதுக்குகின்ற; பூச்செயா மேனி-கழுவாத உடல்.]

சுருண்டு வளைந்த கூந்தலுடைய மங்கையரின் பருத்த பூமார்பும் அழகிய வீரக் கழலணிந்த சீவகன் மார்பிலணிந்த மாலையும் மோதி முயங்கும் காமப் போரிலே, போர் முரசொலிக்கும் சிறுபறைகளாகப் பாதச் சிலம்பும் கிண்கிணியும் ஒலியெழுப்பின; பெரிய போர்ப் பறையாக மேகலை முழங்கி ஒலித்தது. அம்பு எய்வதற் கேற்ப வளைந்தது போல் தோன்றினாலும், அப்படி அம் பெய்யாத, வளைந்த வில்போலும் புருவமுடைய, மங்கையரின் மார்பில் நிறைந்து குங்குமத்தில் வண்டுகள் படிந்து, வாய்ச்சியால் செங்கல்லைச் செதுக்குகின்ற மாந்தருடைய கழுவாத தூசுபடிந்த உடலைப் போன்ற தோற்றத்தை உண்டாக்கும்!

(இளவேனில்)

வேறு

குரவம் பாவை கொப்புளித்துக் குளிர்சங் கீர்ந்த
துகளேபோல்
மரவம் பாவை வயிறாரப் பருகி வாடை யதுநடப்ப
விரவித் தென்றல் விடுதூதா வேனி லாற்கு விருந்தேந்தி
வரவு நோக்கி வயாமரங்க ளிலையூழ்த் திணரீன்
றலர்ந்தனவே 2690

[கொப்புளித்து-சிதற அடித்து; ஈர்ந்த துகள்-அறுத்த தினால் உண்டான தூசி; ஊழ்த்து-சொரிந்து.]

இளிவாய்ப் பிரசம் யாழாக விருங்கட் டும்பி குழலாகக்
களிவாய்க் குயில்கண் முழவாகக் கடிபூம் பொழில்க
ளரங்காகத்
தளிர்போன் மடவார் தணந்தார்தந் தடந்தோள்
வளையு மாமையும்
விளியாக் கொண்டிங் கிளவேனில் விருந்தா வாட
றொடங்கினான் 2691

[பிரசம்-வண்டு; தணந்தார்-பிரிந்தார்; விளி-பாட்டு; விருந்தா-புதிதாக.]

வேனி லாடும் விருப்பினால் வியன்காய் நெல்லிச்
சாந்தரைத்து
நான வெண்ணெய் கதுப்புரைத்து நறுநீ ராடி யமிர்
துயிர்க்கும்
தேனா ரகிலின் புகைசேர்த்தி வகுத்து நாவிக் குழம்புறீஇ
ஆனாப் பளித நறுஞ்சுண்ண முகிரி னுழுதாங் கணிந்தாரே

[கதுப்பு உரைத்து-கூந்தலில் தேய்த்து; நாவிக்குழம்பு உறீஇ - புழுகைத் தடவி; பளிதம்-கருப்பூரப் பொடி; உகிரின் - நகத்தினால்; உழுது - சிக்கெடுத்து.]

குரவ மலர்கள் தந்த தேன் அதிகம் உண்டு தெவிட்ட, அதைக் குளிர்ந்த வெள்ளைச் சங்கினை அறுக்கையில் சிதறிய தூசியைப்போல் எங்கும் சிதறக் கொப்பளித்து விட்டு, மரவ மலர்கள் தரும் தேனை மகிழ்ச்சியோடு பருகி வாடைக் காற்று வழிநடக்க, வாடைக் காற்றோடு கலந்து வீசும் தென்றல் தூதாகக் காமனுக்கு விருந்தளிக்க, அவன் வரவை எதிர்நோக்கி, இலையுதிர்த்து முதிர்ந்த வயா நோய்கொண்ட மரங்கள் துளிர்ந்து மலர் நிறைந்து நின்றன. இளி என்னும் ஒருவகைப் பண்ணைப்பாடும் வண்டின் பாடல் யாழிசையாகவும் கரிய கண்களுடைய தும்பியின் பாடல் குழலோசையாகவும் இன்னிசை பாடும் குயிலோசை முழவொலியாகவும் வாசமலர்ப் பொழில்கள் இன்னிசை அரங்கங்களாகவும் மாந்தளிர் போலும் மேனி உடைய மங்கையர்களில், கணவனைப் பிரிந்தவர்களின் கைகளிலிருந்து கழன்றோடும் வளையலையும் மேனியில் படர்ந்த பசலையையும் பிரிந்து சென்ற கணவன் மீண்டும் வரத் தூது போகும் பாணன் பாடும் பாட்டாகக் கொண்டு இளவேனில் விளையாடத் தொடங்கினான். இத்தகைய இளவேனில் விளையாட்டில் ஈடுபடும் ஆசையினால், பெரிய நெல்லிக்காய்ச் சாந்து அரைத்துப் பூசி, கத்தூரி மணங்கமழும் எண்ணெயைக் கூந்தலிலே தடவி, குளிர்ந்த நீரிலே குளித்து, கூந்தலுக்கு அமுதொத்த தேன் துளிக்கும் அகில் புகையின் வாசங்காட்டி, கூந்தலை வகிர்ந்து புனுகு பூசி நகத்தாலே அழுத்தி நல்ல வாசந்தரும் கற்பூரப் பொடியை அணிந்து கொண்டனர்.

முத்தார் மருப்பி னிடைவளைத்த முரண்கொள் யானைத் தடக்கையின்
ஒத்தே ருடைய மல்லிகையி னொலியன் மாலை யுறுப்படக்கி
வைத்தார் மணிநூற் றனஐம்பால் வளைய முடித்து வான்கழுநீர்
உய்த்தாங் கதனுட் கொளவழுத்திக் குவளைச் செவித்தா துறுத்தாரே 2693

[கழுநீர்-செங்கழு நீர்; செவி-செவ்வி, அழகு.]

புகையார் வண்ணப் பட்டுடுத்துப் பொன்னங் கலைகள்
புறஞ்சூழ்ந்து
நகையார் கவுள கிண்கிணியுஞ் சிலம்பு நாய்நாச் சீறடிமேற்
பகைகொண் டார்போற் சுமாஅக்கண்பின்
பருஉக்காம் பணைய கணைக்கால்சூழ்ந்
தகையார்ந் திலங்கும் பரியகந் தாமே கவினச் சேர்த்தினார்

[வண்ணம்-நிறம்; நகை-ஒளி; சுமாஅய்-சுமத்தி; கண்-கணு; பரியகம்-காற்சரியென்னும் அணி; பருஉ-பெரிய.]

பிடிக்கை வென்று கடைந்தனபோற் பஞ்சி யார்ந்த
திரள்குறங்கு
கடித்துக் கிடந்து கவின்வளருங் காய்பொன் மகரங்
கதிர்முலைமேல்
உடுத்த சாந்தின் மிசைச்செக்க ரொளிகொண் முந்நாட்
பிறையேய்ப்பத்
துடிக்குங் கதிர்சேர் துணைமுத்தந் திருவில் லுமிழ்ந்து
சுடர்ந்தனவே 2695

[திரள்குறங்கு-திரண்ட துடை; கடித்து-கௌவி; செக்கர்-செவ்வானம்; முந்நாட்பிறை-மூன்றாம் நாட்பிறை.]

மூத்துக்கள் நிறைந்த தந்தக் கொம்புகளுக்கிடையே நீண்டு வளைந்த வலிமை மிக்க யானையின் துதிக்கையைப் போன்ற கூந்தலில் அழகிய மல்லிகை மலர்களால் தொடுத்த மாலையையும், துணை மாலையையும் முன்பனிக் காலத்தே சூடிய மங்கையர்கள், இளவேனிற் காலத்தே, கருமணி போன்ற அழகிய ஐம்பால் கூந்தலைக் கோதி முடித்து அழகிய செழுங்கழுநீர் மலர்களை அதனுள் வைத்து அழுத்தி வெளியே குவளை மலர்களையும் அழகுறப் புனைந்து கொண்டனர். தலையலங்காரம் முடிந்த பெண்கள், அகில்புகை தோய்ந்த அழகிய பட்டுடைகளை இடையைச் சுற்றி அணிந்து

  

கொண்டு, அதன்மேல், பொன்னால் ஆகிய சிறந்த மேகலையைச்சூடி, ஒளி வீசும் கதுப்புடைய கிண்கிணிச் சதங்கையும், சிலம்பும், நாயின் நாக்கினைப் போன்ற அழகிய பாதத்தின்மேல், தங்கள் மெல்லுடலுக்கும் சிற்றிடைக்கும் பகையாக அணிந்து, காம்பு போன்ற கணைக்கால்களின் மேலே பரியகம் என்னும் ஆபரணத்தையும் அணிந்து கொண்டனர். பெண் யானையின் துதிக்கையைப் பழிக்கும், கடைந்தெடுத்த தந்தம் போன்ற, வெண்பட்டுத் துகில்தோய்ந்த, திரண்ட துடைகளைக் கவ்விக்கிடந்து அழகு செய்யும் பொன்னால் ஆக்கிய, மகரமீன் வடிவில் செய்யப்பட்ட குறங்கு செறி என்னும் ஆபரணமும், அவர்களின் பருத்த அழகிய மார்பின்மேல் பூசிய குங்குமச் சாந்திலே படிந்து, செக்கர் வானிலே ஒளி வீசித் தோன்றும் மூன்றாம் பிறைச் சந்திரனைப்போல, இரண்டு வடமாகக் கிடந்து புரளும் முத்துச்சரங்களும் ஒளிவீசி அவர்கள் அழகுக்கு அழகு செய்தன.

**குழியப் பெரிய கோன்முன்கை மணியார் காந்தட்**
**குவிவிரன்மே**
**கழியப் பெரிய வருவிலைய சிறிய மணிமோ திரங்கனலத்**
**தழியப் பெரிய தடமென்றோட் சலாகை மின்னத்**
**தாழ்ந்திலங்கும்**
**விழிகண் மகர குண்டலமுந் தோடுங் காதின் மிளிர்ந்தனவே**

[கோல் முன்கை-திரண்ட முன்கை; கழிய-மிக; கனல-ஒளி வீச; தழிய-தழுவும்படி; சலாகை-காதில் இடும் கம்பி.]

**நாணுள் ளிட்டுச் சுடர்வீசு நன்மா ணிக்க நகுதாலி**
**பேணி நல்லார் கழுத்தணிந்து பெருங்கண் கருமை**
**விருந்தூட்டி**
**நீணீர் முத்த நிரைமுறுவல் கடுச்சூட் டுரிஞ்சக் கதிருமிழ்ந்து**
**தோணீர்க் கடலுட் பவளவாய்த் தொண்டைக் கனிகள்** 2697
**தொழுதனவே**

[நாண்-பொன்னாண்; நகு-ஒளிவீசுகின்ற; நல்லார்-மகளிர்.]

மாலை மகளி ரணிந்ததற்பின் பஞ்சவாசங் கவுட்கொண்டு
சோலை மஞ்ஞைத் தொழுதிபோற்றோகை செம்பொ
னிலந்திவளக்
காலிற் சிலம்புங் கிண்கிணியுங் கலையு மேங்கக்
கதிர்வேலும்
நீலக் குவளை நிரையும்போற் கண்ணார் காவி லிருந்தாரே

[பஞ்சவாசம் - வெற்றிலை; தொழுதி - கூட்டம்; தோகை-கொசுவம்; திவள-புரள; நிரை-வரிசை.]

திரண்ட முன்கையில், காந்தள் மலர் போலக் குவிந்த அழகிய மெல்விரலின்மேல், மிகவும் பெரிய விலைமதிப்புடைய சிறுமணிகளாலான மோதிரம் ஒளிவீச, மெல்லிய பெரிய தோள்களைத் தழுவும்படிக் காதணி மின்ன, விழித்த கண்களுடைய மகரமீன் வடிவில் செய்யப்பட்ட குண்டலமும் தோடும் காதில் தொங்கி அழகு செய்தன. பொன்னாணிலே சேர்த்துப் பூட்டிய, ஒளிவீசும் அழகிய, மணிகளிழைத்த தாலியைப் போற்றி மங்கையர்கள் கழுத்திலே அணிந்தனர். நீண்ட பெரிய கண்களிலே மை தீட்டினர். பெரிய முத்தினைப்போன்ற அழகிய வரிசையான பற்கள் கடுக்காயைச் சூட்டுத் தேய்த்தலால் ஒளிவீசின. ஆழத்தோண்டிய கடலில் பிறந்த பவளம் போன்ற சிவந்த வாயின்முன் கொவ்வைக் கனி போன்ற அவர்களின் உதடுகள் ஒளியிழந்து நாணி நின்றன. இவ்வாறாக அலங்காரங்கள் எல்லாம் முடித்த மங்கையர் மாலைகளை அழகுற அணிந்தனர். ஐந்து முகவாசங்களை வாயில் கொண்டு, சோலையிலிருக்கும் கோலமயில் கூட்டம்போல, ஆடையின் கொசுவும் நிலத்திலே பட்டுத் துவள, காலில் அணிந்த சிலம்பும், கிண்கிணிச் சதங்கையும், இடையிலணிந்த மேகலையும் ஒலிசெய்ய, ஒளிமிக்க கூர்வேலும், நீலநிறமுடைய அழகிய குவளைமலர்போலும்,

கண்களுமுடைய அம்மகளிர் மலர்ச்சோலை எங்கும் நிறைந் திருந்தனர்.

**மணிவண் டொன்றே நலம்பருக மலர்ந்த செந்தா மரைத்தடம்போல்**
**அணிவேன் மன்ன னலம்பருக அலர்ந்த வம்பார் மழைக்கண்ணார்**
**பணியார் பண்ணுப் பிடியூர்ந்து பரூஉக்காற் செந்நெற் கதிர்சூடித்**
**தணியார் கழனி விளையாடித் தகைபா ராட்டத் தங்கினார்**

[அம்புஆர்-அம்பைப் போன்ற; தகை-அழகு.]

**எண்ணற் கரிய குங்குமச்சேற் றெழுந்து நான நீர்வளர்ந்து**
**வண்ணக் குவளை மலரளைஇ மணிக்கோல் வள்ளத் தவனேந்த**
**உண்ணற் கினிய மதுமகிழ்ந்தா ரொலியன் மாலை புறந்தாழக்**
**கண்ணக் கழுநீர் மெல்விரலாற் கிழித்து மோந்தார் கனிவாயார்** **2700**

[அளைஇ-கலந்து; கோல்-கோலம்.]

ஒரே ஒரு அழகிய நீலமணி வண்டு மட்டும் வந்தடைந்து இன்பம் நுகர்வதற்கென்றே பூத்திருக்கின்ற, செந்தாமரை மலர்ப்பொய்கையைப் போல, அழகிய வெற்றி வேலுடைய மன்னன் சீவகன் இன்ப நலம் நுகர்வதற்கென்று விரிந்து மலர்ந்த, காமன் அம்பு போன்ற அழகிய விழி உடைய காந்தருவதத்தை முதலான மகளிர், பொன்மணி பூட்டி அலங்கரித்த பெண் யானை மேலமர்ந்து போய்ப் பெரிய தாளுடைய நெற்கதிர்களைச் சூடி, அந்நெல் விளைந்த கழனியில் விளையாடி, சீவகன் தம் அழகுநலம் பாராட்ட அக்கழனியிலேயே தங்கினர். அளவிடமுடியாத குங்குமச் சேற்றிலே முளைத்து, வாசப் புனுகு நீரிலே வளர்ந்த, அழகிய குவளை மலர்களை இட்டு, பருகுவதற்கு இனிமை தரும்படிப் பண்ணிய சுவையான மதுவை, மணிகள் வைத்

துப்பதித்த கைப்பிடியுடைய வட்டிலிலே வார்த்து அரசன் அருந்தக் கொடுக்க, அம்மகளிர் தாம் சூடிய மலர் மாலையும் முத்துமாலையும் கீழே தவழ்ந்து புரள அம்மதுவைப் பருகி மகிழ்ந்தனர். பிறகு அவர்கள் தங்கள் உள்ளக் கிடக்கையைச் சீவகனுக்கு உணர்த்தும் வகையில், செங்கழுநீர் மலரைத் தங்கள் நகத்தால் கிழித்து அதன் வாசத்தை முகர்ந்தனர். மலரைத் தாங்கள் நகத்தால் கிழித்தது போலவே சீவகனும் அவர்கள் உடலில் நகக் குறி செய்து கூடி மகிழவேண்டும் என்னும் குறிப்புக் காட்டினர் என்பர்.

## 4. புதல்வர்ப் பேறு

**இவ்வா றெங்கும் விளையாடி யிளையான் மார்பி
னலம்பருகிச்
செவ்வாய் விளர்த்துத் தோண்மெலிந்து செய்ய முலையின்
முகங்கருகி
அவ்வாய் வயிறு கால்வீங்கி யனிச்ச மலரும் பொறையாகி
ஒவ்வாப் பஞ்சி மெல்லணைமே லசைந்தா ரொண்பொற்
கொடியன்னார் 2701**

[கால்-இடம்; விளர்த்து-வெளுத்து; அவ்வாய்-அழகு வாய்ந்த.]

**தீம்பால் சுமந்து முலைவீங்கித் திருமுத் தீன்ற
வலம்புரிபோற்
காம்பேர் தோளார் களிறீன்றார் கடைகள் தோறுங்
கடிமுரசம்
தாம்பாற் பட்ட தனிச்செங்கோற் றரணி மன்னன்
மகிழ்தூங்கி
ஓம்பா தொண்பொன் சொரிமாரி யுலக முண்ணச்
சிதறினான் 2702**

[காம்பு-மூங்கில்; மகிழ்தூங்கி-மகிழ்ந்து.]

காடி யாட்டித் தராய்ச்சாறுங் கன்னன் மணியு நறுநெய்யும்
கூடச் செம்பொன் கொளத்தேய்த்துக் கொண்டு நாளும்
வாயுறீஇப்
பாடற் கினிய பகுவாயுங் கண்ணும் பெருக வுகிருறுத்தித்
தேடித் தீந்தேன் றிப்பிலிதேய்த் தண்ணா வுரிஞ்சி
மூக்குயர்த்தார் 2703

[காடி-கஞ்சி; வாயுறீஇ-வாயில் ஊட்டி; அண்ணா-உண்ணாக்கு.]

இவ்வாறாக எங்கும் விளையாடி இன்புற்றுச் சீவகன் மார்பில் தோய்ந்து அவன் இன்ப நலம் பருகிய மங்கையர்கள், சிவந்த வாய் வெளுத்துத் தோள் மெலிய, சிவந்த முலை முகம் கறுக்க, அழகிய வயிறு பெருக்க, மெல்லிய அனிச்சப் பூவும் பாரமாகத் தோன்ற, தங்களுடல் மென்மைக்குச் சற்றும் பொருந்தாத பஞ்சணைப் படுக்கையைச் சேர்ந்தனர். மூங்கில் போலும் அழகிய தோளுடைய மங்கையர், இனிய பால் சுமந்து மார்பு பருக்க, அழகிய முத்தினைப் பெற்ற வலம்புரிச் சங்கைப் போல், யானை போலும் வலிவுடைய பிள்ளைகளைப் பெற்றனர். இந்த மங்கலச் சேதியைப் பறைசாற்ற ஆசார வாயில்கள் தோறும் மங்கல முரசுகள் இருந்து முழங்கின. வெற்றிச் செங்கோலேந்திய மாமன்னன் சீவகன், மகிழ்ச்சிப் பெருக்கில், உலகம் பெற்று மகிழப் பெய்யும் மழைபோல் பொன்னை அளவில்லாமல் வாரி வழங்கினான். செவிலித்தாயர்கள் கஞ்சியோடு பிரமிச் சாறும், கற்கண்டுப் பொடியும் நெய்யுங் கலந்து, பொன்னிலே தோய்த்து நாள்தோறும் குழந்தைகள் வாயிலே ஊட்டி, பாடுதற்கினிய குரலுடைய வாயும் கண்களும் பெருக விரல் நகத்தால் உதட்டை விலக்கி அதிமதுரத்தையும் திப்பிலியையும் தேனிலே குழைத்து அவற்றின் நாவிலே தடவி உண்ணாக்கை உரிஞ்சி மூக்கை உயர்த்தினர்.

  

யாழுங் குழலு மணிமுழவு மரங்க மெல்லாம் பரந்திசைப்பத்
தோழன் விண்ணோ னவட்டோன்றி வயங்காக் கூத்து
வயங்கியபின்
காழார் வெள்ளி மலைமேலுங் காவன் மன்னர் கடிநகர்க்கும்
வீழா வோகை யவன்விட்டான் விண்பெற் றாரின்
விரும்பினார் 2704

[அரங்கம் - நாடகசாலை; காழ் - வைரம்; வீழா-
கெடாத; வயங்குதல்-ஆடுதல்.]

தத்த நிலனு முயர்விழிவும் பகையு நட்பும் தந்தசையும்
வைத்து வழுவில் சாதகமும் வகுத்த பின்னர்த்
தொகுத்தநாட்
சச்சந் தணனே சுதஞ்சணனே தரணி கந்துக் கடன்விசயன்
தத்தன் பரதன் கோவிந்த னென்று நாமந் தரித்தாரே 2705

[வழு-குற்றம்; நாமம்-பெயர்.]

ஐயாண் டெய்தி மையாடி யறிந்தார் கலைகள்
படைநவின்றார்
கொய்பூ மாலை குழன்மின்னுங் கொழும்பொற் றோடுங்
குண்டலமும்
ஐயன் மார்க டுளக்கின்றி யாலுங் கலிமா வெகுண்டூர்ந்தார்
மொய்யா ரலங்கன் மார்பற்கு முப்ப தாகி நிறைந்ததே 2706

[நவின்றார்-பழகினார்; துளக்கு-அசைதல்; மொய்-
வன்மை.]

யாழும் குழலும் அழகிய மத்தளமும் இசை அரங்குகள் எல்லாம் நிறைந்து இன்னிசை பரப்ப, சீவகனின் வானுலக நண்பனாகிய சுதஞ்சணன் அங்குத் தோன்றி, காணக் கிடைக்காத கூத்துக்களை நிகழ்த்திக் காட்டிய பின், வலிமைமிக்க வெள்ளி மலைமேல் வாழும் கலுழவேக னுக்கும் மற்ற மன்னர்களுக்கும் குழந்தைபிறந்த மகிழ்ச் சிச்சேதியினை சொல்லியனுப்பினான். அதைக் கேட்ட அவர்களும் வானுலக இன்பம் பெற்றது போல் மகிழ்ச்சி

பெற்றனர். சோதிடர் ஒன்று கூடி, கோள்கள் சஞ்சரிக்கும் நிலையும் இடமும் அறிந்து, அவற்றின் உச்சமும், வீழ்ச்சியும், நட்பும், பகையும், தம்முடைய நிலையும் ஆராய்ந்தமைத்துக் குறையின்றிக் குழந்தைகளின் சாதகம் எழுதி முடித்தனர். குழந்தைகள் பிறந்த பனிரெண்டாம் நாளில் அவற்றிற்குச் சச்சந்தணன், சுதஞ்சணன், உலோக பாலன், கந்துக்கடன், விசயன், பரதன், தத்தன், கோவிந்தன் என்னும் பெயர்களைச் சூட்டினர். அக்குழந்தைகளும், ஐந்து வயது நிறையப் பெற்று மை ஓலை பிடித்துக் கலைகள் கற்றுப் படைக்கலப் பயிற்சியும் பெற்றனர். பறித்த மலர்களால் தொடுத்த மாலையும், கூந்தல் முடிப்பும், ஒளிவீசும் அழகிய பொற்றோடும் காதுக் குண்டலமும், அசையாமல் அப்படியே இருக்க, ஓடும் வலிமைமிக்க குதிரைகளை அடித்து அடக்கி, அவற்றின் மீதேறிச் செல்லும் ஆற்றலும் பெற்றனர். அந்நிலையில் மலர் நிறைந்த மாலையணிந்த சீவகன் ஆட்சிப் பொறுப்பேற்று அப்போது முப்பதாண்டுகள் நிறைந்தன.

## 5. சோலை நுகர்வு

பூநிறை செய்த செம்பொற் கோடிகம் புரையு மல்குல்
வீநிறை கொடிய னாரும் வேந்தனு மிருந்த போழ்தில்
தூநிறத் துகிலின் மூடிப் படலிகை கொண்டு வாழ்த்தி
மாநிறத் தளிர்நன் மேனி மல்லிகை மாலை சொன்னாள்

[கோடிகம்-பூந்தட்டு; வீ-பூ; படலிகை-பூவிடுபெட்டி.]

தடமுலை முகங்கள் சாடிச் சாந்தகங் கிழிந்த மார்பிற்
குடவரை யனைய கோலக் குங்குமக் குவவுத் தோளாய்
தொடைமலர் வெறுக்கை யேந்தித் துன்னினன் வேனில் வேந்தன்
இடமது காண்க வென்றா ளிறைவனு மெழுக வென்றான்

[சாடி-மோதி; வெறுக்கை-செல்வம்; குவவு-திரண்ட.]

  

**முடித்தலை முத்த மின்னு முகிழ்முலை முற்ற மெல்லாம்**
**பொடித்துப்பொன் பிதிர்ந்த வாகத் திளையவர்**
**புகழ்ந்து சூழக்**
**கடுத்தவாள் கனல வேந்திக் கன்னியர் காவ லோம்ப**
**இடிக்குர றசீய மொப்பா னிழையொளி விளங்கப் புக்கான்**

[முற்றம்-பரப்பு; இளையவர்-மகளிர்; இழை ஒளி-ஆபரணங்களின் ஒளி.]

பூக்கள் அடுக்கி வைத்த பொன்தட்டுப் போன்ற அல்குலுடைய, மலர் பூத்த பூங்கொடி போன்ற தேவியரும் சீவகனும் அழகுற இருந்தபோது, தூய நல்லாடையால் பூக்குடலையை மூடிக்கொண்டு வந்து அரசனை வாழ்த்தி நின்ற, மாந்தளிர் நிற உடலுடைய மல்லிகை மாலை என்னும் தோழி சொல்லத் தொடங்குவாள்: 'பெரிய முலை முகடுகள் மோதியதால் பூசிய சந்தனம் அழிந்து திகழும் மார்பும், மேற்கு மலை போன்ற குங்குமக் குழம்பு பூசிய அழகிய தோளும் உடையவனே! தொடைமாலை தொடுத்தற்குரிய மலர்களைக் காணிக்கையாக ஏந்தியபடி காமன் மலர்ப்பொழிலிலே வந்து வீற்றிருக்கிறான். நீ அங்கே சென்று அவனைக் காண்க' என்றாள். சீவகனும் புறப்படுக என்றான். மேலே முத்துக்கள் கிடந்து ஒளி வீசும் அழகிய மார்பினைச் சுற்றிலும், பொற்றாள் சிந்தியதைப் போலத் தேமல் படர்ந்திருக்கும் மார்புடைய தேவியர்கள் உடன்வர, கன்னிப்பெண்கள் புகழ்ந்து போற்ற, இடிபோல் முழக்கமிடும் ஆண்சிங்கமாகிய சீவகன் கொலைவாள் ஏந்திப் பொன் அணிகள் ஒளிவீச, அச்சோலைக்குள்ளே நுழைந்தான்.

**இலங்குபொன் னார மார்பி னிந்திர னுரிமை சூழக்**
**கலந்தபொற் காவு காண்பான் காமுறப் புக்க தேபோல்**
**அலங்குபொற் கொம்ப னாரு மன்னனு மாட மாதோ**
**நலங்கவின் கொண்ட காவு நல்லொளி நந்திற் றன்றே**

[உரிமை-தேவியர்; காமுற-விருப்பமுற; நந்திற்று-பெருகிற்று.]

புலவியுண் மகளிர் கூந்தற் போதுகுக் கின்ற தேபோற்
குலவிய சிறகர்ச் செங்கட் கருங்குயில் குடையக் கொம்பர்
நிலவிய தாது பொங்க நீண்மலர் மணலிற் போர்த்துக்
கலவியிற் படுத்த காய்பொற் கம்பல மொத்த தன்றே

*[உகுக்கின்றது-சொரிகின்றது; கொம்பர் - கொம்பு; நிலவிய-விளங்கிய; தாது-மகரந்தம்.]*

காசுநூல் பரிந்து சிந்திக் கம்பலத் துக்க தேபோல்
மூசுதேன் வண்டு மொய்த்து முருகுண்டு துயில மஞ்ஞை
மாசில்பூம் பள்ளி வைகி வளர்ந்தெழு மகளி ரொப்பத்
தூசுபோற் சிறக ரன்னந் தொழுதியோ டிரியச் சேர்ந்தார்

*[காசு-மணிகள்; முருகு-தேனை; தூசு-வெள்ளிய ஆடை; தொழுதி-தொகுதி; பரிந்து-அறுந்து.]*

ஒளிவீசும் பொன்மாலை புரளும் மார்புடைய இந்திரன், தன் அன்பு மனைவியர் உடன்வரக் கற்பகச் சோலையைக் கண்டுகளிக்க ஆவலோடு வந்திருப்பதைப் போல, அழகிய பொற்கொடி போன்ற தேவியரும் சீவகனும் அம்மலர்ச் சோலையில் புகுந்து விளையாடியதால், இயற்கையிலேயே அழகும் வளமும் மிக்க அச் சோலை, மேலும் சிறப்புற்றுத் திகழ்ந்தது. பொய்க் கோபத்தால் ஊடுகின்ற மங்கையர்கள் தங்கள் கூந்தலில் உள்ள மலர்களைப் பிய்த்துச் சிதறவிடுவதைப்போல, அழகிய சிறகுகளும் சிவந்த கண்களும் உடைய கருங் குயில்கள் புகுந்து குடைவதால், மலர்க்கொம்புகளில் இருந்து மகரந்தப் பொடிகள் சிதறி மணலிலே விழுந்து அதனைப் போர்த்து மறைக்க அக்காட்சி, ஊடல் நீங்கிக் கூடி மகிழ நினைத்தவர் விரித்த கம்பளிப் பட்டைப்போல் இருந்தது. சேர்த்துக் கோத்த நூல் அறுந்துபோகக் கம்பளப்பட்டிலே சிதறிக் கிடக்கும் மணிகளைப் போல, தும்பியும் வண்டும் அம்மகரந்தப் பொடிகளிலிருக்கும் தேனை உண்டுதுயில, அச்சோலையில் உள்ள தோகை மயில்கள் அழகியபூமலர்ப் படுக்கையிலிருந்து தூங்கியெழும்

மங்கையரைப் போல் தோன்ற, தூய வெள்ளை ஆடையைப் போன்ற சிறகுடைய அன்னப்பறவைகள் விலகி ஓட, அச்சோலையை அடைந்தனர்.

காதிக்கண் ணரிந்து வென்ற வுலகுணர் கடவுள் காலத்
தாதிக்கண் மரங்கள் போன்ற வஞ்சொலீ ரிதனி னுங்கள்
காதலிற் காண லுற்ற விடமெலாங் காண்மி னென்றான்
நீதிக்க ணின்ற செங்கோ னிலவுவீற் றிருந்த பூணான் 2713

[காதி-வினை; ஆதிக்கண்-ஆதிக்காலத்தில்.]

வானவர் மகளி ரென்ன வார்கயிற் றூச லூர்ந்தும்
கானவர் மகளி ரென்னக் கடிமலர் நல்ல கொய்தும்
தேனிமிர் குன்ற மேறிச் சிலம்பெதிர் சென்று கூயும்
கோனமர் மகளிர் கானிற் குழாமயில் பிரிவ தொத்தார்

[வானவர் மகளிர்-அரம்பையர்; கானவர் மகளிர்-வேடிச்சியர்; கூயும்-கூவியும்; கான்-சோலை.]

நெடுவரை யருவி யாடிச் சந்தன நிவந்த சோலைப்
படுமதங் கவரும் வண்டு பைந்தளிர்க் கவரி யேந்திப்
பிடிமகிழ்ந் தோப்ப நின்ற பெருங்களிற் றரசு நோக்கி
வடிமதர் மழைக்க ணல்லார் மன்னனை மகிழ்ந்து நின்றார்

[நிவந்த-உயர்ந்த; வடி-மாவடு.]

'ஆன்ம ஞானத்தை அழிக்க வல்ல கன்மவினைகளை வென்றழித்த, உலகினையும் உலக வாழ்வினையும் உள்ளபடி உணர்ந்த, ஒப்புயர்வற்ற ஒரு பெரும் பரம்பொருள் உண்டான காலத்தில், தாமாகத் தோன்றி வளர்ந்த அக்கால மரங்களைப் போல இச்சோலை மரங்கள் எல்லாம் அழகும் பயனும் தந்து நிற்கின்றன. ஆகவே அழகு மொழி பேசும் என் அன்புக்குரிய மங்கையர்களே, நீங்கள் இங்கே ஆசையோடு பார்க்க விரும்பும் இடங்களையெல்லாம் சென்று காண்க' என்றான், நீதி நிலைக்கப் பிடித்த செங்கோலையும் நிலவைப் பழிக்க அணிந்த அணிமணிகளையும் உடைய சீவகன். உடனே அவன் தேவியரும் வானுலக

மங்கையரைப் போலக் கயிற்றிலே கட்டிய ஊஞ்சலை உந்தி ஆடியும், கானகத்தில் வாழும் வேட்டுவர் மகளிரைப் போல நல்ல வாசமலர் கொய்தும், வண்டுகள் மொய்த்துப் பாடும் மலர் நிறைந்த குன்றுகளிலே ஏறி நின்று எதிரொலி உண்டாகக் கூவியும், அக்காட்டிலே மயில் கூட்டம் பிரிந்து செல்வது போல் சென்று திரிந்தனர். பெரிய மலையிலுள்ள அருவிகளில் நீராடி, சந்தன மரங்கள் உயர்ந்த சோலையில், தன்னிடம் உண்டான மதத்தை மொய்த்துப் பருக வரும் வண்டுகளை, இளந்தளிர்களைக் கவரிகளாகக் கொண்டு விரட்டும் பெண் யானைகளைக் கண்டு மகிழ்ந்து நிற்கும் பெரிய ஆண்யானையைப் பார்த்து, கூரிய வேல் போலும் வடிவுடைய, குளிர்ந்த கண்ணுடைய தேவியர் சீவகனைக் கூடிமகிழும் விருப்போடு பார்த்து நின்றனர்.

**கொழுமடற் குமரி வாழைத் துகிற்சுருள் கொண்டு தோன்றச்**
**செழுமலர்க் காம வல்லி செருக்கயல் சிற்ப மாகக்**
**கழுமணிச் செம்பொ னாழிக் கைவிர லுகிரிற் கிள்ளி**
**விழுமுலைச் சூட்டி நின்றார் விண்ணவர் மகளி ரொத்தார்**

[குமரி வாழை-குலை ஈனாத வாழை; கழுமணி-கழுவிய மணி; விழுமம்-சிறப்பு.]

**கடைதயிர்க் குரல வேங்கை கண்ணுறச் சென்று நண்ணி**
**மிடைமயிர்க் கவரி நல்லான் கன்றுணக் கண்டு நிற்பார்**
**புடைதிரண் டெழுந்த பொம்மல் வனமுலை பொறுக்க லாற்றார்**
**நடைமெலிந் திகலி யன்ன நன்னடை நயந்து நிற்பார் 2717**

[கண்ணுற-நெருங்க; புடை-பக்கம்; இகலி-மாறுபட்டு.]

**எம்வயின் வருக வேந்த னிங்கென விரங்கு நல்லியாழ்**
**வெம்மையின் விழையப் பண்ணி யெஃகுநுண் செவிகள் வீழச்**
**செம்மையிற் கனிந்த காமத் தூதுவிட் டோத முத்தம்**
**வெம்முலை மகளிர் வீழ்பூம் பொதும்பருள் விதும்பி னாரே**

[இரங்குதல்-ஒலித்தல்; வீழ-விரும்ப; ஓதம்-கடல்.]

அப்படி நின்ற அம்மங்கையர், பருத்த மடல் உள்ள வாழைக் கன்றினுடைய துகில் போன்ற சுருண்ட மெல்லிய, வெள்ளைக் குருத்தைக் கிள்ளியெடுத்து, அதிலே அழகு தோன்ற அழகிய மலர்கள் பூத்த காமவல்லிக் கொடியையும், அதன் நடுவே போரிடும் இரண்டு கயல் மீன்களையும் ஓவியமாக, சிறந்த மணிகளிழைத்த பொன் மோதிரம் அணிந்த கைவிரல் நகத்தால் எழுதி, அதைத் தங்கள் மார்பின் மேல் அழகுற அணிந்துகொண்டு, தேவ மகளிரைப் போல் காட்சி தந்தனர். தயிர் கடையும் ஒலியைப் போன்ற குரலுடைய வேங்கை எதிர் வரக் கண்டு மருண்டு, மிக நெருங்கிய மயிருடைய பெண்மானை நெருங்கிப் பாலுண்டு நிற்கும் நல்ல பசுங்கன்றைப் பார்த்த படி நிற்கும், பருத்துத் திரண்ட தங்கள் மார்பின் சுமை யைப் பொறுக்க முடியாத அம்மங்கையர்கள், தங்கள் நடை தளர்ந்து கெட்டு, அன்னத்தின் அழகு நடைக்கு ஏங்கி நிற்பர். அரசே! எம்மை அடைய இங்கே வருக என்று, இன்னிசை யாழை மீட்டிக் கூடல் விரும்பும் தங்கள் இதய வேட்கையை, சீவகனுடைய நுண்செவிகள் விரும்பி ஏற்கப் பாட்டாகப் பாடித் தூதுவிட்டு, கடலில் பிறந்த முத்துக் களை விரும்பிச் சூடும் மார்புடைய அம்மகளிர், அடர்ந்து செறிந்த பூமலர்ச் சோலையிலே கூடுதற்கு விரைந்து சென்றனர்.

**பிடிமரு ணடையி னார்தம் பெருங்கவின் குழையப் புல்லித்**
**தொடைமலர்க் கண்ணி சேர்த்திச் சுரும்புண மலர்ந்த மாலை**
**உடைமது வொழுகச் சூட்டி யுருவத்தார் குழைய வைகிக்**
**கடிமலர் மகளி ரொத்தார் காவலன் களிவண் டொத்தான்**

[குழைய-வாட; தொடை-தொடுத்தல்.]

**இழைந்தவர் நலத்தை யெய்தி யினந்திரி யேறு போலக்**
**குழைந்ததார் நெகிழ்ந்த தானைக் கொற்றவன் பெயர்ந்து போகி**

வழிந்துதேன் வார்ந்து சோரும் வருக்கையி னீழல் சேர்ந்தான்
விழைந்தவக் கடுவ னாங்கோர் மந்தியை விளித்த தன்றே

[இழைந்தவர் - கூடினவருடைய; தானை - ஆடை; வருக்கை-பலாமரம்.]

அளித்திள மந்தி தன்னை யார்வத்தால் விடாது புல்லி
ஒளித்தொரு பொதும்பர்ச் சேர்ந்தாங் கொருசிறை மகிழ்ச்சி யார்ந்து
தளிர்த்தலைப் பொதும்பர் நீங்கித் தம்மின மிரண்டுஞ் சேர்ந்த
களித்தலைக் கூட்டங் காதன் மந்திகண் டிருந்த தன்றே

[பொதும்பர்-மரச்செறிவு; ஆர்ந்து-நிரம்ப; ஒருசிறை-ஒரு பக்கம்.]

பெண் யானைகள் கண்டு மயங்கும் அழகிய நடை உடைய தன் தேவியரின் அழகு தன் நினைவால் இப்படி வாட்டமுறுவதைக் கண்டு அவர் வாட்டத்தைப் போக்க, அவர்களைத் தழுவி, தொடுத்த மலர் நிறைந்த முடிக் கண்ணியை அவர்கள் தலையிலே சூட்டியும், வண்டுகள் மொய்த்துக் கிடக்கும் மலர்மாலையை அவற்றின் தேன் வழிந்து ஒழுக அவர்களுக்கு அணிவித்தும், தன் மார்பில் அணிந்திருந்த மாலை கசங்கும்படி அவர்களோடு சேர்ந்து இருக்கத் தேவியர் வாசப்பூவாக, சீவகன் பூவோடு பொருந்தி இருக்கும் வண்டு போலானான். இவ்வாறாகத் தன்னைக் கூடிய மங்கையர்களின் இன்பநலம் துய்த்தபின் குலைந்த மாலையும் கலைந்த உடையும் உடைய சீவகன், தன் இனம் நீங்கிச் செல்லும் காளையைப்போல அவர்களைவிட்டு விலகிச் சென்று கனிந்த சுளைகளில் இருந்து தேன் வடிந்து ஒழுகும் பலாமரத்தின் நிழலை அடைந்தான். அடைந்தவன் அப்பலாமர நிழலில் களவொழுக்கம் விரும்பிய ஆண்குரங்கு ஒன்று பெண் குரங்கை விரும்பி அழைப்பதைக் கண்டான். ஒரு இள மந்தியை விரும்பி அடைந்து, அதை மகிழ்ச்சியோடு

தழுவி ஒரு மலர்ப்பொழிலை அடைந்து, அங்கே ஒரு மறை விடத்தில் அதோடு இன்பம் நுகர்ந்தபின், அக்குளிர் மலர்ச் சோலையைவிட்டு நீங்கித் தம் கூட்டத்தை அக்கடுவனும் இளமந்தியும் வந்தடைந்தன. கடுவனின் காதல் மந்தி அவ்வின்பக் கூட்டத்தினைக் கண்டிருந்தது.

பரத்தையர்த் தோய்ந்த மார்பம் பத்தினி மகளிர் தீண்டார்
திருத்தகைத் தன்று தெண்ணீ ராடிநீர் வம்மி னென்ன
உரைத்ததென் மனத்தி லில்லை யுயர்வரைத் தேனை யுண்பார்
வருத்துங்காஞ் சிரமும் வேம்பும் வாய்க்கொள்வார் யாவர் சொல்லாய் **2722**

[வம்மின்-வருக; காஞ்சிரம்-எட்டிக்காய்.]

ஈங்கினி யென்னை நோக்கி யெவன்செய்தி யெனக்கு வாணாள்
நீங்கிற்றுச் சிறிது நிற்பிற் காண்டியா னீயு மென்னத்
தூங்கித்தான் றுளங்க மந்தி தொழுத்தையேன் செய்த தென்று
தாங்குபு தழுவிக் கொண்டு தன்னைத்தான் பழித்த தன்றே

[துளங்க-மனம் வருந்த; தொழுத்தையேன்-அடிமை.]

கண்ணினாற் குற்றங் கண்டுங் காதலன் றெளிப்பத் தேறிப்
பெண்மையாற் பழித்த மந்தி பெருமகி ழுவகை செய்வான்
திண்ணிலைப் பலவின் தேங்கொள் பெரும்பழங் கொண்டு கீறிப்
பண்ணுறு சுளைகள் கையாற் பகுத்துணக் கொடுத்த தன்றே **2724**

[தேறி-தெளிந்து; தேம் கொள் - இனிமையைக் கொண்ட; கீறி-பிளந்து.]

எனவே அம்மந்தி தன்னை விரும்பி அழைத்த கடுவனை நோக்கி, 'வேசியர்களோடு கூடி மகிழ்ந்த

மார்பைப் பத்தினிப் பெண்கள் தீண்டமாட்டார்கள், வேசியரோடு முயங்கி அதன் தூய்மை கெட்டிருக்கும் என்ற காரணத்தால். எனவே நீர் தூய்மை கெட்ட உம் மார்பின் மாசு நீங்கக், குளிர்ந்த தண்ணீரிலே குளித்து வருக' என்று கூறியது. அதைக் கேட்ட கடுவன் 'நீ சொன்னதைப்போல ஒரு காரியத்தை நான் மனத்திலும் நினைத்ததில்லை. உயர்ந்த மலையில் விளைந்த கொம்புத் தேனை விரும்பி உண்பவர்கள், கசக்கும் எட்டியையும் வேம்பையும் உண்ண நினைப்பாரோ நீயே கூறுக' என்று மந்தியின் அன்பைப் புகழ்ந்து கூறியது. கடுவன் கூறிய இதைக் கேட்டும் மந்தி மறுமொழி கூறாது இருக்கக் கண்ட கடுவன், 'எனக்கு மறுமொழி கூறாது நீ இப்படி என்னை வெறுப்புடன் நோக்கியவாறு மேலும் நிற்பாயாகில், என் வாழ்நாள் முடிந்து நான் சாகநேரும். அதை நீயும் உன் கண்ணெதிரிலேயே காண்பாய்' என்று மந்தியின் மனம் வருந்தி இளகும்படிக்கூற, அம்மந்தியும் மனமிரங்கி, 'தங்கள் உள்ளம் வருந்தத் தங்கள் அடிமை நான் செய்தது தவறு' என்று கூறிக் கடுவனைத் தழுவிக் கொண்டு தன் அறியாமைக்காக தன்னைத் தானே இகழ்ந்து கொண்டது. கடுவன் செய்த தவற்றைத் தன் கண்ணால் கண்டிருந்தும், தன் காதலன் தெளிவிக்க மயக்கம் தெளிந்து, பெண்மைக்குரிய பேதமையால் தன்னைப் பழித்துக் கொண்ட மந்திக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாக்க விரும்பிய கடுவன், முற்றிக் கனிந்த பெரிய பலாப்பழம் ஒன்றைப் பறித்துத் தன் நகத்தால் அதைக் கீறிப் பிளந்து, நல்ல சுவைமிக்க சுளைகளாகப் பார்த்தெடுத்து தன் கையால் மந்தி உண்டு மகிழக் கொடுத்தது.

**இன்கனி கவரு மந்தி கடுவனோ டிரிய வாட்டி**
**நன்கனி சிலத னுண்ண நச்சுவேன் மன்ன னோக்கி**
**என்பொடு மிடைந்த காம மிழிபொடு வெறுத்து நின்றான்**
**அன்புடை யரிவை கூட்டம் பிறனுழைக் கண்ட தொத்தே**

**[ஆட்டி-அலைத்து; சிலதன்-வேலையாள்.]**

கைப்பழ மிழந்த மந்தி கட்டியங் கார னொத்த
திப்பழந் துரந்து கொண்ட சிலதனு மென்னை யொத்தான்
இப்பழ மின்று போகத் தின்பமே போலு மென்று
மெய்ப்பட வுணர்வு தோன்றி மீட்டிது கூறி னானே 2726

[துரந்து-ஓட்டி; மெய்ப்பட-உண்மையாக; மீட்டு-மறுபடியும்.]

மெலியவர் பெற்ற செல்வம் வேரொடுங் கீழ்ந்து வௌவி
வலியவர் கொண்டு மேலை வரம்பிகந் தரம்பு செய்யும்
கலியது பிறவி கண்டாங் காலத்தா லடங்கி நோற்று
நலிவிலா வுலக மெய்த னல்லதே போலு மென்றான் 2727

[அரம்பு-குறும்பு; கலி-துன்பம்.]

அப்படிக் கொடுத்த கடுவனையும் அதை வாங்க நினைத்த மந்தியையும் அடித்து விரட்டிவிட்டு, அவை விட்டுச் சென்ற பலாப்பழத்தை அத்தோட்டத்தைக் காவல் செய்யும் ஏவலன் எடுத்து உண்ணக் கண்ட கொல்லும் கூர்வேலேந்திய சீவகன், உடலோடு தோன்றி வளரும் காமத்தையும், இழிவைத்தரும் முதுமையையும் வெறுத்தான். தான் தன் மனைவியரைக் கூடி அடைந்த இன்பமும், ஏவலன் பெற்றதைப் போன்று இழிவானதே என்று கருதிய சீவகன் சொல்லுவான்: 'கையிலே கிடைத்த பழத்தைத் தவறவிட்ட இம்மந்தி கட்டியங்காரனைப் போன்றது. அம்மந்தியிடமிருந்து பழத்தை அபகரித் துண்ணும் ஏவலன் என்னைப் போன்றவன். இவன் அப் பழத்தை உண்டு மகிழ்கின்ற இன்பம், நான்என் மனைவி யிடம் துய்த்து மகிழும் இன்பத்தைப் போன்றதே' என்று, தன் உள்ளுணர்வால் உணர்ந்த சீவகன் மேலும் பல கூறத் தொடங்கினான். 'வலிவற்ற மெலிய வர்கள் பெற்ற செல்வத்தை அடியோடு அபகரித்துக் கொண்டு வலியவர்கள் எல்லைமீறிச் செய்யும் குறும்பு களை, இத்துன்பப் பிறவியிலே கண்டோம்! எனவே காலமறிந்து ஐம்பொறி அவாவினையும் அடக்கித் தவம்

புரிந்து, அழிவற்ற பேரின்ப வீட்டை அடைவதே நல்லதாகும்' என்றான்.

**நல்வினை யென்னு நன்பொற் கற்பக மகளி ரென்னும்**
**பல்பழ மணிக்கொம் பீன்று பரிசில்வண் டுண்ணப் பூத்துச்**
**செல்வப்பொற் சிறுவ ரென்னுந் தாமங்க டாழ்ந்து நின்ற**
**தொல்கிப்போம் பாவக் காற்றி னொழிகவிப் புணர்ச்சி**
**யென்றான் 2728**

[பாவக்காற்று-தீவினை; ஒல்கிப்போம்- விழுந்து போகும்.]

**வேட்கைமை யென்னு நாவிற் காமவெந் தேறன் மாந்தி**
**மாட்சியொன் றானு மின்றி மயங்கினேற் கிருளை நீங்கக்**
**காட்டினார் தேவ ராவர் கைவிளக் கதனை யென்று**
**தோட்டியாற் றொடக்கப் பட்ட சொரிமதக் களிற்றின்**
**மீண்டான் 2729**

[வெந்தேறல் - விருப்பமுள்ள கள்ளின் தெளிவு; தோட்டி-அங்குசம்.]

**கைந்நிறை யெஃக மேந்திக் கனமணிக் குழைவில் வீச**
**மைந்நிற மணிவண் டார்ப்ப வார்தளிர் கவரி வீச**
**மெய்ந்நெறி மகிழ்ந்து நின்றான் வேனில்வாய்க் காம**
**னொத்தான்**
**மொய்ந்நிற மாலை வேய்ந்து முருகுலா முடியி னானே 2730**

[எஃகம் - வேல்; வில்-ஒளி; மணிவண்டு - நீலமணி போன்ற வண்டு; முருகு-வாசனை.]

'நல்வினைப் பயன் என்னும் அழகிய கற்பகத்தின் பொன்மணிக் கொடியொன்று, பரிசிலராகிய வண்டுகள் வந்து தேனுண்ணும்படி மலர்ந்து, மங்கையர்களாகிய பல பழங்களைத் தந்து, செல்வங்களாகிய சிறுபிள்ளைகள் என்னும் மாலைகள் தொங்க நிற்கின்றது. இக்கொடியே தீவினை என்னும் காற்று மோதினால் அடியோடு சாய்ந்து அழிந்து போகும். எனவே இழிந்த இத்தகைய காம வேட்கை ஒழிக' என்று எண்ணினான். 'ஆசையென்னும்

  

நாக்கிலே, காம இன்பம் என்னும் கொடிய கள்ளை நிறையப் பருகி, பெருமைக்குரிய செயல்கள் எதையும் செய்யாமல், காம இன்பமாகிய துன்ப இருட்டிலே மயங்கிக் கிடந்த எனக்கு அவ்விருள் போக்கும் ஒளிவிளக்காக உதவிய மந்தியும் கடுவனும் ஏவலனும் எனக்கு நன்னெறி காட்டிய தேவராவார்கள்' என்று எண்ணிய சீவகன், தான் செல்லும் தவறான வழியில் இருந்து அங்குசத்தால் தடுத்து நிறுத்தப்பட்டு வேறு வழியில் செலுத்தப்படும் மதயானையைப்போல, இன்ப வேட்கையில் வைத்த தன் எண்ணத்தை மீட்டுக்கொண்டு, தனியிடம் சென்றான். கைநிறைந்த வேலைப்பிடித்து, அழகிய மணிக்குண்டலங்கள் காதிலே அசைந்து ஒளிவீச, கருநிறமுடைய வண்டுகள் மலரை மொய்த்துப் பாடியபடி இருக்க, சோலைமரங்களின் இளந்தளிர்கள் அசைந்தாடிக் கவரிபோல் வீசத் தனியிடத்தில், இன்ப வேட்கையை வெறுத்து வீட்டின்பத்தில் மனம் வைத்து நின்ற, அழகிய மலர் நிறைந்த மாலை நிறைந்து மணம் வீசும் முடியுடைய சீவகன், வேனிலுக்குரிய காமனைப் போல் தோன்றினான்.

**நடுச்சிகை முத்துத் தாமம் வாணுத னான்று நக்கப்**
**படுத்தனர் பைம்பொற் கட்டில் பாடினர் கீதந் தூபம்**
**எடுத்தன ரெழுந்து தேனா ரெரிமணி வீணை யார்த்த**
**கொடிப்பல பூத்துச் சூழ்ந்த குங்குமக் குன்ற மொத்தான்**

[சிகை-மயிர்முடி; நான்று-தொங்கி; தேன் ஆர்-தேனை ஒத்த; ஆர்த்த-ஒலித்தன.]

**மெள்ளவே புருவங் கோலி விலங்கிக்கண் பிறழ நோக்கி**
**முள்ளெயி றிலங்கச் செவ்வாய் முறுவற்றூ தாதி யாக**
**அள்ளிக் கொண் டுண்ணக் காமங் கனிவித்தார் பனிவிற் றாழ்ந்த**
**வள்ளிதழ் மாலை மார்பன் வச்சிர மனத்த னானான் 2732**

[கோலி-வளைத்து; பிறழ-மாறுபட; எயிறு-பல் வள்ளிதழ்-வளவிய இதழ்.]

**முலைமுகஞ் சுமந்த முத்தத் தொத்தொளிர் மாலை யாரும்**
**மலைமுகந் தனைய மார்பின் மன்னனு மிருந்த போழ்திற்**
**கொலைமுகக் களிற னாற்கு நாழிகை சென்று கூறக்**
**கலைமுக மல்லர் புல்லிக் கமழுநீ ராட்டி னாரே 2733**

[தொத்து-கொத்து; புல்லி-தடவி; கமழுநீர்-மணங் கமழும் நீர்.]

கூந்தல் நடுவில் தலைப்பாளை தொங்கிக்கொண்டிருக்க, பொன்னாலான கட்டிலமைத்துச் சிலர் இன்னிசைப் பண்கள் பாடினர். சிலர் வாசனைப் புகையிட்டு மணம் உண்டாக்கினர். இன்னிசை பொழியும், அழகிய மணிகள் இழைத்த யாழிசை முழங்கி ஒலி செய்ய, மங்கையர் சூழ மஞ்சத்தில் இருந்த சீவகன், பூங்கொடிகள் பல சூழ்ந்த குங்கும மலையைப்போல் தோன்றினான். வில்போன்ற தங்கள் புருவத்தை மெல்ல வளைத்துக் கண்கள் மருண்டு புரளப் பார்த்து, சிவந்த வாயின் கூரிய ஒளிமிகுந்த பற்கள் வெளித்தோன்ற, புன்னகையைத் தூதாக அனுப்பித் தாங்கள் தரும் இன்பத்தைச் சீவகன் அள்ளிப் பருகும்படி மனங்கனிந்து அவன் தேவியர் நிற்கக் கண்டும், முத்து வடமும், அழகிய மலர்மாலைகளும் புரளும் மார்புடைய சீவகன் மனங்குலையாமல் உறுதியோடு நின்றான். மார்பின்மேல் முத்துமாலைகளும் மலர்மாலைகளும் புரள நிற்கும் மங்கையரும், மலையொத்த வலிமை மிக்க மார்புடைய மன்னனும், மஞ்சத்தில் இவ்வாறு வீற்றிருக்கும்போது, கொல்லும் யானையைப் போன்ற வீரமிக்க சீவகனிடம் கணிகள் சென்று நாழிகைப் பொழுதை அறிவிக்கச் சீவகன் நீராடப் புறப்பட்டான். நீராட்டும் கலையில் வல்ல மல்லர் மன்னனை வாச நன்னீரில் நீராட்டினர்.

**வெண்டுகின் மாலை சாந்தம் விழுக்கலம் விதியிற் சேர்த்தி**
**நுண்டுகிற் றிரைகள் சேர்ந்த நூற்றுலா மண்ட பத்துக்**
**கண்டிரன் முத்த மென்றோட் காவிக்கண் மகளிர் போற்றி**
**எண்டிசை மருங்கு மேத்த வினிதினி னேறி னானே 2734**

[சாந்தம்-சந்தனம்; விழுக்கலம்-சிறந்த ஆபரணம்; கண்திரள்-இடம் திரண்ட.]

**நெய்வளங் கனிந்து வாச நிறைந்துவான் வறைக ளார்ந்து**
**குய்வளங் கழுமி வெம்மைத் தீஞ்சுவை குன்ற லின்றி**
**ஐவரு ளொருவ னன்ன அடிசினூன் மடைய னேந்த**
**மைவரை மாலை மார்பன் வான்சுவை யமிர்த**
**முண்டான் 2735**

[நெய்வளம்-நெய்யின் மிகுதி; வாசம்-நறுமணம் வறைகள்-வறுவல்கள்; குய்-தாளிப்பு; கழுமி-நிறைந்து.]

**கைப்பொடி சாந்த மேந்திக் கரகநீர் விதியிற் பூசி**
**மைப்படு மழைக்க ணல்லார் மணிச்செப்பின் வாச நீட்டச்**
**செப்படு பஞ்ச வாசந் திசையெலாங் கமழ வாய்க்கொண்டு**
**ஒப்புடை யுறுவர் கோயில் வணங்குது மெழுக**
**வென்றான் 2736**

[கரகநீர் - கமண்டலத்திலுள்ள நீரால்; பூசி-வாய் துடைத்து; உறுவர்-சிறந்தவர்.]

நீராடியபின் வெண்பட்டுடையையும், வாசமாலைகளையும், சந்தனத்தையும், மற்ற அணிமணிகளையும், முறைப்படி அணிவித்து, நுண்ணிய அழகிய திரைகள் தொங்கி அலங்கரிக்கும் நூற்றுக்கால் மண்டபத்தில், திரண்ட முத்துக்கள் புரளும் மெல்லிய தோள்களும், நீலமலர் போன்ற கண்களும் உடைய மங்கையர் எட்டுத் திசையும் போற்றிப்புகழச் சீவகன் ஆசனத்தில் ஏறி அமர்ந்தான். நெய் நிறையப் பெய்து மணம்வீச, உயர்ந்த பொரிக் கறிகள் தாளிப்புச் சுவையோடும் சூட்டோடும் கூடி இனிமை தர, பஞ்சபாண்டவர்களில் ஒருவனும் சமையல் கலையில் தேர்ந்தவனுமாகிய வீமனைப் போன்ற சிறந்த சமையல்காரன் உண்டாக்கிய உணவைப் படைப்பதற்கு ஏந்தி நிற்க, கரியமலை போன்ற வலிமைமிகு மார்புடைய சீவகன் அச்சிறந்த உணவை விரும்பி

உண்டான். பிறகு வாசனைப் பொடியையும் சந்தனத்தையும் கையிலே வாங்கிக் கமண்டத்திலே இருந்து வார்த்தநீரால் கையும் வாயும் கழுவிக்கொண்ட பிறகு, மை தீட்டிய மழைபோலும் குளிர்ந்த கண்ணுடைய மங்கையர் மாணிக்கச் செப்பிலே வைத்து வெற்றிலையை நீட்ட, திசையெங்கும் வாசம் வீசும் அவ்வெற்றிலைத் தாம்பூலத்தை வாயிலே உட்கொண்டு சீவகன், தன்னைத் தவிர தனக்கு வேறு உவமையில்லாத அருகனைப் பணிவோம்; அவன் கோவிலுக்கு எழுக என்றான்.

## 6. அறிவர் சிறப்பு

ஒருபகல் பூசி னோராண் டொழிவின்றி விடாது நாறும்
பெரியவர் கேண்மை போலும் பெறற்கரும் வாச வெண்ணெய்
அரிவையர் பூசி யாடி யகிற்புகை யாவி யூட்டித்
திருவிழை துகிலும் பூணுந் திறப்படத் தாங்கி னாரே 2737

[ஒழிவு-நீங்குதல்; நாறும்-மணம் வீசும்.]

நற்றவஞ் செய்த வீர ருளவழி நயந்து நாடும்
பொற்றதா மரையி னாளிற் பூஞ்சிகை முத்த மின்னக்
கொற்றவற் றொழுது சேர்ந்தார் கொம்பனார் வாமன் கோயில்
மற்றவன் மகிழ்ந்து புக்கு மணிமுடி துளக்கி னானே 2738

[பொற்ற-பொலிவு பெற்ற; வாமன்-அருகன்.]

ஒருவேளை மேலே பூசிக்கொண்டால் ஓராண்டு வரை விடாது வாசம் வீசிக்கொண்டிருக்கும் பெரியோர்களின் இணைபிரியாத நட்பைப் போன்ற கிடைத்தற்கரிய வாசமுள்ள எண்ணெயைத் தடவி நீராட்டி அகில்புகை வாசங்காட்டி, திருமகளும் கண்டு ஆசைப்படும் உடைகளும் அணிகளும் தாங்கி நின்றனர். நல்ல தவம்புரிந்த வீரர்கள் இருக்கும் இடத்தை விரும்பிச் சென்றடையும்

  

பொற்றாமரைப் பூவில் இருக்கும் திருமகளைப்போல, பூ முடித்த கூந்தலிலே முத்துக்கள் ஒளிவீச மலர்க்கொடி போன்ற அம்மங்கையர் அரசனை வணங்கி நிற்க, சீவகன் அருகப் பெருமான் கோவிலை அடைந்து, மணிமுடி தாழ்த்தி வணங்கி மகிழ்ந்தான்.

வேறு

கடிமலர்ப் பிண்டிக் கடவுள் கமலத்
தடிமலர் சூடி யவருலகில் யாரே
அடிமலர் சூடி யவருலக மேத்த
வடிமலர் தூவ வருகின்றா ரன்றே 2739

[கடி-விளக்கம்; ஏத்த-போற்ற.]

முத்தணிந்த முக்குடைக்கீழ் மூர்த்தி திருவடியைப்
பத்திமையா னாளும் பணிகின்றார் யாரே
பத்திமையா னாளும் பணிவார் பகட்டெருத்தின்
நித்தில வெண்குடைக்கீழ் நீங்காதா ரன்றே 2740

[பத்தி-பக்தி; பகட்டெருத்து-யானையின் பிடரி.]

கருமக் கடல்கடந்த கைவலச் செல்வன்
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் யாரே
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் வான்றோய்
திருமுத் தவிராழிச் செல்வரே யன்றே 2741

[கைவலச் செல்வன்-முத்தியாகிய செல்வத்தை உடையவன்; ஆழி-வட்டம்.]

வேறு

வண்ண மாமலர் மாலை வாய்ந்தன
சுண்ணங் குங்குமந் தூமத் தாற்புனைந்
தண்ணல் சேவடி யருச்சித் தானரோ
விண்ணி லின்பமே விழைந்த வேட்கையான் 2742

[வண்ணம் - நிறம்; சுண்ணம் - வாசனைப்பொடி; தூமம்-அகிற்புகை.]

எப்போதும் வாசம் வீசிக்கொண்டிருக்கும் மலருடைய அசோக மரத்தின் நிழலில் கோயில் கொண்டிருக்கும் இறைவனுடைய அடியவர் உள்ளத் தாமரையில் நடந்த திருவடியை முடிமீது தாங்கியவர் யார் இருக்கிறார்கள்! அப்படி முடிமீது இறைவன் அடிக்கமலத்தைத் தாங்கியவர் அல்லவா உலகம் போற்ற அரசராய் வடித்த மலரைத் தூவ இன்று வருகின்றனர். முத்துப் பந்தலாகத் தொடுத்த முக்குடை நிழலின் கீழ் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருவடியை அன்புடன் எப்போதும் போற்றிப் பணிந்து பயனடைவார் யார்? அப்படிப் போற்றிப் பணிந்து பயன் பெறுவோர் அன்றோ யானையின் பிடரி மேல் தூக்கி நிறுத்திய வெண்கொற்றக் குடைநிழலில் நீங்காது இருந்து வாழும் பேறு பெற்று இருக்கின்றார். இரு வினையாகிய கடலைக் கடந்த, பெருமைக்குரிய, புகழைப் பெற்று வாழும் பிறவித் துன்பத்தைச் சுட்டெரிக்கும் பாதமலரைப் போற்றிப் பணிந்து பயனடைவோர் யார்? பாதமலரைப் போற்றிப் பணிந்து பயனடையும் பேறு பெற்றவர் அல்லவோ, அழகிய முத்துச்சரம் தொங்கும் கொற்றக் குடைக்கீழ் பவனி வருகின்றார். அழகிய வாசமலர் மாலையாலும், மணமிக்க சுண்ணப் பொடியாலும், குங்குமத்தாலும், அகிற்புகையாலும், வீட்டின்பத்தை விரும்பி அதில் மனம் வைத்த சீவகன் தன் தேவியர் காண அருகப் பெருமானைப் போற்றி வணங்கினான்.

## 7. அறவுரை

இலங்கு குங்கும மார்ப னேந்துசீர்
நலங்கொள் சாரணர் நாதன் கோயிலை
வலங்கொண் டாய்மலர்ப் பிண்டி மாநிழற்
கலந்த கன்மிசைக் கண்டு வாழ்த்தினான் 2743

[சாரணர்-சமண முனிவர்; கல்மிசை - பளிங்குக்கல் மேல்.]

உரிமை தன்னொடும் வலங்கொண் டோங்குசீர்த்
திரும கன்பணிந் திருப்பச் செய்தவர்
இருநி லம்மனற் கின்ப மேயெனப்
பெருநி லம்மனன் பெரிதும் வாழ்த்தினான் 2744

[ஓங்குசீர்-வளரும் புகழ்; இருநிலம்-உலகம்.]

தெருள லேன்செய்த தீவி னையெனும்
இருள்வி லங்கநின் றெரியு நீள்சுடர்
அருளு மின்னெனக் கடிக ளென்றனன்
மருள்வி லங்கிய மன்னர் மன்னனே 2745

[தெருளலேன்-தெளியாதேனாகிய யான்; விலங்க-நீங்க; மருள்-மயக்கம்.]

பூசிய குங்குமக் குழம்பு விளங்கும் மார்புடைய சீவகன், அருகப்பெருமான் கோவிலை வலம் வந்து துதித்து, அழகிய மலருடைய அசோக மர நிழலின் கீழே பளிங்குக் கல் ஆசனத்தில் அமர்ந்திருந்த சமண முனிவர் இருவரைக் கண்டு வாழ்த்தினான். தன் தேவியர் புடை சூழ வளமிக்க புகழுடைய சீவகன் சமண முனிவர்களை வாழ்த்தி நின்ற அளவிலே, அவர்கள் மன்னனை நோக்கி, பெருநில ஆட்சி மன்னனுக்கு மிக்க இன்பந்தருவதாக இருக்கிறதா என்று கேட்க, சீவகன், பெருநில ஆட்சியைத் துறந்து தான் துறவறம் புக நினைத்திருப்பதை அவர்களும் உணர்ந்திருப்பது கண்டு மகிழலானான். 'அறியாமையால் நான் செய்த தீவினை என்னும் இருள்நீங்க, தங்களின் அருள் சுடராகிய பேரொளியை நான் அடையும்படி அருள்புரிவீராக' என்று, இவ்வுலக இன்பங்களின் மயக்கம் நீங்கத் துறவறம் புக நினைத்த வேந்தன் வேண்டிக் கொண்டான்.

## வேறு

பாற்கடற் பனிமதி பரவைத் தீங்கதிர்
மேற்பட மிகநனி சொரிவ தொப்பவே

  

நூற்கடன் மாதவ னுனித்த நல்லறம்
கோற்கடன் மன்னனுக் குரைக்கு மென்பவே 2746

[நுனித்த-ஆராய்ந்தறிந்த; கோல்-செங்கோல்.]

வேறு

தேனெய் தோய்ந்தன தீவிய திருமணி யனைய
வானி னுய்ப்பன வரகதி தருவன மதியோர்
ஏனை யாவரு மமுதெனப் பருகுவ புகல்வ
மான மில்லுயர் மணிவண்ண னுவலிய வலித்தான் 2747

[தேனெய்-தேனாகிய நெய்; வான்-சுவர்க்கம்.]

அருமை யின்னெய்தும் யாக்கையும் யாக்கைய தழிவும்
திருமெய் நீங்கிய துன்பமுந் தெளிபொருட் டுணிவும்
குருமை யெய்திய குணநிலை கொடைபெறு பயனும்
பெருமை வீட்டொடும் பேசுவல் கேளிது பெரியோய் 2748

[யாக்கை-மனிதவுடம்பு; குருமை-நிறம்.]

பாற்கடல்மேல் படிந்து ஒளி வெள்ளம் புண்டோடச் செய்யும், குளிர்ந்த ஒளிவீசும் முழு நிலவைப்போல, பல நூல்களைக் கற்றுத் தேர்ந்த கல்விக் கடலாகிய சமண முனிவன் நல்லறங்களை, செங்கோல் சிறக்க அரசாளும் சீவகனுக்கு எடுத்துரைக்கத் தொடங்கினான். தேனாகிய நெய் தோய்ந்ததைப் போன்ற இனிமையையும், சில நாள் மட்டும் சுவர்க்க வாழ்வைத் தருகின்ற அறிவற்றோர் கூறும் அறநெறிகளையும், அடைய முடியாத மாமணியைப் போன்ற பேரின்ப வீட்டை அருளும் அறிவுடையோர் அமுதமென விரும்பிப் பருகும் நல்லறங்களையும் ஒப்பு வமையில்லாத உயர்குணக் குன்றாகிய மணிவண்ணன் என்னும் சாரணன் கூறத் தொடங்கினான். 'செயற்கரிய தவம் செய்து பெறும் மனித உடலையும், அது தோன்றி அடைகின்ற அழிவையும் நல்வினை நீங்கிய உடல் அடைகின்ற துன்பத்தையும் மெய்ப் பொருளை அறியும் அறிவையும். அறிந்த அப்பொருளை அடையும் துணி

வையும், உயர்ந்த ஒழுக்கத்தையும் தானத்தையும் தவத்தையும் பேரின்ப வீட்டையும் பற்றிக் கூறுகிறேன்; பெரியோய், சீவகனே கேட்பாயாக' என்றான்.

## 8. பெறுதற்கருமை

பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுள்
திரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி
அரச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதால்
பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே 2749

[நோன்கழி-பெரிய கழி; சிவணி-பொருந்தி; அகவை-உட்புறம்.]

விண்டு வேய்நர லூன்விளை கானவ ரிடனும்
கொண்டு கூர்ம்பனி குலைத்திடு நிலைக்களக் குறும்பும்
உண்டு நீரென வுரையினு மரியன வொருவி
மண்டு தீம்புனல் வளங்கெழு நாடெய்த லரிதே 2750

[விண்டு-பிளந்து; வேய்-மூங்கில்; கூர்ம்பனி-மிக்க பனி; குறும்பு-சிற்றரசர் வாழுமிடம்; குலைத்தல்-நடுக்குதல்; ஒருவி-கடந்து.]

வில்லின் மாக்கொன்று வெண்ணிணத் தடிவிளிம் படுத்த
பல்லி னார்களும் படுகடற் பரதவர் முதலா
எல்லை நீங்கிய விழிதொழி லிழிகுல மொருவி
நல்ல தொல்குலம் பெறுதலு நரபதி யரிதே 2751

[மா-விலங்கு; தடி-ஊன்; பரதவர் - நெய்தனில மக்கள்.]

'பரந்து விரிந்த வெள்ளலை வீசும் வடகடலில் இட்ட நுகத்தின் துளையிலே, அலைவீசும் தென்கடலில் இட்ட ஒரு பெரிய கழி சென்று சேர்ந்து, அந்நுகத் துளையில் பொருந்தச் சேர்ந்தது என்றும் சொல்லும்படி அமைந்தது அரசே, பல பிறவிகள் கடந்து வரும் அரிய இம்மானிடப்

  

பிறவி. வெப்பத்தால் வெடிக்கும் மூங்கில் ஒலி கேட்கும், ஊன் நிறைந்து வழியும், வேடர் குடிசையையும், நடுக்கும் குளிர் மிகுந்த குறுநில மன்னர்கள் வாழும் இடங்களையும், நீர் உண்டு என்று சொன்னாலுங்கூடத் தண்ணீர் காணக் கிடைக்காத பாலைவனத்தையும் கடந்து, மிக்க நீர்வளம் உடைய மருதநாட்டை அடைதல் அருமையாகும். அதைப்போலவே அரசே, வில்லினால் விலங்குகளைக் கொன்று, அவற்றின் வெள்ளைநிறக் கொழுப்பையும் இரத்தச் சதையையும் கடித்துத் தின்பதால் அவை தோய்ந்த பற்களைஉடைய வேடர், பல பொருள் விளையும் கடலோரப் பகுதிகளில் வாழும் பரதவர் ஆகியோரைப்போன்ற அளவற்ற இழிசெயல்கள் புரியும் கீழ்நில மக்கள் குலத்தில் பிறவாமல் குடிப்புகழ் மிக்க உயர்ந்த குடியில் பிறக்கப் பெறுவது அருமையிலும் அருமையாகும்!'

கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாள்
அருவி போற்றொடர்ந் தறாதன வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையாது
உருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே 2752

[கருவில்-கருப்பத்தில்; படிமை-விதி; பிழையாது-தவறாமல்; உரு-அழகு.]

காம னன்னதோர் கழிவனப் பறிவொடு பெறினும்
நாம நாற்கதி நவைதரு நெறிபல வொருவி
வாம னூனெறி வழுவறத் தழுவின ரொழுகல்
ஏம வெண்குடை யிறைவமற் றியாவது மரிதே

[கழிவனப்பு-மிக்க அழகு; நாமம்-அச்சம்.]

'மழை மேகங்கள் கூடிப் பெய்த நீர் பிறகு ஆறாகப் பெருகி இடையறாது ஓடுவதைப்போல, உயிரைப்பற்றி விடாது தொடர்ந்து வரும் இருவினைப் பயன்கள் என்னும் தீயில் கருவிலேயே தீய்ந்து, ஊனம் ஒன்றும் இல்லாமல் அழகிய உடலைப் பெறுவது மிகவும் அருமையானதாகும்.

மேலும் காமனைப்போன்ற சிறந்த அழகும் அறிவும் பெற்றிருந்தாலும், துன்பந்தரும் தீயவழிகளில் செலுத்தும் தீக்குணங்கள் பலவற்றிலும் இருந்து நீங்கி, அருகப்பெருமான் அருளிய அறவுபதேசங்களின்படி நடந்தொழுகுதல், மக்களுக்கு இன்பமுண்டாக்கும் வெண்கொற்றக்குடை உடைய வேந்தனே, மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் அரியதாகும்!'

## 9. நிலையாமை

இன்ன தன்மையி னருமையி னெய்திய பொழுதே
பொன்னும் வெள்ளியும் புணர்ந்தென வயிற்றகம் பொருந்தி
மின்னு மொக்குளு மெனநனி வீயினும் வீயும்
பின்னை வெண்ணெயிற் றிரண்டபின் பிழைக்கவும் பெறுமே

*[வீயும்-அழியும்; பிழைக்கவும்-அழியவும்.]*

வெண்ணெ யாயது வீங்குபு கூன்புற யாமை
வண்ண மெய்தலும் வழுக்கவும் பெறுமது வழுக்கா
தொண்மை வாண்மதிீயுருவொடு திருவெனத் தோன்றிக்
கண்ண னாரழக் கவிழினுங் கவிழுமற் றறிநீ 2755

*[வீங்குபு-பெருத்து; கூன்புறம் - வளைந்த முதுகு; வண்ணம்-வடிவம்; வழுக்கல்-அழிதல்.]*

அழித லின்றியங் கருநிதி யிரவலர்க் கார்த்தி
முழுதும் பேர்பெறு மெல்லையுண் முரியினு முரியும்
வழுவில் பொய்கையுண் மலரென வளர்ந்துமை யாடிக்
கெழீஇயி னாரொடுங் கிளையழக் கெடுதலுங் கெடுமே

*[ஆர்த்தி-நிறையக் கொடுத்து; பேர்-புகழ்; மையாடி-கல்வி கற்று; கெழீஇயினார்-நண்பர்; கிளை-சுற்றம்.]*

'இவ்வளவு அருமையானதாக அமைகின்ற மக்கள் பிறவி குறித்த ஆயுள்வரை பிழைத்திருப்பது அருமையானதாகும்! பொன்னும் வெள்ளியும் கூடியதைப்போல

சுக்கிலமும் சுரோணிதமும் கருவிலே கலந்து பிறவி உருவாகும் போதே, மின்னி மறையும் மின்னலையும், தோன்றி மறையும் நீர்க்குமிழியையும்போல அழிந்தாலும் அழியும். இல்லையெனில் வெண்ணெய்போல், திரண்டு வளரும் பருவத்தில் கெட்டாலும் கெட்டுப் போகக்கூடும். அல்லாது வெண்ணெய்போலத் திரண்டு வளரும் உயிர்ப் பிண்டம் வளைந்த முதுகுடைய ஆமையைப் போன்ற உருவத்தை அடையும்போது அழிந்தாலும் அழியும்! அப்படியும் அழியாமல் அழகிய நிலவைப்போல முழுப் பொலிவும் உருவமும் பெற்றுப் பிறந்த பிறகு, கண்போல அதைக் காப்பாற்றும் உற்றாரும் பெற்றோரும் அழுது புலம்ப வீழ்ந்தாலும் வீழ்ந்துபடும் என்பதை அறிவாயாக! ஒருகால் மன்னவனே, அப்பருவத்திலும் வீழாமல் அவ்வுயிர் வளருமானால், தேடிய செல்வத்தை எல்லாம் இரப்பார்க்குக் கொடுத்துப் பெரும் புகழ் பெற்று வாழும் போது இறந்தாலும் இறக்கும். அல்லது பொய்கையில் பூத்த புதுமலர்போல வளர்ந்து எழுத்தோலை பிடித்து வரும் பருவத்தில் நெருங்கிய உறவினர்கள் வருந்தி அழக் கெட்டாலும் கெடும்.'

**கெடுத லவ்வழி யில்லெனிற் கேள்விகள் துறைபோய்**
**வடிகொள் கண்ணியர் மனங்குழைந் தநங்கனென் றிரங்கக்**
**கொடையுங் கோலமுங் குழகுந்தம் மழகுங்கண் டேத்த**
**விடையிற் செல்வுழி விளியினும் விளியுமற் றறிநீ 2757**

[குழகு-இளமை; விளியும்-இறக்கும்.]

**எரிபொன் மேகலை யிலங்கரிச் சிலம்பொடு சிலம்பும்**
**அரிபொற் கிண்கிணி யணியிழை யரிவையர்ப் புணர்ந்து**
**தெரிவில் போகத்துக் கூற்றுவன் செகுத்திடச் சிதைந்து**
**முரியும் பல்சன முகம்புடைத் தகங்குழைந் தழவே 2758**

[அரி-பரல்; போகத்து-புணர்ச்சியில்.]

இவ்வழிகளில் உயிர்ப்பிறவி அழிந்துபடவில்லை என்றால், நூல்களைக் கற்றுத் தேர்ந்து, மாவடு போன்ற

விழியுடைய மங்கையர்கள், மனம் உருகி, இவன் காமனோ என்று மயங்கி, கொடையையும் இளமையை யும் அழகையும் கண்டு வாழ்த்தக் காளைபோல வளரும் வாலிபப் பருவத்திலே இறந்தாலும் இறக்க நேரும். அல்லது ஒளிவீசும் பொன்னாலாகிய மேகலையும் அழகிய மணிச் சிலம்பும் ஒலிக்கும் மணிகளுடைய பொன்னாலாக்கிய கிண்கிணிச் சதங்கையும் அழகிய அணிமணிகளும் உடைய மங்கையரோடு கூடி, வேறு எதைப் பற்றியும் கவலை யில்லாமல் வாழ்ந்து வரும் காலத்தில் கூற்றுவன் வந்து கொண்டு போக, பலரும் முகத்தில் அறைந்து கொண்டு உள்ளம் உருகி அழும்படிப்போனாலும் போகும்!'

**கோதை மங்கையர் குவிமுலைத் தடத்திடைக் குளித்துக்**
**காதன் மக்களைக் கண்டுவந் தினிதினிற் கழிப்பப்**
**பேது செய்பிணிப் பெரும்புலி பாய்ந்திடப் பிணமாம்**
**ஓத மாக்கட லுடைகலத் தவருற்ற துறவே 2759**

[தடம்-பரப்பு; பேது-மயக்கம்; உடைகலத்தவர்-உடைந்த கப்பலிலுள்ளார்.]

**காமம் பைப்பயக் கழியத்தங் கடைப்பிடி சுருங்கி**
**ஊமர் போலத்த முரையவிங் துறுப்பினி லுரையாத்**
**தூய்மை யில்குளந் தூம்புவிட் டாம்பொரு ளுணர்த்தி**
**ஈம மேறுத லொருதலை யிகலமர் கடந்தோய் 2760**

[பைப்பய-மெல்ல மெல்ல; தூம்பு-வாயில்; ஈமம்-சுடலை.]

**தேங்கொள் பூங்கண்ணித் திருமுடித் திலகவெண் குடையோய்**
**ஈங்கி தன்றியு மிமையவ ரமையலர்க் கடந்த**
**தாங்கு மாவண்கைச் சக்கர மிக்குயர் பிறரும்**
**யாங்க ணாரவ ரூரொடு பேரெமக் குரையாய் 2761**

[தேம் கொள்-இனிமை கொண்ட; திலகம்-உயர்வு.]

'மலர்மாலை அணிந்த மங்கையர்களின் குவிந்த மார்பிடை மூழ்கி, அன்பு மக்களைப் பெற்றெடுத்து

ஆனந்தமாக வாழ்ந்து வரும்போது, துன்பந்தரும் நோயாகிய புலி வந்து பாய, குளிர்ந்த பெருங்கடல் உடைப்பெடுத்துக் கொண்டதைப்போல உறவினர்கள் வருந்தி அழப் பிணமானாலும் ஆகக் கூடும். தம் இன்பவேட்கை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய, குறிக் கோள் ஏதும் இல்லாமல், ஊமைகளைப் போல, வாயால் ஏதும் சொல்ல முடியாமல், குறிப்பால் உணர்த்தி, தூய்மை யற்ற இவ்வுடலாகிய குளத்தின் வடிகால்களான ஒன்பது துவாரங்களும் நிலைகுலைந்து சோர, தன்னுடைய முடிவைக் கூடியிருப்போர்க்குச் சொல்லி ஈமத்தீயிலே விழுந்து முடிதல், பகைவர் பலரைப் போரில் வென்றவனே எல்லாரும் அடைகின்ற இறுதி முடிவாகும். எனவே தேன் வழியும் மலர்க்கண்ணி அணிந்த அழகிய முடியும், உலகம் போற்ற உயர்ந்த வெண்கொற்றக் குடையும் உடையவனே, இங்கே எடுத்துக் கூறிய உலக நிலையாமை யாவர்க்கும் பொருந்தும். வானுலகத்தவர் பகையையும் அங்கு சென்று வென்று, வெற்றிப் புகழைத் தமதாக்கிக் கொண்டு, பெருங்கொடையாளியாய், மற்ற அரசர் களுக்கும் மேம்பட்ட உயர்ந்த சக்ரவர்த்திகளாய் வாழ்ந்த மன்னர்கள் எல்லாம் இப்போது எங்கிருக்கிறார்கள்? அவர்களின் ஊரையும் பேரையும் எமக்குச் சொல்லு வாயாக!' (அப்படி இருப்பவர் யாரும் இல்லை. எல்லாரும் முடிவில் இறந்துதான் போனார்கள். எனவே நீ இறவாப் புகழ் தரும் வீட்டின்பத்தை நினைப்பாயாக என்பது கருத்து.)

## 10. நரககதித் துன்பம்

### வேறு

வெவ்வினை செய்யு மாந்த ருயிரெனு நிலத்து வித்தி
அவ்வினை விளையு ளுண்ணு மவ்விடத் தவர்க டுன்பம்
இவ்வென வுரைத்து மென்று நினைப்பினும் பனிக்கு முள்ளம்
செவ்விதிற் சிறிது கூறக் கேண்மதி செல்வ வேந்தே 2762

  

[வினைவிளையுள்-வினையின் பயனை; இவ்வென-இவையென்று; பனிக்கும்-நடுங்கும்.]

ஊழ்வினை துரப்ப வோடி யொன்றுமூழ்த் தத்தி னுள்ளே
சூழ்குலைப் பெண்ணை நெற்றித் தொடுத்ததீங் கனிக ளூழ்த்து
வீழ்வன போல வீழ்ந்து வெருவரத் தக்க துன்பத்
தாழ்துய ருழப்ப வூணு மருநவை நஞ்சு கண்டாய் 2763

[நெற்றி-உச்சி; வெருவரத்தக்க-அஞ்சத்தக்க; உழப்ப-அனுபவிப்பர்.]

இட்டிவேல் குந்தங் கூர்வா ளெரிநுனைச் சுரிகை கூட
நட்டவை நிரைத்த பூமி நவையுடை நரகர் பொங்கி
உட்பட வெழுந்து வீழ்ந்தாங் கூன்றகர்த் திட்ட வண்ணம்
எட்டெலாத் திசையுஞ் சிந்திக் கிடப்பவா லடக்க மில்லார்

[சுரிகை-பத்திரமென்னும் ஒருவகை வாள்; நட்டவை-நடப்பட்டவை.]

'தீவினைக்குரிய காரியங்களைச் செய்யும் மக்கள் உயிர்ப் பிறவியாகிய நிலத்திலே அத்தீவினையை விதைத்து, அத்தீவினைப் பயனால் விளையும் துன்பமாகிய நரகத்தில் கிடந்து படும் துன்பத்தைக் கூறுவோம் என்று நினைத்தால்கூட உள்ளம் நடுங்கும். என்றாலும் அதைப் பற்றிச் செல்வச் சிறப்புடைய வேந்தனே, சிறிது கூறுகிறேன் கேட்பாயாக. தீவினை வந்து தூண்ட அதன் பயனை எல்லாம் சிறுபொழுதில் அடைய விரைந்து பனைமரத்தின் உச்சியில் பழுத்த பனம்பழங்கள் எல்லாம் பெருங் காற்றால் அலைக்கழிக்கப்பட்டுச் சிதறித் தரையில் விழுவதைப்போல, கொடுமை மிகும் நரகத்தில் விழுந்து துன்பப்படுவார்கள். அவர்கள் உண்ணும் உணவும் அவ்விடத்தில் துன்பந்தரும் நஞ்சு ஆகும்! ஐம்பொறிகளையும் அடக்கி ஆளாமல் தீவினை புரிந்த நரகர், ஈட்டியும், வேலும், குந்தமும், கூர்வாளும் எரியும் நெருப்புச் சுரிகையும் ஆகியவை நட்டுவைத்த இடத்தில், அவை தம்முடலில் அழுந்தும்படி வீழ்ந்து

தங்கள் உடல் தசைகள் எட்டுத் திசையும் சிதறிவிழ, நரகத்தில் கிடந்து மிகவும் துன்பப்படுவர்.'

வெந்தடி தின்ற வெந்நோய் வேகத்தான் மீட்டு மாலைப்
பைந்தொடி மகளி ராடும் பந்தென வெழுந்து பொங்கி
வந்துடைந் துருகி வீழ்ந்து மாழ்குபு கிடப்பர் கண்டாய்
கந்தடு வெகுளி வேகக் கடாமுகக் களிற்று வேந்தே 2765

[வெம்மை-விருப்பம்; மாழ்குபு-மயங்கி; கந்து-கட்டுத் தறி; அடுதல்-வருத்துதல்.]

வயிரமுண் ணிரைத்து நீண்ட வார்சினை யிலவ மேற்றிச்
செயிரிற்றீ மடுப்பர் கீழாற் சென்னுனைக் கழுவி லேற்றி
மயிருக்கொன் றாக வாங்கி யகைத்தகைத் திடுவர் மன்னா
உயிரைப்பே துறுத்து மாந்த ருயிரைப்பே துறுக்கு மாறே

[வார்சினை-நீண்ட கிளையையுடைய; கீழால்-கீழே; செல்நுனை - உடம்பிலே செல்லும் நுனியை யுடைய; பேதுறுத்தும்-வருத்தும்; அகைத்து-அறுத்து.]

துடிக்குரற் குரல பேழ்வாய்த் தொடர்ப்பிணி யுறுத்த செந்நாய்
மடுத்திட வைர வூசி வாளெயி றழுந்தக் கௌவிப்
புடைத்திட வலறி யாற்றார் பொன்றினும் பொன்றல் செல்லார்
உடுப்பினம் வேட்டஞ் செய்தா ருழப்பவாற் றுன்ப மாதோ 2767

[துடிக்குரற் குரல-உடுக்கையின் ஓசை போன்ற குரலையுடைய; பொன்றல்-இறத்தல்.]

'கட்டுத்தறியை முறித்துக்கொண்டு செல்லும் வலிவு மிக்க மதயானைப்படை உடைய வேந்தனே, விரும்பி ஊன்தின்னும் தீமையைச் செய்தவர்கள் அத்தீவினையின் கொடுமையாலே, பசும்பொன் வளையல் அணிந்த மகளிர்

எடுத்து விளையாடும் பந்தைப்போல, மேலெழுந்து பின் மீண்டும் அத் துன்பத் தீயிலேயே வந்து விழுந்து, உடல் உருகி, உள்ளம் உடைந்து கிடப்பர். 'அரசே, பிற உயிர்களுக்குத் துன்பம்செய்த மக்களின் உயிர் படும் துன்பத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக! பிற உயிர்களைக் கொன்றவர்களின் உடலில், வைரமுள் நிறைத்து, நீண்ட கிளைகள் உடைய இலவமரத்திலே ஏற்றிக் கீழே நெருப்பைப் போட்டு எரிப்பர். அத்தோடு உடலைக் கிழித்துச் செல்லும் கூர் முனை உடைய கழுவிலே ஏற்றி, அவ்வுயிர் கொன்ற உயிரின் உடல் மயிர் ஒவ்வொன்றுக்கும் ஒரு அங்கம் என்று அறுத்தெறிவர். உடும்புக் கூட்டத்தை வேட்டை ஆடிய தீவினையைச் செய்தவர்கள், உடுக்கையின் ஒலிபோலக் குரைக்கும், பெரிய வாயுடைய, சங்கிலியால் கட்டப் பட்ட வேட்டை நாய்களைக் கொண்டு வந்து கடிக்க விட, வாள்போலும் கூருடைய அவற்றின் பற்கள் வைர ஊசிபோல உடலிலே தைக்க, அவை கடித்துக் குதற, அதைப் பொறுக்க மாட்டாமல், வாய்விட்டலறி, உடல் கெட்டாலும் உயிர் கெட்டழியாமல், துன்ப நரகத்தில் துடிப்பார்கள்.

**வாளைமீன் றடிக டின்றார் வருகென வுருக வெந்த**
**வாளத்தைக் கொடிற்றி னேந்திப் பகுத்துவாய் புகுத்த லாற்றார்**
**ஊளைக்கொண் டோடு கின்றா ருள்ளடி யூசி பாயத்**
**தாளொற்றித் தப்பி வீழ்ந்தார் தறிவலை மானிற் பட்டார்**

[தடி-மாமிசம்; கொடிற்றின்-குறடு என்னும் கருவியால்; பகுத்து-பிளந்து; ஒற்றி-ஒட்டி; தறிவலை முளையிலே கட்டிய வலை.]

**காதலாள் கரிந்து நையக் கடியவே கனைந்து கன்றி**
**ஏதிலான் றார நம்பி யெளிதென விறந்த பாவத்**
**தாதுலை யுருக வெந்த வொள்ளழற் செப்புப் பாவை**
**ஆதகா தென்னப் புல்லி யலறுமால் யானை வேந்தே 2769**

[கரிந்து-மனம் கருகி; கடிய-பிறர் தகாதென விலக்க; கன்றி-அடிப்பட்டு.]

**சிலையினான் மாக்கள் கொன்று செழுங்கடல் வேட்ட மாடி**
**வலையினான் மீன்கள் வாரி வாழுயிர்க் கூற்ற மான**
**கொலைநரைக் கும்பி தன்னுட் கொந்தழ லழுத்தி யிட்டு**
**நலிகுவர் நாளு நாளு நரகரை நாம வேலோய் 2770**

[மாக்கள்-விலங்குகள்; கும்பி-நரகம்.]

'அரசே! வாளைமீன் மாமிசத்தைத் தின்றவர்களை, வருக என்று அழைத்து, அவர்கள் வாயைப் பிளந்து உருக்கிய செம்புப் பாளத்தைக் குறட்டிலே எடுத்து வாயிலே திணிப்பார்கள். அதைப் பொறுக்கமாட்டாமல் அலறிக் கொண்டு ஓடும் அவர்கள் உள்ளங்கால்களில் ஊசி பாய்ந்து நிலத்தோடு ஒட்டிக்கொள்ள, மேலும் ஓடமுடியாமல் செயலற்று வீழ்வார்கள். அப்படி வீழ்ந்தவர்கள் வலையில் சிக்கிய மான்போல் துன்பத்தால் துடிப்பார்கள். அன்புடைய தன் மனைவி துன்பத்தால் வருந்தி நிற்கையில், அடுத்தவன் மனைவியை அடைந்தின்புறுவது நலம் என்று விரும்பிப் பலரும் பழித்துப்பேசவும் அப்பாவத்தில் அழுந்திக் கிடந்து இறந்த தீவினை உடையவர்கள், உலைக் களத்துப் பெருநெருப்பிலே வெந்து தணலாக இருக்கும் செப்புப் பாவையைத் தழுவி, கண்டவர்கள் அய்யோ இது கொடுமை என்று கூறும்படித் துன்பத்தில் துடிப்பார்கள். கண்டவர் பயந்து நடுங்கும் கூர்வேலேந்திய மன்னவனே, வில்லினால் விலங்குகளைக் கொன்றும், வளமிக்க கடலில் உள்ள மீன்களை வலையினால் வாரிச் சாகடித்தும், உயிர்க்குலத்து எமனாக வாழ்ந்த கொலைகாரர்களை, நரகத்தில், பெருநெருப்பிலே தள்ளித் தினந்தோறும் அவர்களைச் சுட்டு வதைப்பார்கள்.

**பாரகங் கழுநர் போலப் பரூஉத்தடி பலரு மேந்தி**
**வீரநோய் வெகுளி தோற்றி விழுப்பற வதுக்கி யிட்டுக்**
**காரகற் பொரிப்பர் கண்ணுட் சுரிகையை நடுவர் நெஞ்சிற்**
**பாரக்கூர்ந் தறிக ணட்டுப் பனையெனப் பிளப்பர் மாதோ**

[கழுநர்-கழுவுபவர்; பரூஉத்தடி-பருத்த இறைச்சி; விழுப்பு-கழிதல்; காரகல்-கரிய இருப்புச் சட்டியில்; கூர்ந்தறிகள்-கூர்மையான முளைகள்.]

நாப்புடை பெயர்த்த லாற்றார் நயந்துநீர் வேட்டு நோக்கிப்
பூப்புடை யணிந்த பொய்கை புக்குநீ ருண்ண லுற்றாற்
சீப்படு குழம்ப தாகிச் செல்லலுற் றந்தோ வென்னக்
கூப்பிடு குரலாய் நிற்பர் குறைப்பனைக் குழாங்க
ளொத்தே 2772

[வேட்டு-விரும்பி; செல்லல்-துன்பம்.]

நறுமலர்த் தாம நான்று நானநீர் பிலிற்றும் பந்தர்க்
குறுகலுங் குடநெய் பெய்த கொந்தழல் போன்று பொங்கிப்
பறையல கனைய வெண்பற் பசுங்கழற் குண்டு பைங்கண்
உறுதுயர் நரகர் தம்மை யுருகச்சுட் டிடுங்க ளன்றே 2773

[பிலிற்றும்-துளிக்கும்; பறையலகு-பலுவை, பலகறை; கழல்-கழற்சிக்காய்; குண்டு பைங்கண்-ஆழமான பசிய கண்.]

'உலகத்தோர் செய்த தீவினைகளை எல்லாம் கழுவித் தூய்மைப்படுத்த வந்தவர்களைப்போல, அங்குள்ள பலரும் பெரிய தடிகளைக் கொண்டு, துன்பந்தரும் கோபம் கொப்பளிக்கத் தீவினை செய்தோரை அடித்து நொறுக்குவர். பெரிய இருப்புச் சட்டியிலே இட்டு வாட்டுவர். கண்ணைக் கூர்வாளைக் கொண்டு குத்துவர். நெஞ்சிலே பெரிய கூர்முனைகளை அடித்துப் பனைமரத்தைப் பிளப்பதுபோல் அவருடலைப் பிளப்பர். தாகம் வாட்ட நாக்கை அசைக்கவும் முடியாமல், நீருண்ண விரும்பி, பூ நிறைந்து மலர்ந்த பொய்கையை நோக்கி, அதை அடைந்து நீரைப் பருகத் தொடங்கும்போது, அது சீழ், இரத்தக் குழம்பாக மாறக் கண்டு, ஐயோ என்று அலறியபடி, மடல் சாய்ந்த பனைமரம்போல் மனம் உடைந்து நிற்பர். நல்ல மணமிகும் மாலைகள் தொங்க, வாசநீர் தெளிக்கும் பந்தலை வேட்கையோடு அவர்கள் அடைந்த

வுடன் அப்பந்தல், குடநெய் கொட்டி வளர்த்த தீயைப் போலப் பொங்கியெழுந்து, பலகறை போன்ற பெரிய பற்களையும், பசிய கழற்சிக்காய்போல உருண்டு திரண்ட கண்களையும் உடைய தீவினை செய்தோர் கருகிச் சாகுமாறு அவர்களைச் சுட்டெரிக்கும்!'

**வெந்துருக் குற்ற செம்பின் விதலைவயு ளழுத்தி யிட்டும்**
**எந்திர வூச லேற்றி யெரியுண மடுத்துஞ் செக்கிற்**
**சுந்தெழுந் தரைத்தும் போகச் சுண்ணமா நுணுக்கி யிட்டும்**
**மந்தரத் தனைய துன்பம் வைகலு முழப்ப மாதோ 2774**

[எந்திரவூசல் - எந்திரத்தால் இயங்கும் ஊசல்; மடுத்தும்-சேர்த்தியும்; சுந்து-நீர்; வைகலும்-நாள் தோறும்.]

**உழும்பகட் டெருது போல வுரனறு தாள ராகிக்**
**கொழுங்களி யளற்றுள் வீழ்ந்துங் கொழும்புகை மடுக்கப் பட்டும்**
**அழுந்துமிந் நரகந் தன்னுட் செல்பவர் யார்கொ லென்னின்**
**எழுந்துவண் டிமிரும் பைந்தா ரிறைவநீ கேண்மோ வென்றான் 2775**

[உரன்-வன்மை; இமிரும் - ஒலிக்கும்; பைந்தார்-வாடாதமாலை.]

**கொல்வதே கன்றி நின்றார் கொடியவர் கடிய நீரார்**
**இல்லையே யிம்மை யல்லா லும்மையு முயிரு மென்பார்**
**அல்லதுந் தவமு மில்லை தானமு மிழவென் பாரும்**
**செல்பவந் நரகந் தன்னுட் டீவினைத் தேர்க ளூர்ந்தே 2776**

[கன்றி - தழும்பி; உம்மை - மறுபிறப்பு; இழவு-இழத்தல்.]

வெந்து உருகியோடும் செம்புக் குழம்பிலே போட்டு அழுத்தியும், விசைப்பொறியுள்ள எந்திர ஊஞ்சலிலே ஏற்றிக் கீழே நெருப்பைப் போட்டுக் கொளுத்தியும், நீர் வற்றச் செக்கிலே போட்டு அரைத்தும், உடல் பொடியாக அம்மியிலே வைத்து நசுக்கியும், மந்திரமலை போல

நீங்காத துன்பத்தில் தீவினை செய்தவர்களை நாள் தோறும் வருந்தச் செய்வார்கள். உழுகின்ற பெரிய எருதைப்போல வலிவற்ற காலுடையவர்களாய், துன்பச் சேற்றிலே விழுந்தும், அதிலிருந்தும் எழுதற்குப் புகை யூட்டப் பட்டுங்கூட, துன்பந்தரும் அந்நரகத்திலேயே அழுந்திச் சாகின்றவர்கள் யார் என்றால், வண்டுகள் மொய்த்துப்பாடும் மலர்மாலை அணிந்த மன்னவனே சொல்கிறேன் கேட்பாயாக!

'கொல்லுவதே தொழிலாகக் கொண்டிருப்போரும், கொடிய உள்ளம் உடையவர்களும், தீத்தொழில் புரி வோரும், இப்பிறவியே அல்லாமல் இனிவரும் பிறவியோ, உயிர்த் தொடர்போ இல்லை என்று வாதம் புரிவோர் களும், அத்தோடில்லாமல், தானம் புரிவதும், தவம் செய்வதும் இழிவென்று பேசுவோர்களும், தீவினை என்னும் தேர் மேலேறி முன் சொன்ன கொடுமை மிகும் நரகத்துக்குப் போவார்கள்!'

## 11. விலங்குகதித் துன்பம்

### வேறு

**எரிநீர வேநரக மந்நரகத் துன்பத்**
**தொருநீர வேவிலங்கு தாமுடைய துன்பம்**
**பெருநீர வாட்டடங்கட் பெண்ணணங்கு பூந்தார்**
**அருநீர வேந்தடர்த்த வச்சணங்கு வேலோய் 2777**

[எரிநீர - எரிகின்ற தன்மையையுடைய; அணங்கு - வருத்தும்.]

**கழைபொதிர்ப்பத் தேன்சொரிந்து காய்த்திளைக ளார்த்தும்**
**மழைதவழுங் குன்றில் வயமா முழங்க**
**உழையளிய தாமுறூஉந் துன்பங்க ணின்மேல்**
**விழைவயரா வேந்துறூஉந் துன்பமே கண்டாய் 2778**

[பொதிர்ப்ப-துளைக்க; வயமா-புலி; அளிய உழை-இரங்கத் தக்கனவாகிய உழைமான்கள்.]

நிணம்பிலிற்றும் வாயர் நெருப்பிமைக்குங் கண்ணர்
குணனஞ்சர் கூற்றனைய கோணாய் மடுப்பக்
கணமஞ்ஞை யஞ்சிக் கழுத்தொளிப்ப கண்டாய்
மணமல்கு பூந்தார் மழைதழீஇய கையாய் 2779

[கோள்-கொலை; கணமஞ்ஞை-கூட்டமாகிய மயில்; மழை தழீஇய-மழையின் தன்மையைத் தழுவிய.]

'நீண்ட ஒளிபொருந்திய அழகிய கண்களை உடைய மங்கையரை வருத்தும் மலர்மாலையும், அடக்க முடியாத தன்மை உடைய, பகைமன்னரை அடக்கிய வலிவும், வெற்றிவேலும் உடைய மன்னவனே! நரகம் எப்போதும் எரிந்துகொண்டே இருக்கும் தன்மை உடையது. விலங்குகள் படும் துன்பமும், நரகத்தில் பல்லுயிரும் படும் துன்பத்தை ஒத்ததே! தேனடைகளை மூங்கில் கழிகள் கிழிக்க, அத்தேன் வழிந்து, முற்றிக் காய்ந்த தினைக்கதிர்களிலே வழிந்து கிடக்கிற, மழை மேகம் தவழ்கின்ற குன்றில், புலிகள் இருந்து முழக்கமிட அம்முழக்கத்தைக்கேட்டுப் பயந்து இரங்கத்தக்க மான்கள் அடையும் துன்பம், உன்னைப் பகைத்துக் கொண்ட வேந்தர்கள் படுந்துன்பம் போன்றதாகும். ஊன் வழியும் வாயும், நெருப்பென விழிக்கும் கண்களும், நெஞ்சிலே கொல்லும் வஞ்சமும் உடையவர், எமனைப்போலக் கொல்லும் தன்மையுடைய நாய்களை ஏவிவிட, அதைக் கண்டு பயந்து தன் கழுத்தைச் சிறகுக்குள்ளே மறைத்துக் கொள்ளும், மயில் கூட்டங்கள் என்பதை, மணம் நிறைந்த மலர் மாலை அணிந்த, முகில்போல் கொடை கொடுக்கும் கையுடைய கொற்றவனே நீ அறிவாய்.'

மண்ணார மஞ்ச ளுரிஞ்சி மலர்குட்டிக்
கண்ணார் மறியறுத்துக் கையா லுதிரந்தூய்
உண்ணீரே தேவீ ருவந்தென்ப திவ்வுலகம்
நண்ணார்க் கடந்தோய் நமனுலகி னான்மடங்கே 2780

[மண்-கழுவுதல்; உரிஞ்சி-பூசி; கண் ஆர்-கண்ணுக்கினிய; மறி-ஆட்டுக்குட்டி.]

மங்கை மனாவனைய மென்சூன் மடவுடும்பு
செங்கண் வரிவரால் செந்நீ ரிளவாளை
வெங்கருனை புல்லுதற்கு வேறுவே றாக்குறைப்ப
அங்காந் தழுகின்ற தார்கண்ணே நோக்குமே 2781

[வரி-கோடுகள்; வெங்கருனை-வெப்பமுள்ள பொரிக்கறி; அங்காந்து-வாய் திறந்து.]

கடலரண மாகாது காடரண மாகா
குடலரண மாகாது குன்றரண மாகா
அடுதுயர மூர்ந்தலைப்ப வாங்கரணங் காணாப்
படுதுயரத் தாலே பதைத்தளிய வேமே 2782

[அரணம்-பாதுகாவல்; படுதல்-உண்டாதல்; வேம்-வேகும்.]

முழுப்பதகர் தாடுரந்து முட்டாற்றிற் குத்தி
உழப்பெருது பொன்றப் புடைத்துழுது விட்டாற்
கழித்துண்ணுங் காக்கை கடிவோரு மின்றிப்
புழுச்சொரியத் துன்பம் பொறுக்கலா பொன்றும் 2783

[தாள்-முயற்சி; கடிவோர்-ஓட்டுவோர்; பொன்றும்-இறக்கும்.]

'நீரிலே குளிப்பாட்டி, மஞ்சள் பூசி, மலர்மாலை அணிவித்து, தங்களுடைய கண்களைப்போல் பாதுகாத்து வளர்த்த ஆட்டுக்குட்டியைத் தங்கள் கையாலேயே அறுத்து, அதன் இரத்தத்தைத் தூவி, 'தேவர்களே உங்களுக்கிட்ட பலி இது ஏற்றுக்கொள்க,' என்றுரைக்கும் இவ்வுலகம், பகைவர் பலரை வென்ற பலமுடையவனே, எமனுலகைவிட நான்கு மடங்கு கொடியதாகும். மகளிர் அணியும் அக்குமணி போன்ற சூலுடைய இளம் உடும்பையும், சிவந்த கண்ணுடையவரால் மீனையும், நல்ல நீரிலே வாழும் வாளை மீனையும் சுவையான கறியாகச் சமைப்பதற்கு இல்லாள் துண்டு துண்டாக அறுக்கும்போது, உயிர்

விடும் அவை வாய்விட்டு அழுவதால் வரும் தீவினை யாரிடம் போய்ச்சேரும்?

'கடல் காவல் ஆகாமல், காடு காவல் ஆகாமல், தம் குடல் காவல் ஆகாமல், மலையும் காவல் ஆகாமல், தாம் செய்த தீவினை வந்து வருத்த, நற்கதிக்குப் பாதுகாவலான நல்வினையைச் செய்யாத, இரங்கத்தக்க, விலங்கினங்கள், துன்பத்தால் துடி துடித்துச் சாகும். தீவினையே ஓயாது புரிவோர் உழுகின்ற எருதை அடித்து விரட்டியும், முள்ளுடைய தார்க்கோலால் குத்தியும், சாகும்படி அடித்தும் வேலைவாங்கியபின் கவனியாது விட்டுவிட, அவ்வெருதுகளின் உடலில் உண்டான புண்ணைக் கொத்தித் தின்னவரும் காகத்தை ஓட்டுவாரும் இன்றி, அவற்றின் புண்களில் புழு நிறைந்து வருத்த, அவ்வெருதுகள் துன்பம் பொறுக்காது சாகும்.'

**நிரம்பாத நீர்யாற் றிடுமணலு ளாழ்ந்து**
**பெரும்பார வாடவர்போற் பெய்பண்டந் தாங்கி**
**மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாங்கி**
**உரங்கெட் டுறுப்பழுகிப் புல்லுண்ணா பொன்றும் 2784**

[ஆழ்ந்து-ஆழ்தலால்; மருங்கு-பக்கம்; ஒற்றி-சார்ந்து.]

**போழ்மதிபோற் கூரிரும்பிற் பூநுதல்கள் போழ்ந்திடவும்**
**காழ்நுதியிற் குத்துண்டுங் கார்மழைபோ னின்றதிர்ந்தும்**
**வீழ்பிடிகள் சிந்தித்தும் வெந்நோய்தம் முள்சுடவெந்**
**தாழ்த்த கந்திளக யானை அலம்வருமே 2785**

[போழ்மதி-பிறை; கூரிரும்பு-அங்குசம்; காழ்நுதி-குத்துக்கோலின் நுனி; கந்து இளக-கட்டுத்தறி முறியும்படி; அலம் வரும்-மனம் சுழலும்.]

**எரிவளைப்ப வெம்புகையுண் டின்னுயிர்விட் டேகும்**
**அரிவளைப்பக் குஞ்சரமு மாலிபோ னீராம்**
**வரிவளைக்கும் வெண்மயிர்க்கு முத்திற்கு மாந்தர்**
**திருவளைத்த மார்ப செகுத்திடுவர் தேங்கார் 2786**

[அரி - சிங்கம்; ஆலி - மழைத்துளி; நீர்ஆம் - நீரில் விளையும்; தேங்கார்-வருந்தாராய்.]

'நீர் நிரம்ப ஓடாது வற்றிய ஆற்றிலே இழுத்துச் செல்கையில் பெருமணலில் வண்டி அமிழ்ந்து போக, மிக்க வலிவுடைய ஆடவரைப்போல, தான் சுமந்து வந்த பண்டத்தைத் தாங்கி, நிலத்திலே விழுந்து, மூக்கைத் தரையிலே ஊன்றி, அடிமுழந்தாள் இட்டு, மூச்சு வாங்க, வலியெல்லாம் அடங்கி, உடலுறுப்பெல்லாம் கெட்டுப் போகப் புல்லுண்ணாமல் அவ்வெருதுகள் சாகும்! பிறை நிலவைப் போன்ற கூருடைய அங்குசத்தால், பூப்போலும் புள்ளிகளுடைய மத்தகங்கள் பிளக்கப்பட்டும், குத்தூசியால் குத்தப்பட்டும், கருமுகிலைப்போலக் கண்ணீர் விட்டுக் கதறும் களிறுகள், காமநோய் உள்ளத்தை வருத்தத் துடித்துத் தம் அன்புப் பிடிகளை நினைத்து வருந்தியும், ஆழநட்ட கட்டுத் தறிகளும் இளகும்படி அவற்றைச் சுற்றி வந்து கொண்டிருக்கும். மேலும் திரு விளங்கும் மார்புடைய மன்னவனே, சில விலங்குகள் நெருப்பாலே சூழப்பட்டு, நெருப்புப் புகையாலே தாக்குண்டு, உயிரிழந்து சாகும்! சிங்கத்தால் சூழப்பட்டு யானைகள் தம் உயிரிழந்து சாகும்! அம்மட்டோ! அழகிய வளையல்களுக்காகச் சங்கையும், வெள்ளை மயிருக்காகக் கவரிமானையும், முத்திற்காகச் சிப்பியையும் மனிதர்கள் கூசாமல் கொன்றிடுவர்.'

**வேள்விவாய்க் கண்படுத்தும் வெவ்வினைசெ யாடவர்கை**
**வாளின்வாய்க் கண்படுத்தும் வாரணத்தி னீருரிபோற்**
**கோளிமிழ்ப்பு நீள்வலைவாய்க் கண்படுத்து மின்னணமே**
**நாளுலப்பித் திட்டார் நமரலா தாரெல்லாம் 2787**

[கண்படுத்தும்-கொன்றும்; இமிழ்ப்பு-கட்டு; உலைப்பு-அழிவு.]

**கொல்வாருங் கூட்டுட் செறிப்பாரு மாடவர்கள்**
**அல்லாரு நாய்வேட்ட மாடாத மாத்திரையே**

அல்லாத பைங்கிளியும் பூவையு மாதியா
எல்லாங் கிளைபிரித்திட் டேமுறுநோய் செய்பவே 2788

[பூவை-நாகண வாய்ப்புள்; ஏம்-துன்பம்.]

மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துணாப் பாவிகளும்
அல்குல் விலைபகரு மாய்தொடிய ராதியார்
வில்பொருதோண் மன்னா விலங்காய்ப் பிறப்பவே 2789

[மல்லல்-வளத்தையுடைய;பல்லவர் பலர்; தொடியர்-பரத்தையர்.]

'வேள்வி என்னும் பெயராலே உயிர்களைக் கொன்றும், கொலைத் தொழில் புரியும் ஆடவர் கை வாளாலே கொன்றும், கொலைக்கென்றே நெய்யப்பட்ட வலைகளைக் கொண்டு உயிர்களைக் கொன்றும், நம்முடைய சமயத்தைச் சேராத பலரும்; யானையின் பசுந்தோலைப் போர்த்திக் கொண்டு அழிவதைப்போல தங்கள் வாழ்நாளைத் தாங்களாகவே கெடுத்துக் கொண் டனர். இவ்வாறாக ஆடவர்கள் மட்டிலுமே அல்லாமல் பெண்களும், கொலைத் தொழில் புரிபவராகவே இருக் கின்றனர். நாய் வேட்டையாட, வெளி வந்து அவர்கள், உயிர்கள் கொல்வதில்லை என்றாலும், கறி சமைப்பதற் காக உயிர்க் கொலை புரிகின்றனர். மேலும் தாங்கள் ஆசையோடு வளர்க்கும் கிளியையும், நாகணவாய்ப் புள்ளையும் அவற்றின் கூட்டத்தில் இருந்து பிரித்து, கூட்டில் அடைத்து வைக்கும் தீமையைச் செய்து தீவினையை வளர்த்துக் கொள்கின்றனர். வளமிக்க மாமலை போன்ற பெரியோரைப் பழித்துப் பேசுகின்ற பல தீயவர்களே அல்லாமல், பிறர்க்குக் கொடுத்துதவி வாழாத பாவிகளும், அல்குல்விற்று வாழும் விலைமகளிரும் போன்ற வர்கள், வில்லோடு விளையாடும் தோளுடைய மன்னவனே, விலங்காகப் பிறப்பார்கள்.'

## 12. மக்கட்கதித் துன்பம்

தம்மை நிழனோக்கித் தாங்கார் மகிழ்தூங்கிச்
செம்மை மலர்மார்ப மட்டித் திளையார்தோள்
கொம்மைக் குழகாடுங் கோல வரைமார்பர்
வெம்மை மிகுதுன்பம் வேந்தே சிலகேளாய் **2790**

*[மட்டித்து-சந்தனத்தைப் பூசி; இளையார்-மகளிருடைய.]*

ஈருட் டடிமூடி யீண்டு மலப்பண்டப்
போர்வை புழுமொய்ப்பப் பொல்லாக் குடர்சூடிச்
சார்தற் கரிதாகித் தானின் றறாவள்ளல்
நீர்வாய்ச் சுரம்போந்தார் தம்மை நினையாரோ **2791**

*[ஈருள்-ஈரல்; தடி-மாமிசம்; அறா-நீங்காத; அள்ளல்-சேறு.]*

அஞ்சொன் மடவார்த மார்வக் களிபொங்க
நெஞ்சத் தயிலேற்று நீள்வெங் கழுவூர்ந்தும்
குஞ்சிக் களியானைக் கோட்டா லுழப்பட்டும்
துஞ்சிற் றுலகந்தோ துன்பக் கடலுள்ளே **2792**

*[களி-மயக்கம்; அயில்-வேல்; குஞ்சி-தலைமயிர்.]*

பண்ணார் களிறேபோற் பாயோங் குயர்நாவாய்
கண்ணார் கடன்மண்டிக் காற்றிற் கவிழுங்கால்
மண்ணார் மணிப்பூணோய் மக்க ளுறுந்துன்பம்
நண்ணா நரகத்தி னான்கா மடியன்றே **2793**

*[நாவாய்-கப்பல்; மடி-மடங்கு.]*

'தம் உருவத்தைக் கண்ணாடியில் கண்டு, தங்களுடைய அழகின் பெருமையிலே மூழ்கி, சிவந்த தங்கள் மார்பிலே வாசனைக் கலவைகளைப் பூசிக்கொண்டு, இளமை அழகு மிக்க மங்கையர் தோள் தழுவி மகிழ்ந்து இன்புறும் அழகிய மலைபோலும் மார்புடையவரின் கொடுமைமிகு துன்பங்கள் சிலவற்றைச் சொல்லுகிறேன் கேட்பாயாக!

'ஈரலை வைத்து மூடிய, ஓயாது கழிவுப் பொருள்கள் வடியும், உடலாகிய போர்வையைப் புழுக்கள் மொய்க்க, நெருங்க முடியாத நாற்றக் குடலோடுகூடி, நீர் நிறைந்த, சகதியாகிய வழியிலே வந்தவர்கள் தூய்மையைப் பற்றிநினைக்க மாட்டார்களோ? அழகு மொழி பேசும் மங்கையர் மேல்வைத்த ஆசையினால் நெஞ்சிலே வேலை யேற்றும், கூருடைய கழுவிலேறியும், மத்தகத்தில் முடியுடைய யானைத் தந்தத்தால் அழுத்திக் கொல்லப் பட்டும், துன்பக் கடலில் மனிதகுலம் அழுந்திச் சாகிறது. அலங்கரிக்கப்பட்ட யானையைப்போல கடலிலே மிதக்கும் பாய் விரிக்கப்பட்ட மரக்கலம், காற்றால் அலைக்கப்பட்டுக் கடலில் மூழ்குங்கால், அழகிய மணி ஆரம் அணிந்த மன்னவனே! அதிலுள்ள மக்கள் படும் துன்பம், கொடுமை மிக்க நரகத் துன்பத்தைவிட நான்கு மடங்கு பெரிதாகும்.'

**செந்தீப் புகையுண்டுஞ் சேற்றுள் நிலைநின்றும்**
**அந்தோ வெனமாற்றா லாற்றப் புடையுண்டும்**
**தந்தீ கெனாமுன்கை வீக்கத் தளர்வுற்றும்**
**நொந்தார் குடிச்செல்வர் நோன்மை நுகம்பூண்டார் 2794**

[மாற்றால்-வளாரால்; வீக்க-கட்ட; நுகம்-பாரம்.]

**கண்சூன் றிடப்பட்டுங் கால்கை களைந்தாங்கே**
**அண்பல் லிறக்கையா லாற்றத் தகர்பெற்றும்**
**நுண்சாந் தரைப்பார்போ னோவ முழங்கையாற்**
**புண்செய் திடப்பட்டும் புன்க ணுழப்பவே 2795**

[சூன்றிடப்பட்டும்-தோண்டப்பட்டும்; அண்பல்-மேற் பல்; இற-விழ; புன்கண்-துன்பம்.]

**மாலைக் குடைமன்னர் வைய மகற்றுவான்**
**காலைக் கதிதுன்பங் காவல் பெருந்துன்பம்**
**சோலை மயிலன்னார் தோள்சேர் விலராயின்**
**வேலைக் கடலேபோற் துன்பம் விளையுமே 2796**

[காவல்-கைப்பற்றிய நாட்டைக் காத்தல்; கதி-வழி; வேலை-கரை.]

'நெருப்பால் சுடப்பட்டும், சகதியிலே நிறுத்தி வைக்கப்பட்டும், ஐயோ என்றலற வளாரால் அடிக்கப் பட்டும், அரசனுக்குரிய வரிப்பொருளைத் தந்திடுக என்று முன்கை நோகக் கட்டுண்டும், அவதிப்படுகின்ற நின் பகை மன்னர் நாட்டிலிருக்கும் மக்கள், பொறுமையாகிய நுகத் தடியிலே மாட்டிக்கொண்டவர்கள் ஆவார்கள். மேலும் கண்கள் பிடுங்கப்பட்டும், கைகால்கள் துண்டிக்கப்பட்டும், பல்லுடைய அறையப்பட்டும், நன்றாகச் சாந்தை அரைப்பவர்போல் முழங்கை தேய்க்கப் புண்ணாக்கப் பட்டும், அம்மக்கள் துன்பத்தால் துடிப்பர். அல்லாமலும், வெற்றிமாலையும், வெண்கொற்றக் குடையும் உடைய மன்னர், நாட்டை விரிவாக்கப் பிறநாட்டின்மீது படை யெடுத்துப் போகையிலும் துன்பம்; வென்று நாட்டை ஆளும்போதும் துன்பம். அதுமட்டுமா சோலைமயில் போன்ற சுந்தரிகளின் தோள் தழுவி இன்பந் துய்க்க வில்லையெனில், வருந்துன்பம் கடல் போல வற்றாது பெருகும் துன்பமாகும்!'

**ஊன்சே ருடம்பென்னு மோங்கன் மரச்சோலை**
**தான்சேர் பிணியென்னுஞ் செந்தீக் கொடிதங்கிக்**
**கான்சேர் கவினென்னுங் காமர் மலர்வாடத்**
**தேன்சேர் மலர்மார்ப தீத்திட் டிறக்குமே 2797**

[ஓங்கல்-ஓங்குதல்; கான்-மணம்; காமர்-விருப்பம்; தீத் திட்டு-சுட்டு; இறக்கும்-தான் நீங்கும்.]

**கொட்டுப் பிடிபோலுங் கூனுங் குறளாமை**
**விட்டு நடப்பனபோற் சிந்தும் விளைந்துசீ**
**அட்டு முயவுநோ யல்லாப் பிறநோயும்**
**பட்டா ருறுதுன்பம் பன்னிச் சொலலாமோ 2798**

[கொட்டுப்பிடி - களைக்கொட்டின் பிடி; விட்டு- கைகளை வீசி; அட்டும்-சொரியும்; உயவு-வருத் தம்; பன்னி-ஆராய்ந்து.]

## வேறு

வேட்டன பெறாமை துன்பம் விழைநரைப் பிரிதல் துன்பம்
மோட்டெழி லிளமை நீங்க மூப்புவந் தடைதல் துன்பம்
ஏட்டெழுத் தறித லின்றி யெள்ளற்பா டுள்ளிட் டெல்லாம்
சூட்டணிந் திலங்கும் வேலோய் துன்பமே மாந்தர்க்
கென்றான் 2799

[விழைநரை-தம்மை விரும்பினவரை; மோடு-பெருமை; எள்ளற்பாடு-இகழப்படுதல்; சூட்டு-இறைச்சி.]

'ஊன் பொதிந்த உடல் என்னும் உயர்ந்த மலர்ச் சோலையிலே, பிணியென்னும் தீ நீங்காது தங்கியிருந்து, மணமிக்க அழகு என்னும் ஆசைமலர் வாட, மலர்ச் சோலை தீயத் தானும் அழிந்துபோகும். களைக்கொத்தி யின் கைப்பிடி போன்ற கூனுடையவரும், குட்டையர் களும், ஆமை கைவீசி நடப்பதைப்போல நடக்கும் சிந்தரும், சீ ஒழுகும் தொழு நோயும் பிறநோயும் வந்து வாட்டப் படும்பாட்டை வாய்விட்டுச் சொல்ல முடியுமோ? முடிக்கண்ணி அணிந்த, வேலுடைய மன்னவனே; விரும்பியதை அடைய முடியாதபோது மனிதர்க்குத் துன்பம். பெருமை தரும் இளமை நீங்கி முதுமைப் பருவம் வந்தடைகிறபோது துன்பம். ஏட்டிலிருக்கும் எழுத்தை வாசித்தறிய முடியாமல் பிறரால் இகழப்படுவதில் இருந்து இறுதி வரை மனிதர்க்கு எல்லாம் துன்பமே!'

## 13. தேவகதித் துன்பம்

திருவிற்போற் குலாய தேந்தார்த் தேவர்தந் தன்மை செப்பிற்
கருவத்துச் சென்று தோன்றார் கானிலந் தோய்தல்
செல்லார்
உருவமே லெழுத லாகா வொளியுமிழ்ந் திலங்கு மேனி
பருதியி னியன்ற தொக்கும் பன்மலர்க் கண்ணி வாடா

[திருவில் - இந்திர வில்; செப்பின்-சொல்லினால்! கருவத்து-கருவில்.]

அங்கையும் அடியு நோக்கிற் றாமரை யலர்ந்த தொக்கும்
பங்கய மனைய செங்கண் பகுவொளிப் பவழஞ் செவ்வாய்
செங்கதிர் முறுவன் முத்தின் தெளிநகை திகழுஞ்
செய்யாள்
வெங்கடை மழைக்க ணோக்கி வெய்துறத் திரண்ட
வன்றே 2801

[பகுவொளி - பேரொளி; நகை - ஒளி; வெய்துற- துன்பம் அடைய.]

தாணெடுங் குவளைக் கண்ணித் தளையவிழ் கோதை
மாலை
வாண்முடி வைர வில்லும் வார்குழை சுடரு மார்பிற்
பூணிடை நிலவு மேனி மின்னொடு பொலிந்த தேவர்
ஊணுடை யமிர்தம் வேட்டா லுண்பது மனத்தி னாலே

[தளை அவிழ்-முறுக்கு அவிழ்கின்ற; வாள்முடி-ஒளி யையுடைய கிரீடம்; வேட்டல்-விரும்புதல்.]

'அழகுமிக்க வானவில் போல விளங்கும் தேன் நிறைந்த, மலர்மாலை அணிந்த தேவர்களின் தன்மை எப்படிப்பட்டதென்றால், அவர்கள் மீண்டும் பிறவி எடுத்து வரமாட்டார்கள். அவர்கள் பாதம் மண்ணில் படியாது. அவர்கள் உருவமோ ஏட்டில் எழுதமுடியாத அழகுடைய தாக, ஒளி பொருந்தியதாக, சூரியனைப்போலச் சுடர் விடுவதாக இருக்கும். அவர்கள் அணிந்திருக்கும் பல மலர்களால் தொடுத்த மாலை வாடாது. அவர்களுடைய தேவியரின் அழகிய கைகளையும், திருவடிகளையும் பார்த் தால் அழகிய தாமரை மலர்ந்ததைப்போல இருக்கும். அவரின் சிவந்த கண்கள் செந்தாமரை மலர்போல் தோன்றும். சிவந்த வாய் ஒளியுடையபவளத்தைப் போல் காட்சி தரும். அவர்களின் மென்முறுவல் சிரிப்பில் முத்துக்கள் சிந்தும் ஒளி திகழும். திருமகளும் அவர்களைக் கண்டு பொறாமைப்படும் அழகுடையது அவர்கள் மேனி வனப்பு. நீண்ட தாளுடைய குவளை மலர்களால் தொடுத்த கண்ணியையும், இதழ் விரித்த மலர் நிறைந்த

மாலையையும், தலையில் சூடிய மணிமுடியில் வைர ஒளி வீசும் கதிரையும், காதுக்குழையில் ஒளிவீசும் சுடரையும், மார்பில் அணிந்த மணியில் நிலவையும், உடல் அழகில் மின்னலையும், கொண்டு அழகுற விளங்கும் தேவர்கள், உண்ணத்தக்க அமுதத்தைக் கூட, விரும்பினால் அதையும் அவர்கள் மனத்தாலேயே உண்டு மகிழ்வர்.

**சிதரரி யொழுகி யோடிச் செவியுறப் போழ்ந்து நீண்ட**
**மதரரி மழைக்க ணம்பா வாங்குவிற் புருவ மாகத்**
**துதைமணிக் கலாப மின்னந் தொன்மலர்க் காம னம்பு**
**புதைமலர் மார்பத் தெய்யப் பூவணை மயங்கி வீழ்வார்**

[சிதர்-சிதரின; அரி-செவ்வரி; மதர்-மதர்த்த; துதை-நெருங்கிய.]

**பூத்ததை கொம்பு போன்று பொன்னிழை சுடரு மேனி**
**ஏத்தருங் கொடிய னாரை யிருநடு வாகப் புல்லிக்**
**காய்த்தியிட் டுள்ளம் வெம்பிக் கடைந்திடு கின்ற காமம்**
**நீத்துநீர்க் கடலை நீந்தும் புணையென விடுத்தல் செல்லார்**

[பூததை-பூக்கள் செறிந்த; காய்த்தியிட்டு-சுட்டு; புணை-தெப்பம்.]

**பொங்கல்வெம் முலைக ளென்னும் போதொடு பொருது பூந்தார்**
**அங்கலந் தொடையன் மாலை கிழிந்தழ கழிய வைகிக்**
**கொங்கலர் கோதை நல்லார் குரைகட லமிர்த மாகத்**
**தங்கலர் பருகி யாரார் தாழ்ந்துகண் ணிமைத்தல் செல்லார் 2805**

[கொங்கு அலர்-மணம் பரவிய; ஆரார்-தெவிட்டாராய்; குரை கடல்-ஒலிக்கும் கடல்.]

'செவ்வரி படர்ந்த, நீண்ட கண்களை ஊடுருவிச் செல்லும், மகிழ்வால் சிலிர்க்கும் குளிர்ந்த நோக்குடைய கண்கள் அம்பாகவும், வளைந்த புருவம் வில்லாகவும், காமனுடைய புகழ்மிக்க அம்புகள் புகுந்த மார்பிலே சென்று தைக்க, அழகு மங்கையர் கூந்தல் குலைய

அவரோடு தேவர் பஞ்சணையில் வீழ்வர். பூக்கள் நிறைந்து மலர்ந்த பூங்கொடி போன்ற, பொன்னணிகள் நிறைந்த மேனியுடைய, காமன் அம்பைப்போல் கண்ணம்பு பாய்ச்சும் அழகு மங்கையரை, இடை இரண்டு துண்டாகும் படித் தழுவுவர். தழுவியும் தீராது உள்ளத்தைக் காமத்தீ வருத்த, அத்துன்பக் கடலைக் கடக்க உதவும் தோணி, மங்கையரோடு கூடி மகிழும் இன்பமே என்று, அவர்களை விட்டு நீங்காது இருப்பர். பெரிதும், அழகியதுமாகிய மங்கையர் மார்பென்னும் தாமரை மொக்குகளோடு மோதி, அணிமணி புனைந்த தம் மார்பில் அணிந்த மலர் மாலை சிதறி உதிர அவர்களோடு கூடி மகிழ்வர். தேன் நிறைந்த மலர்மாலை அணிந்த அத்தேவ மகளிரைப் பாற் கடலில் கிடைத்த அமுதமெனக் கருதி, அவர்கள் இன்ப நலத்தை இடைவிடாது பருகியும் திருப்தி அடையாத வராய், அவர்களைப் பிரியவும் மனம் இல்லாதவராய், அவர்களையே உற்று நோக்கிக் கண்கள் இமைப்பதும் மறந்தார்.'

**கருவியின் னிசைக ளார்ப்பக் கற்பக மரத்தி னீழற்**
**பொருகய லனைய கண்ணும் புருவமு மரவஞ் செய்ய**
**அரவமே கலைக ளம்பொற் கிண்கிணி சிலம்பொ டார்ப்பத்**
**திருவனா ராடல் கண்டுந் திருவொடு**
**திளைத்து மானார் 2806**

[அரவம்-ஒலி; ஆனார்-அமையாதவராய்.]

**பனிமுகின் முளைத்த நான்கு பசுங்கதிர்த் திங்க ளொப்பக்**
**குனிமருப் புழுது மேகங் குஞ்சரங் குனிந்து குத்த**
**இனிதினி னிலங்கு பொற்றோ டேற்றுமின் குழைகள்**
**பொங்கத்**
**துனிவிலர் களிற்றோ டாடித் தொழுதகக்**
**கழிப்பர் வேந்தே 2807**

[குனிதல் - வளைதல்; துனிவிலர் - வெறுப்பில்லாத வராய்.]

**கடிகைவா ளார மின்னக் கற்பகக் காவு கண்டும்**
**தொடிகவி னறாத மென்றோள் தேவியர் சூழ வாமன்**
**அடிகையிற் றொழுது பூத்தூ யஞ்சலி செய்து வீடே**
**முடிகவிப் பிறவி வேண்டே முனைவவென்**
**றிரப்ப வன்றே 2808**

[கடிகை-தோள் வளை; தொடி-வளை; தூய்-தூவி; வீடேமுடிக - வீட்டுலகே கிட்டுக; இரத்தல் - வேண்டுதல்.]

'இன்னிசைக் கருவிகள் பண்ணிசை முழங்க, கற்பக மரத்தின் நிழலின்கீழ், காதோடு மோதும் நீண்ட கண்களும் புருவமும் மனத்தைக் கலக்க, ஒலிசெய்யும் மேகலையும், பொன்னாலான கிண்கிணிச் சிலம்பும் முழங்க, திருமகள் போலும் அழகுடைய தேவமகளிரின் ஆடலைக் கண்டும், அழகு விளையாட்டுகளில் ஈடுபட்டும் அமைதி அடையாதவராய் வெண்முகிலிடையே தோன்றிய ஒளிவீசும் நான்கு பிறை நிலவுகளைப் போன்ற, வளைந்த தந்தக் கொம்புகளால் வெள்ளை யானை தாழ்ந்து முகிலைக் குத்திக் கிழிக்கும்படி, அழகிய பொன் தோட்டுடன் ஒளிமிக்க காதுக் குழைகள்மோத யானை யோடு பிறர் கண்டின்புறும்படி அரசே, அவர் விளையாடி மகிழ்வர். தோள் வளையும் மணியாரமும் மின்ன, கற்பகமர நிழலில் இருந்து இன்பம் நுகர்ந்தாலும் வளை யணிந்த அழகுநலம் மாறாத, மெல்லிய தோளுடைய மங்கையர் புடைசூழச் சென்று அருகன் திருவடியைத் தொழுது வணங்கி, நறுமணமலர் தூவி வழிபட்டு, எமக்குத் தேவராய்ப் பிறக்கும் இப்பிறவி வேண்டாம்! பேரின்ப வீடே அருள்க என்று வேண்டி நிற்பர்.'

**மலங்குவித் தாவி வாட்டி வாய்நிறை யமிர்தம் பெய்த**
**இலங்குபொற் கலச மன்ன வெரிமணி முலைகள் பாயக்**
**கலந்தனர் சென்ற பின்னாட் கதிர்கழன்**
**றிருந்த வெய்யோன்**
**புலம்புபோற் புலம்பித் தேவர் பொற்புகுத்**
**திருப்ப வன்றே 2809**

  

[கழன்று-நீங்கி; புலம்பு-வருத்தம்; பொற்பு-பொலிவு.]

**எல்லைமூ வைந்து நாள்க ளுளவென விமைக்குங் கண்ணும்**
**நல்லெழின் மாலை வாடு நஞ்சுடை யமிர்துண் டாரிற்**
**பல்பகற் றுய்த்த வின்பம் பழுதெனக் கவல்ப கண்டாய்**
**பில்கித்தே னொழுகும் பைந்தார்ப் பெருநில**
**வேந்தர் வேந்தே 2810**

[துய்த்த - அனுபவித்த; கவல்ப - கவலையடைவர்; பில்கும்-துளிர்க்கும்.]

**தேவரே தாமு மாகித் தேவராற் றொழிக்கப் பட்டும்**
**ஏவல்செய் திறைஞ்சிக் கேட்டும் அணிகமாப்**
**பணிகள் செய்தும்**
**நோவது பெரிதுந் துன்ப நோயினுட் பிறத்தல் துன்பம்**
**யாவதுந் துன்ப மன்னா யாக்கைகொண்**
**டவர்கட் கென்றான் 2811**

[தொழிக்கப்பட்டும் - கோபிக்கப்பட்டும்; மாப்பணி கள்-பெரிய ஆபரணங்கள்; யாக்கை-உடல்.]

'அறிவை மயக்கி மையல் ஊட்டி உயிரை வருத்தும், வாய்வரை அமுதம் பொங்கி வழியும், பொற்கலசம் போன்ற அழகுமணி புனைந்த மார்புடைய மங்கையரோடு, கூடி மகிழ்ந்து சிலநாள் இருந்தபின், ஒளியிழந்து தவிக்கும் ஞாயிற்றின் துன்பத்தைப்போலத் தேவரும் மனம் வருந்திப் பொலிவிழந்து நிற்பர். இப்படி வருந்தி நிற்கும் அவர் உயிர் போக, இன்னும் பதினைந்து நாட்கள்தான் இருக்கின்றன என்னும் போது அவர்களின் இமையாத கண்ணும் இமைக்கும்; அவர்கள் சூடிய அழகிய மாலை வாடும்; நஞ்சோடு கலந்த அமுதத்தை உண்டவர்களைப் போல, அவர்கள் அதுகாறும் பல நாளாய் அநுபவித்த இன்பம் எல்லாம் தேன் நிறைந்து வழியும் புதுமலர் மாலை யணிந்த மன்னர் மன்னவனே, இழிவுடையது என்றெண்ணி வருந்துவர். தாங்கள் தேவராக இருந்தும், பிற தேவர்களால் சபிக்கப்பட்டும், அவர் இட்ட பணியை அவர்க்குக்

  

கீழ்ப்படிந்து செய்தும், அவர்களுக்கு அணிமணிகள் செய்து தந்தும் வருந்துவது பெருந்துன்பம்! அல்லாமலும் துன்பம் மிகும் மக்கள் பிறவியிலும், விலங்குப் பிறவியிலும் வந்து தோன்றுதல் மிகப்பெரிய துன்பம். ஆகவே அரசே, எந்த உடம்பெடுத்தாலும் பிறவி, பெரும் துன்பம் உடையதே என்பதை அறிவாயாக' என்றான்.

## 14. நற்காட்சி

### வேறு

கொங்கு விம்மு குளிர்பிண்டி குழவிஞாயிற் றெழி லேய்ப்பச்
சிங்கஞ் சுமந்த மணியணைமேற் றேவ ரேத்திச் சிறப்பயர
எங்கு முலக மிருணீங்க விருந்த வெந்தை பெருமானார்
தங்கு செந்தா மரையடியென் றலைய
வேயென் றலையவே 2812

*[பிண்டி-அசோகு; சிறப்பயர-சிறப்புச் செய்ய.]*

இலங்கு செம்பொ னெயின்மூன்று மெரிபொன்
முத்தக் குடைமூன்றும்
வலங்கொண் டலர்தூஉ யடியேத்தும் வைய மூன்றும்
படைமூன்றும்
கலங்கா துயர்ந்த வதிசயங்கண் மூன்றுங் காமர்
நூன்மூன்றும்
நலங்கொ டேம்பாற் குணக்கடலு முடையார் நம்மை
யுடையாரே 2813

*[எயில்-மதில்; எரிபொன் - விளங்கும்பொன்; அலர்-மலர்.]*

மன்ற னாறு மணிமுடிமேன் மலிந்த சூளா மணிபோலும்
வென்றோர் பெருமா னறவாழி வேந்தன் விரிபூந்
தாமரைமேற்
சென்ற திருவா ரடியேத்தித் தெளியும் பொருள்க
ளோரைந்தும்
அன்றி யாறு மொன்பானு மாகு மென்பா ரறவோரே 2814

*[சூளாமணி-முடி மணி; அறவாழி-தரும சக்கரம்.]*

 



'மணம் வீசும் குளிர்ந்த அசோகமர நிழலின்கீழ், இள ஞாயிற்றின் பேரொளியைப்போல, சிங்கப்பதுமைகள் சுமக்கும், மாணிக்கமணி அணையின்மேல், தேவர்கள் போற்றிப் புகழ்பாட, உலகில் நிறைந்திருக்கும் துன்ப இருள் எல்லாம் நீங்கி இன்ப ஒளிவீச வீற்றிருந்தருளும், அருகப்பெருமானின் தாமரை மலர்போலும் திருவடிகள், என் தலைமுடிமீது படிவதாக! அவர் திருவடி தோய, என்தலை தாழ்ந்து குனிந்து வணங்குவதாக. ஒளிவீசும் பொன்மதில் மூன்றும், உருக்கிய பொன்னால் செய்து முத்துக்கள் வைத்திழைத்த குடைகள் மூன்றும், வலம் வந்து நறுமலர் தூவி நின் அடிபணிந்து வணங்கும் உலகம் மூன்றும், மனம் வாக்குக் காயங்களால் நல்லவையே எண்ணும் படைக்கலமாகிய நல்நெறிகள் மூன்றும் உயர்ந்த மெய்க்காட்சிகள் மூன்றும், அறநூல்கள் மூன்றும் ஆகியவற்றுடன், கடல்போலத் திரண்ட நற்குணங் களும் நிறையப் பெற்றவர்கள், நம்மை ஆட்கொண்ட வர்கள் ஆவார்கள். மலர்மணம் வீசும் அழகிய முடிமேல் விளங்குகின்ற சூளாமணியைப் போன்ற ஐம்புலன் களையும் வென்ற அடியவர் தலைவனும், அறக்கடலாகிய இறைவனும் ஆகிய அருகப்பெருமானின், பூமலர்த் தாமரை மேல் படிந்த பொன்னடிகளைப் பணிந்து வணங்கி, மேற்கூறியவாறு அவன் இன்னருள் அடையப் பெற்றவர்கள், அறிய வேண்டியவை ஒழுக்க நெறிகள் ஐந்தும், அவற்றோடு காலமும் சேர ஆறும், அறநெறி மார்க்கங்கள் ஒன்பதும் ஆகும் என்று மேலோர் கூறுவர்.'

பெரிய வின்பத் திந்திரனும் பெட்ட செய்கைச் சிறு குரங்கும்
உரிய செய்கை வினைப்பயத்தை யுண்ணு மெனவே
யுணர்ந்தவனை
அரிய ரென்ன மகிழாது மெளிய ரென்ன விகழாதும்
இருசார் வினையுந் தெளிந்தாரே யிறைவ னூலுந்
தெளிந்தாரே 2815

[பெட்ட-தான் விரும்பிய; இருசார்வினை-நல்வினை யும் தீவினையும்.]

உறுவர்ப் பேண லுவர்ப்பின்மை யுலையா வின்பந்
தலை நிற்றல்
அறிவர் சிறப்பிற் கெதிர்விரும்ப லழிந்தோர் நிறுத்த
லறம்பகர்தல்
சிறியா ரினத்துச் சேர்வின்மை சினங்கை விடுதல்
செருக்கவித்தல்
இறைவ னறத்து ளார்க்கெல்லா மினிய ராத லிதுதெளிவே

[உறுவர்-உயர்ந்தோர்; உவர்ப்பு-வெறுப்பு; சிறப்பு-பூசை; பகர்தல்-கூறுதல்; அவித்தல்-அடக்குதல்.]

செறியச் சொன்ன பொருடெளிந்தார் சேரார் விலங்கிற்
பெண்ணாகார்
குறுகார் நரக மோரேழுங் கீழ்முத் தேவர் குழாந்தீண்டார்
அறியா துரைத்தே னதுநிற்க ஆறே நரக மாகாத
பொறியார் போக பூமியுள் விலங்கு மாவ ரொருசாரார்

[குழாம்-கூட்டம்; பொறி-நல்வினை.]

'இவ்வறநெறி மார்க்கங்களை அறிவதோடு, பேரின்பப் பேறு பெற்ற இந்திரனும், தான்விரும்பியபடி நடக்கும் சின்னக் குரங்கும், தாம் செய்த நல்வினை தீவினை ஆகியவற்றிற்கு ஏற்ப அவற்றின் பயனை அடைந்து வாழ்தல் இயல்பு என்பதை அறிந்து, எளிதில் பிறர் அடையமுடியாத பேரின்பநிலை பெற்றுவிட்ட இந்திரனின் மேன்மையை எண்ணிப் புகழாமலும், கீழ்மை உடையது என்பதற்காகக் குரங்கின்நிலை கண்டு இகழ்ந்து பேசாமலும், இருவினைப் பயன்களையும் நன்குணர்ந்து தெளிந்தவர்களே இறைவன் நூல் தத்துவத்தையும் உணர்ந்து தெளிந்தோர் ஆவர். இறைவன் அறநூல் தத்துவமாவது, தவத்தால் உயர்ந்தோரை உபசரித்தல், பிறரிடம் பகையின்றிப் பழகுதல், பேரின்ப வீட்டடையும் கருத்திலே மாறுபடாதிருத்தல், அருகன் வழிபாட்டிற்கு அவாவுறுதல், தீயோரைத் தவநெறிக்கண் நிறுத்தல், உண்மையே உரைத்தல், கீழோர் கூட்டத்தில் சேராதிருத்தல், கோபத்தைக் கைவிடுதல்

தானென்னும் ஆணவத்தை விட்டொழித்தல், அருகப் பெருமான் அருளறத்தில் ஈடுபட்டிருப்போர்க்கெல்லாம் அன்புடையவராக இருத்தல், என்பவையே, என்பதை உணர்ந்து தெளிவதாகும். மேற்கூறியவற்றை எல்லாம் ஐயமற நன்குணர்ந்து தெளிந்தவர்கள். விலங்காகப் பிறக்கமாட்டார். பெண்ணாக மாட்டார்கள். பாழ் நரகம் ஏழும் சென்றடையும் துன்பம் ஏற்கமாட்டார்கள். கீழான முத்தேவர்கள் பின்தொடரமாட்டார்கள் என்பதை அறிவீராக. நரகம் ஏழு என்று மேலே கூறப்பட்டிருப்பினும், பாழ்நரகம் ஆறென்று கொள்வதே போதும், ஏனெனில் நல்வினைப் பயனால் ஒரு சிலர் சுவர்க்கத்திலே விலங்காகவும் பிறக்கக்கூடும் எனவே நரகம் ஆறெனப் பட்டது என்பதும் அறிவீராக!'

## 15. சீலம்

### வேறு

**ஏத்தருந் திருமணி யிலங்கு நீர்மைய**
**கோத்தன போற்குண நூற்றுக் கோடியும்**
**காத்தன காவல பதினெண் ணாயிரம்**
**பாத்தன பண்ணவர் சீல மென்பவே** **2818**

[ஏத்தரும்-புகழ்தற்கு அரிய; குணம்-குணவிரதம்; பாத்தன-பகுக்கப்பட்டன.]

**மொய்யமர் ஞாட்பினுண் முரண்கொண் மன்னவர்**
**மெய்புகு பொன்னணி கவச மொப்பன**
**மையலைம் பொறிமதம் வாட்டி வைகலும்**
**செய்வினை நுணுக்குவ சீல மென்பவே** **2819**

[பொன் அணி-இரும்பினாற் செய்து அணியப்பட்ட: மையல் ஐம்பொறி-மயக்கத்தைச் செய்யும் ஐந்து இந்திரியங்கள்; நுணுக்குவ-குறைப்பன.]

மணித்துண ரனையதங் குஞ்சி வண்கையாற்
பணித்தனர் பறித்தலிற் பரவை மாநிலம்
துணித்தொரு துணிசுமந் தனைய திண்பொறை
அணித்தகு முடியினா யாதி யாகவே 2820

[மணி-நீலமணி; பரவை-பரந்த.]

'புகழ்மிக்க, ஒளிவீசும், அழகு மணிகளைக் கோத்தது போல் விளங்கும், நூறுகோடி மகாவிரதங்களும், பதினெண்ணாயிரம் ஒழுக்க சீலங்களும், இன்னும் பகுத்துரைக்கப்பட்ட குணவிரதங்களும் அரசே, துறவியர்களால் கடைப்பிடிக்கத் தக்கவை; வலிமை மிக்க போரிலே நேருக்குநேர் மோதும் பகையரசர்கள் உடலில் போர்த்திய பொன்னாலாகிய கவசத்தைப் போன்றது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்கள் வழியேயும் வரும் அவாவினை அறுத்து, அன்றாடம் செய்யும் பணிகளால் விளையும் தீவினையையும் குறைக்க வல்லது, மேற்கூறிய விரதங்களால் விளையும் சீலம் எனப்படுவது. எனவே நீலமணிக் கொத்துப் போன்ற கூந்தலைத் தம் கையாலே நீக்கிக் கொண்டு, இப்பரந்த உலகை இருகூறாக்கி, ஒரு பாதியைச் சுமந்ததனைப் போன்ற பொறுமையைக் கைக்கொள்வதை, அழகிய முடியுடைய மன்னவனே, விரதங்களுக்கெல்லாம் மேலான விரதம் என்று துறவிகள் கொண்டனர்.'

## வேறு

பெரியவாட் டடங்கட் செவ்வாய்ப் பிறர்மனை பிழைக்கு மாந்தர்
மரீஇயவாய்ப் புறஞ்சொற் கூர்முண் மத்திகைப் புடையு மன்றி
ஒருவர்வா யுமிழப் பட்ட தம்பல மொருவர் வாய்க்கொண்டு
அரியவை செய்ப வையத் தாண்பிறந் தார்க என்றே 2821

[மரீஇ-மருவி; பிழைக்கும்-குற்றம் செய்யும்; மத்திகை-சவுக்கு.]

ஒழுக்கமே யன்றித் தங்க ளுள்ளுணர் வழிக்கு மட்டும்
புழுப்பயி றேனு மன்றிப் பிறவற்றின் புண்ணு மாந்தி
விழுப்பய னிழக்கு மாந்தர் வெறுவிலங் கென்று மிக்கார்
பழித்தன வொழித்தல் சீலம் பார்மிசை யவர்கட் கென்றான்

[உணர்வு அழிக்கும்-அறிவைக் கெடுக்கும்; மட்டு-கள்.]

'பெரிய வாள்போலும் நீண்ட கண்களும் சிவந்த வாயும் உடைய பிறர் மனைவியை விரும்பி ஒழுக்கந்தவறும் மக்கள், பிறர் கூறும் பழியாகிய கூரிய முள் சாட்டையினால் அடிபட்டுத் துடிப்பதன்றி, இன்னொருவர் அவள் வாயிலே உமிழ்ந்த தம்பலத்தை, எச்சிலைத் தாம்நுகர்ந்து வாழும் இழிந்த நிலையும் அடைவர். இவர்கள் உலகிலே ஆண்களாய்ப் பிறக்கத் தக்கவர்கள் அல்லர். மேலும் இவ்வாறு ஒழுக்கநெறி தவறுதலே அல்லாமல், இவர்கள் தங்களுடைய உள்ளுணர்வைக் கெடுக்கின்ற மதுவையும், புழு நெளியும் தேனையும், மற்ற உயிரினங்களின் புண் என்று வெறுத்தொதுக்கத்தக்க அவற்றின் இறைச்சியையும் உண்டு, பிறவிப் பெரும் பயன் இழந்து வாழ்வர். அறவழி நடக்கும் மேலோர் முன் இத்தகையோர் இழிந்த விலங்கினைப்போலக் கருதப்படுவர். எனவே பெரியோர் தீதென்று ஒதுக்கியதைக் கைவிடுதலே சிறந்த ஒழுக்க நெறியாகும்.'

## 16. தானம்

நன்னிலத் திட்ட வித்தி னயம்வர விளைந்து செல்வம்
பின்னிலம் பெருக வீனும் பெறலருங் கொடையும் பேசிற்
புன்னிலத் திட்ட வித்திற் புற்கென விளைந்து போகம்
மின்னெனத் துறக்குந் தானத் தியற்கையும் விரித்து
மன்றே 2823

[வித்தின்-விதையைப்போல; நயம்-விருப்பம்; நிலம்-பூமியில்; கொடை-தானம்; புற்கென-புல்லென.]

ஐவகைப் பொறியும் வாட்டி யாமையி னடங்கி யைந்தின்
மெய்வகை தெரியுஞ் சிந்தை விளக்குநின் றெரிய விட்டுப்
பொய்கொலை களவு காம மவாவிருள் புகாது போற்றிச்
செய்தவ நுனித்த சீலக் கனைகதிர்த் திங்க ளொப்பார்

[வாட்டி-வருத்தி; ஐம்பொறி-ஐம்புலன்.]

வாய்ச்சிவா யுறுத்தி மாந்தர் மயிர்தொறுஞ் செத்தி னாலும்
பூச்சுறு சாந்த மேந்திப் புகழ்ந்தடி பணிந்த போதும்
தூக்கியிவ் விரண்டு நோக்கித் தொல்வினை யென்று தேறி
நாச்செறு பராவு கொள்ளார் நமர்பிற ரென்று

முள்ளார் 2825

[வாய்ச்சி - மரத்தைச் செதுக்குதற்குரிய கருவி; செத்துதல் - வெட்டுதல்; பூச்சுறு - பூசுதல் பொருந்திய; நாச்செறு - நாவாற் செறுதல்; பராவு-புகழ்தல்.]

'நல்ல நிலத்திலே விதைத்த விதைபோல நன்றாக விளைந்து உலகம் செழிக்க உதவும் செல்வத்தையும், வளத்தையுங் கொடுக்கும் அடைவதற்கரிய கொடைச் சிறப்பைப் பற்றிக் கூறுவோம். பாழ் நிலத்திலே இட்ட விதை வெறுந் தீதாகவே விளையும்; அதனால் வரும் இன்பமும் நிலைத்து நிற்காது மின்னலைப்போலத் தோன்றி மறையும். எனவே இவ்விரண்டிற்கும் இடையான தானத்தின் சிறப்பு என்னவென்றால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளையும் அடக்கி, ஆமைபோல் அவற்றை அதன் நிலையில் ஒடுங்கச்செய்து, ஒழுக்கநெறி ஐந்தின் உண்மையையும் ஓர்ந்துணர்கின்ற, உள்ளொளியாகிய நல்விளக்கைச் சுடரவிட்டு, பொய், கொலை, களவு, கள், காமம், ஆசை என்னும் இருள் அவ்விளக்கினை அண்டாது காத்து, ஒப்பற்ற தவத்தைச் செய்தவர்கள் சீலம் விளங்க ஒளிவீசும் திங்களைப்போல் திகழ்வர். அதுமட்டுமன்று. இத்தகைய சீலம் விளங்கப் பெற்றவர்கள், எவரேனும் அரிவாள் கொண்டு தம் உடல்

வருந்த மயிர்க்கால் தோறும் வெட்டினாலும் வாசம் வரப் பூசுகின்ற சந்தனத்தை ஏந்தி வந்து அடி பணிந்து புகழ்ந்தாலும், இரண்டையும் ஒப்பு நோக்கி இவை ஊழ் வினைப் பயன் என்று உணர்ந்து, நாவால் எவரையும் போற்றவோ தூற்றவோ செய்யமாட்டார்கள். அவர்களை நண்பர் என்றோ பகைவர் என்றோ கருத மாட்டார்கள்.'

**பாற்கதிர்த் திங்கட் கொட்பிற் பருமித்த களிறு போல**
**நூற்கதி கொண்டு கண்ணா னுகத்தள வெல்லை நோக்கி**
**மேற்கதிக் கேணி யாய விழுத்தவர் மனையில் வந்தாற்**
**காற்கொசி கொம்பு போலக் கைதொழு திறைஞ்சி மாதோ**

[திங்கட்கொட்பின்-சந்திரனது சுழற்சிபோல; பருமித்த-அலங்கரிக்கப்பட்ட; கதி - வழி; காற்கு-காற்றுக்கு.]

**தொடிக்கையாற் றொழுது வாழ்த்தித் தூமணி நிலத்து ளேற்றிப்**
**பொடிப்புனை துகிலி னீக்கிப் புகழ்ந்தடி கழீஇய பின்றை**
**அடுத்தசாந் தகிலி னாவி யாய்மல ரருச்சித் தானார்**
**கொடுப்பர்நா லமிர்த மூன்றிற் குணம்புரிந் தடங்கி னார்க்கே 2827**

[ஏற்றி - இருக்கச் செய்து; பொடி - காலிலுள்ள பொடியை; கழீஇய பின்றை-கழுவிய பிறகு; ஆவி-புகை; ஆனார் - இவற்றாலும் அமையாராய்; நாலமிர்தம்-நால்வகையுணவு.]

**ஒன்பது வகையி னோதிற் றுத்தமர்க் காகு மார்ந்த**
**இன்பத மருளி யீத லிடையென மொழிப யார்க்கும்**
**துன்புற விலங்கு கொன்று சொரிந்துசோ றூட்டி னார்க்கும்**
**நன்பொருள் வழங்கி னார்க்கும் பயனமக் கறிய லாகா**

[ஓதிற்று-சொல்லப்பட்டது; ஆர்ந்த-நிறைந்த; பதம்-உணவு; இடை - இடைப்படுதானம்; பயன் - பாவத்தின் பயன்.]

'மற்ற விண்மீன்களை அளித்தற் பொருட்டு ஒளி வீசித் திகழும் நிலவைப்போல, மற்ற எல்லாரையும் அளிப்பதற்கு நடை பயிலும் பல மாலை அணிந்த யானையைப்போல, வேதாகம நெறியில் கூறிய வீட்டுலக இன்பத்திற்கு ஏணியாகிய, தவத்தை மேற்கொண்ட துறவிகள் தம் வீட்டை நோக்கிக் காணும் தூரத்தில் வரக் கண்டவுடன், காற்றில் வளையும் மலர்க்கொடிபோல நிலமிசைப் படிந்து வணங்கி, வளையணிந்த கைகளால் கூப்பித் தொழுது, அவரை வரவேற்று அழகிய ஆசனத்தில் அமரச் செய்து, தூய துவராடையால் அவர் பாதமிசைப் படிந்த தூசுகளைத் துடைத்து நீர்விட்டுக் கழுவிப் பின், வாசமிகு சந்தனம், அகில் ஆகியவற்றின் நறும் புகையிட்டு, நறுமலர்கள் தூவி அருச்சித்து, அவ்வளவோடமையாது உண்பன, உறிஞ்சுவன, தின்பன, பருகுவன ஆகிய நான்கு வகை அமிர்தத்தையும் மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றாலும் நிறைந்த தூய்மையோடு நற்பண்புடைய அத்தவசீலர்களுக்குத் தந்து மகிழ்வர். இவ்வாறு வணங்கி, வாழ்த்தி, எதிர்கொண்டு துதித்து, அருச்சித்து ஒன்பது வகையாலும் உண்டி படைத்தல் தவத்தால் உயர்ந்த உத்தமர்களுக்கு ஏற்புடைய உத்தம தானமாகும். இவ்வாறில்லாமல் நிறையச் சோற்றை மட்டும் எல்லார்க்கும் அள்ளிக் கொடுத்தல் இடைப்பட்ட தானம் ஆகும். இதல்லாமல் விலங்குகளை அவை வருந்தி அழக் கொன்று அவற்றின் இறைச்சியோடு சோற்றைப் படைப்பவர்களுக்கும், அவர்களுக்குப் பெரும் பொருள்களைத் தானமாகத் தந்தவர்களுக்கும், என்ன பயன் (தீயபயன்) விளையுமென்பதை நாம் அறிய முடியாது.'

# 17. தானப்பயன்

## வேறு

கூற்றுநா அலறுவ தனைய கூரிலை
ஏற்றநீர்த் துளும்புவா ளிறைவ வீங்கினிப்
போற்றிணை கேண்மதி பொருவில் புண்ணியர்க்
காற்றிய கொடைப்பய னறியக் கூறுவாம் **2829**

[பொரு இல் - ஒப்பு இல்லாத; ஆற்றிய - அளித்த; துளும்பும்-அசையும்.]

கடிப்புவா ரங்குலி கொளீஇய கைதுரந்
தடுத்துவார் மயிர்த்துதி யலற வூதலிற்
பொடித்தபொற் றாமரை யனைய பொங்கழல்
இடைக்கிடந் தெவ்வள விரும்பு காய்ந்ததே **2830**

[மயிர்த்துதி - மயிரையுடைய தோல்; பொடித்த- தோன்றிய; அங்குலி-விரல்.]

காய்ந்தவவ் வளவினாற் கௌவு நீரதொத்
தாய்ந்தறி கொடையின தளவிற் புண்ணியம்
தோய்ந்துயி ருடம்பிவ ணொழியத் தொக்கநாள்
வீந்துபோய் வயிற்றகம் விதியி னெய்துமே **2831**

[வீய-வீந்து, கெட; கௌவும்-உண்ணும்.]

•தனது கொடுமையைப் பறைசாற்றிக் கூறப்படுவ தர்கிய கூற்றினது நாக்கினைப் போன்றதும் கூரிய இலை வடிவானதும் திருமஞ்சனக் குடங்களில் தளும்பி வழியும் நீரைச் சிற்றரசர் சொரிய ஏற்றுக் கொண்டதுமாகிய வாளை ஏந்திய அரசே, இன்னும் கவனமாகக் கேள். இனி மேல் ஒப்பற்ற உயர் தவமுனிவர்க்குத் தந்த தானத்தின் பயனைச் சொல்லுகிறேன். விளிம்பில் சேர்த்துக் கட்டிய வாரை விரல் இடுக்கில் கோத்துக் கொண்டு, அக் கையா லேயே மயிர்நிறைந்த தோலால் ஆகிய துருத்தியை அமுக்கி அழுத்தி ஓசை உண்டாக ஊதிக் காற்றைச் செலுத்தக்

கனிந்து, பொற்றாமரைத்தூள் போலச் சுடரும், உலைக் களத்தீயிலே கிடந்து இரும்பு எந்த அளவுக்குக் காய்கிறதோ, அந்த அளவுக்குக் காய்ந்த அவ்விரும்பு நீரை இழுக்கும். அதேபோல் செய்த கொடையின் அளவுக்கு ஏற்றபடி புண்ணியத்தை உயிர் அடையும். அவ்வுயிரும் வாழ்நாள் முடிந்து போனவுடன் உடலை இங்கே விட்டொழித்து சொர்க்கம் சென்று முறைப்படி ஒரு வயிற்றை அடையும்.'

**திங்கணா ளொன்பதும் வயிற்றிற் சேர்ந்தபின்**
**வங்கவான் துகில்பொதி மணிசெய் பாவைபோல்**
**அங்கவ ரிரட்டைக ளாகித் தோன்றலும்**
**சிங்கினா ரிருமுது குரவ ரென்பவே** **2832**

[வான்துகில்-சிறந்த ஆடை; இருமுது குரவர்-தாய் தந்தையர்; வங்கம்-மரக்கலம்; சிங்குதல்-அழிதல்.]

**இற்றவர் தேவராய்ப் பிறப்ப வீண்டுடல்**
**பற்றிய விசும்பிடைப் பரவு மாமுகில்**
**தெற்றென வீந்தெனச் சிதைந்து போகுமால்**
**மற்றவம் மக்கள்தம் வண்ணஞ் செப்புவாம்** **2833**

[தெற்றென - தெளிவாக; வீந்தென - அழிந்தாற் போல.]

**பிறந்தவக் குழவிகள் பிறர்கள் யாவரும்**
**புறந்தர லின்றியே வளர்ந்து செல்லுநாள்**
**அறைந்தன ரொன்றிலா வைம்ப தாயிடை**
**நிறைந்தனர் கலைகுண முறுப்பு நீரவே** **2834**

[புறந்தரல்-காப்பாற்றுதல்; ஒன்றிலா ஐம்பது-நாற்பத்தொன்பது.]

'வானுலகம் சென்று முறைப்படி ஒரு வயிற்றை அடைந்த அவ்வுயிர் ஒன்பது மாதங்கள் அங்கே இருந்தபின், கடல் வழி வந்த, அழகிய ஆடைகளால் அலங்கரிக்கப்பட்ட மணிப்பாவை அவ்வழகிய ஆடையை விட்டு வெளிப் போந்ததைப் போல, அங்கு இரட்டைப் பிள்ளைகளாய்ப் பிறக்கும். பிறந்தவுடன் அக்குழந்தைக்குத் தாயும்

 



தந்தையுமாய் இருந்தவர்கள், தம் பூத உடல் நீப்பர். அப்படி உயிர்நீத்தவர்கள் தேவர்களாய்ப் பிறக்க அவர்கள் பூத உடல் வானிலே தவழும் மேகம் போலக் காற்றோடு காற்றாகக் கலந்து மறைந்து போகும். இனி இரட்டையாகப் பிறந்த அக்குழந்தைகளின் நிலை பற்றிக் கூறுவோம்.

'அக்குழந்தைகள் அயலார் எவர் கவனிப்பும் இன்றியே வளர்ந்து, நாற்பத்தொன்பது நாட்களில், அறிவும் குணமும் உடலும் நிறைந்து வளரப் பெறுவர்.' (இரண்டு குழந்தைகளிவ் ஒன்று பெண்; மற்றொன்று ஆண்.)

## வேறு

**சோலைமீ னரும்பித் திங்கட் சுடரொடு பூத்த தேபால்**
**மாலையுங் கலனு மீன்று வடகமுந் துகிலு நான்று**
**காலையு மிரவு மில்லாக் கற்பக மரத்தி னீழற்**
**யாலையாழ் மழலை வேறாய்ப் பன்மணிக் கொம்பி**
**னின்றாள் 2835**

[சுடர்-சூரியன்; வடகம் - மேற்போர்வை; நான்று- தொங்கி.]

**இலங்குபொற் குவடு சாந்த மெழுதிய தனைய தோண்மேல்**
**நலங்கிளர் குழைக ணான்று சாந்தின்வாய் நக்கி மின்னக்**
**கலங்கலந் தகன்ற மார்பிற் கற்பக மாலை தாழ**
**விலங்கர சனைய காளை வேனில்வேந் தென்னச்**
**சேர்ந்தான் 2836**

[பொற்குவடு-பொன் மலை; கலங்கலந்து-அணிகலன் நிறைந்து.]

**குண்டலங் குலவி மின்னப் பொன்னரி மாலை தாழத்**
**தெண்கட லமிர்திற் செய்த பாவையிற் பாவை நிற்ப**
**விண்டலர் மாலை மார்பன் விதியினாற் சென்று மாதோ**
**கண்டனன் கலந்த வுள்ளங் காதலி னொருவ ரானார் 2837**

[குலவி-விளங்கி; விண்டு-முறுக்கவிழ்ந்து; கலந்த- கலந்தன; விதி-ஊழ்.]

'சோலை ஒன்றிலே விண்மீன்களோடு சந்திரனும் சூரியனும் ஒருசேரப் பூத்திருப்பதைப் போல, மணி மாலையும் அணிகலன்களும் தவழ, ஆடையும் மேற் போர்வையும் புரள, இரவும் பகலும் அறியமுடியாதபடி நெருங்கி நிறைந்த கற்பக மர நிழலிலே, பாலையாழ் போல மழலை மொழி பேசும் அவ்விரட்டைக் குழந்தை களில் ஒன்றாகிய பெண், பல மணிகள் வைத்திழைத்த மலர்க்கொம்பு போல், தனியே நின்றாள். அங்கே, பொன்மலையின் மேல் சந்தனம் பூசியதைப் போல விளங்கும் தங்கத் தோள்களில் தடவிய வாசச் சாந்தின் மேல், காதுக் குண்டலங்கள் படிந்து ஒளிசெய்ய, அணி மணிகள் புனைந்த விரிந்த மார்பின்மேல் கற்பக மாலை தொங்க, மற்றொரு குழந்தையாகிய சிங்கம் போன்ற ஆண்மகன், காளைப் பருவத்தினனாய்க் காமவேளைப் போலக் கற்பக மரத்தைப் போய்ச் சேர்ந்தான்.

'காதணி ஒளி வீசித் திகழவும், பொன்னாலாக்கிய மாலை தவழ்ந்து புரளவும், தெளிந்த நீர்க் கடலில் வந்த அமுதினால் செய்தமைத்த பொற்பாவை போல் நிற்கும் அப்பெண்ணை, விரிந்து மலர்ந்த மலர் மாலை அணிந்த மார்புடைய ஆண்மகன் ஊழ்வினைப் பயனால் சென்று கண்டான். கண்ட அளவிலே அவர்கள் உள்ளங்கள் இரண்டும் ஒன்று கலந்தன. இருவரும் ஒருவரானார்; ஒருயிரானார்.'

**கொதிநுனைக் காம னம்பு கொப்புளித் துமிழ்ந்து காம**
**மதுநிறை பெய்து விம்மு மணிக்குட மிரண்டு போல**
**நுதிமுக முத்தஞ் சூடி நோக்குந ராவி வாட்ட**
**விதிமுலை வெய்ய வாகித் தாரொடு மிடைந்த வன்றே 2838**

[நுதி-முனை.]

**இமைத்தநுங் கண்க ளென்னை யிகழ்ந்தனி ரென்று சீற**
**அமைத்துநின் னழகு கோல மாரவுண் டறுக்க லாற்றா**
**திமைத்தன வஞ்சி யென்ன விளையவள் சிலம்பிற் குஞ்சி**
**நமைத்தபூந் தாமந் தோய நகைமுக விருந்து பெற்றான்**

[இமைத்த - இமைத்தன; சீற - கோபிக்க; ஆர - நிரம்ப; நமைத்த-கட்டிய.]

இன்னகி லாவி விம்மு மெழுநிலை மாடஞ் சேர்ந்தும்
பொன்மலர்க் காவு புக்கும் புரிமணி வீணை யோர்த்தும்
நன்மலர் நான வாவி நீரணி நயந்துஞ் செல்வத்
தொன்னலம் பருகிக் காமத் தொங்கலாற் பிணிக்கப்
பட்டார் 2840

[விம்மும் - நிறைந்த; காவு - சோலை; நீரணி - நீர் விளையாட்டு.]

'உடல் கொதிக்க வருத்தும் காமன் கூர் அம்பு தைத்து வேட்கை மீதூறச் செய்ய, மது நிறைந்து பொங்கித் ததும்பும் மணிக் கலசம் போன்ற, முத்துப் பூண் அணிந்த, கண்டவர் உயிரைக் கொல்லும், மார்பகங்கள் கவர்ந் திழுக்க, ஆணழகன் மார்பில் அணிந்த மாலையோடு அவை ஊழ்வினைப் பயனால் ஒன்றிக் கலந்தன.

'கலந்தவள், ''உம் கண்கள் இமைக்கின்றனவே, எம்மை இகழ்ந்தீரோ'', என்று அவனைக் கோபித்துப் பார்க்க, அவன் ''உன் அழகையும் அலங்காரத்தையும் அள்ளி அள்ளிப் பருகியும் ஆசை தீராது, வைத்த கண் வாங்கமுடியாமையால் அவை இமைத்தன, வஞ்சிக்கொடி போன்ற என் வடிவழகியே'', என்று அவள் பாதச் சிலம்பிலே தன் தலைமுடியில் சூட்டிய மாலை படும்படி வணங்க, அவள் கோபந் தீர்ந்து மகிழ்ச்சியால் முகம் மலரக் கிடைக்கும் இன்ப விருந்தைப் பெற்றான். இவ்வாறு ஊடல் நீங்கிய இருவரும், இனிய வாசம் வீசும் அகிற்புகை தவழும் ஏழ்நிலை மாடத்தை அடைந்தும், பூமலர்ச் சோலையில் திரிந்தும், யாழின் இன்னிசை பருகியும், அழகு மலர் நிறைந்து மணம் கமழும் நீர் வாவிகளில் புகுந்து நீர்விளையாட்டை விரும்பியும் செல்வச் சிறப்பும், இன்ப நலமும் அடையப் பெற்றும் காமத்தால் கட்டுண்டு கிடப்பர்.'

பூமுற்றுந் தடங்க ணாளும் பொன்னெடுங் குன்ற னானும்
காமுற்று நினைந்த வெல்லாங் கற்பக மரங்க ளேந்தத்
தாமுற்றுக் கழிப்பர் தான மிடையது செய்த நீரார்
ஏமுற்றுக் கரும பூமி யிருநிதிக் கிழமை வேந்தே 2841

[காமுற்று-விரும்பி; ஏமுற்று-மயக்கமுற்று.]

அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினா லலறு முந்நீர்த்
தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி
உடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்ன ரேறே 2842

[மாந்தி - உண்டு; மடங்கல்-சிங்கம்; துப்பு-வன்மை; ஊழ்கனி-கனிந்து விழும் பழம்.]

'மலரின் மென்மையும் தன்மையும் முற்றும் நிரம்பப் பெற்ற விரிந்த கண்களை உடையவளும் பொன்மலை போன்ற ஆணழகனும் தாங்கள் விரும்பியவற்றை எல்லாம் கற்பக மரங்கள் கொடுத்துதவ, தாங்கள் செய்த உத்தம தானத்தால் வந்ததாகிய அப்பேரின்ப வாழ்விலே இன்பம் அடைந்து மகிழ்ந்திருப்பர். இடைப்பட்டதாகிய தானத்தைச் செய்தவர்களோ அரசே, கரும பூமியிலே செல்வச் செருக்கிலே மயங்கிக் கிடப்பர். இவையல்லாது ஐம்புலன்களையும் அடக்கி ஆளாது, அவற்றைத் தீய வழியில் செல்லவிட்டவர்களுக்குத் தானம் கொடுத்தவர்களோ, தீயதாகிய அத்தானத்தின் பயனால், அலை ஒலிக்கும் பெரிய கடல் நடுவே உள்ள பல தீவுகளில், மனித உடலும் விலங்கு முகமும் உடைய பல பிறவிகளாகத் தோன்றி, பழுத்து உதிர்ந்து கீழே விழுந்த பழங்களை உண்டு, சிங்கம் போன்ற வலிவும் வீரமும் உடைய வெற்றி வேலேந்திய அரசே, வாழ்ந்து கொண்டிருப்பர்.'

## 18. சீலப்பயன், காட்சிப்பயன்.

செப்பிய சீல மென்னுந் திருமணி மாலை சூழ்ந்தார்
கப்பத்து ளமர ராவர் காட்சியி னமிர்த முண்டார்
ஒப்பநீ ருலக மெல்லா மொருகுடை நிழற்றி யின்பம்
கைப்படுத் தலங்க லாழிக் காவல ராவர் கோவே 2843

[மணிமாலை - மாணிக்க மாலை; கப்பம்-பதினாறு வகைக் கற்பலோகம்; ஆழி-ஆஞ்ஞாசக்கரம்.]

'இவ்வாறு சிறப்பித்துக் கூறப்பட்ட சீலம் என்னும் அழகிய மணி மாலையை ஆபரணமாக அடையப் பெற்றவர்கள், கற்பலோகத்துத் தேவராய்த் திகழ்வார்கள். பேரின்பக் காட்சி நல்கக் கூடிய அமுதை அடையப் பெறுவார்கள். கடல் சூழ்ந்த உலக முழுமையும் ஒரு குடை நிழலின் கீழ் இருந்து ஆளும் இன்பம் நிறையப் பெற்ற அரசராய் இருந்து ஆணை செலுத்துவார்கள் என்பதை அரசே, நீ அறிவாயாக.'

## 19. வீடுபேறு

### வேறு

வீட்டின தியற்கைநாம் விளம்பிற் றீங்கதிர்ப்
பாட்டரும் பனிமதி பழித்த முக்குடை
மோட்டிருங் கொழுமலர்ப் பிண்டி மூர்த்திநூல்
ஈட்டிய பொருளகத் தியன்ற தென்பவே 2844

[தீங்கதிர்ப்பாடு-இளஞ்சூரியனது கூறுபாடு; மோடு-பெருமை; பொருளகத்து-பொருளினுள்ளே.]

உள்பொரு ளிதுவென வுணர்தன் ஞானமாம்
தெள்ளிதி னப்பொருள் தெளிதல் காட்சியாம்
விள்ளற விருமையும் விளங்கத் தன்னுளே
ஒள்ளிதிற் றரித்தலை யொழுக்க மென்பவே 2845

[விள்-நீங்குதல்; ஒள்ளிதின்-சிறப்பாக.]

கூடிய மும்மையுஞ் சுடர்ந்த கொந்தழல்
நீடிய வினைமர நிரைத்துச் சுட்டிட
வீடெனப் படும்வினை விடுதல் பெற்றதங்கு
ஆடெழிற் றோளினா யநந்த நான்மையே 2346

[சுடர்ந்த-எரிந்த; ஆடு-வெற்றி.]

கடையிலா வறிவொடு காட்சி வீரியம்
கிடையிலா இன்பமுங் கிளந்த அல்லவும்
உடையதங் குணங்களோ டோங்கி விண்தொழ
அடைதலான் மேலுல கறியப் பட்டதே 2347

[கடை-முடிவு; கிடை-ஒப்பு.]

'இனி நாம் வீட்டுலகின் தன்மையை விளக்கிக் கூறுவோம். செஞ்சுடர்ச் சூரிய ஒளியின் தன்மையையும், குளிர்ந்த தண்ணொளி வீசும் நிலவின் தன்மையையும், பழிக்கும் முக்குடை உடைய, பெரிய செழுமலர்கள் சொரியும் அசோக மரநீழலின் கீழ் எழுந்தருளியிருக்கின்ற அருகப்பெருமான் அருளிய ஆகமத்தின் கண்ணே அதன் தன்மை கூறப்பட்டிருக்கிறது. அதன்படி பொருள்களுள் மெய்ப்பொருள் இதுவெனத் தெளிதல் ஞானம் ஆகும். தெளிந்த அம்மெய்ப்பொருளின் தன்மை இதுவென உணர்ந் தறிதல்காட்சி ஆகும். ஞானமும் காட்சியும் நீக்கமறத் தன் னுள்ளே நிறைந்து விளங்க நடந்தொழுகுதல் ஒழுக்கம் எனப்படும். ஞானம், காட்சி, நல்லொழுக்கம் ஆகிய மூன்று தன்மைகளும் ஆகிய பெரு நெருப்பு, நிறைந்து வளர்ந்ததாகிய தீவினைப் பயன் என்னும் மரத்தை அடி யோடு எரித்துச் சாம்பலாக்கிட வினைப்பயனில் இருந்து விடுபடுகின்ற தன்மையே வீடு எனப்படும். வெற்றியும் வீரமும் விளங்கும் அழகிய தோளுடையவனே, இத்தகைய வீடு பெற்றவர்கள், முடிவில்லா அறிவு, முடிவில்லாத் தெளிவு, முடிவில்லா வீரம், முடிவில்லா இன்பம் ஆகிய பெரும் பயனை அடையப் பெறுவார்கள். முடிவற்ற அறிவோடு காட்சி, வீரியம், எல்லையில்லா இன்பம் என்று சொல்லப்பட்ட இந்நான்கினையும் அல்லாமல், தம்

முடைய உயர்ந்த நற்குணங்களால் சிறந்து, வானவர் தொழும்படி வீடுபெற்றவர் வீட்டுலகம் வந்து சேர்வதால், வீடு வானுலகம் என்று ஒன்று இருப்பது உண்மை என்று உணரப்பட்டது.'

## 20. பிறவிகள் அறவுரை

மாதவ னெனப்பெயர் வரையி னவ்வரை
ஏதமி லெயிறணி பவள வாய்த்தொடுத்
தாதியி லறவுரை யருவி வீழ்ந்தென
மாதுயர் மலங்கெட மன்ன னாடினான் 2848

[வரையின்-மலையினின்றும்; மா-பெருமை; மலம்-குற்றம்.]

எல்லையி லறவுரை யினிய கேட்டபின்
தொல்லையெம் பிறவியுந் தொகுத்த பாவமும்
வல்லையே பணிமின மடிக ளென்றனன்
மல்லைவென் றகன்றுபொன் மலர்ந்த மார்பினான் 2849

[பணிமின்-எடுத்துக்கூறுங்கள்; மல்-மற்போர்.]

கதிர்விடு திருமணி யங்கைக் கொண்டதொத்
தெதிர்வது மிறந்தது மெய்தி நின்றதும்
அதிர்வறு தவவிளக் கெறிப்பக் கண்டவன்
பதரறு திருமொழி பணிக்கு மென்பவே 2850

[கதிர்-ஒளி; அங்கை-உள்ளங்கையில்; அதிர்வு-நடுக்கம்; எதிர்வு-எதிர்கால நிகழ்ச்சி.]

'மாதவன் என்னும் பெயர் பெற்ற மலையினின்றும் அம்மலையின் அழகிய சிகரம்போல் பற்களும், பவளத் துண்டை அணிந்தது போன்ற உதடுகளும் உடைய, வாயில் இருந்து அறவுரைகள் அருவிகளைப் போல வீழ, சீவகன் பிறவித்துயர் அற அவ்வற உரைகளாகிய அருவியிலே திளைத்தான். முடிவற்ற இனிய அவ்வற உரைகளைக் கேட்ட பின்னர், 'என்னுடைய பழம் பிறப்புக்களையும்,

அப்பிறப்புகளில் நான் பண்ணின பாவங்களையும், விரைந்தெனக்குத் தெளிவாக்க வேண்டும் அடிகளே' என்று மற்போரிலே வென்று பரந்த திருவிளங்கும் மார்புடைய சீவகன் மாதவச் சாரணரை வேண்டிக் கேட்டுக் கொண்டான்.

உள்ளங்கையிலே வைத்துக்கொண்ட, ஒளிவிடும் அழகிய மாணிக்கமணி அருகில் உள்ளவற்றைத் தெளிவாகப் பிரதிபலிப்பதைப் போல, எதிர்காலம், இறந்த காலம், நிகழ் காலம் என்னும் முக்காலத்தையும், தன் நிலையில் மாறாத தவமாகிய அறவொளி உணர்த்த அறிந்த அத்தவமுனியும், பொய்யற்ற புகழ் மொழிகளினாலே அதைச் சீவகனுக்கும் கூறத் தொடங்கினான்.

## வேறு

**முழுநீர் வளைமேய் தலின்முத் தொழுகிப்**
**பொழிநீர் நிலவின் னிருள்போழ்ந் தரிசிக்**
**கழுநீ ரொழுகக் கழுநீர் மலரும்**
**தழுநீ ரதுதா தகியென் றுளதே** **2851**

[வளை-சங்கு; தழுநீர்-தழுவின நீர்.]

**கயல்பாய்ந் துகளக் கடியன் னம்வெரீஇ**
**வியனீள் சுடர்வெண் மதிசேர் வதுபோல்**
**அயலே யலர்தா மரைசேர்ந் துறையும்**
**வயல்சூழ்ந் தனவூர் வளமார்ந் தனவே** **2852**

[உகள-பிறழ்தலால்; கடி-மிகுதி; வளம்-செல்வம்.]

**அவணத் தவர்கூந் தலகிற் புகையைச்**
**சிவணிச் சிறுகால் கமுகம் பொழில்சேர்ந்**
**துவணுய்த் திடமஞ் செனநின் றுலவும்**
**பவணத் தொருபாங் கினதா லளிதோ** **2853**

[சிவணி-ஒன்றாகப் பொருந்தி; சிறுகால்-தென்றற் காற்று; உவண்-அந்த நாட்டில்; உய்த்திட-புகையைச் செலுத்த; மஞ்சு-வெண்மேகம்.]

'கடலிடைக் கிடக்கவேண்டிய சங்கு நிலத்திடை வந்து, ஊரின் கண்ணுள்ள வீடுகளில் உள்ள அரிசி களைந்த கழுநீரோடு சேர்ந்து மிதக்க, அச்சங்குகளிலிருந்து முத்துக்கள் சிந்தி, நிலவினைப்போல ஒளிவீசிச் சூழ்ந்துள்ள இருளைப் போக்கி, அக்கழுநீரைச் சுற்றிக் கட்டிய அணை போலக் கிடக்க, அவற்றைக் கண்டு நிலவுதான் வந்து விட்டதோ என்று செழுங்கழுநீர்ப் பூக்கள் மலரும் நீர் நிலைகளை உடைய வளமிக்க தாதகி என்னும் பெயருடைய நாடு ஒன்று இருக்கிறது. அந்நாட்டின் நீர் நிலைகளிலே கயல்மீன்கள் பாய்ந்து புரள்வதைக் கண்டு பயந்த அன்னப் பறவைகள், விரிந்த வானத்தின் சூரியனைப் பால் நிலவு சென்று தழுவிக்கொள்வதைப் போல, அருகே மலர்ந்துள்ள செந்தாமரை மலர்களைத் தழுவிக்கொண்டு வாழும் வளமிக்கதாகிய அந்நாட்டின் ஊர்கள், செல்வச் சிறப்புடையன. அந்நாட்டில் வசிக்கின்ற மக்கள் தம் கூந்தலுக்கு இட்ட அகில் புகை யோடு பொருந்தி, வீசுகின்ற தென்றல் காற்று, கமுகமரச் சோலையை அடைந்து அதன் மணத்தையும் பெற்று, வானமெங்கும் பரவி நிறைந்து நிற்க, நாகலோகத்தின் ஒரு பகுதியோ இது என்று எண்ணத் தோன்றும் அந்நாடு காக்க வேண்டியதோ? அன்று. கேடொன்றும் அங்கு இல்லையால் அதனைக் காத்தலும் வேண்டாததாயிற்று.'

**மதியுஞ் சுடரும் வழிகா ணலுறாப்**
**பொதியும் மகிலின் புகையுங் கொடியும்**
**நிதியின் கிழவன் னினிதா வுறையும்**
**பதிபொன் னகரின் படிகொண் டதுவே** **2854**

[பொதியும்-மறைக்கும்; படி-தன்மை.]

## வேறு

**ஏம மாகிய துப்புர வெய்திய**
**பூமி மாதில கம்மெனும் பொன்கிளர்**
**நாம நன்னகர் வீதிகள் தாமெலாம்**
**காம வல்லி கிடந்தன போன்றவே** **2855**

[துப்புரவு-நுகரும் பொருள்கள்; காமவல்லி-கற்பகக் கொடி.]

வேறு

பைங்கழன் மன்னர் மன்னன் பவணமா தேவ னென்பான்
சங்கினுண் முத்த மொப்பாள் சயமதி பயந்த நம்பி
ஐங்கணைக் காம னன்னா னசோதரன் அரச சீயம்
தங்கிய கேள்வி யாற்குத் தையலார்ச் சேர்த்தி னாரே 2856

[அரசசீயம்-இராச சிங்கம்; தையலார்-பெண்கள்.]

'சந்திரனும் சூரியனும் ஊர்ந்து செல்ல வழிதெரியாதபடி நெருங்கி நிறைந்த அகில்புகையும், மாடங்களில் பறக்கின்ற கொடியும் நிறைந்து, செல்வத்துக்கு இறைவனாகிய குபேரன் இருந்து மகிழ்ச்சியோடு வாழ்கின்ற அழகாபுரிப் பட்டினத்தின் தன்மையைப் பெற்றுத் திகழ்ந்தது, அந்நகர். இன்பம் விளைக்கும் நுகர் பொருட்கள் நிறையக் கொண்ட பூமிமாதிலகம் என்னும் பெயருடைய அழகிய அந்நகரின் பொன்னொளி வீசும் தெருக்கள் எல்லாம் கற்பகக் கொடிகள் படர்ந்த இந்திரனுடைய அமராவதி பட்டினத்தின் தெருக்களை ஒத்தன. இத்தகைய செல்வச் சிறப்புமிக்க அந்நகரில் வாழும், பசும்பொன்னாலான பொற்கழல் அணிந்த, அரசர்க் கரசனாகிய பவணமாதேவன் என்பவனும், சங்கில் உள்ள முத்தைப் போன்ற சயமதி என்பவளும் பெற்ற பிள்ளையாகிய ஐந்து மலரம்புகளும் ஏந்திய காமனைப்போன்ற அழகுடையவனான அசோதரன் என்பவன், அரசர்களாகிய யானைகட்குச் சிங்கம் போன்றவன். கல்வி கேள்விகளில் வல்ல அவனுக்கு அவன் பெற்றோர் தக்கபடி மணம் புரிவித்தனர்.'

இளமுலை பொருது தேந்தா ரெழில்குழைந் தழிய வைகிக்
கிளைநரம் பிசையுங் கூத்துங் கிளர்ந்தவை கனற்ற நாளும்
வளைமயங் குருவ மென்றோள் வாய்நலம் பருகி மைந்தன்
விளைமதுத் தேறன் மாந்தி வெற்றிப்போ ரநங்க
னானான் 2857

[பொருது-பொருதலால்; வைகி-தங்கி; கிளர்ந்தவை-தோன்றியவை.]

இலங்கரி பரந்த வாட்க ணிளையவர் புலவி நீங்கச்
சிலம்பெனும் வண்டு பாடச் சீறடிப் போது புல்லி
அலங்கல்வாய்ச் சென்னி சேர்த்தி யரிமதர் மழைக்கண் பில்க
நலங்கவர்ந் துண்டு நண்ணார் நாமுறக் கழிக்கு மாதோ 2858

[இளையவர்-மகளிர்; நண்ணார்-பகைவர்; நாம்-அச்சம்.]

## வேறு

மங்கையர் தம்மொடு மடங்கன் மொய்ம்பினான்
பங்கயப் பனித்தடஞ் சேரப் பார்ப்பனம்
செங்கயற் பேரின மிரியச் செவ்வனே
பொங்கிமேற் பறந்துவிண் புதைந்த தென்பவே 2859

[பங்கயத்தடம்-தாமரைத் தடாகம்; பார்ப்பு அனம்-குஞ்சுகளையுடைய அன்னப்பறவைகள்.]

'மணம் புரிந்த அம்மங்கையரின் மென்மார்புகள் மோத, தன் மார்பிலணிந்த மலர்மாலைகள் சிதறி, அவை அழகிழந்து வாடும்படி, அவர்களோடுகூடி மகிழ்ந்து, கிளைநரம்புடைய யாழிசையும் கூத்தும் சேர்ந்து உள்ளத்துக்கு உற்சாகமூட்ட, மூங்கிலைப் பழிக்கும் அவர்களின் அழகிய மென்தோள் தழுவி வாய் முத்தம் பருகி, முற்றி வடித்த கள்ளின் தெளிவையும் உண்டு, அம்மன்னன் மகன், தன் காதல் மனைவியரின் இன்பப் போருக்கு ஏற்ற காமவேள் ஆனான். அழகோடு விளங்கும் செவ்வரி படர்ந்த வாள்போலும் நீண்ட கண்களுடைய இள மங்கையர் கொண்ட ஊடல் நீங்கும்படி, அவர்கள் காலில் அணிந்த சிலம்புகளாகிய வண்டுகள் ஒலிசெய்ய, அவர்கள் பாதமலர்களை வருடி, மாலையணிந்த தன் முடியோடு அவற்றைச் சேர்த்து, செவ்வரி படர்ந்த அவர்கள் கண்கள்

மகிழ்ச்சியால் ஆனந்தக் கண்ணீர் வடிக்க, அவர்கள் இன்ப நலத்தைப் பருகி, பகைவர் கண்டஞ்சக் காலம் கழித்தான். சிங்கம் போன்ற வலிவுடைய அசோதரன் தன் மனைவியரோடு நீராடத் தாமரைப் பொய்கையை அடைய, அப்பொய்கையிலே வாழ்ந்திருந்த அன்னப் பறவைகள் இவர்களைக் கண்டு பயந்து, அப்பொய்கை யிலே உள்ள கயல்மீன்கள் சிதற, தம் குஞ்சுகளோடு வானை மறைக்கும்படி மேலெழுந்து பறந்தன.'

### வேறு

**வேய்ந்த வெண்டாமரைக் கோதை போல விசும்பிற்**
**பறக்கின்ற வெள்ளை யன்னம்**
**ஆய்ந்த முகிலாடைத் திங்கட் கண்ணி யாகாய மென்னு**
**மரிவை சாயற்**
**றோய்ந்ததன் காதலன் பற்ற வற்றுச் சொரிகின்ற**
**மேகலைபோல் வீழ்ந்த வாளை**
**பாய்ந்து துகைப்பக் கிழிந்த கூழைப் பனித்தா மரைசூழ்**
**பகற்கோ யிலே 2860**

*[வேய்ந்த-கட்டின; துகைப்ப-கலக்க; கூழை-சேறு.]*

### வேறு

**விரும்புபொற் றட்டிடை வெள்ளிக் கிண்ணமார்ந்**
**திருந்தன போன்றிள வன்னப் பார்ப்பினம்**
**பொருந்துபொற் றாமரை யொடுங்கிப் புக்கொளித்**
**திருந்தகண் டானிளங் கோக்க ணம்பியே 2861**

*[நம்பி-தலைவன்; கோ-அரசன்.]*

**உரிமையுட் பட்டிருந் தொளிக்கின் றார்களைப்**
**பெருமநீ கொணர்கெனப் பேசு காஞ்சுகி**
**ஒருமகற் கீந்தனன் கோயில் புக்கனன்**
**எரிமுயங் கிலங்குவேற் காளை யென்பவே 2862**

*[எரி-நெருப்பு; முயங்கு-தழுவும்.]*

'ஒன்றாகத் தொடுத்த வெள்ளைத் தாமரை மாலை போல, வானை மறைக்கும்படி மேலெழுந்து பறந்த வெள்ளை அன்னங்கள், அழகிய முகிலாகிய ஆடையையும், நிலவாகிய கண்ணியையும் உடைய ஆகாயம் என்னும் மங்கையின் இடையில் அணிந்த மேகலையை, அவளின் இன்ப நலம் நுகர்ந்த கணவன் பிடித்திழுக்க, மேகலையில் இருந்து உதிர்ந்து விழுகின்ற முத்துக்களைப் போல, வாளைமீன் பாய்ந்து கலக்கிய சேற்றினை உடைய, குளிர்ந்த தாமரை மலர்கள் சூழ்ந்த நீராழி மண்டபத்தில் வந்து வீழ்ந்தன. இவ்வாறு, அழகிய பொன் தட்டிலே வெள்ளிக் கிண்ணங்களை நிறைத்து வைத்தது போல, வெள்ளை அன்னப் பறவையின் குஞ்சுகள், மேலும் பறக்க இயலாது பொற்றாமரை மலர்களில் வந்து விழுந்து மறைந்து கிடந்ததை, இளவரசர்கட்கெல்லாம் தலைவனாகிய அசோதரன் கண்டான். அவனோடு இக்காட்சியை அவன் தேவியரும் கண்டு, 'எம் தலைவனே, ஒளிந்திருக்கும் அன்னப்பறவையின் குஞ்சுகளைக் கொண்டு வந்து தருக' என்று வேண்ட, அங்கிருந்த காஞ்சுகி என்பவனிடம் கூறி, அக்குஞ்சுகளைப் பிடித்து அவர்களிடம் தந்து விட்டு, ஒளி உமிழும் வேலேந்திய அசோதரன் அரண்மனையை அடைந்தான்.'

**வடமலைப் பொன்னனார் மகிழ்ந்து தாமரைத்**
**தடமுறை வீர்க்கிவை தடங்க ளல்லவே**
**வடமுலை யெனநடாய் வருடிப் பாலமு**
**துடனுறீஇ யோம்பினார் தேம்பெய் கோதையார்** **2863**

*[நடாய்-நடத்தி; உறீஇ-சேர்ந்து.]*

## வேறு

**கண்டா னொருநாட் கதிர்மாமுடி மன்னர் மன்னன்**
**தண்டா மரைசூழ் தடத்திற்பிரித் தார்கள் யாரே**
**ஒண்தா ரிளங்கோவென் றுழையவர் கூற வல்லே**
**கொண்டிங்கு வம்மின் கொலைவேலவன் றன்னை**
**யென்றான்** **2864**

[உழையவர்-மந்திரிகள்; தடம்-பொய்கை.]

**படுகண் முழவும் பசும்பொன்மணி யாழு மேங்க**
**இடுகுந் நுசுப்பி னவராட விருந்த நம்பி**
**அடிகட் கடிக ளருளிற்றென் றிறைஞ்ச வல்லே**
**கடிவிம்மு தாரான் கழல்கையிற் றொழுது சேர்ந்தான்**

[ஏங்க-ஒலிக்க; இடுகுநுசுப்பு-மெல்லிய இடை.]

'இமயத்தில் பதுமை என்னும் பொய்கையில் தோன்றிய திருமகளைப் போன்ற அம்மங்கையர், அன்னப்பறவைகளின் குஞ்சுகளைப் பெற்றுக்கொண்டு அகமகிழ்ந்து, தாமரைப் பொய்கையிலே தங்கி வாழும் உங்களுக்கு, எங்கள் மார்புகள் தங்கி வாழும் இடம் ஆகுமோ என்று கூறி அவற்றை அன்போடு அரவணைத்துப் பாலமுதம் ஊட்டிப் பாதுகாக்கலாயினர். இப்படி இவர்கள் அன்னக் குஞ்சுகளை வளர்த்து வருவதை, மிக்க ஒளிவீசும் மணிமுடி அணிந்த அரசர்க்கரசனான பவணமாதேவன் ஒருநாள் கண்டான். கண்டவன், குளிர்ந்த தாமரை மலர்ப் பொய்கையினின்றும் இவ்வன்னக் குஞ்சுகளைப் பிரித்தவர் யார் என்று வினவினான். மந்திரிகள் இதனைச் செய்தவர் அழகிய மலர் மாலை அணிந்த இளவரசன் என்று கூற, "கொலை வேலேந்திய அவனை உடனே இங்கே கொண்டு வருக", என்று கட்டளையிட்டான். ஒலியெழுப்பும் கண்களை உடைய முழவும், பசும்பொன்னால் செய்த மணிகள் பூட்டிய யாழும் இன்னிசை பாட, மெல்லிய இடை உடைய மங்கையர்கள் நாட்டியம் ஆட உல்லாசமாக இருந்த இளவரசனிடம் சென்று மந்திரிகள், இளவரசர்க்கு அரசர் இட்ட ஆணை இது என்று விண்ணப்பித்து நிற்க, இளவரசன் உடனே, வீரக்கழல் அணிந்த வேந்தனது திருவடிகளைத் தொழுதவாறே அவனைக் காணச் சென்றான்.'

### வேறு

அணிசே ரிடக்கை விரலால் வலத்தோள்
மணிசேர் வளைவாய் வதின்வைத் துவலத்
தணிமோ திரஞ்சூழ் விரல்வாய் புதையாப்
பணியா முடியாற் பணிந்தா னிளையோன் 2866

[வளை-தோள்வளையை; வலம்-வலப் பக்கம்.]

### வேறு

கிளைப்பிரி வருஞ்சிறை யிரண்டுங் கேட்டியேல்
விளைக்கிய வித்தனா யிருமற் றீங்கெனத்
திளைக்குமா மணிக்குழை சுடரச் செப்பினான்
வளைக்கையார் கவரிகொண் டெறிய மன்னனே 2867

[விளைக்கிய-விளைத்தற்கு; எறிய-வீச.]

### வேறு

அறம்பெரிய கூறின் னலங்கலணி வேலோய்
மறம்புரிகொ ணெஞ்சம்வழி யாப்புகுதந் தீண்டிச்
செறும்பெரிய தீவினைகள் சென்றுகடி தோடி
உறும்பெரிய துன்ப முயிர்க்கொலையும் வேண்டா 2868

[மறம் புரிகொள் - பாவத்தை விரும்பிய; செறும்-வருத்தும்.]

'அழகிய இடது கைவிரலால் வலத் தோளில் அணிந்த மணிகள் இழைத்த வளையைத் திருத்தி, மோதிரம் அணிந்த வலக்கை விரலாலே வாய்பொத்தி, முடி சாய்த்து இளவரசன் தலைவணங்கி நின்றான். நின்ற இளவரசனிடம், ''உறவைப் பிரிப்பதும், பிரித்தவற்றைச் சிறையில் வைப்பதும் ஆகிய இரண்டிற்கும் உள்ள பலனைக் கேட்பாயாக! அவற்றை அறிய, அவ் விரண்டின் பலனும் விளைவதற்கு மூலகாரணமான வினையைச் செய்தவனே சற்றே இரு'' என்று காதுக் குண்டலம் அசைந்து ஒளிவீச, வளையணிந்த மங்கையர் கவரி வீச அரியணைமேல் வீற்றிருந்த மன்னவன்

கூறினான். அவன் மேலும் கூறுவான்: ''பேரறம் எது வென்று சொன்னால், மாலை புனைந்த வேலை உடையவனே, பாவத்தைச் செய்ய விரும்பிய தீவினை அப்பாவத்தைச் செய்த உயிரைத் துன்புறுத்தும்; பெரும் துன்பம் உண்டாக்கும். எனவே உயிர்க் கொலையைக் கைவிடுவதே உயர்ந்த அறம் என்பதை அறிவாய்.''

மெய்யுரைவி ளங்குமணி மேலுலக கோபுரங்கள்
ஐயமிலை நின்றபுகழ் வையகத்து மன்னும்
மையல்விளை மாநரக கோபுரங்கள் கண்டீர்
பொய்யுரையும் வேண்டா புறத்திடுமி னென்றான் 2869

[மையல்-மயக்கம்: புறத்திடுதல்-கைவிடுதல்.]

முளரிமுக நாகமுளை யெயிறுழுது கீற
அளவிறுயர் செய்வரிவண் மன்னரத னாலும்
விளைவரிய மாதுயரம் வீழ்கதியு ளுய்க்கும்
களவுகட னாகக் கடிந்திடுதல் சூதே 2870

[வீழ்கதியுள்-நரகத்தில்; கடனாக-மேற்கொண்டு; சூது-உபாயம்; முளரி-தாமரை.]

மடத்தகைய நல்லார் மனங்கரிய மாற்றார்
பிடர்த்தலையொள் வாள்போற் பிறர்மனைகள் சேரின்
எடுப்பரிய துன்பத் திடைப்படுவ ரின்னா
நடுங்குடைய காமம் விடுத்திடுத னன்றே 2871

[எடுப்பரிய - தாங்குதற்கரிய; நடுக்கு - நடுங்குதல்; இன்னா-துன்பம்.]

''உண்மை உரைத்து வாழ்ந்தால், மறுமையில் மேலுலகில் நமது புகழ், மணிக்கோபுரமாக நிலைத்து நிற்கும்; இம்மையில் இவ்வுலகில் நிலையான இன்பத்தைத் தேடித் தரும். ஆனால் பொய்யுரை கூறி, பொய் வழி நடப்பதோ, இவ்வுலகில் நீங்காத பழியைத் தேடித் தருவதோடு, நரகத்திலும் நிலையான இடத்தைத் தேடித் தரும். இதில் ஐயமில்லை. எனவே பொய் உரை கூறுவதைக் கைவிடுக'' என்றான். அடுத்து ''தாமரைப்

பூவினைப் போன்ற புள்ளிகள் முகத்திலே பொருந்திய யானையின், தந்தக் கொம்புகள் குத்திப் பிளக்கும் தண்டனையைக் களவு புரிந்தார்க்கு இவ்வுலகில் மன்னர் தருவர்; அதோடு நில்லாது நரகத்தில் மிகப் பெருந் துன்பங்களையும் அடையச் செய்யும். எனவே களவைக் கை விடுவதைக் கடமையாகக் கொள்ளவேண்டும்'' என்று கூறி மேலும் தொடர்ந்தவன், ''தம்முடைய மனைவியராகிய இள மங்கையர் மனம் வருந்த, பகைவர் கழுத்தை அறுக்க வைத்த வாளினைப் போன்ற தீயதாகிய, பிறன் மனையாளை விரும்பி அடைபவர், தாங்க முடியாத பெருந் துன்பத்திலே கிடந்து துடிப்பர். ஆகையால் துன்பந்தரும் தீய காமத்தைக் கைவிடுதல் நன்று'' என்றான்.

தெருளிற்பொருள் வானுலக மேறுதற்குச் செம்பொன்
இருளில்படு கால்புகழ்வித் தில்லையெனி னெல்லா
அருளுநக வையநக வைம்பொறியு நையப்
பொருளுநக வீட்டும்பொருள் யாதும்பொரு ளன்றே 2872

[படுகால்-ஏணி; நைய-வருந்த; நக-இகழ.]

பொய்யொடு மிடைந்தபொரு ளாசையுரு ளாயம்
மைபடும் வினைத்துகள் வழக்குநெறி மாயம்
செய்தபொருள் பெய்தகலன் செம்மைசுடு செந்தீக்
கைதவ நுனித்தகவ றாடலொழி கென்றான் 2873

[செம்மை-நடுநிலைமை; கைதவம்-வஞ்சனை; ஆயம்-சூதாடு கருவி.]

காமமுடை யார்கறுவொ டார்வமுடை யாரும்
தாமமொடு சாந்துபுனை வார்பசியி னுண்பார்
ஏமமுடை யார்களிவ ரல்லரிவை யில்லா
வாமனடி யல்லபிற வந்தியன்மி னென்றான் 2874

[கறுவு-கோபம்; தாமம்-மாலை.]

''நன்கு ஆராய்ந்தால் செல்வம் ஆனது, வானுலகம் ஏறுதற்கு உதவும் செம்பொன்னாலாக்கிய, மயக்கமற்ற

ஏணிப்படியாகும்; புகழுக்கும் வித்தாகும். இத்தகைய சிறப்புடைய செல்வமும் நல்வழியில் ஈட்டப் பெறவில்லை என்றால், உலகமும், மற்ற நல்லறங்களும் பழி கூற ஐம்புலன்களும் வருத்தமடையச் சேர்த்து வைத்த அப் பொருளும் பழிக்கும் நிலை உண்டாகும். எனவே தீயவழி களில் தேடியடையும் செல்வம், செல்வம் என்னும் சிறப்புக்குரியது ஆகாது. இவ்வாறு தீயவழிகளில் வந்த செல்வத்தின் மேல்வைத்த ஆசையால் வந்து சேருகின்ற பரத்தையர் கூட்டம், பொய்யான இன்பத்தை நிறைத்து வைத்த பாத்திரம் ஆகும். ஆகையால் பாவத்தைப் பெருக்கித் தீவினையின் வழிச்செலுத்தும், நடுவு நிலைமை யைச் சுட்டழிக்கின்ற நெருப்பாகிய, வஞ்சனை மிகவுடைய, சூதாட்டத்தைக் கைவிடுக. காம இச்சை உடையவர் களும், கோபமும் பேராசை உடையவர்களும், மாலையும் சாந்தும் விரும்பி அணியும் சிற்றின்பப் பிரியர்களும், பசிக்குப் பிறர் வீடு சென்று உணவு கொள்வோரும், நமக்கு ஏற்ற துணைவர்களாக, பாதுகாவலர்களாக மாட்டார்கள். எனவே இத்தீக்குணங்கள் இல்லாத, அருகப் பெருமான் திருவடிகளை அல்லாது பிற அடிகளை வணங்கிப் பணியாதீர்கள்'' என்றான்.

**பூவைகிளி தோகைபுண ரன்னமொடு பன்மா**
**யாலவயவை தங்கிளையி னீங்கியழ வாங்கிக்**
**காவல்செய்து வைத்தவர்கள் தங்கிளையி னீங்கிப்**
**போவர்புகழ் நம்பியிது பொற்பிலது கண்டாய்** 2875

[பூவை-நாகணவாய்ப்புள்; தோகை-மயில்; பன்மா- பல விலங்குகள்.]

## வேறு

**அல்லித்தா ளற்ற போதும் ஆறாதநூ லதனைப் போலத்**
**தொல்லைத்தம் முடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காம்**

புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து புக்குழிப் புக்குப்
பின்னின்று
எல்லையில் துன்ப வெம்தீச் சுட்டெரித் திடுங்க ளன்றே

[தாள்-தண்டு; புல்லி-தழுவி.]

அறவிய மனத்த ராகி யாருயிர்க் கருளைச் செய்யிற்
பறவையு நிழலும் போலப் பழவினை யுயிரோ டாடி
மறவியொன் றானு மின்றி மனத்ததே சுரக்கும் பால
கறவையிற் கறக்குந் தம்மாற் காமுறப் பட்ட வெல்லாம்

[அறவிய-அறம் பொருந்திய; பழவினை-நல்வினை; மறவி-மறத்தல்.]

''சுற்றத்துடன் கூடிய நாகணவாய்ப் பறவைகளும் கிளிகளும், மயில்களும் அன்னப் பறவைகளும் பல விலங்குகளும் மற்றவையும் வருந்திஅழ அவற்றைத் தம் சுற்றத்திலிருந்து பிரித்து இப்பிறவியில் காவலில் வைத்தவர்கள், மறுமையில் தம் உறவைவிட்டுப் பிரிந்து பிறரால் காவலில் வைக்கப்படுவர். எனவே புகழத்தக்கவனே, இது (அன்னப் பறவையின் குஞ்சுகளைப் பிடித்து வைத்தது) அழகற்ற செயல் என்பதை அறிவாய். அல்லித் தண்டு முறிந்து விழுந்த போதும், முற்றிலும் அறுந்து போகாது ஒட்டிக் கொண்டிருக்க உதவுகிற அதன் நூலைப்போல, பாவச் சுமையாகிய இப்பழைய உடல் நீங்கினாலும், செய்த தீவினை நீங்காது உயிரைப் பற்றிக்கொண்டு, அவ்வுயிர் சென்றடையும் உடம்பிலெல்லாம் தானும் புகுந்து கொண்டு, அவ்வுயிரை அடுத்து நின்று, பெருநெருப்பாய்ச் சுட்டெரித்துத் துன்பம் அடையச் செய்யும். எனவே அறநினைவு உடையவராகி, எல்லா உயிர்களுக்கும் அன்பு செய்தால், அதனால் வரும் நல்வினையானது, பறவையை விட்டு நீங்காது தொடரும் அதன் நிழலைப் போல, அந் நல்வினையைச் செய்த உயிரை விட்டு நீங்காது துணை நிற்கும். மேலும் மறக்காமல், நினைத்ததை எல்லாம்

  

கொடுக்கும் வற்றாத சுரபியைப்போல, அவ்வுயிர் விரும்பியவற்றை எல்லாம் கொடுக்கும்.''

**நெடுமணி யூபத் திட்ட தவழ்நடை யாமை நீணீர்த்**
**தொடுமணிக் குவளைப் பட்டந் துணையொடு நினைப்பதே போல்**
**கடுமணிக் கயற்க ணல்லார் காமமும் பொருளுஞ் சிந்தித்**
**தடுமணி யாவி நீப்பா ரறிவினாற் சிறிய நீரார் 2878**

[யூபம்-யாகத்திற்கு நட்ட தூண்; நீரார்-தன்மை உடையவர்.]

**வீறழி வினைசெய் காலன் வைரவாள் வலையிற் பட்டாற்**
**சாறழி குவளை மாலை யவரையுந் தனமு நீக்கி**
**ஆறிழி வரையிற் றோன்று மறநனி நினைப்பர் செம்பொன்**
**ஏறெழி னெறியி னேறி யிருவிசும் பாளு நீரார் 2879**

[வீறு-பெருமை; சாறு-விழா; ஆறிழி-ஆறுதோன்றும்.]

**துன்னிமற் றறத்தைக் கேட்டே துகினெருப் புற்ற தேபோல்**
**மின்னுத்தார் மார்பன் மெய்வெந் தாலியி னுருகிப் பெண்பால்**
**அன்னப்பார்ப் பன்று கொண்ட தடத்திடை விடுவித் திட்டான்**
**பின்னைத்தன் கிளைகள் கூட்டம் பெருந்தகை வித்தி னானே 2880**

[ஆலியின்-ஆலங்கட்டியைப்போல்; கிளை-உறவு.]

''நீண்ட அழகிய மணித்தூணிலே கட்டப்பட்ட தவழ்கின்ற ஆமை, தான் கிடக்கின்ற தோண்டப்பட்ட நீருடைய, பொய்கையையும், மணியையும், குவளைப் பூவையும் தனக்கு நிலையான துணையென்று நினைப்பதைப்போல, கொடிய கயல்போலும் கண்களுடைய மங்கையர் இன்பத்தையும், பயனற்ற செல்வத்தையும் பெரிதென்று நம்பி நல்வினை செய்யாது காலம் கழித்துச் சிறு மதி உடையவர்கள் தங்கள் இன்னுயிரை வீணே

  

இழப்பர். கொல்ல வருகின்ற எமனுடைய, வயிரவாள் போலும் கூருடைய, சாவென்னும் வலைக்குள் அகப் பட்டவர், விழாக் கொண்டாடி மகிழ்கின்ற மிக்க பொருளையும், குவளை மலர்மாலை புனைந்த, இன்பூட்டும் மகளிரையும் விட்டு நீங்கி, ஆறுகள் ஊற்றெடுத்துப் பெருகுகின்ற மலைபோலத் தோன்றும், அறத்தை நினைப்பார்கள். அப்படி நினைப்பவர்கள் ஒளிமிக்க பொன்போலும் உயர்ந்த தவநெறியிலே சென்று, வானுலகை ஆளுகின்ற தன்மை உடையவர்கள் ஆவார்கள்.''

பவணமாதேவன் கூறிய இந்நல்லறங்களைக் கேட்ட வுடன், உடுத்திய ஆடையிலே நெருப்புப் பற்றிக் கொண்டதைப் போலப் பதறி, ஒளிமிக்க மார்புடைய வனாகிய அசோதரன், உடல் துடிக்க, உள்ளம் ஆலங் கட்டியைப்போல உருக ஓடிப்போய், அன்னப்பறவையின் குஞ்சுகளைத் தம் மனைவியரிடமிருந்து விடுவித்து, அன்று அவற்றைப் பிடித்து வந்த தாமரைத் தடாகத்திலேயே கொண்டுபோய் விட்டு, அவை அவற்றின் உறவோடு கூடியிருக்கும்படிச் செய்தான்.

**மெய்ப்படு முதுபுண் டீர்ப்பான் மேவிய முயற்சி போல**
**ஒப்புடைக் காமந் தன்னை யுவர்ப்பினோ டொழித்துப்**
**பாவம்**
**இப்படித் திதுவென் றஞ்சிப் பிறவிநோய் வெருவி னானே**
**மைப்படு மழைக்க ணல்லார் வாய்க்கொண்ட வமுத**
**மொப்பான் 2881**

[மெய்ப்படு-உடம்பில் தோன்றிய; உவர்ப்பினோடு-வெறுப்பினால்.]

**ஆளியாற் பாயப் பட்ட வடுகளி யானை போல**
**வாளிவிற் றடக்கை மைந்தன் வாய்விட்டுப் புலம்பிக் காம**

நாளினு நஞ்சு துய்த்தே னச்சறை யாக நன்பொற்
றோளியர்த் துறந்து தூய்தாத் தவஞ்செய்வ லடிக
ளென்றான் 2882

[ஆளி-சிங்கம்; வாளி-அம்பு; நச்சு அறை-நஞ்சிற்கு இருப்பிடம்; நாளினும்-நாள்தோறும்.]

சிறுவன்வாய் மொழியைக் கேட்டே தேர்மன்னன் றானுஞ் சொன்னான்
உறுகளிற் றுழவ மற்றுன் னொளிமுடித் தாய மெய்தி
அறைகடல் வேலி காத்துன் னலங்கல்வேற் றாய மெல்லாம்
பெறுதகு புதல்வற் கீந்து பின்னைநீ துறத்தி யென்றான்

[தாயம்-அரசவுரிமை; அறை கடல்-ஒலிக்கின்ற கடல்; பெறுதகு-பெறத்தக்க.]

'உடலில் தோன்றிய புண்ணைப் போக்குவதற்கு எடுத்துக்கொண்ட முயற்சியைப்போல, தன் பருவத்துக்கு ஏற்றதாகிய காமவேட்கையை வெறுத்தொதுக்கி, பாவமும் அதன் தன்மையும் இத்தனை கொடியதோ என்று பயந்து, அதற்குக் காரணமான பிறவித் துயரை எண்ணி வருந்தினான், மை தீட்டிய அழகிய கண்களை உடைய மங்கையர்க்கு அவர்வாய் உண்ட அமுதம்போல் இனிக்கின்ற தன்மை உடையவனாக இருந்த அசோதரன். சிங்கங்கள் பாய நடுங்குகின்ற யானையைப்போல, அம்பும் வில்லும் ஏந்திய நீண்ட கையுடையவனாகிய அசோதரன் இவ்வுரை கேட்டு வாய்விட்டுப் புலம்பி, 'காமத்தின் நிலைக்களன் ஆகும்படி, காம இன்பமாகிய நஞ்சினை நாளும் உண்டு கிடந்தேன். எனவே இனியேனும் அழகிய பொன்னணி புனைந்த தோளுடைய மங்கையர் தொடர்பை விட்டு நீங்கி, தூயதாகிய, நல்ல தவத்தைத் தந்தையே, நான் மேற் கொள்வேன்' என்றான். அசோதரன் கூறிய இம்மொழிகளைக் கேட்டு, தேர்ப்படை உடைய மன்னன், பவணமாதேவன் கூறுவான்: 'யானைப் படைகளை உடைய மேலோனே, நீ உன் அரசுரிமையைப்

  

பெற்று, அலை ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகை அன்பாலே காத்து, ஆண்டு முடிந்த பிறகு உன்னுடைய அரசுரிமையையும், நீ உன் வேலால் வென்றாண்ட மற்ற, மற்ற உரிமைகளையும், அவற்றைப் பெறத்தக்க உன் பிள்ளைகளுக்குத் தந்துவிட்டுப் பிறகு நீ துறவறத்தை மேற்கொள்வாயாக'' என்றான்.

கொலைச்சிறை யுய்ந்து போகு மொருவனைக் குறுக வோடி
அலைத்தனர் கொண்டு பற்றி யருஞ்சிறை யழுத்து கின்றார்
தொலைப்பருஞ் சுற்றத் தாரோ பகைவரோ வடிக ளென்ன
விலைப்பெரு மணியை முந்நீர் நடுக்கடல் வீழ்த்த தொத்தான் 2884

[குறுக ஓடி-தொடர்ந்து சென்று; தொலைப்பரு-நீக்குதற்கரிய.]

காதல மல்ல மேனாட் கழிந்தநம் பிறவி தம்முள்
ஏதிலம் யாங்க ளெல்லா மிளிக்கொளு முடம்பி னானும்
ஆதலாற் சுற்ற மில்லை யதுபட்ட வாறென் றம்பூந்
தாதலர் மார்ப னற்புத் தளையறப் பரிந்திட் டானே 2885

[காதலம்-சுற்றம்; ஏதிலம் - சுற்றமாகேம்: அற்புத் தளை-அன்பின் பிணிப்பு.]

நற்பொறி குயிற்றி வல்லான் செய்ததோர் நன்பொற் பாவை
பொற்பொறி கழல வெல்லாப் பொறிகளுங் கழல்வ தேபோற்
சொற்பொறி சோர வெல்லாப் பொறிகளுஞ் சோர்ந்து நம்பன்
இற்பொறி யின்ப நீக்கி யிராயிரர் சூழச் சென்றான் 2886

[பொறி-எந்திரம்; பொறி - நல்வினை; குயிற்றி-அமைத்து.]

'கொலைத் தண்டனையில் இருந்து தப்பி ஓடும் ஒருவனைத் துரத்திப் பிடித்து அவனை அத்துன்பச்

சிறைலேயே போட்டடைத்துத் துன்புறுத்துகின்றவர், அவனுக்குப் பகைவரே அன்றி உறவினர் ஆவார்களா, என் தந்தையே கூறுக' என்று அசோதரன் வினவினான். அது கேட்ட பவணமாதேவன், தன் மகன் பிரியப் போவதை எண்ணி மிக்க விலை உடைய மாணிக்கத்தைக் கடலிலே தவறவிட்டதைப்போல நிலை கலங்கலானான். இவ்வாறு கலங்கிய அரசன், 'முன்பு எடுத்த பிறவிகளிலே நாங்கள் எல்லாம் இவனுக்கு உறவாக இருந்ததில்லை. இனிவரும் பிறப்புக்களிலும் உறவினர் ஆகமாட்டோம்; ஆகையால் உறவு முறை என்று ஒன்றுமில்லை; என்றாலும் அசோதரன் கருத்து அதுவாக இருக்கும் என்றால், அன்பாகிய தளை விடுபடட்டும்' என்று மலர் மாலை அணிந்த பவணமாதேவன் அசோதரனோடு தான் கொண்ட உறவை, பிணைப்பை அறுத்துக் கொண்டான். இயக்குதற்கு உரிய நல்ல விசைப் பொறியை உள்ளே பொருத்தி, கைத்திறம் வல்லவன் ஆக்கிய பொற்பாவை ஒன்று, அவ்விசைப் பொறி குலைய எல்லாம் கழன்று விழுவதைப்போல, அரசனுடைய சொல்லாகிய விசை ஒன்று கழல, அசோதரன் தன் ஐம்புலன் இச்சை எல்லாம் அற்று விழ, நல்வினைப் பயனால் வந்துறும் இல்லற இன்பத்தையும் விட்டு, இரண்டாயிரம் அரசர்கள் சூழ்ந்து வரத் துறவை மேற்கொண்டான்.'

**தணக்கிறப் பறித்த போதுந் தானளை விடுத்தல் செல்லா**
**நிணப்புடை யுடும்ப னாரை யாதினால் நீக்க லாகும்**
**மணப்புடை மாலை மார்ப னொருசொலே யேது வாகக்**
**கணைக்கவி னழித்த கண்ணார்த் துறந்துபோய்க் கடவு**
**ளானான் 2887**

[தணக்கு-வால்; நிணம்-தசை; உடும்பனார்-உடும்பை யொப்பவர்.]

**தூமமார்ந் தணங்கு நாறுஞ் சுரும்புசூழ் தாரி னானும்**
**தாமமா ரொலிய லைம்பாற் சயமதித் திருவு மார்ந்த**

காமமா சுண்ட காதற் கதிர்வளைத் தோளி னாரும்
நாமநாற் கதியு மஞ்சி நற்றவத் துச்சி கொண்டார் 2888

[தூமமார்ந்து-அகிற்புகை ஊட்டப்பெற்று; அணங்கு-தெய்வம்; ஒலியல்-மாலை.]

## வேறு

ஆசார நாணத் தவஞ்செய்தலர்க் கற்ப கத்தார்ச்
சாசார னென்னுந் தகைசாலொளித் தேவர் கோவாய்
மாசார மாய மணிவானுல காண்டு வந்தாய்
தூசார்ந்த வல்குற் றுளும்புங்நலத் தாரொ டென்றான்

[ஆசாரம்-ஒழுக்கம்; மாசாரம்-பெரும் பயன்.]

'வால் அறுந்து போகும்படிப் பிடித்து இழுத்தாலும் தான் கவ்விய வங்கினைக் கை விடாத, திரண்ட சதை உடைய உடும்பைப் போன்றவர்களை, எந்த வகையிலும் இல்வாழ்க்கையினின்றும் பிரிக்கமுடியாது. ஆனால் மண மிக்க மாலையணிந்தவனாகிய அசோதரன், முன் பிறவி யிலே செய்த நல்வினைப் பயனின் காரணமாக, அவன் தந்தை கூறிய ஒரு சொல்லே துறவுக்குக் காரணமாக, அம்பினைப் பழிக்கும் அழகிய கண்களை உடைய மகளி ரைப் பிரிந்து இல்லறத்தை விட்டுச் சென்று, தவவேடம் தாங்கினான். அகிற்புகை நிறைந்து தெய்வ மணங்கமழும், வண்டுகள் மொய்த்துப் பாடும், மாலையணிந்த பவணமா தேவனும், ஒளிமிக்க மாலை சூடிய ஐம்பால் கூந்தல் உடைய திருமகள் போன்றவளாகிய சயமதியும், அநுப வித்து மகிழ்ந்த காமம் என்னும் தூசிலே தோய்ந்த, வளை யணிந்த தோளுடையவர்களாகிய அசோதரன் மனைவி மார்களும், அச்சந்தரும் நால்வகைப் பிறப்பிலே மீண்டும் வந்து பிறப்பதற்குப் பயந்து, நல்ல தவத்தை மேற் கொண்டனர்.

'இவ்வாறாக நீ தவநெறி மார்க்கங்கள் வெட்கும்படி யாக, சிறந்த தவத்தைச் செய்து பூத்த புதுமலர்க்

கற்பக மாலையணிந்த சாசரன் என்பவனாய்ப் பிறந்து, பெருமை மிக்க, பெருஞ் செல்வச் சிறப்புடைய, இந்திர லோகத்தை ஆண்டு, இப்போது, ஆடை அணிந்த அல்குலும் அழகு ததும்பும் மேனிவனப்பும் உடைய மனைவியருடன் இவ்வுலகில் வந்து பிறந்திருக்கிறாய்' என்று (சாரணர்) கூறினர்.

**மின்னார் சிலம்பிற் சிலம்புங்குர லன்ன மேனாள்**
**மன்னா பிரித்தாய் பிரிந்தாய்சிறை வைத்த தனாற்**
**பொன்னார மார்ப சிறைப்பட்டனை போலு மென்றான்**
**இன்னாப் பிறவிப் பிணிக்கின்மருந் தாய சொல்லான் 2890**

[மின்னார்-ஒளி நிறைந்த; பிணி-நோய்.]

## வேறு

**மஞ்சிவர் மணிவரை யனைய மாதவன்**
**வஞ்சமி லறவுரை பொதிந்த வாய்மொழி**
**அஞ்சின னிருந்துழி யம்பு வீழ்ந்தென**
**நஞ்சுமிழ் வேலினா னடுங்க வீழ்ந்ததே 2891**

[இவரும்-செல்லும்; வரை-மலை.]

**வாரணி மணித்துடி மருட்டு நுண்ணிடைக்**
**காரணி மயிலனார் சூழக் காவலன்**
**ஏரணி மணிமுடி யிறைஞ்சி யேத்தினான்**
**சீரணி மாதவர் செழும்பொற் பாதமே 2892**

[அணி-அழகு; மருட்டும்-மயக்கும்; கார்-கார்காலம்.]

**நலத்திரு மடமக ணயந்த தாமரை**
**நிலத்திருந் திருசுடர் நிமிர்ந்து செல்வபோல்**
**உலப்பருந் தவத்தினா லோங்கு சாரணர்**
**செலத்திரு விசும் பொளிசிறந்த தென்பவே 2893**

[நலம்-அழகு; நயந்த-விரும்பிய; உலப்பரும்-கெடாத; செல-போக.]

'ஒளி நிறைந்த, ஒலிக்கும் சிலம்பைப் போன்ற குரலுடைய அன்னப் பறவையின் குஞ்சுகளை அரசே, முற்பிறவியிலே நீ பிரித்து வைத்தாய். எனவே இப்பிறவியில் நீ உன் தாயாரை விட்டுப் பிரிந்தாய். அவற்றைப் பிரித்துச் சிறை வைத்ததினால் போலும் பொன்மாலை மின்னும் மார்பு உடையவனே, நீயும் சிறைப்பட்டனை' என்று விளக்கினான் துன்பம் மிக்குடைய பிறவித் துயரைப் போக்கும், மாமருந்து போன்ற, அருள்வாக்கினை உடைய சாரணன். மழைமேகம் தவழ்கின்ற மலைபோன்ற அசையாத மனஉறுதி உடைய தவமுனிவனின் பொய்யற்ற அறவுரைகள், அரசுரிமையை அஞ்சி இருந்தபோது, வந்துவிழும் அம்பினைப்போல நஞ்சு தோய்ந்த வேலேந்திய சீவகன் காதிலே அவன் நடுங்க விழுந்தன. வார்க்கச்சும் மணியும் அணிந்த, உடுக்கையைப் பழிக்கும் மெல்லிடை உடைய, கார் காலத்து மயிலினம் போன்ற அழகிய மகளிர் பணிந்து நிற்க, பெருமைக்குரிய மாதவச் சாரணரின் புகழ்மிக்க பொன்னடிகளை, அழகு மிக்க தன் மணிமுடி பணியச் சீவகன் வணங்கி வாழ்த்தினான்.

அப்போது அழகும், இளமையும், எழிலுமிக்க திருமகள் விரும்பி ஏற்கும் தாமரைப் பூவினிடத்திலே இருந்து, இரண்டு ஒளிக்கதிர்கள் எழுந்து செல்வதைப் போல, தீமையற்ற தூய தவத்தால் உயர்ந்த சாரணர் இருவரும் வானிலே எழுந்து செல்ல, மிக்க அழகுடைய ஒரு பேரொளி வானம் எங்கும் நிறைந்து திகழ்ந்தது.

# 21. தாயத்தீர்வு

சாரணர் போயபின் சாந்த மேந்திய
வாரணி வனமுலை வஞ்சிக் கொம்பனார்
போரணி புலவுவேற் கண்கள் பூத்தன
நீரணி குவளைநீர் நிறைந்த போன்றவே 2894

*[சாந்தம்-குங்குமச்சாந்து; நீரணி-நீர்நிலை.]*

பொன்வரை நிலாக்கதிர் பொழிந்து போர்த்தபோல்
தென்வரைச் சந்தனந் திளைக்கு மார்பினான்
மின்னிவர் நுசுப்பினார் மெலிய மெல்லவே
இன்னுரை கொடான்கொடிக் கோயி லெய்தினான் 2895

*[தென்வரை-பொதியமலை.]*

அஞ்சுரை பொழிந்தபா லன்ன மென்மயிர்ப்
பஞ்சிமெல் லணையின்மேற் பரவை யல்குலார்
மஞ்சிவர் மதிமுக மழுங்க வைகினார்
நஞ்சுயிர்த் தணிநலங் கரிந்து நையவே 2896

*[அம் சுரை-அழகிய மடி; மழுங்க-ஒளிகெட.]*

சாரணர் இருவரும் சென்றபின், சந்தனக் குழம்பு பூசிய, வார்க்கச்சினை அணிந்த, அழகிய மார்பினை உடைய வஞ்சிக்கொடி போன்றவர்களின் இன்பப் போருக்கு எதிர்கொள்ளும், ஊன் தோய்ந்த வேல் போலும் கண்கள் பொய்கையில் பூத்த குவளை மலர்கள் பனிநீர் சிந்துவதுபோல் கண்ணீர் உகுத்தன. மேரு மலையின்மேல் நிலவின் ஒளி படிந்து நிறைந்திருப்பது போலத் தென் பொதிகைச் சந்தன மணம் நிறைந்து கமழும் மார்புடைய சீவகன், மின்னலைப் பழிக்கும் மெல்லிய இடை உடைய காந்தருவதத்தை முதலான மங்கையர் வருந்த, அவர்க்கு இன்னுரை கூறாமல், அங்கிருந்து சென்று கொடிமதில் சூழ்ந்த அரண்மனையை அடைந்தான். பரந்த அல்குலுடைய அவன் தேவியரும்,

நஞ்சு போன்ற வெப்பப் பெருமூச்சு விட்டு, வேதனையால் தங்கள் அழகும் நலமும் தீய்ந்து போக, முகிலூறும் முழுமதி போன்ற முகம் வனப்பிழந்து வாட அழகிய கறவையின் மடி சுரந்த பாலின் நுரை போன்ற, தூய, வெண்ணிறத் தூவியும், பஞ்சும் பரப்பிய பஞ்சணை மேல் அமர்ந்தனர்.

வேறு

**வெள்ளெயிற் றரவு மேய்ந்த மிச்சிலின் மெலிந்து மேகப்**
**புள்வயிற் பிறந்த புட்போ லொன்றலா துரைத்தல் தேற்றார்**
**கள்வயிற் றலர்ந்த கோதைக் கலாபவில் லுமிழு மல்குல்**
**ஒள்ளெயிற் றவர்கள் பொன்பூத் தொளிமணி யுருவ**
**நீத்தார் 2897**

[மேய்ந்த - உண்ட; புள் - பறவை; மிச்சில் - மிச்சமானது.]

**கிளிச்சொலி னினிய சொல்லார் கிண்கிணி சிலம்பொ**
**டேங்கக்**
**குளித்துநீ ரிரண்டு கோலக் கொழுங்கயல் பிறழ்ப வேபோற்**
**களித்துநீர் சுமந்து வாட்கண் கலாஅய்ப்பிறழ்ந் தலமந் தாட**
**அளித்ததா ரலங்க லாழி யவன்றுற வுரைத்து மன்றே 2898**

[ஏங்க-ஒலிக்க; கலாய்-கோபித்து; அலமந்து-வருந்தி.]

**புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற**
**கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த**
**துனைகுரன் முரசத் தானைத் தோன்றலைத் தம்பி**
**னென்றான்**
**நனைமல ரலங்கற் கண்ணி நந்தனுந் தொழுது சேர்ந்தான்**

[நனை-தேன்; சீற்றம்-கோபம்; கதழ்-மிகுதி.]

வெண்ணிறப் பற்களை உடைய பாம்பு கொள்ள ஒளியிழந்து இருக்கும் நிலவைப் போல, தங்களின் அழகு நலம் இழந்து, வானம்பாடி அவ்வான மழையைத் தவிர வேறொன்றையும் விரும்பிப் பாடாத தன்மைபோல், சீவகனிடத்துக் கொண்ட அன்பைத் தவிர வேறெதையும்

வெளிச் சொல்லத் தெரியாதவர்கள் ஆகிய, தேன் நிறைந்த மலர்மாலையும், சிற்றிடையும், முத்துப் பல்லும் உடைய அவன் தேவியர் மேனி பசந்து அழகு வண்ணம் இழந்து நின்றனர். கிளியினைப் போல இன்மொழி பேசும் மங்கையர், கிண்கிணிச் சதங்கையும் பாதச் சிலம்பும் ஒலிக்க, அழகிய கயல் மீன்கள் இரண்டு நீரிலே தவழ்ந்து புரள்வதைப் போல, ஒளிமிக்க கண்கள் மகிழ்ச்சியால் ஊடியும் களித்தும் ஆனந்தக் கண்ணீர் சொரிய, முன்பு அவர்களுக்குத் துணையாய் இருந்த, மலர்மாலை புனைந்த தருமச்சக்கரம் ஏந்திய, சீவகனின் துறவை இனிக் கூறுவோம்.

கூரிய கொம்பு அழுந்துமாறு குத்திக் கிழித்துப் புலியோடு போரிடுகின்ற, இடிபோன்ற குரலுடைய, சீறிப் பாய்கின்ற எருதின் தோலைப் போர்த்திய, பேரொலி எழுப்பும் முரசுப்படை உடைய நந்தட்டனை, அழைத்து வருக என்று சீவகன் பணிக்க, தேன்வழியும் மலர்மாலையும், முடிக்கண்ணியும் உடைய நந்தட்டனும் அங்கு வந்து சீவகனை வணங்கி நின்றான்.

**கொடியணி யலங்கன் மார்பிற் குங்குமக் குன்ற மன்னான்**
**அடிபணிந் தருளு வாழி யரசரு ளரச வென்னப்**
**படுசின வெகுளி நாகப் பைத்தலை பனித்து மாழ்க**
**இடியுமிழ் முரச நாண வின்னண மியம்பி னானே 2900**

[பைத்தலை - படத்தையுடைய தலை; பனித்து- நடுங்கி.]

**ஊனுடைக் கோட்டு நாகான் சுரிமுக வேற்றை யூர்ந்து**
**தேனுடைக் குவளைச் செங்கேழ் நாகிளந் தேரை புல்லிக்**
**கானுடைக் கழனிச் செந்நெற் கதிரணைத் துஞ்சு நாடு**
**வேன்மிடை தானைத் தாயம் வீற்றிருந் தாண்மோ**
**வென்றான் 2901**

[தாயம்-அரசுரிமை; ஆண்மோ-ஆள்வாயாக; நாகு- நத்தை.]

கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழன நாடு
சுரும்புலாங் கண்ணி விண்ணோர் துறக்கமும் வீடும்
வேண்டேன்
அரும்புவா யலர்ந்த வம்மென் தாமரை யனைய பாதம்
விரும்பியான் வழிபட் டன்றோ வாழ்வதென் வாழ்க்கை
யென்றான் **2902**

[கண்ணி - மாலை; துறக்கம் - சுவர்க்கம்; வீடு- மோட்சம்.]

வரிசையாக அணிந்த மாலை புரளும் மார்புடையவனாகிய குங்குமக் குன்று போன்ற சீவகனின் அடிபணிந்து, 'அரசர்க்கு அரசே நீ வாழ்க! நின் ஆணை எதுவெனப் பணித்தருள்க', என்று நந்தட்டன் வேண்டினான் சீறிப்பாயும் நாகப்பாம்பின் படமுடைய தலை நடுங்கும்படி இடிக்கும் இடியோசை போலும் ஒலி எழுப்பும் முரசும் வெட்கும்படியான, உறுதியான குரலில் சீவகன் சொல்லத் தொடங்கினான்.

'ஊனுடைய வளைந்த முதுகினையும், சுருங்கிய முகத்தினையும் உடைய நத்தை, கழனியின் வரப்பிலே துயிலும் காளையின் முதுகின் மேலும், சிவந்த கன்றின் முதுகின் மேலும் ஏறிச் சென்று, இளந்தேரையைத் தழுவியபடி, தேன்மிக்க குவளை மலர்கள் பூத்துக் கிடக்கும் வயல்களில், காடுபோல் வளர்ந்து தலை சாய்ந்து இருக்கும் செந்நெல் கதிராகிய படுக்கையில் தூங்கி இளைப்பாறிக் கொள்ளும், வளமிக்க நாட்டையும், வேல் மிக்க படை உடைய அரசுரிமையையும் பெற்று நீ ஆள்வாயாக', என்றான். அதனைக் கேட்ட நந்தட்டன், 'கரும்புக் காடுகளன்றி வேறு காடுகளே இல்லாத வயல் சூழ்ந்த மருதநிலமிக்க நாடும், வண்டுலவும் மலர்க்கண்ணி சூடிய வானவர் சொர்க்கமும், வீடும் எனக்குத் தேவையில்லை. அரும்பு விரிந்து மலர்ந்ததைப் போன்ற, அழகிய உன் தாமரை மலர்ப்பாதங்களைப் பணிந்து வாழ்வதே, என் வாழ்வின் குறிக்கோள்' என்றான்.

  

குன்றென மருண்டு கோல மணிவண்டுங்
குழாங்கொ டேனும்
சென்றுமொய்த் திமிரும் யானைச் சீவகற் கிளைய நம்பி
மன்றல்வீற் றிருந்து மின்னு மணிக்குவ டணைய தோளான்
ஒன்றுமற் றரசு வேண்டா னுவப்பதே
வேண்டி னானே 2903

[கோலம்-அழகு; இமிரும் - ஒலிக்கின்ற; மன்றல்-மணம்.]

பொலிவுடைத் தாகு மேனும் பொள்ளலிவ்
வுடம்பென் றெண்ணி
வலியுடை மருப்பி னல்லால் வாரணந் தடக்கை வையா
தொலியுடை யுருமுப் போன்று நிலப்படா
தூன்றின் வைவேற்
கலிகடிந் துலகங் காக்குங் காளையைக்
கொணர்மி னென்றான் 2904

[பொள்ளல்-உள்ளீடில்லாமை; வாரணம்-யானை.]

கழுமணி யார மார்பிற் காவலன் மக்கள் காய்பொன்
எழுவளர்ந் தனைய திண்டோ ளிளையவர் தம்முண் மூத்த
தழுமலர்க் கொம்பு போலுந் தத்தைநாட் பயந்த நம்பி
விழுமணிப் பூணி னானை வீற்றிரீஇ
விதியிற் சொன்னான் 2905

[எழு-கணையமரம்; வீற்றிரீஇ-தனியே இருக்கச் செய்து.]

மலையென்று மயங்கித் தும்பியும் வண்டும் போய் மொய்த்து ஒலியெழுப்பிக் கொண்டிருக்கும், யானைப் படை உடைய சீவகனுக்கு இளையவனான நந்தட்டன், அரசுரிமையை ஒருசிறிதும் விரும்பாது, மணம் வீசும் மலர் மாலை சூடிய மாணிக்க மலைபோன்ற தோளுடைய சீவகன் விரும்பிய துறவையே தானும் மேற்கொள்ள விரும்பினான். 'வெளியே பார்க்க அழகாகத் தோன்று கிறது என்றாலும், உள்ளே வலிமை இல்லாதது இவ்வுடல்

என்பதை அறிந்து, வலுவுள்ள தன் தந்தக் கொம்புகள் மேலல்லாது, ஒலிக்கும் இடிபோலப் பிளிறுகின்ற களிறு தன் துதிக்கையை நிலமிசைக் கிடக்கவிடாது. அதைப் போலப் பகைவர் ஊனைப் பிளந்து உலகை வறுமை யினின்றும் காத்தளிக்கின்ற (வல்லமை உடையவனிடமே அரசுரிமையை ஒப்படைப்பது சரியாகும். நந்தட்டன் அரசுரிமையை விரும்பவில்லை. ஆகையால் தன் மகனிடம் தந்தான் என்று கொள்க) வலிமை உடையவனாகிய, காளை சச்சந்தனை அழைத்து வருக' என்றான். சிறந்த மணிமாலை புனைந்த மார்புடையவனாகிய சீவகன், பொன்மணி புனைந்த தூண்போன்ற தோளுடைய இளைஞர்களில், மலர் பூத்துக் குலுங்கும் கொடிபோன்ற காந்தருவதத்தையின் மூத்த மகனாகிய மணிப்பூண் அணிந்த சச்சந்தனை அழைத்து வந்து அமரச் செய்து அறவுரை கூறத் தொடங்கினான்.

பால்வளை பரந்து மேயும் படுகடல் வளாக மெல்லாம்
கோல்வளை யாமற் காத்துன் குடைநிழற் றுஞ்ச நோக்கி
நூல்விளைந் தனைய நுண்சொற் புலவரோ
டறத்தை யோம்பின்
மேல்விளை யாத வின்பம் வேந்தமற்
றில்லை கண்டாய் 2906

[பால்வளை-பால்போலும் வெண்ணிறமுடைய சங்கு; வளாகம்-உலகப் பரப்பு; துஞ்ச-தங்கும்படி.]

வாய்ப்படுங் கேடு மின்றாம் வரிசையி னரிந்து நாளும்
காய்த்தநெற் கவளந் தீற்றிற் களிறுதான் கழனி மேயின்
வாய்ப்பட லின்றிப் பொன்றும் வல்லனாய்
மன்னன் கொள்ளின்
ஈத்தநீர் ஞால மெல்லா நிதிநின்று சுரக்கு மன்றே 2907

[வாய்ப்படும்-உணவாகும்; கழனி-வயலில்; பொன்றும்-அழிந்துவிடும்; தீற்றின்-உண்ணச் செய்தால்.]

  

**நெல்லுயிர் மாந்தர்க் கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற்**
**புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை**
**மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்**
**நல்லுயிர் ஞாலந் தன்னு ணாமவே னம்பி யென்றான் 2908**

[புல்லுயிர் - அற்பமான உயிர்.]

'வெண்ணிறச் சங்குகள் ஊர்ந்து திரியும், கடல் சூழ்ந்த நிலப்பரப்பையெல்லாம், நீதிமுறை தவறாது அரசாண்டு, உன் குடை நிழலின் கீழ்க் கொண்டுவந்து பாதுகாத்து, நூலறிவின் பெரும்பயன் போன்ற வருமுன் உரைக்கும் மந்திரிகளுடன் சேர்ந்து நாட்டையும் நல்லறத்தையும் பாதுகாப்பாயானால், அதைத் தவிர வேறெதிலும் உனக்கு இன்பம் உண்டாகாது என்பதை இளவரசே, அறிந்து கொள்க. அதோடு, முற்றிக் காய்ந்த நெல்லை அறுத்துச் சோறாக்கி ஒவ்வொரு கவளமாக யானைக்குத் தந்து வந்தால் அதற்கும் உணவாகும்; சேதமும் இருக்காது. இவ்வாறில்லாது யானையே நெல் விளைந்த கழனியிலே மேயும்படி விட்டால், அதன் வாயில் சென்று உணவாவதற்கு அதிகமாக அதன் காலில் மிதிபட்டு அழிவது அதிகமாக இருக்கும். அதைப் போல அரசன் முறைப்படி இறைகொள்பவனாக இருந்தால், கடல் சூழ்ந்த உலகமெல்லாம் அவனுக்கு வேண்டிய செல்வத்தைக் கொடுத்துதவும். இன்னுங் கேள்! மக்களுக்கு உயிர்த் துணையாவது நெல் அன்று; நீரும் அன்று. சொல்லப்போனால் இவை இரண்டும் அவர்களுக்கு அற்பமானவையே! எனவே, புகை கக்கிப் பொங்கும் எரி நெருப்பின் ஒளி உடைய வாளேந்திய கையும், போர் யானைப் படையும், வெற்றி மாலையும், வெண்கொற்றக் குடையும் உடைய மன்னவனே, உலகிலே மக்களுக்குச் சிறந்த உயிர் என்பதை, பகைவர் கண்டஞ்சும் வேலேந்திய இளவலே, அறிந்து கொள்க' என்றான்.

**ஆர்வலஞ் சூழ்ந்த வாழி யலைமணித் தேரை வல்லான்**
**நேர்நிலத் தூரு மாயி னீடுபல் காலஞ் செல்லும்**

ஊர்நில மறிதல் தேற்றா தூருமேன் முறிந்து வீழும்
தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே 2909

[ஆர்-ஆரக்கால்; ஆழி-சக்கரம்.]

காய்ந்தெறி கடுங்கற் றன்னைக் கவுட்கொண்ட களிறு போல
ஆய்ந்தறி வுடைய ராகி யருளொடு வெகுளி மாற்றி
வேந்தர்தாம் விழைப வெல்லாம் வெளிப்படார் மறைத்தல் கண்டாய்
நாந்தக வுழவ ரேறே நன்பொரு ளாவ தென்றான் 2910

[காய்ந்து - கோபித்து; கவுள் - கன்னத்தினுட்புறம்; நாந்தகம்-வாள்.]

குடிபழி யாமை யோம்பிற் கொற்றவேன் மன்னர் மற்றுன்
அடிவழிப் படுவர் கண்டா யரும்புகழ் கெடுத லஞ்சி
நொடியலோ ரெழுத்தும் பொய்யை நுண்கலை நீத்த நீந்திக்
கொடியெடுத் தவர்க்கு நல்கு கொழித்துணர் குமர வென்றான் 2911

[குடி பழியாமை-குடி மக்கள் தன்னைப் பழியாமல் நொடியல்-சொல்லாதே; நல்கு-கொடு.]

'ஆரக்காலின் மேல் உருள்கின்ற வளைந்த சக்கரத்தை உடைய, ஆடும் மணிபுனைந்த, அழகிய மணித்தேரை, அதைச் செலுத்த வல்லவன், நிலத்திலே ஒழுங்காகச் செலுத்துவானாயின், கெடாது நீண்ட காலம் தேர் ஓடிக்கொண்டிருக்கும். அவ்வாறில்லாமல் அதைச் செலுத்தும் இடமும் வகையும் தெரியாமல் செலுத்தினால், தேர் முறிந்து விழுவதோடு தானும் அழிந்து சாவான். அரசர் நிலையும் இதைப் போன்றதே. கோபத்தால் ஒருவன் தன்மேல் எறிந்த கருங்கல்லைக் கன்னக் கதுப்புகளில் மறைத்து வைத்துக்கொண்டு, பழிவாங்கக் காலம் வரும்வரை காத்திருக்கின்ற யானையைப்போல் இல்லாமல், மிக்க அறிவும் அன்பும் உடையவராகிப்

பகைவர்மேல் கொண்ட கோபத்தை எல்லாம்விட்டு, அவரைப் பழிவாங்க எண்ணும் நினைவைக் கைவிடுவது, வாள்வீரர் தலைவனே! வேந்தர்க்குரிய கடமையாகும். மேலும், குடிமக்கள் இகழாதவாறு அரசாண்டு நீ அவர்களைக் காத்து வந்தால், வெற்றிவேல் மன்னரும் மற்றோரும் உன் அடிபணிந்து கிடப்பார்கள்! எனவே நீ, உன்புகழ் கெடுவதைக் கண்டு பயந்துங்கூட பொய் வார்த்தை பேசாதே! கல்வி கேள்வியாகிய பெருங் கடலைக் கடந்து புகழ்பெற்ற அமைச்சர்க்கு என்றும் அன்புடையவனாக, தீமையை விலக்கி நல்லதையே கைக் கொள்ளும் என் அன்புக்குரியவனே, நடந்துகொள்' என்றான்.

**சேனடங் தாங்கு மோடிச் சென்றுலாய்ப் பிறழும் வாட்கண்**
**மான்மட நோக்கின் மாதர் மாலைநாட் பயந்த மைந்தன்**
**கானடந் தனைய மான்றேர்க் காளையைக் காவன் மன்னன்**
**தானுட னணிந்து தன்போ லிளவர சாக்கி னானே 2912**

[மாதர்-காதல்.]

**கூரெயி றணிந்த கொவ்வைக் கொழுங்கனிக் கோலச் செவ்வாய்**
**ஏரணி மயிலஞ் சாய லிலக்கணை யீன்ற சிங்கம்**
**சீருடைச் செம்பொற் கண்ணிச் சிறுவனைச் செம்பொன் மாரி**
**பேரறைந் துலக முண்ணப் பெருநம்பி யாக வென்றான்**

[பேரறைந்து-புகழ்ந்து பாடி; சீர்-அழகு.]

**தன்கழ றொழாத மன்னர் தாஞ்சுமந் தேந்தி நின்ற**
**பொன்றிக ழுருவிற் றம்பி புதல்வனைத் தந்து போற்றி**
**மின்றிகழ் முடியுஞ் சூட்டி வீற்றிரீஇ வேந்து செய்தான்**
**குன்றினங் குழீஇய போலுங் குஞ்சரக் குழாத்தி னானே**

[குன்றினம்-மலைக்கூட்டம்; குழீஇய-சேர்ந்த.]

கெண்டைமீன் நடப்பதைப்போலக் காதுவரை ஓடிப் புரள்கின்ற, அழகிய வாள்போலும் கண்களும், மான்

போன்ற பார்வையும் உடைய குணமாலை முதல் பெற்ற பிள்ளையாகிய, காற்றைப்போல விரைந்து செல்லும் குதிரை பூட்டிய தேருடைய, காளை சுதஞ்சணனை, சீவகன், உடனிருந்து பட்டங்கட்டி, கந்துக்கடனுக்குத் தான் இருந்ததைப்போல், இளவரசன் ஆக்கினான். கூருடைய பற்களின் மென்முறுவலுடைய, கோவைக் கனி போலச் சிவந்த அழகிய வாயும், அழகு மிக்க மயிலின் இனிய சாயலும் உடைய இலக்கணை பெற்ற சிங்கம், அழகிய செம்பொன் முடிக்கண்ணி அணிந்த கோவிந்தனை, உலகம் எல்லாம் சச்சந்தனின் புகழ் பரப்பி, அவன் அருளை விரும்பி வாழும் இளவரசுப் பட்டம் உடையவனாக இருக்கச் செய்தான். பிறகு முன்பு, தன் திருவடிகளைப் பணிந்து வணங்காது நின்ற வேந்தர்கள் வந்து பணிந்து காணிக்கையாகத் தந்த பொன்னாலாக்கிய பூண்விளங்கும் அழகிய தன் தம்பி நந்தட்டன் மகனை அழைத்து, அவனுக்கு மணிமுடியைச் சூட்டிச் சிற்றரசாக இருக்கச் செய்து, மலைக் கூட்டம் போல் திரண்ட யானைப்படை உடைய சீவக மன்னன் சச்சந்தனுக்கு அரசுப் பட்டஞ் சூட்டினான்.

**நிலஞ்செதி ளெடுக்கு மான்றோர் நித்திலம் விளைந்து முற்றி**
**நலஞ்செய்த வைரக் கோட்ட நாறும்ம் மதத்த நாகம்**
**குலஞ்செய்த குமரர்க் கெல்லாங் கொடுத்தன னிதியு நாடும்**
**உலஞ்செய்த வைரக் குன்ற மோரிரண் டனைய தோளான்**

*[நித்திலம்-முத்து; நலம்-அழகு.]*

**நூற்கிடங் கொடுத்த கேள்வி நுண்செவி மண்கொண் ஞாட்பில்**
**வேற்கிடங் கொடுத்த மார்பின் வில்வலான் றோழர் மக்கள்**
**நாற்கடல் வளாகங் காக்கு நம்பிதன் கண்க ளாகப்**
**பாற்கடற் கேள்வி யாரைப் பழிப்பற நாட்டி னானே** **2916**

*[ஞாட்பில்-போரில்; பழிப்பற-குற்றமின்றி.]*

**காவல ரகல மென்னுங் கழனியு ளுழது காமர்**
**மாவலம் விளைத்த கோட்டு மழகளிற் றரச னன்னான்**
**பூவலர் கொடிய னாரை விடுக்கிய கோயில் புக்கான்**
**தூவல ரொலிய லார்தம் வலக்கண்க டுடித்த வன்றே 2917**

[காவலர் - பகையரசரது; மா - திருமகள்; தூ- தூய்மை.]

நிலத்தில் புழுதித்தூள் பறக்கச் செல்லும் குதிரைகள் பூட்டிய தேரையும், முற்றி விளைந்த நன்முத்துக்கள் அணிசெய்யும் வைரக் கிம்புரி பூட்டிய தந்தமும் ஒழுகும் மதமும் உடைய யானைகளையும், பெருநிதியையும், சிற்றூர்களையும் கல்லில் செய்த வைரமணிக் குன்று போன்ற இரு தோள்கள் உடைய சீவகன் மற்ற மக்களுக்கெல்லாம் கொடுத்தான். அடுத்து, நூலறிவுக்கு இருப்பிடமான கேள்விச் செல்வத்துக்குத் தன் கூர்த்த செவியினையும், நாடுபிடிக்கும் வீரப் போரிலே பகைவர் எறியும் வேலுக்குத் தன் மார்பினையும் (விழுப்புண் ஏற்க) இடமாகத் தந்த வில்வல்லான் சீவகன், நான்கு புறமும் கடல் சூழ்ந்த நிலத்தை ஆளும் தன்மகன் சச்சந்தனின் கண்களாக இருக்கும்படி, தன் தோழர்களின் பிள்ளைகளாகிய, கடல்போலத் திரண்ட, அறிவுடையவர்களை நியமித்தான். பிறகு, பகைமன்னர் மார்பாகிய வயலிலே உழுது பெருமைக்குரிய பல வெற்றிகளைக் குவித்த, வெற்றி மதயானை போன்ற அரசன், பூத்த புதுமலர்க் கொடிபோன்ற மகளிரை இவ்வுலகப் பற்றினின்றும் விடுவிக்க அரண்மனையை அடைந்தான். அன்றலர்ந்த, தூய, மலர்மாலை அணிந்த அம்மங்கையரின் வலக்கண்கள், வரப்போகும் தீமையை உணர்ந்தனபோல் அப்போது துடித்தன.

## 22. துறவுணர்த்தல்

செம்பொனாற் செறிய வேய்ந்து திருமணி முகடு கொண்ட
வெம்புநீள் சுடருஞ் சென்னி விலங்கிய மாட மெய்தி
அம்பொனாற் றெளிந்த பாவை யனையவர்த் தம்மி
னென்றான்
பைம்பொனால் வளர்க்கப் பட்ட பனைதிரண் டனைய
தோளான் 2918

*[சுடர்-சூரியன்; பொன்-செல்வம்.]*

### வேறு

தின்பளித மாலைத்திரள் தாமந்திகழ் தீம்பூ
நன்கொளிசெய் தாமநறும் பூநவின்ற தாமம்
பொன்றெளித்த தாமம்புரி முத்தமிளிர் தாமம்
மின்றெளித்த மின்னுமணி வீழ்ந்ததிரள் தாமம் 2919

*[பளிதம்-கற்பூரம்; மிளிர்-விளங்கும்.]*

ஈன்றமயில் போனெடிய தாமத்திடை யெங்கும்
மான்றுமணம் விம்முபுகை மல்கிநுரை யேபோல்
தோன்றுமணிக் காலமளித் தூவணையின் மேலார்
மூன்றுலகம் விற்குமுலை முற்றிழையி னாரே 2920

*[மணம் மான்று-வாசனையெங்கும் மயங்கி; மணிக் கால் அமளி-மாணிக்கத்தாற் செய்த கால்களை யுடைய படுக்கையிடத்து.]*

உயர்ந்த பொன் தகடுகளை நெருக்கமுற அடுக்கி, அழகிய மணிகளால் சிகரம் அமைத்த, வெப்பம் தரும் சூரியனும் விலகிச் செல்லும் உச்சியுடைய மாடத்தை அடைந்து, அழகிய பொற்பாவை போன்ற (தன் காதல் மனைவியரை) மகளிரை அழைத்து வருக என்றான், புதிய பொன்னணி தழுவிக் கிடக்கின்ற பனைபோல் திரண்ட தோளுடைய சீவகன்.

அப்போது அவன் மனைவியர், கற்பூர வாசத்தை உண்டு கமழ்கின்ற மாலை, அழகிய ஒளிவீசும் தீம்

பூமாலை, நறுமணமிக்க மலர்களால் தொடுக்கப் பட்ட மாலை, தங்கத் தகடுகள் வைத்து இழைத்த மாலை, ஒளிசெய்யும் முத்துக்களால் ஆன மாலை, மின்னலைப்போல ஒளிவீசி மின்னுகின்ற மணிகளால் ஆன மாலை ஆகிய பல மாலைகளிடையே, மூவுலகையும் விலைபேசத்தக்க, அணிமணிகள் புனைந்த அம்மங்கையர், எங்கும் நிறைந்து அகில்புகை மணம் வீச, மணிகளிழைத்த கால்களுடைய கட்டிலில், பால் நுரைபோல் தோன்றும் பஞ்சணைமேல் கருவீன்ற மயில்போல் இருந்தனர்.

இன்னதரு ளென்றிளைய ரேத்தஞிமி றார்ப்ப
மின்னினிடை நோவமிளிர் மேகலைகண் மின்னப்
பொன்னரிய கிண்கிணியும் பூஞ்சிலம்பு மேங்க
மன்னனடி சேர்ந்திறைஞ்சி வாழியென நின்றார் 2921

[இளையர்-ஏவலாளர்; பூஞ்சிலம்பு-அழகிய சிலம்பு.]

கலவமயில் கால்குவித்த போலுங்கம ழைம்பால்
நிலவுமணி மேகலை நிலாவுமிழும் பைம்பூண்
இலவமலர் வாயினணி கூரெயிற்றி னீரே
உலவுமனம் வைத்துறுதி கேண்மினமி தென்றான் 2922

[உலவு மனம் - எங்கும் பரத்தலைக் கொண்ட மனத்தை; வைத்து-ஒருப்படுத்தி வைத்து.]

வேறு

வாயழ லுயிர்க்கு மாழி மன்னவன் குறிப்பு நோக்கி
வேயழத் திரண்ட மென்றோள் வெம்முலைப் பரவை யல்குல்
தோய்பிழி யலங்க லார்தந் தொன்னலந் தொலைந்து வாடிக்
காயழற் கொடியைச் சேர்ந்த கற்பக மாலை யொத்தார்

[ஆழி-சக்கரம்; பிழி-தேன்; நலம்-அழகு.]

சீவகன் இட்ட கட்டளையை ஏற்றுச்சென்ற ஏவலர்கள், அம் மங்கையரிடம் சென்று அரசன் ஆணை இதுவென்று அறிவிக்க, மாலைகளில் மொய்த்த வண்டுகள் பறந்து ஒலிசெய்ய, அம்மகளிர் தம் சிற்றிடை நோவ

  

எழுந்து, அழகுமிக்க மேகலை ஒளிவீச, பஞ்சணையைவிட்டு இறங்கி, பொன்னால் செய்த பாதச் சிலம்பும், கிண்கிணி மாலையும் வருந்தி ஒலிசெய்ய நடந்து சென்று, சீவகன் திருவடிகளை வாழ்த்தி, வணங்கி நின்றனர். அவர்களிடம் சீவகன், 'மயில் தோகையைக் குவித்து வைத்தது போன்ற அழகிய, மணமிக்க கூந்தலையும், ஒளிவீசும் மணிமேகலை யையும், நிலவின் ஒளியைச் சொரிகின்ற பொன்னணி களையும், இலவ மலர் போன்ற வாயினையும், அழகிய கூரிய பற்களையும் உடையவர்களே, இன்ப இச்சையிலே தடுமாறும் உங்கள் உள்ளத்தை ஒருநிலைப்படுத்தி, உயிருக்கு உறுதுணையாக உதவக்கூடிய ஒன்றைச் சொல்கின்றேன் கேட்பீராக', என்றான். நெருப்பைக் கக்கும் சக்கரத்தை ஏந்திய மன்னவன் கூறியதன் பொருளைக் குறிப்பால் உணர்ந்து, மூங்கில் வருந்தி வாடும் படித் திரண்ட மென்தோளும் பூமார்பும் சிற்றிடையும் மதுவழியும் மலர்மாலையும் உடைய அவன் தேவியர், நெருப்புச் சுடரில் பட்ட கற்பக மாலையைப்போலத் தங்களின் இளமை நலம் இழந்து வாடினர்.

**கருங்கடற் பிறப்பி னல்லால் வலம்புரி காணுங் காலைப்**
**பெருங்குளத் தென்றுந் தோன்றா பிறைநுதற் பிணைய னீரே**
**அருங்கொடைத் தான மாய்ந்த வருந்தவந் தெரியின் மண்மேல்**
**மருங்குடை யவர்கட் கல்லான் மற்றையர்க் காவ துண்டே**

[தெரியின்-ஆராய்ந்தால்; பிணை-பெண்மான்.]

**அட்டுநீ ரருவிக் குன்றத் தல்லது வைரந் தோன்றா**
**குட்டநீர்க் குளத்தி னல்லாற் குப்பைமேற் குவளை பூவா**
**விட்டுநீர் வினவிக் கேண்மின் விழுத்தகை யவர்க ளல்லாற்**
**பட்டது பகுத்துண் பாரிப் பார்மிசை யில்லை கண்டீர் 2925**

[அட்டும்-சொரியும்; குட்டம்-ஆழம்.]

**நரம்பொலி பரந்த கோயி னன்னுதன் மகளிர் தூவும்**
**பெரும்பலிச் சோற்றி னீதல் பெரிதரி தாகு மேனும்**

**சுரும்பொலி கோதை யார்த மனைவயிற் றூண்டோ**
**றூட்டும்**
**அரும்பலி யனைத்து மீயி னதுபொருட் குன்று கண்டீர்**

[பொருட்குன்று-மேருமலை; நரம்பொலி-யாழிசை.]

துறவுதரும் பிரிவை எண்ணி வருந்தும் அம்மங்கையர் மனம் தெளிய, சீவகன் மேலும் சொல்லுவான்: 'பிறை நிலவு போன்ற நெற்றியும், பெண்மான் போன்ற மருண்ட பார்வையும் உடையவர்களே, நன்றாக எண்ணிப் பாருங்கள். வலம்புரிச் சங்குகள் கருங்கடலிலே தோன்றுமே அன்றிப் பெரிய குளத்திலே வந்து பிறப்பதில்லை. அதே போல், அரிய கொடையாகிய தானமும், உயர்ந்த தவமும், செல்வம் உடையவர்களுக்கே அல்லாமல், அது இல்லாத ஏழைகட்கு அமைவதில்லை. மேலும், சொரிகின்ற நீர் அருவிகளை உடைய குன்றிலே அன்றித் தரையிலே வைரங்கள் உண்டாகமாட்டா. அவ்வாறே ஆழமான நீருடைய குளத்திலே அல்லாமல், குப்பையிலே குவளை மலர்களும் பூக்கமாட்டா. எனவே இன்னும் இதைச் சந்தேகமறத் தெரிந்து கொள்ளுங்கள்; சிறந்த பண்புடைய வர்களே அல்லாமல், கிடைத்ததைப் பகுத்துண்டு வாழ் கின்ற பெருமனம் உடையவர்கள் இவ்வுலகில் வேறு எவரும் இல்லை. இன்னும் கேளீர், இன்னிசை யாழ் ஒலி முழங்கும் அரண்மனைகளில், அழகிய நெற்றியை உடைய பெண்கள், தெய்வங்கட்கு அளிக்கும் பலிச்சோறு போன்ற மிகப்பெரிய தானத்தைச் செய்வது, வறியவர்களுக்கு இயலாது என்றாலும், வண்டுகள் மொய்த்துப் பாடும் மலர்மாலை அணிந்த மங்கையர்கள், தம் இல்லங்களில், தூணுறையும் தெய்வங்கட்கு தூவுகின்ற அளவு, சிறிதாக வேனும் பிறர்க்கு எளியவர் உதவுவார்களே ஆனால், அவர்கள் செய்த அச்சிறிய தானமும் பின்னர் அவர்களுக்கு மேடுபோல் உயர்ந்த பயனைத் தரும்.'

**அற்றவர் வருத்த நீக்கி யாருயிர் கொண்டு நிற்கும்**
**துற்றவி ழீதல் செம்பொற் றுறக்கத்திற் கேணி யாகும்**

முற்றுயி ரோம்பித் தீந்தே னூனொடு துறப்பின் யார்க்கும்
மற்றுரை யில்லை மண்ணும் விண்ணுநும் மடிய வன்றே

[அற்றவர் - பொருளற்றவர்; துற்றவிழ் - உண்ணும் சோற்றை.]

## வேறு

மாலைப் பந்தும் மாலையு மேந்தி மதுவார்பூஞ்
சோலைம் மஞ்ஞைச் சூழ்வளை யார்தோள் விளையாடி
ஞாலங் காக்கும் மன்னவ ராவார் நறவுண்ணாச்
சீலங் காக்குஞ் சிற்றுப காரம் முடையாரே 2928

[மாலைப்பந்து-மாலையாற் சமைத்த பந்து; நறவு-கள்; சீலம்-ஒழுக்கம்.]

மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்
பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார் 2929

[சின்னத்துணி-சிறிய துண்டு; துன்னம் மூசிய-தையல் மொய்த்த.]

'பொருளற்ற ஏழைகளின் துயரை நீக்கி, சிறந்த உயிருக்குப்பாதுகாப்பாக இருக்கின்ற உணவை அவர்களுக்கு அளித்தல், வானுலகச் சொர்க்கத்துக்கு இட்டுச் செல்லும் ஏணிப்படியாகும். அதோடுகூட, மற்ற உயிரினங்களுக்கு அன்பு செய்து, மதுவையும் மாமிசத்தையும் கைவிட்டு வாழ்பவர் எவர்க்கும், வேறு அறவுரைகள் கூறத்தேவையில்லை. இப்படிப்பட்ட நன்னெறியில் நடந் தொழுகும் உங்கள் காலடியில் விண்ணும் மண்ணும் வந்து பணியும்.

'மலர் மாலையால் உருண்டையாக அமைத்த பந்தையும், பூமாலையையும், காணிக்கையாகத் தந்து, தேன் நிறைந்த, பூ மலர்ந்த சோலையிலே, மயில்போல் உலவும் வளையணிந்த மங்கையர் தோள் தழுவி விளை

யாடி, உலகங் காக்கும் வேந்தராக இன்று இங்கிருப்பவர்கள், முற்பிறப்பில் கள்ளுண்ணாமை என்னும் நோன்பினைக் கொண்டொழுகியவர் ஆவர். அழுக்கேறிய சின்னத் துணிகளை முள்ளாகிய ஊசியாலே தைத்து ஆடையாக்கி,அத் தையல் ஆடையைக் குளிருடைய மாசி மாதத்திலே அணிந்து கொண்டு, ''தாயே பிச்சை அம்மா'' என்று கூவியபடி கையிலே ஓட்டை ஏந்திக் கொண்டு செல்வரின் மனையில் சென்று பிச்சை கேட்கக் கூசியபடி நிற்பவர்கள், முற்பிறப்பிலே பிறர்க்குத் தானமாக எதையும் கொடுத்தறியாத பாவிகள் என்பதும் அறிக.'

## வேறு

காட்டகத் தொருமகன் றுரக்கு மாக்கலை
ஓட்டுடைத் தாமெனி னுய்யு நங்களை
ஆட்டியிட் டாருயி ரளைந்து கூற்றுவன்
ஈட்டிய விளைமதுப் போல வுண்ணுமே 2930

[துரக்கும்-ஓட்டுகின்ற; கலை - மான்; அளைந்து-வாங்கி.]

புள்ளுவர் கையினு முய்யும் புள்ளுள
கள்ளவிழ் கோதையீர் காண்மி னல்வினை
ஒள்ளியா னொருமக னுரைத்த தென்னன்மின்
தெள்ளியீ ரறத்திறந் தெரிந்து கொண்மினே 2931

[புள்ளுவர் - வேடர்; ஒள்ளியான் - அறிவுடையான்; தெள்ளியீர்-அறிவுடையீர்.]

மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்
வாய்புகப் பெய்யினும் வழுக்கி நல்லறம்
காய்வது கலதிமைப் பால தாகுமே 2932

[வழுக்கி-மனங் கொள்ளாமல்; காய்வது-கெடுத்து விடுவது; கலதிமைப் பாலது - தீவினையின் கூறாகும்.]

'விரட்டிப் பிடிப்பதிலே மிகத் திறமை உடைய வேடனாக இருந்தாலும், விரைந்து ஓடுவதிலே சிறந்த தாகிய மான், காட்டுக்குள்ளே அவ்வேடனிடமிருந்து தப்பி ஓடிவிடும். ஆனால் காலனோ நம் உடலை வருத்தி, உயிரை எடுத்து, சேமித்து வைத்த புளித்த மதுவைப் பருகுவதுபோல் உண்டு தீர்த்து விடுவான். இன்னுங் கேளீர்; வேடுவர் கையிலகப்பட்டுங் கூடத் தப்பிப் பிழைத்துக் கொள்கின்ற பறவைகள் இருக்கின்றன. எனவே தேன் வழியும் மலர்மாலை அணிந்த மங்கையீர், நல்லறம் செய்ய விரும்புங்கள். (பாவத்திலிருந்து தப்ப வழி பாருங்கள்) அறிவுடையோன் கூறிய பயனற்ற மொழிகள் இவை என்று கொள்ளாதீர்கள்; அறிவுடைய மங்கையரே, இதில் ஐயமிருப்பின் அறத்தின் தன்மையை உணர்ந்து அதன்படி நடவுங்கள். இறப்பதும் பிறப்பதும், வளர்வதும் தேய்வதும், பருப்பதும் சிறுப்பதும், உடலின் இயற்கை என்பதை (அவ்வுண்மையை உணராத) உலக மக்களுக்கு, தேய்ந்தும், தீர்ந்தும், வளர்ந்தும் நிலவானது எடுத்துக் கூறிக்கொண்டே இருக்கையில், நல்லறத்தின் பயனை மனம் கொள்ளும்படிச் செவியில் உரைத்துங்கூட, அதனை ஏற்றுக் கொள்ளாமல் வெறுத்தொதுக்குவது, தீவினையின் பயனே யாகும்.'

**புள்ளிநீர் வீழ்ந்தது பெருகிப் புன்புலால்**
**உள்வளர்ந் தொருவழித் தோன்றிப் பேரறம்**
**உள்குமேன் முழுப்புலாற் குரம்பை யுய்ந்துபோய்**
**வெள்ளநீ ரின்பமே விளைக்கு மென்பவே** **2933**

[உள்குமேல்-கொள்ளுமேல்; குரம்பை-உடல்.]

**பாற்றுளி பவளநீர் பெருகி யூன்றிரண்டு**
**ஊற்றுநீர்க் குறும்புழை யுய்ந்து போந்தபின்**
**சேற்றுநீர்க் குழியுளே யழுந்திச் செல்கதிக்**
**காற்றுணாப் பெறாதழு தலறி வீழுமே** **2934**

  

[பால்துளி-சுக்கிலம்; பவளநீர்-இரத்தம்; ஊற்று நீர்க் குறும்புழை-ஊறுகின்ற நீரையுடைய சிறு வாயி லாலே; ஆற்றுணா-கட்டுச்சோறு.]

திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தினு மறத்திற மறத்த லோம்புமின்
கரும்பெனத் திரண்டதோட் கால வேற்கணீர் 2935

[பூத்தல்-அளித்தல்; மறத்தல் ஓம்புமின் - மறவா தீர்கள்.]

'கருப்பையை அடைந்த உயிர் பெருத்துச் சதைப் பிடித்து வளர்ந்து, சென்ற வழியே வந்து அறிவு முதிர்ந்து அறத்தைச் செய்ய முற்படுமாயின், அந்நல்லறம் ஊன் பொதிந்த உடல் கூட்டைவிட்டு விலகக் காரணமான, வீட்டின்பத்தை வெள்ளம் போல் உண்டாக்கிக் கொடுக்கும். உயிர்த்தாதும் செங்குருதியும் ஒன்றாகி, வளர்ந்து, திரண்டு, உயிருடலாய் வெளி வந்த பின்னர் நல்லறம் செய்யாது வாழுமேயானால், மீண்டும் மீண்டும் நரகக் குழியிலே விழுந்து கிடந்து அலறித் துடிக்க நேரும். தீமையற்றதாகிய நல்லறம் என்னும் செம்பொன்னாலான கற்பகத்தரு மறுமையில் பேரின்ப வீட்டையும், இம்மையில் நல்லின்ப வாழ்வையும் தருவதால், கரும்பு போலத் திரண்ட தோளையும் கொல்லும் வேல்போன்ற கண் களையும் உடையீர், மேற்கொள்ளக் கடினமாக இருந் தாலும், நல்லறம் செய்வதை மறக்காதிருப்பீராக!'

மந்திர மருந்திவை யில்லை யாய்விடின்
ஐந்தலை யரவினை யாவர் தீண்டுவார்
சுந்தரச் சுரும்புசூழ் மாலை யில்லையேல்
மைந்தரு மகளிரை மருங்கு சேர்கிலார் 2936

[சுந்தரம்-அழகு; மாலை-இயல்பு; மருங்கு-பக்கத்தே.]

பொன்றுலாம் பொன்னனீர் தருதும் பாகுநீர்
தின்றலாற் சிறுவரை யானுஞ் சொற்சில
இன்றெலா மெம்மருங் கிருந்து பேசினால்
வென்றுலாம் வேற்கணீர் விழுத்தக் கீர்களே 2937

[பாகு-வெற்றிலை முதலியன; சிறுவரையானும்-சிறிய சிறிய காலவளவேனும்; விழுத்தக்கீர்கள் - தகுதி யுடையீர்.]

## வேறு

மெய்ப்படு சாந்தும் பூவு மிகநனி கமழு மேனும்
கைப்படு சாந்தும் பூவுங் கொண்டலாற் கலக்க லாகா
ஐப்படு பித்து நெய்த்தோ ரசும்புசோ ரழுகற் புன்றோற்
பொய்ப்பட வுரைத்த துண்டோ பொன்னனீர் நம்மு ணாமால்

[மெய்ப்படு-உடம்பில் முன்னேயணிந்த; கலக்கலாகா-கூடுதல் முடியா; ஐப்படு - ஐயோடு கூடிய; நெய்த்தோர்-இரத்தம்.]

'உலகில் மந்திரமும், மருந்தும் இல்லையென்றால், ஐந்து தலைப் பாம்பை எவர் நெருங்கி அடக்கியாள நினைப்பார்கள்? அதே போல் அழகிய, வண்டுகள் மொய்த்துப் பாடும் மாலையும், மற்ற மணப் பொருள் களும் இல்லையென்றால், இளைஞரும் மகளிரை நெருங்கிக் கவர நினைக்க மாட்டார்கள். நீங்கள் வெற்றிலையும் முக வாசமும் உண்டவராய் எம் அருகே எப்போதும் பேசி இருந்தீர். கண்டவரை வென்று வளைக் கின்ற வேல்போலும் கண்ணுடையவரே! இன்று வெற்றிலை பாகு தின்னாமல் மணமின்றி எம் அருகிலேயே இருந்து கொண்டு சிறு போதேனும் எம்மோடு பேசு வீராயின் ஒரு துலாம் பொன்னைத் தருவோம்.

'இவ்வுடலின் மேலே முன்னரே அணிந்த பூவும் புனுகும் சந்தனமும் கமழ்ந்து மணம் வீசும் என்றாலும், பின்னரும் கை நிறையப் பூவும் புனுகும் கொண்டு வந்து

  

பூசி வாசம் அடையச் செய்யாமல் மீண்டும் இவ்வுடலோடு கூட இயலாது. ஐயும் பித்தமும் இரத்தமும் மற்ற மற்ற அசுத்தங்களும் நிறைந்த, இழிந்த தோலால் மூடியது இவ்வுடம்பு. திருமகளைப் போன்ற அழகுடையீர், நம் உடலைப் பற்றி நமக்கு நாமே இப்படிக் கூறிக் கொள் வதில் தவறு ஏதேனும் இருக்கிறதா? (இல்லை!)'

அனிச்சத்தம் போது போலத் தொடுப்பவே குழைந்து மாழ்கி
இனிச்செத்தாம் பிறந்த போழ்தே யென்றுநா மிதனை
யெண்ணி
தனிச்சிந்தம் வைத்தல் தேற்றாந் தளர்ந்துகண் பரப்பி
நோக்கிப்
பனித்துமென் றுற்ற போழ்தே பழுதிலா வறிவி
னென்னாம் 2939

[தொடுப்பவே-நூலினால் தொடுக்கவே; பனித்தும்-நடுங்குவோம்; மாழ்கி-மயங்கி.]

நீனிறங் கொண்ட வைம்பா னிழன்மணி யுருவ நீங்கிப்
பானிறங் கொண்டு வெய்ய படாமுலை பையிற் றூங்கி
வேனிற மழைக்கண் தாமு மிமைகுறைந் தழுகி மேனி
தானிறங் கரக்குங் காலந் தையலீர் மெய்ய தன்றே 2940

[வெய்ய-விரும்பத்தக்க; பையின் தூங்கி-பைபோலத் தொங்கி; கண்தாமும்-கண்களும்; நிறம் கரக்கும்-ஒளிகெடும்.]

## வேறு

குஞ்சர மயாவுயிர்த் தனைய குய்கமழ்
அஞ்சுவை யடிசிலை யமர்ந்துண் டார்கடாம்
இஞ்சிமா நகரிடும் பிச்சை யேற்றலால்
அஞ்சினேன் றுறப்பல்யா னார்வ மில்லையே 2941

[அயா உயிர்த்தனைய - கொட்டாவி விட்டாற் போன்ற; குய் - தாளிப்பு; அமர்ந்து - விரும்பி; இஞ்சி-மதில்.]

'மாலையாகத் தொடுப்பதற்காகக் கையாலே தொட்டவுடனே வாடி விடுகின்ற அழகிய அனிச்ச மலர்போல, தீவினை பற்றியவுடனேயே, மனந்தளர்ந்து, அறிவு மயங்கி, கண்களை அகல விரித்துப் பார்த்து நடுங்குவோம் என்பதை அறிந்து, நாம் இந்த மண்ணிலே பிறந்த அன்றைக்கே இறந்தவர்களாகி விட்டோம் என்ற உண்மையை உணர்ந்து, சிந்தை தடுமாறாதிருக்கத் தெரிந்து கொள்ளவில்லை என்றால் குறையற்ற நிறையறிவினால் நமக்கு என்ன பயன்? நீல நிற மணியைப் போன்று ஒளி வீசிய கூந்தல், அக்கரிய நிறத்தை இழந்து, பால் போல வெள்ளை நிறம் கொள்ள, நிலை குலையாத பூமார்புகள் குழைந்து சரிய, வேல் போன்ற கருங்கண்கள் ஒளியிழந்து நீர் வடித்து நிற்க, உடலின் வனப்பும், செழிப்பும் மறைந்து, முதுமைப் பருவம் வந்தடைவது பெண்களே, பெரிய உண்மையாகும். மேலும் யானை கொட்டாவி விட்டதைப் போன்ற ஓசையுடன், தாளிதம் செய்யப்பட்ட அறுசுவை உணவை ஒரு காலத்தில் உண்டு மகிழ்ந்திருந்தவர்கள், இன்று மதில் சூழ்ந்த, இம்மாநகரின், பெருந்தனக்காரர்கள் இடும் பிச்சை ஏற்று வாழ்கின்ற கொடுமையை நினைத்தால் எனக்குப் பயமாயிருக்கிறது. அல்லாமலும் நிலையற்ற செல்வத்தின்மேல் எனக்கு ஆசையும் இல்லை. எனவே நான் அரசுரிமையைத் துறக்கிறேன்' என்றான்.

## 23. அந்தப்புர விலாவணை

ஒருவர்தம் வலிகெடு முடன்று பொங்கிமேல்
இருவர்மற் றியைந்தெழுந் திருப்பி னென்பபோல்
உருவநுண் ணுசுப்பிற விருந்த வொண்மணிப்
பரியகண் படாமுலைப் பைம்பொற் கொம்பனீர் 2942

[உருவம்-அழகு; பரிய-பெரிய.]

காதலங் கழிந்தநா ளிதனி னிப்புறம்
ஏதில மென்றசொற் செவிச்சென் றெய்தலும்

  

மாதரார் மழைமலர்த் தடங்கண் மல்குநீர்
போதுலா மார்பின்வாய்ப் பொழிந்து வீழ்ந்தவே 2943

[மல்கும்-நிறைந்த; போது-மலர்.]

### வேறு

செருக்கி நிணந்தின்று சிவந்து மன்ன ருயிர்செற்ற
நெருப்புத் தலைநெடுவேற் கண்ணார் கண்ணீர்
நிழன்மணிப்பூட்
பரப்பி னிடைப்பாய்ந்து குளமாய்ப் பாலார் படாமுலையை
வருத்தி மணிநெடுங்கோட் டருவி போல
வீழ்ந்தனவே 2944

[செருக்கி-மயங்கி; நிழல்-ஒளி.]

'தனி ஒருவர் வலிமையானது, சினத்தோடு பொங்கி எழும் இருவர்களுக்கிடையில் அகப்பட்டுக்கொண்டால் குன்றிவிடும் என்பதைப்போல, அழகிய மெல்லிய இடை சுமை தாங்காது முறிந்து விழக்கூடிய கனத்த பூமார்பினை உடைய பொற்கொடி போன்றவர்களே, சென்ற காலத்திலே நாம் காதல் வாழ்விலே களித்திருந்தோம். ஆனால் நாம் இதுகாறும் கேட்ட அறவுரைகளால் இப்போது இருந்து நாம் அந்நியர் ஆகிவிட்டோம்!' என்று சீவகன் கூறிய மொழி அவன் மனைவியர் காதில் பட்டவுடன், அவர்களின் மலர்போன்ற பெரிய கருமணிக் கண்களில் நீர் நிறைந்து, மலர்மாலை அசையும் மார்பிலே படிந்து வீழ்ந்தது.

பகைவர் உடல் சதையைக் குத்திப் பிளந்து, அவ்வூன் தின்ற பெருமிதத்தால் செந்நிறம் பெற்றுத் திகழும், நெருப்பில் தோய்ந்த நீண்ட வேல் போலும் கண்ணுடைய சீவகன் தேவியர், அழுது வடித்த கண்ணீர், ஒளிவீசும் அழகிய மணி ஆரங்களாகிய கரைக்குள் பாய்ந்து, குளம் போலத் தேங்கி, பால் நிறைந்த பருத்த மார்பினைத் தாண்டி முலை முகட்டிலிருந்து மலை அருவியைப்போல கீழே விழுந்தது.

அழலேந்து வெங்கடுஞ்சொ லுருமே றுண்டாங் கலர்சிந்தி
நிழலேந்து பூங்கொடிக ணிலஞ்சேர்ந் தாங்கு நிலஞ்சேர்ந்து
கழலேந்து சேவடிக்கீழ்க் கண்ணீர் வெள்ளங் கலநிரப்பக்
குழலேங்கு மாற்றேங்கி யழுதார் கோதை மடவாரே 2945

[அழல்-தீ; சேவடி-சிவந்த கால்கள்.]

## வேறு

குலிவகஞ் சேற்று ணாறிக் குங்கும நீரு ளோங்கிப்
பொலிகென வண்டு பாடப் பூத்ததா மரைகள் போலும்
ஒலிகழ லடிக ணுங்கீழ்ப் பிழைத்ததென் னுரைமி னென்னப்
புலிநிழற் பட்ட மான்போற் போகுயி ராகி நின்றார் 2946

[குலிகம் - சாதிலிங்கம்; நாறி - தோன்றி; ஓங்கி- வளர்ந்து.]

அருந்தவி சாகி யெம்மைச் சுமந்தயா வுயிர்த்த வாண்மைப்
பெருந்தகு குறங்கு காணீர்பெண் ணுயி ரளிய தாமே
வருந்துமா லென்று நோக்கீர் வாடுமா லாவி யென்னீர்
விருந்தினர்போல நின்றீர் வெற்றுடல் காண்மி
னென்பார் 2947

[தவிசு - ஆதனம்; அயாவுயிர்த்த - இளைப்பாற்றிய; குறங்குகாள்-துடைகளே; அளிய-அளிக்கத்தக்க.]

இனி நாம் அந்நியர்களே என்று சீவகன் கூறிய நெருப்பைப் போன்ற கொடிய கடுமொழிகளைக் கேட்டு, இடிவிழுந்து, அழகிய மலர் பூத்துக் குலுங்கிய பூங்கொடிகள் மலரும் இலையும் சிதறத் தரையிலே விழுந்து கிடப்பதைப்போல மண்ணிலே சீவகன் காலடியில் விழுந்து, அவர் விடும் கண்ணீர் வெள்ளம் அங்குள்ள கலங்களை நிரப்ப, குழல் ஏங்கி ஒலிப்பதுபோல் அழுது புலம்பினர். 'சிவந்த சாதிலிங்கக் குழம்பிலே முளைவிட்டு, குங்குமம் கலந்த பனிநீரில் வளர்ச்சி பெற்று, வண்டு களாகிய பாணர்கள் வாழ்த்துக்கள் கூற, மலர்ந்த தாமரை மலர் போன்ற திருவடிகளில் வீரக்கழல்

*அணிந்த தலைவனே, (இவ்வாறு எங்களைப் பிரிய) நாங்கள் உனக்கு என்ன தவறு செய்தோம் கூறுவாயாக' என்று புலியிடம் சிக்கிய மான் கூட்டம்போல், பிரிவுத் துயரால் உயிர் துடிக்க நின்றனர். 'எமக்கு அரியாசனம் போல் இருந்து எம்மைத் தாங்கி நின்று துயரைப் போக்கிய தொடைகளே! இரங்கத்தக்க இப்பெண்கள் உயிர் வருந்துமே உடல் துடிக்குமே என்பதை எண்ணிப் பார்க்காமல், ஒன்றும் அறியாத புதியவர்போல் இருக் கின்றீரே! இவ்வுடலும் இனி உயிரிழந்த கூடுதான் என் பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.'*

**கோதையுந் துகிலு மேந்திக் குங்கும மெழுதிக் கொய்பூந்**
**தாதுகொண் டளகத் தப்பித் தடமுலை வருடிச் சேர்ந்து**
**காதல் கொண்டி ருந்த காமர் கைவிர லளிய நீரும்**
**ஏதில ராகிக் கோமா னெண்ணமே யெண்ணி னீரே 2948**

*[கோதை-மாலை; அளகம்-முன்னுச்சி மயிர்; வருடி-தடவி; ஏதிலர்-அயலார்.]*

**பஞ்சிகொண் டெழுதி யார்ந்த சீறடி பனித்த லஞ்சிக்**
**குஞ்சிமே லேற்ற கோமான் கொப்புளித் திட்ட வெம்மை**
**வஞ்சித்தீர் மணிசெய் தோள்காள் வாங்குபு தழுவிக் கொள்ளீர்**
**நெஞ்சநீர் வலியீ ராகி நிற்பிரோ நீரு மென்பார் 2949**

*[பனித்தல் அஞ்சி-நடுங்குதற்குப் பயந்து; கொப்புளித் திட்ட-கைவிட்ட; வாங்குபு-அணைத்து.]*

**முட்டுவட் டனைய கோல முத்துலாய்க் கிடந்து மின்ன**
**மட்டுவிட் டலர்ந்த கோதை மதுவொடு மயங்கி நாளும்**
**ஒட்டியிட் டுறைய வெங்கட் குயரணை யாய மார்பம்**
**நட்புவிட் டொழியு மாயி னன்மையார் கண்ண தம்மா 2950**

*[முட்டுவட்டு-அரக்கு வட்டு; கோலம்-திரட்சியை யுடைய; மட்டு-தேன்.]*

'மாலையும் ஆடைகளும் ஏந்தி, குங்குமக் குழம்பு பூசி, பூத்த புதுமலர்த் தாதை முன்உச்சியிலே தடவிப் பூமார்புகளை வருடிக் காதலுறவாடி இருந்த அழகிய கைவிரல்களே! எமக்கு அன்பு காட்டக்கூடிய நீங்களும்கூட அந்நியராகி, உங்கள் தலைவனைப்போலவே நினைக்கத் தலைப்பட்டுவிட்டீரோ?

'செம்பஞ்சுக் குழம்பில் தோய்ந்த அழகிய சிற்றடிகள் மேலே பட்டால் நடுங்குமென்றெண்ணி, அவற்றைத் தலையாலே தாங்கிய எம்முடைய தலைவன், எனக்கினி மேல் அந்நியர் நீர் என்று கூறிக் கைவிட்ட எம்மை, வஞ்சிக்க நினைக்கின்றீரே, அழகிய அணிமணி புனைந்த தோள்களே. வாரி எம்மை இறுகத் தழுவிக்கொள்ள மாட்டீரோ? உம் தலைவனைப் போலவே நீங்களும் கல்மனம் உடையவர்களாக இருப்பீரோ? அரக்கு வட்டுப் போலத் திரண்ட பெரிய முத்துகள் கிடந்து மின்னிக் கொண்டிருக்க. எம்மாலையில் மலர்ந்த மதுமலர்களின் தேனும், உன்மேல் புரளும் மலர்மாலைகளில் வழியும் தேனும், அன்றாடம் ஒன்று கலந்து, ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் உறவாடிக் கிடக்க, எமக்குயிர்த்துணையான தலைவனின் மார்பே, எங்களோடு நீ கொண்ட உறவைக் கைவிட்டுப் போவாயேயானால், நட்புக்கிலக்கணமான உயர் பண்பு இனி யாரிடம் இருக்கப்போகிறது?'

**மாக்கவின் வளரத் தீண்டி மணிநகை நக்கு நாளும்**
**பூக்கவி னார்ந்த பைந்தார் புனைமதுத் தேனொ டேந்தித்**
**தாக்கியெம் முலைகள் தம்மை நெருக்கினாய் தரணி**
**மன்னின்**
**நீக்கிநீ யெம்மை நோக்காய் நீத்தியோ நீயு மென்பார் 2951**

[கவின்-அழகு; பூக்கவின்-பூக்களினழகு; மன்னின்-மன்னனைப் போல.]

**அன்னமே தோகை நல்யா ழமுதமே யாய்ந்த தீந்தேன்**
**இன்னரே நங்கை மாரென் றேத்திய பவளச் செந்நா**
**என்னைநீ கண்ட தெம்மை யிரண்டுநா வாயி னாயே**
**மன்னன்போ லீர மின்றி வலித்தனை வாழி யென்பார்**

*[செந்நா-செவ்விய நாவே; வலித்தனை-எம்மை வெறுத்துக் கூறத் துணிந்தாய்.]*

**பூணினா னெருங்க நொந்து பொதிர்த்தன வெம்பி யென்று**
**நாணினால் வருத்தந் தீர்ப்பா னன்முலைக் கண்கள் தம்மைப்**
**பேணிநீ ரெழுதி யோம்பிப் பேரின்பங் கொண்டு தந்தீர்**
**காண்மினோ வின்றெம் வண்ணங் கண்ணிலீர் கண்க**
**ளென்பார் 2953**

*[பொதிர்த்தன - வீங்கின; தீர்ப்பான்-தீர்த்தற்கு; கண்ணிலீர்-அருளில்லாதவராயினீர்.]*

**சென்னிமேன் மிதித்த அஞ்செஞ் சீறடித் திருவில் வீச**
**மின்னிவா ளாரஞ் சிந்த வெறுநிலத் துறைந்து நீயெம்**
**இன்னகை முறுவல் பார்த்தா யின்றெம தாவி பார்த்தாய்**
**மன்னிய மாலை வண்டார் மணிமுடி வாழி யென்பார்**

*[வாள் ஆரம்-ஒளியையுடைய முத்துமாலை; அம்செஞ் சீறடி-அழகிய சிவந்த சிற்றடிகள்.]*

'எங்களுடைய பேரழகு சிறக்க, நீலமணிக் கற்களின் ஒளியைப் பழிக்கின்ற, தேனுண்ண மொய்க்கின்ற வண்டுகளோடும், மற்ற மலர்களோடும் பொருத்தி அழகூட்டிக் கொண்டிருக்கின்ற, செழுங்கழுநீர்ப் பூக்களே, தேனும் வண்டும் நிறைய எம் மார்போடு பொருந்தி அவற்றை நெருக்கினாய். இப்போது நீயும் உன் தலைவனைப் போலவே எம்மைப் பாதுகாக்காமல் கைவிட்டு விட்டுப் போய்விடுவாயோ?

'அன்னப்பறவையோ, அழகு மயிலோ, இன்னிசை யாழோ, இன்ப அமுதமோ, இல்லை இனிக்கின்ற தேனோ இம்மங்கையர், என்று அன்று வாழ்த்திய பவளம் போன்ற

சிவந்த நாவே, இன்று எம்மிடம் என்ன குறை கண்டாய்? நீயும் உன் தலைவனைப் போலவே இரக்கமின்றி எம்மை வெறுத்தொதுக்க நினைத்தாயே. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் இரட்டை நாக்கை நீ எப்போது பெற்றாய்? மேலணிந்த பொற்பூணோடு வந்து தழுவு வதால், இப்பூமார்புகள் விம்மிப் புடைத்தனபோலும் என்று கருதித் தன் மார்பில் அணிந்த மெல்லிய பொன்னா ணால் அவற்றின் வருத்தத்தைப் போக்குவதற்கு அம் மார்பின்மேல் கொடி எழுதி அவற்றைப் பேணிப் பாதுகாத்து இன்பம் அடைந்ததோடு, எம்மையும் இன்பமுறச் செய்தீர். அப்படிப்பட்ட நீங்கள் இப்போது எம்மிடம் கண்ணோட்டம், இரக்கம் இல்லாதவர் ஆகி விட்டீர். எம் அழகு நலம் கெடுவதையும் கண்களே நீங்கள் காணுங்கள். வண்டுகள் நிறைந்து பாடும், மாலை சூடிய கருநீல மணிபோன்ற தலைமுடியே, அரசனுடைய தலை மேல் பதித்த எம் அழகிய சிற்றடிகள் ஒளிவீச, அழகிய முத்துமாலை எழிலோடு மின்ன, வெறுந்தரையிலே பணிந்து, எம் அன்புப் பரிசாய் வரும் மென்முறுவலுக்கு அன்று தவங்கிடந்தனை. இன்றோ பிரிவால் எம் உயிர் வருந்துவதைப்பார்த்தும் பேசாதிருக்கின்றாய்! நீ வாழ்க' என்று மனம் வருந்திக் கூறினர்.

**வீங்குபாற் கடலு நஞ்சாய் விளைந்ததால் விரிந்த வெய்யோன்**
**பாங்கிலா விருளை யீன்று பார்மறைத் திட்ட தாலோ**
**தீங்கதிர்த் திங்கள் செந்தீச் சொரிந்ததாற் றிசைக ளெல்லாம்**
**தாங்குமா றென்னை யாவி தரிக்கிலேங் தேவிர் காளோ**

[நஞ்சு-விடம்; என்னை-எவ்விதம்.]

## வேறு

**விண்ணோர் மடமகள்கொல விஞ்சை மகளேகொல்**
**கண்ணார் கழிவனப்பிற் காந்தருவ தத்தையென்**

**றெண்ணாய வாணெடுங்கண் மெய்கொள்ள வேமுற்றுப்**
**பண்ணாற் பயின்றீ ரினியென் பயில்வீரே** **2956**

[கழிவனப்பின்-மிக்க அழகையுடைய; எண்ணாய-எண்ணுந்தன்மையையுடைய; மெய்கொள்ள - அறிவைக் கவர்ந்துகொள்ள; ஏமுற்று-மயங்கி; பண்ணால்-இசையோடு.]

**கொல்வே னெடுங்கட் குணமாலை குஞ்சரத்தால்**
**அல்லனோ யுற்றாளுக் கன்று களிறடர்த்துப்**
**புல்லிப் புணர்முலையின் பூங்குறட்டின் மேலுறைந்தாய்**
**எல்லேமற் றெம்பெருமாற் கின்றிவளு மின்னாளோ** **2957**

[எல்லே-வெளியாக; குவடு-மலை.]

'அரசன் இவ்வாறு மனம் மாறியதால் பாற்கடல் அமுதம் எல்லாம்கூட நஞ்சாய் மாறியது. விரிந்த கதிர் உடைய ஞாயிறு, தன்னிடம் இல்லாத இருளைப் பொழிந்து உலகை மறைத்தது. தன்னொளி வீசும் நிலவு திசையெல்லாம் செந்தீப் பிழம்பை வாரி இறைத்தது. ஆதலால் தேவர்களே நாங்கள் இனி உயிரை வைத்திருக்க மாட்டோம். எங்கள் உயிர் தரிக்க வழியிருப்பின் கூறு வீராக. வானவர் இளமங்கையோ, வித்தியாதரப் பெண்ணோ, கண்ணைக் கவரும் பேழரகுடைய காந்தருவ தத்தை என்று, உலகம்வியந்தெண்ணும் வாள்போலும் நீண்ட அவளுடைய கண்கள் அறிவை மயக்க, யாழிசை யால் அவளை வென்று மணந்துகொண்டீரே! அவளைப் பிரிந்து போக நினைத்த நீர், இனி அவளுக்கு என்ன உறவாவீர்? கொல்லும் வேல்போலும் நீண்ட கண்களு டைய குணமாலை, அன்றுஅசனிவேகம் என்னும் யானை யால் வளைக்கப்பட்டபோது, அந்த மதயானையை அடக்கி, அவளைஅன்போடு தழுவி, அவளின் மார்பாகிய மலைமுகட்டில் தூங்கி இன்புற்றிருந்தாயே! எம்முடைய பெருமானே இன்று இவளும் உமக்கு வேண்டாத அந்நியளாகி விட்டாளோ?'

**தூம்புடைய வெள்ளெயிற்றுத் துத்தி யழனாகப்**
**பாம்புடைய நோக்கிப் பதுமை பவழவாய்**
**தேம்புடைய வின்னமுதாச் சேர்ந்தாய்க் கினியதுவே**
**ஆம்புடைய நஞ்சடங்கிற்று இன்றூறிற் றாகாதே 2958**

[தூம்பு-துளை; துத்தி-பொறி; அழல்-விடம்; தேம்-இனிமை; ஆம்புடைய-மேல் வளரும் திறத்தை யுடைய.]

**தாழ்ந்துலவி மென்முலைமேற் றண்ணாரம் வில்விலங்கப்**
**போழ்ந்தகன்ற கண்ணினா லேப்பெற்றுப் போகலாய்**
**தாழ்ந்தமர ரின்னமிர்தந் தக்கநாட் டாகாதே**
**வீழ்ந்ததென வீழ்ந்தாய்நீ யின்றதுவும் விட்டாயோ 2959**

[தண்ணாரம்-குளிர்ச்சியைக் கொண்ட முத்துமாலை. வில்விலங்க-ஒளியைக் குறுக்கிடும்படியாக; ஏ-அம்பு; வீழ்ந்தாய்-விரும்பினாய்.]

**கண்ணோ கயலோ கழுநீரோ காவியோ**
**பெண்ணோ வமுதோ பிணையோ வெனப்பிதற்றித்**
**துண்ணெனன் சிலைத்தொழிலுங் காட்டிமுன் னின்புற்றீர்**
**புண்மேற் கிழிபோற் றுறத்தல் பொருளாமோ 2960**

[காவி-நீலோற்பல மலர்; பிணை-மான்; துண்-அச்சம்; கிழி-துணி.]

'துளையோடு கூடிய வெள்ளைப் பல்லும், படமும், நச்சுப்பையும் உடைய நல்ல பாம்பின் நஞ்சும் நீங்கப் பதுமையின் இனிய வாயிதழை இன்னமுதாகக்கொண்டு அவளோடு கூடி மகிழ்ந்திருந்த உனக்கு, அன்று அடங்கி யிருந்த நஞ்சு இன்று மீண்டும் வெளிக்கிளம்பியது போல, நின் பிரிவுத் துயர் அவளைக் கொல்லாமல் கொல்லுகிறது. மென்மையான பூமார்புகளில் படிந்து தாழ்ந்து புரள்கின்ற முத்துவடங்கள் ஒளிவீச, மலர்ந்த விழியம்புகள் நெஞ்சைப் பிளக்க, அவற்றை வெறுத்தொதுக்க நினைக்காதவனாய், வானவர் நாட்டு அமுதம் தவறி மண்ணிலே, தக்க நாட்டிலே வீழ்ந்துவிட்டது என்று கருதிக் கேமசரியை

விரும்பி அடைந்து மகிழ்ந்தாய். இப்போது அவ்விருப்பத்தையும், கேமசரியையின்பால் நீ கொண்ட காதலையும் விட்டுவிட்டாயோ? மற்றும் இவளுடையவை கண்களோ இல்லை கயல்மீன்களோ, செழுங்கழுநீர் பூக்களோ, நீலோற்பல மலர்களோ, அல்லது இவள் பெண்தானோ இல்லை உயிரளிக்கும் அமுதோ, பெண்மானோ என்றெல்லாம் புகழ்மொழி கூறி, அஞ்சத்தக்க வில்வலியையுங் காட்டி, கனகமாலையிடம் முன்பு இன்புற்றிருந்தீரே! இப்போது புண்ணில் வைத்துக் கட்டிய துணியைத் தூக்கி எறிவதைப்போல அவளையும் வெறுத்தொதுக்கிவிட்டுத் துறவை மேற்கொள்ள நினைப்பது சரியாகுமோ?'

**பொன்னகர வீதி புகுந்தீர் பொழிமுகிலின்**
**மின்னி னிடைநுடங்க நின்றாடன் வேனெடுங்கண்**
**மன்ன னகரெல்லாம் போர்ப்ப வலைப்பட்டீர்க்கு**
**இன்னே ஒளியிழந்த இன்னா இடுகினவோ 2961**

[நுடங்க-அசைய; இடுகுதல்-குறைதல்.]

**செங்கச் சிளமுலையார் திண்கறையூர் பல்லினார்**
**மங்கையர்கள் காப்ப மகிழ்ந்தாளை நீமகிழ்ந்து**
**பங்கயமே போல்வாளைப் பார்ப்பானாய்ப் பண்ணணைத்துத்**
**தங்கினாய் கோவே துறத்தல் தகவாமோ 2962**

[பார்ப்பானாய் - வேதியனாய்; பண் அணைத்து- பாட்டால் சேர்த்து; தகவு-தகுதிப்பாடு.]

**புல்லா யிருர்செகுத்த பொன்னநந் திணிதோளாய்**
**மல்லா ரகன்மார்ப மட்டேந்தி வாய்மடுத்திட்டு**
**எல்லாருங் காண விலக்கணையோ டாடினாய்**
**அல்லாந் தவணடுங்க வன்பி னகல்வாயோ 2963**

[புல்லார்-பகைவரது; மட்டு-கள்ளை, அல்லாந்து- அச்சமுற்று.]

'அழகிய இராசமாபுரத்து நகரின் வீதிகளில் புகுந்த நின்னைக் கண்டு, நீர்சிந்தும் மழைமேகத்திடையே மின்னுகின்ற மின்னலைப் போலத் தன் மெல்லிடை அசைய

நின்ற விமலையின் வேல்போன்ற கண்கள் இராசமாபுரம் முழுதும் சுற்றி வளைக்க, அதில் அகப்பட்ட உனக்கு இப்போது அவை, ஒளிகெட்டுத் துன்பத்தைத் தருகின்றனவோ? செக்கச் சிவந்த கச்சினை அணிந்த பூமார்பினையும் கறை நிறைந்த பற்களையும் உடைய மங்கையர்கள் போற்றி வளர்க்க, வளர்ந்து மகிழ்ந்த சுரமஞ்சரியை, தாமரைத் தண்மலர் போன்றவளை மறைமுதியோனாய் மாற்றுருவில் வந்து, இன்னிசையால் கவர்ந்து அவள் இதயத்தில் இடம் பெற்று அவளோடு மகிழ்ந்திருந்தவனே, அப்படிப்பட்டவளையும் இப்போது நீ துறந்துவிட நினைப்பது சரியாகுமோ?

'பகைவர் உயிரைக் கொன்ற, பொன்னணி புனைந்த திரண்ட அழகிய தோளும், மற்போர் புரிந்தகன்ற மார்பும் உடையவனே, பணிப்பெண்கள் மதுவை ஏந்தி நிற்க அவற்றைப்பருகி இலக்கணையோடு இன்புற்று இருந்தாயே. இப்போது அவ்விலக்கணையும் வருந்த அவளை விட்டுப் பிரிந்து துறவை மேற்கொள்ளச் செல்வாயோ?' என்று வருந்திக் கூறினர்.

## 24. கோயில் விலாவணை

**கல்லோ மரனு மிரங்கக் கலுழ்ந்துருகி**
**எல்லாத் திசைதோறு மீண்டி யினமயில்போற்**
**சொல்லாத் துயர்வார் தொழுவா ரழுவாராய்**
**அல்லாந் தகன்கோயி லாழ்கடல்போ லாயிற்றே** 2964

[சொல்லா-சொல்லி; கலுழ்ந்து-அழுது.]

**பூப்பரிவார் பொன்செய் கலம்பரிவார் பொன்வளையை**
**நீப்பி ரெனப்புடைப்பார் நீடாமஞ் சிந்துவார்**
**ஏப்பெற்ற மான்பிணைபோ லேங்குவா ரின்னுயிரைக்**
**காப்பரேற் காவலனார் காவாரோ இன்றென்பார்** 2965

[பரிவார்-அறுப்பார்; புடைப்பார்-மோதி உடைப்பார்.]

  

**கழுநீருந் தாமரையுங் கண்டனவே போலும்**
**முழுநீர்வேற் கண்ணும் முகமு முலறிச்**
**செழுநீர் மணிக்கொடிகள் காழகஞ்சேர் கொம்பாய்**
**அழுநீர வாயலறி யல்லாப்ப போன்றாரே** **2966**

*[உலறி-காய்ந்து; காழகம் சேர்-கருமை சேர்ந்த; அழுநீரவாய்-அழுந்தன்மையவாய், அல்லாப்ப-அலமருவனவற்றை.]*

தேவியர் வருந்தி அழுதலைக் கண்டு, கல்லும் மரமும் இரங்கக் கதறி அழுது மனம் சோர்ந்து, அரண்மனையின் எல்லாப் பக்கத்தில் இருந்தும், மயில் கூட்டம் போல் கூடிய மகளிர் தம் துயரைச் சொல்லி அழுது புலம்பிக் கதறிக் கண்ணீர் வடிப்பதால், அரண்மனை கண்ணீர் நிறைந்த கடலாயிற்று. இவ்வாறு சீவகன் பிரிவை எண்ணி வருந்தும் அவன் காதல் மகளிர், தம்மேலணிந்த பூமாலையை அறுத்தெறிவர். பொன்னாலான அணிமணி களைக் களைந்தெறிவர். பொன் வளையல்களே எம் கையைவிட்டுப் போய்த் தொலையுங்கள் என்று அவற்றை மோதி உடைப்பர். நீண்ட மலர் மாலையைப் பிய்த் தெறிவர். அம்பாலடிபட்ட பிணைமான்போல் துடிப்பர். மக்களுயிர் காக்கின்ற மன்னவன் இவரென்றால் நம் உயிரை இத்துன்பத்தில் இருந்து காக்கமாட்டாரோ, என்று மனம் வருந்தி நிற்பர். செங்கழுநீர்ப்பூவும், தாமரை மலரும் ஒன்றாக இருப்பதுபோல் இருக்கும் வேல்போல் நீண்ட அழகிய கண்களும் முகமும் வாட, அழகிய நீலமணிக் கொடிகள் கருகிக்காய்ந்த கொம்பாய் அழகிழந்து வருந்துவதைப் போலக்கதறிக் கண்ணீர் விட்டு நின்றனர்.

## வேறு

**பண்ணார் பணைமுழவம் பாடவிந்து பன்மணியாழ் மழலை நீங்கிப்**
**புண்ணார் புனைகுழலு மேங்கா புனைபாண்டில் இரங்கா வான்பூங்**

கண்ணா ரொலிகவுள கிண்கிணியு மஞ்சிலம்புங்
கலையு மாரா
மண்ணார் வலம்புரியும் வாய்மடங்கிக் கோன்கோயின்
மடிந்த தன்றே 2967

[பாடு அவிந்து-ஒலியடங்கி; பாண்டில்-கஞ்சதாளம்; கவுள - பக்கத்தையுடைய; வாய்மடங்கி - ஊதா தொழிந்து; ஆரா-ஒலி செய்யா]

அணியார் மணியரக்கு வட்டமுத்தி வைத்தனைய செங்கண்
மாத்தாட்
பிணியார் பெருந்துருத்தி யன்ன பெருங்கவுள பிறையேர்
கோட்ட
பணியார் கமழ்கடாத் தணண லரசுவாப் பண்ணார் பாய்மா
இணையாது மில்லாத கண்ணீர்வீழ்த் துண்ணாதின்
றினைந்த தாமே 2968

[அரசுவா - இராசயானை; பாய்மா - குதிரை, இணைந்த-வருந்தின.]

இன்னிசை எழுப்பும் பெரிய முழவின் ஒலியடங்கி, பல மணிகள் இழைத்த யாழின் இசை நீங்கி, துளையோடு கூடிய அழகிய குழலும் ஒலிக்காது, இனிய கஞ்சதாளமும் ஒலிக்காது கிடக்க, சிறந்த மலர்போலும் கண்களுடைய மகளிர் அணிந்த ஒலியெழுப்பும் கிண்கிணியும் அழகிய மணிச்சிலம்பும் பொன்னணி மேகலையும் ஒலியின்றி ஓய்ந்து கிடக்க, சாந்திட்ட வலம்புரிச் சங்கு முழங்காதிருக்க அரண்மனை ஓசை அடங்கிக் கிடந்தது. அழகிய மணியும், சிவந்த எஃகுருண்டையும், வைத்தழுத்தியது போன்றதாகிய சிவந்த கண்களையும், பெரிய கால்களையும், சேர்த்துக்கட்டிய பெரிய துருத்தி போன்ற கன்னக் கதுப்புகளையும், பிறைநிலாப் போன்ற பெரிய தந்தக் கொம்புகளையும், வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும் மணமுள்ள மதத்தையும் உடைய சீவகனது பட்டத்து யானைகளும், ஒப்புவமை இல்லாத, அலங்கரிக்கப்பட்ட குதிரைகளும்,

தங்கள் தலைவனுடைய பிரிவை எண்ணி ஒன்றும் உண்ணாது உடல் சோர்ந்து நின்றன.

**கழித்த கடிப்பிணையுங் கைவளையு மாலையுங் களைந்து முத்தும்**
**தொழித்த நறுஞ்சாந்துஞ் சுண்ணமும் பன்மணியுங் கலனுஞ் சிந்தி**
**விழித்து வியன்கோயில் பன்மீன் பரந்திமைக்கும் பனியார் வானம்**
**பழித்துப் பசும்பொன் னுலகு குடிபோயிற் றொத்த தன்றே**

*[கடிப்பிணை - காதணி; மீன் - நட்சத்திரம்; பனி- குளிர்ச்சி.]*

**அழலார் சுரையெயிற்று வெஞ்சினவைந் தலைசுமந்த வெகுளி நாகம்**
**நிழலார் திருமணியுந் தேவர் திருமுடிமே னிலவி வீசும்**
**கழலார் பசும்பொன்னும் வேய்ந்து சொரிகதிர்மென் பஞ்சி யார்ந்த**
**கழலா னகர மமுது கடைகடல்போற் கலங்கிற்றன்றே**

*[அழல்-விடம்; சுரை எயிறு-உள்ளே துளையையுடைய பற்கள்.]*

களைந்தெறியப்பட்ட காதணியும், கைவளையலும், முத்துமாலையும், மற்றும் வாசச் சந்தனமும், சுண்ணப் பொடியும் பலவகை மணிகளோடும் பொன்னணி களோடும் கலந்து, எங்கும் சிதறிக் கிடக்க விளங்கிய பெரிய அரண்மனை, பல விண்மீன்கள் இமைத்து ஒளிசெய்யும் குளிர்ந்த வானத்தை வெறுத்து, மேலுலகம் மண்ணுக்குக் குடி பெயர்ந்து வந்ததைப் போலத் தோன்றியது. நஞ்சுடைய, துளைபொருந்திய, சீறிப் பாயும் சினமிக்க நாகப்பாம்பின் தலையிலே இருந்த ஒளிவீசும் அழகிய நாகரத்தினமும், இனி வந்து வணங்கப் போகும் வானவர் திருமுடிமேல் படிந்து ஒளிவீசித் திகழும் புதிய பொன்னணியும் அணிந்து, ஒளிசிந்தும், பஞ்சு

போன்ற மென்மை உடைய, கழல் அணிந்த காலுடைய சீவகனின் இராசமாபுரம், அமுதம் எடுக்கக் கலக்கிய பாற்கடல்போல், அவன் பிரிவை எண்ணிக் கண்ணீர் விட்டுக் கலங்கித் தவித்தது.

## 25. நகர விலாவணை

### வேறு

**நீர்நிறை குளத்து மாரி சொரிந்தென நறுநெய் துள்ளும்**
**நேர்நிறை பொரியுங் குய்யும் வறைகளு நிவந்த வாசம்**
**பார்நிறை யடிசிற் பள்ளி தளியொடு சாலை யெல்லாம்**
**ஊர்நிறை யுயிர்த்த லின்றி யுயிர்சென்ற போன்ற வன்றே**

*[குய்-தாளிப்புடைய கறி; வறை-வறுவல்; நிவந்த-வளர்ந்த; தளி - கோயில்; சாலை - சோறிடும் சாலை; அடிசில்-சோறு.]*

**கோட்புலிச் சுழல்கண் ணன்ன கொழுஞ்சுவைக் கருனை முல்லை**
**மோட்டிள முகையின் மொய்கொள் கொக்குகிர் நிமிரல் வெண்சோறு**
**ஊட்டுறு கறிகொ டேமாங் கனிசுவைத் தயிரொ டேந்தி**
**வேட்டவேர்ப் பெறாது வீதி வெறுநிலங் கிடந்த வன்றே**

*[கொக்குகிர் நிமிரல் வெண் சோறு-கொக்கினது நகத்தைப்போன்ற நீட்சியையுடைய வெண்மையான சோறு; ஊட்டுறு-உண்ணப் பண்ணும்; வேட்டவர்-விரும்புபவர்.]*

**மைந்தர்தம் வண்கை யான்முன் மணிவள்ளத் தெடுத்த தேறல்**
**பைந்துகின் மகளிர் மேவார் பாசிழை பசும்பொன் மாலை**
**சிந்தியே கரந்தார் சொற்போன் மெய்யின்கட் சேர்த லின்றாய்ச்**
**சந்தனச் சாந்தொ டாரந் தாங்கவி னிழந்த வன்றே 2973**

  

[வள்ளம்-கிண்ணம்; தேறல்-மதுத்தெளிவு; மேவார்-பொருந்தார்; கரந்தார் சொல்போல்-மறைப்பவரின் பொய்ச்சொல்லைப்போல்.]

நீர் நிறைந்த குளத்திலே மழை பெய்யும்போது எழும் குமிழிபோல நல்ல நெய்யிலே குமிழி எழுமாறு பொரிக்கும் சுவைமிக்க பொரியலும், குழம்பும், வறுவலும் உண்டாக்கிய வாசம் நிறைந்த, உலகம் போற்றும் பெருமை மிக்க, உண்டி சமைக்கும் இடம், மடப்பள்ளி, சோறிடும் சாலை ஆகிய எங்கும், ஊர் மக்கள் உண்ண வந்து கூடாமையால், அவையெல்லாம் உயிர் நீங்கியன போல் ஒரு செயலும் இன்றிக் கிடந்தன. கொல்லுகின்ற புலியின் கண்களைப் போன்ற இனிய சுவை உடைய கருணைக்கிழங்கும், காட்டுமுல்லை அரும்பைப்போல உருண்டு திரண்ட, கொக்கின் நீண்ட கால் நகம் போன்ற வெள்ளை நிறச்சோறும், உண்ணுதற்கினிய கறி வகையும், இனிய கனிவகையும், சுவை மிக்க தயிரும் ஏந்தி நின்றும், அரசன் துறவால் விரும்பி உண்ண வருவாரின்றித் தெருவெல்லாம் வெறிச்சோடிக் கிடந்தன. ஆடவர்கள் தங்கள் அழகிய கைகளால், முன்னர் மணிகள் இழைத்த பொன் கிண்ணிகளிலே எடுத்து வைத்த தேனின் தெளிவை, புத்துடை அணிந்த பெண்கள் ஏரெடுத்தும் பார்க்காமல், அரிய பொன்னணிகளையும் பசும்பொன் மணிமாலைகளையும் விலக்கி, போலித் துறவிகளின் சொல்லைப் போல (துறவிலே பற்றில்லாதபோதும் பற்றுடையவர் போலச் சொல்லிக் கொள்ளுதல்) தங்கள் உடல்மேல் அவற்றை அணியாதிருக்க, அச்சந்தனமும், சாந்தும், அணிமணி மாலைகளும் அழகிழந்தன.

**தாழிவாய் மறைக்குந் தண்ணென் றடம்பெருங் குவளைக் கண்ணார்**
**மூழிவாய் முல்லை மாலை முலைமுக முரிந்து நக்க**
**யாழின்வாய் முழவம் விம்ம வாட்டொழிந் தயர்ந்து தீர்ந்தேன்**
**ஊழிவாய்க் கொண்ட தொக்கும் பாடலு மொழிந்த தன்றே**

[மூழிவாய்-பூவிடு பெட்டி; ஆட்டொழிந்து-ஆடுதலை நீங்கி; ஒழிந்த-நீங்கின.

அருங்கல நிறைந்த வம்பூம் பவழக்கா றிகழும் பைம்பொற்
பெருங்கிடு கென்னுங் கோலப் பேரிமை பொருந்தி மெல்ல
ஒருங்குட னகர மெல்லா முறங்குவ தொத்த தொல்லென்
கருங்கடல் கல்லென் சும்மை கரந்தது மொத்த தன்றே

[சும்மை-ஒலி; கிடுகு-சட்டம்.]

கலையுலாய் நிமிர்ந்த வல்குற் கடல்விளை யமுத மன்னார்
முலையுலாய் நிமிர்ந்த மொய்தார் முழவுமுத் துரிஞ்சி மின்னச்
சிலையுலாய் நிமிர்ந்த மார்பன் திருநகர் தெருள்க லாதாய்
நிலையிலா வுலகின் தன்மை நீர்மைமீக் கூறிற் றன்றே 2976

[கலை-மேகலை; உலாய்-பரந்து; உரிஞ்சி-உராய்ந்து தெருள் கலாதாய்-தெளிய வொண்ணாததாய்; மீக்கூறல்-மேலாகக் கூறுதல்.]

தாழியின் வாயை மறைக்கும், குளிர்ந்த நீருடைய பொய்கையில் பூத்த குவளைமலர் போலும் பெரிய கண்களை உடைய மகளிர், பூக்குடலையில் இருந்து எடுத்த, புதுமுல்லை மலர்மாலை மார்பிலே புரண்டு தவழ, யாழிசைக்க, மத்தளம் ஒலிக்க, ஆடும் ஆடற்கூத்து ஒழிந்து, ஒலிக்கும் வண்டினங்கள் ஒரு குரலால் இன்னிசை பாடுவது போலப் பாடும் பாடலும் இழந்து நகர் வருந்தி நின்றது. உயர்ந்த மணிக்கலங்கள் நிறைந்த, அழகிய பூவேலைப்பாடுடைய, பவழக் காலோடு சேர்த்துச் செய்த பசும் பொன்னாலாக்கிய, பெரிய சட்டம் என்னும் இமைகளால் கடைவீதிகளை மூட, நகரம் முழுதும் ஒரு சேர உறங்குவதுபோல் தோன்றியது. ஒலிக்கும் கருங் கடலும் தன் ஒலியடங்கிக் கிடந்தது. மேகலை தழுவிக் கிடக்கும் அல்குலுடைய, அமுதம் போல் இனிக்கின்ற, காதல் மங்கையரின் மார்புகளில் தோய்ந்து கிடந்த மலர் மாலையும், முழவினைப் போன்ற திரண்ட முத்து

மாலையும் தங்கி ஒளிவீசும், உயர்ந்த மார்புடைய, சீவகனுடைய அழகிய இராசமாபுரம் பொலிவிழந்து, இராசமாபுரம் என்று, அதைக் கண்டு கொள்ள முடியாத வகையில், உலகின் தன்மை இவ்வாறே நிலையற்றதாயிருக்கும் என்பதை எடுத்துக் கூறுவதுபோல் இருந்தது.

**வேறு**

**கூந்த லகிற்புகையும் வேள்விக் கொழும்புகையும்**
**ஏந்து துகிற்புகையு மாலைக் கிடும்புகையும்**
**ஆய்ந்த பொருளொருவர்க் கீயா அதிலோப**
**மாந்தர் புகழேபோற் றோன்றா மறைந்தனவே 2977**

[ஆய்ந்த-ஆய்ந்து ஈட்டிய; அதி-மிகுதி; உலோபம்-ஈயாமை.]

**புல்லுண் புரவி புலம்பு விடுகுரல்போல்**
**நல்லவளை போழரவ நாரை நரல்குரல்போற்**
**கல்லா விளையர் கலங்காச் சிரிப்பொலியும்**
**கொல்யானைச் சங்கொலியுங் கூடா தொழிந்தனவே 2978**

[புலம்பு-சோம்பல்; போழ் - அறுத்தல்; நரலும்-ஒலிக்கும்.]

**பொற்புடைய பூமாலை சாந்தம் புனைகலன்கள்**
**கற்புடைய மங்கையரிற் காவ லவையிழந்த**
**நற்புடைய தேனார் நறவு நயம்புல்லார்**
**சொற்பொருள்போல் வேட்கப் படாசோர்ந் தொழிந்தனவே**

[நற்பு-நன்மை; நயம்-அறிவு.]

கூந்தலை ஆற்ற மகளிர் இடுகின்ற அகில் புகையும், வேள்வித் தீயிடை எழுகின்ற புகையும், உடுத்தும் உடைக்கு வாசங்கூட்ட ஏற்றும் புகையும், மாலைக்கு இடுகின்ற புகையும், தேடிய செல்வத்தைப் பிறர்க்குக் கொடுத்துதவி மகிழாத இரக்கமற்றவர்கள் புகழ்போல, சீவகனது பிரிவை யெண்ணி இராசமாபுரத்து நகர வீதிகளின் எழுநிலை மாடங்கள் எங்கும் தோன்றா

தொழிந்தன. புல்லைத் தின்னுகின்ற குதிரை சோம்பல் முறிக்கும்போது விடுகின்ற கனைகுரல்போல, அழகிய சங்குகளை அறுக்கும்போது எழுகின்ற ஒலியும், நாரைகளின் குரல் ஒலிபோல் கல்வி கற்காத சிறுவர்கள் எழுப்பும் வறட்டுச் சிரிப்பின் ஒலியும், கொல்லும் மதயானையின் பிளிறலும், சங்குகளின் முழக்கமும் நகரில் இல்லாதொழிந்தன. பெருமைக்குரிய மலர்மாலையும், வாசச்சந்தனமும், அணிகலன்களும், இனிய வண்டுகள் விரும்பி உண்ணும் தேனும் ஆகிய பொருள்கள், கற்புடைய பெண்களைப்போல் பாதுகாவலற்று இருந்தன. சொல் நயம் இல்லாதவர் வாய்ச்சொல்போல, அவை பிறரால் விரும்பப்படா தொழிந்தன.

**தீம்பால் கிளிமறந்து தேவ ரவிமடங்கித்**
**தூம்பார் நெடுங்கைம்மாத் தீங்கரும்பு துற்றாவாய்**
**ஆம்பா லுரைமடங்கி யாரும் பிறர்பிறராய்க்**
**காம்பார் நடுவிருட்கட் காடேபோ லாயிற்றே 2980**

[தூம்பு-துளை; துற்றாவாய் - உண்ணாதனவாகி; காம்பு-மூங்கில்.]

**நீர்முழங்கு நீல நெடுமேக மால்யானைத்**
**தேர்முழங்கு தானைத் திருமாலின் முன்றுறப்பான்**
**பார்முழங்கு தெண்டிரைபோற் செல்வந்தம் பாலர்க்கீந்**
**தூர்முழுது நாடு முரவோன்றாள் சேர்ந்தவே 2981**

[துறப்பான்-துறவு பூணுதற்கு; பாலர்-குமரர்; மால்-பெரிய.]

சீவகன் மேற்கொள்ளத் துணிந்த துறவை எண்ணி, இன்சுவைப் பாலை உண்ணக் கிளி மறந்தது. வானவர்க்கு இடும் பலி நின்றது. துளையோடு கூடிய நீண்ட துதிக்கை உடைய யானை சுவைமிக்க கரும்பைத் தின்னாமல் நின்றது. அவரவர் உள்ளத்திலே ஊறிவரும் பல்வேறு எண்ணங்களும் சொற்களும் பரிமாறிக் கொள்ளப் படாமல் அவரவர் மனத்திலேயே கிடக்க, தனித்தனியாய்

மக்கள் தொடர்பற்றுக் கிடந்தனர். இத்தகைய செயல்களால் நல்ல நாடு, காரிருளில், முள்ளுடைய மூங்கில் நிறைந்த காடு போலாயிற்று. நீர்முகந்து செல்லும், இடியெழுப்பும் கரிய பெரும் மழைமேகம் போன்ற பெரிய யானையும், தேரும்கூடி முழங்குகின்ற படை உடைய, சீவகனுக்கு முன்னரே துறவை மேற்கொள்ள எண்ணி, முழங்கும் அலை உடைய கடல் போன்ற தங்கள் திரண்ட செல்வத்தைத் தம் புதல்வர்களுக்குத் தந்துவிட்டு, நகரில் உள்ளோரும், நாட்டில் உள்ளோரும் சீவகன் திருவடி பணிந்து நின்றனர்.

## 26. துறவு வலியுறுத்தல்

### வேறு

**கொல்லுலைப் பொங்கழற் கிடந்த கூரிலை**
**மல்லல்வே லிரண்டொரு மதியுள் வைத்தபோற்**
**செல்லநீண் டகன்றகஞ் சிவந்த கண்ணினார்**
**அல்லலுற் றழுபவர்க் கரசன் சொல்லினான்** 2982

[கொல்-கொல்லன்; மல்லல்-வளம்.]

### வேறு

**நற்றவம் பரவை ஞால நாமுட னிறுப்பின் வையம்**
**அற்றமி றவத்திற் கென்று மையவி யனைத்து மாற்றா**
**திற்றென வுணர்ந்து நிற்பிற் றிருமக ளென்று நீங்காள்**
**பற்றொடே நிற்பி னென்றுந் திருமகள் பற்றல் செல்லாள்**

[நிற்பின்-தவத்தே நின்றால்; பற்று-ஆசை; அற்றம்-குற்றம்; ஐயவி-வெண் கடுகு.]

**உப்பிலிப் புழுக்கல் காட்டுட் புலைமக னுகுப்ப வேகக்**
**கைப்பலி யுண்டி யானும் வெள்ளின்மேற் கவிழ நீரும்**
**மைப்பொலி கண்ணி னீரான் மனையக மெழுகி வாழ**
**இப்பொருள் வேண்டு கின்றீ ரிதனைநீர் கேண்மி**
**னென்றான்** 2984

[காடு-சுடுகாடு; உப்பிலிப்புழுக்கல்-உப்பினைப் பெறாததாகிய புழுக்கிய சோறு; வெள்ளில்-பாடை.]

கொல்லன் உலையிலே பற்றி எரியும் நெருப்பிலே கிடந்த, கூரிய இலை வடிவுடைய அழகிய வேல் இரண்டை நிலவில் வைத்து அழுத்தியதுபோலத் தோன்றும், காது வரை நீண்டு அகன்று செவ்வரி படரச் சிவந்து அழுகின்ற, கண்ணும் முகமும் உடையவராய்த் துன்புற்று வருந்தும் தன் காதல் மனைவியரிடம் சீவகன் சொல்லுவான்.

'நல்ல தவத்தையும் இப்பரந்த உலகத்தையும் எடை போட்டுப் பார்த்தால், உலகம் குற்றமற்ற தவத்திற்கு எந்தக் காலத்திலும், சிறு வெண்கடுகு அளவுகூடச் சம மாகாது. இவ்வுண்மையை உணர்ந்து தவநெறியில் நின்றால் திருமகள் நம்மைவிட்டு என்றும் நீங்கமாட்டாள்! அதை விட்டு நாம் இவ்வுலக இன்பங்களில் பற்றுக்கொண்டு கிடந்தால், திருமகளும் நம்மேல் பற்றுவைக்கமாட்டாள். இன்னும் கேளீர்: சுடுகாட்டிலே உப்பிடாமல் ஆக்கிய சோற்றைத் தாழ்குலத்தவன் தர, நானும் அவன் ஒரு கையால் இட்ட சோற்றினை ஏற்றுப் பாடைமேல் கவிழ, நீங்கள் எல்லாம் மையிட்ட விழி வடிக்கும் கண்ணீர் வெள்ளத்தில் கிடந்துழல விரும்பியோ, பயனற்ற பொருள் மேல் பற்றுவைக்க நினைக்கின்றீர்! வேண்டாம். அதை விட்டுவிட்டு நான் கூறும் பயனுள்ள பொருளிதைக் கேட்பீராக.'

**கொல்சின யானை பார்க்குங் கூருகிர்த் தறுக ணாளி**
**இல்லெலி பார்த்து நோக்கி யிறப்பின்கீ ழிருத்த லுண்டே**
**பல்வினை வெள்ள நீந்திப் பகாவின்பம் பருகி னல்லால்**
**நல்வினை விளையு ளென்னு நஞ்சினுட் குளித்த**
**லுண்டே 2985**

[ஆளி-சிங்கம்; இல்லெலி-வீட்டெலி, பகா இன்பம்-வீட்டின்பம்.]

**ஆற்றிய மக்க ளென்னு மருந்தவ மிலார்க ளாகின்**
**போற்றிய மணியும் பொன்னும் பின்செலா பொன்ன னீரே**

**வேற்றுவ ரென்று நில்லா விழுப்பொருள் பரவை ஞாலம்**
**நோற்பவர்க் குரிய வாகு நோன்மின நீரு மென்றான் 2986**

*[நோன்மின்-தவம் செய்க; பரவை ஞாலம்-பரந்த உலகம்.]*

**காதலஞ் சோற்றுட் பாய்ந்த மதியெனுங் கலங்க னீரை**
**ஊதுவண் டுடுத்த தாரா னுவர்ப்பினி னுரிஞ்சித் தேற்ற**
**மாதரார் நெஞ்சந் தேறி மாதவஞ் செய்து மென்றார்**
**காதலான் காத லென்னு நிகளத்தா னெடுங்க**
**ணாரே 2987**

*[நிகளம்-பிணிப்பு; உவர்ப்பு-வெறுப்பு.]*

'கொன்றழிக்கும் சினமுடைய யானையை எதிர்பார்த்துக் காத்திருக்கும், கூரிய நகமுடைய, வலிமை மிக்க ஆளி, வீட்டெலியை எதிர்பார்த்து, வீட்டுக் கூரைக்கடியில் காத்திருப்பது உண்டோ? இருவினைப் பயனாகிய பெருவெள்ளத்தைக் கடந்து, என்றும் குறையாத பேரின்பத்தை அடைவதன்றி, நல்வினையால் உண்டாகிய செல்வம் என்னும் நஞ்சிலே அமிழ்ந்து அழிவதுண்டோ? மக்கள் தேடி அடைந்த தவப்பயன் ஒரு சிறிதும் இல்லாதவர்களாயிருந்தால், அவர்கள் விரும்பித் தேடிய பொன்னும் மணியும் அவர்கள் பின்னே செல்லாது. திருமகளைப் போன்றவரே, தவப்பயன் அடையாதவரை அந்நியர் என்று கருதி அவை அவரிடம் செல்லாதொழியும். உலகமும் உலகின் உயர்ந்த பொருள்களும் தவம் புரிவோர்க்கே சொந்தமாகும். எனவே நீங்களும் உயர்ந்த தவத்தை மேற்கொள்க' என்றான்.

இவ்வாறு தன் மனைவியரின் காதலாகிய சேற்றோடு கலந்து நின்ற அறிவென்னும் நீரை அன்பாலே, வண்டுகள் சூழ்ந்து ஒலி செய்யும் மாலையணிந்த சீவகன் உலகப் பொருள்கள்மேல் வைத்த பற்றுதலில் இருந்தும் நீக்கித் தெளிவிக்க, நீண்ட கண்களுடைய அம்மங்கையரும் மனந் தெளிந்து, மன்னன்மேல் வைத்த அன்பென்னும்

பிடிப்பாலே, பெருமைக்குரிய தவத்தை நாங்களும் செய் வோம் என்றனர்.

**தூமஞ்சால் கோதை யீரே தொல்வினை நீத்த நீந்தி**
**நாமஞ்சால் கதியி னீங்கி நன்பொன்மே லுலகி னுச்சி**
**ஏமஞ்சா லின்பம் வேண்டி னென்னொடும் வம்மி னென்றான்**
**காமஞ்சாய்த் தடர்த்து வென்ற காஞ்சனக் குன்ற மன்னான் 2988**

[தூமம்-அகிற்புகை; இன்பம்-வீட்டின்பம்; ஏமம்-காவல்; காஞ்சம்-மேருமலை.]

**நாடக நயந்து காண்பார் நலங்கிளர் கண்கள் சூன்றும்**
**ஆடகக் கலத்து ளான்பா லமிர்தினை நயந்துண் பாரை**
**நீடகம் வெகுண்டுங் கையாற் பிடித்துநீ றட்டி யிட்டேம்**
**கோடக மணிந்த கோல முடியினாய் துறத்து மென்றார் 2989**

[ஆடகக்கலத்துள்-பொன்னாலாகிய பாத்திரத்துள்; கோடகம்-ஒருவகை முடி; துறத்தும்-துறப்பேம்; நீறட்டியிட்டேம்-உண்ணாது தடுத்தோம்.]

## வேறு

**சாந்தங் கிழிய முயங்கித் தடமலராற்**
**கூந்தல் வழிபட்ட கோவேநீ செல்லுலகில்**
**வாய்ந்தடியேம் வந்துன் வழிபடுநா ளின்றேபோற்**
**காய்ந்தருளல் கண்டா யெனத்தொழுதார் காரிகையார் 2990**

[காய்ந்தருளல்-கோபியாதே; வாய்ந்து-வாய்த்து.]

அவர்களிடம் 'வாச நறும்புகையின் மணம் கமழும் கூந்தலுடையவரே, விடாது தொடரும் பழைய இரு வினைப்பயன்கள் என்னும் கடலைக் கடந்து, அச்சந்தரும் நால்வகைத் துன்பத்திலிருந்தும் விடுபட்டு, நல்ல பொன் மயமான மேலுலகுக்கும் மேலே உள்ள இன்பம் மிக

உடைய பேரின்ப வீட்டை அடைய விரும்பினால், என்னோடு துறவறம் மேற்கொள்ள வாருங்கள்' என்றான், காமத்தை வென்று வந்த பொன்மலை போன்ற சீவகன். 'நாடகத்தை விரும்பிக் காண்கின்றவர்களின், நல்ல அழகிய கண்களைத் தோண்டியிருப்போம். பொற்கலத்திலே பெய்த நல்ல பசுவின் பாலை விரும்பி உண்பாரைக் கண்டு மனங் கொதித்து, கையினால் அவர் அதை உண்ணாது பிடித்திழுத்து மண்ணை அள்ளிப் போட்டிருப்போம். மணிமுடி புனைந்தவனே, முற்பிறப்பிலே நாங்கள் இக்கொடுமைகளைச் செய்திருப்போம். எனவேதான் இப்பிறப்பில் நாங்கள் அவற்றை இழந்தோம். எனவே இத்துன்பப் பிறவி ஒழிவதற்குக் காரணமான துறவை மேற்கொள்கிறோம்.

'மார்பில் பூசிய வாசச் சந்தனம் அழிய இறுகத்தழுவி, பெரிய மலர்களால் எம் கூந்தலை அலங்கரித்துப் போற்றிய எம் தலைவா, நீ சென்றடையும் பேரின்ப வீட்டை, நாங்களும் வந்தடைந்து உன்னை வழிபடும்போது, இன்று அந்நியர் என்றுகூறி எம்மை வெறுத்தொதுக்கியதுபோல, அன்றும் வெறுத்தொதுக்காது காந்தருள்க' என்று, அம் மங்கையர் கைகூப்பி வணங்கி நின்றனர்.

## 27. தேவிமார் துறவு

### வேறு

**தெண்டிரை நீத்த நீந்தித் தீங்கதிர் சுமந்து திங்கள்**
**விண்படர்ந் தனைய மாலை வெண்குடை வேந்தர் வேந்தன்**
**கண்டிரண் முத்த மாலைக் கதிர்முலை நங்கை மாரை**
**வெண்டிரை வியங்குங் கேள்வி விசயைகண் ணபயம்**
**வைத்தான் 2991**

[கதிர்-கிரணம்; அபயம்-பயமின்மை.]

**கடிமலர் நிறைந்து பூத்த கற்பகக் கொம்புங் காமர்**
**வடிமலர் மலர்ந்த காம வல்லியுந் தம்மைத் தாமே**

**உடைமலர் கொய்து போக வுகுத்திடு கின்ற தொத்தார்**
**படைமலர் நெடுங்க ணல்லார் பாசிழை நீக்கு கின்றார்**

[காமர் வடிமலர்-விருப்பம் வடிந்த மலரை; உகுத்திடுதல்-சிந்துதல்; படைமலர்-காமன்படையாகிய நீலமலரைப் போன்ற; இழை-ஆபரணம்.]

**தழுமலர்த் தாம நான்று சந்தகின் மணந்து விம்மும்**
**செழுமணி நிலத்துச் செம்பொற் றிருமுத்த விதான நீழல்**
**எழுமையும் பெறுக வென்னு மெழின்முலை நெற்றி சூழ்ந்தார்**
**கழுமிய துகிலிற் காமன் கண்புடைத் திரங்க மாதோ 2993**

[விதானம் - மேற்கட்டி; நெற்றி - உச்சி; கழுமிய- மயங்கிய.]

**நறும்புகை நான நாவிக் குழம்பொடு பளிதச் சுண்ணம்**
**அறிந்தவ ராய்ந்த மாலை யணிந்தபைங் கூந்த லாய்பொன்**
**நிறந்தரு கொம்பு நீலக் கதிர்க்கற்றை யுமிழ்வ வேபோற்**
**செறிந்திருந் துகுத்துச் செம்பொற் குணக்கொடி யாயி னாரே 2994**

[நாவி-கத்தூரி; பளிதச்சுண்ணம் - கருப்பூரப்பொடி; கொம்பு-கற்பகக்கொடி.]

தெளிந்த நீருடைய கடலைக் கடந்து, அழகிய ஒளியேந்தி வருகின்ற நிலவு வானிலே நிறைந்ததைப்போலத் திகழும், மாலை அணிந்த வெண்கொற்றக்குடை உடைய மன்னர் மன்னன் சீவகன், கண்பருத்த முத்துமாலை புரளும் மார்புடைய தன் மனைவியரை, வெள்ளலை வீசும் விரிகடலும் ஆச்சரியப்படத்தக்க, விரிந்து பரந்த நூலறிவுடைய விசயையிடம், பாதுகாவலாக விட்டு வைத்தான். மணமிக்க மலர் பூத்துக் குலுங்கும் கற்பகக் கொம்பும், விருப்பம் நிறைந்த மலர்மலர்ந்த காமவல்லியும், தாமாகவே, தம்மில் பூத்த மலர் உதிர்ந்து நிற்பதுபோல நின்றனர், அணிமணிகள் களைந்த, விசயையின் பாது

காவலில் விடப்பட்ட, காமனது படைக்கலம் போன்ற கண்களுடைய, சீவகனது மனைவியர். பிறகு, தூக்கிக் கட்டிய பெரிய மலர்மாலைகள் தொங்க, சந்தன வாசமும், அகிற்புகையின் மணமும் கமழ்ந்து கிடக்க,அழகிய மணிகள் பதித்த நிலத்திலே, பொன்னாலும் முத்தாலும் அலங் கரித்த மேல்விதானத்தின் கீழ் அம்மங்கையரை இருத்தி, எழுமை எழுபிறப்பும் இப்பூமார்புகள் இக்கணவனையே அடைக என்று, அவற்றின் மேலே இழை நெருங்க நெய்த ஆடையைக் காமனும் கண்டு வருந்துமாறு கட்டினர். அடுத்து மணந்தரும் அகிற்புகையோடு, கத்தூரி வாசக் கலவையும், கற்பூரங் கலந்த சுண்ணப்பொடியும், தொடுத் தலில் வல்லவர் கட்டிய மாலையும் பொருந்திய, அழகிய கருங்கூந்தலை, பொற்கொடி ஒன்று நீலக்கதிர் ஒளியை உமிழ்வதுபோல், (மனத்தால் அடங்கித்) தங்கள் உடலில் இருந்து உதிர்த்துவிட்டு, புடமிட்ட பொற் கொடிபோல் அம்மங்கையர் இருந்தனர்.

## 28. பெரிய யாத்திரை

### வேறு

**இலம்பெரி தெனவிரந் தவர்கட் கேந்திய**
**கலஞ்சொரி காவலன் கடகக் கையிணை**
**புலம்புரிந் துயர்ந்தன விரண்டு பொன்னிற**
**வலம்புரி மணிசொரி கின்ற போன்றவே 2995**

*[இலம்-இல்லாமை; புலம்-அறிவு.]*

**என்பரிந் தெரிதலைக் கொள்ள வீண்டிய**
**அன்பரிந் திடுகலா வுலக மார்கென**
**மின்சொரி வெண்கலம் வீசும் வண்கைகள்**
**பொன்சொரி தாமரைப் போது போன்றவே 2996**

*[என்பரிந்து-எலும்பும் உருகும்படி; அன்பரிந்து-அன் பற்று.]*

**பூந்துகில் புனைகல மாலை பூசுசாந்து**
**ஆய்ந்துல குணவுவந் தருளி மாமணி**
**காந்திய கற்பகக் கான மாயினான்**
**ஏந்திய மணிமுடி யிறைவ னென்பவே 2997**

[கலம்-ஆபரணம்; அருளி-கொடுத்து; காந்திய-ஒளி வீசிய.]

## வேறு

**தேய்பிறை யுருவக் கேணித் தேறுநீர் மலர்ந்த தேனார்**
**ஆய்நிறக் குவளை யஞ்சிக் குறுவிழிக் கொள்ளும் வாட்கண்**
**வேய்நிறை யழித்த மென்றோள் விசயையைத் தொழுது வாழ்த்திச்**
**சேய்நிறச் சிவிகை சேர்ந்தான் தேவர்கொண் டேகி னாரே**

[தேறுநீர்-தெளிந்த நீர்; வேய்-மூங்கில்.]

'ஏதுமில்லாத வறிய ஏழைகள் நாங்கள்' என்று இரப்பவர்களுக்கு அறிவு மிகுந்து, சிறந்த கலன்களை அள்ளிக் கொடுத்த சீவகனின் கடகம் அணிந்த இருகைகளும் உயர்ந்தனவாகிய இரண்டு சங்கநிதி பொன்னையும் மணியையும் ஒரு சேரப் பொழிவது போன்றன. எலும்பும் உருகுமாறு, எரிக்கும் நெருப்பின் தன்மையைக் கொண்டு திரண்ட ஒளிவீசும் முத்தாலாகிய அணிமணிகளை, அன்பற்று, ஏதுமில்லா ஏழைகட்குக் கொடுத்துதவாத உலகம் பெறுக என்று, சொரியும் மன்னனின் வள்ளண்மை மிக்க கைகள், பொன்பொழியும் பதுமநிதியைப் போன்றன. பூம்பட்டால் ஆன ஆடைகளும், அணிகலன்களும், முத்து மாலையும், பூசுகின்ற சந்தனமும், உலகம் விரும்பி ஏற்றுக் கொள்ளக் கொடுதது, ஒளிவீசும் கற்பகச்சோலை போலாயினான், மன்னர் போற்ற உயர்ந்த மணிமுடி அணிந்த சீவகன். தேய்ந்த பிறை நிலவைப் போன்ற நெற்றியையும், அழகிய மணற்கேணியின் தெளிந்த நீரிலே மலர்ந்த, தேன் நிறைந்த, அழகிய குவளை மலர் கண்டஞ்சிக் குவிகின்ற ஒளியுடைய கண்களையும், மூங்கில்

அழகைப் பழித்த மென்தோளினையும் நிறையால் அழித்த விசயையை வணங்கிப் பணிந்து, செவ்வேள் போன்ற சீவகன் சிவிகையில் ஏற வானவர் சுமந்து சென்றனர். (சச்சந்தன் பட்டபின் தன்னுறுப்புக்களின் பொலிவினை விசயை நிறையால் அழித்தாள்.)

## 29. சமவசரண வருணனை

### வேறு

நரம்பெழுந் திரங்கின வீணை நன்குழல்
பரந்துபண் ணுயிர்த்தன பைய மெல்லவே
விருந்துபட் டியம்பின முழவம் வீங்கொலி
சுரந்தன சுடர்மணிப் பாண்டி லென்பவே 2999

[குழல்-வேய்ங்குழல்; பண்-இராகத்தை; விருந்துபட்டு-புதுமையுற்று.]

மங்குலா யகிற்புகை மணந்து கற்பகப்
பொங்குபூ மாலைகள் பொலிந்து பூஞ்சுணம்
தங்கியித் தரணியும் விசும்புந் தாமரோ
செங்கதிர்த் திருமணிச் செப்புப் போன்றவே 3000

[மங்குலாய்-இருளாய்; பொலிந்து - பொலியப்பட்டு; சுணம்-சுண்ணம்.]

### வேறு

திலக முக்குடைச் செல்வன் திருநகர்
பலரு மேத்தினர் பாடின ராடினர்
குலவு பலலியங் கூடிக் குழுமிநின்று
உலக வெள்ள மொலிப்பது போன்றவே. 3001

[திலகம்-மேன்மை; செல்வன் - அருகன்; இயம்-வாத்தியம்.]

கானி ரைத்தன காவொடு பூம்பொய்கை
தேனி ரைத்தன செம்பொ னெடுமதில்
மேனி ரைத்தன வெண்கொடி யக்கொடி
வானு ரிப்பன போன்று மணந்தவே 3002

[கான்-வாசனை; மணந்தவே-நெருங்கின.]

சீவகன் அவ்வாறு செல்கின்றபோது யாழின் நரம்புகள் இணைந்து இன்னிசை பாடின. இனிய குழல்கள் மெல்ல ஒலிசெய்து இசை எழுப்பின. முழவுகள் புதிய ஒலி உண்டாக்கின. ஒளி மிக்க அழகிய கஞ்சதாளங்கள் இன்னிசை பரப்பின. எங்கும் அகிற்புகை நிறைந்து பரவியது. பூரிக்கும் கற்பகமாலை அழகுதர, நறுமண மிக்க சுண்ணப்பொடியை ஏந்தி நிற்கும் இவ்வுலகமும் வானுலகமும் சிவந்த ஒளிவீசும் மணியிருக்கும் செப்புப் போல் திகழ்ந்தன. மிக்க புகழுடைய முக்குடைச் செல்வ னாகிய அருகன் திருக்கோயிலை, விண்ணவர் மண்ணவ ராகிய எல்லாரும் போற்றிப் புகழ்பாடினர்; கொண்டாடிக் கூத்தாடினர். இன்னிசை வாத்தியங்கள் கூடி ஒலிசெய்து, கடலலைகள்கூடி ஒலிப்பது போல் முழங்கின. மேலும் சீவகனை வானவர் சிவிகையில் சுமந்து சென்றபோது, சோலைகளில் நறுமணம் கமழ்ந்து நின்றது. பூம்பொழில் களில் தேன்நிறைந்து, வண்டுகள் மொய்த்துப் பாடின. சொக்கப் பொன்னாலாக்கிய மதிற் சுவர்களின் மேல் வெண்ணிறக் கொடிகள் நிறைந்து பறந்தன. அப்படிப் பறக்கின்ற கொடிகள் விண்ணைத் தொட்டிழுப்பது போல் நீண்டு உயர்ந்து நெருங்கி நின்றன.

**கோல முற்றிய கோடுயர் தூபையும்**
**சூல நெற்றிய கோபுரத் தோற்றமும்**
**ஞால முற்றிய பொன்வரை நன்றரோ**
**கால முற்றுடன் கண்ணுற்ற போன்றவே 3003**

[கோடு உயர்-உச்சி உயர்ந்த; தூபை-தூபி; சூலம்-இடிதாங்கி; பொன்வரை-மேருமலை.]

**வாயிற் றோரணங் கற்பக மாலைதாழ்ந்**
**தேயிற் றிந்திரன் பொன்னக ரின்புறம்**
**போயிற் றேயகி லின்புகை போர்த்துராய்**
**ஞாயிற் றொள்ளொளி நைய நடந்ததே**

[ஏயிற்று-பொருந்திற்று; போர்த்து-மூடி; நைய-மழுங்க.]

செய்ய தாமரைப் பூவினுட் டேங்கமழ்
பொய்யில் சீர்த்திவெண் டாமரை பூத்தபோன்
றையஞ் செய்தடு பானிறப் புள்ளினம்
மையி றாமரை மத்தகஞ் சேர்ந்தவே 3005

[ஐயம்செய்து-ஐயத்தை உண்டாக்கி; புள்ளினம்-அன்னத்தின் குழாம்; தாமரை மத்தகம்-செந்தாமரையின் உச்சியில்.]

மல்லன் மாக்கட லன்ன கிடங்கணிந்
தொல்லென் சும்மைய புள்ளொலித் தோங்கிய
செல்வ நீர்த்திருக் கோயிலிம் மண்மிசை
இல்லை யேற்றுறக் கம்மினி தென்பவே 3006

[மல்லல்-வளம்; கிடங்கு-அகழி; சும்மை-ஒலி; துறக்கம்-சுவர்க்கம்.]

அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த சிகரமுடைய தூபியின் தோற்றமும், இடிதாங்கிகள் பதித்த கோபுரத்தின் தோற்றமும், உலகை வளைத்த மேருமலைகள் ஒன்று கூடும் காலம் வந்து கூடியதைப் போலிருந்தன. வாயிலில் கட்டிய தோரணங்கள் இந்திரலோகத்தில் உள்ள கற்பக மாலைக்கு மேலாகச் சென்று பொருந்தி நின்றன. அகில் புகையும் அவ்வானவர் உலகம் வரை சென்றது. அப்படிச் சென்ற புகை வானவர் உலகம் முழுவதையும் மூடி மறைக்கச் சூரியனின் ஒளி குன்றியது. சிறந்த செந்தாமரை மலரினுள்ளே, தேன் வழியும், மிக்க புகழுடைய வெண்தாமரை மலர் பூத்துக் கிடப்பதைப் போன்று; மயக்கத்தை உண்டாக்கிய, காய்ச்சிய பாலின் நிறத்தை உடைய வெள்ளை அன்னப் பறவைகள், மாசு மறுவற்ற செந்தாமரை மலர் மேல் சென்று தங்கின. வள மிக்க பெரிய கடல் போன்ற அகழியால் சூழப்பட்ட, 'ஒல்' லென்று ஒலியெழுப்பிப் பறவைகள் ஆரவாரமிடும், செல்வ வளமிக்க சமவசரணம் இப்பூவுலகில் இல்லையென்றால் வானுலகம் இனியதே என்பர்.

## வேறு

விளங்கொளி விசும்பறுத் திழிந்து மின்னுதார்த்
துளங்கொளி மணிவணன் றொழுது துன்னினான்
வளங்கெழு மணிவரை நெற்றிப் பாற்கடல்
இளங்கதிர்ப் பருதியொத் திறைவன் தோன்றினான் 3007

[விசும்பறுத்து - ஆகாயத்தின் நடுவைப் பிளந்து; துளங்கும்-விளங்கும்.]

வினையுதிர்த் தவர்வடி வின்ன தென்னவே
வனைகதிர்த் தடக்கைவைத் திருந்த வாமனார்
கனைகதிர்த் திருமுக மருக்க னாகவான்
புனைமலர்த் தாமரை பூத்த தொத்தவே 3008

[அருக்கன்-சூரியன்; கனை-மிகுதி.]

இரிந்தன விருவினை யிலிர்த்த மெய்ம்மயிர்
சொரிந்தன கண்பனி துதித்துக் காதலால்
அரிந்தது மணிமிட றலர்பெய்ம் மாரிதூஉய்த்
திரிந்தனன் வலமுறை திலக மன்னனே 3009

[இரிந்தன - கெட்டன; இலிர்த்த - சிலிர்த்தன; அரிந்தது-அற்றது.]

தேவர்கள் சிவிகையில் சுமந்துச் செல்லச் சென்ற, மின்னும் ஒளிவீசும் மாலையணிந்த சீவகன் விளங்கும் ஒளியுடைய வானின் நடுவைப் பிளந்து சென்று, கோவிலை நெருங்கினான். அப்போது, உயர்ந்த மாணிக்க மலையின் உச்சியிலே, பாற்கடல் மேல் தோன்றும், அழகிய கதிருடைய ஞாயிற்றைப்போல அருகப்பெருமான் தோன்றினான். இருவினையும் விட்டொழித்தவர்கள் தோற்றம் இப்படித்தான் இருக்கும் என்பதை எடுத்துக்காட்டுவதைப்போல, அழகிய ஒளிவீசும், அருள் செய்யும், கையோடு இருந்த அருகப்பெருமானின், மிக்க பேரொளி வீசும் அழகிய முகம் சூரியன் ஆக, கூடியிருந்த வானவர் முகங்கள் அழகிய தாமரை மலர்கள் மலர்ந்ததைப் போன்றிருந்தன. இறைவன் மேல் சீவகன் வைத்த பற்றி

னால் அவன் இருவினைகளும் அழிந்தன. பக்திப் பரவசத்தால் மயிர்க்கால்கள் சிலிர்த்தன. கண்கள் ஆனந்தக் கண்ணீர் வடித்தன. இறைவன் புகழைப் பாடிப்பாடி அவன் குரல் கம்மியது. மன்னர்களில் திலகம் போன்றவனாகிய சீவகன், மழை பொழிவதைப்போல மலர்களைத் தூவி, ஆண்டவன் கோவிலை வலம் வந்து வணங்கினான்.

முத்தொளிர் தாமமு முருவ மாமணித்
தொத்தொளிர் தாமமுஞ் சொரிபொற் றாமமும்
தத்துநீர்த் தண்கடற் பவழத் தாமமும்
வைத்தபூந் தாமமு மலிந்து தாழ்ந்தவே 3010

*[பொற்றாமம்-பொன்மாலை; மலிந்து தாழ்ந்த-மிக்குத் தங்கின.]*

மணிவரை யெறிதிரை மணந்து சூழ்ந்தபோல்
அணிமயிர்க் கவரிக ளமர ரேந்தினார்
துணிமணி முக்குடை சொரிந்த தீங்கதிர்
பணிமணிக் காரிருள் பருகு கின்றதே 3011

*[கவரி-சாமரை; மணிக்காரிருள்-நீலமணிகளின் கரிய இருளை.]*

முழாத்திரண் மொய்ம்மலர்த் தாமந் தாழ்ந்துமேல்
வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினம்
குழாத்தொடு மிறைகொளக் குனிந்து கூய்க்குயில்
விழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே 3012

*[வழாத் திருமலர்-வாடாத அழகிய மலர்; இறைகொள்ள-தங்க; கூய்-கூவ.]*

பிண்டியின் கொழுநிழற் பிறவி நோய்கெட
விண்டலர் கனைகதிர் வீரன் றோன்றினான்
உண்டிவ ணறவமிர் துண்மி னோவெனக்
கொண்டன கோடணை கொற்ற முற்றமே 3013

*[கோடணை - ஆரவாரம்; விண்டலர் - விரிந்து மலர்ந்த.]*

சீவகன் அவ்வாறு வலம் வரும்போது முத்துக்களால் தொடுத்த முத்துமாலையும், அழகிய, பெரிய மணிகளால் செய்த, கொத்துக் கொத்தாக இருக்கும் மாணிக்க மாலையும் ஒளிவீசும் பொன்மாலையும், அலையெழுந்து வீசும் குளிர்ந்த நீருடைய கடலில் கிடைத்த பவளத்தாலான மாலையும், எடுத்து வைத்த பூவினால் தொடுத்த மாலையும் அங்கு நிறைந்து இருந்தன. அப்பொழுது மாணிக்க மணிமலையைச் சூழ்ந்து அலைகள் அடிப்பதைப்போல இறைவனைச் சுற்றி நின்று அழகிய வெண்சாமரங்களை வானவர்கள் வீசினர். ஒளிவீசும் மணிகள் இழைத்த முக்குடை வீசிய பேரொளி, பல மணிகளின் ஒளியை மங்கச் செய்தது. முழவைப் போலப் பருத்த, நெருக்கிக் கட்டிய மலர்களால் தொடுத்த மாலை தொங்க, அதற்கு மேலே வாடாத அழகிய மலர்களெல்லாம் பூத்துக் குலுங்க வண்டின் கூட்டங்கள் தேனுண்ண அவற்றைச் சூழ்ந்து மொய்க்க அதனால் வளைந்து, குயில் கூவி விழா வெடுக்கும்படியாக அருகப்பெருமானின் அசோகமர நீழல் பரந்து நின்றது.

அசோகமரத்தின், குளிர் நிழலின் கீழே, விரிந்து, சிறந்து, பரந்த, ஒளியுடைய அருகப்பெருமான் தோன்றினான். தோன்றவும், 'இங்கே அறம் என்னும் அமுதம் இருக்கிறது. அதை எல்லோரும் உண்டு மகிழ்வீராக' என்று, வானவர்கள் எழுப்பும் ஆரவாரப் பேரொலி கோயில் முழுதும் நிறைந்திருந்தது.

**வானவர் மலர்மழை சொரிய மன்னிய**
**ஊனிவர் பிறவியை யொழிக்கு முத்தமன்**
**தேனிமிர் தாமரை திளைக்குஞ் சேவடி**
**கோனமர்ந் தேத்திய குறுகி னானரோ** **3014**

[ஊன் இவர் - உடம்பிலே பரக்கின்ற; சேவடி- பாதத்தை.]

**குருகுலஞ் சீவக குமரன் கோத்திரம்**
**அருகலில் காசிப மடிகள் வாழியென்று**

எரிமணி முடிநில முறுத்தி யேத்தினான்
புரிமணி வீணைகள் புலம்ப வென்பவே 3015

[அருகலில்-குறைதலில்லாத; புலம்ப-வருந்த.]

மன்னவன் றுறவெனத் துறத்தன் மாண்பெனப்
பொன்வரை வாய்திறந் தாங்குப் புங்கவன்
இன்னுரை யெயிறுவில் லுமிழ வீழ்ந்தது
மின்னியோர் வியன்மழை முழங்கிற் றொத்ததே 3016

[துறவென-துறப்பேனென்று கூற; புங்கவன்-ஸ்ரீவர்த்த மானர்.]

வானவர்கள் பூமாரி பொழிய, ஊத்தைச் சதையோடு பொருந்திய உயர் பிறவியை, அழிக்கும் அருளைப் புரீ கின்ற அருகப்பெருமானுடைய, வண்டுகள் தாமரை மலர் என்று சூழ்ந்து மொய்க்கும் அழகிய திருவடியைப் பணிந்து பரவுவதற்குச் சீவகன் சென்றான். அப்போது அருகில் இருந்தவர்கள், 'அடிகளே, இச்சீவகன் குருகுலத்தைச் சேர்ந்தவன். இவன் கோத்திரம் குன்றாத காசிப கோத் திரத்தைச் சேர்ந்தது' என்று கூறிட, சீவகனும் ஒளிவீசும் தன் மணிமுடி நிலத்திலே படியும்படி வணங்கி, மணிகள் இழைத்த வீணையின் நரம்புகள் வருந்தத் துதித்தான்.

துதித்த சீவகன் தான் பற்றைத் துறந்ததைக் கூறவும், 'நீ இவ்வாறு துறந்ததே பெருமைக்குரியதாகும்', என்று பொன்மலை வாய் திறந்து பேசுவதைப்போல, சீவர்த்த மானனின் அருளுரை, மென்முறுவலோடு கலந்து, மழை மேகம் மின்னி முழங்குவதைப்போல வெளிவந்தது.

# 30. சீவகன் துறவு

## வேறு

காய்களிற்றி னிடைமருப்பிற் கவளம்போன் றேமாராக்
கதியுட் டோன்றி
ஆய்களிய வெவ்வினையி னல்லாப்புற் றஞ்சினே னறிந்தார்
கோவே
வேய்களிய வண்டறையை விரிந்தலர்ந்த தாமரையின்
விரைசேர் போதின்
வாயொளியே பெறநடந்த மலரடியை வலங்கொண்டார்
வருந்தார் போலும் 3017

[காய்தல்-கோபித்தல்; ஏமரா-கெடுகின்ற; ஆய்களிய-ஆராய்ந்த உவப்பினையுடைய; அல்லாப்பு-வருத்தம்.]

## வேறு

சேடார் செம்பொற் றிருமணி வைரத் தொத்தணிந்
துலகோம்பும்
வாடா மாலை வார்தளிர்ப் பிண்டி வாமநின் குணநாளும்
பாடா தாரைப் பாடா துலகம் பண்ணவர் நின்னடிப்பூச்
சூடா தார்தாள் சூடார் மாலைச் சுடர்மணி நெடுமுடியே

[சேடு-பெருமை; பாடாது-புகழாது.]

## வேறு

வைய மூன்று முடனேத்த வளருந் திங்கள் வாளெயிற்
றைய வரிமான் மணியணைமே லமர்ந்தோய் நின்னை
யமராதார்
வெய்ய வெந்நோய் வினையுதைப்ப வீழ்ந்து துன்பக்
கடலழுந்தி
நெய்யு நுண்ணூ னாழிகையி னிரம்பா நின்று சுழல்வரே

[அரிமான்-சிங்கம்; அமராதார்-விரும்பி நினைந்து பொருந்தாதார்; நூல்நாழிகை-நூல் நெய்யும் கருவி.]

  

'சினமுடைய யானையின் கொம்புகளுக்கிடையே சிக்கிய சோற்றுருண்டையைப் போல, காலன் கையில் சிக்கி அழிகின்ற பிறவியிலே வந்து தோன்றி, களிப்பினை உண்டாக்கும் தீவினையால் வருந்தி, இம்மனிதப் பிறவியையே வெறுத்தேன். மெய்ந்நெறி அறிந்தவர்க்கு, மேலான தலைவனே, மிக்க களிப்புடைய வண்டுகள் மொய்த்துப் பாடுகின்ற, விரிந்து, மலர்ந்த, தாமரை மலர் ஒளிபெற அதன்மேல் நடந்தேகிய, அழகிய திருவடியை வலம் வந்து வணங்கினவர்கள் துன்பம் உறமாட்டார்கள். பெருமை உடைய பசும்பொன்னோடு அழகிய நீல மணியையும், வைரக்கொத்தினையும் அணிந்து, உலகைப் பாதுகாக்கின்ற, வாடாத மாலையும் நீண்ட தளிரும் உடைய அசோகமர நீழலின்கீழ் எழுந்தருளி யிருக்கின்ற அருகப் பெருமானே, உன் பெருமையைப் பாடிப் புகழாதவர்களை உலகம் புகழாது. வானவரும், நின் திருவடி மலர் பணிந்து தொழாதவர்கள் தாளினை, ஒளிமிக்க மணிகள் புனைந்த தம் தலைமேல் சூடிக்கொள்ள மாட்டார்கள்.

'மூவுலகும் போற்றித் துதிக்க, பிறைநிலாப்போல வளைந்த கூரிய பற்களை உடைய, அழகிய சிங்கம் சுமந்த மாணிக்க மணியணைமேல் எழுந்தருளியிருப்பவனே, உன்னை உள்ளத்தில் ஏற்றிக் கொள்ளாதவர்கள், மிக்க துன்பந்தரும் கொடிய தீவினை துரத்த, துன்பக் கடலிலே வீழ்ந்து அழுந்தி, நெய்யும் நாழிகை (நாடா) போல் துன்பத்தில், நோய்த்துயரில் கிடந்து அவதிப்படுவர்.'

**தொழுதிப் பன்மீன் குழாஞ்சூழத் துளும்பா திருந்த திங்கள்போல்**
**முழுதும் வைய முடனேத்த முதுவாய் வலவை யாயிருந்**
**தழுது வினைக ளெல்லாப்ப வறைந்தோய் நின்சொ லறைந்தார்கள்**
**பழுதி னறுநெய்க் கடற்சுடர்போற் பல்லாண் டெல்லாம் பரியாரே** **3020**

[துளும்பாதிருந்த-அசையாதிருந்த; முதுவாய்-முதிய உண்மையால்; வலவையாயிருந்து - வெற்றியுடை யையாயிருந்து; பரியார்-கெடார்.]

**செழும்பொன் வேய்ந்து மணியழுத்தித் திருவார் வைர நிரைத்ததனுட்**
**கொழுந்து மலருங் கொளக்குயிற்றிக் குலாய சிங்கா தனத்தின்மேல்**
**எழுந்த பருதி யிருந்தாற்போ லிருந்த வெந்தை பெருமானே**
**அழுந்தேன் வந்துன் னடியடைந்தே னருவாய்ப் போத லழகிதோ 3021**

[குயிற்றி - எழுதி; குலாய - பண்ணின; அருவாய்ப் போதல்-பிறப்பற்றுப் போதல்.]

'விண்மீன் கூட்டங்கள் திரண்டு சூழ்ந்திருக்க, அவற்றின் நடுவே அசையாதிருக்கின்ற, அழகிய முழு நிலவைப்போல, உலகம் எல்லாம் போற்றிப் புகழ்பாட, முதிய உண்மையால் வெற்றிப் புகழுடையவனாக இருந்து, இருவினையும் அழிய அறநெறி கூறி அருளியவனே, நீ கூறிய அறவுரையைக் கைக் கொண்டவர்கள், தீமையற்ற, தூய நறுநெய் நிறைந்த கடலில் இட்ட விளக்குப்போல் பல்லாண்டுகள் துன்பமின்றி வாழ்வர். உயர்ந்த பொன்னால் செய்து, அதிலே மணிகளைப் பதித்து, அழகிய வைரங்களை வைத்திழைத்து, கொழுந்தும் மலரும் உருக்கொள்ள, வல்லிக்கொடி யெழுதிய சிங்காதனத்தின் மேல் செஞ்சுடர்ச் சோதிபோல எழுந்தருளியிருக்கும் எங்கள் பெருமானே, பிறவிக்கடலில் இதுநாள் வரை அழுந்திக் கிடந்தேன், இன்றுன் பொன்னடி வந்து சரணடைந்திருக்கின்றேன். இனியேனும் என் பிறவித் துயர் அறுதல் நல்லதாகும்' என்றான்.

## வேறு

குண்டலமும் பொற்றோடும் பைந்தாருங் குளிர்முத்தும்
வண்டலம்பு மாலையு மணித்தொத்து நிலந்திவள
விண்டலர்பூந் தாமரையின் விரைததும்ப மேனடந்த
வண்டலர்பூந் திருவடியை மணிமுடியின் வணங்கினான்

*[வண்டு அலம்பும்-வண்டுகள் ஒலிக்கின்ற; திவள-அசைய; விரை-வாசனை.]*

நிலவிலகி யுயிரோம்பி நிமிர்ந்தொளிர்ந்து பசிபகைநோய்
உலகமிருள் கெடவிழிக்கு மொண்மணி யறவாழி
அலகையிலாக் குணக்கடலை யகன்ஞான வரம்பானை
விலையிலா மணிமுடியான் விண்வியப்ப விறைஞ்சினான்

*[அறவாழி - தரும சக்கரம்; அலகையிலா - எண்ணிறந்த.]*

தூய்த்திரண் மணித்தாமஞ் சொரிந்துபொன் னிலாங்கப்
பூத்திரண் மணிமாலைப் போர்ச்சிங்கம் போதகம்போல்
ஏத்தரிய குணக்கடலை யிகலின்ப வரம்பானைத்
தோத்திரத்தாற் றொழு திறைஞ்சித் துறப்பேனென்
றெழுந்திருந்தான் 3024

*[தூய்த்திரள் - தூய்மையாகத் திரட்சி கொண்ட; போதகம்-யானை.]*

என்றவன், காதிலணிந்த குண்டலமும் பொன்னால் செய்தணிந்த தோடும், புதுமலர் மாலையும், உயர்ந்த அழகிய முத்தும், வண்டு சூழ்ந்து மொய்க்கும் முடிக் கண்ணியும், மணிச்சரமும் நிலத்திலே தாழ்ந்து புரள, விரிந்து மலர்ந்த தாமரை மலரின் நறுமணம் பொங்கி வழிய, அதன்மேல் நடந்தேகிய திருவடிகளின்மேல், மணிமுடி படிய வணங்கினான். நிலவின் ஒளியையும் மீறிப் பேரொளி வீசி, உலக உயிர்களைக் காப்பாற்றி, மேலெழுந்து விரிந்து, உலகத்தை வருத்தும் பஞ்சமும் பசியும் பகையும் இருளும் நோயும் துயரமும் நீங்கச்

சுடர்கின்ற அழகிய மணிகள் பதித்த அறவாழியை உடைய, அளவற்ற நற்பண்புகளுக்கு இருப்பிடமான, குணக்கடலை, பரந்த ஞானத்தின் பயனாக இருக்கின்ற விலை மதிக்க முடியாத மாணிக்க மணிமுடியணிந்த சீவகன் விண்ணவர் கண்டு வியக்கப் பணிந்து வணங்கி னான். தூய, நன்முத்துக்களால் ஆன திரண்ட மாலை பூமியிலே படிந்து புரள, அழகுறத் தொடுத்த மணிமாலை புனைந்த, போர்வல்ல சீவகன், யானையைப் போல் பணிந்து வணங்கி, போற்றுதற்கரிய குணக்கடலை, பேரின்ப வீடளிக்கும் பெருமானைப் போற்றித் துதித்துப் புகழ்பாடி, 'எல்லாவற்றையும் இனி நான் துறந்தேன்' என்றெழுந்தான்.

## வேறு

**முடியணி யமரரு முலைநல் லார்களும்**
**புடைபணிந் திருந்தவப் புலவன் பொன்னகர்**
**கடிமலர்க் கற்பகங் காம வல்லியோடு** 3025
**இடைவிரா யெங்கணும் பூத்த தொத்ததே**

[புடை-பக்கத்தே; விராய்-கலந்து.]

**ஒத்தொளி பெருகிய வுருவப் பொன்னகர்**
**வித்தகன் வலஞ்செய்து விழுப்பொற் பூமிபோய்**
**மத்தக மயிரென வளர்த்த கைவினைச்** 3026
**சித்திரக் காவகஞ் செல்வ னெய்தினான்**

[மத்தக மயிரென-தலைமயிரைப்போல; கைவினை-தொழிலையுடைய.]

**ஏமநீ ருலகமோ ரிம்மிப் பாலென**
**நாமவே னரபதி நீக்கி நன்கலம்**
**தூமமார் மாலையுந் துறக்கின் றானரோ** 3027
**காமனார் கலங்கழிக் கின்ற தொத்ததே**

[ஓரிம்மிப்பாலென-ஓர் இம்மியளவென்று; தூமம்-அகிற்புகை; காமனார்-மன்மதன்.]

**மணியுறை கழிப்பது போல மங்கலப்**
**பணிவரு பைந்துகி னீக்கிப் பாற்கடல்**
**அணிபெற வரும்பிய வருக்க னாமெனத்**
**திணிநிலத் தியன்றதோர் திலக மாயினான் 3028**

[அரும்பிய-தோன்றிய; அருக்கன்- சூரியன்; திணிநிலம்- அணுச்செறிந்த நிலம்.]

அப்போது, முடிபுனைந்த வானவரும் அவர் தேவி மாரும் கூடி வணங்கி நிற்க, விளங்கிய அருகப்பெருமான் திருக்கோயில், மணமிக்க மலர்கள் நிறைந்த கற்பகமரமும், காமவல்லிக் கொடியும், இடைவெளியின்றி எங்கும் மலர்ந்து இருப்பது போன்றிருந்தது. ஒளி நிறைந்து வீசும் மிக்க அழகுடைய அருகன் திருக்கோயிலை, அறிஞர் பெருமானாகிய சீவகன் வலம் வந்து வணங்கி, அப்பொன் னிலத்தைக் கடந்து, தலைமுடியைப்போல் பாதுகாத்து வளர்த்த, சித்திரக்கூடம் போன்ற, மலர்ச்சோலையை அடைந்தான். தனக்குக் காவலாகக் கடலால் சூழப்பட்ட இவ்வுலகையும், தவப்பயனையும் வைத்து எண்ணினால் இவ்வுலகம் இம்மியளவே சிறப்புடையதாகும் என்பதை அறிந்து, அச்சந்தரும் வேலேந்திய சீவகன், இவ்வுலகப் பற்றினைத் துறந்து, தானணிந்திருந்த அழகிய பொற் பூண்களையும், நறுமணப்புகை தோய்ந்த புதுமலர் மாலை களையும் நீக்குவது, காமவேள் அணிமணிகளைக் களைந் தெறிவதைப் போன்றிருந்தது. மாணிக்கமணியை மறைத் திருக்கின்ற உறையை அகற்றி விடுவதைப்போல, அழகிய, குறையற்ற, தூய ஆடையைக் களைந்தெறிந்துவிட்டு, சீவகன், பாற்கடலில் அழகு பெறத் தோன்றிய சிவந்த சூரியன், உறுதிமிக்க மண்ணிலே வந்து பொருந்தியதோ என்று வியக்கத் துறவுக்கோர் விளக்கம் ஆயினன்.

**மலிந்தநன் மாலைகள் வண்ணப் பூந்துகில்**
**நலிந்துமின் னகுமணி நன்பொற் பேரிழை**
**மெலிந்தனென் சுமந்தென நீக்கி மேனிலைப்**
**பொலிந்ததோர் கற்பகம் போலத் தோன்றினான் 3029**

[வண்ணம்-நிறம்; இழை-ஆபரணம்.]

திருந்திய கீழ்த்திசை நோக்கிச் செவ்வனே
இருந்ததோ ரிடிகுரற் சிங்கம் பொங்கிமேற்
கரிந்ததன் னுளைமயிர் துறப்ப தொத்தனன்
எரிந்தெழு மிளஞ்சுட ரிலங்கு மார்பினான் 3030

[செவ்வனே-நேராக; கரிந்த-வளைந்த.]

அஞ்சுடர்த் தாமரைக் கையி னான்மணிக்
குஞ்சிவெண் படலிகைக் குமர னீப்பது
செஞ்சுடர்க் கருங்கதிர்க் கற்றை தேறுநீர்
மஞ்சுடை மதியினுட் சொரிவ தொத்ததே 3031

[படலிகை-தட்டு; மஞ்சு-மேகம்.]

வேலைவாய் மணியிலை யூழ்த்து வீழ்ப்பதோர்
காலைவாய்க் கற்பக மரத்திற் காவலன்
மாலைவா யகிறவாழ் குஞ்சி மாற்றலிற்
சோலைவாய்ச் சுரும்பினந் தொழுது சொன்னவே 3032

[ஊழ்த்து - முறைமைப்பட்டு; சுரும்பினம்-வண்டின் கூட்டம்.]

'நிறைந்த நறுமலர் மாலைகளும், அழகிய பூம்பட்டு உடையும், மின்னலின் ஒளியைப் பழிக்கின்ற மணியும், நல்ல பொன்னாலாக்கிய பெரிய அணிமணிகளும், சுமந்து உடல் இளைத்தேன்' என்று அவற்றைக் களைந்தெறிந்து விட்டு, உயர்ந்து விளங்கும் ஒரு கற்பக தருவைப்போலச் சீவகன் விளங்கினான்.

இவ்வாறு அணிமணிகளைக் களைந்தெறிந்துவிட்டு, ஒளிவிளங்கும் கீழ்த்திசையை நோக்கி, முறையோடு அமர்ந்திருந்து இடிபோல முழங்கும் குரலுடைய சிங்கம், மேல்நோக்கி வளர்ந்து சுருண்ட தன் பிடரி மயிரை நீக்கிக் கொள்ளத் தயாராக இருப்பதைப்போல, ஒளி மிகுந்த இளஞாயிற்றைப்போல விளங்கும் அழகிய மார்பு

டைய சீவகன், தன் தலைமுடி கழிப்பதற்குத் தயாராக வந்தமர்ந்தான். அழகிய ஒளிமிக்க தாமரை மலர் போலும் தன் கையினால், நீலமணி போன்ற தன் தலை முடியை வாங்கி வெள்ளித் தட்டிலே சீவகன் போடுகின்ற காட்சி, சிவந்த ஞாயிறு தன்னிடத்தே உண்டான கரிய கதிர் ஒளியை, தெளிந்த முகிலிடையே தோன்றும் வெண் ணிலவிடம் விடுவதைப் போன்றிருந்தது. இவ்வாறு துறவறம் ஏற்கக் குறித்த காலத்திலே, நீலமணி போலும் தளிர்களை உதிர்த்துவிட்டு நிற்கின்ற தன்மையை அடைந்த கற்பகமரத்தைப்போல, சீவகன் நன்மாலைப் போதிலே அகில்மணங்கமழும் தன் தலைமுடியைக் களைந் தெறிய, அப்பொழிலில் வாழும் வண்டினங்கள், வணங்கிக் கீழ்வருமாறு கூறலாயின:

**தங்கிடை யிலாத்திருக் கேசந் தன்னையும்**
**கொங்குடைக் கோதையுங் கொய்து நீக்கினாய்**
**நுங்கடை நோக்கிநாம் வாழும் வாழ்க்கையம்**
**எங்கிடை யவரினி யெங்குச் செல்பவே** 3033

[தம் கிடையிலா-தமக்கு ஒப்பில்லாத; கேசம்-தலை மயிர்; கொங்கு-வாசனை; கோதை-மாலை; கடை-வாயில்.]

**என்றன தேனின மிரங்கு வண்டொடு**
**சென்றன விடுக்கிய செல்வன் பொன்மயிர்**
**இன்றொடு தொழுதன நும்மை யாமென**
**மன்றலுண் டவைவலங் கொண்டு சென்றவே** 3034

[தேனினம்-வண்டின் கூட்டம்; விடுக்கிய-விடுத்தற்கு; மன்றல்-மணம்.]

**மேற்படு கற்பக மாலை வேய்ந்துபொன்**
**ஏற்புடைப் படலிகை யெடுத்துக் கொண்டுபோய்**
**நாற்கடல் கடந்தவ னமோவென் றிட்டிடப்**
**பாற்கடற் பனிமதி போல வீழ்ந்ததே** 3035

[ஏற்பு-தகுதி; மதி-திங்கள்.]

'தமக்குவமை இல்லாத அழகிய மயிர் முடியையும், தேன் நிரம்பி வழியும் மாலையையும் களைந்தெறிந்து விட்டாய். நின் அருளால் (தலை முடியில் நீ சூடிய மலர் மாலைகளின் தேனுண்டு) வாழும் வாழ்க்கை நெறியுடைய எங்களைப் போன்றவர்கள் இனி எங்குச் சென்று பிழைப் போம்?' என்று கூறி வருந்தும் வண்டும், தும்பிகளும், சீவகனுடைய அழகிய முடிக்கற்றையைக் களைந்தெறிய இடம் விட்டுச் சென்றன. 'இன்றோடு நின்னோடு கொண்ட உறவை விட்ட நாங்கள் நின்னைத் தொழுது பணிகிறோம்', என்று, அவ்வண்டுகள், தலைமயிரின் புதுமணத்தை உண்டு, அதை வலமாக வந்து வணங்கிச் சென்றன. உயர்ந்த கற்பகமாலையாலே சூழ்ந்து, அம் மயிர் முடியைச் சிறந்ததோர் வெள்ளித் தட்டிலே எடுத்துக் கொண்டு போய், நாற்கடலும் கடந்து சென்று, ''நமோ'' என்று சுதஞ்சணன் போட்டிட, பாற்கடலில் அத்தட்டு குளிர்ந்த வெண்ணிலவைப்போல் வீழ்ந்தது.

## வேறு

**ஏவா விருந்த வடிக ளிவர்வாய்ச்சொற்**
**கோவா மணிகொழித்துக் கொண்டாலே போலுமால்**
**சாவா கிடந்தார் செவிச்சார்த்தி னப்பொழுதே**
**மூவா வமரராய் முத்தணிந்து தோன்றுவரே 3036**

[கோவா-துளையிட்டுக் கோக்கப் பெறாத; மணி-மாணிக்கத்தை; கொழித்து-குற்றம் நீக்கி; செவி சார்த்தின்-மனம் கொண்டு கேட்பாரானால்.]

**தோளா மணிகுவித்தாற் போன்றிலங்கு தொல்குலத்துச்**
**சூளா மணியாய்ச் சுடர விருந்தானை**
**வாளார் முடிவைர விற்றிளைத்து வண்டரற்றும்**
**தாளார வேத்திப்போய்த் தன்கோயில் புக்கானே 3037**

[தோளாமணி-துளையிடப் பெறாத மாணிக்கம்; சூளாமணி-நாயக மணி; சுடர-ஒளிவிட; வாள்-ஒளி.]

புக்கான் சுதஞ்சணனும் பொற்றா மரைமகளிர்
தொக்காலே போலுந்தன் தேவிக் குழாஞ்சூழ
மிக்கான் குணம்பாடி யாடி மிகுதீம்பால்
தொக்க கடல்போற் சுதங்க ணிறைந்தனவே 3038

[தொக்காலே போலும்-ஒருங்கு கூடியிருந்தாற் போன்ற; சுதங்கள்-நூலுணர்ச்சி.]

இறைவன் புகழ்பாடித் துறவில் ஒன்றியிருந்த சீவகன் திருவாய் மலர்ந்தருளிய, துளையிட்டுக் கோக்கப் பெறாத-மாசுமருவற்ற மாணிக்க மணிபோன்ற, நல் லுரைகளைச் சாகக் கிடக்கின்றவர் காதாலே கேட்கப் பெற்றால், அப்போதே அவர்கள் சாகாமல் பிழைத் தெழுந்து அழிவில்லாத தேவராய், முத்தணிந்து விளங்குவர். துளையிடப்படாத மாணிக்க மணிகளைக் குவித்ததைப்போல விளங்கும் பழம்பெருங் குடியிலே, ஒரு புகழ்மணிச் செல்வமாகச் சிறக்க இருந்த சீவகனை, ஒளி வீசும் தன் முடியில் அணிந்த வைரக்கற்களின் ஒளி பொருந்த, மலர் என்று கருதி வண்டுகள் மொய்க்கும் பூப் போன்ற திருவடிகளில் பணிந்து வணங்கிச் சுதஞ்சணன் தன் அரண்மனையை அடைந்தான். கழித்த மயிர் உடைய வெள்ளித் தட்டினைக் கடலிலே விட்டுவிட்டு, சீவகன் புகழ் பாடிப் பணிந்து வணங்கித் தன் அரண்மனையை அடைந்த சுதஞ்சணனும், பொற்றாமரை மலர்மேல் வாழும் திருமகள் கூட்டம் போன்ற தன் தேவிமார் புடைசூழ, தவத்தால் உயர்ந்த சீவகன் பெருமையைப் பாடியும் ஆடியும் கொண்டாடித் தன் இருப்பிடம் அடைந்தான். இங்கே சீவகன் சுதஞானம் அடையப் பெற்றான்.

பற்றார்வஞ் செற்ற முதலாகப் பாம்புரிபோல்
முற்றத் துறந்து முனிகளா யெல்லாரும்
உற்றுயிர்க்குத் தீம்பால் சுரந்தோம்பி யுள்ளத்து
மற்றிருள் சேரா மணிவிளக்கு வைத்தாரே 3039

[தீம்பால்-கருணை; ஓம்பி-பாதுகாத்து.]

கோமா னடிசாரக் குஞ்சரங்கள் செல்வனபோற்
பூமாண் டிருக்கோயிற் புங்கவன்றாள் சேர்ந்தேத்தித்
தாமார்ந்த சீலக் கடலாடிச் சங்கினத்துள்
தூமாண் வலம்புரியின் றோற்றம்போற் புக்காரே 3040

[குஞ்சரம் - யானை; பூமாண் - பூமியிலுயர்ந்த; தூமாண்-தூய சிறந்த.]

ஒன்றில்மேல் வைத்த பாசத்தையும், இன்னொன்றின் மேல் வைத்த ஆசையையும், சினத்தையும், பகையையும், பாம்பு சட்டை உரிப்பதுபோல முற்றும் விட்டொழித்துத் தவம் மேற்கொண்ட முனிவர்களான நந்தட்டனும் மற்ற தோழர்களும், உயிர்க்குலத்துக்கு இன்னருள் புரிந்து பாதுகாத்து, நெஞ்சிலே அறியாமை இருள் அண்டாத வாறு நல்லறிவாகிய ஒளிவிளக்கை ஏற்றி வைத்தனர்.

பரதேசுவரச் சக்ரவர்த்தியின் திருவடி சேர, யானைக் கூட்டம் அணிவகுத்துச் செல்வதைப்போலச் சென்று, இப்பூவுலகில் நிறைந்த புகழுடைய திருக்கோவிலில் எழுந் தருளியிருக்கின்ற, சீவர்த்தமானரின் திருவடிகளைப் பணிந்து வணங்கி, ஒழுக்கமென்னும் கடலுள் மூழ்கித் திளைத்துச் சங்குகளில் உயர்ந்ததாகிய வலம்புரிச் சங்கு போன்ற, சீவகசாமியும், தவமுனிவர் கூட்டத்தில் தானும் ஒருவராய்க் கலந்தார்.

## 31. சேணிகன் வரவு

### வேறு

மட்டலர் வனமலர்ப் பிண்டி வாமனார்
விட்டலர் தாமரைப் பாதம் வீங்கிருள்
அட்டலர் பருதியி னளிக்கச் செல்லுநாட்
பட்டதோர் பொருளினிப் பழிச்சு கின்றதே 3041

[பழிச்சுதல்-புகழ்ந்து கூறுதல்; மட்டு-தேன்; அட்டு-அழித்து.]

## வேறு

**கயலினம் உகளிப் பாய முல்லையம் பொதும்பிற் காமர்**
**புயலின மொக்குள் வன்கட் குறுமுயல் புலம்பிக் குன்றத்**
**தயல்வளர் கின்ற வாமான் குழவியோ டிரிந்து செந்நெல்**
**வயல்வளர் கரும்பிற் பாயு மகதநா டென்ப துண்டே 3042**

*[புலம்பி - அஞ்சி வருந்தி; ஆமான் - காட்டுப்பசு; உகளுதல்-தாவிப் பாய்தல்.]*

**இரும்பிடி தழீஇய யானை யிழிமதங் கலந்து சேறாய்ச்**
**சுரும்பொடு மணிவண் டார்க்குந் துகிற்கொடி மாட வீதிப்**
**பெருங்கடி நகரம் பேசி னிராசமா கிருக மென்பர்**
**அருங்கடி யமரர் கோமா னணிநக ராய தொன்றே 3043**

*[இரும்பிடி-கரிய பெண் யானை; அமரர் கோமான்-இந்திரன்; நகர்-அமராவதி.]*

தேன் வழியும் அழகிய மலருடைய அசோகமர நிழலின்கீழ் எழுந்தருளியிருக்கின்ற, அருகப் பெருமானின் இதழ் விரித்து மலரும் தாமரை மலர் போன்ற திருவடிகள், மிக்க பேரிருளை அழித்துக் கிளம்பிய உதய ஞாயிற்றைப்போல இருவினைத் துன்பம் அழித்து, அருள்சுரக்கும்படி சீவகனும் தவமுனிவர்களும் வழிபட்டு வருகின்ற நாளிலே நிகழ்ந்த ஒன்றினைக் கூறுவோம்.

மீன்கூட்டம் எழுந்து பாய, முல்லைப் புதரிலே உள்ள, இன்பூட்டும் நீர்க்குமிழி போன்ற பெரிய கண்களை உடைய சிறு முயல்கள் பயந்து, குன்றின் சாரலிலே வளர்கின்ற காட்டுப் பசுவின் கன்றுகளுடன் ஓடி, நஞ்சை வயலில் வளரும், செந்நெல்லிலும் கரும்பிலும் பாய்கின்ற, வளம் உடைய மகதநாடு என்று ஒரு நாடு இருக்கிறது.

கரிய தன் பெண் துணையைத் தழுவிய யானையின் பெருமதம் கலந்து சேறாக, அச்சேற்றை வண்டும் தும்பியும் சூழ்ந்து மொய்க்கின்ற ஒலி உடைய, கொடிகளும் மாடமும் நிறைந்த தெருக்களை உடைய, அழகிய

பெரிய நகரின் பெயர் இராசமா கிருகம் எனப்படும். இது மிக்க காவலை உடைய இந்திரனுடைய அழகிய அமராவதிப் பட்டினத்தைப் போன்றதாகும்!

**எரிமிடைந் தனைய மாலை யினமணி திருவில் வீசும்**
**திருமுடி யார மார்பிற் சேணிக னென்ப நாமம்**
**அருமுடி மன்னர் சூழ வலரணி பிண்டி வேந்தன்**
**திருவடி விருந்து செய்வான் திரண்முர சறைவித்**
**தானே 3044**

*[விருந்து-பூசனை; அலர்-மலர்; அணி-அணிந்த.]*

### வேறு

**பொன்னா வழியாற் புகழ்நாவழித் தாய்ந்த மெல்கோல்**
**மின்னார் மணிப்பூ ணவன்மேவிவிண் காறு நாறும்**
**முன்னோர் வகுத்த முகவாசம் பொதிந்த வெந்நீர்**
**மன்னார வாய்க் கொண் டுமிழ்ந்தான்மணி மாலை**
**வேலோன் 3045**

*[நாவழி-நா வழிக்கும் கருவி; மன்னார-சிறக்க.]*

**தீம்பா னுரைபோற் றிகழ்வெண்பட் டுடுத்து வண்டார்**
**தேம்பாய சாந்த மெழுகிக்கலன் தேறல் மாலை**
**தாம்பால தாங்கிப் புகழ்தாமரைக் குன்ற மன்ன**
**ஆம்பான் மயிர்வேய்ந் தயிராவண மேறி னானே 3046**

*[தேறல்-மது; ஐராவணம்-ஐராவதமெனும் யானை.]*

நெருப்பைப் போன்ற மாலையும், பலவகை மணிகள் ஒளி வீசித் திகழும் மணிமுடியும், மணி ஆரம் அணிந்த மார்பும் உடைய அந்நகரின் அரசனின் பெயர் சேணிகன் என்பதாகும். அவன் மணிமுடி புனைந்த மன்னர் பலர் சூழ, அழகு மலரணிந்த அசோகமர நிழலின்கீழ் எழுந் தருளியிருக்கின்ற அருகப் பெருமான் திருவடிபணிந்து, வழிபாடு செய்து, விழாவெடுக்க முரசறைவித்தான். தேர்ந்தெடுத்த மெல்லிய கோலால் பல் துலக்கி, பொன்னால் செய்த நாக்கு வழிப்பினாலே தன்னுடைய

  

புகழ்மிக்க நாக்கை வழித்துக் கழுவி, ஒளிவீசும் மணிகள் பதித்த வீரக்கழல் அணிந்த சேணிகன், வானம்வரை சென்று மணம் வீசுகின்ற முகவாசம் கலந்த நன்னீரால் வாய் கொப்பளித்தான். முத்தாரம் அணிந்த வேலுடைய, சேணிகன் இவ்வாறு காலைக் கடன்களை முடித்த பிறகு, சுவைமிக்க பாலின் நுரை போன்ற தூய வெண்பட்டுடை உடுத்து, வாசமிக்க சந்தனமும், இனிய மணம் வீசும் தேன் வழியும் மலர்மாலையும், பலவகை அணிமணிகளும் புனைந்து, சிறந்த வெண்தாமரை மலர்கள் மலர்ந்த குன்று போன்ற, பால்போலும் வெள்ளை மயிர்முடி சூழ்ந்து நின்ற, ஐராவணம் என்னும் பட்டத்து யானை மேல் ஏறி அமர்ந்தான்.

## வேறு

எறிசுரும் பரற்று மாலை யெரிமணிச் செப்பு வெள்ளம்
பொறிவரி வண்டு பாடும் பூஞ்சுண்ண நிறைந்த பொற்செப்
பறிவரி துணர்வு நாணித் தலைபனித் தஞ்சுஞ் சாந்தம்
செறியிரும் பவழச் செப்புத் தெண்கடற் றிரையி
னேரே 3047

[பொறி-புள்ளி; வரி-கோடு-]

வந்துதேன் மயங்கி மூசு மலயச்செஞ் சாந்த மார்ந்த
சந்தனச் செப்புங் கங்கை தருமண லலகை யாற்றாச்
சுந்தரம் பெய்த யானைத் தூமருப் பியன்ற வெண்செப்
பந்தரத் தலர்ந்த பன்மீ னெனைத்துள வனைத்து
மாதோ 3048

[அலகை-அளவு; அந்தரம்-ஆகாயம்; எனைத்துள-எவ்வளவெண்ணுள.]

மைபொதி குவளை வாட்கண் மல்லிகைக் கோதை நல்லார்
நெய்பொதி நெஞ்சின் மன்னர் நிலம்பிறக் கிடுவ போலும்
கொய்சுவற் புரவி மான்றேர் குழுமணி யோடை யானை
மெய்பொதிந் துயர்த்த கோமான் விரைப்பலி சுமந்த
வன்றே 3049

[மை-கருமை; பிறக்கிடும்-பின்னோக்கி ஓடும்; கொய்-கொய்த; சுவல்-பிடரி மயிர்.]

தும்பிகள் சூழ்ந்து மொய்க்கும், வாசமலர் மாலைகள் நிறைந்த அழகிய மணிச் செப்புகளும், புள்ளிகளையும் வரிக்கோடுகளையும் உடைய வண்டுகள் மொய்த்துப் பாடும் நறுமணமிக்க சுண்ணப்பொடிகள் நிறைத்து வைத்த பொன்செப்புகளும், புலனுணர்வால் உணர்ந்து அறிய முடியாதிருப்பினும், தனது இனிய மணத்தால், உணர்வை மயக்கிக் கிறங்க வைக்கும் கலவைச் சந்தனம் பொதித்து வைத்த, தெளிந்த நீர்க்கடலலைகளோடு கரையில் வந்து தங்கிய பெரிய பவழத்தாலான செப்புகளும், வண்டுகள் வந்து மொய்த்து மயங்கிக் கிடக்கும், தெற்குப் பொதிகைமலைச் சந்தனம் நிறைந்த சந்தனச் செப்புகளும், கங்கை ஆற்றின் வெண்மணல் பரப்பைப் போல அளவிட முடியாத, சிந்தூரப் பொடிகள் நிறைத்து வைத்திருக்கும், யானைத் தந்தத்தாலான வெண்ணிறச் செப்புகளும், விண்ணிலே தோன்றிய விண்மீன்கள் எவ்வளவோ, அவ்வளவு என்னும்படிக்கு எங்கும் நிறைந் திருந்தன. மைதீட்டிய, குவளை மலர்போலும் ஒளி வீசுகின்ற கண்களையும், மல்லிகை மலர் மாலைகளையும் உடைய மங்கையரும், அன்பு நிறைந்த நெஞ்சுடைய மன்னர்களும் அமர்ந்து வரும், நிலம் பின்னோக்கி விரைந்து ஓடுவதுபோலத் தோன்ற, தான் முன்னோக்கி விரைந்து செல்லும், ஒழுங்கு செய்யப்பட்ட பிடரி மயிருடைய குதிரைகள் பூட்டிய தேரும், மணிகளிழைத்த, மத ஓடை பாயும், யானைகளும், மெய்யறிவு மிக்க மேலான அருகப் பெருமானின் பூசைக்குரிய வாசப்பொருள்களைச் சுமந்து வந்தன.

**கொடிக்குழாங் குஞ்சி பிச்சக் குழாநிறை கோல மாலை**
**முடிக்குழா மூரி வானம் பால்சொரி கின்ற தொக்கும்**

குடைக்குழா மிவற்றின் பாங்கர்க் குளித்தது குளிர்சங்
கார்க்கும்
படைக்குழாம் பாரிற் செல்லும் பாற்கடல் பழித்த
வன்றே 3050

[பிச்சக்குழாம்-பீலிக்குடையின் தொகுதி; குடை-
வெண் குடை; குளித்தல்-மறைதல்.]

கனைகடல் கவரச் செல்லுங் கணமழைத் தொழுதி போலும்
நனைமலர்ப் பிண்டி நாத னல்லறங் கொள்ளை சாற்றிப்
புனைமுடி மன்ன ரீண்டிப் பொன்னெயிற் புறத்து விட்டார்
வினையுடைத் தின்ப வெள்ளம் விரும்பிய வேட்கை
யானே 3051

[கனைகடல்-ஒலிக்கின்ற கடல்; மழைத் தொகுதி-
மேகக்கூட்டம்; சாற்றி-பறையறைவித்து.]

## வேறு

வண்டுசூழ் பூப்பலி சுமந்து தான்வலம்
கொண்டுசூழ்ந் தெழுமுறை யிறைஞ்சிக் கோனடி
எண்டிசை யவர்களு மருள வேத்தினான்
வெண்டிரைப் புணரிசூழ் வேலி வேந்தனே 3052

[இறைஞ்சி-வணங்கி; ஏத்துதல்-புகழ்தல்.]

கொடிகளும், குஞ்சக் குடைகளும், பீலிக்குடைகளும், அழகிய மாலைகள் நிறைந்த முடிகளும், பெரிய வானம் பாலைப் பொழிவதுபோல நிறைந்து தோன்றும் வெண் கொற்றக் குடைகளும் ஆகியவற்றின் அருகிலே, அவற் றோடு அமிழ்ந்து வரும் சங்கொலிக்கும் படைகளின் கூட்டமும் ஒன்று கலந்து பாற்கடல் தரையிலே ஊர்ந்து செல்வதுபோல் இருந்தது, தரையில் நடக்கும் பாற் கடலைப் பழித்தது. அலை ஒலிக்கும் கடல்நீரை அள்ளிக் கொண்டு போக வரும் மேகக் கூட்டம் போல, தேன் வழியும் மலர் பொருந்திய அசோகமர நீழலின் கீழ் எழுந் தருளியிருக்கின்ற அருகப் பெருமானின் அறவுபதேசங்

களை, எல்லாரும் அறியப் பறைசாற்றி, இருவினைத் துன்பத்தையும் ஒழித்துவிட்டு, பேரின்ப வீட்டின்பம் அடைய விரும்பும் ஆசையால், விரைந்துவரும் மணிமுடி அணிந்த அம்மன்னர்கள் அனைவரும், பொன்மதிலின் வெளிப்புறத்தே வந்து தங்கினர். வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும் பூசைக்குரிய வாசமலர்களைச் சுமந்து, வலம் வந்து இறைவன் திருவடியை ஏழுமுறை வணங்கிப் பணிந்து, எட்டுத் திசையிலும் உள்ளவர்கள் கேட்டு மயங்க, வெள்ளலை வீசும் கடல்வேலியாகச் சூழ்ந்த, சக்கரவாளகிரிக்குச் சக்ரவர்த்தியாகிய சேணிகன் அருகன் அடிபணிந்து வாழ்த்தினான்.

**வேறு**

**பகல்வளர் பவழச் செந்தீப் பருதிமுற் பட்ட தேபோல்**
**இகல்வினை யெறிந்த கோமா னிணையடி யொளியிற் றோன்றா**
**தகல்விசும் புறையுந் தேவ ரொளியவிந் திருப்ப மன்னன்**
**முகில்கிழி மதியம் போலு முனிக்குழா நோக்கி னானே 3053**

[பட்டதேபோல் - கெட்டதேபோல; இகல்வினை- தீவினை ]

**கண்வெறி போக வாங்கோர் கடுந்தவ னுருவ நோக்கி**
**ஒண்ணெறி யொருவிக் கோமா னொளிதிரண் டிருந்த தாங்கொல்**
**விண்ணெறி வழுவி வீழ்ந்த விண்ணவ னொருவன் கொல்லென்**
**றெண்ணெறி யாது மோரா திருந்திது கூறி னானே 3054**

[ஓராது-தெளியாது; யாதும்-சிறிதும், நெறி-வழி; ஒருவி-விலகி.]

**வேறு**

**விளங்கொளி விசும்பறுத் திழிந்து விண்ணவன்**
**இளங்கதி ரெனத்துறந் திருப்பக் கண்டனம்**

**வளங்கெழு முக்குடை யடிகள் வாய்மொழி**
**துளங்கின னெனத்தொழு திறைஞ்சி னானரோ 3055**

[இழிந்து-இறங்கி; விசும்பு-ஆகாயம்.]

பகலிலே தோன்றும், பவழம் போன்ற, செக்க சிவந்த தீ, இளஞாயிற்றின்முன் ஒளிமழுங்கிக் கிடப்பதைப்போல, தீவினையை வென்றொழித்த இறைவன் திருவடி ஒளியின் முன், விரிந்த வானுலகத் தேவர்கள் ஒளிகுன்றிக் கிடக்க, சேணிகன் முகிலைவிட்டு வெளிப்படும் முழுமதி போன்றிருந்த தவமுனிவர் கூட்டத்தைக் கண்டான். கண்டவன் அங்கொருபால் கடுமையான தவத்தை மேற்கொண்டிருந்த முனிவன் (சீவகன்) திருவுருவை ஆசைதீரப் பார்த்து, 'உயர்ந்த நெறியைவிட்டு விலகி, இறைவன் ஒளி கூடி இருந்த தோற்றமோ இது? இல்லை வானிலிருந்து தப்பி வீழ்ந்த தேவன் ஒருவனோ இத்தவ முனிவன்?' என்று எண்ணிப் பார்த்து, எதையும் கூறமுடியாமல் பின் வருமாறு கூறினான்.

'ஒளிவிளங்கும் வானைவிட்டு இறங்கிய வானவன் ஒருவன் உதயசூரியனைப் போலத் துறவு பூண்டிருப்பதைப் பார்த்தோம்! வளமிக்க முக்குடைகளின்கீழ் எழுந்தருளியிருக்கின்ற அருகப்பெருமான் அருளிய ஆகமநெறியை அவன் தவிர்ந்தானோ' என்று கூறிச் சுதன்மர் என்னும் கணதரரை வணங்கிப் பணிந்தான்.

**மன்னவ கேண்மதி வானில் வாழ்பவர்**
**பொன்னியல் கற்பகப் போக பூமியார்**
**என்னதுந் துறவல ரிறைவன் வாய்மொழி**
**சொன்னவா றல்லதெப் பொருளுந் தோன்றுமே 3056**

[கேண்மதி-கேட்பாயாக; என்னதும்-ஒரு சிறிதும்.]

**அடிகளுக் கிடமருங் கிருந்த வாய்மலர்க்**
**கடிகமழ் தாமரைக் கண்ணி னானிவன்**
**வடிவமே வாய்திறந் துரைக்கும் வானவன்**
**ஒடிவறு பேரொளி யுட்கத் தக்கதே 3057**

[ஒடிவறு-கெடாத; உட்கத்தக்க-அஞ்சத்தக்க.]

**திருவினோ டகன்ற மார்பிற் சீவக சாமி யென்பான்**
**உருவினோ டொளியு நோக்கி னொப்புமை யுலகி னில்லை**
**மருவினா ரிமைத்து நோக்கின் மனம்பிறி தாகி நிற்பார்**
**அரிதிவன் முகத்து நோக்க லழகொளி யன்ன**
**வென்றான் 3058**

[உரு-அழகு; ஒளி-புகழ்; மருவினார்-எய்தியவர்.]

சேணிகன் இவ்வுரை கூறவும் அவனுக்கு மறுமொழி யாகக் கணதரர் கூறுவார்: 'அரசே கேட்பாயாக. விண்ணிலே வாழும் தேவர்களாயினும் சரி, இல்லை பொன்னாலான கற்பகம் பொலியும் இப்பூமியில் உள்ளவர் களாயினும் சரி (அருகன் அருளின்றேல்) கொஞ்சமும் துறக்க மாட்டார்கள். இறைவன் கூறியருளிய ஆகம நூற்படியே அல்லாமல் வேறு நெறிப்படியும் எப் பொருளும் தோன்றாது' என்றார் சுதன்மர். சேணிகன், 'அடிகளே! தங்களுக்கு இடப் பக்கத்திலே இருந்த, அழகிய, உயர்ந்த, மணமிக்க தாமரை மலர் போலும் கண்கள் உடைய இவனுடைய, அஞ்சத்தக்க மிக்க பேரொளி உடைய வடிவமே, வாய் திறந்து இவனை வானவன் என்று கூறும்', என்றான். அதுகேட்ட சுதன்மர் சேணிகனிடம், 'திருமகள் பொருந்தி வாழும் விரிந்த மார்புடைய இவன் சீவகசாமி எனப்படுவான். இவனு டைய அழகையும், புகழையும் வைத்துப் பார்த்தால், இவனோடு ஒப்பிடத்தக்கவர்கள் உலகத்திலேயே இல்லை! இவனோடு நெருங்கினவர்களும் இவனை இப்போது உற்றுப் பார்த்தால் இவன் சீவகனல்லன்; வேறு எவனோ என்று நினைப்பர்! எனவே நீ இவனிடத்துக் கண்ட அழகும், ஒளியும் இவனுக்குத் தெய்வத் தன்மையால் வந்தடைந்தது' என்றார்.

# 32. சேணிகன் வினா

## வேறு

மாதவன் சரிதமுந் துறந்த வண்ணமும்
ஏதமின் றியம்புமி னடிக ளோவெனப்
போதலர் புனைமுடி யிறைஞ்சி யேத்தினான்
காதலிற் கணந்தொழக் காவன் மன்னனே 3059

*[ஏதம்-குற்றம்; கணம்-கூட்டம்.]*

பாட்டருங் கேவலப் பரவை மாக்கடற்
கூட்டருங் கொழுந்திரை முகந்து மாமுனி
மோட்டிரு மணிமுகின் முழங்கிப் பெய்தலின்
ஊட்டரும் அறவமிர் துலக முண்டதே 3060

*[பாட்டரும் - புகழ்தற்கரிய; அறஅமிர்து-அறமாகிய அமுதம்.]*

சீவகன் திருவின மாக யாமென
நாவகந் தழும்பநின் றேத்தி நன்றரோ
காவல னாதியாக் கணங்கள் கைதொழப்
பாவமில் சுதன்மராற் பாடப் பட்டதே 3061

*[திருவினமாக-திருவினை உடையேமாக; நாவகம்-நாவிடத்து.]*

'இத்தகைய சிறப்புமிக்க தவத்தைச் செய்த சீவக சாமியின் பிறப்பு வரலாற்றையும், பற்றைத் துறந்து துறவில் ஈடுபட்ட பாங்கினையும், குறைவின்றிக் கூறியருள வேண்டும் அடிகளே' என்று, உலகங்காக்கும் காவலுடைய மாமன்னன் சேணிகன், தவமுனிவர்கள் அதனைக் கேட்க வேண்டும் என்னும் ஆசையால், தாழ்ந்து தலைவணங்கிக் கேட்டுக்கொண்டான். புகழ்மிக்க, பெருமை உடைய கேவல ஞானம் என்னும் விரிந்த பெரிய கடலில் மொய்த்துக் கிடக்கும் அலைநீரை, பெருந்தவ முனியாகிய, சுதன்மர்

என்னும் கார்முகில் முகந்து வந்து மழை பொழிவதைப் போல, சொல்லுதற் கரியதாகிய அறம் என்னும் அவ்வமுதைப் பொழிய, உலகம் அதை உண்டு மகிழ்ந்தது.

சீவகன் பெற்ற இப்பேரின்பப் பேற்றினை நாங்களும் பெற வேண்டும் என்று, நாத் தழும்புண்டாகும்படி நன்றாகப் போற்றித் துதி செய்து, சேணிகன் முதலான மற்ற முனிவர்கள் கூட்டம் கை கூப்பித் தொழுது நிற்க, குறையில்லாத, நிறைதவமுடைய சுதன்மரால் சீவக சரிதை சொல்லப்பட்டது.

## 33. கேவலோற்பத்தி

### வேறு

**முல்லைசூழ் முல்லை வேலி முயலொடு கவரி மேயும்**
**கொல்லைசூழ் குன்றத் துச்சிக் குருசினோற் றுயர்ந்த வாறும்**
**வில்லுமிழ்ந் திலங்கு மேனி விழுத்தவ நங்கை மார்கள்**
**மல்லலங் குமரர் வான்மேற் சென்றதும் வகுக்க லுற்றேன்** 3062

[கவரி-கவரிமான்; வகுக்கல் - கூறுபடுத்திச் சொல்லுதல்.]

### வேறு

**முழுது முந்திரி கைப்பழச் சோலைத்தேன்**
**ஒழுகி நின்றசும் பும்முயர் சந்தனத்**
**தொழுதிக் குன்றந் துளும்பச்சென் றெய்தினான்**
**பழுதில் வாய்மொழிப் பண்ணவ னென்பவே** 3063

[துளம்ப-வருந்த; அசும்பு-ஊற்று; தொழுதி-கூட்டம்.]

**நணிதி னெண்வினை யின்னவை கண்ணிறீஇத்**
**துணிய வீர்ந்திடுந் துப்பமை சிந்தையான்**
**மணியின் மேன்மணி கட்டிய தொத்ததற்**
**கணியு மாயலர் ஞாயிறு மாயினான்** 3064

[நணிதின் - அண்ணிதாக; துப்பு - வன்மை. அலர் ஞாயிறு-இளஞ்சூரியன்.]

'முல்லைக் கொடி படர்ந்த, முல்லை நிலம் வேலியாகச் சூழ்ந்த, முயலும் கவரிமானும் மேய்கின்ற கொல்லைகள் நிறைந்த குன்றின் உச்சியிலே நின்று, சீவகன் தவமிருந்து உயர்ந்த பாங்கினையும் ஒளிவீசித் திகழும் மேனி வனப்புடைய, உயர்ந்த தவத்தைச் செய்த அவன் மனைவியரும், மற்போர் வல்ல நந்தட்டன் முதலானோரும் வீட்டின்பப் பேறு பெற்றதையும் கூறுகிறேன் கேட்பீராக.

'முந்திரிப்பழச் சோலையில், தேன் நிறைந்து வழிய, வழுக்குகின்ற உயர்ந்த சந்தன மரங்கள் நிறைந்த குன்றத்தை, குற்றமற்ற, பண்போல் இனிக்கின்ற இன்மொழி பேசும் சீவகன் அடைந்தான். குன்றை அடைந்த சீவகன், நெருங்க வரும் காதி அகாதி கர்மங்கள் என்னும் எட்டு வகைக் குற்றங்களையும் முன்னிறுத்தி, அவை அடியோடு விட்டொழிந்து போகும்படிச் செய்திடும் மனவலிமையோடு, அக்குன்றின் மீதேறி நின்ற காட்சி, நீலமணியின்மேல் ஒரு மணியை வைத்து அழுத்தியது போல் தோன்றிட, அவன் மலைக்கு ஓர் அணிகலம் ஆயினான்; இளஞாயிறு போல் தோன்றினான்.'

**குன்றின் வீழரு விக்குரல் கோடணைச்**
**சென்றெ லாத்திசை யுஞ்சிலம் பின்மிசை**
**நின்ற னன்னிறை வம்மினம் நீரென**
**ஒன்றி நின்றதி ரும்மொரு பாலெலாம் 3065**

[சிலம்பு-குன்று; மிசை-மேல்.]

**செம்பொன் பின்னிய போல்தினைக் காவலர்**
**வெம்பு மும்மத வேழம் விலக்குவார்**
**தம்பு னத்தெறி மாமணி சந்துபாய்ந்**
**தும்பர் மீனெனத் தோன்றுமொர் பாலெலாம் 3066**

[பாய்ந்து-தள்ளிப்போய்; உம்பர்-வானம்.]

**யானை குங்கும மாடி அருவரைத்**
**தேனெய் வார்சுனை யுண்டு திளைத்துடன்**
**கான மாப்பிடி கன்றொடு நாடகம்**
**ஊன மின்றிநின் றாடுமொர் பாலெலாம் 3067**

[திளைத்து-களித்து; ஊனம்-குறைபாடு.]

'அவன் ஏறி நின்ற குன்றின் மேலிருந்து விழுகின்ற நீரருவியின் ஒலிக் குரல், மலைச் சிகரங்களில் எல்லாம் மோதி, எல்லாத் திசைகளிலும் பரவி, 'இக்குன்றின் மேலே இறைவனாகிய சீவகன் வந்து நிற்கின்றான். அவன் தாள் பணிந்து அவனருள் பெற எல்லாரும் வாருங்கள்', என்று திசையெல்லாம் நின்றதிர ஒலிக்கும். செம்பொன்னினால் பின்னிய, கம்பி போன்றிருக்கும் தினைப்புனத்தைக் காவல் செய்பவர்கள், தம் தினைப் புனத்துக்குள்ளே வரும் சினமிக்க, மும்மதமுடைய யானைகளை விரட்டி ஓட்ட வீசி எறிந்த மாணிக்க மணிகள், சந்தன மரங்களைத் தாண்டிப் போய், விண் மீன்களைப்போல ஒரு பக்கம் ஒளிவீசிக் கிடக்கும். யானை குங்குமக் கொடிகளிலே புரண்டு, மலைக் குன்றின் தேனோடு கலந்து வரும் சுனைநீரைக் குடித்துக் களித்து, களிப்பு மீதூறப் பெரிய காட்டுயானைப் பிடியோடும் கன்றோடும் நின்று விளையாடி களித்திருக்கும் காட்சி ஓர் பக்கம் நிறைந்திருக்கும்.'

**வரிய நாக மணிச்சுடர் மல்கிய**
**பொருவில் பொன்மழைப் போர்ப்புலிப் போதகம்**
**அரிய கின்னரர் பாட வமர்ந்துதம்**
**உருவந் தோன்ற வுறங்குமொர் பாலெலாம் 3068**

[வரிய நாகம்-வரிகளையுடைய பாம்பு; போதகம்-யானை.]

**பழுத்த தீம்பல வின்கனி வாழையின்**
**விழுக்கு லைக்கனி மாங்கனி வீழ்ந்தவை**

தொழித்து மந்தி துணங்கை யயர்ந்துதேன்
அழிக்கு மஞ்சுனை யாடுமொர் பாலெலாம் 3069

[தொழித்து-ஆரவாரித்து; மந்தி-பெண் குரங்கு-]

வேறு

நளிசிலம் பதனி னுச்சி நாட்டிய பொன்செய் கந்தின்
ஒளியொடு சுடர வெம்பி யுருத்தெழு கனலி வட்டம்
தெளிகடல் சுடுவ தொத்துத் தீயுமிழ் திங்க ணான்கும்
விளிவருங் குரைய ஞான வேழமேற் கொண்டு நின்றான்

[கந்தின்-தூணைப்போல; கனலிவட்டம் - சூரியனது வட்டம்; நளி-செறிவு; விளிவு-கேடு.]

'வரிகளுடைய நாகத்தின் மணி ஒளி நிறைந்த ஒப்பற்ற அழகிய குகையிலே, போர்வல்ல புலியும் யானையும் சிறந்த கின்னரர்கள் அமர்ந்து பாடும் பாடலைக் கேட்டு, நாகத்தின் மணி ஒளியிலே தம் உருவம் தோன்ற ஒரு பக்கத்திலே படுத்துறங்கும். பழுத்துக் கனிந்த இனிய பலாவின் சுளையும், சிறந்த குலைவாழைப் பழமும், மாங் கனியும் ஆக வீழ்ந்து கிடப்பவற்றைத் தின்று மந்திகள் ஆரவாரித்துக் கூத்தாடி, தேன் வெள்ளமாகப் பாய்ந்து நிற்கும் சுனையிலே, ஒருபக்கம் விளையாடி மகிழ்ந் திருக்கும்.

'இவ்வாறு வளமும், மகிழ்வும் நிறைந்து செறிந் திருக்கும் மலையின் உச்சியிலே, ஞானமென்னும் மத யானைமீது ஏறி, நட்ட பொன்னாலான தூண்போல், சிறிதும் அசையாமல் ஒளிவிளங்கச் சினந்து, சீறிக் கிளம்பும் சூரிய வட்டம், தெளிந்த நீருடைய கடலைப் பொசுக்கி வறளப் பண்ணுவதைப்போல, சுட்டெரிக்கின்ற, சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி ஆகிய நான்கு மாதங்களும் சீவகன் நின்று தவம் புரிந்தான்.'

பார்க்கடல் பருகி மேகம் பாப்பினம் பதைப்ப மின்னி
வார்ப்பிணி முரசி னார்த்து மண்பக விடித்து வானம்

நீர்த்திரள் பளிக்குத் தூணி சொரிந்திட நின்று வென்றான்
மூர்த்தியாய் முனிவ ரேத்து முனிக்களி றனைய கோமான்

[பார்க்கடல்-பாறையையுடைய கடலை; பாப்பினம்-பாம்புக் கூட்டங்கள்; மண்பக-நிலம் பிளக்க.]

திங்கணான் கவையு நீங்கத் திசைச்செல்வார் மடிந்து தேங்கொள்
பங்கயப் பகைவந் தென்னப் பனிவரை யுருவி வீசும்
மங்குல்சூழ் வாடைக் கொல்கான் வெள்ளிடை வதிந்து மாதோ
இங்குநான் காய திங்க ளின்னுயி ரோம்பி னானே 3072

[திங்கள் - மாதம்; தேம்கொள் - தேசங்களிலே கொண்ட, ஒல்கான்-தளராதவனாய்; வெள் ளிடை-வெளியில்; இங்குதல்-தங்குதல்.]

வடிமலர் நெடுங்க ணாரு மைந்தரும் வரவு பார்த்தங்
கடிமலர் பரவ வேறி யாரமிர் தரிதிற் கொள்வான்
கடிமலர்க் கமலத் தன்ன கையினை மறித்துக் கொள்ளான்
முடிதவக் கடலை நீந்தி யின்னண முற்றி னானே 3073

[மறித்தல்-விலக்குதல்; முற்றினான்-முடித்தான்.]

'பாறையுடைய கடல்நீரை முகந்து செல்லும் மழை மேகம், பாம்புகள் கண்டஞ்ச மின்னி, வாரால் இறுக்கக் கட்டிய முரசைப்போல நிலம் பிளக்க இடியிடித்து முழங்கி, பொழியும் பளிங்குக்கோல் போல மழைநீரைப் பெய்யும் கார்காலம், கூதிர்க்காலம் ஆகிய நான்கு மாதங் களும், தவவேடம் தாங்கி, தவமுனிவர்கள் போற்றும் தவ முனிவர்களுக்குத் தலையான சீவகன் தவம் புரிந் தான். இவ்வாறு நான்கு மாத காலமாகிய கார் காலமும், கூதிர்ப்பருவமும் கழிந்த பின்னர், திசை நான்கும் செல்லும் தொழிலுடையார், அவ்வாறு செல் லாமல் சோம்பியிருக்கச் செய்யும் தாமரைக்குப் பகை யான தண் பனிக்காலம் வரவே, பனிமலை ஊர்ந்து வரும்

பனி வாடையைத் தாங்கிக் கொள்ள முடியாதவனாய், சீவகன் வெளியே நான்கு மாதங்கள் தங்கியிருந்து உயிரைப் பாதுகாத்தான். இவ்வாறு இங்கிவன் தவ மிருக்க, மலர்போலும் வடிவுடைய, நீண்ட கண்களுடைய அவன் மனைவியரும், நந்தட்டன் முதலானோரும் உணவு படைக்க, அம்மலை மேல் ஏறி அடிபணிந்து வாழ்த்த, சிறந்த உணவைச் சிறிதே கொள்கிறவன், அழகிய தாமரை மலர் போலும் கையால் வேண்டாம் என்று அவர் கொண்டு வந்த உண்டியைத் தடுத்து, அதிலே ஒரு சிறிதே உண்டு உயிரோம்பி, வீட்டின்பம் பெறத்தக்க தவக்கடலைக் கடந்து இனிதே தவஞ்செய்து முடித்தான்.'

**ஒளிறுதேர் ஞானம் பாய்மா இன்னுயிர் ஓம்ப லோடைக்**
**களிறுநற் சிந்தை காலாள் கருணையாங் கவசம் சீலம்**
**வெளிறில்வாள் விளங்கு செம்பொன் வட்டமெய்ப்**
**பொருள்க ளாகப்**
**பிளிறுசெய் கருமத் தெவ்வர் பெருமதின் முற்றி னானே**

[ஓம்பல்-பாதுகாத்தல்; பிளிறுசெய்-ஆரவாரத்தைச் செய்கின்ற; வெளிறு-குற்றம்.]

**உறக்கெனு மோடை யானை யூணெனு முருவத் திண்டேர்**
**மறப்பெனும் புரவி வெள்ளம் வந்தடை பிணிசெய் காலாள்**
**திறப்படப் பண்ணிப் பொல்லாச் சிந்தனை வாயில் போந்து**
**சுறக்கட லனைய தானை துளங்கப் போர் செய்த தன்றே**

[உறக்கு-உறக்கம்; ஊண்-உணவு; திறப்பட-கூறுபட; சுறக்கடல்-சுறாமீனையுடைய கடல்.]

**தெளிவறுத் தெழுவர் பட்டா ரீரெண்மர் திளைத்து**
**வீழ்ந்தார்**
**களிறுகா லுதைப்ப வெண்மர் கவிழ்ந்தனர் களத்தி னுள்ளே**
**பிளிறிவீழ் பேடி பெண்ணோ யறுவகைத் துவர்ப்பும் பேசின்**
**அளிபடு சிந்தை யென்னு மாழிவாய் வீழ்ந்த வன்றே 3076**

[பிளிறி-கூவி; பேசின்-பேசுமிடத்து.]

மெஞ்ஞானம், விளங்கும் ஒளி உடைய தேராக, உயிரைப் பாதுகாத்தல் அதில் பூட்டிய குதிரையாக, நல்ல சிந்தனைகளே, நெற்றிப் பட்டம் அணிந்த யானை யாக, இறையருள் காலாளாக நல்லொழுக்கமே பாதுகாப் பான கவசமாக, அறவுரைகளே உறுதியான வாளும் ஒளி வீசும் பொற் கேடயமும் ஆகக்கொண்டு, ஆரவாரிக்கும் இருவினையாகிய பகையின் பெரிய கோட்டை மதிலை முற்றுகை இட்டான். அப்போது உறக்கம் என்கிற முகபடாம் அணிந்த யானையும், பசி என்னும் பய முண்டாக்கும் பெரிய தேரும், மறதி என்னும் குதிரைப் படைகளும், வந்து சேருகின்ற நோய்த் துன்பமாகிய காலாட்களும் ஆகிய நால்வகைப் படைகளும் அணி வகுத்து, தீய சிந்தனை என்னும் வாயில் தாண்டி வந்து, சுறாமீனுடைய கடல் போலப் பெருகி நின்று, உளம் நடுங்கப் போரிட்டன.

இவ்வாறு தவவேள்வி என்னும் நற்செயலுக்கும், அதைத் தடுத்தழிக்கின்றதான தீ உணர்வுக்கும் இடையே நடந்த போரில், தீவினைப் பயனும் அதன் துணையான படைகளும் வீழ்ந்தன. மாயை, லோபம், முதலான ஏழு பகைவர்களும், விலங்கு கதி, மனித கதிகளின் நால் வகைச் சாதியால் உண்டாகும் பதினாறு வகைத் துன்பம் என்னும் பகையும், மானம் குரோதம் என்னும் எட்டுப் பேர்களும், நபுஞ்சக வேதமும், ஸ்திரீ வேதமும், வேண்டுதல், வெறுத்தல், அஞ்சுதல், அசைதல், வருந்து தல், மகிழ்தல் என்னும் அறுவகைச் சுவைகளும், தவத் தாலுயர்ந்த தூய சிந்தனை என்னும் கடலில் வீழ்ந்து அழிந்தன. (எழுவர், ஈரெண்மர், எண்மர் என்னும் காதி அகாதி கருமங்களைப் பற்றி ''கருமஸ்வரூம்'' என்னும் நூல் கூறும்.)

**மயக்கப்போர் மன்னன் மக்கண் மந்திரி யவரும் வீழ**
**வியப்புறு வேத வில்வாய் வேட்கையம் பெடுத்திட் டெய்யக்**

கலக்கமி லசுப மென்னுங் குந்தத்தாற் கணைபெய்ம் மாரி
விலக்கித்திண் வெறுப்பு வாளால் விரைந்துயி ரவனை
யுண்டான் 3077

[குந்தம்-எறிகோல்; வேட்கை-ஆசை.]

கரும்பெறி கடிகை போன்றுங் கதலிகைப் போழ்கள்
போன்றும்
அரும்பொறிப் பகைவர் தம்மை யுறுப்பறத் துணித்து
மீர்ந்தும்
மருந்தெறி பிணியைக் கொல்லு மருத்துவன் போன்று
மாதோ
விருந்தெறிந் தெறியு மூவர் மேற்படை யியற்றி னானே

[கரும்பெறி கடிகை-கரும்பின் துண்டம்; கதலிகை-
வாழை; போழ்-துண்டம்.]

செழுமல ராவி நீங்கு மெல்லையிற் செறிந்து காயம்
கழுமிய வுதிரம் போல விமைப்பினுட் கரந்து நீங்கக்
கொழுமலர்க் குவளைக் கண்ணிக் கூற்றுயி ருண்ப தேபோல்
விழுமிய தெவ்வர் வாணாள் வீழ்ந்துக வெம்பி னானே

[காயம்-உடம்பில்; கழுமிய-கலந்த; உக-கெட.]

குரோதனே மானன் மாயன் கூர்ப்புடை யுலோப னென்பார்
விரோதித்து விரலிற் சுட்டி வெருவரத் தாக்க வீரன்
நிரோதனை யம்பிற் கொன்றான் நித்தைநீள் பசலைப்
பேரோர்
விராகெனும் வேலின் வீழ வெகுண்டன னவரும் வீழ்ந்தார்

[வெருவர-அஞ்சும்படி; கூர்ப்பு-கூர்மை; நிரோதனை-
உறுதி; நித்தை-நித்திரை; விராகு-பற்றின்மை.]

இவ்வாறு மையலூட்டும் மன்னனுடைய மக்களும் மந்திரிகளும் வீழ்ந்துபட, வியக்கத்தக்க புருடவேதம் என்னும் வில்லிலே, மோகவேட்கை என்கின்ற அம்புகளைப் பொறுத்தி எய்ய, அவ்வம்புகளைக் கலங்காத தோல், இரத்தம், இறைச்சி என்னும் தடுப்புக் கோலால்

விலக்கி, உடலை வெறுப்பதாகிய வலிமை மிக்க வாள் கொண்டு அப்பகையையும் வென்றான். கரும்புத் துண்டுகள் போல் வெட்டியும், வாழைத் துண்டுகள் போல் அரிந்தும் மெய், வாய், கண், மூக்கு, செவி, ஆகிய ஐம்பொறி களாகிய பகைவர்களின் வேட்கையை அவற்றின் வழிச் செல்லவிடாது தடுத்தும் அடக்கியும், மருந்திட்டுப் பிணி போக்குகின்ற மருத்துவனைப் போல, நிலையாக இருந்து கொல்லும் வாதம் பித்தம் சிலேட்டுமம் ஆகிய மூன்று பகைவர்கள் மேலும் படையை ஏவினான். வளமிக்க உயிர் போகின்றபோது, உடலோடு கலந்து நிறைந்திருந்த குருதி, ஒரு நொடிப் பொழுதுக்குள் மறைந்து போவதைப் போல அழகிய குவளைமலர்க் கண்ணியை அணிந்த உயிருண்ணும் கூற்றுவனைப்போல, தன் தவத்தைக் கலைக்க வந்த தீவினையாகிய பகைவருயிரைக் கொன்று தீர்த்தான்.

குரோதம், மானம், மாயை, லோபம் ஆகிய நால்வகைப் பகைவரும் வன்மங்கூறி, மிகப் பயமுண்டாகும் படித் தாக்க, நிலைகுலையாத உறுதி என்னும் அம்பினாலே அப்பகைவரை அழித்தான். நித்திரை, அரைத்தூக்கம் என்னும் பெயருடைய பகையை, பற்றின்மை என்னும் வேலால் தாக்க, அவையும் அழிந்து ஒழிந்தன.

**புணரிபோற் சிறுபுன் கேள்விப் படையொடு புகைந்து பொங்கி**
**உணர்வொடு காட்சி பேறென் றிடையுறு கோக்க ளேற்றார்**
**இணரெரி முழக்க மன்ன சுக்கிலத் தியான மென்னும்**
**கணையெறிந் துகைப்ப வீழ்ந்து காற்படை சூழப் பட்டார்**

[புணரி-கடல்; கோக்கள்-அரசர்கள்; இணரெரி-கிளைத்தலையுடைய நெருப்பு; காற்படை-காலாட்படை.]

**காதிப்போர் மன்னர் வீழக் கணையெரி சிதறி வெய்யோன்**
**ஓதிய வகையி னொன்றி யுலகுச்சி முளைத்த தேபோல்**

வீதிபோ யுலக மூன்றும் விழுங்கியிட் டலோக நுங்கி
ஆதியந் தகன்ற நான்மைக் கொடியெடுத் திறைமை
கொண்டான் 3082

[காதி-உபாதி; அலோகம்-பார்க்கப்படாத இடம்; நுங்கி-விழுங்கி; நான்மைக்கொடி-நான்கு வகை யையுடைய வெற்றிக் கொடியை.]

பசும்பொனி னுலகிற் றேவர் பயிர்வளை முரச மார்ப்ப
அசும்புசேர் களிறு திண்டே ரலைமணிப் புரவி வேங்கை
விசும்பியங் கரியோ டாளி விடைமயி லன்ன நாகம்
நயந்தவை பிறவு மூர்ந்து நாதன்றாள் கோயில் கொண்டார்

[பயிர்தல்-அழைத்தல்; வேங்கை-புலி; அரி-சிங்கம்; ஆளி-அத்தியாளி; விடை-ஏறு.]

கடல்போற் பெரிய, ஆனால் அற்பமான தீவழிச் செல்லும் அறிவுடைய படைகளுடன் வந்து, சினந்து, பொங்கிப் போரிட்ட, உணர்வு, காட்சி, பேறு என்னும் அரசர்கள், பெருகிப் பரவும் நெருப்பைப் போன்ற சுக்கிலத் தியானம் என்னும் அம்புதைத்துத் தாக்க, காலாட்படை களோடு வீழ்ந்தழிந்தனர். காதி, காமமாகிய பகை மன்னர்கள், அழியும்படி அம்பு மழையாகிய நெருப்பைப் பொழிந்து, சூரியன் உலக உச்சியிலே தோன்றியதைப் போல, அருகன் ஆகமத்திலே கூறிய அருள் நெறியின் வழியிலே நின்று, எங்கும் பரந்து மூவுலகையும், அவை யல்லாத உலகையும் வென்று, முதலும் முடிவும் இல்லாத நீண்ட நான்கு வகையான வெற்றிக் கொடியேந்தி, இறைவனைப்போல் இருந்தான். சீவகனுக்குக் கேவல ஞானம் உண்டாயிற்று. பசும்பொன்னுலகமான வானு லகத் தேவர்கள், மதம் ஒழுகும் யானையும், பெரிய தேரும், பாய்ந்தோடும் குதிரையும், புலியும், வானில் பறக்கும் சிங்கமும், ஆளியும், காளையும், அன்னப் பறவை யும், நாகப்பாம்பும் ஆகிய இன்னும் பல வாகனங்களிலே அமர்ந்து, கூவி அழைக்கும் சங்கும் முரசும் முழங்க வந்து, சீவகன் திருவடிகளைக் கோவிலாகக் கொண்டு பணிந்தனர்.

நறுமலர் மாலை சாந்தம் பருஉத்துளித் துவலை நன்னீர்க்
கறைமுகில் சொரியக் காய்பொற் கற்பக மாலை யேந்திச்
சிறகுறப் பரப்பி யன்னம் பறப்பன போல வீண்டி
நிறைகடல் விஞ்சை வேந்தர் நீணில மன்னர் சேர்ந்தார்

[பருஉத்துளி-பரிய துளி; ஈண்டி-கூடி.]

விண்ணியங் கருக்கன் வீழ்ந்து மீனிலங் கொள்வ தேபோல்
மண்ணெலாம் பைம்பொன் மாரி மலர்மழை சொரிந்து வாழ்த்தி
எண்ணிலாத் தொழில்கள் தோற்றி யிந்திரர் மருள வாடிக்
கண்முழு துடம்பிற் றோன்றிச் சுதஞ்சணன் களிப்புற் றானே 3085

[அருக்கன்-சூரியன்; தோற்றி-தோற்றுவித்து.]

குளித்தெழு வயிர முத்தத் தொத்தெரி கொண்டு மின்ன
அளித்துல கோம்பு மாலை யகன்குடை கவித்த தாங்கு
வளிப்பொர வுளருந் திங்கட் கதிரெனக் கவரி பொங்கத்
தெளித்துவில் லுமிழுஞ் செம்பொ னாசனஞ் சேர்ந்த தன்றே 3086

[ஆங்கு-அப்பொழுது, வளிபொர-காற்று ஒன்றோ டொன்று பொரும்படி; வில்-ஒளி; உளரும்-அசையும்.]

வாசமிக்க நறுமலர் மாலையும், கலவைச் சந்தனமும், பெரிய பெரிய துளியாக விழுகின்ற பன்னீரும் மழைபோல் பொழிய, ஒளிவீசும் பொன்னாலான கற்பகமாலையும் ஏந்தி, சிறகு விரித்து அன்னம் பறப்பதுபோல் பறந்து வந்து, கடல்போல விண்ணுலகத் தேவர்களும், மண்ணுலக அரசர்களும் ஒன்று கூடினர். விண்ணிலே உலவிவரும் சூரியன் மண்ணிலே விழ, நிலமிசை எங்கும் நட்சத் திரங்கள் சிந்திக்கிடப்பதைப்போல, மண்ணகமெங்கும் பொன்மழையும் பூமழையும் சொரிந்து வாழ்த்தி நிற்க, எண்ணற்ற அழகிய காட்சிகள் நடைபெறக்கண்டு, இந்திரர் முதலிய தேவர்களும் மயங்க, சுதஞ்சணன்

உடலெல்லாம் கண்ணாகக்கொண்டு, இவற்றைக் கண்டு களித்துக் கூத்தாடி மகிழ்ந்தான். ஒளிவீசும் மாணிக்க மாலையின் ஒளியிலே, மங்கியும் மறைந்தும் சுடர்விடுகின்ற வைரமும் முத்துக்கோவையும் ஒளிவீச, கவிந்த உலகைக் காத்தளிக்கும் குடை விரிந்தது. காற்று ஒன்றோடொன்று மோதி அசைவதுபோல் அசையும் வெண்சாமரை, நிலவின் ஒளிபோலப் பரவிச் சிறக்க, மிக்க பேரொளி வீசும் பொன் ஆசனம்வந்து சேர்ந்தது.

## 34. மணியரும்பதம்

### வேறு

மணியுமிழ் திருக்கேசம் வானவ ரகிற்புகையும்
பிணியவிழ்ந்த கற்பகமும் பெயர்ந்தோடக் கமழுமால்
துணியரு வினையெறிந்தாற் கதுநாற்றஞ் சொல்லலாம்
அணிதிக ழரசுவா வதன்கடா ஞ்சாற்றாதோ 3087

[பெயர்ந்தோட-கெட்டுப்போம்படி; துணிஅருவினை-நீக்குதற் கரிய வினை; அரசுவா-இராசயானை; கடாம்-மதம்.]

முழங்குதிரு மணிமுறுவன் முருக்கிதழ் கொடிப்பவழத்
தழங்குரல்வாய் தளையவிழ்ந்த மந்தாரந் தவநாறும்
அழுங்கல்சூழ் வினைவெறுத்தாற் கதுநாற்ற மறியலாம்
வழங்குபொன் வரைவளரும் பைங்கண்மா வுரையாதோ

[மணிமுறுவல்-முத்துப்போலும் முறுவல்; முருக்கிதழ்-முருக்கம் பூவின் இதழ்; தவநாறும்-மிக மணம் வீசும்; அழுங்கல்-இரங்குதல்.]

உறுப்பெலா மொளியுமிழ்ந் துணர்வரிதா யிருசுடரும்
குறைத்தடுக்கிக் குவித்ததோர் குன்றேபோன் றிலங்குமால்
வெறுத்திரு வினையுதிர்த்தாற் கதுவண்ணம் விளம்பலாம்
கறுப்பொழிந்த கனையெரிவாய்க் காரிரும்பே கரியன்றே

[இருசுடர்-அக்கினியும், சூரியனும்; வண்ணம்-நிறம்; கரி-சாட்சி.]

## வேறு

**வானோ ரேந்து மலர்மாரி வண்ணச் சாந்தம் பூஞ்சுண்ணம்**
**கானார் பிண்டிக் கமழ்தாமங் கறையார் முகிலி**
**னிறங்காட்டும்**
**தேனார் புகைக ளிவையெல்லாந் திகைப்பத் திகைகண்**
**மணநாறி**
**ஆனா கமழுந் திருவடிப்போ தமரர் முடிமே லணிந்தாரே**

[கான்-வாசனை; திகைப்ப-கெட; திகை-திசை; ஆனா-அமையாத.]

அழகுமிக்க பட்டத்து யானையை அதன் மதமே இனம்பிரித்துக் காட்டிவிடாதா? அதுபோல நீக்குதற்கு அரியது என்று கருதும் வினையை விட்டொழித்தவர் களுக்கு இயல்பாக உள்ள வாசனையை, நீலமணிபோல் ஒளிவீசும் முடிக்கற்றையே, அகிற்புகையின் நறுமணமும், வானவர் உலகில் விரிந்தலர்ந்த கற்பக மலரும் தோற்கும் படி மணம் வீசி வெளிப்படுத்திக் கொண்டிருக்கும். எனவே நாமும் அதன் தன்மை அறியலாம். ஒளிவீசும் பொன் மலையிலே வாழும், பசுங்கண்களை உடைய புனுகு பூனையை, அதனிடத்து இயல்பாக எழும் மணமே அறியச் செய்து விடுமல்லவா? அதைப் போலவே இரங்கத்தக்க தீவினையை விட்டொழித்தவர்களுக்கு இயல்பாக உள்ள மணத்தை, முத்துப்போலப் புன்னகை பொழியும், முருக்கம் பூவின் இதழையும் கொடிப்பவளத்தையும் போன்ற, குரல் ஒலி முழங்கும் வாய், மலர்ந்த மந்தாரை மலர்போல மிகுந்த மணம் வீசுவதில் இருந்தே அறிந்து கொள்ளலாம். இருவினைத் துன்பத்தை விட்டொழித்தவர்களுக்கு, இயல்பாக உள்ள உடல் நிறத்துக்கு, பொங்கிய பெரு நெருப்பில் கிடந்து தன் கருநிறம் இழந்த இரும்பையே உவமையாகச் சொல்லலாம். உடல் உறுப்புக்கள் எல்லாம் ஒளிவீச, அறிவுக்கரிய காட்சியாய், ஞாயிறு, நெருப்பு என்னும் இரண்டின் ஒளியையும் குறைத்துக் குவித்து

வைத்த குன்றுபோல் அது காட்சி தரும். வானவர் பொழியும் பூமாரியும், வாசமிகு கலவைச் சந்தனமும், அழகிய சுண்ணப்பொடியும், மணமிக்க அசோக மலர் மாலையும், கருமுகிலின் நிறத்தைப்போன்ற அடர்ந்த, இனிய வாசநாறும் புகைகளும் தோற்க, திசைகள் தோறும் சென்று மணம் பரப்பும், குறைவற்ற மணமுடைய திருவடி மலரை வானவர் தம் முடிமேல் ஏற்றுப் பணிந்து வணங்கினர்.

## வேறு

**சுறவுக்கொடிக் கடவுளொடு காலற்றொலைத் தோயெம்**
**பிறவியறு கென்றுபிற சிந்தையில ராகி**
**நறவமலர் வேய்ந்துநறுஞ் சாந்துநில மெழுகித்**
**துறவுநெறிக் கடவுளடி தூமமொடு தொழுதார் 3091**

[காலற்றொலைத்தோய்-யமனை வென்றோய்; நறவ மலர்-தேனையுடைய பூ; தூமம்-அகிற்புகை.]

**பாலனைய சிந்தைசுட ரப்படர்செய் காதி**
**நாலுமுட னேயரிந்து நான்மைவரம் பாகிக்**
**காலமொரு மூன்றுமுட னேயுணர்ந்த கடவுள்**
**கோலமலர்ச் சேவடிகள் கொண்டுதொழு தும்யாம் 3092**

[படர் - துன்பம்; காதிநாலும் - ஞானாவரணீயம் முதலிய நான்கையும்; நான்மை-அநந்தஞானம் முதலிய நான்கு.]

**முழங்குகட னெற்றிமுளைத் தெழுந்தசுட ரேபோல்**
**அழுங்கல்வினை யலறநிமிர்ந் தாங்குலக மூன்றும்**
**விழுங்கியுமி ழாதுகுணம் வித்தியிருந் தோய்நின்**
**இழுங்கில்குணச் சேவடிக ளேத்தித்தொழு தும்யாம் 3093**

[முளைத்து-தோன்றி; சுடர்-பாலசூரியன்; அழுங்கல் வினை-இரக்கத்தைத் தரும் வினை; இழுங்கில்-இழுக்கில், குற்றமில்லாத; வித்திய-விதைத்த.]

**ஏத்தரிய பல்குணங்கட் கெல்லைவரம் பாகி**
**நீத்தவரு ளிந்திரனை நின்றுதொழு தமரர்**
**நாத்தழும்ப வேத்தித்தவ நங்கையவர் நண்ணித்**
**தோத்திரங்க ளோதித்துகள் மாசுதுணிக் கின்றார் 3094**

[நீத்தம்-பெருக்கம்; துகள்-தூள்; மாசு-குற்றம்; துணிக் கின்றார்-நீக்குகின்றார்.]

'சுறாமீன் கொடி உடைய காமனையும் எமனையும் வென்றவனே, எம்பிறவித் துன்பத்தைப் போக்கிடுக' என்று துதிப்பதைத் தவிர, வேறு எண்ணம் ஏதும் இல்லாதவர் களாய்த் தேனுடைய நறுமலர் பெய்து, வாசச் சந்தனத் தாலே தரையை மெழுகி, துறவின் தூய இலக்கணமாக நின்ற அருகப் பெருமான் திருவடியைத் தூபமிட்டுத் தொழுது பணிந்தனர்.

'சுக்கிலத் தியானத்தால் உயர்ந்து சிந்தை ஒளிவீச, காதி கர்ம வினைகள் நான்கையும் வென்று, அந் நான்கிற்கும் எல்லையாக நின்று, முக்காலங்களையும் உணர்ந்த கடவுளே, நின் அழகிய, மலர்போலும் சிவந்த திருவடிகளை மனத்திற்கொண்டு தொழுகின்றோம். அலை வீசி ஒலிக்கின்ற கடல் நடுவே தோன்றிய சூரியனைப் போல, இரங்கத்தக்க தீவினை அழிய, உலகம் மூன்றும் உணர்ந்தறிந்து, உணர்ந்தறிந்த அப்பெருங்குணம், நீங்காது நிறையப் பெற்றிருந்தவனே, நின் மாசற்ற திருவடிகளைத் தொழுது நாங்கள் பணிகின்றோம்' என்று வாழ்த்தினர். போற்றத் தக்க பல நற்குணங்களுக்கெல்லாம் எல்லை யாகி நின்ற, பேரருளுடைய முனீந்திரனாகிய சீவகனை இவ்வாறு வானவர்கள் தொழுது, நாத்தழும்புண்டாக வாழ்த்த, தவம் மேற்கொண்டு வந்த மனைவியரும் தொழுது பணிந்து, தம் துன்ப அழுக்கைக் கழுவிக் கொண்டனர்.

## வேறு

**செய்தவ னேவினை சேரும தற்கெனும்**
**ஐயமின் றாயலர் தாமரை மேலடி**

மொய்ம்மலர் தூய்முனி யாதுவ ணங்குதும்
மெய்யுல கிற்குவி ளம்பிய வேந்தே 3095

[எனும்-சிறிதும்; முனியாது-வெறுக்காது.]

நல்லன வேயென நாடி யோர்புடை
அல்லன வேயறை கின்றபுன் னாதர்கள்
பல்வினைக் கும்முலைத் தாய்பயந் தாரவர்
சொல்லுவ நீசுக தாவுரை யாயே 3096

[நாடி-ஆராய்ந்து; சுகதா-சுகத்தைத் தருபவனே.]

மதியறி யாக்குணத் தோனடி வாழ்த்தி
நிதியறை போனிறைந் தார்நிக ரில்லாத்
துதியறை யாத்தொழு தார்மலர் சிந்தா
விதியறி யும்படி வீரனை மாதோ 3097

[துதி அறையா-துதிகளைக்கூறி; சிந்தா-சிந்தி.]

அம்மனைவியர், 'வினையைச் செய்தவனையே அவ் வினை சென்றடையும்; அவன் அதன் பயனை அடைவான் என்பதில் சிறிதும் ஐயமில்லை! எனவே மலர்ந்து விரிந்த தாமரை மலர்மேல் சென்ற திருவடிகளை, உலகுக்கு உண்மைப் பொருளுணர்த்திய அரசே, வாசமிகு மலர் தூவிப் பணிந்து வணங்குவோம்! நன்னெறிகள் என்றே கூறித் தீயவைகளைப் பேசுகின்ற, புல்லறிவுடைய பிற மதத்தவர்கள், பல்வினைகளையும் வளர்க்கும் பல கோட் பாடுகளை உண்டாக்கி விட்டனர். நன்மையையே கொடுப் பவனே, நீ அவர் கூறுவதுபோல் தீ நெறிகளைக் கூறுவ தில்லை,' என்று கூறி அறிவால் அளந்தறிந்து கொள்ள முடியாத, பண்பு மிக்கவன் திருவடிகளைப் பணிந்து கருவூலக் காப்பறைபோல் நிறைந்த ஆகமஞானமுடைய அரசன் தேவியர்கள், ஒப்பரிய தோத்திரங்கள் பாடிப் பணிந்து, நறுமலர் தூவி அருச்சித்து, இருவினைப் பயனும் உணரவேண்டி அவ்வீரனை வணங்கினர்.

### வேறு

தீவினைக் குழவி செற்ற மெனும்பெயர்ச் செவிலி கையுள்
வீவினை யின்றிக் காம முலையுண்டு வளர்ந்து வீங்கித்
தாவினை யின்றி வெந்நோய்க் கதிகளுட் தவழு மென்ற
கோவினை யன்றி யெந்நாக் கோதையர்க்
கூற லுண்டே 3098

[செற்றம் - கோபம்; வீதல் - கெடுதல்; தாஇல் - கெடாத.]

நய்வினைக் குழவி நன்னீர்த் தயாவெனுஞ் செவிலி நாளும்
புல்லிக்கொண் டெடுப்பப் பொம்மென் மணிமுலை
கவர்ந்து வீங்கிச்
செல்லுமாற் றேவர் கோவா யெனுமிருள் கழிந்த சொல்லால்
அல்லிமே னடந்த கோவே யச்சத்து ணீங்கி னோமே 3099

[கவர்ந்து-விரும்பி; பொம்மல்-பருமை.]

### வேறு

மணியினுக் கொளியக மலர்க்கு மல்கிய
அணியமை யங்குளிர் வாச மல்லதூஉம்
திணியிமி லேற்றினுக் கொதுக்கஞ் செல்வநின்
இணைமலர்ச் சேவடி கொடுத்த வென்பவே 3100

[அகமலர்-இதயமாகிய பூ; ஏறு-தருமம்; ஒதுக்கம்-தங்குமிடம்.]

'தீவினையாகிய குழந்தை வெறுப்பென்னும் பெயருடைய தாதியின் கையிலிருந்து வீழ்ந்து படாமல், காமமாகிய தாய்ப்பாலை உண்டு வளர்ந்து பருத்து பிறப்பறும் வினையின்றிக் கொடிய நோய்த் துன்பத்தில் கிடந்துழலும், என்ற பேருண்மையைக்கூறி அருளிய, இத் தலைவனையே அல்லாமல் எங்கள் நாக்கு குறையுடைய பிறரைக் கொண்டாடிப் புகழ்தல் உண்டோ?

'நல்வினையாகிய குழந்தை, நல்லியல்புகளுடைய அருள் என்னும் தாயார் தினமும் தழுவி எடுக்க, அப்பூ

மார்பின் பாலுண்டு வளர்ந்து, வானவர்க்குத் தலைமை யாய்ச் செல்லும் என்று கூறிய, பொய்யற்ற மெய்ப் பொருளாலே, உள்ளத் தாமரை மலர்மேல் நடந்தேகிய தலைவனே, பிறவிப் பயத்தை விட்டொழித்தோம். பேரின்ப வீடு பெற்ற உயிருக்கு ஒளியையும், அழகொளி மிக்க எம் உள்ள, மலர்த் தாமரைக்கு, நிறைந்த குளிர்ச்சியையும் வாசத்தையும், அத்தோடு திரண்ட திமிலுடைய காளை போன்ற அறத்துக்கு நிலையான இருப்பிடத்தையும் செல்வச் சீருடையவனே, நின் திருவடி மலர்கள் தந்தன' என்று அத் தேவிமார் போற்றிப் புகழ்ந்தனர்.

## 35. பரிநிர்வாணம்

**இகலிருண் முழுமுதல் துமிய வீண்டுநீர்ப்**
**பகல்சுமந் தெழுதரும் பருதி யன்னநின்**
**இகலிரு மரைமல ரளித்த சேவடி**
**தொகலருங் கருவினை துணிக்கு மெஃகமே** 3101

[இகல்-மாறுபாடு; துமிய-கெட; பகல்-ஒளி; எஃகம்-வாள்.]

### வேறு

**மீன்தயங்கு திங்கண் முகநெடுங்கண் மெல்லியலார்**
**தேன்தயங்கு செந்நாவிற் சின்மென் கிளிக்கிளவி**
**வான்தயங்கு வாமன் குணம்பாட வாழியரோ**
**கான்தயங்கி நில்லா கருவினைகாற் பெய்தனவே** 3102

[தேன்தயங்கு - தேனின் இனிமை விளங்குகின்ற; காற்பெய்தன-ஓடின; கான்-காடு.]

### வேறு

**மதியம்பொழி தீங்கதிர்கள் பருகிமல ராம்பல்**
**பொதியவிழ்ந்து தேன்றுளிப்ப போன்றுபொரு வில்லார்**
**விதியிற்களித் தாரறிவன் விழுக்குணங்க ளேத்தித்**
**துதியிற்றொழு தார்துளங்கு முள்ளமது நீத்தார்** 3103

[பொதி-கட்டு; பொருவில்லா-ஒப்பில்லாத; துளங்கும்-கலங்கும்.]

**ஆர்ந்தகுணச் செல்வனடித் தாமரைக ளேத்திச்**
**சேர்ந்துதவ வீரர்திசை சிலம்பத்துதி யோதித்**
**தூர்ந்தஇருள் துணிக்குஞ்சுடர் தொழுதருளு கென்றார்**
**கூர்ந்தமிழ்த மாரியெனக் கொற்றவனுஞ்**
**சொன்னான் 3104**

[சிலம்ப-ஒலிக்க; தூர்ந்த இருள்-செறிந்த இருட்டை.]

அத்தேவியார் 'தன்னில் முற்றிலும் மாறுபட்ட பேரிருள் முற்றிலும் அழியும்படி, நீர் நிறைந்த கடல்மேலே தோன்றி, ஒளி சுமந்து வருகின்ற சூரியனைப்போன்ற, இருவினைப் பயனில் இருந்து முற்றிலும் வேறான, உன் பூமலர்த் தாமரைத் திருவடிகள், சூழும் தீவினையை அறுக்கும் கூரிய வாள் ஆகும்' என்று போற்றினர். விண்மீன்களிடையே ஒளி வீசும் முழு நிலவைப் போன்ற முகமும் நீண்ட கண்களும் உடைய அரசியர், தேன் போலும் இனிய சுவை விளங்கும், நல்ல நாவில் பிறக்கின்ற, கிளிமொழி போன்ற அழகிய சொல்லாலே, வான் நிறைந்த புகழ் விளங்கும் வாமன் அருள்பாட, சீவகன் தேவியரின் தீவினைகள், அவரைவிட்டு விலகிக் காட்டின் கண்ணே ஓடி ஒளிந்தன. நிலவு நிலத்திலே பொழியும் ஒளிக் கதிர்களை உண்டு விரிகின்ற ஆம்பல் மலர், மலர்ந்து மணமிக்க தேனைச் சிந்துவதைப் போல, ஒப்புவமை இல்லாத சிறப்புடைய அத்தேவியர், அருகன் அருளுரை கேட்டு மகிழ்ந்து அவன் அளப்பருங் குணங்களைப் பாடிப் புகழ்ந்து, தீவினையால் கலங்கும் மனக் கவலையை விட்டொழித்தனர்.

எண்ணற்ற நற்குணங்களின் இருப்பிடமாக இருக்கின்ற இறைவனின் தாமரை மலரடிகளை வாழ்த்தி, தவ வீரர்கள் ஒன்று திரண்டு, திசையெல்லாம் எதிரொலிக்க வாழ்த்தொலி கூறி வணங்கி, 'நிறைந்த தீவினை இருளைப்

போக்கும் பரமாகம நெறியை, எமக்கு கூறி அருளிச் செய்க' என்று வேண்டினர். அவனும் அமுத மழை பொழி வதைப்போல அவற்றைக் கூறியருளினான்.

இன்பமற் றென்னும் பேரா னெழுந்தபுற் கற்றை தீற்றித்
துன்பத்தைச் சுரக்கு நான்கு கதியெனுந் தொழுவிற்
றோன்றி
நின்றபற் றார்வ நீக்கி நிருமலன் பாதஞ் சேரின்
அன்புவிற் றுண்டு போகிச் சிவகதி யடைய லாமே 3105

[பேரான்-பெரிய பசு; தீற்றி-ஊட்டப்பட்டு; நிருமலன்-மலம் அற்றவன்; சிவகதி-வீட்டுலகம்.]

வாட்கையம் மைந்த ராயும் வனமுலை மகளி ராயும்
வேட்கையை மிகுத்து வித்திப் பிறவிநோய் விளைத்து வீயாத்
தேட்கையிற் கொண்ட தொக்கு நிச்சநோய்ச் செற்றப்
புன்றோற்
பூட்கையை முனியின் வாமன் பொன்னடி தொழுமி
னென்றான் 3106

[நிச்சம்-நிதம்; பூட்கை-மேற்கோள்.]

## வேறு

தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனா யின்ப மூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப்பிறந் துயர்ந்து போகுமே 3107

[பரிந்து-வருந்தி; ஓம்புதல்-காத்தல்; வைகலும்-நாள் தோறும்.]

நெருப்புயிர்க் காக்கிநோய் செய்யி னிச்சமும்
உருப்புயி ரிருவினை யுதைப்ப வீழ்ந்தபின்
புரிப்புரிக் கொண்டுபோய்ப் பொதிந்து சுட்டிட
இருப்புயி ராகிவெந் தெரியுள் வீழுமே 3108

[நெருப்பாக்கி-வெம்மையை உண்டு பண்ணி; இருப்புயிராகி-தீவினை பொருந்திய உயிராய்ப்போய்; எரி-நரகம்.]

'இன்பமாகிய பெரிய பசு, மக்கள், தேவர், நரகர், விலங்கு என்னும் நான்கு கதிகளாகிய தொழுவிலே கிடந்து, வேட்கை என்னும் புல்லைத் தின்று துன்பமாகிய பாலைச் சுரக்கும். எனவே அவ்வின்பத்தின்மேல் வைத்த பற்றையும் ஆசையையும் நீக்கி, தூயவன் திருவடிகளைத் துணையென்று அடைந்தால், வீட்டுலக இன்பத்திற்கு விலையாகத் தூய அன்பைக் கொடுத்து அதை அடையலாம்! அப்படிக்கில்லாமல், ஆசையை வளர்த்துக்கொண்டு வாளேந்திய வாலிபர்களாயும், வனப்புடைய பெண்களாயும், பிறக்கும் பிறவித் துன்பத்தைப் பெருக்கி, விடாமல் தேளைக் கையிலே பிடித்திருப்பதைப் போன்ற, நித்தமும் வளரும் நோயும், பகையும் கொண்ட புன்புலால் போர்த்திய, பிறவித் துயரை வெறுப்பவர்கள் வாமன் திருவடி பணிக' என்றான்.

'தன்னுயிரைத் தான் போற்றிக் காப்பாற்றிக் கொள்வதைப்போல, பிறவுயிர்களிடத்தும் அன்றாடம் அன்பு செலுத்தி அவற்றைப் பாதுகாப்பவன், உயிர்க்குலத்துக்குத் தலைவனாய், அழகிய உருவுடையவனாய், புகழுயிர் உடையவனாய்ப் பிறந்து உயர்ந்து போவான். உயிர்களுக்கு வெம்மை உண்டாக்கித் துன்பந்தரும் நோய் அன்றாடம் வந்து வாட்டி உடலைத் தீவினையிலே தள்ள, வீழ்ந்த உடலைக் கட்டி எடுத்துப்போய் நெருப்பிலே வைத்துப் பொசுக்கத் தீவினை பற்றிய அவ்வுயிர் அழிந்து நரகத்திலே வீழும்!'

**மழைக்குர லுருமுவா வோத மாக்கடற்**
**பிழைத்ததோ ரருமணி பெற்ற தொக்குமால்**
**குழைத்தலைப் பிண்டியான் குளிர்கொ ணல்லறம்**
**தழைத்தலைச் சந்தனப் பொதும்பர்ச் சார்ந்ததே 3109**

[ஓதம் - பெருக்கம்; குழை - தளிர்; பொதும்பர்-சோலை.]

மல்குபூங் கற்பக மரத்தி னீழலான்
நல்குவா னொருவனை நயந்து நாடுமோ
பில்குபூம் பிண்டியா னமிர்துண் டார்பிறர்
செல்வங்கண் டதற்கவாச் சிந்தை செய்யுமோ 3110

[நீழலான் - நிழலிடத்தே தங்குவோன்; பில்கும்-துளிர்க்கும்.]

மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியின்
அணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம்
பிணியுயி ரிறுதியாப் பேசி னேனினித்
துணிமின மெனத்தொழு திறைஞ்சி வாழ்த்தினார் 3111

[மாண்ட-சிறந்த; அணி-அழகு.]

விண்ணின்மேன் மலர்மழை பொழிய வீங்குபாற்
றெண்ணிலாத் திருமதி சொரியத் தேமலர்
மண்ணின்மேன் மழகதிர் நடப்ப தொத்ததே
அண்ணலா ருலாய்நிமிர்ந் தளித்த வண்ணமே 3112

[மழகதிர்-இளஞ்சூரியன்; உலாய்-உலவி; அளித்த-அருளிச் செய்த.]

'இடி முழங்கும் குரலுடைய மழை பெய்கின்ற பௌர்ணமி நாளிலே, குளிர்ந்த நீருடைய கடலிலே தவற விட்ட மணியை, மீண்டும் பெற்றதைப் போன்றதாகும், தளிருடைய அசோக மர நீழலின் கீழ் எழுந்தருளியிருக்கின்ற அருகப்பெருமானின் அருளறத்தை, தழைக்கின்ற சந்தனச் சோலையிலே அடையப்பெற்றது. இன்பவளம் சுரக்கும் கற்பக மர நிழலின்கீழ் இருப்பவன் வேறு கொடையாளி ஒருவனை விரும்பி அடைவானோ? தேன்துளிர்க்கும் பூ நிறைந்த அசோகனின் கீழ் அமர்ந்த பெருமான், அருளறத்தைச் செவிமடுத்தவர்கள் சிந்தை, மற்றவர்கள் அடைந்

துள்ள கீழான செல்வத்தைக் கண்டு ஆசைப்பட்டு, அதை அடைய விரும்புமோ? எனவே மணி உயிரானவீடு பெற்ற உயிரும், பொன் போன்ற வானவர் உயிரும், அழகிய வெள்ளியைப் போன்ற மக்களுயிரும், செம்பு போன்ற விலங்கின் உயிரும், இரும்பைப் போன்ற நரகர் உயிரும் பற்றி முடிவாகக் கூறினேன். இனித் துணிந்து தேர்ந்து கொள்க' என்று கூறக்கேட்டு அவனை வணங்கிப் பணிந் தனர். அப்போது வானின் மேலிருந்து பூமழை பொழிய, பால் போன்ற மிக்க பேரொளியை, அழகிய நிலவு பொழிய, திசை பரந்த மண்ணின் மேல் இளஞாயிறு உலவுவதைப் போல இருந்தது, அத்தலைவன் அருளோடு இருந்து உலகுயிரைக் காத்த தன்மை!

வேறு

பான்மிடை யமிர்து போன்று பருகலாம் புயத்த வாகி
வானிடை முழக்கிற் கூறி வாலற வமிழ்த மூட்டித்
தேனுடை மலர்கள் சிந்தித் திசைதொழச் சென்ற பின்னாள்
தானுடை யுலகங் கொள்ளச் சாமிநாள் சார்ந்த தன்றே

[பால் மிடை-கூறுபாடு நெருங்கிய; வாலறம்-வெள்ளி யதாகிய அறம்.]

உழவித்தி யுறுதி கொள்வார் கொண்டுய்யப் போகல் வேண்டித்
தொழுவித்தி யறத்தை வைத்துத் துளங்கிமி லேறு சேர்ந்த
குழவித்தண் திங்க ளன்ன விருக்கைய னாகிக் கோமான்
விழவித்தாய் வீடு பெற்றான் விளங்கிநால் வினையும் வென்றே 3114

[உழ வித்தி-உழவுத் தொழிலைப் பரப்பி; உறுதி-பயன்; தொழு-சமவசரணம்; ஏறு-இடபராசி; விழ வித்தாய்-விழாவிற்குக் காரணமாய்.]

துந்துபி கறங்க வார்த்துத் துகிற்கொடி நுடங்க வேந்தி
அந்தரம் விளங்க வெங்கு மணிகமூர்ந் தமர ரீண்டி
வந்துபொன் மாரி சிந்தி மலர்மழை சொரிந்து சாந்தும்
கெந்தநா றகிலுங் கூட்டிக் கிளர்முடி யுறுத்தி னாரே 3115

[நுடங்க-அசைய; அணிகம்-ஊர்திகளை; கறங்க-ஒலிக்க; கெந்தம்-நறுமணம்.]

கூறுபாடுடைய அமுதைப்போல, பருகும் இயல்புடைய தாகி வானத்து இடிபோல முழங்கி, தூய்மை மிக்கதாகிய நல்லறமாகிய அமுதை ஊட்டுவித்து, சென்ற திசை யெல்லாம் தேனுடைய மலர்கள் சிந்தித் தொழுது பணி வோர் தொகை நிறையச் செல்லும் நாள் கழிய, தனக் குரியதாகிய பேரின்ப வீட்டைச் சீவகசாமி அடையும் நாள் வந்து நெருங்கியது.

உழவுத் தொழில் புரிந்து அதன் பயனைக் கொள் வார், துன்பப் பிறவியை விட்டொழிக்க விரும்பி, சமவ சரணத்தே அறப்பயிர் தழைக்கச் செய்து, விளங்கும் திமிலுடைய இடபராசியைச் சேர்ந்த, வைகாசிப் பிறை நிலவைப் போன்ற ஆசனம் உடையவனாகி, இன்ப மகிழ்வுக்குக் காரணமான, நான்கு வினையும் வென்று சீவகன் வீட்டின்பம் பெற்றான். அப்போது துந்துபிகள் முழங்கின. அலைக்கும் ஒலியோடு, பறக்கும் கொடிகள், விண்ணகம் எங்கும் நிறைந்து விளங்க, வானவர் தம் ஊர்தியிலே அமர்ந்து திரண்டு வந்துகூடி, பொன்மாரி பெய்து, பூமழை பொழிந்து, சந்தனமும் மணங்கமழும் அகிற்புகையும் சேர்த்த தூபம் ஏந்தித் தம் பொன்முடி படியப் பணிந்து வணங்கினர்.

**முளைத்தெழு பருதி மொய்கொண் முழங்கழற் குளித்த தேபோற்**
**றிளைத்தெழு கொடிகள் செந்தீத் திருமணி யுடம்பு நுங்க**
**விளைத்தபின் விண்ணு மண்ணு மங்கலம் வகையிற் செய்து**
**வளைப்பொலி கடலி னார்த்து வலங்கொண்டு நடந்த வன்றே 3116**

[முழங்கு அழல்-மிக்க நெருப்பில்; நுங்க-விழுங்கும்படி; மங்கலம்-கலியாணம்; வளைப்பொலி - சங்காற் பொலிவு பெற்ற.]

**கேவல மடந்தை யென்னுங் கேழ்கிளர் நெடிய வாட்கட்**
**பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்னொரு பாக மாகக்**
**காவலன் றானொர் கூறாக் கண்ணிமை யாது புல்லி**
**மூவுல குச்சி யின்பக் கடலினுண் மூழ்கி னானே** **3117**

[கேழ்-நிறம்; கண்ணி-மாலை.]

**பிரிதலும் பிணியு மூப்புஞ் சாதலும் பிறப்பு மில்லா**
**அரிவையைப் புல்லி யம்பொ னணிகிளர் மாடத் தின்தேன்**
**சொரிமது மாலை சாந்தங் குங்குமஞ் சுண்ணந் தேம்பாய்**
**விரிபுகை விளக்கு விண்ணோ ரேந்தமற் றுறையு மன்றே**

[அரிவையை - கேவல மடந்தையை; உறையும்-உறைவான்.]

கீழ்வானில் தோன்றி எழுகின்ற ஞாயிறு, பெரும் நெருப்பிலே மூழ்கியதைப் போல, பரவி எழுகின்ற செந் தீச்சுடர்கள், அழகிய மாணிக்கம் போன்ற உடலை விழுங்கி நிற்க, விண்ணகத் தேவரும், மண்ணக மாந்தரும் 'முத்தியின்பம்' என்னும் இத்திருமணத்தை முறைப்படி நடத்தி, சங்குகள் நிறைந்த கடலலை போல் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து, சீவகனை வலம் வந்து வணங்கிச் சென்றனர். ஒளிவீசும் நீண்ட வாள் போலும் கண்களும், மலர்ந்து விரிந்த முல்லை மலர்க்கண்ணியும் உடைய, கேவலஞானம் என்னும் திருமகள் ஒரு பங்கும் தான் ஒரு பங்கும் ஆக, கண்ணிமைக்காது தழுவியிருந்து, மூவுலகுக்கும் மேலான இன்பக் கடலில் அழுந்தினான். பிரிவுத் துயரும், நோய்த் துன்பமும், முதுமையும், சாதலும், பிறத்தலும் இல்லாத கேவலஞானம் என்னும் மங்கையோடு கூடி, அழகிய பொன் அணி விளங்கும் மாடத்தில், இனிய தேன் சிந்தும் மலர் மாலையும், கலவைச் சந்தனமும், வாசக் குங்குமமும், சுண்ணப் பொடியும், தேன் கலந்த அகிலின் வாசப்புகையும், ஒளி விளக்கும், வானவர் ஏந்தி நிற்கச் சீவகன் வாழ்வானா யினான்.

# 36. தேவிமார் நோற்றுயர்வு

வல்லவன் வடித்த வேல்போன் மலர்ந்துநீண் டகன்ற வாட்கண்
மெல்லவே யுறவி யோம்பி யொதுங்கியு மிருந்து நின்றும்
முல்லையஞ் சூட்டு வேயின் மூரிந்துபோ நுசுப்பி னல்லார்
மல்லற்குன் றேந்தி யன்ன மாதவ முற்றி னாரே 3119

[வல்லவன்-தொழிலில் வல்லவன்; உறவி-எறும்பு; ஓம்பி-பாதுகாத்து.]

## வேறு

சூழ்பொற் பாவையைச் சூழ்ந்து புல்லிய
காழகப் பச்சை போன்று கண்டெறூஉம்
மாழை நோக்கினார் மேனி மாசுகொண்
டேழைப் பெண்பிறப் பிடியச் சிந்தித்தார் 3120

[காழகம்-கருமை; பச்சை-தோல்; இடிய-கெடும்படி மாழை-இளமை.]

ஆசை யார்வமோ டைய மின்றியே
ஓசை போயுல குண்ண நோற்றபின்
ஏசு பெண்ணொழித் திந்தி ரர்களாய்த்
தூய ஞானமாய்த் துறக்க மெய்தினார் 3121

[ஏசு-பழிப்பு; துறக்கம்-வீட்டின்பம்.]

தொழில் வல்லவன் வடித்தெடுத்த வேல் போலும் நீண்டு மலர்ந்த கண்களால், சிறு எறும்பிற்கும் துன்பம் இன்றிப் பாதுகாத்து, அருள் புரிந்து, மெதுவாக நடந்தும், இருந்தும், நின்றும், முல்லை மலர் மாலை சூடினால் கூட, சுமை தாங்காது முறிந்து போகும் என்று சொல்லத்தக்க மெலிந்த இடை உடைய மங்கையர், வளமிக்க குன்றைச் சுமப்பது போன்றதாகிய, மிகப் பெரிய தவத்தைச் செய்து முடித்தனர். பொற்பாவைமேல் விரும்பிப் போர்த்திய கருப்புத் தோலுறையைப் போல, முன்னர் தம்மைக்

கண்டவர் கண்களைச் சுடுவது போன்ற இளமை மிக்க பார்வை உடைய மகளிர், தம் அழகிய உடல்மேலெல்லாம் தூசு படிய, இரங்கத்தக்க பெண் பிறப்பு கெடும்படி தியானத்தில் ஈடுபட்டனர். இவ்வாறு தவத்தில் ஈடுபட்டு ஆசையையும் பற்றையும் விட்டொழித்தவரின் தவப்புகழ் ஐயத்திற்கிடமின்றி வானுலகம் வரை செல்ல, பழிப்புக் கிடமான பெண் பிறவியை விட்டொழித்து அவர்கள் இந்திர பதவியேற்றுத் தூய ஞானமார்க்கத்தை அடைந்து வீட்டின்பம் பெற்றனர்.

**காம வல்லிகள் கலந்து புல்லிய**
**பூமென் கற்பகப் பொன்ம ரங்கள்போல்**
**தாம வார்குழல் தைய லார்முலை**
**ஏம மாகிய வின்ப மெய்தினார் 3122**

*[கலந்து-கூடி; ஏமம்-காவல்.]*

**கலவி யாகிய காமத் தின்பயன்**
**புலவி யாதலாற் பொன்னங் கொம்பனார்**
**உலவு கண்மல ரூடற் செவ்விநோக்கு**
**இலைகொள் பூணினா ரிதயம் போழ்ந்ததே 3123**

*[கலவி - முயக்கம்; புலவி - ஊடல்; போழ்ந்தது - பிளந்தது.]*

**பூவி னுள்ளவள் புகுந்து முள்ளத்தாள்**
**நாவிற் பெண்பெயர் நவிற்றி னீரெனக்**
**காவிக் கண்கடை யிடுகக் காற்சிலம்பு**
**ஆவித் தார்த்தன வம்மென் குஞ்சியே 3124**

*[நாவிற் பெண் - நாமகள்; காவி- நீலோற்பலமலர்; இடுக - அருகி நோக்குதலால்; ஆவித்து-வாய் விட்டு.]*

அவர்கள், காமவல்லிக் கொடிகள் நிறைந்து படர்ந்த, அழகிய, மெல்லிய, பொன் மயமான கற்பக மரங்களைப் போல, ஒளிமிக்க மாலையணிந்த கூந்தலுடைய, தேவ

மகளிருடைய, போக இன்பத்தைப் பெற்றனர். கூடுதலால் உண்டாகும் இன்பத்தின் பயன், ஊடுதல் ஆகையால், பொற்கொம்பு போன்ற தேவமகளிர், ஒளிவீசிப் பிறழும் கண்மலர்களால் ஊடிப் பார்த்ததொரு பார்வை இலை வடிவுடைய பூண் அணிந்த தேவருடல் பெற்ற தேவியர் உள்ளத்தை வருத்தியது.

'பூமலர்த் தாமரையில் வாழும் திருமகள் உங்களுடைய உள்ளத்திலிருக்கிறாள். வாக்கு வன்மையால் நாமகளும் உங்கள் நாக்கில் உள்ளாள் என்பதை உங்கள் சொல்லாற்றலால் காட்டினீர்' என்று, நீலோற்பல மலர் போன்ற கண்கள், ஊடலால் குவிந்து நோக்க, தேவமகளிருடைய பொற் சிலம்பணிந்த பாதத்தை, தேவருடல் பெற்ற தேவிமார் தம் தலைமேல் ஏற்றுப் பணிந்து அவர் கொண்ட ஊடலைப் போக்கினர்.

**நெஞ்சி னேரிழை வருந்து மென்றுபூங்**
**குஞ்சி யேற்றது குறிக்கொ ணீயெனாப்**
**பஞ்சின் மெல்லடிப் பாவை பூநுதால்** 3125
**அஞ்சி னார்க்கதோர் தவற தாகுமே**

[குஞ்சி-தலை; நுதல்-நெற்றி.]

**தவளைக் கிண்கிணித் தாமஞ் சேர்த்தியும்**
**குவளைக் கண்மலர்க் கோலம் வாழ்த்தியும்**
**இவளைக் கண்டகண் ணிமைக்கு மோவெனாத்** 3126
**திவளத் தேமலர்க் கண்ணி சேர்த்தியும்**

[சேர்த்தியும்-அணிவித்தும்; திவள-அசைய.]

**பன்ம ணிக்கதிர்ப் பரவை மேகலை**
**மின்ன ணிந்துகத் திருத்தி வெம்முலைப்**
**பொன்ன ணிந்துபூஞ் சுண்ணந் தைவர** 3127
**நன்ம ணிக்குழை யிரண்டு நக்கவே**

[மின் உக அணிந்து-ஒளிவிட அணிந்து; தைவர-தடவ.]

'பொற்பாவை போன்றவளே, அழகிய நெற்றியை உடையவளே, பஞ்சினைப் போன்ற நின் மெல்லிய பாதம், மார்பின் மேல் பட்டால், அதிலே அணிந்திருக்கும் அழகிய பூண்பட்டு வருந்த நேரும் என்று அவற்றை எம் தலைமுடி ஏற்றது என்பதை உய்த்துணர்ந்து கொள்வாயாக. ஏன் எனில் அஞ்சியவர்களுக்கு அச்சமே தவறு நிகழக் காரணமாய் அமைந்துவிடும்,' என்று கூறித் தவளை வாய் போன்ற அமைப்புடைய கிண்கிணிச் சதங்கையைக் காலில் அணிவித்தும், குவளை மலர் போன்ற கண்களின் அழகைப் புகழ்ந்தும், இவளைப் பார்த்த கண்கள் இமைக்கவும் நினைக்குமோ என்று அழகு நலத்தைப் பாராட்டியும், தேன் நிறைந்து புரளும் மலர் மாலையை அணிவித்தும், பல மணிகளிழைத்த, அழகிய மேகலையின் ஒளி விளங்கத் திருத்தியும், பூமார்பில் பொன்னணிகள் சூட்டி, அழகிய சுண்ணப் பொடிகளைத் தடவ, காதில் அணிந்த அழகிய மணிக் குழைகள் ஒளி வீசின; அவர் ஊடலும் தீர்ந்தது.

**செய்த நீர்மையார் செயப்பட் டார்கள்தாம்**
**எய்தி யாவையும் முணர்க வென்பபோல்**
**மைய வாங்குழன் மடந்தை குண்டலம்**
**நைய நின்றெலா நாண நக்கவே 3128**

[மை-கருமை; நைய-வருந்த.]

**செல்வக் கிண்கிணி சிலம்பத் தேன்சொரி**
**முல்லைக் கண்ணிகள் சிந்த மொய்ந்நலம்**
**புல்லிப் பூண்டதார் புரள மேகலை**
**அல்குல் வாய்திறந் தாவித் தார்த்தவே 3129**

[சிலம்ப-ஒலிக்க, பூண்ட-அணிந்த; தார்-மார்பின் மாலை.]

**இலங்கு கொம்பனார் காம மென்னும்பேர்**
**கலந்த கள்ளினைக் கைசெய் தையென**
**மலர்ந்து வாய்வைத்தார் மணிகொள் வள்ளத்தே**
**நலங்கொள் சாயலார் நடுங்கி நையவே 3130**

[கொம்பனார்-தெய்வ மகளிர்; கைதுசெய்-அழகு செய்து; சாயலார்-தெய்வ மகளிர்.]

**வெம்மை கொண்டதே னமிர்த மெல்லவே**
**அம்மை யஞ்சொலா ரார வுண்டவர்**
**தம்மைத் தாமகிழ்ந் துறைய இத்தலைச்**
**செம்மை மாதவர்க் குற்ற செப்புவாம் 3131**

[வெம்மை-விருப்பம்; அம்மை-அமைதித் தன்மை யுடைய.]

இவ்வாறு மண்ணுலகில் சீவகனுடன் ஊடித் தங்கள் பாதத்தை, அவனைத் தலைமேல் ஏற்கச் செய்தவர்கள், வானுலகிலே தேவ மகளிர் ஊடியதால் அவர்கள் பாதத்தைத் தங்கள் தலைமேல் ஏற்று, ஊடியவர் களாயும், ஊடப்பட்டவர்களாயும் அமைந்து, ஊடல் துன்பத்தையும் கூடல் இன்பத்தையும் அறிந்திடுக என்று கூறுவதைப் போல, கருமை மிக்க கூந்தலுடைய, சீவகனது தேவருடல் பெற்ற தேவியரின் காதுக் குண்டலங்கள் மற்ற அணிகலன்கள் எல்லாம் வெட்கத் தாம் மட்டும் சிரித்தன. சிறந்த கிண்கிணிச் சதங்கைகள் ஒலிக்க, தேன் நிறைந்த முல்லைப் பூமாலைகள் மலர்களைச் சிந்த, மாலைகள் புரள, ஊடல் தீர்ந்தவர் ஆரத்தழுவி இன்பம் நுகர்தலால் இடையில் அணிந்த மேகலையின் மணிகள் வாய்விட்டு ஒலித்தன. அழகு விளங்கும் பூங்கொடி போன்ற அழகிய அம் மங்கையர், காமம் என்னும் பெயருடைய கள்ளினை அழகுறத் தயாரித்து, முத்துக்கள் பதித்த கிண்ணத்திலே பெய்து, அதிலே வாய் வைத்து அகமகிழ்ந்து, உடல் நடுங்கிச் சோர்வடைய அதை உண்டனர். (பற்களாகிய முத்துக்கள் பதித்த, வாயாகிய கிண்ணியிலே ஊறும், நீராகிய மதுவை உண்ண, வாய் முத்தம் ஈந்து மகிழ்ந்தார் என்னும் கருத்து இவ்வாறு கூறப்பட்டது.) விரும்பி அடைந்த இவ்வினிய அமுதத்தை, அமைதியும், அழகும் மிக்க மொழி உடைய தேவ மகளிர்

நிறையப் பருக, தேவரும் அதனை உண்டு மெய்மறந்து நிற்க இப்பால், சிறந்தோனாகிய நந்தட்டனுக்கும் அவன் தோழர்களுக்கும் நிகழ்ந்தவற்றைக் கூறுவோம்.

## 37. நந்தட்டன் தோழன்மார் நோற்றுயர்வு

**நாள்கண் கூடிய நகைவெண் டிங்கள்போற்**
**காளை நந்தனுந் தோழன் மார்களும்**
**நாளு நாளினு நடுங்க நற்றவம்**
**தாளி னீட்டினார் தம்மைத் தாம்பெற்றார்** 3132

[நகை-ஒளி; நாளும்-நாள்தோறும்; தாளின்-முயற்சி யால்.]

**பாவ னைமரீஇப் பட்டி னியொடும்**
**தீவி னைகழூஉந் தீர்த்தன் வந்தியாப்**
**பூவுண் வண்டன கொட்பிற் புண்ணியர்**
**நாவின் வேட்கையு நஞ்சி னஞ்சினார்** 3133

[மரீஇ - மருவி; கழூஉம் - கழுவுகின்ற; தீர்த்தன் வந்தியா - இறைவனை வணங்கி; கொட்பில்-கருத்தில்.]

**கருவிற் கட்டிய காலம் வந்தெனு**
**உருவ வெண்பிறைக் கோட்டி னோங்கிய**
**அருவிக் குன்றின்மேன் முடித்திட் டைவரும்**
**திருவின் றோற்றம்போற் றேவ ராயினார்** 3134

[கருவில்-கருப்பம் தங்குகின்ற காலத்தே; கட்டிய காலம்-இறத்தற்கு விதித்த காலம்; முடித்திட்டு-தவத்தை முடித்து.]

## வேறு

**அனங்கனைத் தவஞ்செய வழன்று கண்டவர்**
**மனங்களைக் கவர்ந்திடு மணிக்கண் வெம்முலைப்**
**பொனங்கொடி மயிலனார்ப் புல்ல மாப்பிடி**
**இனம்பயில் கடாக்களிற் றின்ப மெய்தினார் 3135**

*[அனங்கன் - மன்மதன்; அழன்று கண்டவர் - கோபித்துப் பார்த்த முனிவர்; பொனங்கொடி - பொற்கொடி.]*

தினந்தோறும் களைகள் தம்மிடத்தே கூடிவரும் ஒளி உடைய வெண்ணிலவைப் போல, காளையாகிய நந்தட்டனும் அவன்தோழர்களும், கண்டவர்கள் அஞ்சும்படி நாள்தோறும் தவம்புரிந்து முயன்று, தமது ஐம்பொறிகளையும் அடக்கியாளும் வல்லமை பெற்றனர். இவ்வாறு தவநூல் கூறும் நெறிமுறைகளைத் தழுவி, பட்டினியிருந்து, பாவவினைகளைப் போக்குகின்ற இறைவனை வணங்கி, உயிரோம்பித் தவம் செய்யக் கருதிய அவர், பூத்தேன் உண்ணும் வண்டுகளைப்போல, சிறிதளவே உட்கொள்ளும் உணவையும், நாவின் சுவையுணர்வையும், நஞ்சென வெறுத்தொதுக்கினர்.

கருவில் உயிர்கொள்ளும்போதே, இவ்வுயிர்க்கு இவ்வளவுதான் என்று விதித்த ஆயுட் காலம் முடிவடைய, அழகிய பிறைநிலவைத் தன் தலையிலே சூடியிருப்பதைப் போல வானுற உயர்ந்து வளர்ந்த, அருவிகள் பாயும் குன்றின் மேலிருந்து நந்தட்டனும் அவன் தோழர்கள் நால்வரும், மற்ற தவங்களைச் செய்து முடித்து, திருமகள் தோன்றும் சிறப்புடைய, மனித உடல் நீத்துத் தேவருடம்பு பெற்றனர். காமனைத் தங்கள் தவம் நிறைவேறுவதற்காக, வெறுத்தொதுக்கி இருந்தவர்கள், கண்டவர் மனங்களைக் கவர்ந்திடும் நீலமணி போன்ற கண்களும், இன்பூட்டும் பூமார்பும், பொற்கொடியின் அழகும்,

பொழில் மயிலின் சாயலும், உடைய தேவமகளிர் தழுவ, பிடியோடு தழுவிய பெருமத யானைகளைப் போல அவரோடு கூடி இன்புற்றனர்.

## வேறு

காதணிந்த தோடொருபான் மின்னு வீசக் கதிர்மின்னுக்
குழையொருபாற் றிருவில் வீசத்
தாதணிந்த தாமங்க ளொருபாற் சோரத்
தாமரைக்கண் டாமிரங்கப் புருவ மாட
மாதணிந்த நோக்கினா ரல்குற் காசு மணிமழலைக்
கிண்கிணியுஞ் சிலம்பு மேங்கப்
போதணிந்த தாருடையப் பொருது பொங்கிப்
புணர்முலைகள் போர்க்களந்தாங் கண்ட வன்றே 3136

[ஆட-வளைதலைச் செய்ய; மாது-காதல்; காசு-மேகலையின் மணிகள்; போது-மலரும் பருவத் தரும்பு.]

முழுதார மின்னு முலைக்குவட் டினான் மொய்ம்மார்பிற்
குங்குமச்சே றிழுக்கி வீழ
உழுதார்வம் வித்தி யுலப்பி லாத நுகர்ச்சி விளைத்தலர்ந்த
கற்பகத் தின்கீழ்
எழுதார் மணிக்குவளைக் கண்வ லையுட்பட் டிமையார்கள்
காம மறுசு ழியுளாழ்ந்
திழுதார்மென் பள்ளிப்பூந் தாது பொங்க விருவர் பலராகி
யின்பு றுபவே 3137

[உலப்பிலாத-எல்லையில்லாத; இழுது-தேன்.]

மண்கனிந்த பொன்முழல மழையின் விம்ம மாமணியாழ்
தீங்குழல்க ளிரங்கப் பாண்டில்
பண்கனியப் பாவைமார் பைம்பொற் றோடுங் குண்டலமுந்
தாம்பதைப்ப விருந்து பாட

**விண்கனியக் கிண்கிணியுஞ் சிலம்பு மார்ப்ப முரிபுருவ**
**வேனெடுங்கண் விருந்து செய்யக்**
**கண்கனிய நாடகங்கண் டமரர் காமக் கொழுந்தீன்று**
**தந்தவந்தா மகிழ்ந்தா ரன்றே 3138**

[மண்-மார்ச்சனை மண்; மழையின்-மேகத்தைப் போல; விம்ம-ஒலிக்க; கனிய-உருக.]

காதிலே அணிந்த தோடு ஒருபக்கம் ஒளிவீச, ஒளி விட்டு மின்னுகின்ற குண்டலங்கள் வானவில்போல் ஒரு பக்கம் அழகொளி வீச, பூந்தாது நிறைந்த பூமாலைகள் ஒரு பக்கத்தில் கலைந்து குலைய, தாமரை மலர்போன்ற கண்கள் ஏங்கி இரங்கி நோக்கிட, புருவங்கள் வளைந்து நிமிர்ந்து மகிழ்ச்சியால் களிக்க, காதல் கனிந்து நோக்கும் அத்தேவ மகளிர், இடையில் அணிந்த மேகலை மணிகளும், கிண்கிணிச் சிலம்பும் ஒலிக்க, தேவருடல் பெற்றோர் மாலைகள் சிந்திச் சிதறும்படிப் பூரித்துப் பொங்கும் தம் பூமார்புகளைக் கொண்டு போரிட்டனர். மேலும் அவர்கள் முத்துமாலைகள் நிறைந்து தவழும் பூமார்பின் கூர்முனையால், வலிமை மிக்க தேவர்கள் மார்பில் பூசிய குங்குமச்சேறு கலைந்து அழியும்படி, உழுது (இறுகத் தழுவி), ஆசையை உண்டாக்கி, சலிப்பில்லாத இன்பத்தை வளர்த்து, மை எழுதிய, நீலமணியை ஒத்த, குவளை மலர்க் கண்களாகிய வலையில் சிக்கி, இமைக்கவும் மறந்தவர்களாய், இன்பச் சுழலிலே ஆழ்ந்து, மலர்ந்த கற்பக மரநிழலின்கீழ், தேன் வழியும் மலர் நிறைந்த பூமலர்ப் படுக்கையிலே, அம்மலர்களின் பூந்தாதுகள் பொங்கிச் சிதற, ஆணும் பெண்ணுமாய்ப் பல்வேறு உருவங்கள் கொண்டு இன்புற்று மகிழ்வர். அழகுடைய முரசு இடிபோல் முழங்கி ஒலிக்க, பெரிய மணிகள் இழைத்த யாழும் குழலும் தாளமும் ஒலி செய்ய, இன்னிசை வழிய, பாவையர் பசும்பொன் தோடும் குண்டலமும் அசைந்தாடி ஒளிவீசப் பாடும் பாடல் கேட்டும், வானுலகத்தேவர் மனம் உருக, பாதச்

சிலம்புகள் ஒலிசெய்ய, வளைந்த புருவமும், வேல்போல் விளையாடும் நீண்ட கண்களும் விருந்தளிக்கக் கண்கவர் நாடகம் கண்டும், நிறைந்த காம இன்பத்தினைப் பெற்று, தாம் பெற்ற தவத்தின் பயனை அடைந்து மகிழ்ந்தனர்.

## வேறு

முருகுடைந்த பூங்கோதை முத்தணிந்த தோளார்
ஒருகுடங்கைக் கண்ணா லுளங்கழிய வேவுண்டு
அருகடைந்த சாந்தழிய வம்முலைமேல் வீழ்ந்தார்
திருவடைந்த நீண்மார்பிற் றேந்துளிக்குந் தாரார் 3139

*[உளம் கழிய-உள்ளத்தே மிக; குடங்கை-உள்ளங்கை; ஏவுண்டு-தாக்குண்டு.]*

நிலவி யொளியுமிழு நீளிலைவேற் கண்ணார்
கலவித்து தாகிய காமக்கை காய்த்திப்
புலவிப் படைபயிலப் பூச்செய்த கோலம்
உலவித் துறக்க மொளிபூத்த தன்றே 3140

*[கலவி-முயக்கம்; புலவி-ஊடல்; காய்த்தி-வெவ்வி தாக்கி; உலவி-பரந்து.]*

புருவச் சிலைநுதற் பொன்றுஞ்சு மல்குல்
உருவத் துடியிடையார் ஊடலுப் பாகத்
திருவிற் றிகழ்காமத் தேன்பருகித் தேவர்
பொருவற் கரிய புலக்கடலு ளாழ்ந்தார் 3141

*[பொன்துஞ்சும்-பொன்னாபரணம் தங்கும்; உப்பாக-இனிமையாக.]*

## வேறு

முகடு மணியழுத்தி முள்வைர முள்வேய்ந்து
முத்தம் வாய்ச்சூழ்ந்
தகடு பசுமணியார்ந் தங்காந் திருள்பருகி யடுபால் விம்மிப்

**பகடு படவடுக்கிப் பண்ணவனார் தம்மொளிமே**
**னின்றாற் போலும்**
**தகடு படுசெம்பொன் முக்குடையான் தாளிணையென்**
**றலைவைத் தேனே 3142**

[பால்விம்மி-பால் போன்ற ஒளியைச் சிந்தி; பகடு-பெருமை; அகடு-நடுவிடம்.]

தேன் வழியும் மலர்மாலையும் முத்தும் அணிந்த தோளுடைய தேவமகளிரது உள்ளங்கை அளவுடைய கண்களால், மனவுறுதி குலையத் தாக்குண்டு, பூமார்பு களின் அருகெல்லாம் பூசிய சந்தனக் கலவை அழியும்படி, திருமகள் தங்கிவாழும் தங்கள் அகண்ட மார்பின்மேல் தேன்சிந்தும் மலர்மாலை அணிந்த தேவர்கள் அம்முலை களின்மீது வீழ்ந்து தழுவிக் கிடந்தனர். நீங்காது ஒளி வீசும் நீண்ட இலைவடிவுடைய வேல்போலும் கண் ணுடைய தேவமகளிர், கூடலுக்குத் தூதாகிய, காமம் என்கிற கையாலே ஊடல் என்ற படையை அத்தேவர் மேல் ஏவ, விளையும் காமன் மலரம்பு உண்டாக்கிய இன்பப் போராலே உண்டான அவ்வழகிய காட்சி, வானுலகம் எங்கும் பரவிட, விண்ணுலகம் அவ்வழகிய காட்சியின் நலம் பெற்றுத் திகழ்ந்தது. நிலாப்பிறை போன்ற நெற்றியும், வில்போன்ற புருவமும், மேகலை அணிந்த சிற்றிடையும் உடைய தம் காதலியர் ஊடலே இனிதெனக் கொண்டு அவர் அழகு நலமாகிய காமம் என்னும் தேனை உண்டு, வானவரும் ஒப்புவமை கூற இயலாத, ஐம்புலன்கள் தரும் இன்பக் கடலில் அமிழ்ந்தனர்.

அவர்கள் இவ்வாறாக, நான் 'உச்சியிலே மாணிக்க மணியை வைத்து அழுத்தி, கூரிய வைரக்கற்களை உள்ளே பதித்து விளிம்புகளிலே முத்துமாலைகளைச் சூட்டி, நடுவே நீலமணிகளை வைத்து, வாய் விரித்து இருளைப்

போகவிட்டு, காய்ச்சிய பால்போலும் தூயவெண் முத்துக்களைச் சொரிந்து, அழகுற மூன்றடுக்காக அமைத்து, இறைவன் பேரொளி மேலே தங்கச் செய்ததைப் போன்ற, பொன்தகடுகளாலான முக்குடைகளை உடைய அருகப்பெருமான் திருவடிகளை, என் தலைமேல் கொண்டு பணிந்தேன்.' (இலக்கியம் இனிது முடிந்த மகிழ்ச்சியால் ஆசிரியர் மீண்டும் வணங்கினார்.)

## 38. ஓம்படை

**முந்நீர் வலம்புரி சோர்ந்தசைந்து வாய்முரன்று**
**முழங்கி யீன்ற**
**மெய்ந்நீர்த் திருமுத் திருபத்தேழ் கோத்துமிழ்ந்து**
**திருவில் வீசும்**
**செந்நீர்த் திரள்வடம்போற் சிந்தா மணியோதி**
**யுணர்ந்தார் கேட்டார்**
**இந்நீர ராயுயர்வ ரேந்துபூந் தாமரையாள்**
**காப்பா ளாமே 3143**

[முந்நீர்-கடல்; இந்நீரராய்-இந்திரராய்.]

### வேறு

**செந்தா மரைக்குச் செழுநாற்றங் கொடுத்த தேங்கொள்**
**அந்தா மரையா ளகலத்தவன் பாத மேத்திச்**
**சிந்தா மணியின் சரிதஞ்சிதர்ந் தேன்தெ ருண்டார்**
**நந்தா விளக்குச் சுடர்நன்மணி நாட்டப் பெற்றே 3144**

[தேம் கொள்-இனிமை கொண்ட; சிதர்ந்தேன்-பரக்கக் கூறினேன்; தெருண்டார்-தெளிந்தார்.]

### வேறு

**செய்வினை யென்னு முந்நீர்த் திரையிடை முளைத்துத்**
**தேங்கொள்**
**மைவினை மறுவி லாத மதியெனுந் திங்கண் மாதோ**

**மொய்வினை யிருள்கண் போழு முக்குடை மூர்த்தி பாதம்**
**கைவினை செய்த சொற்பூக் கைதொழு தேத்தி**
**னேனே 3145**

[செய்வினை-நல்வினை; மதியெனும்-அறிவென்னும்; கைவினை - தொழிலழகு; சொல் - செய்யுள்; மூர்த்தி-அருகதேவன்.]

'கடலிலே பிறந்த வலம்புரிச் சங்கு, (திருத்தக்க தேவர்) பிறர் கூறும் குறை கேட்டு மனம் தளர்ந்து, உடல் நடுங்கி, வாயினால் மெல்ல ஒலிசெய்து, பின்னர் பெரிதாக முழங்கிப் பெற்றெடுத்த உண்மை உயர்வுடைய ஆணிப் பொன் முத்துக்கள் இருபத்தேழையும், சிவந்த அழகிய தன்மை உடைய மாணிக்க மணிகளையும், மாலையாகக் கோத்தது போல், தொகுத்துத் தந்திருக்கும் வானவில் போல் ஒளிவீசித் திகழும் **சிந்தாமணி** என்னும் இச்சிறந்த காவியத்தைப் படித்தவர்களும், படிக்கப் பக்கம் இருந்து கேட்டவர்களும், இந்திரராய் உயர்ந்து வீட்டின்பப் பேறு பெறுவர். அவரை உயர்ந்த தாமரைத் தண்மலர் வாழும் தேவி காத்தருள்வாள்.' என்றார், திருத்தக்க தேவரின் ஆசிரியர்.

அது கேட்ட திருத்தக்க தேவர், 'செந்தாமரை மலருக்கு மிகச்சிறந்த மணத்தைக் கொடுத்தருளிய, தேன் போன்ற இனிய இறைவன் திருவடிகள் ஆள்கின்ற, திரண்ட ஞான முடைய சீவகன் பாதம் பணிந்து, சிந்தாமணி என்னும் இச்சீவக சரிதையை, நின் திருவடியை வணங்கி எல்லாரும் அறிய விரிவாகக் கூறினேன். மங்காது எரிகின்ற நந்தா விளக்காகிய சிந்தாமணி என்னும், இந்நன் மணியின் அருள்ஒளி பெற்று இவ்வுலகோர் நல்லறம் தெளிந்தனர்' என்று பணிவுடன் கூறினார்.

'நல்வினை என்னும் கடலிலே தோன்றி, இனிமை மிக்க, தீவினை என்னும் கறை இல்லாத நிறை அறிவு

என்னும் நிலவாலே, கைவந்த செய்யுள் என்னும் மலர் கொண்டு, மொய்க்கும் பிறவித்துயர் அறுக்கும், முக்குடை மூர்த்தியாகிய அருகப் பெருமான் பாதங்களை, அருச்சித்துக் கரங் கூப்பித் தொழுதேத்தினேன்.' என்று முடித்தார் திருத்தக்க தேவர்.



முத்தி இலம்பகம் முற்றும்



சீவக சிந்தாமணி முற்றும்



## வாழ்த்து

திங்கள்மும் மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோல்
நன்கினிது அரசன் ஆள்க நாடெலாம் விளைக மற்றும்
எங்குள அறத்தி னோரும் இனிதூழி வாழ்க எங்கள்
புங்கவன் பயந்த நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே.

* * *

# செய்யுள் முதற்குறிப்பகராதி

## (எண்—செய்யுளெண்)

